திருக்குறள் - ஒரு மறுவாசிப்பு

சொல்லாக்கியன்

© பரிதி பதிப்பகம்
முதற்பதிப்பு : டிசம்பர் 2016
வெளியீடு : பரிதி பதிப்பகம்
56சி/128. பாரத கோயில் அருகில், ஜோலார்பேட்டை,
வேலூர் மாவட்டம்-635 851
மின்னஞ்சல் : Parithijpt@gmail.com
அச்சாக்கம் : மணி ஆப்செட், சென்னை
ஒளி அச்சு : தங்கம் கிராஃபிக்ஸ்
பக்கங்கள் : 656

விலை: ரூ. 600

**Thirukkural -** Oru Maruvaasippu
Chollaakkian

Parithi Pathippagam
First Edition : December 2016
Published by Parithi Pathippagam
56C/128, Near Bharatha Kovil, Jolarpettai,
Vellore District-635851 Cell: 72006 93200
Email: Parithijpt@gmail.com
Printed at Mani Offset, Chennai
Layout: Thangam Graphics, Chennai
Pages: 656

Price: Rs. **600**

**ISBN: 978-81-930475-4-5**

# காணிக்கை

*உயிரூட்டிய தந்தை சோழமூர் சுப்பிரமணியம் அவர்களுக்கும்!*
*உடலீந்த தாய் வக்கனம்பட்டி சரோஜா அவர்களுக்கும்!ஆயிரமாயிரம்*
*கேள்விகளுக்கு பதில்கள்பெற குருவாய் நிற்கும் திருவண்ணாமலை*
*ரமண மகரிஷி அவர்களுக்கும்! ஒருமையாய், முழுமையாய்,*
*அமைதியாய், ஆனந்தமாய், அசைவின்றி, நிலையாய், எல்லா*
*பொருளும், உயிரும், இருத்தலும் பௌதிக விதிகளுக்கும் அதற்கு*
*ஒப்பான கர்ம விதிகளுக்கும், அதாவது தர்மத்திற்கு ஏற்ப தனக்குள்*
*இயங்க ஆற்றலை ஓயாது அருளும், ஞானம் கூட்டும் பிரக்ஞையான*
*தெய்வத்திற்கும்!*

# நன்றியுரை

*இந்நூலின் சந்திப் பிழைகளைத் திருத்திய முனைவர் உமா அழகிரி, மொரீஷியஸ் அவர்களுக்கும், முன்னுரை அளித்த முனைவர் சங்கர நாராயணன், தமிழ்ச் சங்கப் பலகை, சென்னைப் பல்கலைக்கழகம் அவர்களுக்கும், அணிந்துரையை அளித்து, பல குறள்களுக்கு திருத்தங்களும் அறிவுறுத்திய முனைவர். அழகப்ப இராம் மோகன் அவர்களுக்கும், எளிமைப்படுத்தப்பட்ட குறள்களைப் பயன்படுத்த அனுமதி அளித்த உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை, ஐக்கிய அமெரிக்க நாடுகள் அவர்களுக்கும், தொடர்ந்து ஊக்கம் அளித்து வந்த முனைவர் பொற்கோ, மேனாள் துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம் அவர்களுக்கும், கருத்துரை வழங்கிய முனைவர் இ.சுந்தரமூர்த்தி, மேனாள் துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக் கழகம் அவர்களுக்கும்,தொல்லியல் ஆய்வு எழுத்தாளர் தருமபுரி பார்த்திபன் அவர்களுக்கும், பதிப்புரை வழங்கிய முனைவர். போ.சத்தியமூர்த்தி அவர்களுக்கும், பரிதி பதிப்பகத்தின் இளம்பரிதி அவர்களுக்கும், அச்சகத்தாருக்கும் மனமார்ந்த நன்றி.*

*கொடும் பனியிலும், கடுங்குளிரிலும், இரவும் பகலும் உழைத்து, என்னுடைய எழுத்தைத் தடைப்படாமல் காத்த, என் மனைவி,* ***இலட்சுமி சங்கரன்*** *அவர்களுக்கு, என் அன்பு கலந்த நன்றி!*

**- சொல்லாக்கியன்**

# பொருளடக்கம்

## பதிப்பாளர் உரை

புத்தகங்கள்தான் வாழ்வின் ஆசிரியர்கள் . தன்னுடைய கைகளைப் பற்றிக் கொள்ளும் பிஞ்சு விரல்களாக வாசிப்பவர்கள் இருக்கிறார்கள் என்ற பெருமிதத்துடன்தான் புத்தகங்கள் பிறந்து கொண்டே இருக்கிறது.

சில புத்தகங்கள் வாசிக்காதவனைக் கட்டியணைத்தபடி அவனது அலமாரியில் தூங்கிக் கொண்டிருக்கிறது.

சில புத்தகங்களோ பற்றிக்கொண்டவன் கைப்பிடித்துக் கொண்டு வாழ்வின் திசையெங்கும் திரிகிறது.

அப்படி வாழ்வின் சகல திசைகளிலும் நிறைந்து நிற்கும் ஒரு நூல் திருக்குறளன்றி வேறொன்றில்லை.

மனப்பாடப்பகுதியாக என் விரல்களைத் தொட்டுக் தடவிப் போன திருக்குறள் அவ்வப்போது பேருந்துகளிளும் என்னைப் பார்த்து புன்னகை புரிவதுண்டு.

திருமணங்கள்தோறும் என்னைப் பரிசாகவே வழங்கிச் செல்கிறாயே ஒரு முறையாவது என்னை முழுதும் வாசித்துவிடேன் என்று அவ்வப்போது கனவுகளில் வரும் வள்ளுவரும் கேட்பதுண்டு.

திருக்குறளை வாசிப்பதில் எந்தவிதமான சிக்கலும் இருப்பதில்லை. வாசித்து முடித்த பிறகுதான் எல்லா சிக்கல்களும் வருகிறது, நாம் செய்யும் ஒவ்வொரு தவறுகளுக்கும் முன்னால் வந்து என்னை வாசித்தவன் நீ.நீ இப்படி செய்யலாமா என்று கேள்வி கேட்கிறது. அந்தக் கேள்வியின் முன் நிற்கும் தைரியம் இன்னும் வரவில்லை.

சொல்லாக்கியன் அவர்கள் என்னைப் பதிப்பாளராக திருக்குறளை வாசிக்க வைத்திருக்கிறார்.

முழுதும் தான் வாசித்திருக்கிறேன். அதற்கு ஒரு நாள் போதுமானதாய் இருந்தது.

முழுமையாய் வாசிக்க வேண்டும். அதற்கு இந்த ஆயுள் போதுமா என்று தெரியவில்லை.

திருக்குறள் ஒரு மறுவாசிப்பு என்ற இந்த நூல் வழியாகத்தான் முதல் வாசிப்பை நிகழ்த்தி இருக்கிறேன். திருக்குறளில் தோய்ந்த வாழ்வுக்குரியவராக நீங்கள் இருப்பின் சொல்லாக்கியனின் பார்வைகளையும் படியுங்கள்.

*இப்போதுதான் இந்தப் புத்தகத்தின் வழியாகத்தான் திருக்குறளுக்குள் நுழைபவராக இருந்தால் வள்ளுவரையும் சொல்லாக்கியனின் உரையுடன் படியுங்கள்.*

*ஆய்வு மாணவர்களுக்கு இந்த நூல் புதிய வாசல்களை திறந்து வைக்கும் என்று நம்புகிறேன்.*

*வாசிப்பவனாக, எழுதுபவனாக, பதிப்பாளனாக, புத்தகங்களுடன் இருக்கும் இந்த அழகிய வாழ்வை வாசிக்கும் நீங்கள்தான் பேரழகாக மாற்றுகிறீர்கள்.*

*இந்த நூலை வெளியிட என்னைத் தேர்ந்தமைக்கு நூலாசிரியர் சொல்லாக்கியன் அவர்களுக்கும்*

*செம்மைப்படுத்திய முனைவர். போ.சத்தியமூர்த்தி அவர்களுருக்கும் என் நன்றியும் அன்பும்.*

**- ப இளம்பரிதி.**

*பரிதி பதிப்பகம்.*

Parithijpt@gmail.com

7200693200

# பதிப்பாசிரியர் உரை

உலகின் மிகப் பெரிய செல்வந்தர்கள் பட்டியலில் தமிழர்கள் சிலர் இருக்கிறார்கள் என்று பெருமிதம் பேசுபவர்களைப் பார்த்து சிரித்துக் கொள்வேன்.

தமிழர்களைவிட பெரும் செல்வந்தர்கள் இந்த உலகத்தில் இருக்கிறார்களா? தமிழை விடப் பெரிய செல்வம் எது? திருக்குறளையும் தொல்காப்பியத்தையும் விட மிக மதிப்பு வாய்ந்தது எது?

இவ்வளவு பெரிய செல்வத்தை பொக்கிஷத்தை தன்னகத்தே கொண்ட ஒரு இனத்தைச் சேர்ந்தவன் கரன்ஸித்தாள்களின் எண்ணிக்கை வழியாக கணக்கிடப்பட்ட பட்டியல் பார்த்து மகிழ்வதைக் கண்டு எப்படி சிரிக்காமல் இருக்க முடியும்?

மொழி என் முப்பாட்டன் சொத்து, அதை அனுபவிக்க எனக்கு பாத்தியம் இருக்கிறது. அந்த சொத்தை மேலும் வளமான சொத்தாக மாற்ற எனக்கு உரிமை இருக்கிறது. அதே சமயம் அந்த சொத்தை யாரேனும் அழிக்க நினைத்தால் அதைக் காப்பாற்றும் கடமையும் எனக்கு தான் இருக்கிறது என்று எழுத்தாளர் ஜெயகாந்தன் குறிப்பிடுவார்.

அவரின் வார்த்தைகளின் அடியொற்றி தமிழிலக்கிய மண்ணுக்குள் புதிய புதிய விதைகளை விதைத்துப்பார்க்கும் எழுத்தாளர்களைப் போலவே அறுவடை செய்து பாதுகாத்து வைத்திருக்கும் விதைகளில் இருந்து புதிய புதிய பயிர்களை உருவாக்கும் பணியை உரையாசிரியர்கள் செய்து வருகிறார்கள்.

சொல்லாக்கியன் என்ற பெயரில் "திருக்குறள் ஒரு மறுவாசிப்பு" என்று இந்த நூலைப் படைத்திருக்கும் தமிழறிஞர் தீனதயாளன் அவர்கள் தமிழுக்கு புதிய பயிர் ஒன்றை வழங்கி இருக்கிறார்.

அவருக்கு என் வாழ்த்துக்களும் அவரது மொழியறிவுக்கு என் வணக்கமும், நூலாசிரியர் ஒருவர் இருக்கும் போது பதிப்பாசிரியராக ஒருவர் வருவதென்பது அழகான ஒன்றை பேரழகாக ஆக்க வருவதாகக் கொள்ளுங்கள். ஏற்கனவே எழுதப்பட்ட உரைகளில் இருந்து இந்த நூல் எவ்வளவு தூரம் விலகி வந்துள்ளது என்று கவனிப்பதைவிட திருக்குறளின் அடிப்படையை சிதைக்காமல் எவ்வளவு உயரத்துக்கு அவரது சிந்தனை மேலெழுந்துள்ளது என்று பார்த்து வியப்பவனாகவே இருந்துள்ளேன்.

*பழைய மொந்தை புதிய கள் என்று மொன்னையான விமர்சணங்களுக்குச் செல்வதைவிட பழைய ஒன்றை புதிய சொல் முறைக்கு உள்ளாக்குவதற்குரிய வளம் இந்த மொழிக்கும் மொழியறிஞர்களுக்கும் இருப்பதை நினைத்து பெருமிதம் கொள்வது நன்று.*

*பெரும் சுமைகளோ,*

*கருத்து மாறுபாடுகளோ இல்லாமல் எழுத்துப்பிழை திருத்தும் மனோபாவத்துடன் இந்த நூலை வழங்கியுள்ளேன். ஆழ்ந்த புலமையின் வழியாக கடும் உழைப்பின் சான்றாக இன்று உங்கள் கைகளில் தவழும் இந்த நூலை வழங்கி தமிழின் பெருமைக்கு அழகு சேர்த்துள்ள சொல்லாக்கியன் அவர்களுக்கு என் அன்பும் நன்றியும்.*

*மிக அழகாக இந்த நூலை பதிப்பித்திருக்கும் பரிதி பதிப்பகத்துக்கு வாழ்த்துக்கள்.*

**- முனைவர் போ.சத்தியமூர்த்தி**

***தமிழ்த்துறைத் தலைவர்,***
***மதுரை காமராஜல் பல்கலைக்கழகம்***

# கருத்துரை

திருக்குறளுக்கு காலந்தோறும் பல்வேறு வகையான உரை நூல்கள் வெளிவந்து கொண்டேயுள்ளன. தாம் வாசிக்கும் பின்புலத்திலிருந்து விளக்கங்கள் பலவும் தோன்றியுள்ளன. சமய நூல் வல்லார் தத்தம் சமயத்துக்கு ஏற்ப உரைகள் வரைந்துள்ளனர்.உளவியல் நோக்கு, மானுடவியல் நோக்கு, சமூகவியல் நோக்கு, பொருளியல் நோக்கு அரசியல் நோக்கு எனப் பலபார்வைகளில் குறள் விளக்கங்கள் உண்டு.

எளியவுரை, புத்துரை, உரைவளம், உரைக்கொத்து, உரைக் களஞ் சியம் எனப் பல்வேறு உரைகளும் உண்டு. ஆயிரக்கணக்கான ஆய்வு நூல்களும் புது புது விளக்கங்களும் திருக்குறளுக்குத் தோன்றிக் கொண்டே இருக்கின்றது.

திருக்குறளில் காணலாகும் புதுமைப் போக்குகள் இவ்வகை விளக்கங்களுக்கு காரணமாய் அமைந்துள்ளன. கனடாவில் வாழ்ந்து கொண்டிருக்கும் தமிழறிஞர் திரு தீனதயாளன் "திருக்குறள் ஒரு மறுவாசிப்பு" என்னும் இந்த நூலை பலகாலம் ஆய்ந்து வெளியிட்டிருக்கிறார்.

திருக்குறளில் காணும் சில சொற்களுக்கு இதுவரை சொல்லாத புதிய பொருளைத் தருகின்றார். சொற்களுக்குப் புதிய பொருள் காணும் போது அச்சொற்கள் ஏற்கனவே கையாளப்பட்டுள்ள நூல்களில் காணப்படுகின்றனவா என்று காண்பது மரபு.

தாம் காணும் சொற்பொருண்மைக்கு அச் சொல்லில் இடம் உள்ளதா என்பதை ஆராய வேண்டும். ஆனால் திரு.தீனதயாளன் அவர்கள் சில சொற்களுக்குக் தரும் விளக்கங்கள் அவர்தம் உள்ளுணர்வில் தோன்றியவைகளாகத் தென்படுகிறது. இவை குறித்து மேன்மேலும் ஆராய்தல் வேண்டும்.

அறிஞர் பா .வே.மாணிக்க நாயக்கர் அவர்களும் அறிஞர் திருஞானசம்பந்தம் அவர்களும் இவ்வகையில் எழுத்துக்களுக்கு உள்ளுணர்வில் எழும் விளக்கங்களைப் பல்லாண்டுகளுக்கு முன் எழுதியுள்ளார். இவ்வகையில் தீனதயாளன் அவர்களும் இதற்கு முன் சொல்லாக்கியம் என்னும் ஒரு நூலைப் படைத்துள்ளார்.

எடுத்துக் காட்டாக இந்நூலில் அமைந்துள்ள சில சொற்களில் பொருள் விளக்கம் வருமாறு:

நல் குரவு = நல்+ குரவு. குரவு = க் + உர் + அ + உ. மெய்க்குள் இருப்பது பிரிந்து வெளிவருதல் வாசனை. நல்குரவு = நல்ல வாசனை.

*நிறைமொழி = நிறை + மொழி. நிறை = ன் + இறை. இறையுடன் நெருங்கிய மொழி =ம் + ஒழி, ம் = மௌனம். ஒழி ஒ+ழ் + இ. முழுமையாய் ஆழ்ந்து இருத்தல்.*

*மறைமொழி = மறை +மொழி.மறை =ம் +அறை. மௌனத்தில் பிரிந்து ஐக்கியமாதல் . மொழி =ம் + ஒழி. மௌனம் ஒழிந்து பேச்சு . சொற்கள் மறை மொழி. மந்திரம் .*

*இறுதியாக குறளுக்கு உரைதருகின்றார். மௌனமான ஞானியரின் உயர்வை அந்த இடத்தில் வாழும் மக்கள் ஐம்புலன்களை அடக்கி மௌனத்தை அடையப் பயன்படுத்தும் சொற்கள் மந்திரங்கள் காட்டி விடும்.*

*திருக்குறளுக்கு காட்டும் இவை போன்ற விளக்கங்கள் பலவும் 'யோக' நெறியில் நின்றுரைப்பது போல காணப்படுகிறது.*

*பழஞ்சொற்களுக்கு உரை காணும் போது அந்த நூல் தோன்றிய காலத்தில் அச்சொல்லுக்கு என்ன பொருள் இருந்திருக்கும் என்று மொழி வரலாற்று பின்னனியில் உரை காண்பது இயல்பானதாகும்.*

*சான்றாக குறளில் வரும் சான்றோன் எனக்கேட்ட தாய் என்னும் தொடரின் இன்றைய பொருள் விளக்கத்தைக் காட்டலாம்." அகராதிக்கு அப்பால் " என்னும் நூலில் அறிஞர் கா.மீனாட்சி சுந்தரம் அவர்கள் இந்தச் சொல்லிற்கு பழங்காலத்தில் சங்க காலத்தில் "வீரன்" என்பது பொருள் கூறி இன்றைய பொருள் விளக்கத்தால் ( சான்றோன் அறிவாளி, சால்பு நிறைந்தவன்) பெற்ற இடர்ப்பாடுகளைச் சுட்டிக் காட்டுவர்.*

*தீனதயாளன் அவர்களின் சொற்பொருள் காணும் முயற்சிக்கு*

*சொல்லின் வரலாறும் பொருந்தி வருதல் வேண்டும்.*

*ஆசிரியரின் இடைவிடா ஆய்வு முயற்சியும், புதிய பொருள் காணும் வேட்கையும் வெற்றி பெற வாழ்த்துவோம்.*

**- முனைவர் இ.சுந்தரமூர்த்தி.**

**மேனாள் துணைவேந்தர். தமிழ் பல்கலைக்கழகம். தஞ்சை.**

Off : 044 - 2844 9527,
Cell: 9500760777

E.mail : krksankaraatamil@gmail.com



# சென்னை பல்கலைக்கழகம்
# UNIVERSITY OF MADRAS

Re-accredited at tha ''A'' Grade Level by NAAC and Conferred
with the ''University with Potential for Excellence'' study by UGC

http://www.unom.ac.in

**Department of Sangappalagai for Tamil Development**

**Dr. K. Sankara Narayanan**
Assistant Professor

ORI - Marina Campus
Chennai - 600 005

Date: 19.10.2016

சொல்லாக்கியனாரின் அடுத்த கட்ட முயற்சியும் நகர்வும் திருக்குறள் பக்கம் திரும்பி இருப்பது வரவேற்கத்தக்கது. திருக்குறளுக்கு அன்று முதல் இன்று வரை எத்தனையோ உரைகள் வந்துகொண்டு இருப்பினும் அவையெல்லாம் திருக்குறளை அடுத்த கட்ட நகர்வுக்கு இட்டுச் செல்லாமல் வெறும் பொருள் புரிதலுக்கு மட்டுமே இட்டுச் செல்கின்றன.

திருக்குறளின் பொருளை இலக்கணம், மொழியியல் அடிப்படையில் பார்க்கும் இவரது பார்வைகளும் பதிவுகளும் வித்தியாசமானது. இவை திருக்குறளை இன்னொரு வித்தியசமான கோணத்திற்கு இட்டுச் செல்லும் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

இன்று வரை உலகம் முழுவதும் திருக்குறள் தொடர்பான ஆய்வுகளும் மாநாடுகளும் கருத்தரங்கங்களும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. திருக்குறளுக்கான இம்மறுமலர்ச்சி காலத்தில் சொல்லாக்கியனார் எழுதிய இந்நூலின் வருகை அதன் சிறப்பினை உலகரங்கில் எடுத்துச் சொல்லப் பேருதவியாக அமையும்.

கோமான் என்பதற்கு மெய்யை முழுமையாய் அமைதியாக்கியவன் என்றும் (குறள்.25), தெய்வம் என்பதற்கு தேகம் உயர்ந்து உயிர்ப்புடன் இருக்கும் முழுமையான தன்மை என்றும் (குறள்.55), புன்கணீர் என்பதற்கு விரைவாய் துளிர்த்த கண்ணீர் என்றும் (குறள்.71) சொற்களுக்குப் புதிது புதிதாய் விளக்கம் தருவது குறிப்பிடத்தக்கது.

அறத்தால் ஆவது என்ற (37) குறளுக்கு பொருள் விளக்கம் தரும்போது, அறத்தால் ஆவது இது எனச் சொல்ல வேண்டியதில்லை. பல்லக்கைச் சுமப்பவனையும், அதில் அமர்ந்து பயணம் செய்பவனையும் பார்த்தாலே புரிந்து விடும், யார் அறம் இயற்றியவர் என்பதும், அறத்தின்

பயன் என்ன என்பதும், இதுபோன்று பல இடங்களில் வித்தியமான மாறுபட்ட பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.

ஒவ்வொரு அதிகாரத்தின் தொடக்கத்திலும் அவ்வதிகாரம் குறித்த அறிமுகமும் அதிகாரத்தின் முடிவில் அவ்வதிகாரத்தில் கூறப்பட்ட கருத்துக்களைத் தொகுத்து வழங்கியுள்ள திறமும் களவியலை அணுகியிருக்கும் பாங்கும் இதன் சிறப்பை மேலும் உயர்த்தும்.

”சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல்

நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல்

ஓசை யுடைமை, ஆழம் உடைத் தாதல்

முறையின் வைப்பே, உலகமலை யாமை

விழுமியது பயத்தல், விளக்கு உதாரணத்து

ஆகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே”

என்ற நன்னூல் கூறுகின்ற பத்துவகை அழகும் பொருத்தமுற அமைந்த நூல்.

சொல்லாக்கியனாரை வாழ்த்தும் வயதில்லை எனக்கு. நமசிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க! என இறைவனையே நாம் வாழ்த்துகின்றோம். அந்த மரபைச் சார்ந்து நானும் சொல்லாக்கியனாரை மனதார வாழ்த்துகின்றேன். தங்கள் பணி மேன்மேலும் சிறக்க, பயன்பெற என்னுடைய வாழ்த்துக்கள்.

மறுவாசிப்பு தளத்தில் திருக்குறளை அணுகியிருக்கும் இந்நூலை வாங்கிப் பாருங்கள். வாசிக்கத் தொடங்குங்களேன்..

**(சங்கர நாராயணன். கி)**

# அணிந்துரை

*சொல் ஆக்கியன் படைத்து அளித்துள்ள " திருக்குறள் ஒரு மறுவாசிப்பு" என்ற இந் நூல் தமிழ் இலக்கிய பரப்புக்கு வரும் புதுப்புனல். வரண்டு கிடக்கின்ற மண் வளத்தை புதுப்பித்து உயிர் ஊட்டும் புதுப்புனல் போல திருக்குறளுக்கு ஒரு புதிய கோணத்தில் பார்வையைச் செலுத்தி பிரம்மிக்க வைக்கும் முயற்சி. புதுப்புனல் கசடுகள் அகற்றி மண்ணை வளப்படுத்தும். புதிய ஊட்டச்சத்துகளை அளித்து நீர் ஓட்டத்தைத் தூய்மைப்படுத்தும். புதுப்புனல் நதிகளோடு உறவாடி கலந்து கடலோடு சங்கமிக்கத் துடிக்கும் ஆற்றலின் வடிவம். அதுபோல " திருக்குறள் ஒரு மறுவாசிப்பு " ம் பின்வரும் பங்களிப்பைச் செய்கிறது.*

*மணக்குடவர், பரிமேலழகர் உரைகளையே சார்ந்து எழுதிய பெரும்பாலான திருக்குறள் உரைகளுக்கு மாறுபட்டு எழுதக்கூடிய சூழல் இதுநாள் வரை இல்லை. ஒரு சிலரால் கொள்கை ரீதியாய் வேறுபட்டு உரைகள் வெளியிடப்பட்ட போதிலும், மரபு மீறாமல் இலக்கண அமைதியுடன் ஒரு புதிய கோணத்தில் ஆய்வோடு நடுநிலையுடன் எழுதிய முதல் நூல் இந்நூலாகத்தான் இருக்கும் என நம்புகிறேன்.*

*வள்ளுவர் மேல் தன் தனிப்பட்ட கருத்துக்களை சுமத்தாமல் திருக்குறள் சொற்களையே எடுத்துக் கொண்டு, தொல்காப்பிய இலக்கண அமைதியை இன்னும் விரிவுபடுத்தி ஒரு புதிய இலக்கணத்தை சொல்லாக்கியமாகப் படைத்து , அதன் வழியில் அவைகளுக்குப் பொருள் தேடி உரை செய்தது ஒரு வரவேற்கப்பட வேண்டிய முயற்சி*

*தமிழ் மொழிக்கு முதல் இலக்கண நூலாகவும், தமிழர் வாழ்வுக்கு முதல் இலக்கண நூலாகவும் அமைந்த தொல்காப்பியம் எல்லா சொற்களும் பொருள் குறித்தனவே எனக் கூறும் அதன் மரபை அடிப்படையாக வைத்து, ஒரு சொல் ஒரு பொருளைக் குறிக்குமானால் சொல்லின் அங்கங்களான எழுத்துக்களும் பகுதிப் பொருள்களைக் குறிக்க வேண்டும் அல்லவா.? எனக்கணித்து சொல்லாக்கியம் என்ற நூலைப் படைத்த இந்நூல் ஆசிரியர் அதனை முதல் நூலாகக் கொண்டு அதன் வழி இந்நூலை வழிநூலாக "திருக்குறள் ஒரு மறுவாசிப்பு" என்ற தலைப்பில் எழுதியுள்ளார்.*

*சொல்லாக்கியம் **4000** க்கும் அதிகமான சொற்களுக்கு புதுப்பொருள் தந்து ஒரு அகராதியை தன்னுள் கொண்டது. அதன் வழி எழுத்துக்கும் பொருள் உண்டு என்ற கணிப்பில் ஒரு இலக்கிய கட்டமைப்பை உருவாக்கி*

அதன் அடிப்படையில் திருக்குறள் முழுமைக்கும் புதிய உரையை மறுவாசிப்பாக அளித்துள்ளார் இந்நூல் ஆசிரியர்.

திருக்குறளில் உள்ள சொற்களுக்கு ஒரு புதிய ஆய்வு முறையில் பொருள் ஆக்கப்பட்டுள்ளது. அதன் விளைவாக, பல திருக்குறள்களின் விளக்கங்களும் ஏற்கனவே உள்ள உரையாசிரியர்களிடமிருந்து சிறிதும் பெரிதுமாய் தவிர்க்க இயலாமல் மாறுபடுகின்றது. இதை புதிய உரை என்பதை விட மறுவாசிப்பு என்பதே பொருத்தமாய் இருக்கும் இதன் விளைவாக பல விவாதத்துக்குரிய பரிமேலழகர் எடுத்தாண்ட சொல்லடால்கள் புதிய விளக்கங்கள் பெற்றுள்ளன. எல்லாவற்றையும் இங்கு விரித்துக் கூற இயலாமையால் ஒரு சிலவற்றை உதாரணங்களாகக் கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன்.

1. "ஆதிபகவன்" என்ற சொற்களுக்கு (குறள் 1) "இருக்கின்ற அனைத்துமாய் இருப்பவன் " என்று பொருள் விளக்கம் தருகிறார்.

ஆசிரியர் கூற்றுப்படி முதல் குறளின் விளக்கம்:

மொழி உள்பட உலகில் உள்ள அனைத்தும் இறைவனிடமிருந்து தோன்றி விரிந்து பரந்து வருகின்றன. மனிதனுள் மொழி, இறையின் நெருங்கிய மென்மையான வெளிப்பாடு அகரம் முதலான எழுத்துக்கள் மூலமாகவே கல்வியைப் பெற முடியும். கல்வியின் மூலமாகவே இறைவனை உணர முடியும். எனவே தான் , கடவுள் வாழ்த்து என்ற போதிலும், இறைக்கு பதில் எழுத்து முதலில் வந்தது.

2. "இந்திரன்" என்ற சொல்லிற்கு (குறள் 25) 'ஆனந்தமயமான வன்' என்று ஆசிரியர் பொருள் கூறுகிறார்.

3 அணங்கு என்ற சொல்லிற்கு (குறள் 1081) 'மிக நெருங்கிய வெளி, அசைவின்மை, தெய்வச் சிலை என்று இதுகாறும் ஏனைய உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்ட 'மோகினி "தெய்வமகள்", "மோகினித் தெய்வம்", "தெய்வப் பெண்" என்ற பொருளை விட ஏற்றமிகு பொருளாக மிக நெருங்கிய வெளி அசைவின்மை தெய்வச் சிலை என்று பொருள் விளக்கி இலக்கிய நயத்துடன் குறள் 1081 க்கு முழுதும் உரையாக இவ்வாறு கூறுகிறார். "அசையாத தெய்வச் சிலையா? அசைந்தாடும் மயிலா? உறுதியான செறிவா? இணங்கும் இளக்கமா? எது பெண்? தடுமாற்றத் தால் குழம்புகிறது என் மனம்.

4. தாமரைக்கண்ணன் என்ற சொற்களுக்கு (குறள் 1103) மெய்யுணர்வு காட்சியான ' என்று பொருள் கொண்டு பின்வரும் குறள் விளக்கம் சிந்திக்க வைக்கிறது. "தன்னை விரும்பும் தான் விரும்பும் பெண்ணின் மென்மையான தோள்களில் புதைந்து தூங்குவதைவிடவா இனியது, சொல், மெய்யுணர்வுக் காட்சியான உலகம்?

5. புத்தேள் என்ற சொல்லுக்கு (குறள் 1323)' அகம் புறத்துடன் ஒன்றிய நிலை, ஞான நிலை, மெய்யுணர்வு, ஒரே மாதிரியான, மாற்றமில்லா பேரின்பநிலை என்று பொருள் கொண்டு பின்வரும் குறள் விளக்கம் நயத்துடன், வானுலகு அல்லது தேவர் உலகம் என்று அது வெளிப்படுகிறது.

மண்ணோடு தண்ணீர் கலந்து ஒன்று சேர்ந்ததைப் போன்று மனத்தின் அன்பால் இணைந்து , ஒன்று சேர்ந்தவர்களின் ஊடலைக் காட்டிலும் மெய்ஞான உலகில் இன்பத்தை அதிகரிக்கச் செய்யும் செல்பாடு ஏதேனும் உண்டோ? இல்லை.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருள்கள் நான்கினில் முதல் முறை செம்மையாக வாழ்வாங்கு வாழ்ந்தால் நான்காவது உறுதிப் பொருளான வீடு தானே வரும் என்று கொண்டு வள்ளுவர் தன் திருக்குறளை அறத்துப்பால், பொருள் பால், காமத்துப்பால் என முப்பாலாக ஆக்கியுள்ளார். வள்ளுவர் தனது அறத்துப்பாலில் அறிவியல் ஞானியாகவும், பொருள் பாலில் பொருளாதார நிபுனராகவும் காமத்துபாவில் ஒப்பற்ற மாபெரும் கவிஞனாகவும் வெளிப்படுகிறார். கவிநயம், கற்பனை வளம், சொல்லழகு என காமத்துப்பாலில் நிரம்பி வழிகின்றன.

பகவத் கீதையை 'மூளை கொண்டு கற்காமல் இதயம் கண்டு உணர வேண்டும் என்று காந்தியடிகள் குறித்துள்ளார். அதனைத் தொடர்ந்து டாக்டர் மு.வ. அவர்களும் திருக்குறள் தாண்டி' திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்" என்ற நூலை எழுதி வெளியிட்டார். அதன் வழியில் டாக்டர் .சுப.அண்ணாமலை அவர்கள் திருக்குறள் சிந்தனை என்று 4 நூல்கள் வெளியிட்டார்.

சொல்லாக்கியன் அவர்களும் தன் திருக்குறள் ஒரு மறுவாசிப்பு என்ற இந்நூலை தன் நெஞ்சு கவர்ந்த நுட்பங்களை ஓதி உணர்ந்து இலக்கணஅமைதியுடன் குறள்களை ஒவ்வொரு சொல்லுக்குள்ளும் நுழைந்து தேடி புதுபொருள் கண்டு விளக்கியவற்றை இதனைப் படிப்பவர்கள் என்போல் இன்புற வேண்டும் என்பதே என் விருப்பம்.

வள்ளுவர் ஒரு புரட்சிக்கவிஞர். அறத்துப்பாலில் பலரும் குடித்துக் கொண்டிருக்க குடிக்காதே என்று குரல் கொடுத்தார்.

காதல் கிழத்தி-காமக்கிழத்தி-ஊர்ப் பரத்தை-சேரிப் பரத்தை என்று கலந்து ஒழுக்கச் சீர்குலைவு ஏற்படும் போது பிறனில் விழையாதே-விலைமகளிரோடு சேராதே என்றும் குரல் எழுப்பினார். பலரும் சூதாடி மகிழ்ந்த போது சூதாடாதே என்றும் குரல் கொடுத்தார். பெரும்பாலோர் புலால் உண்ணும் போது புலால் உண்ணாதே என்றும் உரக்கப்பேசினார். துறவறம் பூணும் போலிகளைக் கண்டு - மழித்தலும் நீட்டலும் வேண்டாமே என்று புரட்சி முழக்கம் இட்டார். வர்க்கபேதமும் - சாதிவர்ண பேதமும் பேனப்பட்ட போது "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்'' என சமத்துவம் பேசும் ஞானியாய் ஒளிர்கிறார்.

திருக்குறள் தரும் முப்பாலில் அறத்து பால் அறச் செயல் மனத்தை மாசு நீக்கி பக்குவப்படுத்தும் என்றும், பொருட்பாலில் பொருள் தனி மனிதனின் வாழ்க்கையை மட்டும் பற்றியது என்றும், காமத்துப்பாலில் ஆணும் பெண்ணும் காதல் துறையிலும் குடும்ப வாழ்விலும் பெறுகின்ற இன்பம் என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

திருக்குறள் சிந்தனை காமத்துப்பால் என்ற நூலில் டாக்டர் .சுப.அண்ணாமலை பின்வருமாறு கூறுவது நோக்கத்தக்கது.

இன்பம் என்ற சொல் பொதுவானது. காமம் என்பதே காதல் இன்பத்தைக் குறிக்கும். காமம் என்ற வடமொழிச் சொல்லும் உண்டு.

அதற்கு ஆசை என்று பொருள். தமிழில் உள்ள காமம் என்ற சொல் அதற்கு மாறானது. தமிழில் காமம் என்ற சொல் அன்பை நாடுவது.புலன் இன்பம் அதில் சேர்ந்து இருந்தாலும் வெறும் ஆசை மட்டும் காதல் அல்ல. காமம் என்ற தமிழ்ச் சொல் நிறைவு என்ற பொருளுடையகமம் என்ற அடிச் சொல்லில் இருந்து பிறக்கிறது எனவே ஆணும் பெண்ணும் கொள்ளும் ஊடலுடன் கூடிய அன்பினால் வரும் இன்ப நிறைவாகிய காதலே காமம் ஆகும்.

திருக்குறளில் வள்ளுவர் "இன்பம்" என்ற சொல்லை 60 தடவை எடுத்தாண்டுள்ளார். காமம் என்ற சொல்லை 53 தடவை கையாண்டுள்ளார். இவைகளைப் பொதுவாக ஆராயும் பொழுது இன்பம் என்ற சொல் பொதுவாக " மகிழ்ச்சி" என்ற பொருள் தொனிக்கும் வகையில் "காதல்" என்ற சொல் "ஆசை" என்ற பொருள் தொணிக்கும் வகையிலும் கையாளப்பட்டிருக்கிறது எனலாம்.

சொல்லாக்கியன் அவர்களும் தனது நூலில் காமம் என்ற சொல்லுக்கு மெய் அமைதியுறும் தன்மை, உடல் அடங்கும் தன்மை பொருண்மை ஆகும் தன்மை என்று பொருள் கொண்டு ஆணும் பெண்ணும் ஊடலோடு அன்பினால் வரும் இன்ப நிறைவாகிய காதலே காமம் என்று கொள்கிறார்.

பின்வரும் குறள் (1330) இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது. ஊடுதல் காமத்திற்கு இன்பம். அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின். ஆசிரியர் சொல்லாக்கியன் இதை பின்வருமாறு கூறுகிறார். ஊடுதல் காமத் திற்கின்பம்.உடல் உறவு முடிந்த பின் தழுவிக் கொண்டால் அது கூடிய இன்பத்திற்கே இன்பம் ஆகும். பேரின்பமாகும்.. இன்னொரு வகையில் சொல்லப்போனால் ஊடுதல் தான் இன்பம். அது கூடுதலில் முடியுமாயின் என்பது இதன் கருத்து .

காமத்தையும் இன்பத்தையும் ஒரு சேர ஒரே குறளில் இறுதியாக வைத்து காதல் எவ்வளவு அன்போடும் ஊடலோடும் காமத்தால் உருப்பெற்று ஆண் பெண் காதல் இன்பத்தை கூடி மகிழ்ந்து பேரின்பமாகப் பெறுகிறார்கள் என்று காமத்துப்பால் நிறைவு செய்கிறது. ஆசிரியர் சொல்லாக்கியன் எழுதிய திருக்குறள் ஒரு மறுவாசிப்பு என்ற இந்நூலில் நான் கண்ட நயங்கள் பல.பானைச் சோற்றுக்கு ஒருசோறு பதம் பார்ப்பது போல முப்பாலுக்கு ஒரு பால் காமத்துப்பால். அதில் முத்துக் குளிக்கையில் கண்டு எடுத்த முத்துக்கள் பல. சிலவற்றை இங்கே உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். சுவைத்து மகிழுங்கள். பிறகு இன்னும் பல முத்துக்களை நீங்களும் கண்டு எடுக்கலாம்.

1. குறள் (1112)

ஏதேனும் மலரைக் கண்டால் ஐயோ, இவளுடைய கண்களும், பலரும் காண்கின்ற பூவைப் போல் இருக்கின்றதே என்ற நினைவு வந்து பலரும்

*இவருடைய கண்களைப் பார்க்கின்றார்களே என்ற பொறாமையால் அதைத் தடுக்க ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கின்றோமே என்ற ஆற்றாமையால் நெஞ்சம் நினைவை இழக்கின்றது.*

*2. குறள் (1115)*

*அனிச்ச மலர்களை அவற்றின் காம்புகளை நீக்காமல் படுக்கையில் தூவினாள் அவளுடைய மென்மையான இடை காம்பின் வலிமையால் ஒடிந்து விட்டது. நல்ல செய்தியை பரப்பப் போவதில்லை பறை மேளம். அவள் இறந்து விட்டாள் என்ற தீய செய்தியைத் தான் பறை அறிவிக்கப் போகிறது. அல்லது*

*அனிச்ச மலர்களை அவற்றின் காம்புகளை நீக்காமல் சூடிக் கொண்டாள் பாரத்தைத் தாங்காமல்இடை முறிந்து விட்டது. அவள் இறந்து விட்டாள் என்ற தீய செய்தியைத் தான் பறை அறிவிக்கப் போகிறது.*

*3 குறள் (1116) தாங்க முடியாத என் உடம்பின் உள்ளே தவிப்பும் வெட்கமும் உயிரைக் காவடித் தண் டாக்கி பாரம் மாறி மாறி கணக்கும் கூடைகளாக தொங்கிக் கொண்டிருக்கின்றன.*

*4. குறள் (1293)*

*நெஞ்சே நீ அவர் கையைப் பிடித்துக் கொண்டு அவர் பின்னாலேயே தூரச் செல்லுவது... ஊம் கெட்டவர்களுக்கு நன்பர்களே இல்லை என்பது இதுதானா?*

*5. நான் தும்மியவாறு இருந்த போது நீடூடி வாழ்க என்று தன்னிச்சையாக வாழ்த்தி முடிக்கும் முன் திடுக்கிட்டு நாக்கை பல்லால் கடித்து வாழ்த்தைப் பாதியிலேயே நிறுத்திவிட்டு ஆமாம் நான் தான் இங்கு இருக்கிறேனே அப்போது யாரை நினைத்து தும்மினீர்கள் என்று அழத் துவங்கி விட்டாள்*

*6. குறள் (1319)*

*நான் யாரையும் நினைக்கவில்லை. எனக்கு யாரையும் தெரியாது. உன்னைத் தவிர வேறு யாரை நினைக்கப் போகிறேன். ஏதோ, யதேச்சையாக தும்மல் வந்து விட்டது. இது போன்று பணிவாக தன்னிலையை உணர்த்தினாலும் ஆமாம் இந்த மாதிரி தான் நீங்கள் மற்ற எல்லா பெண்களிடமும் வழிகிறீர்கள் போலிருக்கிறது என்று குற்றம் சாட்டுவாள்.*

*சொல்லாக்கியனுக்கு வாழ்த்துக்கள்.*

Dr. **அழகப்ப ராம்மோகன்**
*சிகாகோ 21.1.17*

# முன்னுரை

திருக்குறளுக்கு ஏராளமான உரைகள் ஏற்கனவே இருக்கின்றன. ஆனால், அவற்றில் பெரும்பாலானவை, பரிமேலழகரின் உரையைத் தழுவியே எழுதப்பட்டுள்ளன. எனவே, அவ்வுரைகள், உரைக்கு உரை என்ற அளவிலேயே நிற்கின்றன. திருக்குறளின் பல சொற்களுக்கு அகராதிகளில் பொருளில்லாத காரணத்தால், திருக்குறளை நேரிடையாகச் சந்திக்க முடியாமல், பல உரையாசிரியர்களும், மணக்குடவர் மற்றும் பரிமேலழகர் உரைகளையே நம்ப வேண்டியிருந்தது போலும். மணக்குடவரின் உரை மிகவும் சுருக்கமானது. பரிமேலழகரின் உரையோ மிகவும் விரிவானது. பரிமேலழகரின் ஆளுமைமிக்க உரைக்கு மாறுபட்டு உரை எழுதுவதற்கான சூழல், இது நாள்வரை இல்லாமல் இருந்தது.

இங்கு, மணக்குடவர் மற்றும் பரிமேலழகரின் உரைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்ட போதிலும், திருக்குறளை முடிந்தவரை நேரடியாக சந்திக்க முயலப்பட்டுள்ளது. திருக்குறளின் சொற்களுக்கு ஒரு புதிய ஆய்வு முறையில் பொருள் ஆக்கப்பட்டுள்ளது. விளைவாக, பல திருக்குறட்களின் விளக்கங்களும் ஏற்கனவே உள்ள உரைகளிடமிருந்து சிறிதும் பெரிதுமாய்த் தவிர்க்க இயலாமல் மாறுபடுகின்றன. இது புது உரை என்பதைவிட மறு வாசிப்பு என்பதே பொருத்தமானதாய் இருக்கும்.

மேற்கூறிய புதிய ஆய்வு முறையின் அடித்தளத்தை, சொல்லாக்கியம் எனும் நூலில் விரிவாகக் காணலாம்.

சொல்லாக்கியத்தின் சாரத்தைச் சுருக்கமாக, இந்நூலுக்கு நேரடியாகத் தொடர்புள்ள வகையில், கீழ்வருமாறு காணலாம்.

எல்லாச் சொற்களும் பொருள் குறித்தனவே என்ற தொல்காப்பியத்தின் கூற்றை நாம் அனைவரும் அறிவோம். ஒரு சொல், ஒரு பொருளைக் குறிக்குமானால், சொல்லின் அங்கங்களான அசைகளும், பகுதிப் பொருள்களைக் குறிக்க வேண்டும் அல்லவா? அசையின் அங்கங்களான எழுத்துகளும், அடிப்படையான பொருள்கூறுகளைக் கொண்டிருக்க வேண்டும் அல்லவா?.

உதாரணமாக, ஓரெழுத்து சொற்களை எடுத்துக் கொள்வோம். சீ, தீ, பீ. இவை, நேர் அசைகளாகவும் உள்ளன, "இயக்கத்தைத் தா, தேகத்தைத் தா, கொண்டதைத் தா", என வெவ்வேறு பொருளையும் தருகின்றன. இவற்றை, ச் + ஈ, த் + ஈ, ப் + ஈ எனும் எழுத்துகளின் சேர்க்கையாகக்

*காணலாம். 'ஈ' எனும் எழுத்து, சொல்லாக, 'ஈ' அல்லது 'கொடு' எனும் பொருளைத் தருகின்றது. இந்த சேர்க்கைகளில், 'ஈ' எனும் எழுத்து பொதுவாக உள்ளது. எனவே, சீ, தீ, பீ ஆகிய மூன்று சொற்களின் பொருள் மாற்றங்களுக்குக் காரணம். 'ச், த், ப்' ஆகிய எழுத்துகளின் மாறுபட்ட பொருள்கூறாகவே இருக்க வேண்டும். அவை, ச் = இயக்கம், த் = தேகம், ப் = கொள்ளுதல், என வெளிப்படுகின்றன. எனவே, ஒவ்வொரு எழுத்துக்கும் தனிப்பொருள் உண்டு என்பது பெறப்படுகின்றது அல்லவா?*

*அப்படியெனில், ஒவ்வொரு எழுத்துக்குமான பொருள் என்ன?*

*வேறு எந்த மொழியிலும் இல்லாமல், தமிழ் மொழியில் மட்டும், எழுத்துகள் உயிர் எழுத்துகள், ஆய்த எழுத்து மற்றும் மெய் எழுத்துகள் என பெயரிடப்பட்டதேன்? மொழிக்கு உயிர்போல் இருப்பதால், உயிர் எழுத்து என்கிறோமா? மனித உயிரின் ஒலியாக அல்லது எழுத்தாக இருப்பதால், அப்பெயர் பெற்றதா? அணுவின் தோற்றத்திலிருந்து அண்டத்தின் மாற்றத்தினூடே உயிரின் ஒலி தொடர்கின்றதா? மெய் எழுத்துகள், மொழிக்கு மட்டும் உடலாக இல்லாமல், மனித உடலின் அங்கங்களைக் குறிக்கின்றனவா? ஆய்த எழுத்தின் தன்மை எத்தையது? உயிரும் மெய்யும் இறுகிய தனி இருப்பா?*

**உயிர் எழுத்தின் தன்மை:**

*உடலும் மனமும் சலனமற்று இருக்கையில், ''அ'' எனும் உயிர்அதிர்வு, உடலின் மையத்தில் தோன்றி, இயல்பாகத் தன்னிச்சையாகத் தொடர்ந்து வெளிப்பட்டுக் கொண்டு உள்ளது. வெளிவரும் காற்றை வெவ்வேறு வகைகளில் இதழ்களாலும், நாக்காலும் தடுக்க முயல்வதன் மூலம், வெவ்வேறு உயிர் எழுத்தொலிகள் உருவாகின்றன. அப்போது உடலின் மையத்திலும் வெவ்வேறு (அகத்தெழு வளியிசை) அழுத்தங்கள் ஏற்படுகின்றன.*

*''அ" எனும் எழுத்தில், புள்ளி அல்லது சுழி எனும் குறி அலகு, அண்ட வெளியில் இருப்பு நிலையையும் துவக்கத்தையும் குறிக்கின்றது. மேல் வளைவும், கீழ் வளைவும் சேர்ந்து ஒரு வட்டத்தை அல்லது கோளத்தைக் குறிக்கின்றது. படுக்கைக்கோடு உள் வெளி அச்சையும், செங்குத்துக் கோடு மேல் கீழ் அச்சையும் குறிக்கின்றன. எனவே, வடிவ இயல்படி, ''அ" எனும் எழுத்து, இருப்பின் அனைத்துப் பரிமாணங்களையும் குறிக்கின்றது. ''அ", தனக்குள் துவக்கம் அல்லது மையத்தையும், இருப்பு வெளியையும், பரிமாணத்தையும், உள் இயக்கத்தையும் குறிப்பதாய் உள்ளது. ''அ", உயிரைச் சுட்டுகின்றது. அகத்தைக் குறிக்கின்றது.*

*''ஆ" எனும் எழுத்தில், ஒரு உயிரிலிருந்து இன்னொரு உயிருக்கான புள்ளி அல்லது சுழி, கீழே இறங்குகின்றது. ''அ" (பசு) என்பதிலிருந்து இன்னொரு ''அ" (கன்று) வருவதை, ''ஆ" குறிக்கின்றது. ''ஆ", ஒன்று மற்றொன்றாய் ஆதலைக் குறிக்கின்றது. ''ஆ" விலும் ''அ" உள்ளது.*

*''இ" எனும் எழுத்தில், ''அ" வைச் சுற்றி மேலும் ஒரு மேல் வளைவுக் கோடும், கீழ் வளைவுக் கோடும் உள்ளன. இயக்கம் கட்டுப்படுத்தப்பட்டு*

ஒரு குறிப்பிட்ட வெளியில் உயிர் நிலைக் கொள்கின்றது. "இ" உயிருக்கு சற்று முன் இருத்தலைக் குறிக்கின்றது. ''இ" யிலும் ''அ" உள்ளது. அகத்திற்கும் புறத்திற்கும் இடையில் உள்ளதைக் குறிக்கின்றது.

''ஈ" எனும் எழுத்தில், ''இ" வின் ஒற்றுமை சிறிதும் இல்லை, ''அ" வின் கூறும் பெரும்பகுதி இல்லை. புள்ளி அல்லது சுழி மட்டும் இரண்டாக உள்ளன. அவை இரணடு இருப்பு நிலைகளைக் குறிப்பதாய் உள்ளன. ''ஈ" யிலும் இரண்டு புள்ளிகள் அல்லது சுழிகள், ''அ" வில் ஒன்று இருப்பது போல், உள்ளன. ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்வதாய் உள்ளது. இடையில், செங்குத்துக் கோடான தடையும் உள்ளது. அவை தனித் தனியாய் உள்ளதைக் குறிக்கின்றது. ஈதல் அல்லது தருதலைக் குறிக்கின்றது.

''உ" எனும் எழுத்தில், புள்ளி, மேல் வளைவுக் கோட்டோடு படுக்கைக் கோடு முன் நீளுகின்றது. அது உயிருக்கு முன் உள்ள புறத்தைக் குறிக்கின்றது. ''உ" விலும் ''அ" வின் கூறுகளான புள்ளி மேல் வளைவுக் கோடு மற்றும் படுக்கைக்கோடு உள்ளன.

''ஊ" எனும் எழுத்தில், ''உ" வின் மேல், ''ள" ஏறி பயணிக்கின்றது. ''ள" என்பது ''அ" வின் ஒரு பகுதியும், ஈ: யின் ஓர் பகுதியும் சேர்ந்ததாய் இருக்கலாம். அது உயிரின் இடப்பெயர்ச்சியை அல்லது நீட்சியைக் குறிக்கலாம். மேலும், ''ள்" என்பது மிகையைக் குறிப்பது என சற்று நேரத்தில் காண்போம். ''ஊ" என்பது, விரிந்துப் பரவுதலையும், நீள்தொடர்ச்சியையும் குறிக்கும்.

''எ" எனும் எழுத்தில், ''அ" வின் கூறுகளான புள்ளியும், மேல் வளைவுக் கோடும் இருக்கின்றன. மேல் வளைவுக் கோடு உயர்வதை, செங்குத்துக் கோடு தடுக்கின்றது. ''எ" உயர்தலைக் குறிக்கின்றது.

''ஏ" எனும் எழுத்தில், தடுக்கும் செங்குத்துக் கோடு இழுக்கப்படுவதால், உயர்வு மேலும் மிகுகின்றது. எனவே, ''ஏ" என்பது மிகுந்த உயர்வைச் சுட்டும். வீரமாமுனிவருக்கு முன், ''ஏ" என்பதை,''எ" விற்கு மேல் ஒரு புள்ளியை வைத்து எழுதினாராம். அதன் தர்க்கம், புள்ளி உயர்ந்து இடம்பெயர்ந்ததைக் குறிக்கும். எப்படியாயினும் மிகுந்த உயரத்தை, ''ஏ" குறிக்கும்.

''ஐ" என்பது, ''அ" வும் ''இ" யும் சேர்ந்த கூட்டு உயிராய் இருக்கலாம். இது, உயிரோடு உயிர் சேரும் வியப்பையும், ஒன்று வேறொன்றோடு சேர்ந்து ஒன்றாக ஐக்கியமாவதையும் குறிக்கும்.

''ஒ" எனும் எழுத்தில், ''அ" வும் ''உ" வும் சேர்ந்துள்ளன. ''அ" அகத்தைக் குறிப்பதாலும், ''உ" புறத்தைக் குறிப்பதாலும், ''ஒ" அகத்தையும் புறத்தையும் ஒரு சேர குறிக்கும் முழுமையாகும். ''ஒ" உயிரையும், உயிரை ஒட்டிய புறத்தையும் குறிக்கும்.

''ஓ" என்பது, ''ஒ"வின் நீட்சியாதலால், உயிரின் முழுமை உயர்ந்து நீண்டு விரியும் தன்மையை, ஒட்டுமொத்தத்தையும், அனைத்தையும் உள்ளடக்கிய தன்மையைக் குறிக்கும். உயர்ந்து விரிந்து படர்ந்த

தன்மையைக் குறிக்கும். விரியும் கோளத்தைக் குறிக்கும். விரிவின் முடிவைக் குறிக்கும்.

"ஔ" எனும் எழுத்தில், ''அ" வும், ''ஊ" வும் இணைகின்றது. உயிரின் புற நீள் தொடர்ச்சியைக் குறிக்கும். உயிர் புறத்தில் விரிந்துப் பரவும் தன்மையைக் குறிக்கும். தொல்காப்பியரும், ஞானப்பிரகாச சுவாமி அவர்களும், ''ஔ" என்பது ''அ" வும் ''உ" வும் சேர்ந்ததாய் கூறுகின்றனர். ''ஔ" வில், ''ள" இருப்பதால், ''அ" வும் ''ஊ" வும் இணைந்து ''ஔ" ஆகி இருப்பது தர்க்க ரீதியாகச் சரியாக இருப்பதாய்த் தோன்றுகின்றது. மேலும், குறிப்பில், ''ஓ" வின் பொருளுக்கு மாறுபடுகின்றது.

உயிர், வெளியின் தன்மை உடையது. அதனால்தானோ என்னவோ, தமிழ் உயிர் எழுத்துகளின் குறிகள், வெளியின் தளங்களையும், பரிமாணங்களையும் குறிக்கின்றன.

**ஆய்தத்தின் தன்மை:**

''ஃ", இது உயிர் மட்டுமாகவோ, மெய் மட்டுமாகவோ இன்றி, இரண்டும் இணைந்த ஒன்றாக உள்ளது. இரண்டுமற்ற ஒலியாக இல்லை, இரண்டுமான பெரும் ஆயுதமாய் உள்ளது. 'க், ங், ச்,,ன்' ஆகிய மெய் எழுத்துகள் தோன்றக் காரணம், 'ஃ'. இந்த 'ஃ' கே 'அ' எனும் உயிரும், 'க்' எனும் மெய்யும் இணந்த ஒன்று என்பதால், உயிரின்றி மெய்யும் உருவாகியே இருக்க முடியாது என்பது தெளிவாகும். அல்லது, ஒவ்வொரு மெய்யிலும் உயிர் மறைமுகமாக இருக்கின்றது என்பது தெளிவாகும். உடலின் ஒவ்வொரு உறுப்பும் தனித்தனியாக உயிர்ப்பு பெற்று விளங்குவதையும், உடல் முழுமையும் உயிர் பெறுவதையும் சிந்திக்க வேண்டும்.

**மெய் எழுத்துகளின் தன்மை:**

மெய் எழுத்துகள் உடலில் மையம் கொண்டு இயங்கும் இடங்களாக உணரப்படுவன (உதாரணமாக ''ங்ங்ங்ங்..." என்று மெல்ல உச்சரிக்கும்போது கழுத்துப்பகுதியில் எங்கே அதிர்வுகள் ஏற்படுகின்றன எனக் கூர்ந்து நோக்குங்கள். அதே போன்று ''ச்ச்ச்ச்..."க்கும் செய்து பாருங்கள்), கீழ் வருமாறு:

க் சிறு நாக்கு தொண்டைத் துளையை அடைக்கும் இடம்.

ங் தொண்டைச் சங்குப் பகுதி

ச் தொண்டைக் குழி

ஞ் தொண்டைக்குக் கீழ் உள்ள மேல் மார்புப் பகுதி

ட் இடை மார்புப் பகுதி

ண் மார்புப் பகுதி

த் கீழ் மார்புப் பகுதி

ந் நெஞ்சுக் குழி

ப் வயிற்றுப் பகுதி

ம் தொப்புள் குழி

ய் தொப்புள் கீழ் உள்ள வயிற்றுப் பகுதி

ர் அடி வயிற்றுப் பகுதி

ல் குதத்திற்கு மேல் உள்ள பகுதி

வ் குதம்

ழ் மூலாதாரம் / குண்டலினி

ள் பெண்குறிப் பகுதி

ற் விறை

ன் ஆண்குறிப் பகுதி

**மெய் எழுத்துகளின் பொருள், இடம், இயக்கம், காலத் தன்மை:**

மெய்யின் / உடலின் / பொருளின் வெவ்வேறு தன்மைகளைப் பல்வேறு மெய் எழுத்துகள் குறிக்கின்றன.

‘‘க்" எனும் எழுத்து மெய்யையும் பொருண்மையையும் குறிக்கின்றது. முப்பரிமாண வடிவில், ஒருவர் அமர்ந்திருக்கும் நிலையை ஒத்து இருக்கின்றது. அசைவற்ற மனிதர் அல்லது தனிப்பொருளைக் குறிக்கும்.

‘‘ங்" என்பது ‘‘ன் + க்" என்பதாலும், ‘‘ன்" என்பது சுழிகளின் நெருக்கத்தால் நெருக்கத்தைக் குறிக்கின்றதாலும், ‘‘ங்" என்பது மெய்க்கு / பொருண்மைக்கு நெருக்கமானதைக் குறிக்கும். இடத்தைக் குறிக்கும்.

‘‘ச்" என்பதில், ‘‘க்" இன் ஒரு கீழ் வளைவுக் கோடு இல்லாமல், படுக்கைக் கோடு தடையற்று இருப்பதால், மனிதர் அல்லது பொருளின் இயக்கத்தையும் அதனால் ஏற்படும் விளைவுகளையும் குறிக்கும். உடல், உயிர், இயக்கம், சத்தம், அதிர்வு போன்றவற்றை, ‘‘ச்" குறிக்கும்.

‘‘ஞ்" என்பது ‘‘ன் + ச்" என்பதால், இயக்கத்திற்கு நெருக்கமானதைக் குறிக்கும். மிக நெருக்கமான அதிர்வைக் குறிக்கும்.

‘‘ட்" என்பதன் வடிவைக் காண்கையில், இருப்பதை (செங்குத்துக்கோடு) ஒட்டித் தொடர்வதாக உள்ளது. தொடர்ச்சியை, வெளியின் நீட்சியைக் குறிக்கும்.

‘‘ண்" என்பதில், மூன்று சுழிகள் நெருங்கி உள்ளதால், மிகுந்த நெருக்கத்தைக் குறிக்கும். அண்மையை, வெளியின் குறுக்கத்தைக் குறிக்கும்.

‘‘த்" என்பது "க்" விற்கு கால் முளைத்தது போல் உள்ளதால், இயங்குகின்ற உடல் அல்லது தேகத்தைக் குறிக்கும். தேக உணர்வையும் குறிக்கும்.

‘‘ந்" என்பது ‘‘ன் + த்" என்பதால், தேகத்தின் நெருக்கத்தை / தேகத்திற்கு நெருக்கமானதைக் குறிக்கும். அகந்தையைக் குறிக்கும்.

‘‘ப்" என்பது பாத்திரம் போல் கொள்ளும் தன்மை உடையதாய் உள்ளதால், வெளி, உடல், மூளை, வயிறு, மனம், எண்ணம் போன்றவற்றைக் குறிக்கும்.

*''ம்" என்பது பாத்திரத்தை மூடியது போல் உள்ளதால், உடல், உயிர், மனம், ஆழ்மனம், மௌனம், அமைதி, ஆன்மா போன்றவற்றைக் குறிக்கும்.*

*''ய்" என்பது ''ப்" எனும் பாத்திரத்தின் நடுவில் செங்குத்துக் கோடு இருப்பதால், ஒன்றிலிருந்து பிரிவது எனப் பொருள்படும். ''இ + அ" என்பதுதான், ''ய" ஆகி இருக்கலாம். எனவே, ''ய்" என்பது இருப்பதில் இருந்து உயிர் பெறுதல் என்றோ, உயிர்ப்புடன் இருத்தல் என்றோ பொருள் கொள்ளலாம்.*

*''ர்" என்பது இருத்தல் என்பதையும், பிரித்தல் / அறுத்தல் என்பதையும் குறிப்பதாய் உள்ளது. ''அர், இர், உர், அரம், கரம்" என்ற சொற்களில் இருந்து உய்த்துணர்க.*

*''ல்" என்பது மேலும் கீழுமான அலை வரிசையைக் குறிக்கும். அதிர்வு, அசைவு, இயக்கம், ஒலி, உயிர்ப்பு, இருப்பு ஆகியனவற்றைக் குறிக்கும்.*

*''வ்" என்பது ''உ + அ" என்பதை வடிவத்தின் அமைப்பிலும் காணமுடியும். ''உ" என்பது புறம் என்பதாலும், ''அ" என்பது அகம் என்பதாலும், ''வ" என்பது ''புறம் மற்றும் அகம்" அல்லது புறமும் அகமும் சேர்ந்து ''முழுமை" யைக் குறிக்கும்.*

*''ழ்" என்பது ''ம்" என்பதிலிருந்து வேர் முளைத்தது போல் உள்ளதால், உடல், மனம், ஆன்மா ஆகியனவற்றின் ஆழத்தைக் குறிக்கின்றது. ஆழம், கீழ் என்பதையும் குறிக்கின்றது.*

*'ள்" என்பது "ல்" என்பதன் நீட்சி / பன்மை. மிகையைக் குறிக்கும். அள், எள், ஒள், அளம், களம், வளம் போன்ற சொற்களிலிருந்து உய்த்துணர்க.*

*''ற்" என்பது நீட்சியை / மிகையைக் குறைக்கும். இன்மை, அறுப்பு போன்றவற்றைக் குறிக்கும். அறு, அறம், அற்றம், இற, பற, மற போன்ற சொற்களிலிருந்து உய்த்துணர்க.*

*''ன்" என்பது இரண்டு சுழிகளின் சேர்ப்பு ஆவதால், நெருக்கத்தைக் குறிக்கும்.*

*இவ்வாறு, வெளி, பொருள், இணைதல், அதிர்வு, இயக்கம், தூரம், நெருக்கம், காலம், உடல், உயிர், அறிவு, மனம், ஆன்மா, பிரிவு என இருப்பின் தோற்றம், மாற்றம், இருத்தல், மறைவு என்று அனைத்து அம்சங்களையும் குறிக்கும் நுண் குறிகள், உயிர், ஆயுதம் மற்றும் மெய்யெழுத்துகளைக் கொண்டது, தமிழ்.*

**சொல் அலகுகள் அல்லது சொல் இணைப்புகள்:**

*பிறகு, உயிரும் மெய்யும் சேர்ந்து முழு / பகுதிப் பொருளைக் குறிக்கும் சொல் / அசையாகின்றது. இவற்றைச் சொல்லடிகள் அல்லது சொல் அலகுகள் அல்லது சொல் அங்கங்கள் அல்லது சொல் இணைப்புகள் எனலாம். உதாரணமாக, அல், அள், அக், அங், அச், அஞ், அம், ஆண், ஆல், இர், இல், ஈய், ஈர், உண், உம், ஊண், ஊம், எண், எம், ஏய், ஏர், ஐம்,*

ஒண், ஓய், ஓம், ஓய், ... போன்று மொத்தம் 216 சொல் இணைப்புகள் உருவாகும். அவற்றின் அடிப்படையான பொருள் கீழ் வருமாறு:

அக் = அ + க். உயிரும் மெய்யும் சேர்ந்து. (அ, எதிர்மறையானால்,) மெய்யற்ற. (அகம், அக்கம்).

அங் = அன் + க். அன் = அ + ன். உயிரின் நெருக்கம். (அ, எதிர்மறையானால்,) நெருக்கம் அற்ற. அங் = மெய்யுடன் உயிரின் நெருக்கம். மெய்யுடன் நெருக்கம் அற்ற. (அங்கம்).

அச் = உயிர்ப்புள்ள இயக்கம். இயக்கமற்ற. (அச்சம்).

அஞ் = அன் + ச். இயக்கத்துடன் உயிரின் நெருக்கம். (அ, எதிர்மறையானால்,) இயக்கத்துடன் நெருக்கம் அற்ற. (அஞ்சு).

அட் = அ + ட். உயிரை ஒட்டித் தொடரும். தன்னை ஒட்டித்தொடரும். (அடம்).

அண் = அ + ண். உயிரோடு மிக நெருக்கமான. தன்னோடு மிக நெருக்கமான. (அண்ணன்).

அத் = உயிர்ப்புள்ள தேகம் / வடிவம். (அ, எதிர்மறையானால்,) தேகமற்ற / வடிவமற்ற. (அத்தி)

அந் = அன் + த். தேகத்துடன் உயிரின் நெருக்கம். (அ, எதிர்மறையானால்,) தேகத்துடன் நெருக்கம் அற்ற. (அந்தம்).

அப் = அ + ப். உயிர்ப்புள்ள கொள்கலம். உயிர்ப்புள்ள வெளி, வானம், பூமி, கடல், மனம், அறிவு, உடல், எண்ணம். (அ, எதிர்மறையானால்,) கொள்ள முடியாத. வெளி, நீர். (அப்பா, அப்பு).

அம் = அ + ம். உயிர்ப்புடன் கொண்டு மூடியது. தன்மை. குணம். பண்பு. இயல்பு. மறைவு. பாதுகாப்பு. (அ, எதிர்மறையானால்,) கொண்டு மூடாத. மறைவற்ற. பாதுகாப்பில்லாத. தன்மையற்ற. (அம்மா, அம்மை)

அய் = அ + ய். உயிர்ப்புடன் இருத்தல். (அ, எதிர்மறையானால்,) இருப்பற்ற. (அயம்).

அர் = அ + ர். உயிர்ப்புடன் இருத்தல். பிரித்தல். அறுத்தல். (அரம்).

அல் = அ + ல். உயிர்ப்புடன் இயங்கல். அதிர்தல். அலைச்சல். துன்பம். அமைதியின்மை. துடிப்பு. மேலும் கீழுமான, முன்னும் பின்னுமான இயக்கம். (அலை).

அவ் = அ + வ். உயிர்ப்புடன் அகமும் புறமுமாய். (அ, எதிர்மறையானால்,) அகமும் புறமும் அற்று. (அவம்).

அழ் = அ + ழ். உயிர்ப்புள்ள ஆழம். (அழு).

அள் = அ + ள். உயிர்ப்பின் மிகை. (அளி).

அற் = அ + ற். உயிர்ப்புடன் அறுதல். பிரிதல். அமைதி. (அறம்).

அன் = அ + ன். உயிர்ப்புள்ள நெருக்கம். (அ, எதிர்மறையானால்,) நெருக்கமற்ற. (அனல்).

ஆக் = ஆ + க். மெய்யாக்குதல். பொருண்மையாக்கல். (ஆக்கம்).

ஆங் = ஆ + ன் + க். மெய்யிற்கு / பொருண்மைக்கு நெருக்கமாகிய. (ஆங்கு).

ஆச் = ஆ + ச். இயக்கமாக்கிய / சத்தமாக்கிய. (ஆசை).

ஆஞ் = ஆ + ன் + ச். இயக்கத்திற்கு நெருக்கமாகிய. (ஆஞ்சை).

ஆட் = ஆ + ட். ஒட்டித்தொடர்வதாகிய. (ஆடல்).

ஆண் = ஆ + ண். மிக நெருக்கமாகிய. (ஆணி).

ஆத் = ஆ + த். தேகம் அல்லது வடிவம் ஆக்கிய. (ஆத்தி).

ஆந் = ஆ + ன் + த். தேகத்திற்கு நெருக்கமாகிய. (ஆந்தை).

ஆப் = ஆ + ப். கொள்வதாக்கிய. (ஆப்பம்).

ஆம் = ஆ + ம். கொண்டு மூடியதாக்கிய. (ஆமை)

ஆய் = ஆ + ய். இருப்பதாகிய. ஆகி. (ஆயுள்).

ஆர் = ஆ + ர். பிரி. (ஆரம்).

ஆல் = ஆ + ல். மேலும் கீழுமாக்கு. (ஆலை).

ஆவ் = ஆ + வ். புறமும் அகமும் ஆக்கிய. (ஆவி).

ஆழ் = ஆ + ழ். ஆழமாக்கிய. (ஆழி).

ஆள் = ஆ + ள். மிகுதியாக்கு. (ஆளு).

ஆற் = ஆ + ற். அறு. பிரி. (ஆறு).

ஆன் = நெருக்கமான. (ஆனை).

இக் = இ + க். இந்த / இருக்கும் மெய் / பொருண்மை. (இகம்).

இங் = இ + ன் + க். நெருங்கி இருக்கும் மெய் / பொருண்மை. (இங்கு)

இச் = இ + ச். இந்த / இருக்கும் இயக்கம். (இச்சை).

இஞ் = இ + ன் + ச். இயக்கம் நெருங்கி இருக்கும். (இஞ்சி).

இட் = இ + ட். இருப்பதுடன் ஒட்டித் தொடரல். (இடம்).

இண் = இ + ண். இருப்பதன் மிகை நெருக்கம். (இணை).

இத் = இ + த். இருக்கும் தேகம். (இதம்)

இந் = இ + ன் + த். தேகத்தை நெருங்கி இருக்கும். (இந்திரன்)

இப் = இ + ப். கொண்டு இருக்கும். (இப்பம்).

இம் = இ + ம். கொண்டு மூடி இருக்கும். (இமை).

இய் = இ + ய். இருக்கும் தன்மை. (இயல்).

இர் = இ + ர். பிரிந்து இரு. (இரி).

இல் = இ + ல். மேலும் கீழுமாய் இருத்தல். இயங்குதல். நிலை இல்லாமை. (இலை).

இவ் = இ + வ். புறமும் அகமுமாய் இருத்தல். (இவன்).

இழ் = இ + ழ். ஆழ்ந்து / தாழ்ந்து / கீழ் இருப்பது. (இழிவு).

இள் = இ + ள். மிகையாய் இருப்பது. (இளைஞன்).

இற் = இ + ற். அறுந்து / பிரிந்து இருத்தல். (இற).

இன் = இ + ன். நெருக்கமாய் இருத்தல். (இனி).

ஈக் = ஈ + க். தருதல் மெய்யை / பொருளை. (ஈகை).

ஈங் = ஈ + ன் + க். தருதல் நெருக்கம் மெய்யிற்கு / பொருண்மைக்கு. (ஈங்கு).

ஈச் = ஈ + ச். தருதல் இயக்கம். (ஈச்சம்).

ஈஞ் = ஈ + ன் + ச். தருதல் நெருக்கம் இயக்கத்திற்கு.

ஈட் = ஈ + ட். தருதல் ஒட்டித் தொடரலை. (ஈட்டி).

ஈண் = ஈ + ண். தருதல் மிகையான நெருக்கம்.

ஈத் = ஈ + த். தருதல் தேகம் / வடிவம். (ஈதல்).

ஈந் = ஈ + ன் + த். தருதல் நெருக்கம் தேகத்திற்கு.

ஈப் = ஈ + ப். கொள்வதற்குத் தருதல்.

ஈம் = ஈ + ம். கொண்டு மூடத் தருதல். (ஈமம்).

ஈய் = ஈ + ய். தந்து இரு.

ஈர் = ஈ + ர். அறுத்துத் தருதல். (ஈரல்).

ஈல் = ஈ + ல். இயக்கத்தைத் தருதல்.

ஈவ் = ஈ + வ். புறமும் அகமும் தருதல். (ஈவு).

ஈழ் = ஆழம் தருதல். கடல் தருவது. (ஈழம்).

ஈள் = ஈ + ள். தருதல் மிகை.

ஈற் = ஈ + ற். அறுத்து / பிரித்துத் தருதல். (ஈறு).

ஈன் = ஈ + ன். நெருங்கித் தருதல். நெருக்கம் தருதல். (ஈன்).

உக் = உ + க். உள் / புற / கீழ் / மேல் மெய் / பொருண்மை. (உகம்).

உங் = உ + ன் + க். உள் / புற / கீழ் / மேல் நெருக்கம் மெய்யிற்கு / பொருண்மைக்கு. (உங்கு).

உச் = உ + ச். உள் / புற / கீழ் / மேல் இயக்கம். (உச்சம்).

உஞ் = உ + ன் + ச். உள் / புற / கீழ் / மேல் நெருக்கம் இயக்கத்திற்கு.

உட் = உ + ட். உள் / புற / கீழ் / மேல் ஒட்டித் தொடர்வது. (உடை).

உண் = உ + ண். உள் / புற / கீழ் / மேல் நெருக்க மிகுதி. (உண்ணி).

உத் = உ + த். உள் / புற / கீழ் / மேல் தேகம் / வடிவம். (உதி).

உந் = உ + ன் + த். உள் / புற / கீழ் / மேல் நெருக்கம் தேகத்திற்கு. (உந்தி).

உப் = உ + ப். உள் / புற / கீழ் / மேல் கொள்தல். (உப்பு).

உம் = உ + ம். உள் / புற / கீழ் / மேல் / உயரக் கொண்டு மூடல். (உமை).

உய் = உ + ய். உள் / புற / கீழ் / மேல் / உயர உயிர்ப்புடன் இருத்தல். (உயிர்).

உர் = உ + ர். உள் / புற / கீழ் / மேல் / உயர இருத்தல் / பிரித்தல். (உரம்).

உல் = உ + ல். உள் / புற / கீழ் / மேல் / உயர அதிர்தல் / இயக்கம். (உலை).

உவ் = உ + வ். உள் / புற / கீழ் / மேல் / உயரப் புறமும் அகமுமாய் இருத்தல். (உவரி).

உழ் = உ + ழ். உள் / புற / கீழ் / மேல் ஆழம். (உழவு).

உள் = உ + ள். உள் / புற / கீழ் / மேல் மிகுதி. (உளம்).

உற் = உ + ற். உள் / புற / கீழ் / மேல் / உயர அறுதல் / பிரிதல். (உறி).

உன் = உ + ன். உள் / புற / கீழ் / மேல் / உயர நெருக்கம். (உனி).

ஊக் = ஊ + க். ஆழ்ந்த மெய்யுணர்வு / உயர்த்தும் பொருண்மை / நீள்புற மெய் / விரிந்து பரவும் பொருண்மை / உள் மெய்மை. (ஊக்கம், ஊக்கி, ஊக்கு)

ஊங் = ஊ + ன் + க். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயர நெருக்கம் பொருண்மைக்கு / மெய்யிற்கு. (ஊங்கு).

ஊச் = ஊ + ச். நீள்புறத்து இயக்கம், ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் இயக்கம். (ஊசல்)

ஊஞ் = ஊ + ன் + ச். நீள்புறத்து நெருங்கிய இயக்கம். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் நெருங்கிய இயக்கம். (ஊஞ்சல்).

ஊட் = ஊ + ட். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் ஒட்டித் தொடரல். (ஊட்டு, ஊட்டம், ஊடகம், ஊடல்)

ஊண் = ஊ + ண். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் மிகுந்த நெருக்கம்.

ஊத் = ஊ + த். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் தேகம் / வடிவம். (ஊது).

ஊந் = ஊ + ன் + த். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் நெருக்கம் தேகத்திற்கு.

ஊப் = ஊ + ப். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் கொள்ளும்.

ஊம் = ஊ + ம். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் கொண்டு மூடும். (ஊமை).

ஊய் = ஊ + ய். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் உயிர்ப்புடன் இருத்தல்.

*ஊர் = ஊ + ர். ஆழ்ந்து உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் இருத்தல் / பிரிதல். (ஊர்).*

*ஊல் = ஊ + ல். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் அதிர்தல்.*

*ஊவ் = ஊ + வ். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் அகமும் புறமுமாய் இருத்தல்.*

*ஊழ் = ஊ + ழ். ஆழ்ந்து உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் உள் இருத்தல். (ஊழி).*

*ஊள் = ஊ + ள். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் மிகையாய் இருத்தல். (ஊளை).*

*ஊற் = ஊ + ற். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் அறுதல் / பிரிதல். (ஊறு).*

*ஊன் = ஊ + ன். ஆழ்ந்த உள் / நீள் புற / மிகவும் கீழ் / மிகவும் மேல் / அதிக உயரத்தில் நெருக்கம். (ஊன்).*

*எக் = எ + க். உயர்ந்த மெய் / பொருண்மை. (எகத்தாளம், எகிர்)*

*எங் = எ + ன் + க். உயர்ந்த நெருக்கம் மெய்யிற்கு. (எங்கு).*

*எச் = எ + ச். உயர்ந்த இயக்கம். (எச்சம்).*

*எஞ் = எ + ன் + ச். உயர்ந்த நெருக்கம் இயக்கத்திற்கு. (எஞ்சு).*

*எட் = எ + ட். உயர்ந்து ஒட்டித் தொடரல். (எடு, எடை)*

*எண் = எ + ண். உயர்ந்த மிகை நெருக்கம். (எண், எண்ணம்)*

*எத் = எ + த். உயரும் தேகம். (எத்தன்)*

*எந் = எ + ன் + த். உயர்ந்த நெருக்கம் தேகத்திற்கு. (எந்தை).*

*எப் = எ + ப். உயர்ந்த கொள்வது. (எப்பா)*

*எம் = எ + ம். உயர்ந்த கொண்டு மூடுவது. (எம்மா)*

*எய் = எ + ய். உயர்ந்து உயிர்ப்புடன் இருத்தல். (எய்தல்)*

*எர் = எ + ர். உயர்ந்து பிரிதல். (எரி)*

*எல் = எ + ல். உயர்ந்த அதிர்வு. (எலி)*

*எவ் = எ + வ். உயர்ந்து அகமும் புறமுமாய். (எவன்).*

*எழ் = எ + ழ். மிகுந்த ஆழம். (எழவு).*

*எள் = எ + ள். உயர்ந்த மிகுதி. (எளிமை)*

*எற் = எ + ற். உயர்த்தி அறுத்தல்/ பிரிதல். (எறி).*

*என் = எ + ன். உயர்ந்த நெருக்கம். (என்).*

*ஏக் = ஏ + க். மிக உயர்ந்த மெய் / பொருண்மை. (ஏகம், ஏகி)*

*ஏங் = ஏ + ன் + க். மிக உயர்ந்த நெருக்கம் மெய்யிற்கு. (ஏங்கு).*

*ஏச் = ஏ + ச். மிக உயர்ந்த இயக்கம் / சத்தம். (ஏசு).*

*ஏஞ் = ஏ + ன் + ச். உயர்ந்த நெருக்கம் இயக்கத்திற்கு.*

*ஏட் = ஏ + ட். மிக உயர்ந்து ஒட்டித் தொடரல். (ஏடு).*

*ஏண் = ஏ + ண். மிக உயர்ந்த மிகை நெருக்கம். (ஏணி)*

*ஏத் = ஏ + த். மிக உயர்ந்த தேகம். (ஏத்தம்).*

*ஏந் = ஏ + ன் + த். மிக உயர்ந்த நெருக்கம் தேகத்திற்கு (ஏந்து).*

*ஏப் = ஏ + ப். மிக உயர்ந்து கொள்வது. (ஏப்பம்).*

*ஏம் = ஏ + ம். மிக உயர்ந்து கொண்டு மூடுவது. (ஏமம்).*

*ஏய் = ஏ + ய். மிக உயர்ந்து உயிர்ப்புடன் இருப்பது. (ஏய்ப்பு)*

*ஏர் = ஏ + ர். மிக உயர்ந்து பிரிப்பது. (ஏர்).*

*ஏல் = ஏ + ல். மிக உயர்ந்த அதிர்வு. (ஏலம்).*

*ஏவ் = ஏ + வ். மிக உயர்ந்து புறமும் அகமுமாய் இருப்பது. (ஏவல்).*

*ஏழ் = ஏ + ழ். மிகுந்த ஆழம் / பள்ளம் / கீழ்மை. (ஏழை).*

*ஏள் = ஏ + ள். அதிக மிகுதி.*

*ஏற் = ஏ + ற். மிக உயர்ந்து அறுத்தல். (ஏற்றம்).*

*ஏன் = ஏ + ன். மிக உயர்ந்த நெருக்கம். (ஏனம்).*

*ஐக் = ஐ + க். ஐந்தின் மெய். ஐ = அ + இ. உயிரின் இருப்பு. (ஐக்கியம்).*

*ஐங் = ஐ + ன் + க். ஐந்தின் / உயிரின் நெருக்கம் மெய்யுடன். (ஐங்கரம்).*

*ஐச் = ஐ + ச். ஐந்தின் / உயிரின் இயக்கம் / சத்தம்.*

*ஐஞ் = ஐ + ன் + ச். ஐந்தின் / உயிரின் நெருக்கம் இயக்கமுடன்.*

*ஐட் = ஐ + ட். ஐந்தின் / உயிரின் ஒட்டித் தொடரல்.*

*ஐண் = ஐ + ண். ஐந்தின் / உயிரின் மிகை நெருக்கம்.*

*ஐத் = ஐ + த். ஐந்தின் / உயிரின் தேகம்.*

*ஐந் = ஐ + ன் + த். ஐந்தின் / உயிரின் நெருக்கம் தேகமுடன். (ஐந்திரம், ஐந்திறம்).*

*ஐப் = ஐ + ப். ஐந்தின் / உயிரின் கொள்தல். (ஐப்பசி).*

*ஐம் = ஐ + ம். ஐந்தின் / உயிரின் கொண்டு மூடல்.*

*ஐய் = ஐ + ய். ஐந்தின் / உயிரின் இருப்பு. (ஐயம்).*

*ஐர் = ஐ + ர். ஐந்தை / உயிரை பிரிப்பவர். (ஐயர்).*

*ஐல் = ஐ + ல். ஐந்தின் / உயிரின் அதிர்வு.*

*ஐவ் = ஐ + வ். ஐந்தின் / உயிரின் புறமும் அகமுமாய் இருத்தல்.*

*ஐழ் = ஐ + ழ். ஐந்தின் / உயிரின் ஆழம்.*

*ஐள் = ஐ + ள். ஐந்தின் / உயிரின் மிகை.*

ஐற் = ஐ + ற். ஐந்தின் / உயிரின் அறுப்பு.

ஐன் = ஐ + ன். ஐந்தின் / உயிரின் நெருக்கம்.

ஒக் = ஒ + க். ஒன்றான / முழுமையான மெய். (ஒக்கு).

ஒங் = ஒ + ன் + க். ஒன்றின் / முழுமையின் நெருக்கம் மெய்யுடன்.

ஒச் = ஒ + ச். ஒன்றின் / முழுமையின் இயக்கம்.

ஒஞ் = ஒ + ன் + ச். ஒன்றின் / முழுமையின் நெருக்கம் இயக்கமுடன்.

ஒட் = ஒ + ட். ஒன்றின் / முழுமையின் ஒட்டித் தொடரல். (ஒட்டு).

ஒண் = ஒ + ண். ஒன்றின் / முழுமையின் மிகை நெருக்கம். (ஒண்டி).

ஒத் = ஒ + த். ஒன்றான / முழுமையான தேகம் / வடிவம். (ஒத்து).

ஒந் = ஒ + ன் + த். ஒன்றின் / முழுமையின் நெருக்கம் தேகத்துடன் / வடிவத்துடன்.

ஒப் = ஒ + ப். ஒன்றாக / முழுமையாகக் கொள்ளுதல். ஒன்றான / முழுமையான மனம் / எண்ணம் / உடல். (ஒப்பு).

ஒம் = ஒ + ம். ஒன்றாக / முழுமையாகக் கொண்டு மூடுதல். (ஒமை).

ஒய் = ஒ + ய். ஒன்றாக / முழுமையாக உயிர்ப்புடன் இருத்தல்.

ஒர் = ஒ + ர். ஒன்றாக / முழுமையாக இருத்தல் / பிரிதல். (ஒரு).

ஒல் = ஒ + ல். ஒன்றாக / முழுமையாக அதிர்தல் / இயங்குதல்.(ஒலி).

ஒவ் = ஒ + வ். ஒன்றாக / முழுமையாக புறமும் அகமுமாய் இருத்தல்.

ஒழ் = ஒ + ழ். ஒன்றின் / முழுமையின் ஆழம். (ஒழி).

ஒள் = ஒ + ள். ஒன்றின் / முழுமையின் மிகை. (ஒளி).

ஒற் = ஒ + ற். ஒன்றின் / முழுமையின் அறுப்பு / பிரிப்பு. (ஒற்று).

ஒன் = ஒ + ன். ஒன்றின் / முழுமையின் நெருக்கம். (ஒன்று).

ஓக் = ஓ + க். உயரும் / விரிந்து பரவும் / ஒன்றாகும் மெய்.

ஓங் = ஓ + ன் + க். (மூச்சு இழுக்கையில்) விரிந்து பரந்து (மூச்சு விடுகையில் சுருங்கி) நெருக்கம் மெய்யிற்கு. ஓங்காரம் = ஓங் + ஆரம்.

ஓச் = ஓ + ச். உயரும் / விரிந்து பரவும் / ஒன்றாகும் இயக்கம் / சத்தம். (ஓச்சு).

ஓஞ் = ஓ + ன் + ச். விரிந்து பரவி நெருங்குவது இயக்கத்தை / சத்தத்தை.

ஓட் = ஓ + ட். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் ஒட்டித் தொடரும். (ஓட்டு).

ஓண் = ஓ + ண். உயர்ந்து / ஒன்றாகி மிக நெருக்கமாதல். (ஓணான்).

ஓத் = ஓ + த். உயரும் / விரிந்து பரவும் / ஒன்றாகும் தேகம். (ஓது).

ஓந் = ஓ + ன் + த். விரிந்து பரவி / ஒன்றாக நெருங்குவது தேகத்தை.

ஒப் = ஒ + ப். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய்க் கொள்வது.

ஒம் = ஒ + ம். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய்க் கொண்டு மூடுவது.

ஒய் = ஒ + ய். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் இருப்பது.

ஒர் = ஒ + ர். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் இருப்பவர் / பிரிப்பவர். (ஒரி).

ஒல் = ஒ + ல். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் அதிர்வது. (ஒலை).

ஒவ் = ஒ + வ். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய்ப் புறமும் உள்ளுமாய்.

ஒழ் = ஒ + ழ். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் ஆழமாய்.

ஒள் = ஒ + ள். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் மிகையாவது.

ஒற் = ஒ + ற். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் அறுப்பது. (ஒறை).

ஒன் = ஒ + ன். உயர்ந்து / விரிந்து பரவி / ஒன்றாய் நெருங்குவது.

ஔக் = ஔ + க். ஔ = அ + ஊ. ஔக் = உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே மெய்.

ஔங் = ஔ + ன் + க். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே நெருக்கமான மெய்.

ஔச் = ஔ + ன் + ச்.உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே இயக்கம் / சத்தம்.

ஔஞ் = ஔ + ன் + ச். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே நெருக்கமான இயக்கம் / சத்தம்.

ஔட் = ஔ + ட். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே ஒட்டித் தொடர்வது. (ஔடதம்).

ஔண் = ஔ + ண். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே மிக்க நெருக்கம்.

ஔத் = ஔ + த். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே தேகம்.

ஔந் = ஔ + ன் + த். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே நெருக்கமான தேகம்.

ஔப் = ஔ + ப். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே கொள்ளுதல்.

ஔம் = ஔ + ம். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே கொண்டு மூடல்.

ஔய் = ஔ + ய். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே இருத்தல்.

ஔர் = ஔ + ர். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே பிரிதல்.

ஔல் = ஔ + ல். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே அதிர்தல்.

ஔவ் = ஔ + வ். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே புறமும் அகமுமாய்.

ஔழ் = ஔ + ழ். உயிரின் / தன்னின் மிக கீழ் ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே ஆழத்தில்.

ஔள் = ஔ + ள். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே மிகை.

ஔற் = ஔ + ற். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே அறுத்தல்.

ஔன் = ஔ + ன். உயிரின் / தன்னின் மிக ஆழத்தில் / உயிரின் / தன்னின் நீள்புறத்தே நெருக்கம்.

***********

மேற்காணும் அடிப்படைகளை வைத்தே, திருக்குறள் இங்கு மறுவாசிப்பு செய்யப்படுகின்றது.

# திருக்குறள்

குறள், வெண்பாவின் ஒரு வகை. வெண்பா = வெண்மை + பா. வெண்மை = ஒளி. பா = ப் + ஆ. வெளியை ஆக்கு. வெண்பா = ஒளியாய் மனவெளியை ஆக்கு. புதுமை. வெளிச்சம். ஞானம்.

குறட்பா = குறள் + பா. குறள் = குறு + அள். அள் = மிகை. ஒளி. குறள் = குறுக்கப்பட்ட அல்லது குவிக்கப்பட்ட ஒளி. ஒளிக்கதிர். ஒளிக்கற்றை. குறட்பா = ஒளிமிக்கதாய் மனவெளியை ஆக்கு.

திரு = த் + இர் + உ. தேகமாய், வடிவமாய், உயிர்ப்புடன் இருந்து வெளிப்படல்.

திருக்குறள் = உயிர்ப்புடன் வெளிப்படும் ஒளிக்கதிர். ஞானக் கதிர்வீச்சு.

## அறத்துப்பால்

அறம் = அற் + அம். உயிர் பிரிந்து இருக்கும் தன்மை. உயிராய் நிலைக்கும் தன்மை. பால் = ப் + ஆல். கொண்டு அதிர்வாதல். வகை.

அறத்துப்பால் = உயிராய் நிலைக்கும் வகை.

## பாயிரம்

பாயிரம் = ப் + ஆய் + இர் + அம். மனவெளியாகி இருக்கும் தன்மை. பாயிரம் = ப் + ஆயிரம். கொள் ஆயிரம். அனைத்துப் பொருளையும் கொண்டது. திருக்குறளின் சாரத்தை, பாயிரத்தின் கீழ் அமைந்த நான்கு அதிகாரங்களே உள்ளடக்கும்.

# 1. கடவுள் வாழ்த்து

*கடவுள் = கட + உள். கட = க் + அட் + அ. மெய்யை உயிர் ஒட்டித் தொடர. தேகத்தையும், அதன் ஐம்புலன்களால் உருவான மனத்தையும் கடந்தால், ஒளிரும் உயிரை உணரலாம். அதையே கடவுள் எனலாம்.*

*வாழ்த்து = வ் + ஆழ்த்து. அகமும் புறமும், முழுமையாய் ஆழ்தல்.*

*கடவுள் வாழ்த்து = உயிரில் முழுமையாய் ஆழ்தல்.*

**1. அகர முதல வெழுத் தெல்லா மாதி**
**பகவன் முதற்றே உலகு.**

**அகர முதல, எழுத்து எல்லாம்;-ஆதி**
**பகவன் முதற்றே, உலகு.**

*அகரம் = அ + கரம். ''அ" எனும் எழுத்து கையினைப் போன்றது. ஒன்றே பலவாய்ப் பிரியக்கூடியது. அ, இ, உ, எ, ஒ என பிரிவது. ஆக்கம் செய்வது. ஆயுதம் (ஃ) ஏந்தி, மெய் எழுத்துகளை உருவாக்குவது. அகரம் = அ + க + ர + ம். உயிர் + வல்லினம் + இடையினம் + மெல்லினம். அகரம் = தமிழ்.*

*முதல = முதல் + அ. முதன்மையான "அ". பிற எழுத்தெல்லாம், ''அ" வின் திரிபாலோ, உடன் சேர்வதாலோ உருவாவது .*

*அவ்வெழுத்து = அவ் + எழுத்து. அவ் = ஔ. எழுத்து = எ + ழ் + உ + த் + உ. எழுந்து கீழிருந்து புறத்தே வடிவமுடன் வெளிப்படுவது. அகர முதல வெழுத்து = அகரம் முதல் அவ் எழுத்து = அ முதல் ஔ வரையிலான எழுத்து. அகரம் முதல் அந்த எழுத்துகள். அகரம் முதல் ''ன்" வரையிலான எழுத்துகள்.*

*எல்லாம் = எ + ல் + ஆம். உயரும் அதிர்வு அமைதியடைதல். பிற எழுத்துகள்.*

*ஆதி = ஆத் + இ. தேகம் அல்லது வடிவமாய் ஆக்கி இருத்தல். உயிர் மற்றும் பொருள் ஆத்து இருத்தல்.*

*பகவன் = ப் + அகம் + வ் + அன். விண்வெளியைத் தன் அகமாய், அகமும் புறமும், முழுமையாய் ஆனவன். கொண்டதன் உள்தன்மை முழுமையாய் ஆனவன். ஐந்து மூலங்கள், வான மண்டலங்கள், பொருட்கள், உயிர்கள், அகம் / மனம் ஆகியவற்றின் சாரம். இருக்கின்ற அனைத்துமாய் இருப்பவன்.*

*முதற்றே = முதல் + அற்றே. அற்றே = அ + ற் + ஏ. உயிருடன் பிரிதலே. ஒன்றான இறைவன் பல பொருளாய் உயிராய் பிரிதல் போன்று.*

*உலகு = உ + ல் + அக் + உ. உள்ளே அதிர்வுடனும் / புறத்தே சத்தமுடனும் உயிர்ப்புள்ள மெய்யுடனும் வெளிப்படுவது. உலகம். மக்கள்.*

*''அ" எனும் உயிர்ஒலி அல்லது அதிர்வு, உடலின் மையத்தில் தோன்றி, இயல்பாகத் தன்னிச்சையாகத் தொடர்ந்து வெளிப்பட்ட வண்ணம்*

*உள்ளது. வாயைத் திறந்தாலே வெளிப்படும் ஒலி, ''அ''. வெளிவரும் காற்றை வெவ்வேறு வகைகளில் இதழ்களாலும், நாக்காலும் தடுக்க முயல்வதன் மூலம், வெவ்வேறு உயிர் எழுத்தொலிகள் உருவாகின்றன. எனவே, ''ஆ'' முதல் ''ஔ'' வரை, எல்லா உயிர் எழுத்துகளும், ''அ'' வின் திரிந்த வடிவங்களே!*

*''அ'' எனும் உயிரொலி, ''க்'' எனும் மெய்யுடன் ஒட்டி, ''ஃ'' ஆகிறது.*

*''ஃ'', மெய்யின் வெவ்வேறு இடங்களில் மையம் கொண்டு தனிமெய்கள் (க், ங், ச்,...., ன்) ஒலிக்கின்றன. எனவே, ''ஃ'' ன் மூலமாக, ஒவ்வொரு தனிமெய்யிலும், ''அ'' பின்புலத்தில் இருக்கின்றது. ஆதலால், தமிழ் எழுத்துகள் எல்லாவற்றிலும் ''அ'' உள்ளது, தெளிவாகின்றது அல்லவா? ''அ'' வே முதல் எழுத்து. ''அ'' விலிருந்தே பிற எல்லா தமிழ் எழுத்துகளும் உருவாகின்றன. ஒன்றே பலவாகின்றன.*

*இறைவன் வெளியாய் இருப்பவன். அவ்வெளியில்தான் எல்லா பொருண்மையும், பஞ்சபூதங்களும், பொருள்களும், உயிர்களும் உள்ளன. ''அ'' வும் இறையிலிருந்தே எழுகின்றது. ''அ'' இறையொலி. எழுத்தும் மொழியும் இறையின் உருமாற்றமே. தமிழ், இறைமொழி.*

*பொருண்மையின் பன்மையும், மொழியின் விரிவாக்கமும், ஒத்த தன்மையுடையன. ஒன்றிலிருந்தே பலவும் உருவாகின்றன.*

*''அ'' வின், ஒலியின் தொடக்கத்திலும் இறையை உணரலாம். ''ம்'' இன், ஒலியின் அடக்கத்திலும் இறையை உணரலாம். கல்வியின் பயனே இறை உணர்தலே! திருக்குறளின் பயனும், வாழ்வினூடே, இறையுணர்வே!*

*இறையுணர்வு வாழ்வின் இறுதிப் பயனல்ல. வாழ்க்கை முழுவதும் இருந்து தொடர வேண்டிய ஒன்று. இறையுணர்வே வாழ்வின் ஓயா ஊக்கமாகும், மாயா ஆக்கமாகும், சாயா ஆனந்தமாகும்.*

*உலக மக்களே! பரந்த விண்வெளியை தன் அகமாகக் கொண்ட இறைவன், முதல் இருப்பாய், மூலமாய் இருந்து, உலகில் உள்ள அனைத்து அணுவாயும், பொருளாயும், உயிராயும், நீங்களாகவும், நானாகவும் ஆகி உள்ளதைப் போன்றே, அகரம், தமிழ் எழுத்துகளுக்கு எல்லாம், முதலாகவும், மூலமாகவும், உயிராகவும் இருந்து, பல்வேறு எழுத்துகளாகவும், அசைகளாகவும், சொற்களாகவும், பொருளாகவும் உருவாகின்றது.*

*இறைமையும், அகரமும் ஒத்த தன்மையில் இயங்குகின்றன.*

*உலகில் உள்ள அனைத்தும் இறைவனை முதன்மையாகக் கொண்டுள்ளதால், அந்த எழுத்திற்கும், இறைவனே முதன்மை. இறைமை, எழுத்தானது. எழுத்து, இறைமையாவது.*

*பிரக்ஞானம் = பிரக்ஞை + ஞானம். ''பிரக்ஞானம் பிரம்மம்'', எனும் மகா வாக்கியத்தை நினைவு கூர்க. இறைமை பிரக்ஞையாகவும், ஞானமாகவும் இருக்கின்றது என்பதைப் புரிந்து உணர்ந்தால், இறைவன் விண்வெளியை அகமாய்க் கொண்டவன், அனைத்தையும் உணர்ந்து அறிபவன் என்பதும் விளங்கி விடும். பரம், சித்தமானவன். சிதம்பரம்*

*= சித்தம் + பரம், என்பதையும் எண்ணுக. தில்லை = த் + இல்லை. தேகம், வடிவம் அற்றது இறைமை, என்பதை உண்ணுக. விண்வெளியை, ஆகாயத்தைப் பிரதிநிதித்துவம் செய்யும் ஆலயம், சிதம்பர தில்லை நடன ராஜனின் தலம், என்பதையும் கூட்டுக. 'மனிதனின் சித்தமே பரம்', என்பதே வெளிப்படையான சிதம்பர இரகசியம்.*

*சமணம் மற்றும் பௌத்தத்தின் இறைமறுப்புக் கொள்கைக்கும் இதுவே அடிப்படையாகின்றது. புத்தம் என்பதும் மெய்யுணர்வுள்ள, உயிர்ப்புள்ள விண்வெளியே, அகவெளியே, அறிவுவெளியே!*

*இருண்ட பொருண்மை அல்லது இருண்ட ஆற்றல் என்பது இடைவெளியற்ற நுண்மை, எங்கும், எல்லாவற்றிலும் உள்ள திண்மை. அதையே, விஞ்ஞான புலத்தில், இறைமை எனலாம்.*

*எழுத்தை அறிந்தால், இறைமையை அறியலாம்.*

*மனிதனுள், மொழி, இறையின் நெருங்கிய மென்மையான வெளிப்பாடு. அகரம் முதலான எழுத்துகள் மூலமாகவே கல்வியைப் பெறமுடியும். கல்வியின் மூலமாகவே இறைவனை உணரமுடியும். எனவேதான், கடவுள் வாழ்த்து என்றபோதிலும், இறைக்குப் பதில் எழுத்து முதலில் வந்தது.*

**2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.**

**கற்றதனால் ஆய பயன் என்கொல்-வால்-அறிவன்**
**நல் தாள் தொழாஅர் எனின்?**

*கற்றதனால் = கற்ற + அதனால். மொழி உள்பட அனைத்தும் இறையிலிருந்தே தோன்றின என்று அறிந்ததால்.*

*ஆய = சிந்தித்த, விளைந்த, முடிந்த*

*பயனென்கொல் = பயன் + என் + கொல். பயன் என்ன சொல்*

*வாலறிவன் = வால் + அறிவன். வால் = வ் + ஆல். வ் = உ + அ. வால் = புறமும் அகமும் அதிர்வாய் இருப்பவன். அறிவன் = பிரிந்து இருப்பவன். இறைவன் அனைத்தையும் பிரிந்து பார்த்த வண்ணம் உள்ளான்.*

*நற்றாள் = நல் + தாள். நல் = ன் + அல். நெருங்கிய அதிர்வு. தாள் = த் + ஆள். தேகத்தை ஆள்வது. உயிர். பாதம்.*

*தொழாஅர் = தொழா = த் + ஒழ் + ஆ. தேகம் முழுமையாய் ஆழ்ந்தில்லாமல். அர் = இருத்தல் / பிரிதல்.*

*எனின் = என்றால்.*

*அகமும் புறமும் அதிர்வாய் இருந்தும், எல்லாம் அறிந்தும், அனைத்தையும் பிரிந்து இருக்கும் இறைவனின் பாதம் போன்ற உயிரில், உடலையும் மனத்தையும் பிரிந்து, ஆழ்ந்திரா விட்டால், எல்லாம் இறையே என்று கற்றதனால் விளைந்தப் பயன் என்ன?*

*மெய்யுணர்வை உணராமல், கற்று என்ன பயன்? வாழ்ந்து என்ன பயன்?*

**3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்.**

**மலர்மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடு வாழ்வார்.**

*மலர்மிசை = மலர் + மிசை. மலர் = ம் + அல் + அர். கொண்டு மூடியதன் அதிர்வாய் இருப்பது. உயிரின் அதிர்வாய் இருப்பது. மிசை = ம் + இசை. “ம்” எனும் ஓங்கார இசை.*

*ஏகினான் = ஏ + க் + இன் + ஆன். மிக உயர்ந்த பொருண்மையாய் / மெய்யாய் நெருக்கமானவன்.*

*மாணடி = ம் + ஆண் + அடி. "ம்" எனும் ஓங்காரம் அடங்கிய ஒலி மிக நெருக்கமாய் ஒட்டித் தொடர்ந்து இருத்தல். அமைதி.*

*சேர்ந்தார் = இணைந்தவர்*

*நிலமிசை = நிலம் + இசை. நிலம் = நில் + அம். நிலைத்த தன்மை. நிலமிசை = அசைவின்மை. மண்ணுக்கும் மக்களுக்குமான படைப்பு.*

*நீடு = நீண்ட காலம் புகழுடன்.*

*வாழ்வார் = வாழ்வார்*

*உயிரின் ஓங்கார இசையில், நெருங்கி அமைதியாய் இருக்கும் இறையுடன் இணைந்தவர், அசையாமையில் தொடர்ந்து இருந்து, மண்ணுக்கும் மக்களுக்கும் ஆக்கங்கள் படைத்து, நீண்ட காலம் புகழுடன் வாழ்வார்.*

**4. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்**
**கியாண்டு மிடும்பை யில.**

**வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல.**

*வேண்டுதல் = தொடர்ச்சியான ஆசை.*

*வேண்டாமை = தொடர்ச்சியான விலக்கல்.*

*இலானடி = இல்லாதவன் பாதம் / பாதை*

*சேர்ந்தார்க்கு = அடைந்தவர்க்கு*

*யாண்டும் = எப்பொழுதும்*

*இடும்பை = வினை கொள்ளும் மனம் / கரும வினை*

*இல = இல்லை.*

ஆசையோ வெறுப்போ இல்லாதவன் பாதம், "ம்" இசை, நின்றார்க்கு, எப்பொழுதும், கரும வினை இல்லை.

அசையாமையில் நின்ற அறவோர்க்குத் தனக்கான சொல் இல்லை, எண்ணம் இல்லை, செயல் இல்லை. தன்னிலிருந்து, இறையைப் போல், விலகியே நிற்பதால், கருமம் இல்லை, பிறப்பும் இல்லை. அறவோர் இறைமைக்கு இணையானவர். கண் காணும் கடவுள்.

**5. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்**
**பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.**

**இருள் சேர் இரு வினையும் சேரா, இறைவன்**
**பொருள் சேர் புகழ் புரிந்தார்மாட்டு.**

இருள்சேர் = அறியாமை / மயக்கம் அதிகமாக்கும்

இருவினையும் = நல்வினை மற்றும் தீயவினை

சேரா = இணையாது

இறைவன் = இறைவன்

பொருள்சேர் = மெய்ப்பொருளோடு இணைக்கும்

புகழ்புரிந்தார் = புகழ் + புரிந்தார். புகழ் = ப் + உ + க் + அழ். அகத்தின் உள்ளே மெய்யின் ஆழ் உணர்வு. புரிந்தார் = ப் + உர் + இன் + த் + ஆர். கொண்டு இருந்து நெருங்கிய தேகம் பிரிந்தவர்.

மாட்டு = ம் + ஆட் + உ. மௌனத்தைத் தொடர்ச்சியாய்க் கொண்டு.

"ம்" எனும் மிக நெருங்கிய தொடர் இசையினூடே மௌனத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து, அகத்தின் உள்ளே மெய்யின் ஆழ் உணர்வு கொண்டு, புலன்களாலான தான் எனும் தேக உணர்வைப் பிரிந்தவர், இறைவன் எனும் மெய்ப்பொருளோடு இணைவர். அவரிடம் அறியாமையை அதிகமாக்கும் நல்வினை மற்றும் தீயவினை சேராது. பிறப்பு அறும்.

**6. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார்.**

**பொறி வாயில் ஐந்து அவித்தான் பொய் தீர் ஒழுக்க**
**நெறி நின்றார் நீடு வாழ்வார்.**

பொறி வாயில் = பொறி + வாயில். பொறி = ப் + ஒ + ற் + இ. கொண்டதை முழுவதுமாய்ப் பிரிப்பது. வாயில் = உள்ளும் புறமும் பிரியும் இடம். நுழையும் / வெளியேறும் இடம்.

ஐந்து = மெய், வாய், மூக்கு, கண், செவி ஆகிய ஐந்து புலன்கள் வழியாய் பெறும் உணர்வுகள், ஊறு (காமம்), சுவை (உணவு), நாற்றம் (வாசம்), ஒளி (காட்சி) மற்றும் ஓசை (பேச்சு).

அவித்தான் = அ + வித்தான். வித்தில்லாதவன். அவித்தான் = அவி + த் + ஆன். அகம் புறம் இடை வடிவம் இல்லாது செய்பவன்.

பொய்தீர் ஒழுக்கம் = புலன் அறிவால் ஏற்பட்ட பொய்மை தீர முழுமையாய் ஆழ்ந்து மெய்த்தன்மையுடன் இருக்கும் பழக்கம்.

நெறி நின்றார் = வழி நின்றவர்

நீடு = நீண்ட காலம் புகழுடன்

வாழ்வார் = வாழ்வார்.

உயிர் ஆற்றலைத் தொடர்ந்து வெளிப் போக்கிய வண்ணம் இருப்பது, புலன்கள். தேவை உள்ளதா, இல்லையா என்று தாமாகச் சிந்திக்க முடியாதவை, புலன்கள். அதே புலன்கள் வழியாக நெடுங்காலம் உள்வந்த உணர்வுகள், தான் என்றும் தனது என்றும் பொய்மைகளை உருவாக்குகின்றன. எல்லாம் இறையின் உருமாற்றங்களாய் இருக்கும்போது, தான் என்று ஒன்று உண்டா? தனது என்று ஏதாவது இருக்க முடியுமா?

ஒரு புலன் உணர்வு விதையாக விழுந்தால், பலவாகப் பெருகிவிடும் நொடிப் பொழுதில்!

எனவே, புலன்களை அவை துவங்கும் இடத்திலேயே (புறத்தையும் உடலையும் பிரிக்கும் மத்தியக்கோட்டில்) பெருகாமல் நிறுத்தி விடும்போது, ஏற்கனவே பொய்மைகளாய் உருவான தான், தனது எனும் எண்ணங்கள், அடைப்பை உடைக்கப் பார்க்கும். புலன்கள் வழியாக வரும் உணர்வுகள் மூலம் தம் இருப்பைப் பலப்படுத்தி, நியாயப்படுத்தப் பார்க்கும். மீண்டும், ஓயா புலன் உணர்வுகள் மூலமும், அவை எழுப்பும் ஆசைகள் மூலமும், வினைகளைப் பெருக்கி, கருமத்தைச் சேர்த்து, பிறப்புகள் தொடரப் பார்க்கும்.

''ம்" எனும் தொடர் இசையில் முழுமையாய் ஆழ்ந்து இருக்க, புலன்கள் அடங்க, பொய்மைகளின் வடிவங்களான எண்ணங்கள் மறையும். மெய்மை உணரப்படும். அத்தகைய முயற்சி மேற்கொண்டவர், ஆக்கங்கள் பல படைத்து, நீண்ட காலம் புகழுடன் வாழ்வார்.

**7. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்**
**மனக்கவலை மாற்ற லரிது.**

**தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்,**
**மனக் கவலை மாற்றல் அரிது.**

தனக்குவமை = தனக்கு + உவமை.

இல்லாதான் = இல்லாதவன்.

தாள் = த் + ஆள். ஒளிமிக்க வடிவம்.

சேர்ந்தார் = இணைந்தார்

கல்லால் = கல் + ஆல். கல் போன்றும் ஆல் போன்றும் உறுதியானவர். அல்லால் = அன்றி

மனக்கவலை = மனம் + கவலை. மனம் = மன் + அம். மன் = ம் + அன். மனம் = கொண்டு மூடியதை நெருங்கிய தன்மை. உயிரை நெருங்கிய தன்மை. கவலை = க் + அவ(ம்) + அலை. மெய்யின் நிலையற்ற தன்மை. மனக்கவலை = மனம் மெய்யை உணர முடியாத தன்மை.

மாற்றல் = ம் + ஆற்றல். அமைதியாக்குதல். மாற்றுதல்.

அரிது = கடினம்.

இறைவன் அத்தகையவன் என்றோ இத்தகையவன் என்றோ ஒப்பிட முடியாது. அவன் எல்லாமாகிய முழுமையாக இருக்கும்போது, ஒரு பகுதியைக் காட்டி இப்படித்தான் அவன் என வரையறுக்க முடியாது. ஆனால், அவன் தாள் ஒளிமிக்கது. எப்படி என்றால், அது ஒவ்வொரு உயிருக்குள்ளும் இருப்பது. புலன்கள் அடங்கி, எண்ணமும் இல்லாதபோது, ஒளிரும் மெய்யுணர்வாக, இறையினுடைய தாள்கள் உணரப்படும். மெய்யுணர்வில் நிலைத்தல், அசையாமை உண்டாக்கும். அசையாமை, முழுமை எனும் வீடு தரும்; பிறப்பு அறும்.

மெய்யுணர்வை அடையாமல், பிறப்பு அறுதல் கடினம்.

**8. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லால்**
**பிறவாழி நீந்த லரிது.**

**அற ஆழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்,**
**பிற ஆழி நீந்தல் அரிது.**

அறவாழி = அறம் + ஆழி. அறம் = அ + ற் + அம். உயிரின் / உயிர்ப்பின் பிரிந்த தன்மை. அறம் = அற் + அம். உடல் மற்றும் மன உணர்வு அற்ற தன்மை. பிறப்பு அறுக்கும் தன்மை. உயிரின் தன்மை.

அந்தணன் = அன் + தண் + அன். நெருங்கியும் குளிர்ந்த தன்மையுடனும் இருப்பவன்.

தாள் = த் + ஆள். ஒளிமிக்க வடிவம்.

சேர்ந்தார் = இணைந்தார்

அல்லால் = அன்றி

பிறவாழி = பிற + ஆழி. மற்ற கடல்கள். பொருள் மற்றும் இன்பம்.

நீந்தல் = கடத்தல்

அரிது = கடினம்.

உயிர்ப்பையே தேகமாய் கொண்டிருக்கும் இறையினது ஒளிமிக்க தாள்களை, நம் மெய்யுணர்வாகப் பற்றினால், பிறப்பு மட்டும் அறுவதில்லை. இப்பிறப்பில் கடக்க வேண்டிய பிற ஆழிகளான பொருள் ஈட்டலும், இன்பம் நுகர்தலும் கூட மிக எளிதாகவும் இனிமையாகவும் முழுமையாகவும் நிகழும்.

அவ்வாறு குறைகளின்றி மன நிறைவுடன் பொருள் மற்றும் இன்பக் கடல்களைக் கடப்பதால், பிறவிக்கடலைக் கடப்பதும், ஏக்கம் சிறிதும் அற்ற, முழுமனதுடன், இயல்பாக நிறைவேறும்.

**9. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.**

**கோள் இல் பொறியின் குணம் இலவே-எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.**

*கோள் = க் + ஓ + ள். பொருண்மை முழுதும் மிகை. முழுவதுமாய் ஒளிரும் பொருள். சூரியன். விண்மீன்.*

*பொறி = புலன்*

*குணம் = க் + உ + ண் + அம். பொருண்மையின் புறத்தே மிக நெருங்கிய தன்மை.*

*எண் = உயர்ந்த மிகை நெருக்கம்.*

*வணங்கு = வ் + அண் + அங்கு. புறமும் அகமும் மிக நெருக்கமாதல்.*

*தலை = த் + அலை. தேகத்தின் அதிர்வு. எண்ணம் = எண் + அம். உயர்ந்து நெருங்கும் தன்மை. அறிவு = அறி + உ. அறு உள்ளே. அறு புறத்தே. சிந்தனை.*

*சூரியனோ, புலன்களோ ஒன்றையொன்று மிகுந்து நெருங்கும் தன்மையற்றவை. இயற்கையை வணங்கிப் பயனில்லை. ஆனால், இறையின் தாள் ஒவ்வொரு உடலினுள்ளும் உயிராக, உயிர்ப்பாக, தூய அறிவாக உயர்ந்து, அனைத்தையும் ஊடுருவும் வெளியாக மிக நெருக்கமாக உள்ளது. அதை அறிந்தும், புறமும் அகமும் உயிரை, மெய்யுணர்வை நெருங்காவிட்டால், அது தலையின், அறிவின், சிந்தனையின், கல்வியின் குணமல்ல. அவ்வறிவால், கல்வியால் பயனில்லை.*

**10. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்**

**பிறவிப் பெருங் கடல் நீந்துவர்; நீத்தார்,
இறைவன் அடி சேராதார்.**

*பிறவி = ப் + இற + வ் + இ. வ் = உ + அ. புறமும் அகமும். பிறவி = கொண்டது (கருமம், வினை, காரணகாரியம்) அழியும் வரை புறமும் அகமுமாய் இருப்பது. தொடர்வது.*

*பெருங்கடல் = திசைகளும், இலக்கும் அறிய முடியாப் பெரிய கடல்.*

*நீந்துவர் = கடப்பர்.*

*நீந்தார் = கடக்காதவர்.*

*இறைவன் அடி = ஒவ்வொருவர் உள்ளும் ஒட்டித் தொடர்ந்திருக்கும் உயிர்ப்பு, மெய்யுணர்வு.*

*சேராதவர் = உணராதவர்.*

*பிறப்பும் வாழ்வும் அறம் எனும் கடலிலேயே நிகழ்கின்றது. அறம் என்பது இடம், பொருள், இயக்கம், காலம் ஆகிய எவற்றுக்கும்*

கட்டுப்படாதது. அது பிரிந்து தனித்து நிற்பது. முழுமையானது. விருப்பும் வெறுப்பும் அற்றது. பொருளின், உயிரின் இயக்கம், காரண காரிய தொடர்புடன் நடப்பதைக் கண்ட வண்ணம் இருப்பது. ஊழின் நாடகத்திற்கு மேடையாக இருப்பது. தூய வெளி போன்றது. எல்லா இயக்கமும் அதனுள் நடந்தும், தான் மட்டும் அசையாதது.

பிறப்பு, வினை, கருமம், இறப்பு, மீண்டும் பிறப்பு, வினையென முடிவின்றித் தொடரும் பிறப்புகள் பொருளற்றவை, என்பது நெடுங்காலத்தைக் கணக்கில் கொண்டால் புலனாகும். நாம் நம்முடைய கட்டுப்பாட்டில் இல்லாமல், கண்ணுக்குத் தெரியாத எண்ணில் அடங்காத சக்திகளுக்கு கட்டுண்டு, இயந்திரகதியில் நிகழும் பொம்மை ஆட்டமாக இருக்கின்றது, வாழ்வு. வாழ்வின் பயனும் அறியாது, வழியும் அறியாது, காலச் சுழற்சியில் முடங்கிக் கிடப்பதும், முழுகிச் சாவதும் சலிப்பூட்டுகின்றது.

வாழ்வின் புறத்தில் சந்திக்கும் சவால்களைவிட, ஒருவருடைய அகத்தில் தோன்றும் சவால்கள் மிகவும் வலிமையானவை. அவற்றை வெல்வது பெரும் சாதனை.

ஒவ்வொருவரின் உள்ளும் உறைந்திருக்கும் இறையின் அடியான உயிருடன் ஒன்றியவர், மெய்யை உணர்ந்தவர், பிறவிக்கடலை நீந்தி, பிறப்பும் இறப்பும் இல்லாத நிலைத்த தன்மையை, ஆனந்த நிலையை அடைவார். இதுவே வாழ்வின் பயனும் வழியுமாகும். உயிருடன் ஒன்றாதவர்கள், பிறவிக்கடலை நீந்த முடியாது.

கடவுள் வாழ்த்து அதிகாரப் பொருள் தொகுப்பு:

விண்வெளியான இறைமையே எப்படி பிரபஞ்சமாக, மூலங்களாக, பொருளாக, உயிராக உருவாகின என்று அறிவதும், அகரம் எனும் முதல் எழுத்தே எப்படி பலப்பல எழுத்துகளாகவும், சொற்களாகவும் உருமாற்றம் பெற்றன என்று அறிவதும் மிக முக்கியமான கல்வி.

இறைவனின் பாதம் போன்ற உயிரில் ஆழ்வதே, கற்று அறிந்ததன் பயன்.

உயிரில் ஆழும் வழி, ஓங்காரமே!

ஓங்காரத்தில், 'ம்' இசையில் நிலைத்தவர், பிறப்பு அறுப்பர்.

ஓங்காரத்தில், 'ம்' இசையில் நிலைத்து, உயிரில் ஒன்றியவர்க்கு, நல்வினை, தீவினை ஆகிய இருவினைகளும், சேராது.

ஓங்காரம், புலன்களை அடக்கும்.

முழுமையான இறைமையுடன், உயிருடன் ஒன்றாமல், பிறப்பறுக்க முடியாது.

உயிருடன் ஒன்றுதல், பிறப்பு அறுத்தலோடு, பொருள் மற்றும் இன்பக்கடலையும், எளிதாக இனிமையாக கடக்க உதவும்.

இயற்கையை வணங்கிப் பயனில்லை. உயிருடன் ஒன்றாமல் விட்டால், சிந்தித்துப் பயனில்லை.

உயிருடன் ஒன்றியவர், பிறப்பறுப்பர். உயிருடன் ஒன்றாதவர் பிறப்பறுக்க மாட்டார்.

# 2. வான் சிறப்பு

*வான் = வ் + ஆன். வ் = உ + அ. புறமும் அகமும். வான் = புறமும் அகமும் ஆன ஒன்று. மேகம்.*

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கம் இல்லாமை. நிற்றல்.*

மேகம் அசைவற்று நிற்றலே, மழை பொழிவதற்கான முதல் அறிகுறி. மேகத்திற்கும் மண்ணிற்கும் ஒரு தொடர்பு உண்டு. மண் குளிர்ந்திருந்தால், மேகம் கீழிறங்கும். குளிர்ந்த காற்று வீசினால், மழை பொழியும். மண் குளிரவும், குளிர்ந்த காற்று வீசவும், மரங்கள் அவசியம்.

**11. வானின் றுலகம் வழங்கி வருதலால்**
**தானமிழ்த மென்றுணரப் பாற்று.**

**வான் நின்று உலகம் வழங்கி வருதலா**
**தான் அமிழ்தம் என்று உணரல் பாற்று.**

*வான் = வ் + ஆன். வ் = உ + அ. புறமும் அகமும். வான் = புறமும் அகமும் ஆன ஒன்று.*

*நின்று = அசையாமல் இருந்து*

*உலகம் = பூமி. மக்கள்.*

*வழங்கி = புறமும் அகமும் உயிர்ப்புடன் ஆழ்ந்து மெய்யுடன் நெருங்கி இருந்து. முழுமையாய் கீழே நெருங்கித் தருதல்.*

*வருதலால் தான் = வருவதால் தான்.*

*தானமிழ்தம் = தான் + அமிழ்தம். தான் = த் + ஆன். தேகமானது. அமிழ்தம் = அம் + ழ் + த் + அம். தன்மை ஆன்மாவினது தேகத்தின் தன்மை. ஆன்மாவின் தன்மை, தேகத்தின் தன்மையாவது. ஆன்மாவின் தன்மை நிலையானது, அழியாதது. அமிழ்தம் = தேகத்தின் நிலைத்த அழியாத் தன்மை. மெய்யுணர்வில் நிலைத்தல்.*

*அமிழ்தம் = மேகங்களைப் போன்ற எண்ணங்கள் அங்கும் இங்கும் ஓடாமல் நிலைபெற்று ஒன்று சேரும்போது, மூளையின் நரம்பு உயிரணுக்களில் ஊறும் உயிர்வேதியியல் கரைசல் ஒன்று சேர்ந்து, கீழிறங்கி, வாயின் மேல் அண்ணத்தின் மென்மையான பகுதியில், "ழ்" ஐ உச்சரிக்கும்போது, நுனிநாக்கு மேல் அண்ணத்தைத் தொடும் இடத்தில், கசியும் போலும். அது, உடலையும், மனத்தையும் முழுவதுமாய் அசைவற்றதாக்கி, உயிரை, மெய்யை உணரச் செய்யும் போலும். அது பிறப்பும் இறப்பும் இல்லாத நிலைத்த தன்மையைத் தரும் போலும்.*

*என்று = என்று*

*உணரல் = உணர்வது*

*அறு = பிரி. ஆறு = பிரிவது. ஆற்று = ஆற் + உ. பிரித்து வெளிப்படுத்துவது. காற்று = க் + ஆற்று. பொருண்மையைப் பிரித்து*

வெளிப்படுத்துவது. மரத்திலிருந்து தண்மையை, மலரிலிருந்து மணத்தைப் பிரித்து வெளிப்படுத்துவது. பாற்று = ப் + ஆற்று. கொண்டதைப் பிரித்து வெளிப்படுத்துவது. மேகத்தைப் பிரித்து வெளிப்படுத்துவது. பாற்று = மழை.

தலையின் உச்சியில், நரம்பு அணுக்கள் இயங்காமல் நின்று அமிழ்தக் கரைசலை வாயில் சொரிந்து, நிலைத்த மெய்யுணர்வைத் தருவது போன்று, வானில் மேகமாய் நின்று பூமியில் சொரிவதால், மண்ணும் உயிரும் இயக்கமற்று மெய்மறந்து நிற்பதால், தானே அமிழ்தம் என்று மழை தன்னைத் தானே புகழ்ந்து கொள்கிறது.

**12. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.**

**துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கி, துப்பார்க்குத்
துப்பு ஆய தூஉம் மழை.**

துப்பார் = த் + உப்பு + ஆர். உப்பு = உ + ப் + உ. உள்ளே கொண்டு வெளிப்படுதல். வடிவத்தில் விரிவடைதல். துப்பு = தேகம் / வடிவம் பெருகுதல் / வளர்தல். உடல். உணவு. துப்பார் = உடல் கொண்டோர்.

துப்பாய = துப்பு + ஆய. தேகம் ஆக.

துப்பாக்கி = துப்பு + ஆக்கி = தேகம் ஆக்கி / வடிவம் கொண்டு வெளிப்படும் பொருள் ஆக்கி. உணவாக்கி.

துப்பாய = துப்பு + ஆய. உணவு ஆக.

தூஉ = விரிந்து பரந்து பெய்யும்.

உடல் கொண்ட பல உயிர்களும், தேகமுடன் இருக்க, பயிர்கள் மூலம் உண்ணும் உணவாகவும், தானே பருகும் நீராகவும், விரிந்து பரந்து பெய்யும் மழை.

**13. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.**

**விண் இன்று பொய்ப்பின், விரிநீர் வியன் உலகத்து
உள் நின்று உடற்றும் பசி.**

விண் இன்று = வானம் இன்று ஒரு நாள்.

பொய்ப்பின் = பெய்யாது ஏமாற்றினால்.

விரிநீர் = பெருகும் கடல் சூழ்ந்த.

வியன் உலகம் = வ் + இ + அன் + உலகம். மண்ணின் புறமும் உள்ளும் இருக்கும் உயிர்கள். வியம் = வி + அம். விரிந்த தன்மை. வியனுலகம் = விரிந்த உலகம்.

உள்நின்று = உள்ளே தொடர்ந்து இருந்து.

உடற்றும் = உடல் + அற்றும். உடலைப் பிரிக்கும். கொல்லும்.

பசி = ப் + அச் + இ. கொண்டதை இயக்கமற்றதாக்கி இருக்கும். உடலைச் செயலறச் செய்வது.

வானம், இன்று ஒரே ஒரு நாள், மழை பெய்வது போலிருந்து பெய்யாமல் போனாலும், நிலத்தைச் சுற்றிலும் நீர் கடலாய்ச் சூழ்ந்து இருந்தும், மண்ணின் புறமும் உள்ளும் இருக்கும் பல உயிர்களின் உள்ளே, பசி தொடர்ந்து இருந்து, உடலை இயக்கமற்றதாக்கிக் கொன்றுவிடும்.

**14. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்.**

**ஏரின் உழாஅர் உழவர், புயல் என்னும்**
**வாரி வளம் குன்றிக்கால்.**

உழாஅர் = உழாமல் பிரிந்து இருப்பர்.

புயல் = ப் + உ + ய் + அல். கொண்டதன் / கடலின் புறத்தே இருந்து உயிர்ப்புடன், காற்றினூடே, மேலும் கீழுமாய் இயங்குதல்.

வாரி = வ் + ஆர் + இ. புறமும் உள்ளும் பிரித்து இருப்பது. வளிமண்டலத்தில் உள்ள ஈரப்பசையில் இருந்தும், கடல் நீரில் இருந்தும் நீராவியைப் பிரிப்பது.

வளம் = வ் + அள் + அம். புறமும் உள்ளும் மிகுந்த தன்மை.

குன்றிக் கால் = குன்றியக் காலம். குறைந்து விட்டால்.

மேகங்கள் நின்று, ஒன்றுச் சேர்ந்து, குளிர்ந்துப் பெய்யும் மழையைக் காட்டிலும், கடல் காற்றுப் புயலால், வளி மண்டலத்தில் இருந்தும், கடல் நீரிலிருந்தும், நீராவி பெரும் அளவில், விரைவாகப் பிரிக்கப்பட்டு, மேலெழுந்து, குளிர்காற்றால் பெருமழையாகப் பெய்கின்றது.

குறைந்த காற்று அழுத்த மண்டலம், வெளியிலிருந்து விரைந்து ஈடு செய்ய வந்த காற்றை, சுழற்சியாக மாற்ற முடியாமல் போனாலோ, காற்றின் அடர்த்தி குறைவாலோ, திசை மாற்றத்தாலோ, வளி மண்டல ஈரப்பசை குறைந்து இருந்தாலோ, கடல் நீரும் மிகையாய் நீராவியாகாமல் போனாலோ, மழை தூரலாகப் பிசுபிசுத்து விடும்.

அது ஏர் உழுவதற்கு போதாதென்று, உழவர் ஏரிலிருந்தும், நிலத்திலிருந்தும் பிரிந்து இருப்பர்.

**15. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே**
**எடுப்பதூஉ மெல்லா மழை.**

**கெடுப்பதூஉம், கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே**
**எடுப்பதூஉம், எல்லாம் மழை.**

கெடுப்பது = க் + எடுப்பது. பொருளை / மெய்யை அழிப்பது.

கெட்டார் = க் + எட்டார். பொருள் கிடைக்காதவர்.

சார்வாய் = சார்வு + ஆய். தாங்குவதாய். உதவியாய்.

மற்று = ம் + அற்று. கொண்டு மூடாமல். திறந்து. பெய்து.

ஆங்கே = அங்கேயே.

எடுப்பது = கீழிருந்து மேல் எழுவது. பயிர் வளர்வதும், உயிர் வாழ்வதும்.

மழை பெய்யாமல் பயிர்கள் அழியும். விளைவாக, மக்களும் பொருளின்றிச் சோர்வு அடைவர். பின்பு, அவர்களைத் தாங்கும் விதமாய் அங்கேயே மழை பெய்து, பயிர்கள் வளரும், மக்களும் உற்சாகம் பெறுவர்.

**16. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே**
**பசும்புற் றலைகாண் பரிது.**

**விசும்பின் துளி வீழின் அல்லால், மற்று ஆங்கே**
**பசும் புல் தலை காண்பு அரிது.**

விசும்பு = வானம். ஆகாயம்.

மழை, மனிதர் வாழ்வதற்கு மட்டுமல்ல. வானிலிருந்து மழைத்துளி கீழே விழாவிட்டால், ஓருயிர் தாவரத்திலேயே மிகவும் அடிப்படையான புல் முளைப்பதைக் கூட, நாம் காணமுடியாது.

**17. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி**
**தானல்கா தாகி விடின்.**

**நெடுங் கடலும் தன் நீர்மை குன்றும், தடிந்து எழிலி**
**தான் நல்காது ஆகிவிடின்.**

நெடுங்கடல் = நெருங்கிய ஆழமான தொடர்ச்சியான கடல்.

தன்னீர்மை = தன் நீர்த் தன்மை. இயல்பு.

குன்றும் = குறையும்.

தடிந்தெழிலி = தடிந்த + எழிலி. தடிந்த = தேகம் ஒட்டித் தொடர்ந்தும் நெருக்கமுமான. ஒன்று திரண்ட. எழிலி = எ + ழ் + இல் + இ. எண்ண உயர்ச்சிக்கும், ஆழ் உணர்வுக்கும் உறைவிடமாய் இருப்பவள். அழகி. மேகம். தடிந்தெழிலி = அழகிய கருப்பிணிப் பெண். திரண்ட மேகம்.

நல்கு = ன் + அல் + க் + உ. நெருக்கமான அதிர்வுடன் பொருண்மையை / மெய்யை வெளிப்படுத்துதல். புறந்தருதல். பிரசவித்தல். மழை பெய்தல்.

அழகிய கருப்பிணிப் பெண் போன்ற, ஒன்றுத் திரண்ட மேகம், மழை பெய்யாவிட்டால், நீண்ட ஆழமான கடலின் நீர்மட்டம்கூட, குறைந்துவிடும்.

**18. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்**
**வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.**

**சிறப்பொடு பூசனை செல்லாது-வானம்**
**வறக்குமேல், வானோர்க்கும், ஈண்டு.**

சிறப்பு = ச் + இறப்பு. இயக்கம் இல்லாமை. வணக்கம்.

பூசனை = பூ + ச் + அனை. பூ = ப் + ஊ. கொண்டது விரிந்துப் பரவுதல். ச் = சத்தம். மந்திரம். இசைப்பாட்டு. அனை = அன் + ஐ. நெருங்கி ஐக்கியமாவது. ஒன்றிணைவது. பூசனை = பூ தூவலும் இசைப்பாட்டும் ஒன்றிணைவது.

வறக்கும் = வ் + அற் + அக் + உம். வ் = உ + அ. புறமும் அகமும். அற் = அறு / பிரி. அக் = பொருண்மையற்று / மெய்யற்று. உம் = வெளிப்படுத்தும். அகத்தையும் புறத்தையும் பொருண்மையற்று பிரித்துவிட்டால். மண்ணுக்கும் விண்ணுக்குமான தொடர்பு அறுந்துவிட்டால்.

வானோர் = வ் + ஆன் + ஓர். புறமும் அகமும் ஒன்றானவர். முழுமையானவர். மெய்யுணர்வாளர். வானில் உறைவோர்.

ஈண்டு = மிகநெருங்கித் தொடர்ந்து வெளிப்படும் இவ்விடங்கள். மழை பெய்யாத இவ்விடங்கள்.

மீண்டு = திரும்பி.

வானம், மழையின் மூலம், பூமியிடம் கொள்ளும் தொடர்பை அறுத்துவிட்டால், பூமியிலிருந்து, வணக்கமுடைய பூ தூவலும், இசைப்பாட்டும் வானில் உறைவோர்க்குச் செல்லாது.

வானில் உறைவோர்களின் பொது நல்லெண்ணத்தால், வானம், பூப்போன்ற துளிகளாலும், இசை ஓசையுடனும், மழை பொழிகின்றது. பயிர்களின் வளமை கண்ட மக்கள், திரும்பி, பூக்களாலும் இசைப்பாட்டாலும் வானில் உறைவோரை வாழ்த்துவர். மழை இன்றேல், அது நடைபெறாது.

**19. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்**
**வானம் வழங்கா தெனின்.**

**தானம் தவம் இரண்டும் தங்கா, வியன் உலகம்**
**வானம் வழங்காது எனின்.**

தானம் = த் + ஆன் + அம். தேகமாகும் தன்மை. தேகம் நெருக்கமாகும் தன்மை. பொருள் தருதல்.

தவம் = த் + அவ் + அம். தேகம், புறம் அகம் இல்லாத தன்மை. புலன் மற்றும் மன உணர்வற்ற தன்மை. மெய்யுணர்விற்கான முயற்சி.

தங்கா = தொடராது.

வியம் = வி + அம். விரிந்த தன்மை. வியன் உலகம் = விரிந்த உலகம்.

வானம், மழை பெய்யா விட்டால், பொருள் உதவி செய்வதும்,

*மெய்யுணர்வை அடைவதற்கான முயற்சி செய்வதும், ஆகிய இரண்டும், இந்த பரந்த உலகில், தொடராது.*

**20. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்**
**வானின் றமையா தொழுக்கு.**

**நீர் இன்று அமையாது உலகுஎனின், யார்யார்க்கும்**
**வான் இன்று அமையாது ஒழுக்கு.**

*நீரின்று = நீர் + இன்று. நீர் இன்றி.*

*அமையாதுலகு = அமையாது + உலகு. அமைதி அடையாது உயிர்கள்.*

*யார்யார்க்கும் = எவராய் இருப்பினும். எவ்வளவு சிறந்தவராய் இருந்தாலும்.*

*வானின்றமையாது = வான் + இன்று + அமையாது. மழை இன்றி நடக்காது.*

*ஒழுக்கு = ஒழுக்கம்.*

*நீர் இல்லாமல் போனால், உலகத்து உயிர்கள் அமைதியற்றுப் போகும். மழை இல்லாமல் போனால், எவராய் இருந்தாலும், பண்பில் சிறந்தவர்களிடமும், ஒழுக்கம் இல்லாமல் போய்விடும்.*

**வான் சிறப்பு அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அமிழ்தம், ஒருவருக்கே, நிலைபேறைத் தரும். மழை, மண்ணில் உள்ள எல்லா உயிர்க்கும், வாழ்வை நீட்டிக்கும்.*

*மழையால்தான், உயிர்கள் தம் உடலுடன் நீடித்து வாழ்வதற்குத் தேவையான, உணவும், நீரும் கிடைக்கின்றன.*

*மழை, ஒரு நாள் பெய்யாமல் போனாலும், கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில், பல உயிர்கள் உணவின்றி, நீரின்றி அழிந்துவிடும்.*

*சாதாரண மழையைக் காட்டிலும், புயல் மழை வலிமையானது, மிகையானது. அது குறைந்து பெய்தால், விவசாயிகள், உழுது பயிர் செய்ய மாட்டார்கள். பெய்யாமல் அழிவதும் மழையால். பெய்து வாழ்வதும் மழையால். மழையால்தான் வாழ்வும், சாவும். மழைதான் எல்லாம். மழையின்றி எதுவுமில்லை.*

*வானத்தின் மழைத்துளி இல்லையென்றால், புல்கூட முளைக்காது.*

*மழை பெய்யாவிட்டால், கடலும் வற்றும்.*

*மழை இல்லையென்றால், பக்தியும் இருக்காது.*

*மழை இல்லையென்றால், பிச்சை கூட கிடைக்காது. மெய்யுணர்வுக்கான முயற்சியும் நடக்காது.*

*நீரில்லையென்றால், உயிர்கள் தவிக்கும். மழையில்லையென்றால், பண்பில் உயர்ந்தவர்களும் தாழ்ந்து விடுவர்.*

# 3. நீத்தார் பெருமை

*நீத்தார் = ன் + ஈத் + ஆர். தேக நெருக்கம் பிரித்தவர். புலனடக்கி மனமடங்கியவர்.*

*பெருமை = ப் + எர் + உம் + ஐ. அகத்தால் உயர்ந்து இருந்து புறத்தே அமைதியுடன் உயிர்ப்புடன் இருப்பது. மெய்யுணர்வில் உறைவது. பெருமை = பெரும் + மை. பெரிய வண்ணம். ஒளி.பெருமை = பெரும் + ஐ. பெரும் வியப்புக்குரிய திறம்.*

**21. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவற் றுணிவு.**

**ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் - பனுவல் துணிவு.**

*ஒழுக்கத்து = ஒழுக்கம் + அத்து. ஒழுக்கம் = ஒழ் + உக் + அம். முழுமையான ஆழ்ந்த உள்மெய் தன்மை. மெய்யுணர்வு. அத்து = அ + த் + உ. தேகமற்று வெளிப்படு.*

*நீத்தார் = ன் + ஈத் + ஆர். தேக நெருக்கம் பிரித்தவர். புலனடக்கி மனமடங்கியவர்.*

*பெருமை = ப் + எர் + உம் + ஐ. அகத்தால் உயர்ந்து இருந்து புறத்தே அமைதியுடன் உயிர்ப்புடன் இருப்பது. மெய்யுணர்வில் உறைவது.*

*விழுப்பத்து = விழுப்பம் + அத்து. விழுப்பம் = வ் + இழுப்பம். இழுப்பம் = இழ் + உப் + அம். இருத்தல் ஆழ்ந்து உள்கொள் தன்மை. விழுப்பம் = முழுமையான ஈர்ப்பு. விருப்பம்.*

*பனுவல் = பன் + நுவல். பல நுவல். நுவல் = ன் + உ + அல். நெருங்கி வெளிப்படுத்திய அதிர்வு. உயிருடன் உறைந்து கூறிய சொல். பனுவல் = பலரும் உரைத்த உண்மை.*

*துணிவு = த் + உண் + இ + உ. தேகம் / வடிவம் புறத்தே மிக நெருங்கி இருப்பதும் வெளிப்படுவதும். உறுதி.*

*மெய்யுணர்வுக்காக புலனடக்கி, எண்ணம் அடங்கியவர், அகத்தால் உயர்ந்து இருந்து, புறத்தே அமைதியுடனும், உயிர்ப்புடனும் இருத்தலைக் கண்டு, (ஒளியுடன் ஆனந்தமாய் இருத்தலைக் கண்டு), தாமும் அதுபோல் ஆகவேண்டும் என்று, ஒவ்வொருவரும் விரும்ப வேண்டும் என்பது, பல மெய்யுணர்வாளர்களின் உறுதியான கருத்து.*

**22. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்**
**திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.**

**துறந்தார் பெருமை துணைக் கூறின், வையத்து**
**இறந்தாரை எண்ணிக் கொண்டற்று.**

*துணைக்கூறின் = துணையாகக் கொண்டால்*

*வையம் = வை + அம். நிலையான தன்மை.*

*இறந்தாரை = உடலால் மறைந்தவரை.*

*எண்ணி = நினைத்து*

*கொண்டற்று = கொண்டு + அற்று. கொள்ளத் தேவையில்லை.*

*மெய்யுணர்வாளர் அல்லது ஞானியரின் பெருமையை எண்ணி, அவர்தம் வழிநடக்க முயல்பவர், நிலையான தன்மயடையாமல், உடலளவில் இருந்து மறைந்த மூதாதையரையோ, பெரியவர்களையோ நினைத்துக் கொண்டிருக்கத் தேவையில்லை. ஞானியரே, நிலையான தன்மை அடையும் வழியைக் காட்டுவர்.*

**23. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற் றுலகு.**

**இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று, உலகு.**

*இருமை = உம்மை இம்மை, இம்மை மறுமை.*

*வகை = தன்மை*

*ஈண்டு = இங்கே, இப்பொழுதே.*

*அறம் = அற் + அம். அறுக்கும் தன்மை.*

*பூண்டார் = ப் + ஊ + ண் + ட் + ஆர். மனத்தின் ஆழ்ந்த உள்ளே மிக நெருக்கமாக ஒட்டித் தொடர்ந்தார். உயிருடன் ஒன்றினார்.*

*பிறங்கு = ப் + இறங்கு. உள்ளம் இறங்கு. பணிவது. (கிறங்கு = க் + இறங்கு. மெய் இறங்கு / உடல் சரிவது.)*

*உம்மையால் இம்மையும், இம்மையால் மறுமையும் (முற்பிறப்பால் இப்பிறப்பும், இப்பிறப்பால் மறுபிறப்பும்) தொடர்ச்சியாய் வருவதன் தன்மை தெரிந்து, துன்பமும் இன்பமும் மாறி மாறியும், முடிவின்றியும் வருவதை அறிந்து, பிறப்பறுத்தல் ஒன்றே நிலைத்த தன்மைக்கும், ஆனந்தத்திற்கும் வழி என்று தெளிந்து, புலன் உணர்வுகளையும், மன எண்ணத்தையும் பிரிந்து இருந்து, உயிரோடு ஒன்றியவரின் பெருமை கண்டு, உலக மக்கள் பணிவர்.*

**24. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்**
**வரனென்னும் வைப்புக்கோர் வித்து.**

**உரன் என்னும் தோட்டியான், ஓர் ஐந்தும் காப்பான்**
**வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து.**

*உரம் = உர் + அம். உள் இருக்கும் தன்மை. உறுதி. வைராக்கியம்.*

*தோட்டி = த் + ஓட்டி. தேகத்தை ஓட்டுபவன் / கட்டுப்படுத்துபவன்.*

ஓரைந்து = ஐம்புலன்கள்

காப்பான் = காவல் புரிவான்.

வரம் = வ் + அர் + அம். அகம் புறத்திலிருந்து பிரியும் தன்மை. புறமும் அகமுமாய் இருக்கும் தன்மை. முழுமையாய் இருக்கும் தன்மை. மெய்யுணர்வு.

வைப்பு = வை + ப் + உ. நிலையாய் கொண்டு / மனம் உள் இருத்தல். நிலைத்த தன்மை. நீங்காத செல்வம்.

வித்து = துவக்கம்.

உறுதி எனும் மேய்ப்பவன், ஐம்புலன்களைச் சிதறாமல் ஓரிடத்தில் நிறுத்தி வைப்பான். அது, மெய்யுணர்வு எனும் நீங்காத செல்வம் அடைவதற்கான துவக்கமாகும்.

**25. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பி லார்கோமான்**
**இந்திரனே சாலுங் கரி.**

**ஐந்து அவித்தான் ஆற்றல், அகல் விசும்புளார் கோமான்**
**இந்திரனே சாலும், கரி.**

ஐந்தவித்தான் = ஐந்து + அவித்தான். அவி = அவ் + இ. புறமும் அகமும் இல்லாது செய்தல்.

ஆற்றல் = ஆற் + அல். அறுக்கும் அதிர்வு. வலிமை.

அகல்விசும்பு = விரிந்த வானம்

கோமான் = க் + ஓம் + ஆன். மெய்யை முழுமையாய் அமைதியாக்கியவன். மன்னன்.

இந்திரன் = இன் + த் + இர் + அன். இனிமையான தேகமாய் இருப்பவன். ஆனந்தமானவன்.

சாலும் = சொல்வான்.

கரி = க் + அர் + இ. மெய் பிரிந்து இருத்தல். சாட்சி.

ஐந்து புலன்களை அடக்கியவனின் ஆற்றலுக்கு, அகன்ற வானில் மன்னனாய் இருக்கும் இந்திரனே சாட்சி ஆவான். இந்திரன், மெய்யுணர்வாளர்களுக்கு / தேவர்களுக்கு எல்லாம் தலைவனாய் கருதப்படுபவன்.

**26. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார்.**

**செயற்கு அரிய செய்வார் பெரியர்; சிறியர்**
**செயற்கு அரிய செய்கலாதார்.**

செயற்கரியது = ஐம்புலன் அடக்கல்.

*உள்ளத்தால் உயர்ந்து இருக்கும் பெரியர், ஐம்புலன்களை அடக்கும் செய்வதற்கு அரிய செயலைச் செய்வர். சிறியர், ஐம்புலன்களை அடக்க முடியாதவர்.*

**27. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.**

**சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்று ஐந்தின்
வகை தெரிவான்கட்டே- உலகு.**

*ஐம்புலன்களின் தன்மையையும், அவற்றிற்கிடையிலான நெருங்கிய உறவுகளையும், இயக்கங்களையும் அறிந்து, அவற்றை ஒருசேர அடக்க, புலன் உணர்வுகளைச் சார்ந்து இயங்கும் எண்ணங்களும் உதிரும். புலன் உணர்வும், மன எண்ணமும் அற்ற நிலையில், உயிரின் துடிப்பு உணரப்படும். அத்துடிப்புதான் உடலையும், உடலிலுள்ள புலன்களையும், புலனுணர்வுகள் மூலம் மனத்தையும் உயிர்ப்புடன் இயங்க வைக்கின்றன. அந்த உயிரின் துடிப்பின்றி, உடல் உறுப்புகளின் இயக்கமோ, புலன்களின் செயல்பாடோ, எண்ணமோ எதுவும் இருக்க முடியாது.*

*அந்த உயிர் துடிப்புடன் ஒன்றும்போது, உடல் மற்றும் மன எல்லைகள் மறைந்துவிடுகின்றன. உயிர்ப்பின் தன்மைகளாக, எல்லை இல்லா விரிந்தத் தன்மை, ஒளிர்மை, மெல்லிய அதிர்வு, காந்தப்புலம், சுகமான ஊறு உணர்வு போன்றவை உணரப்படலாம். மேலும் மேலும் உயிருடன் ஒன்றுகையில், அசையாமையில் நிலைத்து, ஆனந்தத்தைத் தவிர வேறெதையும் உணரா நிலை ஏற்படலாம்.*

*அத்தகையோர், தமக்கென வாழாமல், பிறருக்காகவே வாழ விழைவர். எதையும் விருப்பு வெறுப்பின்றி நோக்குவர். தெளிவான எண்ணம் கொண்டவர். அச்சம் சிறிதும் இன்றி, நியாயம், நீதி, நேர்மையைக் கூறுபவர். ஆக்கங்கள் படைப்பவர். அன்பு கொண்டவர். அறிவு மிக்கவர். தூய நெஞ்சினர். எனவே, மக்கள் அவரையே நெருங்கி வாழ்வர். அவருடைய ஆனந்தத்திலும் பங்கு கொள்வர். அவர் வழியில் நடக்க முயல்வர். ஐம்புலன்களின் தன்மையையும், அவற்றிற்கிடையிலான நெருங்கிய உறவுகளையும், இயக்கங்களையும் அறிந்து, அவற்றை அடக்கும் வழியையும் தெரிந்தவரிடம்தான், உலக மக்கள் இருப்பர்.*

**28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.**

**நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்.**

*நிறைமொழி = நிறை + மொழி. நிறை = ன் + இறை. இறையுடன் நெருங்கிய. மொழி = ம் + ஒழி. ம் = மௌனம். ஒழி = ஒ + ழ் + இ. முழுமையாய் ஆழ்ந்து இருத்தல். நிறைமொழி = இறைமையுடன் நெருங்கிய முழுமையாய் ஆழ்ந்த மௌனம்.*

*மாந்தர் = ம் + ஆன் + த் + அர். மௌனத்துடன் நெருக்கமாகித் தேகத்தைப் பிரிந்தவர்.*

*மறைமொழி = மறை + மொழி. மறை = ம் + அறை. மௌனத்தில் பிரிந்து ஐக்கியமாதல். மொழி = ம் + ஒழி. மௌனம் ஒழிதல். பேச்சு. சொற்கள். மறைமொழி = மந்திரம்.*

*மௌனமான ஞானியரின் உயர்வை, அந்த இடத்தில் வாழும் மக்கள், ஐம்புலன்களை அடக்க, மௌனத்தை அடையப் பயன்படுத்தும் சொற்கள், மந்திரங்கள் காட்டி விடும்.*

**29. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயுங் காத்த லரிது.**

**குணம் என்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி**
**கணம் ஏயும், காத்தல் அரிது.**

*குணம் = க் + உ + ண் + அம். மெய்யின் உள்ளே மிக நெருங்கிய தன்மை. உயிரோடு ஒன்றுதல்.*

*குன்று = க் + உ + ன் + ற் + உ. மெய்யின் உள்ளே நெருங்கி (தேகத்திலிருந்து) பிரிந்து வெளிப்படல். சமாதி நிலை. இறை நிலை.*

*நின்றார் = நிலைத்தார்.*

*வெகுளி = வ் + எக் + உள் + இ. புறமும் அகமும் உயர்ந்த மெய் புறத்து / உள்ளே மிகையாய் இருத்தல். இறையுடன் ஒன்றியதால் உடலில் ஆற்றல் மிகுந்து விடும். அது புலன் வழியே வெளிப்படும்போது வலிமையாக இருக்கும்.*

*கணம் = கண் + அம். கண்ணின் தன்மை. இமைப் பொழுது. ஒரு நொடி.*

*உயிரோடு ஒன்றி, புலன் உணர்விலிருந்து முற்றிலுமாகப் பிரிந்து, அசையாமையில், நிலைத்த தன்மை பெற்றவரின், இறையுடன் ஒன்றியதால் மெய் ஆற்றல் மிகுந்தவரின், திடீர் புலன் வெளிப்பாட்டை, கோபமான பார்வையை அல்லது சொல்லை, ஒரு நொடிகூட தாங்க முடியாது.*

**30. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்**
**செந்தண்மை பூண்டொழுக லான்.**

**அந்தணர் என்போர் அறவோர்-மற்று எவ் உயிர்க்கும் செந்**
**தண்மை பூண்டு ஒழுகலான்.**

*அந்தணர் = அன் + தண் + அர். நெருங்கியும் குளிர்ந்த தன்மையுடனும் இருப்பவர். அறவோர் = புலன் அடக்கி உயிருடன் ஒன்றுபவர்.*

*செந்தண்மை = ச் + என் + தண்மை. இயக்கம் உயர்ந்து நெருங்கிக் குளிர்ந்த தன்மை. நெருக்கம். அன்பு. கருணை.*

*பூண்டு = மனத்திலும், உடலிலும் கொண்டு*

*ஒழுகலான் = நடத்தலால்.*

*பிற எல்லா உயிர்களிடமும், நெருக்கமும் அன்பும் கருணையும் கொண்டு நடப்பதால், அந்தணர் என்பவர், புலன் அடக்கி உயிருடன் ஒன்றுபவர், எனலாம்.*

*நீத்தார் பெருமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*ஓங்காரத்தால், 'ம்' இசையால், புலனடக்கி, மனமடங்கி, மெய்யுணர்வில் உறைவதைக் கண்டு, பிறப்பறுவதைக் கண்டு, மற்றவர்களும் அவ்வாறு செய்ய விரும்ப வேண்டும்.*

*ஞானியரின் வழிகாட்டுதல் இருக்கும்போது, இறந்தவர்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்க தேவையில்லை.*

*வினை மற்றும் ஊழின் இயல்பை அறிந்து, பிறப்பறுக்க, உயிருடன் ஒன்றியவரைப் பணிவர், உலக மக்கள்.*

*வைராக்கியம், புலன்களை அடக்கும். வைராக்கியமே, மெய்யுணர்வுக்கான விதை, முதல் படி.*

*ஐம்புலன்களையும் அடக்குவதால் கிடைக்கும் வலிமைக்கு, இந்திரனே உதாரணம்.*

*புலன்களை அடக்குவது, செய்வதற்கு அரிய செயல். மனவலிமை அதிகம் உடையவர்களால்தான் அது இயலும். மனவலிமை குன்றியவர்களால், புலன்களை அடக்க முடியாது.*

*ஐம்புலன்களின் தன்மைகளையும், அவற்றை அடக்கும் விதத்தையும் தெரிந்தவரிடம்தான், மக்கள் செல்வர்.*

*மெய்யுணர்ந்தவரின் உண்மைத் தன்மையை, அவரைச் சூழ்ந்த மக்களின் மந்திரங்கள் வெளிப்படுத்தி விடும்.*

*மெய்யுணர்வில் நிலைத்தவரின் கோபத்தை, ஒரு நொடி கூட தாங்க முடியாது.*

*பிற எல்லா உயிரிடத்தும் கருணை காட்டும் அந்தணரையே, உயிருடன் ஒன்றியவர் எனலாம்.*

# 4. அறன் வலி உறுத்தல்

*அறன் = அறம். உயிரோடு ஒன்றுதல். புலன்கள் மற்றும் மனம் அடங்குதல்.*

*வலி = வலிமை. திறம். ஆற்றல்.*

*உறுத்தல் = உற் + உத் + அல். புறத்தே பிரித்து உள்ளே வடிவமாக்குதல். புரிய வைத்தல். விளக்குதல்.*

*அறன் வலி உறுத்தல் = உயிருடன் ஒன்றுவதால் ஏற்படும் ஆற்றல்களை விளக்குதல்.*

**31. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்**
**காக்க மெவனோ வுயிர்க்கு.**

**சிறப்பு ஈனும்; செல்வமும் ஈனும்; அறத்தின் ஊஉங்கு**
**ஆக்கம் எவனோ, உயிர்க்கு?**

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கம் இல்லாமை. பிறப்பு அறுதல்.*

*செல்வம் = செல் + வ் + அம். உள்ளும் புறமும் செல்லும் தன்மை.*

*ஈனும் = தரும்.*

*ஆக்கம் = ஆக் + அம். பொருண்மையாகும் / மெய்யாகும் தன்மை.*

*அறம் எனும் புலனடக்கி உயிரோடு ஒன்றுதல், பிறப்பு அறுக்கும், செல்வங்களும் தரும். மனிதர்க்கு, அறத்தைத் தவிர, படைப்பாக்கம் தருவதற்கு வேறென்ன இருக்கிறது?*

**32. அறத்தினூங் காக்கமு மில்லை யதனை**
**மறத்தலி னூங்கில்லை கேடு.**

**அறத்தின் ஊஉங்கு ஆக்கமும் இல்லை; அதனை**
**மறத்தலின் ஊங்கு இல்லை கேடு.**

*அறம் எனும் புலனடக்கி உயிரோடு ஒன்றுதலைவிட படைப்பாக்கம் தருவது வேறு எதுவுமில்லை. அறத்தை மறப்பதைவிட அழிவைத் தருவதும் வேறேதும் இல்லை.*

**33. ஒல்லும் வகையா லறவினை யோவாதே**
**செல்லும்வா யெல்லாஞ் செயல்.**

**ஒல்லும் வகையான், அறவினை, ஓவாதே,**
**செல்லும்வாய் எல்லாம் செயல்.**

*ஒல் = ஒ + ல். முழுதும் அதிர்வு. ஐந்து புலன்களும் தன் கட்டுக்குள் இருக்கும்போது, மெய் முழுவதும் ஒரு மெல்லிய அதிர்வு உணரப்படும்.*

ஓவு = ஓ + உ. முழுதும் வெளிப்படல். முழுவதும் உள்ளிருத்தல். முடிதல். நிற்றல்.

செல்லும்வாய் = வெளிப்படும் புலன்.

செயல் = வினை.

புலன் வெளிப்படும் எந்தச் செயலும், (பார்ப்பதும், பேசுவதும், கேட்பதும்) கரும வினைதான். அப்படி வெளிப்பட்டாக வேண்டிய பொழுதெல்லாம், தொடர்ந்து புலன்கள அடக்கியவாறு, மிதமாய் வெளிப்படுமாறு, வினையை ஏற்படுத்தாதவாறு, உயிருடன் ஒன்றியவாறு, இரு.

**34. மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்**
**ஆகுதல் நீர்மை பிற.**

**மனத்துக்கண் மாசு இலன் ஆதல்; அனைத்து அறன்;**
**ஆகுல நீர, பிற.**

புலன் ஒடுக்கமும், அதனால் மன அடக்கமும், விளைவான உயிருடன் ஒன்றலும், இறுதியாக அசையாமையில் நிலைத்தலும், அறத்தின் முறையாகும்.

கண்ணில் மாசு விழுந்தால், கண் நிலையற்று துடித்து இயங்கும். அதே போல், மனத்தில் மாசு (பொறாமை, ஆசை, கோபம், இன்னாச் சொல்) இருந்தால், மனம் அடங்காது, நிலையின்றி இயங்கும். புலன்களும் ஒடுங்காது. மனம், நீரின் தன்மையாக நிலைக்காமல் ஓடி வினை சேர்க்கும், பிறப்பாக்கும். மனத்தில் மாசு இல்லாமல் இருந்தால், அது இயல்பாகவே உயிரில் ஒன்றி நிலைக்கும், பிறப்பறும்.

**35. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கும்**
**இழுக்கா வியன்ற தறம்.**

**அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல், நான்கும்**
**இழுக்கா இயன்றது-அறம்.**

அழுக்காறு = அழுக்கு + ஆறு. அழுக்கு = அழ் + உக் + உ. உயிரின் ஆழத்தில் இருந்து புற மெய்யில் வெளிப்படுவது. பிறப்பின் தன்மை போலும். அழுக்காறு = மனக்கசடு. பொறாமை.

அவா = அ + வ் + ஆ. உயிர் புறமும் அகமுமாய் ஆவது. நிலையற்று இருப்பது. ஆசை.

வெகுளி = வ் + எக் + உள் + இ. புறமும் அகமும் உயர்ந்த மெய் புறத்தே மிகையாய் இருத்தல். கோபம். உணர்வு மிகுதி.

இன்னாச்சொல் = இனிமையில்லாத சொல்.

பொறாமையால், ஆசை உருவாகும். ஆசை நிறைவேறாது போனால், கோபம் வரும். கோபம் வந்தால், மனக்கட்டுப்பாடில்லாமல்

இனிமையில்லாத சொல் வெளிவரும். இவ்வாறு, ஒன்றிலிருந்து மற்றொன்று தொடர்ந்து முடிவின்றி உருவாகிய வண்ணம் இருக்கின்றது. எனவே, பொறாமை, ஆசை, வெகுளி, இன்னாச்சொல் ஆகியவை வினை சேர்க்கும். பிறப்பைக் கூட்டும். அவை இருக்கின்ற வரையில், அறம் எனும் புலன் ஒடுக்கமோ, மன அடக்கமோ நடக்காது.

**36. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது**
**பொன்றுங்காற் பொன்றாத் துணை.**

**அன்று அறிவாம் என்னாது அறம் செய்க; மற்று அது**
**பொன்றுங்கால் பொன்றாத் துணை.**

*அன்று = பின்னாளில்*

*அறிவாம் = பிரிப்போம். அறுப்போம். புலன் உணர்வு அறுப்போம்.*

*பொன்று = ப் + ஒன்று. கொண்டது / உடல் / மனம் தனியாய் இல்லாமல் மொத்தத்தில் ஒன்றுதல். இறத்தல். தனி இருப்பாய் இல்லாது அழிதல். கலத்தல். இப்பொழுது இளமைதானே, அனுபவிப்போம். பின்னாளில், கடைசி காலத்தில், புலன் உணர்வு அறுத்து, மனத்தை அடக்குவோம் எனக் கூறாமல், அறத்தை இன்றிலிருந்தே செய்யுங்கள்.*

*இறப்பு எப்பொழுது வரும், எப்படி வரும் என்று யாருக்கும் தெரியாது. இறப்பு வருகின்ற நேரத்தில், புதியதாய் அறம் செய்ய முடியாது. ஒரே நாளில் அதைப் பயிலவும் முடியாது. அது வெறும் அறிவால் வருவதல்ல.*

*அறம் எனும் புலனடக்கம், தொடர்ச்சியான முயற்சியால், நடைமுறை பயிற்சியால், ஒருவரின் பழக்கம் ஆவது. வழக்கமான ஒழுக்கமே பழக்கம் ஆகும். அப்பழக்கமே தன் இயல்பாய் மாறும். உடல் இறக்கின்றபோது, அகம், உயிருடன் ஒன்றி நிலைக்க, அந்த இயல்பே துணையாகும்.*

**37. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை**
**பொறுத்தானோ டூர்ந்தா னிடை.**

**'அறத்து ஆறு இது' என வேண்டா; சிவிகை**
**பொறுத்தானோடு ஊர்ந்தானிடை.**

*சிவிகை = சிவ் + இ + கை. சிவந்து இருக்கும் கை. உதிரும் கை. பல்லக்கு.*

*அறத்தால் ஆவது இது எனச் சொல்ல வேண்டியதில்லை. பல்லக்கைச் சுமப்பவனையும், அதில் அமர்ந்து பயணம் செய்பவனையும் பார்த்தாலே புரிந்து விடும், யார் அறம் இயற்றியவர் என்பதும், அறத்தின் பயன் என்ன என்பதும். அறத்தின் பயன், இறக்கும் சமயத்தில் பிறப்பறுத்தல் (சிறப்பு) மட்டுமல்ல, அது, இப்பிறப்பிலேயே செல்வமும் ஈனும், வாழும்போதே ஆக்கமும் தரும்.*

**38. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்**
**வாழ்நாள் வழியடைக்குங் கல்.**

**வீழ் நாள் படாஅமை நன்று ஆற்றின், அஃது ஒருவன்**
**வாழ் நாள் வழி அடைக்கும் கல்.**

*வீழ்நாள் = இறக்கும் நாள் வரை*

*படாஅமை = படாது அமைந்து. சோர்வின்றி.*

*வாழ்நாள் = மறுபிறப்பு*

*இறக்கும் நாள் வரை, சோர்வின்றி, புலன் ஒடுக்கம், மன அடக்கம், உயிருடன் ஒன்றல், அசையாமையில் நிலைத்தல் என அறம் செய்தால், அதுவே ஒருவன் மீண்டும் பிறப்பு எடுக்கக் கூடிய வழியை அடைக்கும் கல்லாகும்.*

*"வாழ்நாள் எல்லாம் அறம் செய்தேன், அது இறக்கும் நாளில் என்னைக் காக்கும்", என்று அறம் செய்வதை விட்டு விட்டால், புலன்களை அடக்காமல் விட்டு விட்டால், மனம் அடங்காமல் போய் விட்டால், அகம் உயிருடன் ஒன்றாமல் விலகி விட்டால், அசையாமையில் நிலைக்காவிட்டால், மறுபிறப்பு எடுக்க வேண்டி நேரிடலாம். எனவே, அறம் செய்வதை என்றும் எப்பொழுதும் கைவிடலாகாது. அறமே வாழ்நிலையாக வேண்டும். அறம், வாழ்வின் தொடர்ச்சியான பின்புல இசையாக வேண்டும்.*

**39. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்**
**புறத்த புகழு மில.**

**அறத்தான் வருவதே இன்பம்; மற்று எல்லாம்**
**புறத்த; புகழும் இல.**

*புறத்த = புறமானது*

*புகழ் = ப் + உ + க் + அழ். அகத்தின் உள்ளே மெய்யின் ஆழ் உணர்வு.*

*இல = இல்லை.*

*புலனடக்கம் முதலில் கடினமாய் இருக்கும். ஏனெனில், புலன்கள் வெளியே ஓடி ஓடி பழக்கமாகி விட்டன. மனமும் புலன்களின் பின்னால் ஓடிப் பழக்கப்பட்டு விட்டது. திடீரென்று, புலன்களை அடக்கப் பார்த்தால், அடங்காது. மனமும் வரிந்து கட்டிக்கொண்டு வந்து வக்காலத்து வாங்கும். புலன்களை ஒருவாறு அடக்கினாலும், மனம் மட்டும் அடங்கவே மாட்டேன் என அடம் பிடிக்கும். மனம் அடங்கி விட்டால், வாழ்வில் இயக்கம், சுவை இருக்காது, வெறுமைதான் மிஞ்சும் எனப் பயமுறுத்தும். மனம் (புலன்களின் உள்ளீடு இல்லாமல்) வலிமை இழக்கும்போது, புலன்கள் மீண்டும் இயங்கிட தூண்டப்பார்க்கும்.*

*அடிபணியாமல் உரத்துடன், வைராக்கியத்துடன் புலன்களின் வழிகளை அடைத்து (பேசாமல் அமர்ந்து, கண்களை மூடி, கவனத்தை*

நெஞ்சப்பகுதியில் நிறுத்தி), 'ம்' இசையில் நின்றாலே போதும். புலன்கள் ஒடுங்கும். மனம் அடங்கும். புறமும் தேக உணர்வும் விலக விலக, அகத்தின் ஈர்ப்பு மிகும். எல்லா ஒலிகளும், அதிர்வுகளும் அடங்கிட, மெல்லிய பின்புலமாக, உயிரின் துடிப்பு உள்ளொளியாக, உள்ளொலியாக உணரப்படும்.

அகத்தின் உள்ளே, மெய்யின் ஆழ் உணர்வு, உடல், மனம், புலன் என அனைத்தையும் இன்பமயமாக்கும். இன்பம் என்பது அகத்திற்குரியது. அகமின்றி இன்பம் இல்லை. அறத்தால் அகத்தின் ஆழம், மையம் வரை செல்ல முடிவதால், அக உணர்வே எல்லையில்லா இன்பமாகிறது. செயலற்று சும்மா இருத்தலே, உயிரோடு ஒன்றி இருத்தலே சுகமாகும். உயிரோடு ஒன்றி இருந்து, எதைச் செய்தாலும், அது இன்பமே. இது, அறத்தால் வரும் இன்பமாகும்.

அறமின்றி, உயிரோடு ஒன்றுதல் இன்றி, பெறும் எந்த புலன் நுகர்ச்சியும் மேலோட்டமானவை. புறத்திலேயே நின்று அழிபவை. அகம்நோக்கி செல்லாதவை. எனவே, அவை இன்பமல்ல. அவற்றோடு மனமும் ஒன்ற முடியாது. எனவே, அவை புகழற்றவை.

**40. செயற்பால தோரு மறனே யொருவற்**
**குயற்பால தோரும் பழி.**

**செயற்பாலது ஓரும் அறனே; ஒருவற்கு**
**உயற்பாலது ஓரும் பழி.**

ஒருவன் செய்ய வேண்டியது ஒன்றுதான், அது அறம் எனப்படும் புலனடக்கம். புலனடக்கம், மனத்தை அடக்கி, உயிருடன் ஒன்றவைத்து, இன்பமும், செல்வமும், ஆக்கமும் தந்து, அசையாமையில் நிலைக்க வைத்து, சிறப்பு தரும், பிறப்பறுக்கும்.

ஒருவன் தன் புலன்களை அடக்கா விட்டால், வாழ்நாள் முழுதும் புலன் உணர்வுகளால் அல்லல் படுவான், குறிக்கோள் இன்றி மனக்கவலை அடைவான், செல்வமும், ஆக்கமும் இன்றித் துன்பம் அடைவான், கருமவினைகள் சேர்த்து, மீண்டும் மீண்டும் பிறப்பெடுப்பான். அவன் இறக்கும் காலத்தில், "வாழ்நாளில் அறம் செய்யத் தவறினான்" என்ற பழியும் நிலைத்து நிற்கும். அப்பழி நேராமல் இருக்க, புலனடக்கம் எனும் அறம் செய்ய விரும்ப வேண்டும்.

அறன் வலி உறுத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

அறம் எனும் உயிருடன் ஒன்றுதல், பிறப்பை அறுக்கும், பொருள் செல்வமும் தரும். அதைக் காட்டிலும், நன்மை தருவது, மனிதர்க்கு, வேறு எதுவும் இல்லை.

அறத்தைவிட, நன்மை தருவது, வேறெதுவும் இல்லை. அதை மறப்பதைவிட, தீமை தருவதும், வேறெதுவும் இல்லை.

முழுமையான புலனடக்கத்தை இடைவிடாமல் செய். புலன் இயங்கும் வழியெல்லாம், கருமவினை சேரும்.

மனத்தில் அழுக்காறு, ஆசை, கோபம், இன்னாச்சொல் இவை இல்லாமல் இருந்தாலே, புலனடங்கும், உயிருடனும் ஒன்றலாம். அவை, மனத்தில் இருந்தால், அவற்றின் ஓட்ட இயல்பால், கருமவினை சேரும்.

அழுக்காறு, ஆசை, கோபம், இன்னாச்சொல் ஆகிய நான்கும் இல்லாவிட்டால், புலனடக்கமும், உயிரோடு ஒன்றுதலும் எளிது.

வயது முதிர்ந்த காலத்தில், புலனடக்கிக் கொள்ளலாம் என்று நினைக்காமல், இப்பொழுதே, புலனடக்கி உயிரில் ஒன்றுக. அது, எப்பொழுது இறப்பு வந்தாலும், பிறப்பறுக்கும் துணையாக நிற்கும்.

உயிருடன் ஒன்றுதலால் வரும் பயன்கள், எவை எவை என விரிவாகச் சொல்ல வேண்டியதில்லை. பல்லக்கில் அமர்ந்தவனையும், பல்லக்கைச் சுமப்பவனையும் பார்த்தாலே, விளங்கி விடும்.

இறக்கின்ற நாள்வரை புலனடக்கத்தையும், உயிருடன் ஒன்றுதலையும் சோர்வில்லாமல் செய்தால், அது அவனுடைய பிறப்பை அறுக்கும்.

உயிருடன் ஒன்றுதலால் வருவதே இன்பம். மற்றவை, புலன்களால் வந்தவை, புறத்திலேயே நிற்பவை, அகத்துள் ஆழ்ந்து செல்லாதவை.

ஒருவர் செய்ய வேண்டியதெல்லாம், புலனடக்கமும், உயிரோடு ஒன்றலுமே! அதைச் செய்யாத பிறப்புக்கெல்லாம், குற்ற உணர்ச்சி உண்டாகும்.

## இல்லறவியல்

இல்லறவியல் = இல் + அறம் + இயல். இல் = இ + ல். இருத்தல் அதிர்வாய். இயங்குதல். செயல்படல். உழைத்தல். வினைகளில் ஈடுபடல். பயிர் செய்தல், நெசவு நெய்தல், கட்டிடம் கட்டுதல், கைவினை செய்தல், போன்றவை. அறம் = தேகம், மனத்திலிருந்து பிரியும் தன்மை. உயிருடன் ஒன்றுதல். இயல் = இயல்பு. இயற்கை. தன்மை.

இல்லறவியல் = உழைத்துக் கொண்டே உயிரோடு ஒன்றும் தன்மை.

# 5. இல்வாழ்க்கை

*இல்வாழ்க்கை = இல் + வாழ்க்கை. உழைக்கும் வாழ்வு.*

**41. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.**

**இல்வாழ்வான் என்பான் இயல்பு உடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.**

*வாழ்வான் = வ் + ஆழ்வான். புறமும் அகமும் ஆழ்பவன். இல்வாழ்வான் = உழைப்பில் முழுமையாய் ஈடுபடுபவன். உழைப்பாளர்.*

*இயல்புடைய மூவர் = இல்வாழ்க்கை இயல்புடைய மூன்று பேர், சிறுவர், முதியோர், நோயுற்றோர். உழைப்பில் ஈடுபடக்கூடியவர்களாய் இருந்தும், கற்கும் பணியால் சிறுவர்களும், வலிமை குன்றியதால் முதியோர்களும், பிணியால் உடல் நலம் குன்றியோரும், முழுமையாய் உழைப்பில் ஈடுபடாமல் இருப்பர்.*

*நல்லாற்றின் = நல்லது செய்தால்.*

*நின்ற துணை = உறுதியான உதவி.*

*உழைப்பில் ஈடுபடும் இயல்புடையவர்களாய் இருந்தும், கற்கும் பணியால் சிறுவர்களும், வலிமை குன்றியதால் முதியோர்களும், பிணியால் உடல் நலம் குன்றியோரும், உழைப்பில் ஈடுபடாமல் இருப்பர். அவர்களது தேவைகளை நிறைவேற்றுவதற்கு உறுதியான உதவியாக, உழைப்பில் முழுமையாய் ஈடுபடும் உழைப்பாளன் இருப்பான்.*

**42. துறந்தார்க்குந் தூவா தவர்க்கு மிறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் துணை.**

**துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும்,
இல்வாழ்வான் என்பான் துணை.**

*துறந்தார் = தன்னலமின்றி சமூகச் சேவைகளில் ஈடுபடுபவர்.*

*தூவாதவர் = விதை தூவாத பிற உழைப்பாளர்.*

*இறந்தார் / இரந்தார் = கடன் கேட்டவர். பிச்சை கேட்டவர். இறந்தார் என்பதைவிட இரந்தார் என்பதே பொருத்தமானதாக இருக்கின்றது. பிச்சையெடுப்பவர் இறந்தவரே, எனவும் கருதலாம்.*

*தன்னலமின்றிச் சமூக சேவைகளில் ஈடுபடுவதால் துறந்தார்களுக்கும், விதை தூவாத பிற உழைப்பாளர்களுக்கும், கடன் கேட்டவர்க்கும் அல்லது பிச்சை கேட்டவர்க்கும், உழைப்பாளன் துணையாவான்.*

**43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.**

**தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான், என்று
ஆங்கு ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை.**

*தென்புலத்தார் = தெற்கு நாட்டினர். மூதாதையர். ஈழத்தவர். கடல் கொண்டதால், இடம் பெயர்ந்தவர்.*

*தெய்வம் = த் + எ + ய் + வ் + அம். தேகம் உயர்ந்து உயிர்ப்புடன் முழுமையான தன்மை. சித்தர்.*

*விருந்து = வ் + இர் + உந்து. புறமும் அகமும் இருந்து ஊக்குவிப்பவர்.*

*ஒக்கல் = ஒ + க் + அல். முழுமையான மெய் அதிர்வு. மெய்யுணர்வாளர்.*

*தான் = த் + ஆன். தேகத்தோடு நெருக்கமானவன்.*

*புலம் = ப் + உல் + அம். அகத்தின் உள்ளே அதிர்வுத் தன்மை.*

*ஐம்புலத்தார் = ஐந்து வகையான அக அதிர்வுடையவர்.*

*ஓம்பல் = ஓம் + ப் + அல். ஓம் என்பது அகத்தில் அதிர்வது. மனம் முழுமையாவது. அமைதியுறல்.*

*தலை = த் + அலை. எண்ணம். முதன்மை.*

*மூதாதையரான தெற்கு நாட்டினர், சித்தர், குடும்ப முன்னேற்றத்தை ஊக்குவிப்பவர், மெய்யுணர்வாளர், தேகத்தோடு ஒன்றிய தான் ஆகிய ஐந்து வகையான அக அதிர்வுடையவர்களை அமைதியுறச் செய்வது முதன்மையான கடமை.*

**44. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயில் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.**

**பழி அஞ்சிப் பாத்து ஊண் உடைத்தாயின், வாழ்க்கை
வழி எஞ்சல், எஞ்ஞான்றும், இல்.**

*பழி = ப் + அழ் + இ. மனத்தில் உயிர்ப்புடன் ஆழ்ந்து இருப்பது / இயங்குவது. மன உலைச்சல். குற்ற மனப்பான்மை. குற்ற உணர்ச்சி.,*

*அஞ்சிப்பாத்து = அஞ்சி + பார்த்து. அஞ்சி = அன் + ச் + இ. நெருக்கமான இயக்கமாய் இருத்தல். அருகாமைப் பற்றிய அச்சம். அஞ்சிப் பார்த்து = சுற்றும் முற்றும் பார்த்தல்.*

*ஊணுடை = ஊண் + உடை. ஊண் = தூர இருந்தும் மிக நெருங்கியவர்கள் உடை = புறத்தே ஒட்டித்தொடர்ந்து ஐக்கியமானவர்கள்.*

*ஆய் = உயிர்ப்புடன் இயங்கி. சிந்தித்து.*

*இல்வாழ்க்கை = உழைக்கும் வாழ்க்கை. சமூகத்தில் இயங்கும் வாழ்க்கை. குடும்ப வாழ்க்கை.*

*வழியெஞ்சல் = வழி + எஞ்சல். வழி = வ் + அழ் + இ. ஊழ். எஞ் சல் = எச்சம். மீதம்.*

*எஞ்ஞான்றும் = என் + ஞான்றும். ஞான்று = ன் + ச் + ஆன் + ற் + உ. பொழுது. வகை. என் = எந்த.*

*இல் = இல்லை.*

*குற்ற உணர்ச்சி ஏற்படா வண்ணம், அருகில் (அக்கம் பக்கம்) உள்ளவர்களையோ, தூர இருக்கும் மிக நெருங்கியவர்களையோ புறக்கணித்து விட்டோமா என ஆராய்ந்து, அப்படி புறக்கணிக்காமல் வாழ்கின்ற உழைப்புமிக்க குடும்ப வாழ்க்கைக்கு, ஊழ்வினையால் ஏற்படும் மறுபிறப்பு எப்பொழுதும் / எவ்வகையிலும் இல்லை. குற்ற உணர்ச்சி கருமம், ஊழ் உருவாக்கும். மறுபிறப்பு வரும்.*

**45. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கைப்**
**பண்பும் பயனு மது.**

**அன்பும் அறனும் உடைத்து ஆயின், இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது.**

*அன்பு = அன் + ப் + உ. உயிர்ப்புள்ள நெருக்கம் (வடிவம்) கொண்டு வெளிப்படல். உயிர்ப்பற்ற நெருக்கம், அன்பல்ல. உயிர்ப்பிருந்தும் நெருக்கமில்லாமை, அன்பல்ல. உயிர்ப்புள்ள நெருக்கத்தை, ஒரு வடிவத்தில் இருத்தாமல் போதல், அன்பல்ல. உயிர்ப்புள்ள நெருக்கத்தை, வெளிப்படுத்தாமல் போவதும், அன்பல்ல.*

*அறன் = அற் + அன். உடல் மற்றும் மனத்தைப் பிரிந்து உயிருடன் நெருங்கியிருத்தல்.*

*உடைத்தாயின் = உடைத்து + ஆயின். உடைத்து = தொடர்ந்து. ஆயின் = ஆய் + இன். ஆகி இருந்தால்.*

*பண்பு = ப் + அண் + ப் + உ. மனத்தின் உயிர்ப்புள்ள மிகை நெருக்கம், (வடிவம்) கொண்டு வெளிப்படல். இயல்பு. குணம்.*

*பயன் = விளைவு. முடிவு. பலன்.*

*உயிர்ப்புள்ள நெருக்கமான அன்பையும், புலனடக்கி உயிரோடு ஒன்றலையும் ஒருவன், உழைப்புமிக்க குடும்ப வாழ்வில், இடைவிடாது தொடர்ந்து கடைப்பிடித்தால், அதுவே அவனது இயல்பாகி, ஆனந்தமயமாய் இருப்பான்.*

**46. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றில்**
**போஒய்ப் பெறுவ தெவன்.**

**அறத்து ஆற்றின் இல்வாழ்க்கை ஆற்றின், புறத்து ற்றி**
**போஒய்ப் பெறுவது எவன்?**

*அறத்தாறு = அறம் + ஆறு. புலனடக்கி உயிரோடு ஒன்றலின் தொடர்ச்சி.*

*புறத்தாறு = புறம் + ஆறு. புறம் = ப் + உற் + அம். கொண்டதைப் புறத்தே பிரியும் தன்மை. உடலையும் மனத்தையும் வெறுத்து, வருத்துதல். புறத்தாறு = உடலையும் மனத்தையும் தொடர்ந்து வருத்துதல்.*

*போஓய்ப் = போய் போய் ஓய்ந்து. தேடித் தேடிக் களைத்து.*

*புலனடக்கி, உயிரோடு ஒன்றி, செயல்மிக்க குடும்ப வாழ்வை வாழ்வதில் பெறும் ஆனந்தத்தைக் காட்டிலும், துறவு வாழ்க்கையில், உடலையும் மனத்தையும் தொடர்ந்து வருத்தி, தேடித் தேடிக் களைத்து, ஒருவன் எதைப் பெற்றுவிடப் போகிறான்?*

**47. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்**
**முயல்வாரு ளெல்லாந் தலை.**

**இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்**
**முயல்வாருள் எல்லாம் தலை.**

*இயல்பினான் = இயல்பினால். இயல்பாக. தானாக விரும்பி. வற்புறுத்தல் இன்றி.*

*முயல்வார் = முயற்சி செய்பவர். பிறப்பறுக்க முயற்சிப்பவர்.*

*தலை = முதன்மையானவன்.*

*இயல்பாகவே, அறம் எனும் புலனடக்கி, மனமடங்கி, உயிரோடு ஒன்றி உழைப்பவன், பிறப்பறுக்க முயலும் எல்லாரிலும் முதன்மையானவன் / சிறந்தவன்.*

**48. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை**
**நோற்பாரி னோன்மை யுடைத்து.**

**ஆற்றின் ஒழுக்கி, அறன் இழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் நோன்மை உடைத்து.**

*ஒழுக்கி = ஒ + ழ் + உக் + இ. முழுவதுமாய் ஆழ்ந்து உள்மெய்யாய் இருந்து. முழுமனதுடன். தொடர்ந்து.*

*இழுக்கா = விலகாத*

*நோற்பார் = நெருங்கி ஒன்றாகிப் பிரிந்து வெளியாய் இருப்பவர். மெய்யுணர்வாளர். ஞானியர்.*

*நோன்மை = நெருங்கி ஒன்றாகி அமைதியாய் ஐக்கியமாகும் தன்மை. உயிரோடு ஒன்றும் தன்மை.*

*முழுமனதுடன், தொடர்ந்து புலனடக்கத்திலிருந்து விலகாமல், நடத்தும் உழைப்புமிக்க குடும்ப வாழ்க்கை, ஞானியரின் உயிருடன் ஒன்றும் தன்மையை உடையது.*

**49. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.**

**அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்
பிறன் பழிப்பது இல்ஆயின் நன்று.**

*அறம் எனப்படுவது புலனடக்கம், அதனூடே மன அடக்கம், அதன் விளைவாய் உயிரோடு ஒன்றுதல் ஆகியவை. உழைப்புமிக்க குடும்ப வாழ்விலும், புலனடக்கமாய் இல்லாமல் போனால், பேச்சாலும், பார்வையாலும், செயலாலும் சண்டைகளும் சச்சரவுகளும் கணவன் மனைவியிடையே வரும். குழந்தைகள் நலன் பேணப்படாமல் போகும். வயதான பெரியவர்களுக்கு மரியாதை இல்லாமல் போகும். உறவினரும், நண்பரும் விலகுவர். விருந்து வர அஞ்சும். தொடர்பில்லாதவர்களும் பழிப்பர். இறுதியில், வாழ்வின் அடிப்படையான உயிரோடு ஒன்றலும் இல்லாமல் போகும். அன்பும் ஆனந்தமும் இருக்காது. பிறப்பு தொடரும். எனவே, குடும்ப வாழ்வில் புலனடக்கமுடன் வாழ்ந்து, பிறர் பழிக்காமல் (பிள்ளைகள் எப்படி வளர்ந்துள்ளன பார், ஒழுக்கமின்றி!, பெரியவர்களுக்கு உள்ள மரியாதயைப் பார், பாவம்!) பார்த்துக் கொள்ள வேண்டும்.*

**50. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.**

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்.**

*வையம் = வை + அம். புறம் அகம் ஐக்கியப்பட்ட தன்மை. நிலையான தன்மை. மண்ணில்.*

*வாழ்வாங்கு = வாழ்வு + ஆங்கு. வாழ்வு மேற்கண்டவாறு.*

*மண்ணில் மேற்கண்டவாறு, உழைக்க முடியாதவர்களுக்கும், இல்லாதவர்களுக்கும் தந்து, அன்பெனும் பண்புடனும், அறம் எனும் புலனடக்கமும், அதனூடே மனஅடக்கமும், அதன் விளைவான உயிருடன் ஒன்றலும் இடைவிடாது முயன்று செய்து, சமூகத்தில் மட்டுமல்லாது, வீட்டிலும் புலனடக்கமுடன் இருந்து, மனைவி, பிள்ளைகள், உற்றார், உறவினர், நண்பர், விருந்தினர் ஆகியோருடன் மகிழ்ந்து இருந்து வாழ்பவன், கடுந்தவம் புரிந்து உயிருடன் ஒன்றி ஆனந்தம் அடையும் ஞானியரின் தன்மையைப் பெறுவான். அவன் வானவெளியில் இரண்டறக் கலந்திருக்கும் தெய்வமாக கருதி வணங்கப்படுவான்.*

**இல் வாழ்க்கை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*உழைத்து வாழ்பவன், தற்சமயம் உழைக்க முடியாதவர்களுக்கு உதவ வேண்டும். உழைத்து வாழ்பவன், சமூகச் சேவையில் ஈடுபடுபவர்களுக்கும், பயிர் செய்ய முடியாது போனவர்க்கும், வறுமையில் இருப்பவர்களுக்கும் துணையாவான்.*

தெற்கு நாட்டினர், சித்தர், விருந்து, மெய்யுணர்வாளர், தான் ஆகிய ஐவரையும் காப்பது கடமை.

பிறர் பசித்திருக்க தான் மட்டும் உண்பது பழிக்கப்படுவதால், அது மிருகத்தன்மை, மனிதத் தன்மையல்ல என்பதால், தூரத்திலோ அருகாமையிலோ வறுமையில் வாடுபவர்க்கு தந்து, உழைத்து வாழ்பவனுக்கு மறுபிறப்பு இல்லை.

அன்போடு இருத்தலே உழைத்து வாழ்பவனின் இயல்பாய் இருக்க வேண்டும். அது, தேகத்திலிருந்தும் மனத்திலிருந்தும் பிரிந்து, அவனை உயிருடன் ஒன்ற வைக்கும்.

உழைத்து வாழும் வாழ்க்கையிலேயே, ஒருவன் உயிரோடு ஒன்றி வாழ்ந்தால், துறவறத்தில், அவன், பெறுவதற்கு ஒன்றும் இல்லை.

உயிருடன் ஒன்றி வாழும் இயல்பினைக் கொண்டு, உழைத்து வாழ்பவன், பிறப்பறுக்க முயற்சிப்பவர்களில், தலை சிறந்தவன்.

உயிருடன் ஒன்றும் பாதையில் தொடர்ந்து, புலன்களுக்கு அடிமைப்படாத உழைக்கும் வாழ்வு, ஞானியரின் நிலைக்குச் சமம்.

உயிருடன் ஒன்றுதலே, உழைக்கும் குடும்ப வாழ்வு. அதுவும், கடமை தவறாமல் செய்வது, நல்லது.

உலகில் மேற்கண்டவாறெல்லாம் வாழ்பவன், வானில் இருக்கும் தெய்வமாக கருதப்படுவான்.

# 6. வாழ்க்கைத் துணை நலம்

*வாழ்க்கைத்துணை நலம் = வாழ்க்கை + துணை + நலம். நலம் = ன் + அல் + அம். நெருங்கிய அதிர்வுத் தன்மை. இயல்பு. குணம். பண்பு.*

*வாழ்க்கைத்துணை நலம் = மனைவியின் பண்பு.*

**51. மனைத்தக்க மாண்புடை யளாகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.**

**மனைத் தக்க மாண்பு உடையள் ஆகி, தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத்துணை.**

*மனை = ம் + அன் + ஐ. கொண்டு மூடி நெருங்கி ஐக்கியமாதல். மனை = மன் + ஐ. மனமுடன் ஐக்கியம். மனம் உயிர்ப்புடன் இருத்தல்.*

*மாண்பு = ம் + ஆண் + ப் + உ. அமைதியை மிக நெருக்கமாக்கிக் கொண்டு வெளிப்படல். மௌனம் காத்தல். வாய் அடக்கம்.*

*வளம் = வ் + அள் + அம். புறமும் அகமும் உள்ள மிகைத் தன்மை. வருமானம்.*

*துணை = த் + உண் + ஐ. தேகத்தின் புறத்தே மிக நெருக்கமாய் ஐக்கியமாதல்.*

*உயிருடன் ஒன்றிய மனம் போன்ற, அமைதி காத்து, தன் கணவனின் வருவாய்க்கேற்றவாறு செலவு செய்பவளே, தேகத்தின் புறத்தே மிக நெருக்கமாய் உயிர்ப்புடன் இருக்கும் மனைவி.*

*அமைதி காக்காதவள், ஊதாரியாகவே இருக்க வாய்ப்புண்டு. பொருள்மேல் மோகம் கொண்டு, கணவனிடம் நெருக்கம் குறைந்து, அந்நியப்படுவாள்.*

**52. மனைமாட்சி யில்லார்க ணில்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித் தாயினு மில்.**

**மனை மாட்சி இல்லாள்கண் இல்ஆயின், வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும், இல்.**

*மாட்சி = ம் + ஆட்சி. அமைதியாய் ஆள்வது. அதிகாரத்தாலும் ஆர்ப்பாட்டத்தாலும் ஆள்வது ஆட்சியல்ல. மெல்லிய உடலசைவாலும், கண் குறிப்பாலும், மென்மையான குரலாலும் செய்வதும் செய்விப்பதும்தான் மாட்சி. மாட்சி = ம் + ஆள் + ச் + இ. கொண்டு மூடி மிகையான இயக்கமாய் இருத்தல். மிகுந்த செல்வம்.*

*கண் = மெய்யை அல்லது பொருண்மையை மிக நெருங்கி இருத்தல். இடம்.*

*எனை = எத்தனை அல்லது எவ்வளவு.*

உயிருடன் ஒன்றிய அமைதியான ஆளுமை, மனைவியின் இடத்தில் இல்லாமல் போனால், வாழ்க்கை எவ்வளவு செல்வம் மிகுந்ததாய் இருந்தாலும், அது வறுமையாகவே தோன்றும்.

**53. இல்லதெ னில்லவள் மாண்பாயி னுள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை.**

**இல்லது என், இல்லவள் மாண்பு ஆனால்? உள்ளது என்**
**இல்லவள் மாணாக்கடை?**

இல்லதென் = இல்லது + என். இல்லாதது என்ன?

இல்லவள் = மனைவி

உள்ளதென் = உள்ளது + என். உள்ளது என்ன?

மாணா = ம் + ஆண் + ஆ. அமைதியாகாத.

கடை = இறுதி. முடிவு.

மனைவி அமைதியுடையவளாய் இருந்தால், இல்லாதது என்ன? அந்த அமைதி, எல்லாம் இருப்பதற்குச் சமம். மனைவி கடைசிவரை அமைதியாகாமல் இருந்தால், இருப்பது என்ன? எல்லாம் இருந்தும், அது எதுவும் இல்லாததற்கு சமம்.

**54. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மையுண் டாகப் பெறின்.**

**பெண்ணின் பெருந்தக்க யா உள-கற்பு என்னும்**
**திண்மை உண்டாகப்பெறின்?**

பெண்ணிற் = பெண்ணின் = பெண் + இன். பெண்ணைவிட.

பெருந்தக்க = பெருமை கொள்ளத்தக்கது.

யாவுள = யா + உள. என்ன உள்ளது.

கற்பு = கல் + ப் + உ. கல்போன்ற அசையாத மனம் வெளிப்படுதல்.

திண்மை = த் + இண் + ம் + ஐ. தேகத்தின் இருப்பு மிக நெருக்கமாய் அமைதியாய் ஐக்கியமாதல். உறுதி

உண்டாக = உண் + ட் + ஆக. உள்ளே மிக நெருக்கமாகி ஒட்டித்தொடர. உள்ளும் புறமும்.

பெறின் = பெற்றால்.

கல்போன்ற அசையாத மனத்தையும், சபலம் அல்லது அச்சமில்லாத தேக அமைதியை, உறுதியை, உள்ளும் புறமும் தொடர்ந்து பெற்ற பெண்ணைவிட, இந்த உலகில் பெருமைமிக்கது, வேறு என்ன இருக்கிறது?

**55. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யு மழை.**

**தெய்வம் தொழாஅள், கொழுநன்-தொழுது எழுவாள்,**
**'பெய்' என, பெய்யும், மழை.**

*தெய்வம் = த் + எய் + வ் + அம். தேகம் உயர்ந்து உயிர்ப்புடன் இருந்து முழுமையான தன்மை. சித்தர்.*

*தொழாஅள் = வணங்காத பெண்*

*கொழுநன் = க் + ஒழ் + உன் + அன். மெய்யில் முழுமையாய் ஆழ்ந்து உள்ளே நெருங்கியவன். உயிரோடு ஒன்றியவன்.*

*எழுவாள் = உயர்பவள்*

*பெய் = ப் + எ + ய். கொண்டு உயரே உயிர்ப்புடன் இருத்தல்.*

*மழை = ம் + அழை. கொண்டு மூடியதன் அழைப்பு. நிலத்தின்அழைப்பு. மழை = ம் + அழ் + ஐ. கொண்டு மூடியது உயிர்ப்புடன் கீழிறங்கி ஐக்கியமாதல். மேகம் பொழிதல்.*

*உயிரோடு ஒன்றி ஆனால் தேகத்தால் மறைந்த சித்தரை வணங்காமல், மெய்யுடன் உயிரோடு ஒன்றிய கணவனை வணங்கி, தானும் உயர்ந்த சிந்தனையான உயிரோடு ஒன்றலை முயல்கின்ற மனைவி, ''நீரைக் கொண்டு உயரத்தில் இருக்கும் மேகமே, உயிர்ப்பாகு" என்றதும் மழை பொழியும்.*

*மண்ணும் விண்ணும் ஒன்றும்போதே, முழுமையாகும்போதே மழை பெய்கின்றது. மண்ணும் மரமும், செடியும், மனித மனமும், மழைக்காக இறைஞ்சும்போதே மழை பெய்கின்றது. மெய்யுணர்வுடன் உயிருடன் ஒன்றும்போது, முழுமையாகும்போது, தன்னலமில்லாதபோது, நினைப்பது நடந்தேறும்.*

**56. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண்.**

**தற்காத்து, தற்கொண்டாற் பேணி, தகை சான்ற**
**சொற்காத்து, சோர்வு, இலாள்-பெண்.**

*தற்காத்து = தன்னைக் காத்து. கற்புடன்.*

*தற்கொண்டான் = தன்னைக் கொண்டவன். மணந்தவன். கணவன்.*

*பேண் = ப் + ஏண். கொண்டதை மிக உயர்த்தி மிக நெருங்கி.*

*உடல் மற்றும் மனத்தை உயர்த்து.*

*தகைசான்ற = தகை + சான்ற. தகை = த் + அக் + ஐ. தேகத்தால் உயிர்ப்புள்ள மெய்யுடன் ஐக்கியமானவர். மெய்யுணர்வாளர். சான்ற = ச் + ஆன் + ற. இயக்கத்தில் நெருங்கிப் பிரிந்த. உயிர்ப்புள்ள.*

*சொற்காத்து = சொல் + காத்து. மந்திரம் (மன் + திரம்) முயன்று.*

*சோர்விலாள் = சோர்வு + இலாள். இடைவெளி அற்று தொடர்ந்து முயல்பவள்.*

*பெண் = ப் + எண். மனத்தில் உயர்ந்து மிக நெருக்கமாகுபவள்.*

*தன்னைக் காத்து, கற்புடன் இருந்து, கணவனின் உடலையும் மனத்தையும் உயர்த்தி, மெய்யுணர்வாளர்களின் உயிர்ப்புள்ள சொல்படி தொடர்ந்து முயல்பவள், மனைவி.*

**57. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை.**

**சிறை காக்கும் காப்பு எவன் செய்யும்? மகளிர் நிறை**
**காக்கும் காப்பே தலை.**

*பிறரால் பாதுகாப்பு தரப்பட்டாலும், பெண் மனநிலை தவறினால், அந்த பாதுகாப்பை, எளிதில் உடைத்துவிட முடியும். சிறை, குறுகிய இடத்தைக் கொண்டது. சமூகம், பரந்த இடத்தைக் கொண்டது. பரந்த இடத்தில், யாராலும் தொடர்ந்து பாதுகாப்பை, பெண்ணுக்குத் தரமுடியாது. பெண்கள் சபலத்தையோ அச்சத்தையோ காட்டாதவரை, மன உறுதியைத் தேகத்தாலேயே (பார்வையாலோ, பேச்சாலோ, அங்க அசைவாலோ) வெளிப்படுத்தும்வரை, அவர்கள் பாதுகாப்பாகவே இருப்பர்.*

**58. பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்**
**புத்தேளிர் வாழு முலகு.**

**பெற்றாற் பெறின் பெறுவர், பெண்டிர், பெருஞ் சிறப்புப்**
**புத்தேளிர் வாழும் உலகு.**

*பெற்றான் = ப் + எற் + ஆன். மனத்தில் உயர்ந்து பிரிந்தவன். மெய்யுணர்ந்தவன்.*

*பெறின் = கற்புடைய மனைவியைப் பெற்றால்.*

*பெண்டிர் = ப் + எண் + ட் + இர். கொண்டதை உயர்த்தி மிக நெருங்கித் தொடர்ந்து இருப்பவர்.*

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கமின்மை. பிறப்பின்மை.*

*புத்தேளிர் = புத் + ஏள் + இர். வாண்வெளியின் உயிர்ப்புத் தேகமாய் மிக உயர்ந்த ஒளிர்மையாய் இருப்பவர். புத்த காயம். வாண் ஒளிர் தேகம்.*

*மெய்யுணர்ந்தவன், மனதை உயர்த்தி, மிக நெருக்கமாய் தொடர்ந்து இருக்கும், கற்புடைய மனைவியைப் பெற்றால், அவளும் மெய்யுணர்ந்து, வாண்வெளியின் உயிர்ப்புத் தேகமாய், மிக உயர்ந்த ஒளிர்மையாய் வாழ்கின்றவர்களின், பிறப்பில்லா உலகை அடைவாள்.*

**59. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.**

**புகழ் புரிந்த இல் இலோர்க்கு இல்லை-இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.**

*புகழ் = ப் + உக் + அழ். கொண்டதன் / உடலின் உள்மெய்யுடன் உயிர்ப்புடன் ஆழ்ந்திருத்தல். கற்பு.*

*புரி = ப் + உர் + இ. கொண்டு புறம் இருந்து இயங்குதல். திண்மை.*

*இகழ்வார் = இருக்கும் மெய்யைக் கீழிறக்குவோர். தாழ்த்திப் பேசுவோர்.*

*ஏறு = மிக உயர்ந்து பிரிந்து / தனித்து வெளிப்படு. காளை.*

*பீடு = ப் + ஈடு. (உயர்ந்த) மனத்திற்கு இணையான.*

*கற்பும் திண்மையும், வீட்டில் உள்ள பெண்களுக்கு இல்லையென்றால், உயிருடன் ஒன்றுதல் இல்லை. அவர்கள், சமூகத்தில், தாழ்த்திப் பேசுவோர் முன்பு, காளை போல் தலையை உயர்த்தி, நடக்க முடியாது.*

**60. மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு.**

**'மங்கலம்' என்ப, மனைமாட்சி; மற்று அதன்
நன்கலம் நன் மக்கட் பேறு.**

*மங்கலம் = மன் + கலம். கலம் = கல் + அம். கல்லின் தன்மை. அசையாமை. படகு. மன்கலம் = மனத்தின் அசையாமை. மனத்தின் பிரயாணம்.*

*மனைமாட்சி = மனைவியின் அமைதி காக்கும் தன்மை.*

*மற்றதன் = மற்று(ம்) + அதன். அந்த அமைதியில் விளைந்த.*

*நன்கலம் = நல்ல கலம். நல்ல பாத்திரம். சொல்லை ஏற்கும்.*

*நன்மக்கள் = நல்ல மக்கள். நல்ல பிள்ளைகள்.*

*பேறு = ப் + ஏ + ற் + உ. கொண்டது மிக உயர்ந்து பிரிந்து வெளிப்படுதல். மனம் மிக உயர்ந்து வெளியாகி (தேகத்தைப்) பிரிந்து வெளிப்படுதல். ஒருமையாதல். முழுமையாதல்.*

*மனைவியின் அமைதி காக்கும் தன்மையால், கணவனின் மனத்தில் அசையாமையும், அந்த அமைதியில் விளைந்த சொல்படி நடக்கும் பிள்ளைகளால், மனம் நிம்மதியுமுற்று, முழுமையடைவான், மெய்யுணர்வடைவான்.*

*வாழ்க்கைத்துணை நலம் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*உயிருடன் ஒன்றிய மன அமைதியுடன், கணவனின் வருவாய்க்கு ஏற்றவாறு செலவு செய்பவளே, வாழ்க்கைக்கு துணையாவாள்.*

*உயிருடன் ஒன்றிய மன அமைதி, குடும்பத்தில் உள்ளவர்கள் இடத்தில்*

இல்லையென்றால், வாழ்க்கையில் எவ்வளவு செல்வம் இருந்தாலும், வறுமையே! துன்பமே!

மனைவி அமைதியுடையவளாய் இருந்தால், இல்லாதது என்ன? மனைவி கடைசிவரை அமைதியாகாமல் இருந்தால், இருப்பது என்ன?

கல்போன்ற மன உறுதியைக் கொண்ட பெண்ணைவிட, பெருமைமிக்கது வேறு எதுவும் இல்லை.

சித்தரை வணங்காமல், உயிரோடு ஒன்றிய கணவனை வணங்குபவள், 'பெய்' என்றதும், மழையும் பெய்யும்.

கற்புடன் இருந்து, கணவனின் உடலையும் மனத்தையும் உயர்த்தி, மெய்யுணர்வாளர்களின் உயிர்ப்புள்ள சொல்படி தொடர்ந்து முயல்பவள், மனைவி.

பிறரால் பெண்ணின் கற்பைப் பாதுகாப்பது கடினம். சபலம் அல்லது அச்சமில்லாத தேக அமைதியை உறுதியாகத் தொடர்ந்து கொண்டு, பெண், தன்னைத் தானே காப்பதே, சிறந்த பாதுகாப்பாகும்.

கணவன், மெய்யுணர்வு பெற்றவனாய் இருந்தால், அவனுடன் சேர்ந்து முயலும் பெண்ணும், மெய்யுணர்வைப் பெறுவாள். (பிற்கால சமணக் கொள்கையான, பெண்கள் மெய்யுணர்வை அடைய முடியாது, என்பதற்கு மறுப்பு)

கற்புடைய பெண்டிர் வீட்டில் இல்லையென்றால், உயிருடன் ஒன்ற முடியாது. சமூகத்திலும் தலைநிமிர்ந்து நடக்க முடியாது.

குடும்பத்தின் அமைதியால், மனம் அசையாமை பெறும். அக்குடும்பத்தில் பிறக்கும் நல்ல பிள்ளைகளும், அமைதி நிரம்பி இருப்பர்.

# 7. புதல்வரைப் பெறுதல்

*புதல்வர் = புத் + அல் + வ் + அர். புத் = ப் + உத். மனவெளி புறத்தேகம். புதல்வர் = மனவெளி புறத்தேக அதிர்வாகி, முழுமையாகிப் பிரிதல். பெற்றவர்கள் மனத்தின் பொருண்மையான வெளிப்பாடே, பிள்ளைகள். பெற்றவர்களின் வினைப் பயனே, பிள்ளைகள்.*

**61. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த**
**மக்கட்பே றல்ல பிற.**

**பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை-அறிவு**
**அறிந்த மக்கட்பேறு அல்ல பிற.**

*பெறுமவற்றுள் = பெறும் + அவற்றுள். பெறக்கூடியவைகளில்.*

*யாமறிவதில்லை = யாம் + அறிவது + இல்லை.*

*அறிவறிந்த = அறிவு + அறிந்த. அறிவு = அறி + உ. அறி புறம். அறி உளம். அறி முழுமையை. முதலில் அகத்து அறிவும் புறத்து அறிவும் ஒன்றை மற்றொன்று செழுமைப் படுத்தும். புறமும் எல்லையற்றது. அகமும் ஆழமானது. புறத்தை மட்டும் அறிவதால், அகத்தை அறிய முடிவதில்லை. ஆனால், அகத்தை அறிவதால், புறத்தை எளிதில் அறிய முடிகின்றது. ஏனெனில், அகமே, அகம் புறம், எங்கும் நிறைந்துள்ளது. வெளியே அனைத்துமாய் உள்ளது. மனம் வெளியாகும்போது, உயிருடன் ஒன்றும்போது அனைத்தையும் ஊடுருவ முடியும். அறிய முடியும். முடிவில், தன்னை அறிதலே அனைத்தையும் அறிவதற்கான எளிய இயல்பான வழி என்பதும் உணரப்படும். பிண்டமும் அண்டமும், பகுதியும் முழுமையும், ஒத்த தன்மை என்பதால், அண்டம் அணுத்தன்மை உடையதாயும், அணு அண்டத்தன்மை உடையதாயும் இருப்பதால், அணுபோன்ற அகத்தை அறிதலே புறம் அனைத்தையும் அறியும் வழியாகலாம். அறி = அ + ற் + இ. உயிராகவே இருத்தல். உயிர், புலன்களாலான உடலையும், அவற்றால் இயங்கும் மனத்தையும், பிரிந்து இருத்தல். உயிரோடு ஒன்றல்.*

*அறிவறிந்த = அறிவு எது என அறிந்த. அறிவறிவு = அறிவு என்பது எப்படி தோன்றுகின்றது என்று அறியும் அறிவியல். புலன்கள் மூலமாகவே கருத்துகளும், சிந்தனைகளும், அகந்தையும், ஆசையும், கோபமும் தோன்றுகின்றன என அறிந்தால், புலனடக்கத்தை முதன்மையாக மேற்கொள்வதன் மூலம் ஆசையையும், கருமத்தையும், பிறப்பையும் அறுக்கலாம் என்பது புலவரின் முடிவு.*

*மக்கள் = பிள்ளைகள்.*

*பேறல்ல பிற = மற்ற எவையும் முழுமை தரக் கூடியதல்ல.*

*பெறக்கூடியவைகளில், அறிவு எது என அறிந்த பிள்ளைகளைப் பெறுவதைக் காட்டிலும், முழுமை தரக் கூடியதை யாம் அறியவில்லை.*

**62. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.**

**எழுபிறப்பும் தீயவை தீண்டா-பழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.**

*எழுபிறப்பு = எழு + பிறப்பு. வருகின்ற பிறப்பு. ஏழு பிறப்பு.*

*தீயவை = தீபோன்று அழிப்பவை.*

*தீண்டா = சிறிது நேரம் கூட தொடாது.*

*பழி = ப் + அழி. அழி = அழ் +இ. ஆழத்தில் இருப்பது. பழி = மனத்தின் ஆழத்தில் இருப்பது. மனத்தை அழிப்பது. குற்ற உணர்ச்சி. குற்ற மனப்பான்மை. பிறப்பு தோற்றுவிக்கும்.*

*பிறங்கா = ப் + இறங்கா. மனம் கீழ் இறங்கா, தாழாத, சிறுமையடையாத.*

*பண்புடை = பண்பு + உடைய. பண்பு = ப் + அண் + ப் + உ. மனத்தின் மிகை நெருக்கம் வடிவம் கொண்டு வெளிப்படல். பண்பு = பண் + ப் + உ. மனம் ஒன்றிய வெளிப்பாடு. மனத்தின் திருந்திய வெளிப்பாடு. ஒழுக்கம்.*

*மக்கள் = பிள்ளைகள்*

*பெறின் = பெற்றால்.*

*குற்ற மனப்பான்மையால் சிறுமை ஏற்படுத்தாத, ஒழுக்கமுடைய பிள்ளைகளைப் பெற்றால், இப்பிறப்பில் மட்டுமல்ல, மிச்சம் மீதமான கருமத்தால், ஊழால், பிறப்பென்று ஒன்று வந்தாலும், தீப்போன்று அழிப்பவை எவையும், சிறிது கூட நெருங்காது.*

**63. தம்பொரு ளென்பர்தம் மக்க ளவர்பொருள்
தந்தம் வினையான் வரும்.**

**தம் பொருள் என்ப தம் மக்கள்; அவர் பொருள்
தம்தம் வினையான் வரும்.**

*தம்பொருள் = தன் + பொருள். பொருள் = ப் + ஒர் + உள். கொண்டது ஒன்றாகி உள் இருப்பது. வாழ்க்கைப் பயன். வினைப்பயன். செல்வம்.*

*தந்தம் = தன் + தம். தன்னுடையதும், தன் மக்களுடையதும்.*

*வினையான் = வினையால்.*

*ஒருவரின், வாழ்க்கை வினைப்பயனாக, அவருடைய பிள்ளைகள் அமைவர். அப்பிள்ளைகளுக்குப் பிறக்கும் பிள்ளைகள், பேரக்குழந்தைகள், தன் வினையாலும், தன் பிள்ளைகளின் வினையாலும் அமைவர். எனவே, வினை என்பது தொடர்ச்சியான ஒன்று.*

**64. அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.**

**அமிழ்தினும் ஆற்ற இனிதே-தம் மக்கள்
சிறு கை அளாவிய கூழ்.**

*ஆற்ற = காட்டிலும்.*

*அளாவிய = அள் + ஆவ் + இய. அள்ளி புறமும் அகமும் இருப்பதாய். அள்ளி இறைத்து.*

*கூழ் = க் + ஊ + ழ். பொருண்மை உள்ளே ஆழத்தில். சிறிதளவு.*

*தன் பிள்ளைகள், சிறிய கைகளால் அள்ளி இறைக்கும் சிறிதளவு உணவு, அமிழ்தினைக் காட்டிலும் இனியது. குழந்தைகள் உணவை இறைக்கும்போது, அவர்கள் கையில் இருக்கும் உணவை நாம் உண்ண முயலும்போது, நம் உடல், ஒரு சில நொடிகள், சிறிதும் அசையாமல் இருக்கும். அந்த அசையாமை, புலனடக்கி, மனமடங்கி, உயிரோடு ஒன்றலுக்குச் சமமானது.*

**65. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.**

**மக்கள்மெய் தீண்டல் உடற்கு இன்பம்; மற்று அவர்
சொல் கேட்டல் இன்பம், செவிக்கு.**

*மக்கண் = மக்கள். பிள்ளைகள்.*

*நம் பிள்ளைகள், நம் மெய்யைத் தீண்டுவது, உடலுக்கு இன்பம் உண்டாகின்றது. மேலும், அவர்களுடைய சொற்களைக் கேட்பது, காதுகளுக்கு இன்பம், மனதிற்கு இன்பம்.*

**66. குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.**

**'குழல் இனிது; யாழ் இனிது' என்ப-தம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்.**

*குழல் = க் + உழ் + அல். பொருண்மையின் உள் ஆழத்தில் அதிர்தல். மூங்கில் துளையின் ஆழத்தில் காற்று அதிர்தல். காற்று இசைக்கருவி.*

*யாழ் = இ + ஆழ். நிலைத்து ஆழ்தல். உயிரோடு ஒன்றுதல். நரம்பு இசைக் கருவி. மெய்யுணர்வை உணரச் செய்யும் கருவி.*

*இனிது = இன் + இன் = இ + ன். இருப்பது நெருங்கி . இது = இ + த் + உ. இருந்து தேகமாய் / தேக உணர்வாய் வெளிப்படுவது. இனிது = நெருங்கி இருந்து தேக உணர்வாய் வெளிப்படுவது.*

*மழலை = ம் + அழ் + அலை. மனத்தின் / ஆன்மாவின் ஆழத்து அலை. உயிரின் அலை, ஒலி, ஓசை, இசை.*

குழல் இனிது, யாழ் இனிது என்பர், தம் பிள்ளைகளின், உயிரின் இசை போன்ற, மழலைச்சொல்லைக் கேட்காதவர்கள்.

இசையுடன் நெருங்கிய உணர்வால், மெய் மறக்கும். மழலையால் உடல், மனம், அனைத்தும் மறக்கும், அகம் உயிரோடு ஒன்றும். மெய்யுணர்வுக்குச் சமமான ஆனந்தமாகும்.

இது போன்று, சிறிது நேரமே மெய்யுணர்வு நிலைக்கும் தருணங்கள், அனுபவங்கள், இயல்பாகவே இல்லறத்தில், பல நிகழும். அதை அறிந்து உணர்ந்தால், தொடர்ந்து நீடிக்கும் மெய்யுணர்வைப் பெறுவது எளிது. எனவேதான், இல்லறத்தை நல்லறம் என்றனரோ?

**67. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து**
**முந்தி யிருப்பச் செயல்.**

**தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து**
**முந்தி இருப்பச் செயல்.**

மகற்காற்று = மக்களுக்கு + ஆற்று. பிள்ளைகளுக்குச் செய்யும்.

நன்றி = நன்று + இ. நன்றாய் இருத்தல். நன்மை.

அவையத்து = அவையில். சபையில். அவை = அவ் + ஐ. வ் = உ + அ. புறமும் அகமும். ஐ = ஐக்கியமாதல். அவை = உயிர்ப்புடன் அகமும் புறமும் ஐக்கியமானவர்கள். மெய்யுணர்வாளர்கள். முழுமையானவர்கள். அவை = அ + வை. உயிர் அசையாமை. உயிரோடு ஒன்றல்.

முந்தி = மேடையின் மேல் அல்லது மேடைக்கு முன் அருகில்.

தந்தை பிள்ளைகளுக்குச் செய்யும் நன்மை, உயிர்ப்புடன் புறமும் அகமும் ஐக்கியமானவர்கள், மெய்யுணர்வாளர்கள் கூடும் இடத்தில், பிள்ளைகளை உயர்ந்த மேடையின் மேலோ, மேடைக்கு முன் அருகிலோ, முக்கியத்துவம் இருக்குமாறு செய்தல்.

**68. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர் கெல்லா மினிது.**

**தம்மின், தம் மக்கள் அறிவுடைமை மா நிலத்து மன்**
**உயிர்க்கு எல்லாம், இனிது.**

தம்மிற்றம் = தம்மின் தம். தம்மைக் காட்டிலும் தம்.

மன்னுயிர் = மன் + உயிர். மனம் கொண்ட உயிர். மனிதர்.

தம்மைக் காட்டிலும், தம் பிள்ளைகள் அதிக அறிவைக் கொண்டிருப்பது, பரந்த உலகத்தில் வாழும் மனிதர்க்கெல்லாம் இனிமை தருவதாகும்.

விலங்குகள், தம்மை மிஞ்சும் குட்டிகளை, விலக்கி விடும்.

மனைவி, கணவன், சகோதரர்கள், நண்பர்கள், பிறர் என எவர் அறிவில் மிஞ்சினாலும், ஒருவர் மனம் சிறிதாவது குறுகும். ஆனால்,

*தன் பிள்ளைகள், தன்னை அறிவில் மிஞ்சினால், தானே தன்னை மிஞ் சியதாய், பெருமை கொள்ளும்.*

**69. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.**

**ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும்-தன்
மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்.**

*ஈன்றபொழுதிற் = ஈன்ற பொழுதின். பெற்ற பொழுதைவிட.*

*உவக்கும் = உ + அக் + உம். உள்ளே உயிர்ப்புள்ள மெய்யுடன் ஒன்றும். ஆனந்தம்.*

*சான்றோன் = ச் + ஆன் + ற் + ஓன். இயக்கமோடு நெருங்கிப் பிரிந்து ஒன்றானவன். அகவிடுதலை அடைந்தவன்.*

*பெற்ற பொழுதைவிட, தன் மகன் அகவிடுதலை அடைந்தவன் எனக் கேட்க, தாய் மிகவும் ஆனந்தம் அடைவாள்.*

**70. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.**

**மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி, 'இவன் தந்தை
என் நோற்றான்கொல்!' எனும் சொல்.**

*உதவி = உத் + அவ் + இ. புறத் தேகமாய் உயிர்ப்புள்ள புறமும் அகமுமாய் இருத்தல். தேகத் தேவையையும் மனத்தேவையையும் நிறைவு செய்தல்.*

*நோற்பு = நோன்பு = ன் + ஓன் + ப் + உ. அகம் நெருங்கி ஒன்றாகி மனவெளியாய் வெளிப்படல்.*

*சொல் = ச் + ஒல். இயக்கம் / சத்தம் ஒன்றல். சத்தம் முழுமையாதல்.*

*மகன், தந்தையின் உடலுக்கும், மனதிற்கும், செய்யும் உதவி என்னவென்றால், இவன் தந்தை, உயிருடன் ஒன்ற, என்னவெல்லாம் செய்தானோ, என்று வியக்கும்படி, மகன் உயிரோடு ஒன்றி, ஆக்கங்கள் பல படைத்து, பலரும் அகவிடுதலை அடைய, முயல வேண்டும்.*

*புதல்வரைப் பெறுதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*அறிவு எது, என அறிந்த பிள்ளைகளைப் பெறுவதை விட, வேறு பெறவேண்டியது, எதுவும் இல்லை.*

*குடும்பத்திற்கும், பெற்றோர்க்கும் பழியைக் கொண்டு வராத பண்புகளைக் கொண்ட பிள்ளைகளைப் பெற்றால், இப்பிறப்பில் மட்டுமல்ல, வருகின்ற பிறப்பிலும் தீமைகள் வராது.*

*அவரவர் மனம் போன்றே, வினையைப் பொறுத்தே, பிள்ளைகளும், பேரப்பிள்ளைகளும் அமையும்.*

தன் பிள்ளைகள் பிஞ்சு விரல்களால் இறைக்கின்ற உணவு, அமிழ்தத்தைவிட இனிமையானது.

நம் பிள்ளைகள், நம்மைத் தொடும்போதும், நாம், நம் பிள்ளைகளைத் தொடும்போதும், நம் ஆழ்ந்த உடலுக்கு, மெய்யிற்கு இன்பம் உண்டாகின்றது. மேலும், அவர்களுடைய பேச்சு, காதுக்கு இன்பமாகின்றது.

தம் பிள்ளைகளின் மழலைச் சொற்களைக் கேட்டு இரசிக்காதவர்கள்தான், குழலின் இசையும், யாழின் இசையும் இனிமையானது என்பர்.

கற்றவர் சபையில், மகனைச் சிறப்புடன் இருக்கச் செய்வதுதான், தந்தை மகனுக்குச் செய்யும் நன்மை.

தம்மை விட, தம் பிள்ளைகள் மிகுதியான அறிவுடன் இருப்பது, உலகில் உள்ள எல்லாப் பெற்றோர்க்கும், இனிமை தரும்.

பெற்ற பொழுதைவிட, தன் மகன் அகவிடுதலை அடைந்தவன் எனக் கேட்க, தாய் மிகவும் ஆனந்தம் அடைவாள்.

மகன், தந்தைக்குச் செய்யும் உதவி, என்னவென்றால், 'இவனுடைய தந்தை, என்ன தவம் செய்தானோ, இப்படிப்பட்ட பிள்ளையைப் பெற!' என்று ஊரார் வியக்கும்படி, மகன் தூய அறிவைப் பெற வேண்டும்.

# 8. அன்புடைமை

*அன்புடைமை = அன்பு + உடைமை. அன்பு = அன் + ப் + உ. நெருங்கி மனம் வெளிப்படுதல். அன்பு = அல் + ப் + உ. அசைவற்ற மனம் வெளிப்படல். அம்பு = அம் + ப் + உ. தன்மை மனத்தது வெளிப்படல். அல்பு › அன்பு › அம்பு. (நல்மை › நன்மை › நம்மை) உடைமை = உடை + மை. புறத்தே ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாகும் தன்மை. அன்புடைமை = மனத்தின் அசைவற்ற தன்மையின் தொடர்ச்சி.*

**71. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்**
**புன்கணீர் பூச றரும்.**

**அன்பிற்கும் உண்டோ, அடைக்கும் தாழ்? ஆர்வலர்**
**புன் கணரீ பூசல் தரும்.**

*ஆர்வலர் = ஆர் + வல் + அர். பிரிந்தும் வலிமையானவர். ஆர்வலர் = ஆர்வம் + அல் + அர். விருப்ப அதிர்வைக் கொண்டவர்.*

*புன்கணீர் = புல் + கண்ணீர். விரைவாய் துளிர்த்த கண்ணீர்.*

*பூசல் = ப் + ஊச் + அல். கொண்டது நீள்புறத்தே சத்தமாய் மேலும் கீழுமாய். பொய்க் கோபச் சண்டை.*

*தரும் = உண்டாக்கும்.*

*பிரிந்து இருந்தும், அன்பு மிகுந்து, கட்டுப்படாமல், ஒருவரை ஒருவர் கண்டதும், விரைவாய்த் துளிர்க்கும் கண்ணீர், இருவர் கன்களிலும். அது, யார் கண்ணில் விரைவில் கண்ணீர் வந்தது, யார் கண்ணில் அதிகம் கண்ணீர் வந்தது, அதனால் யார் அன்பு உயர்ந்தது, என்று பொய்யான கோபத்துடன், சண்டையை உருவாக்கி விடும்.*

**72. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா**
**ரென்பு முரியர் பிறர்க்கு.**

**அன்பு இலார் எல்லாம் தமக்கு உரியர்; அன்பு உடையார்**
**என்பும் உரியர், பிறர்க்கு.**

*அன்பிலார், எல்லாம் தமக்குடையது என்பர். அன்புடையார் தன் எலும்பும் பிறர்க்கு உரியது என்பர். அன்புள்ளவர், அனைத்தையும், தன் எலும்பு உட்பட, உடல் முழுவதையும்கூட தரத் துணிவர். அன்பு தன்னலமற்றது, தன்னையும் தருவது, தன்னையே தருவது.*

**73. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்**
**கென்போ டியைந்த தொடர்பு.**

**'அன்போடு இயைந்த வழக்கு' என்ப-' ஆர் உயிர்க்கு**
**என்போடு இயைந்த தொடர்பு.**

*இயை = இ + ஐ. இருந்து ஐக்கியமாவது. ஒன்றி இயங்குவது.*

*வழக்கு = வழக்கம்.*

*ஆருயிர் = ஆர் + உயிர். பிரியும் உயிர். அருமையான உயிர்.*

*என்பு = எலும்பு.*

*அன்பும் உயிரும், ஒன்றுடன் ஒன்று ஒன்றி இயங்குவது வழக்கம். உயிரும் எலும்பும் (உடலும்) ஒன்றுடன் ஒன்று ஒன்றி இயங்குவதும் வழக்கம்.*

*எலும்பு இருந்தால்தான், ஒரு உயிர் உறுதியாக, இறுதியில் மனிதனாக, உயர முடியும். அன்பிருந்தால்தான், உயிர் உயர்ந்து, முழுமைபெற முடியும்.*

**74. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு**
**நண்பென்னு நாடாச் சிறப்பு.**

**அன்பு ஈனும், ஆர்வம் உடைமை; அது ஈனும்,**
**'நண்பு' என்னும் நாடாச் சிறப்பு.**

*ஆர்வம் = ஆர் + வ் + அம். பிரிந்து முழுமையாகும் தன்மை.*

*நாடா = ன் + ஆட் + ஆ. நெருங்கி ஒட்டித் தொடராத. தன்னலமற்ற.*

*நட்பு > நண்பு.*

*அன்பால் வருவது, ஒருவர்மேல் ஆர்வம், அவர் நலன் மேல் தொடர்ச்சியான அக்கறை. அதனால் பெறுவது, தன்னலம் அற்ற நட்பு.*

**75. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்**
**தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.**

**'அன்புற்று அமர்ந்த வழக்கு' என்ப-' வையகத்து**
**இன்புற்றார் எய்தும் சிறப்பு.**

*வையகம் = வை + அகம். அசையா மனம்.*

*எய்தும் = அடையும்.*

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கம் இன்மை. பிறப்பு அறுப்பு.*

*முன்னாளில், அன்புமயமாகத் தொடர்ந்து இருந்த வழக்கம்தான், பின்னாளில் புலனடக்கி, மனமடங்கி, உயிரோடு ஒன்றி, இன்புற்று, அன்பாகி, பிறப்பறுக்கும் வழியானது.*

**76. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.**

**'அறத்திற்கே அன்பு சார்பு' என்ப, அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை.**

*அன்பில்லார் அறம் செய்யலாகாது. அன்புடையார் தன்னலம் இல்லாதார். தன்னலம் இல்லாதாரே புலனடக்கம் எனும் அறத்தின் முதல் படியில் காலெடுத்து வைக்க முடியும். எனவே, அறம் அன்பைச் சார்ந்துள்ளது. இதை அறியாத மறவர் செய்யும் வினைகளுக்கும் அதே அன்பே காரணம். நாட்டின் மீதும், தன்மக்கள் மீதும் அன்பு இல்லையேல், மறவர்கள், தம் உடலையும் உயிரையும் இழக்கக்கூடிய, போருக்குச் செல்லத் துணிவார்களா?*

**77. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை அறம்.**

**என்பு இலதனை வெயில் போலக் காயுமே-
அன்பு இலதனை அறம்.**

*அறம் = இருத்தலின் இயல்பு விதி.*

*எலும்பு இல்லாத, அதனால் உறுதி பெறாத புழு போன்ற உயிரை, வெயில் தாக்கி வருத்துவது போன்று, அன்பில்லாமல் அறம் செய்ய முனைந்தால், புலனடக்க முயன்றால், முயற்சியில் முன்னேற்றம் காணமுடியாமல் வருந்துவர்.*

**78. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.**

**அன்பு அகத்து இல்லா உயிர் வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல்மரம் தளிர்த்தற்று.**

*அன்பகம் = அன்பு + அகம். அன்பு மனத்தின் உள்ளே.*

*வன்பாற்கண் = வல் + பால் + கண். இயக்கம் மிகுந்த, வெயில் மிகுந்த, கடுமையான பாலை நிலத்தில்.*

*வற்றன் = காய்ந்த, வற்றிய. சுருங்கிய.*

*தளிர்த்தற்று = தளிர்த்தல் + அற்று. தளிர்க்காது.*

*வெயில் மிகுந்த பாலை நிலத்தில், ஏற்கனவே வற்றிய மரத்தை நட்டால், துளிர்விடாமல் அழிந்துப்போவது போன்று, சோதனைகள் பல வரும் குடும்ப வாழ்க்கையில், மனத்தில் அன்பில்லாதவர்கள் இணைந்தால், போராடிப் போராடி, வாழ்வின் இன்பமும் பயனும் அடையாமல், அழிந்துப் போவர்.*

**79. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பில் லவர்க்கு.**

**புறத்து உறுப்பு எல்லாம் எவன் செய்யும்-யாக்கை
அகத்து உறுப்பு அன்பு இலவர்க்கு?**

*யாக்கை = இ + ஆக் + கை. இருந்து மெய்யாகி பிரிந்தது / ஐக்கியமானது. உடல்.*

*அகத்துறுப்பு = அகம் + உறுப்பு. உள் உறுப்பு.*

*உடலின் உள் உறுப்பாகிய அன்பு இல்லாதவர்கள், புற உறுப்புகளான, கண், வாய், கை, கால் மூலம் என்ன செய்துவிட முடியும். அன்பின்றி, மனமின்றிப் புற உறுப்புகளும் இயங்காது.*

**80. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.**

**அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு,
என்பு தோல் போர்த்த, உடம்பு.**

*அன்பின் வழியாகத்தான், உயிர் நிலை கொள்ளும், அசையாமையில், ஆனந்தம் அடையும். அன்பே உயிரின் இயல்பு. அன்பில்லாதவர், எலும்பைத் தோல் போர்த்திய உடம்புதான், வெறும் பிணம்!*

*அன்புடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*அன்பின் வெளிப்பாட்டைக் கட்டுப்படுத்த முடியாது. ஒருவரை ஒருவர் விரும்பியவர்களின் கண்களில், விரைந்து பெருகி வழியும் கண்ணீர், இருவரிடையே, யார் மிகுந்த அன்புடையவர், எனச் சண்டையை உருவாக்கி விடும்.*

*அன்பில்லாதவர்கள், எல்லாவற்றையும் தமதாக்கிக் கொள்ளப் பார்ப்பர். அன்புள்ளவர்களோ, எல்லாவற்றையும், எலும்பு உட்பட, தன் உடலையும் பிறருக்கு தருவர்.*

*எலும்பில்லாதது, உயரும் மனித உடலாகாதது போல, அன்பில்லாததும், முழுமையாகும், மெய்யுணர்வாகும் உயிராகாது. அன்பில்லாமல், ஞானம் இல்லை.*

*அன்பால் வருவது அக்கறை. அக்கறையால் வருவது, எதையும் எதிர்பார்க்காத நட்பு.*

*இடையறாது, அன்பாக இருத்தலே, இன்பத்திற்கும், பிறப்பு அறுப்பிற்கும், எளிமையான, இயல்பான, நேரடியான வழியாம்.*

*உயிரோடு ஒன்றுதல் எனும் அறத்திற்கே, அன்பு அடிப்படையாகும். இதை அறியாத போர்வீரர் செயலுக்கும், அதே அன்பே காரணம்.*

*எலும்பில்லாத உயிரை, வெயில் துடிக்கச் செய்வதுபோல், அன்பு இல்லாத மனிதரை, இருத்தலின் இயல்பு விதி, துன்புறுத்தும்.*

*பாலை நிலத்தில், மரம் தளிர்க்க முடியாதது போன்று, மனத்தில் அன்பு இல்லாத மனித உயிரின் வாழ்வும், துளிர்க்காது.*

*உடலின் உள் உறுப்பாகிய அன்பு இல்லாதவர்க்கு, புற உறுப்புகளால் பயனில்லை.*

*அன்பே, உயிரை நிலைபெறச் செய்யும். அன்பில்லாதவர், வெறும் பிணம்.*

## 9. விருந்தோம்பல்

*விருந்தோம்பல் = விருந்து + ஓம்பல். விருந்து = வ் + இருந்து. புறமும் அகமுமாய்த் தொடர்ந்து இருப்பவர். முழுமையானவர். மெய்யுணர்வாளர். ஓம்பல் = ஓம் + ப் + அல். முழுமையான அமைதியான மனம் ஆதல். விருந்தோம்பல் = மெய்யுணர்வாளரை முழுமனத்துடன் உபசரித்து, தியானித்தல்.*

**81. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.**

**இருந்து ஓம்பி இல் வாழ்வது எல்லாம் விருந்து ஓம்பி,
வேளாண்மை செய்தற்பொருட்டு.**

*இருந்தோம்பி = இருந்து + ஓம்பி. இருந்து = அமைதியாய் அமர்ந்து. ஓம்பி = ஓம் + ப் + இ. "ஓம்" எனும் ஒலியை மனத்தில் இருத்தி. முழுமையாய் இருக்கச் செய்து.*

*விருந்து = வ் + இருந்து. புறமும் அகமுமாய்த் தொடர்ந்து இருப்பவர். முழுமையானவர். மெய்யுணர்வாளர்.*

*வேளாண்மை = வ் + ஏள் + ஆண் + மை. வேள் = புறமும் அகமும் மிக உயர்ந்த மிகையாய், ஒளியாய். ஆண்மை = மிக நெருக்கமாகி அமைதியுறும் தன்மை.*

*செய்தல் = ச் + எய் + த் + அல். இயக்கம் உயர்ந்து தேக அதிர்வாய் இருத்தல். இயக்கம் உயர்ந்து தேக உணர்வற்று இருத்தல்.*

*பொருட்டு = காரணம்.*

*உடல் இயக்கமற்று, புலன்களை அவற்றின் வாயிலிலேயே அடைத்து, அமர்ந்து, "ஓம்" எனும் ஒலியை மனத்தில் இருத்தி, இல்வாழ்க்கை நடத்துவதன் காரணம், புறமும் அகமும் முழுமையாகி இருக்கும் மெய்யுணர்வாளர்களின் அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்பட்டு, அவர்கள் தொடர்ந்து அவ்வாறு இருக்கச் செய்யவும், தானும் அந்த மிக உயர்ந்த தன்மையான ஒளியாய் ஆகவுந்தான்.*

**82. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.**

**விருந்து புறத்ததாத் தான் உண்டல், சாவா
மருந்து எனினும், வேண்டற்பாற்று அன்று.**

*புறத்ததாத் = புறத்தே சென்றிருக்க.*

*சாவா = ச் + ஆவ் + ஆ. இயக்கம் ஆகாத. பிறப்பில்லாத. பிறப்பறுக்கும்.*

மருந்து = ம் + அருந்து. அமைதியை உருவாக்குவது. நோய் தீர்ப்பது.

வேண்டல் = விரும்புதல்.

பாற்று = மனத்தின் பிரிவு. எண்ணம்.

விருந்தான மெய்யுணர்வாளர், புறம் சென்றிருக்க, பிறப்பு எனும் நோய் தீர்க்கும், அமிழ்தம் எனும் மருந்தே கிடைத்தாலும், தான் (மட்டும்) விரும்பி உண்ணலாம், எனும் எண்ணம் தோன்றக்கூடாது.

**83. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுத லின்று.**

**வரு விருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
**பருவந்து, பாழ்படுதல் இன்று.**

வருவிருந்து = வருகின்ற மெய்யுணர்வாளர்

வைகல் = வை + கல். வை = வ் + ஐ. புறமும் அகமும், உடலும் மனமும் ஐக்கியமாகி. கல் = க் + அல். மெய்யின் அசைவின்மை. அசையாமை. வைகல் = உடலும் மனமும் அசையாமை. தியானம்.

பரு = ப் + அர் + உ. கொண்டது பிரிந்து புறமாதல். செல்வம் அழிதல்.

பாழ் = ப் + ஆழ். கொண்டதன் ஆழம். வறுமை.

உடலும் மனமும் அசையாமல் தியானம் செய்யும்போதும், மெய்யுணர்வாளர் வந்தால், உபசரிப்பவனின் வாழ்க்கையில், செல்வம் அழிந்து வறுமை ஏற்படுவது இல்லை.

**84. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து**
**நல்விருந் தோம்புவா னில்.**

**அகன் அமர்ந்து செய்யாள் உறையும்-முகன் அமர்ந்து**
**நல் விருந்து ஓம்புவான் இல்.**

அகனமர்ந்து = அகம் + அமர்ந்து. மனத்தில் நிலையாக. வீட்டில் தொடர்ந்து.

செய்யாள் = செய் + ஆள். செய் = ச் + எய். இயக்கம் உயர்ந்து உயிர்ப்புடன் இருத்தல். ஆள் = மிகையாதல். ஒளியாதல். திருமகள்.

உறை = உ + ற் + ஐ. உள்ளே பரந்து இருந்து ஐக்கியமாதல். தங்குதல்.

முகனமர்ந்து = முகம் + அமர்ந்து. முக அமைதியுடன். ஏதாவது கிடைக்கும் என்ற எதிர்பார்ப்போ அல்லது இருப்பது போய்விடுமோ என்ற கவலையோ / பயமோ இன்றி.

நல் = ன் + அல். அதிர்வுடன் நெருக்கமான.

ஏதாவது கிடைக்கும் என்ற எதிர்பார்ப்புள்ள ஆவலுடனோ அல்லது இருப்பது போய்விடுமோ என்ற கவலையோ / பயமோ இன்றி, முக அமைதியுடன், பிரபஞ்ச அதிர்வுடன் நெருக்கமான

*மெய்யுணர்வாளரை உபசரிப்பவனின் வீட்டின் உள்ளே, செல்வம் எனும் திருமகள், அகமலர்ச்சியுடன் விரும்பி நிலையாக தங்குவாள்.*

**85. வித்து மிடல்வேன்டுங் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சில் மிசைவான் புலம்.**

**வித்தும் இடல்வேண்டும் கொல்லோ-விருந்து ஓம்பி,**
**மிச்சில் மிசைவான் புலம்?**

*மிச்சில் = ம் + இச் + இல். அமைதி இயக்கமாய் இருக்கும் வீட்டில்.*

*மிசைவான் = ம் + இசை + வான். அமைதியுடன் / மௌனத்துடன் ஒன்றியவன். 'ம்' இசையாகி வெளியானவன்.*

*புலம் = புல் + அம். பயிர்த் தன்மை. நிலம்.*

*மெய்யுணர்வாளரை உபசரித்து, அவர்களால் வீட்டில் ஏற்பட்ட அமைதியுடன் ஒன்றியவனின் நிலத்தில், விதை விதைக்க வேண்டுமா என்ன?*

**86. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு.**

**செல் விருந்து ஓம்பி, வரு விருந்து பார்த்திருப்பான்**
**நல் விருந்து, வானத்தவர்க்கு.**

*வானத்தவர் = விண்தேகமானவர். வான் உடலானவர்.*

*செல்கின்ற மெய்யுணர்வாளர்களை உபசரித்துவிட்டு, வருகின்ற மெய்யுணர்வாளர்களை உபசரிக்க காத்திருப்பவன், விண்தேகமாய் அல்லது வான் உடலாய் இருப்பவர்களுக்கு, நல்ல விருந்தாவான்.*

**87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்**
**றுணைத்துணை வேள்விப் பயன்.**

**இனைத் துணைத்து என்பது ஒன்று இல்லை; விருந்தின்**
**துணைத் துணை-வேள்விப் பயன்.**

*துணை = த் + உண் + ஐ. தேகம் புறத்தே / உள்ளே மிக நெருங்கி ஐக்கியமாதல். உயிரோடு ஒன்றல். அளவு = அள் + அ + உ. மிகை உள்ளும் புறமும். ஒளிர்மை.*

*இனைத்துணை = இந்த அளவு.*

*துணைத்துணை = பெற்ற முதிர்ச்சியின் அளவு.*

*இந்த அளவுக்கு உபசரிக்க வேண்டும் எனும் நிலையான அளவு ஒன்றுமில்லை. என்ன செய்தாலும், மெய்யுணர்வாளரின் முதிர்ச்சிக்கு ஏற்றபடியே உபசரிப்புக்கான பலன் / அறவுரை / மந்திரம் (மன்திரம்) கிடைக்கும்.*

**88. பரிந்தோம்பிப் பற்றற்றோ மென்பார் விருந்தோம்பி**
**வேள்வித் தலைப்படா தார்.**

**'பரிந்து ஓம்பி, பற்று அற்றேம்' என்பர்- விருந்து ஓம்பி**
**வேள்வி தலைப்படாதார்.**

*பரிந்து = இரக்கப்பட்டு.*

*பற்றற்றோம் = சொத்து இழந்தோம்.*

*வேள்வி = முழுமையான உயர்ந்த ஒளிர்மை.*

*தலைபடாதார் = சிந்திக்காதவர். மனமடங்கி தியானம் செய்யாதவர்.*

*இரந்தவர்க்கும் உறவினர்க்கும் மனமிரங்கி உபசரித்து சொத்தெல்லாம் இழந்தோம் என்பர், மெய்யுணர்வாளரை உபசரித்து, மனமடங்கித் தியானம் செய்யாதவர்கள்.*

*மெய்யுணர்வாளர், உபசரிப்பவரின் தகுதிக்கும், வளத்திற்கும் பொருத்தமான உபசரிப்பையே ஏற்பர். ஆடம்பரத்தை விரும்பார். எதையும் வேண்டார். மனம் உவந்து கொடுப்பதை மட்டுமே ஏற்பர். இரப்பவர்களுக்கும் உறவினர்க்கும் எவ்வளவு தந்தாலும் போதாது.*

*உபசரிப்பவரின் நலனையே சிந்திப்பவர், மெய்யுணர்வாளர். அறிவுரையும் அறவுரையும் வழங்குவர். உபசரிப்பவரின் முன்னேற்றத்திற்கான வழிகளைக் கூறுபவர்களே மெய்யுணர்வாளர். உறவினர்கள்?*

**89. உடமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா**
**மடமை மடவார்க ணுண்டு.**

**உடைமையுள் இன்மை விருந்து ஓம்பல் ஓம்பா**
**மடமை; மடவார்கண் உண்டு.**

*உடமை = உட் + அம் + ஐ. புறத்தே ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமான தன்மை. செல்வம்.*

*இன்மை = இல் + மை. இல்லா வண்ணம். இருள். வறுமை.*

*மடமை = மடம் + ஐ. மடம் = ம் + அட் + அம். கொண்டு மூடி ஒட்டித் தொடரும் தன்மை. திறவாமை. ஈயாமை. தராமை. பெறாமை. அறியாமை.*

*மடவார் = மடம் + ஆர். மனம் பிரியார். எண்ணாதவர். முட்டாள்.*

*மெய்யுணர்வாளர்களுக்கு உபசரிப்பைச் செய்யாத, அறிவில்லாத முட்டாள்களிடம், செல்வம் இருந்தாலும் அது வறுமையே.*

**90. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து.**

**மோப்பக் குழையும், அனிச்சம்;-முகம் திரிந்து**
**நோக்கக் குழையும், விருந்து.**

மோப்பம் = ம் + ஓப் + அம். கொண்டு மூடியதை முழுமையாய்க் கொள்ளும் தன்மை. மணத்தை முகர்தல்.

குழை = க் + உ + ழ் + ஐ. பொருண்மை புறத்தே / உள்ளே கீழே ஐக்கியமாதல். வாடி உதிர்தல்.

அனிச்சம் = அன் + இச் + அம். நெருங்கிய இயக்கம் இருக்கும் தன்மை. மென்மை.

அனிச்ச மலர், முகர்ந்தாலே வாடி உதிர்ந்துவிடும் மென்மையை உடையது. அதனினும் மென்மையான மெய்யுணர்வாளரோ, முகம் மாறிப் பார்த்தாலே, மனம் நொந்து உடைந்து விடுவர்.

விருந்தோம்பல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

இடம் பெயராமல், ஓரிடத்திலேயெ தொடர்ந்து இருந்து, கொண்ட உறவையும், பொருளையும் காத்து, இல்வாழ்க்கை நடத்துவது, ஞானிகளின் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றி, தானும் அந்த ஒளியாட்சியைப் புரியத்தான்.

விருந்தினர் வெளியே சென்றிருக்க, அமிழ்தமே என்றாலும், தாம் மட்டும் உண்ணலாம், என நினைக்கக் கூடாது.

தான் தியானத்தில் இருக்கும்போதும், மெய்யுணர்வாளர் வந்தால், அவரை உபசரிப்பவனின் வாழ்வில், செல்வம் அழியாது, வறுமை வாராது.

முகமலர்ச்சியுடன் மெய்யுணர்வாளரை உபசரிப்பவனின் வீட்டில், இலட்சுமி அகமலர்ச்சியுடன் தொடர்ந்து இருப்பாள், செல்வம் செழிக்கும்.

மெய்யுணர்வாளரை உபசரித்து, அமைதி நிரம்பிய வீட்டில், 'ம்' இசையாகி விண்வெளியானவனின் நிலத்தில், விதை விதைக்க வேண்டியதில்லை. அவனுக்குத் தேவையானவை, தாமாக வந்து சேரும்.

செல்கின்ற மெய்யுணர்வாளர்களை உபசரித்துவிட்டு, வருகின்ற மெய்யுணர்வாளர்களை உபசரிக்க காத்திருப்பவன், விண்தேகமாய் அல்லது வான் உடலாய் இருப்பவர்களுக்கு, நல்ல விருந்தாவான்.

விருந்தினரின் குறிப்புகளால், தகுதி அறிந்து உபசரிக்க வேண்டும். தொடர்ச்சியான விழிப்புநிலை அவசியம். அவமரியாதைச் செய்யவும் கூடாது. ஏமாறவும் கூடாது. அவற்றால், பின்னர் வருந்தவும் கூடாது.

இரக்கப்பட்டு சொத்தெல்லாம் இழந்தோம் என்பர், விருந்தினரை உபசரித்துவிட்டு, தியானம் செய்யாதவர்கள்.

மெய்யுணர்வாளர்களுக்கு உபசரிப்பைச் செய்யாத, அறிவில்லாத முட்டாள்களிடம், செல்வம் இருந்தாலும் அது வறுமையே.

முகர்ந்தால் வாடும் அனிச்ச மலர். தூரத்தில், முகம் மாறிப் பார்த்தாலே, விருந்தினர் வாடி விடுவர்.

## 10. இனியவை கூறல்

*இனியவை = இனி + அவை. இனிமையானவை. கூறல் = க் + ஊற் + அல். மெய், பொருண்மை நீள் புறத்தே பிரிதல். இனியவை கூறல் = இனிமையானவற்றை வெளிப்படுத்தல்.*

**91. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாம்**
**செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.**

**இன் சொல்-ஆல் ஈரம் அளைஇ, படிறு இலஆம்**
**செம்பொருள் கண்டார் வாய்ச் சொல்.**

*இன்சொலால் = இனிய சொல்லால்.*

*ஈரமளைஇ = ஈரம் + அளை + இ. கருணை மிகுந்து இருத்தல்.*

*படிறு = ப் + அடி + ற் + உ. மனத்தின் அளவு அறுந்து வெளிப்படல். மனத்தின் தொடர்ச்சி அறுந்து வெளிப்படல். பொய்மை.*

*செம்பொருள் = செம் + பொருள். செம் = ச் + எம். இயக்கம் உயர்ந்து அமைதியாதல். பொருள் = ப் + ஓர் + உள். மனம் ஒன்றாய் உள்ளிருத்தல். செம்பொருள் = இயக்கம் உயர்ந்து அமைதியுற்று மனம் ஒருமையாதல். மெய்யுணர்வு.*

*மெய்யுணர்ந்தவர், வாய்ச்சொல் இன்றி, மௌனமாக தொடர்பு கொள்வர். பேசினால், மெய்யுணர்ந்தவரின் வாய்ச் சொல், இனிமையாகவும், கருணை மிகுந்தும், பொய்மை இன்றியும் இருக்கும். மெய்யுணர்வாளரின் இலக்கணங்களில் ஒன்றாக இதைக் கருதலாம்.*

**92. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்**
**தின்சொல னாகப் பெறின்.**

**அகன் அமர்ந்து ஈதலின்**
**இன்சொலன பெறின்.**

*அகனமர்ந்து = அகம் + அமர்ந்து. தன்னலத்துடன். மனம் நிலையாக. தடுமாற்றமின்றி. தயக்கமின்றி. குழப்பமின்றி.*

*ஈதலின் = தருவதைவிட*

*முகனமர்ந்து = முகம் + அமர்ந்து. முக அமைதியுடன். ஏதாவது கிடைக்கும் என்ற எதிர்பார்ப்போ அல்லது இருப்பது போய்விடுமோ என்ற கவலையோ / பயமோ இன்றி.*

*தான் உழைத்து ஈட்டிப் பாதுகாத்தப் பொருளை பிறருக்கு தந்துவிட மனம் எளிதில் ஒப்புவதில்லை. அதுவும், வருத்தமோ எதிர்பார்ப்போ இன்றி, அமைதியான மனத்துடன் தருவது பலருக்கும் எளிதல்ல. ஆனால், முக அமைதியுடன் இனிமையான சொற்களைக் கூறுவது கடினமல்ல. அதையும் பலர் செய்ய தயங்குகின்றனர். (சிரித்துப் பேசிவிட்டால்,*

*அடுத்து பொருளைக் கேட்டுவிடுவரோ எனும் பயம் வந்துவிடுகின்றது போலும்.)*

*தான், தனது எனும் பொய்மைகள், எளிதாக மனிதனைவிட்டு விலகுவதில்லை. தொடர்ச்சியான புலனடக்க முயற்சியும், பயிற்சியும்தான், அப்பொய்மைகளை விலக்குவதற்கான வழிமுறைகள்.*

**93. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்**
**இன்சொலி னஃதே யறம்.**

**முகத்தான் அமர்ந்து, இனிது நோக்கி, அகத்தான் ஆம்**
**இன் சொலினதே-அறம்.**

*அகத்தானாம் = அகம் + தான் + ஆம்.*

*அமைதியான முகத்துடன், இனிமையாக நோக்கி, அகமும் மனமும் ஒன்றி இனிமையான சொற்களைக் கூறுவதே உடலையும் மனத்தையும் பிரிவதாகும் / உயிரோடு ஒன்றுதலாகும்.*

**94. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்**
**இன்புறூஉ மின்சொ லவர்க்கு.**

**துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும்-யார் மாட்டும்**
**இன்புறூஉம் இன்சொலவர்க்கு.**

*துன்புறூஉந் = துன்பம் + உறு + ஊ + உம்.*

*துவ்வாமை = த் + உவ் + ஆமை. தேகம் அகம் புறம் ஆகாமை. தேகத்தின் புலன்கள் இயங்காமை. நோய் அல்லது வறுமை.*

*இன்புறூஉம் = இன்பம் + உறு + ஊ + உம்.*

*எல்லோரிடத்தும், இன்பம் பற்றித் தொடரும் இனிமையான சொற்களைப் பேசுபவரிடம், துன்பம் பற்றித் தொடரும் நோய் அல்லது வறுமை இல்லாமல் போகும்.*

**95. பணிவுடைய னின்சொல னாதல் லொருவற்**
**கணியல்ல மற்றுப் பிற.**

**பணிவு உடையன், இன் சொலன் ஆதல் ஒருவற்கு**
**அணி; அல்ல, மற்றுப் பிற.**

*அணி = அண் + இ. மிக நெருங்கி இருத்தல்.*

*பணிவு உடையவன் இனிய சொல் கூறுபவனாய் இருந்தால், அதுவே அவனுக்கு அழகிய ஆபரணம் போன்றதாகும். பொருளாலான மற்ற ஆபரணங்கள் எதுவும் அவனுக்குத் தேவையில்லை. அவனுடைய இனிய சொல்லுக்கு முன், பொருளாலான ஆபரணங்கள் அழகும் மதிப்பும் இழந்து நிற்கும்.*

**96. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை**
**நாடி யினிய சொலின்.**

**அல்லவை தேய அறம் பெருகும்-நல்லவை**
**நாடி, இனிய சொலின்.**

*அல்லவை = அல் + அவை. துன்பம். குழப்பம். நிலையில்லாமை. தேவையற்றவை. அழிவைத் தருபவை. தீயவை.*

*நல்லவை = நல் + அவை. நல் = ன் + அல். நெருங்கிய அதிர்வு / இயக்கம். ஆக்கம் தருபவை.*

*நாடி = ன் + ஆட் + இ. நெருங்கி ஒட்டித் தொடர்வதாய் இருத்தல். விரும்பி. கருதி.*

*பிறருக்கு ஆக்கம் தருவனவற்றைக் கருதி இனிமையாகச் சொன்னால், துன்பம் தரும் தீயவைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறையும், உயிரோடு ஒன்றலால் வரும் இன்பம் பெருகும்.*

**97. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று**
**பண்பிற் றலைப்பிரியாச் சொல்.**

**நயன் ஈன்று நன்றி பயக்கும்-பயன் ஈன்று**
**பண்பின் தலைப்பிரியாச் சொல்.**

*நயம் = ன் + அய் + அம். நெருக்கமாய் இருக்கும் தன்மை.*

*ஈன்று = தந்து.*

*நன்றி = நல் + ற் + இ. நல் = ன் + அல். நெருங்கிய அதிர்வு / இயக்கம். நன்றி = நெருங்கிய அதிர்வை(யும்) பிரிந்து இருத்தல்.*

*பயக்கும் = ப் + அய் + அக் + உம். அகம் உயிர்ப்புடன் மெய்யின்றி வெளிப்படும் தன்மை.*

*பயன் = ப் + அய் + அன். கொண்டதன் உயிர்ப்புத் தன்மை.*

*பண்பு = ப் + அண் + ப் + உ. அகம் மிக நெருங்கிக் கொண்டு வெளிப்படல். இனிமை.*

*தலைப்பிரியா = எண்ணத்திலிருந்து மாறுபடாத. மனம் ஒன்றிய.*

*மனத்தில் இனிமையுடன் தோன்றி அதே இனிமையுடன் வெளிப்படும் சொல், உயிர்ப்புத் தன்மையுடன் இருப்பதால், தன் பயனைத் தரும், அதைக் கேட்பவர்க்கு. அதைச் சொன்னவருக்கோ உயிரோடு நெருக்கம் ஏற்படும், பின்னர், அவர்தம் அகவெளி உயிர்ப்புடையதாகி, மெய்யின்றி, அசையாமையில் நிலைக்கும்.*

**98. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு**
**மிம்மையு மின்பந் தரும்.**

**சிறுமையுள் நீங்கிய இன்சொல், மறுமையும்**
**இம்மையும், இன்பம் தரும்.**

*உணீங்கிய = உள் + நீங்கிய.*

*உள்ளத்தில் சிறுமை இன்றித் தோன்றிய இனிமையான சொல், இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் இன்பம் தரும்.*

**99. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ**
**வன்சொல் வழங்கு வது.**

**இன் சொல் இனிது ஈன்றல் காண்பான், எவன்கொலோ-**
**வன் சொல் வழங்குவது?**

*இனிமையான சொல், நன்மையும் இன்பமும் தருவதைக் காண்பவன், ஏன்தான் மனம்புண்படும் சொல்லைக் கூறுகிறானோ? தெரியவில்லை.*

**100. இனிய வுளவாக வின்னாது கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.**

**இனிய உளவாக இன்னாத கூறல்-**
**கனி இருப்ப, காய் கவர்ந்தற்று.**

*மனத்தில் இனிமையான சொற்கள் இருக்கும்போது, இனிமையற்ற சொற்களைக்கூறுதல், கனிந்த இனிக்கும் பழத்தைவிட்டுவிட்டு, துவர்க்கும், புளிக்கும் காய்களின்மேல், நாட்டம் செல்வது போலாகும்.*

*இனிமையான சொற்கள் இருக்கும்போது, இனிமையற்ற சொற்களைக் கூறுதல், பழம் இருக்கும்போது, காய்க்கு ஆசைப்படுவது போலாகும்.*

*இனியவை கூறல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*மெய்யுணர்ந்தவர், கருணையுடன், ஒளிர்மையுடன், இனிமையாகப் பேசுவர், அவர்கள், பொய்மை இல்லாதவர். இவையே, ஞானியின் இலக்கணம்.*

*தன்னலத்துடன், பொருளைத் தருவதைக் காட்டிலும், அமைதியான முகத்துடன், இனிமையான சொற்களைக் கூறுவது நல்லது.*

*அமைதியான முகத்துடன், இனிமையாக பார்த்து, அகமும் மனமும் ஒன்றி, இனிமையான சொற்களைக் கூறுவதே, உயிரோடு ஒன்றுதல் எனும் அறமாகும்.*

*எல்லோரிடமும், இன்பம் தரும், இனிமையான சொற்களைப் பேசுபவர்களுக்கு, துன்பம் தரும் வறுமை, வராது.*

*பணிவு உடையவன், இனிமையாக பேசுபவன் என்பதே ஒருவருக்கு அழகைக் கூட்டும் அணிகலன்களாம். பொருளாலான அணிகலன்கள், அழகல்ல.*

ஆக்கம் தருவனவற்றை எண்ணி, இனிமையாகப் பேசினால், தீயகுணங்கள் அழிந்து, உயிரோடு ஒன்றும் இன்பம் பெருகும்.

இனிமையாக நினைத்து இனிமையாகக் கூறல், உயிரின் கூற்றாகும். அது, பிறருக்கு நன்மை பயப்பதோடு, தன்னையும் மெய்யுணர்வுக்கு இட்டுச் செல்லும். உயிரின் இயல்பு அன்பு மட்டுமல்ல, இனிமையுமாகும்.

உள்ளத்தில் சிறுமை இன்றித் தோன்றிய இனிமையான சொல்,

இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் இன்பம் தரும்.

இனிமையான சொற்கள் இருக்கும்போது, இனிமையற்ற சொற்களைக் கூறுதல், பழம் இருக்கும்போது, காய்க்கு ஆசைப்படுவது போலாகும்.

இனிமையான சொல், நன்மையும் இன்பமும் தருவதைக் காணும் எவனாவது, மனம்புண்படும் சொல்லைக் கூறுவானா?

# 11. செய்ந்நன்றியறிதல்

*செய்ந்நன்றியறிதல் = செய் + நன்றி + அறிதல். செய்த நன்மையை, உதவியை நினைத்துப் பார்த்தல்.*

**101. செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.**

**செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.**

*செய்யாமல் செய்தல் = தாம் செய்கிறோம் என்ற உணர்வே இல்லாமல், நல்வினை அல்லது தீவினை என்ற பாகுபாடில்லாமல், எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல், இயல்பாக யதேச்சையாகத் தன்முனைப்பின்றிச் செய்தல்.*

*உதவி = உ + தவி. புறம் / முன்செல்லல் தவிப்பவர்க்கு.*

*வையகம் = வை + அகம். அசையாத மனம் உடைய யோகிகள்.*

*வானகம் = வான் + அகம். விரிந்த மனம் உடைய ஞானிகள்.*

*ஆற்றல் அரிது = செய்வது கடினம்.*

*தாம் செய்கிறோம் என்ற உணர்வே இல்லாமல், நல்வினை அல்லது தீவினை என்ற பாகுபாடில்லாமல், எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல், இயல்பாக யதேச்சையாகத் தன்முனைப்பின்றிச் செய்த (இறைத்தன்மையுடைய) உதவியை, (அசையாமையில் நிற்கும் யோகிகளும், பரந்த மனமுடைய ஞானிகளும் கூட செய்வது கடினம்) நிலையான உலகமும் பரந்த வானும் சேர்ந்தும் கூட ஈடு செய்ய முடியாது.*

**102. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.**

**காலத்தினால் செய்த நன்றி சிறிது எனினும்,
ஞாலத்தின் மாணப் பெரிது.**

*காலத்தினால் = சரியான நேரத்தில். நெருக்கடியான சமயத்தில். உயிர்போய்விடக்கூடிய சந்தர்ப்பத்தில். மானம்போகும் நிலையில்.*

*நன்றி = நன்று + இ. நன்று இருத்தல். நன்மையாய் இருத்தல். உதவி.*

*ஞாலம் = ன் + ச் + ஆல் + அம். நெருங்கிய இயக்கமும் உறுதியுமான தன்மை. உலகம்.*

*மாணம் = ம் + ஆண் + அம். கொண்டு மூடி மிக நெருங்கிய தன்மை. கனம்.*

*தக்க சமயத்தில் செய்த உதவி சிறிதென்றாலும், அது உலகத்தின் நிறையைக் காட்டிலும் பெரியது.*

**103. பயன்றூக்காச் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது.**

**பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்,
நன்மை கடலின் பெரிது.**

*பயன்றூக்கா = பயன் தூக்காமல். தனக்கு வரும் பயனை எண்ணாமல்.*

*நயன்றூக்கின் = நயன் தூக்கினால். நெருங்கிய தன்மை / அன்புடைமையை எண்ணிப்பார்த்தால்.*

*நன்மை = நல் + மை. நல்ல தன்மை. நல்ல எண்ணம் / மனம்.*

*தனக்கு கிடைக்கும் பயனைக் கருதாமல் செய்த உதவியின் அன்புடைமையை எண்ணிப்பார்த்தால், அதன் நல்ல தன்மை, கடலைவிட பெரியதாகும். கடலும் பயனைக் கருதாமல், நீரை ஆவியாக்கி, மேகமாக்கி, மழையாகப் பொழிகின்றது. இயல்பிலேயே கடலின் குணம் அத்தகையது. ஆனால், பொதுவாக மனித மனம் எதிர்பார்ப்புடன் செயல்படுவது. அப்படிப்பட்ட மனம், பயன் கருதாமல் உதவி செய்தால், அது கடலைவிட பெரியதுதானே?*

**104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாய்க்
கொள்வர் பயன்றெரி வார்.**

**தினைத் துணை நன்றி செயினும், பனைத் துணையாக்
கொள்வர்-பயன் தெரிவார்.**

*ஒருவர், சிறுதானிய தினை போன்ற சிறிய அளவு உதவியைச் செய்தாலும், அதன் மூலம் தனக்குக் கிடைக்கும் தொடர்ச்சியான பலன்களை எண்ணிப்பார்த்து, அவ்வுதவியை, பலவகையிலும் தொடர்ந்து பயன்தரும் உயர்ந்த தாவரமான, பனையைப் போன்று கருதுவர், நன்றியுடையவர்.*

**105. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.**

**உதவி வரைத்து அன்று, உதவி:உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.**

*சால்பு = ச் + ஆல் + ப் + உ. இயக்கம் விரிந்து உறுதியாய்க் கொண்டுள்ள தன்மை. பரந்த மனம். விசாலம்.*

*உதவியின் அளவைப் பொறுத்துப் பிரதி உதவி / பதில் உதவி அமைவதில்லை. அது, முதலில் உதவி பெற்றவரின் மன விசாலத்தைப் / பெருந்தன்மையைப் பொறுத்தது.*

*அளவுக்கு அளவு கணக்காய் தருவது ஒரு வகை. பெற்ற அளவைக் காட்டிலும் அதிகமாய் தருவது மற்றொரு வகை. பெற்ற உதவியின் அருமை*

*பாராட்டி, அளவின்றி, வேண்டும் அளவுக்குத் தருவது பிரிதொரு வகை. இவை யாவும், நன்றி பாராட்டுபவரின் மனத்தின் பரந்த தன்மையைப் பொறுத்தது.*

**106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க**
**துன்பத்துட் டுப்பாயார் நட்பு.**

**மறவற்க, மாசு அற்றார் கேண்மை; துறவற்க,**
**துன்பத்துள் துப்பு ஆயார் நட்பு.**

*மாசு = ம் + ஆச் + உ. கொண்டு மூடியது இயக்கமாகி வெளிப்படும் தன்மை. மனம் சலனமாகும் தன்மை. நிலையில்லாமை. மாசற்றார் = அசையாமையில் உறைந்தவர். நிலைபேறு அடைந்தவர். ஞானியர்.*

*கேண்மை = கேள் + மை. கேள் = க் + ஏள். மெய்யின் மிக உயர்ந்த மிகை / ஒளி. மெய்யொளி.*

*துப்பு = த் + உப் + உ. தேகத்தின் புறத்தே கொண்டு வெளிப்படும் தன்மை. உதவி.*

*ஞானியரின் மெய்யொளியை மறவாதே. அது, இவ்வாழ்விலும், பிறப்பு அறுக்கவும் தொடர்ந்து உதவும். அதே போன்று, துன்பக் காலத்தில் உதவியவரின் நட்பையும் விட்டுவிடாதே. நிலையற்ற வாழ்வில், மீண்டும் துன்பம் வரலாம். அப்பொழுது, கைவிடாத அந்நட்பு மீண்டும் உதவலாம்.*

*துன்பக் காலத்தில் உதவியவர், மதிப்பிலும் மரியாதையிலும், ஞானிக்கு ஒப்பாவர்.*

**107. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்**
**விழுமந் துடைத்தவர் நட்பு.**

**எழுமை எழு பிறப்பும் உள்ளுவர்-தம்கண்**
**விழுமம் துடைத்தவர் நட்பு.**

*எழுமை = எழு + மை. உயரும் தன்மை.*

*எழுபிறப்பு = வருகின்ற / மறு பிறப்பு.*

*உள்ளுவர் = உள் + உவ் + அர். உள்ளே வடிவமுடன் இருத்துவர். நினைப்பர்.*

*தங்கண் = தன் + கண். தன்னுடைய கண்ணில்.*

*விழுமம் = விழும் + அம். தூசி / துகள் / மணல். விழக்கூடிய பொருள்.*

*துடைத்தவர் = துடை + த் + அவர். துடை = த் + உட் + ஐ. தேகத்தின் புறத்தே ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாதல் (உயிர்ப்புடன் இயங்கல்). துடை = த் + உடை. தேகத்தின் உடை. துடைத்தவர் = தடுத்தவர், விலக்கியவர், நீக்கியவர்.*

*தன் கண்ணில் விழுந்த தூசியை நீக்க தன் கைகள் விரைவதுபோல், தனக்கு நேர்ந்த துன்பத்தை நீக்க இயல்பாக, விரைவாக முன்வந்தவரின் நட்பை, உயர்வை, பெறும் மறுபிறப்பிலும் நினைப்பர், நன்றியுடையோர்.*

**108. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லா**
**தன்றே மறப்பது நன்று.**

**நன்றி மறப்பது நன்று அன்று: நன்று அல்லது**
**அன்றே மறப்பது நன்று.**

*ஒருவர் செய்த உதவியை மறப்பது நல்லது அல்ல. அவரே தீமையைச் செய்தால், அதை அன்றே மறப்பது நல்லது. ஒருவரது உதவியை மறத்தலும், அவரது தீமையை நினைத்தலும், அவர் துன்பப்படும்போது பதிலுக்கு உதவாமல் தடுத்துவிடும். தனக்கு உதவி செய்தவனுக்குத் தான் உதவவில்லையே எனும் நீங்காத பழிவந்து சேர்ந்துவிடும். மனம் குமையும். நிம்மதி குலையும். குற்ற மனப்பான்மை வாட்டும். பிறப்புகளுக்கு வழிவகுக்கும்.*

**109. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த**
**ஒன்றுநன் றுள்ளக் கெடும்.**

**கொன்றன்ன இன்னா செயினும், அவர் செய்த**
**ஒன்று நன்று உள்ள, கெடும்.**

*ஒருவர் கொல்வது போன்ற தீமையை தனக்குச் செய்தாலும், அவர் முன்னாளில் செய்த உதவியை நினைத்துப் பார்க்க, அவரை எதிர்க்கும் எண்ணம் அழியும்.*

**110. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு.**

**எந் நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம்; உய்வு இல்லை,**
**செய் நன்றி கொன்ற மகற்கு.**

*உய்வு = உய் + உ. உய் = உள்ளே உயிர்ப்புடன் இருத்தல். உள்ளே நிலையாய் இருத்தல். குற்ற உணர்வு. உய்வு = குற்ற உணர்வு வெளிப்படுதல்.*

*செய் = ச் + எய். இயக்கத்தில் உயர்ந்து உயிர்ப்புடன். எதிர்பார்ப்பின்றி. அன்புடன்.*

*எந்த உதவியை மறந்தவரும், தன் குற்ற உணர்வைப் போக்கிவிட வழியுண்டு. ஆனால், அன்புடன் எந்த எதிர்பார்ப்பும் இன்றிச் செய்த உதவியை மறந்த மனிதனுக்கு, குற்ற மனப்பான்மையிலிருந்து மீள வழியே இல்லை. இப்பிறப்பும், வரும்பிறப்பும் அது உள்நின்று வருத்தும்.*

*செய்ந்நன்றியறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*எதிர்பார்ப்பின்றிச் செய்த உதவிக்கு, மண்ணும் விண்ணும் கூட, யோகியும், ஞானியும் கூட ஈடு செய்ய முடியாது.*

*தக்க சமயத்தில் செய்த உதவி, சிறிதென்றாலும், அது, உலகத்தை விட பெரியது.*

*பிரதிபலனை நினைக்காமல் செய்த உதவியின் அன்பை, நிறுத்திப் பார்த்தால், அந்த மனம், கடலைவிடப் பெரியது.*

*உதவியின் பயன் அறிந்தவர், ஒருவர் தமக்கு சிறிதளவு உதவி செய்தாலும், அதைப் பெரியதாக நினைப்பர்.*

*உதவி அளவிட முடியாதது. உதவி உதவிதான். அது கிடைக்காமல் போயிருந்தால், இரக்க வேண்டியதாய் அல்லது இறக்க வேண்டியதாய்ப் போயிருக்கும். பிரதி உதவி, உதவி பெற்றவரின் மன விசாலத்தைப் பொறுத்தது.*

*மறக்காதே ஞானியரின் சொல்லை. விட்டுவிடாதே, ஆபத்தில் உதவியரின் நட்பை.*

*உதவியின் அருமையை உணர்ந்தவர், தன் வறுமையை நீக்கியவரின் நட்பை, உயரும் தன்மையை உடைய மறுபிறப்பிலும், மறக்காமல் நினைத்துப் பார்ப்பர்.*

*பிறர், தமக்குச் செய்த உதவியை, மறப்பது நல்லதல்ல. நல்லது அல்ல, என்று அறிந்தவற்றை, அப்பொழுதே மறந்து விடுவது, நல்லது.*

*ஒருவர், கொல்வது போன்ற தீமையை, தனக்குச் செய்தாலும், அவர் செய்த உதவியை நினைத்துப் பார்க்க, அவரை எதிர்க்கும் எண்ணம் மறைந்து விடும்.*

*வேறெந்த நன்மை செய்தவரை மறந்தாலும், மீண்டும் பிறப்பதிலிருந்து தப்பிக்கும் வழியுண்டு. ஆனால், உதவி செய்தவருக்குத், தேவைப்படும்போது, உதவி செய்யாமல் போனால், மீண்டும் பிறப்பதிலிருந்து தப்பிக்கவே முடியாது.*

# 12. நடுவு நிலைமை

*நடுவு = நடு + உ. நெருங்கி ஒட்டித் தொடர்ந்து வெளிப்பட்டு விலகி நிற்றல். நிலைமை = நிலை + மை. உறுதி, அசையாமை. நடுவு நிலைமை = நெருங்கி ஒட்டித் தொடர்ந்து வெளிப்பட்டு விலகி உறுதியாய் நிற்றல். வழக்கை நெருக்கமாக தொடர்ந்து கவனித்து, தன் விருப்பு வெறுப்பிலிருந்து விலகி, உறுதியாய் இருத்தல்.*

**111. தகுதி யெனவொன்றும் நன்றே பகுதியான்**
**பாற்பட் டொழுகப் பெறின்.**

**தகுதி என ஒன்று நன்றே - பகுதியான்**
**பாற்பட்டு ஒழுகப்பெறின்.**

*தகுதி = த் + அக் + உதி. தேகம் உயிருடனும் மெய்யுடனும் (ஒன்றி) வெளிப்படுதல்.*

*பகுதி = துண்டு. முழுமையற்றது.*

*பால் = ப் + ஆல். கொண்டது விரிந்து பரவி உறுதியாய் நிலைத்தல். தன்மை. முழுமை. விதி.*

*பட்டு = ப் + அட் + உ. கொண்டது ஒட்டித் தொடர்ந்து வெளிப்படல். அறிந்து.*

*வழக்கின், கட்சிகளின், பகுதி விவரங்களைக் கொண்டு, முழுமையான உண்மையை அறிந்து, முழுமையாகவும் ஆழமாகவும் வெளிப்படுத்த வேண்டுமென்றால், ஒருவர், தன்னுடைய உயிருடனும் மெய்யுடனும் ஒன்றியிருப்பது நல்லது.*

**112. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி**
**எச்சத்திற் கேமாப் புடைத்து.**

**செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவுஇன்றி,**
**எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.**

*செப்பம் = ச் + எப் + அம். இயக்கத்தின் உயர்ந்த கொள்ளும் தன்மை. இயங்கும் உயர்ந்த எண்னம். நடுவு நிலைமை. பாரபட்சம் அற்றத் தன்மை. உணர்ச்சி வசப்படாமல், எண்ணத்தில் உயர்தல்.*

*ஆக்கம் = ஆக் + அம். பொருளாக்கிய தன்மை. செல்வம். சொத்து.*

*சிதைவு = ச் + இத் + ஐ + உ. இயக்கம் / இருத்தல் தேகம் / வடிவம் இன்றி ஐக்கியமாகி (கலந்து) வெளிப்படல். உருமாறி அழிதல்.*

*எச்சம் = எச் + அம். உயரும் இயக்கத் தன்மை. தன்னிலிருந்து எழுவது / பிறப்பது. மக்கள். பிள்ளைகள்.*

*ஏமாப்பு = ஏம் + ஆப் + உ. மிக உயர்ந்த மனத்தையும், செல்வத்தையும் வெளிப்படுத்தும். பாதுகாப்பு.*

உடைத்து = உடை + த் + உ. புறத்தே / உடன் தொடர்ந்து வடிவமாய் வெளிப்படும். தொடர்ந்து இருக்கும்.

உணர்ச்சி வசப்படாமல், எண்ணத்தில் உயர்ந்து, உறுதியில் அசையாது, நடுவு நிலை வகிப்பவர் ஈட்டிய சொத்து, உருமாறி அழியாமல், அவருடைய காலமின்றி, அவருடைய பிள்ளைகளின் காலத்திலும், மிக உயர்ந்த பாதுகாப்பையும், செல்வத்தையும் தொடர்ந்து அளிக்கும்.

**113. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை**
**அன்றே ஒழிய விடல்.**

**நன்றே தரினும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை**
**அன்றே ஒழியவிடல்.**

இகந்து = இகழ்ந்து. முழுவதுமாய் மறந்து. விட்டு.

ஆக்கம் = எண்ணம். முடிவு.

நடுநிலை விட்டு எடுக்கும் முடிவு, நல்லதைத் தந்தாலும், அந்நினைவு உடனே அழிந்துப் போய்விட வேண்டும்.

**114. தக்கார் தகவில ரென்ப தவரவர்**
**எச்சத்தாற் காணப் படும்.**

**தக்கார் தகவு இலர் என்பது அவர் அவர்**
**எச்சத்தால் காணப்படும்.**

தக்கார் = த் + அக் + ஆர். தேகத்தால் உயிராயும் மெய்யாயும் ஆனவர். நடுவு நிலையாளர்.

தகவிலர் = தகவு + இலர். தகவு = த் + அக் + அ + உ. தேகத்தால் உயிராயும் மெய்யாயும் ஆகி உள்ளும் புறமுமாய் இருத்தல். இலர் = இல் + அர். இல்லாதவர். தகவிலர் = நடுவு நிலை இல்லாதவர்.

நடுவு நிலையாளரா, நடுவு நிலை இல்லாதவரா என்பது அவரவர்களின் பிள்ளைகள் வாழும் நிலைமைகளைப் பார்த்தாலே தெரிந்துவிடும்.

**115. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்**
**கோடாமை சான்றோர்க் கணி.**

**கேடும் பெருக்கமும் இல் அல்ல; நெஞ்சத்துக்**
**கோடாமை சான்றோர்க்கு அணி.**

கேடு = க் + ஏட் + உ. பொருண்மை மிக உயர்ந்து ஒட்டித் தொடர்ந்து வெளிப்படல். குறைதல். மெலிதல். வறுமை.

பெருக்கம் = ப் + எர் + உக் + அம். கொண்டது உயர்ந்து இருந்து புறப் பொருண்மையாகும் தன்மை. பெருக்கம் = பெரு + க் + அம். பெரிய பொருண்மைத் தன்மை. பெருஞ்செல்வம். செல்வ வளர்ச்சி.

இல்லல்ல = இல் + அல்ல. இல்லாதது அல்ல.

கோடு = பிரிவு. பிளவு. பாரபட்சம்.

சான்றோர் = சான்று + ஓர். முன்மாதிரியானவர். சான்று = ச் + ஆன் + ற் + உ. இயக்கத்தோடு நெருங்கிப் பிரிந்து வெளிப்படல். சான்றோர் = இயக்கத்தொடு நெருங்கப் பிரிந்து ஒன்றானவர். முழுமையானவர்.

அணி = அண் + இ. உயிரை மிக நெருங்கி இருப்பது. ஆபரணம். அழகு சேர்ப்பது. தனியாய்த் தெரிவது.

வறுமையும் வளமையும் புதியதல்ல. நடுநிலை மாறாமல் இருப்பது, முழுமையானவர்க்கு வெளிப்படையான அழகாகும், பெருமையாகும், இன்பமாகும்.

தன்னுடைய பிள்ளைகளின் வறுமைக்குப் பயந்தோ அல்லது அவர்களின் செல்வச் செழிப்பிற்கு ஆசைப்பட்டோ, நடுவுநிலைமையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதில்லை. வறுமையும் செழிப்பும் பிறபல காரணங்களாலும் வரக்கூடும். அவை வாழ்வில் வரவே மாட்டாததோ, இல்லாததோ அல்ல. நடுநிலை நிற்பதாலேயே கூட தற்காலிக வறுமை வரலாம். ஊழின் விதிகள் எளிதானவையல்ல; மிகவும் சிக்கலானவை.

**116. கெடுவலியா னென்ப தறிகதன் னெஞ்சம்**
**நடுவொரீஇ யல்ல செயின்.**

**கெடுவல் யான்' என்பது அறிக-தன் நெஞ்சம்**
**நடுவு ஒரீஇ, அல்ல செயின்.**

கெடுவலி = கெடு + வலி. கெடு = க் + எடு. மெய் / பொருண்மையை எடுத்தல். இறப்பு அல்லது பொருள் இழப்பு. வலி = வ் + அல் + இ. உரம். வலி = வ் + அல் + இ. நோவு. துன்பம்.

நடுவொரீஇ = நடு + ஓர் + ஈ + இ. நடு ஒன்றைத் தந்து இருத்தல். நடுநிலை விலகுதல்.

தன் மனம் நடுநிலையில் இருந்து விலகித் தவறான முடிவை எடுக்கும்போதே தெரிந்து கொள்க, வரப்போகும் தன் வறுமைக்கும் துன்பத்திற்கும் தானே முக்கியக் காரணம், பிறர் அல்ல.

**117. கெடுவாக வையா துலக நடுவாக**
**நன்றிக்கட் டங்கியான் தாழ்வு.**

**கெடுவாக வையாது உலகம் - நடுவாக**
**நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.**

கெடுவு = க் + எடு + உ. இழப்பின் வெளிப்பாடு.

வையாது = கருதாது. திட்டாது.

தாழ்வு = த் + ஆழ் + உ. தேகம் ஆழ்ந்து வெளிப்படல். வளம் குறைவு.

*நடுநிலைமையுடன் நல்ல முடிவுகளை உறுதியாக எடுத்தவரின் வளக்குறைவை கண்டு, அவர் வறுமை அடைந்து விட்டதாக கருதாது, உலகம்.*

**118. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.**

**சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து, ஒருபால்
கோடாமை-சான்றோர்க்கு அணி.**

*சீர் = ச் + ஈர். இயக்கம் இரண்டு.*

*துலாக்கோல் = துலா + கோல். துலா வறுமையை= த் + உல் + ஆ. தேகம் / வடிவம் புறத்தே அதிர்வில்லாத.*

*பால் = பக்கம். கட்சி.*

*அமைந்து = அசையாமல்.*

*இரண்டு பக்கக் கயிறுகளும் தட்டுகளும் எந்த மாறுபாடும் இல்லாமலும், வெளிச் சக்திகள் பாதிக்காத வண்ணமும், தன்னுடைய கையின் எந்தப் பாகமும் துலாக்கோலை அழுத்தாத வண்ணமும், நேராக உயரத் தூக்கி நிறுத்துவதைப் போல், வழக்கின் இருபக்கமும் கேட்டு, வெளிச்சக்திகள் பாதிக்காத வண்ணமும், தன் விருப்பு வெறுப்பு அற்றும், பாரபட்சமில்லாமல் முடிவு எடுப்பது முழுமையானவர்க்கு அழகு.*

**119. சொற்கோட்ட மில்லாது செப்ப மொருதலையா
உட்கோட்ட மின்மை பெறின்.**

**சொற் கோட்டம், இல்லது செப்பம்-ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.**

*கோட்டம் = க் + ஓட்டம். மெய்யின் விலகல். கோட்டம் = கோடு + அம். கோட்டின் தன்மை. நீட்டிக்கும் தன்மை. சிறிய உண்மையை நீட்டிப் பெரிதாக்கும் தன்மை. எல்லை. மறைவு.*

*ஒருதலைப்பட்சமான எல்லைகள் மனத்தில் இல்லாமல் இருந்தால், வழக்கின் தீர்ப்புரையில், மெய்யிலிருந்து விலகலோ, சிறியதைப் பெரியதாக்குவதோ இல்லாமல் இருக்கும்.*

**120. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.**

**வாணிகம் செய்வார்க்கு வாணிகம்-பேணிப்
பிறவும் தமபோல் செயின்.**

*வாணிகம் = வ் + ஆண் + இக் + அம். புறமும் அகமும் மிக நெருக்கமாகும் பொருள் தன்மை / புறமும் அகமும் ஆளும் பொருள்*

தன்மை. வாணிகம் = வாண் + இகம். முழுமை இம்மை. இப்பிறப்பிலேயெ முழுமை அடைவர்.

புறமும் அகமும் நெருக்கமாகப் பொருளுடன் ஈடுபடும் ஒருவர், தனக்கு விற்பனை செய்பவரின் பொருளையும், தன்னிடமிருந்து வாங்குபவரின் பொருளையும், தன் பொருள்போல் இழப்பு வராமல் காத்தால், செய்தி அறிந்து, அதிக விற்பனையாளர்களும், அதிக வாங்குபவர்களும் அவரையே நாடி வருவர். பொருளின் சந்தை விலையைத் தீர்மானிக்கும் நிலைக்கும் அவர் உயர்வார். வணிகர், நீதிமானைப் போன்றவர். புறமும் அகமும் பொருளை ஆள்வார். முழுமை அடைவார்.

நடுவுநிலைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

ஒருவர் தன்னுடைய உயிருடனும் மெய்யுடனும் ஒன்றி இருக்கும்போதே உறுதியையும் அசையாமையையும் அடைய முடியும். முழுமையான உண்மையையும் அறிய முடியும். அதுவே, நடுவு நிலை வகிப்பவரின் அவசிய குணமாகும்.

நடுவு நிலையாளரின் செல்வம், குறையாமல், சிதறாமல், அவருடைய பிள்ளைகளுக்கும், தொடர்ந்து பாதுகாப்பை அளிக்கும்.

உயிருடனும் மெய்யுடனும் ஒன்றுதல், உறுதியையும் அசையாமையையும் தரும். அது, நடுநிலை விட்டு எடுக்கும் முடிவை, விலக்க உதவும்.

நடுவு நிலையாளரா, நடுவு நிலை இல்லாதவரா என்பது அவரவர்களின் பிள்ளைகள் வாழும் நிலைமைகளைப் பார்த்தாலே புரிந்துவிடும்

வறுமையும் வளமையும் புதியதல்ல. மனம், ஒரு பக்கமாய் சாராமல் இருத்தலே, நீதிமானுக்கு அழகு.

தன் மனம், நடுநிலையற்ற ஒன்றைச் செய்தாலும் அறிக, தன்னைக் கெடுக்கின்ற சக்தி, தானே என்று, தன் ஊழ் என்று.

நடுநிலையில் இருந்து, நன்மையே செய்தவரின் தாழ்வை, அவர் கெட்டுவிட்டதாகத் தூற்றாது, உலகம். அது, இப்பிறப்பின் வினையல்ல. முற்பிறப்பின் மீதம்.

இரண்டு பக்கத்தையும் சமமாக்கி, இரண்டையும் உயர்த்தி நிறுத்தும், அசைவிலாத துலாக்கோல் போன்று, வழக்கின் ஒரு பக்கம் சாயாமல் இருத்தல், முழுமையானவர்க்கு அழகு.

ஒருதலைப்பட்சத்தால், ஒருவருக்கு மறைவான நலன் இல்லை என்றால், அவருடைய தீர்ப்புரை, மறைவற்று, எளிமையாக வெளிப்படும்.

மற்றவர்களின் பொருளையும், தன்பொருள் போல் பாதுகாக்கும், வணிகரின் வாணிகம், செழிக்கும். அவர் மெய்யுணர்வையும் அடைவார்.

# 13. அடக்கமுடைமை

*அடக்கமுடைமை = அடக்கம் + உடைமை. அடக்கம் = அட் + அக் + அம். உயிரை ஒட்டித் தொடர்ந்து உயிர்ப்புள்ள மெய்யாகும் தன்மை. உடைமை = உடை + மை. உடை = உட் + ஐ. புறத்தே / உள்ளே ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாதல்.*

*அடக்கமுடைமை = உயிரை ஒட்டித் தொடர்ந்து உயர்ப்புள்ள மெய்யாகித் தொடர்ந்து இருக்கும் தன்மை.*

**121.** **அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை**
**ஆரிரு ளுய்த்து விடும்.**

**அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை**
**ஆர் இருள் உய்த்துவிடும்.**

*அமரர் = அம் + அர் + அர். உயிர்ப்புள்ள மனமுடன் பிரிந்து இருப்பவர்.*

*உய்க்கும் = உய் + க் + உம். உய் = உள்ளே உயிர்ப்புடன் நிலைத்தல். உய்க்கும் = உள்ளே உயிர்ப்புடன் மெய் நிலைத்தல்.*

*ஆரிருள் = ஆர் + இருள். பிரிக்கும் / இரைச்சலான இருள். குழப்பம்.*

*புலன்கள் அடங்கினால், மனம் உயிர்ப்பை உணர்ந்து, மெய்யின் அமைதியில் நிலைக்கும். அந்நிலையில் ஏற்கனவே உறைந்த ஞானியரின் மத்தியில் நிறுத்தும். அந்த ஒளிமிக்க அமைதியில், கருமம் குறைந்து, கரைந்து, பெயராத (பேரா) இயற்கையெனும் பிறப்பறுநிலையைத் தரும்.*

*புலன்கள் அடங்காவிட்டால், இரைச்சலான இருள் மனத்தை இயக்கும். கருமம் சேரும். பிறப்புகள் தொடரும்.*

**122.** **காக்க பொருளா வடக்கத்தை யாக்கம்**
**அதனினூங் கில்லை யுயிர்க்கு.**

**காக்க, பொருளா அடக்கத்தை-ஆக்கம்**
**அதனின் ஊங்கு இல்லை, உயிர்க்கு.**

*பொருள் = ப் + ஒர் + உள். கொண்டது ஒன்றாய் உள்ளே. ஒற்றைத் தன்மையுடன் கொண்டிருத்தல்.*

*ஆக்கம் = ஆக் + அம். பொருண்மையாகும் தன்மை. செல்வம்.*

*ஊங்கு = உயர்வு.*

*புலன்கள் அடக்கத்தால் உணரப்படும் உயிர்ப்புநிலையை, அருமையான பொருள்போல், (புலன்களின் தாக்குதலிலிருந்து) தொடர்ந்து காத்திடவேண்டும். அதைவிட, உயிர்க்கு உயர்வைத் தருவது வேறெதுவுமில்லை.*

**123. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.**

**செறிவு அறிந்து சீர்மை பயக்கும்-அறிவு அறிந்து
ஆற்றின் அடங்கப்பெறின்.**

*செறிவு = இயக்கம் உயர்ந்து மிகுந்து உள்ளிருத்தல் / இயக்கம் உயர்ந்து பிரிந்து வெளிப்படல்.*

*சீர்மை = ச் + ஈர் + மை. இயக்கம் தந்து அமைதியாய் ஐக்கியமாதல். இயக்கம் சமனடைந்து அமைதியாதல்.*

*அறிவறிந்து = அறிவு + அறிந்து. அறிவைப்பற்றிய அறிவு. அறிவின் தன்மை அறிந்து. புலன்களின் இயக்கம் அறிந்து.*

*ஆற்றின் = பிரித்தால் / அறுத்தால்.*

*அறிவு எப்படி தோன்றுகிறது என்று அறிந்து, புலன்கள் மூலமாகவே கருத்துகளும், எண்ணங்களும் சிந்தனையும் தோன்றி, வளர்ந்து நிலைகொள்கின்றன என்பதை தெளிந்து, புலன்களின் அமைப்பையும், இணைப்பையும், சார்பையும், இயக்கத்தையும் உணர்ந்து, புலன்களின் உள்ளீட்டைத் தடுத்தால், மனத்தின் பதில் உந்துவிசையின்றி, புலன்கள் வலுவிழந்து அடங்கும். உயிரின் இயக்கம் உணரப்படும். உயிரின் இயக்கம் மிகுந்து சமனடைந்து அமைதி அடையும்.*

**124. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது.**

**நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.**

*அசையாமையில் இருந்து மாறாத, புலன் அடங்கியவனின் தோற்றம் மலையைக் காட்டிலும் நெருக்கம் மிக்கது, ஆளுமை கொண்டது.*

**125. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.**

**எல்லார்க்கும் நன்று ஆம், பணிதல்; அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து.**

*புலன் அடக்கத்தால் வரும் பணிவு என்பது எல்லாருக்கும் நல்லது. எல்லாரிலும், செல்வந்தர்களிடம் பணிவிருந்தால் அதுமிகப் பெரும் செல்வம் போன்றதாகும்.*

**126. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து.**

**ஒருமையுள், ஆமைபோல், ஐந்து அடக்கல் ஆற்றின்,**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து.**

*முழுமையாக ஆமைபோல், ஐம்புலன்களான உடல், வாய், மூக்கு, கண், காது ஆகியவற்றைப் புறத்திலிருந்து பிரித்து உள் அடக்கினால், வருகின்ற பிறப்பிலும் மிக உயர்ந்த அமைதியை மனம் கொண்டதாய் இருக்கும். அதன் மூலம் எளிதில் பிறப்பறுக்கலாம். முடிவில்லாத ஆனந்தம் அடையலாம்.*

**127. யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.**

**யா காவார் ஆயினும், நா காக்க; காவாக்கால்,**
**சோகாப்பர், சொல் இழுக்குப் பட்டு.**

*புலன்களில் எதை அடக்காமல் போனாலும் பரவாயில்லை, வாயில் உள்ள நாக்கை மட்டுமாயினும் அடக்க வேண்டும். அடக்காமல் போனால், சொல்லக்கூடாது சொல்லிவிட்ட சொல்லை எண்ணி, மனத்தில் சோகத்தைத் தொடர்ந்து கொண்டிருப்பர். மேலும், சொல்லப்பட்டவரால், பல தொல்லைகளையும் துன்பங்களையும் அடைவர்.*

**128. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயின்**
**நன்றாகா தாகி விடும்.**

**ஒன்றானும் தீச்சொற் பொருட் பயன் உண்டாயின்,**
**நன்று ஆகாது ஆகிவிடும்.**

*தீயச்சொல் ஒன்றுதான் என்றாலும், அதன் தாக்கம் மனத்தில் ஏற்பட்டுவிட்டால், உறவு நன்றாக இல்லாமல் போய்விடும்.*

**129. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே**
**நாவினாற் சுட்ட வடு.**

**தீயினால் சுட்ட புண் உள் ஆறும்;-ஆறாதே,**
**நாவினால் சுட்ட வடு.**

*புண் = ப் + உண். கொண்டதன் புறத்தே மிக நெருக்கமானது.*

*வடு = வ் + அட் + உ. புறமும் அகமும் ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது. மாறாதது.*

*மாறு = ம் + ஆறு. கொண்டதில் இருந்து பிரி / அறு.*

*தீயினால் சுட்ட புண், உடலின் வெளியேயும் உள்ளேயும் ஆறிவிடும், மனமும் அதை நாளடைவில் மறந்துவிடும். ஆனால், தீயைப் போன்று, நாக்கிலிருந்து விரைவாய் வெளிவந்து, மனதைச் சுட்டச் சொல், வடு*

போல் மாறாது உறுத்திக்கொண்டே இருக்கும். நினைவில் இருந்து கொண்டே இருக்கும்.

**130. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி**
**அறம்பார்க்கு மாற்றி னுழைந்து.**

**கதம் காத்து, கற்று, அடங்கல் ஆற்றுவான் செவ்வி அறம்**
**பார்க்கும், ஆற்றின் நுழைந்து.**

*கதம் = க் + அத் + அம். மெய் உயிர்ப்புள்ள தேகமாகும் தன்மை. மெய்யின் தேக உணர்வற்ற தன்மை. மெய்யுணர்வு. மெய்மை.*

*செவ்வி = ச் + எவ் + இ. இயக்கம் உயர்ந்து புறமும் அகமும் இருத்தல்.*

*அறம் = அற் + அம். உயிர் பிரியும் / அறும் தன்மை. உயிர் தனித்திருக்கும் தன்மை. உயிர்மை.*

*மெய்யோடும் தேகத்தின் எல்லையோடும் நின்று, அறிவின் உருவாக்கத்தையும், புலன்களின் இயக்கத்தையும் அறிந்து, புலனடக்கம் முயல்பவனை, புறமும் அகமும் உயர்ந்த இயக்கமாய் இருக்கும் உயிர்மை, அவனுடைய அசையாமை முயற்சியில் உதவும். அறமே அறத்திற்கு உதவும். உயிர்மை உயிர்ப்பாவதற்கு உதவும்.*

**அடக்கமுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*புலன்களின் அடக்கம், ஞானியராக்கும். புலன்கள் அடங்காமை, பிறப்புகளை உருவாக்கி விடும். புலனடக்கத்தை, செல்வம் காப்பதைப் போல் காக்க. அதைக் காட்டிலும், உயிர்க்கு உயர்வைத் தருவது, வேறெதுவும் இல்லை. புலன்களின் இயல்பு அறியப்பட்டு, அடங்குவதற்கு ஏற்ப, உயிர்ப்பின் அசையாமை உணரப்படும்.*

*அசையாமையில் இருந்து மாறாதவனின் தோற்றம், மலையின் அமைதியைக் காட்டிலும் பெரியது. பணிவாய் இருப்பது எல்லாருக்கும் நல்லது. அவர்களுள், செல்வந்தர் பணிவாய் இருந்தால், அது மற்றோர் செல்வத்தை அவர் பெற்றது போலாகும்.*

*ஒற்றைத் தன்மையாக, ஐம்புலன்களை அடக்க முடிந்தால், அது வரும் பிறப்பிலும், துன்பத்திலிருந்து, பாதுகாப்பாய் அமையும்.*

*எதை அடக்காமல் இருந்தாலும், நாக்கைக் கட்டுப்படுத்த வேண்டும். இல்லையென்றால், குற்ற உணர்ச்சியால், சோகம் நிரம்பி துன்புறுவர்.*

*தீயச்சொல் ஒன்றுதான் என்றாலும், அதன் தாக்கம் மனத்தில் ஏற்பட்டுவிட்டால், அது நன்றாக இல்லாமல் போய்விடும்.*

*நெருப்பால் சுட்டப் புண், காலத்தால், உள்ளேயும் ஆறிவிடும். ஆனால், நாக்கால், பேச்சால் சுட்ட வடுவோ, ஆறவே ஆறாமல் காலமெல்லாம் வருத்தும். மெய்யுணர்வுடன், அசையாமையில் தொடர்ந்து இருந்து, புலனடக்கத்தைக் காப்பவனை, உயிர்ப்பு, வழியிலேயே எதிர்கொண்டு வரவேற்கும்.*

# 14. ஒழுக்கமுடைமை

ஒழுக்கமுடைமை = ஒழுக்கம் + உடைமை. ஒழுக்கம் = முழுமையாய் ஆழ்ந்து உள்ளே மெய்யாகும் தன்மை. உடைமை = தொடர்ந்திருக்கும் தன்மை. ஒழுக்கமுடைமை = முழுமையாய் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் தொடர்ந்திருக்கும் தன்மை.

அடக்கமுடைமையால், புலன்கள் அடங்கியமையால், ஒழுக்கமுடைமை ஏற்படும்.

**131. ஒழுக்கம் விழுப்பந் தரலா லொழுக்க**
**முயிரினு மோம்பப் படும்.**

**ஒழுக்கம் விழுப்பம் தரலான், ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப்படும்.**

ஒழுக்கம் = ஒழ் + உக் + அம். அகமும் புறமும் ஆழ்ந்தும் உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மை. ஒழுக்கத்தால் புலன்கள் அடங்கும். புலன்களின் அடக்கம் விழுப்பம் தரும்.

விழுப்பம் = விழு + ப் + அம். உதிரும் மனத் தன்மை. விழுப்பம் = வ் + இழு + ப் + அம். புறமும் அகமும் ஈர்க்கும் வெளித்தன்மை. சீர்மை. சிறப்பு.

ஓம்பு = ஓம் + ப் + உ. முழுவதும் அமைதியாகக் கொண்டு வெளிப்படல். 'ஓம்' ஒலியை மனதில் கொண்டிருத்தல். ஓம் எனும் ஒலி அடங்கலிலேயே, புலன்கள் அடங்கி, மெய்யை உணரலாம்.

ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையால் புலன்கள் அடங்கி, பெயரா இயற்கை எனும் பிறப்பறுநிலை கிடைப்பதால், அதை அறிந்தவர், ஒழுக்கத்தை உயிருக்கும் மேலாக நினைத்து, 'ஓம்' ஒலியை மனதில் கொண்டு முயலுவர்.

உயிரை தன்னுள் உணர்ந்தால் மட்டும் போதாது. உயிர் தன்னுடைய வரையறுக்கப்பட்ட உடலிலிருந்து விரிந்து எல்லையற்று பரந்து செல்ல வேண்டும். அதுதான் உயிரின் இயல்பான தன்மை. அது விரிய விரிய ஆனந்தம் பெருகும். இறுதியில் உயிர் அசையாமையில் நிலைத்துவிடும். உடலை வளர்த்து உயிரை வளர்ப்பது அவ்வாறுதான். பூத உடலை வளர்ப்பது அல்ல.

**132. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்**
**தேரினு மஃதே துணை.**

**பரிந்து ஓம்பிக் காக்க, ஒழுக்கம்-தெரிந்து ம்பித்**
**தேரினும், அஃதே துணை.**

*பரி = ப் + அரி. கொண்டதைப் பிரி. பகுத்துணர். விரும்பு.*

*தெரி = த் + எர் + இ. தேகத்தில் உயர்ந்து இருத்தல். பலவற்றை அறிதல்.*

*தேர் = த் + ஏர். தேகம் மிகவும் உயர்ந்திருத்தல். தேர்ந்தெடுத்தல்.*

*மனம் விரும்பி முயன்றாலும், பலவற்றைத் தெரிந்து முயன்று பார்த்தாலும், கடைசியில், ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையே, பிறப்பறுக்க உதவும்.*

**133. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்.**

**ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய்விடும்.**

*குடிமை = க் + உட் + இ + மை. மெய் புறத்தே ஒட்டித் தொடர்ந்து இருந்து அமைதியுடன் ஐக்கியமாகும் தன்மை. மனிதனுக்குரிய பண்பு.*

*இழி = இழ் + இ. இருத்தலின் கீழ் இருத்தல். விலங்கின் பண்பு.*

*ஒழுக்கமுடைமை மனிதப் பண்பு. ஒழுக்கம் தவறுதல் விலங்குப் பண்பாகி விடும்.*

**134. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.**

**மறப்பினும், ஓத்துக் கொளல்ஆகும்; பார்ப்பான் பிறப்பு**
**ஒழுக்கம் குன்றக் கெடும்.**

*பார்ப்பான் = ப் + ஆர் + ப் + ஆன். எண்ணத்தை நீக்கி தூயவெளியாய் ஆனவன். பார்ப்பான் = பார் + ப் + ஆன். சாட்சியாய்ப் பார்க்கின்ற மனமானவன். பார்ப்பன் = பார் + ப் + அன். பார்க்கின்ற மனம் உடையவன். (பார்த்தன் = பார் + த் + அன். பார்க்கின்ற தேகம் உடையவன். பார்க்கன் = பார் + க் + அன். பார்க்கின்ற மெய்யை உடையவன்).*

*பிறப்பு = ப் + இறப்பு. மனத்தின் / எண்ணத்தின் இறப்பு.*

*ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையை மறந்தாலும், 'ஓம்' எனும் மந்திரத்தை ஓதி மீண்டும் ஒழுக்கத்தில் உறையலாம். அதனால், எண்ணங்கள் மனத்தில் சேராது. எண்ணமற்ற நிலையே ஞானத்தின் முதல் படி. ஞானம் அடைந்தவர்கூட, எண்ணத்தை மனத்தில் சேர்த்தால், தன் நிலை கெடுவர்.*

**135. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை**
**ஒழுக்க மிலான்க ணுயர்வு.**

**அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று இல்லை-
ஒழுக்கம் இலான்கண் உயர்வு.**

*அழுக்காறு = அழுக்கு + ஆறு. அழுக்கு = அழ் + உக் + உ. உயிரின் ஆழத்தில் உள்மெய்யின் வெளிப்பாடு.*

*பிறப்பு என்பதே கரும வினைகளின் கலப்பு வெளிப்பாடு. அருவமான கருமங்கள் மெய்யின் மூலமாகவே உருப்பெற்று வெளிப்படுகின்றன. பொறாமையும் கரும வெளிப்பாடுகளில் ஒரு வடிவம். உயிர் ஊற்று ஆழத்திலிருந்து எழுந்து வருகையில், மெய்யின் நுண்துகள்களாக பொறாமை வெளிப்பட்டு, அழுக்குஆறு போல் ஓடிவருகின்றது.*

*அழுக்காறில், காட்சிகள் தெளிவாய் பார்ப்பது கடினம். குழப்பத்தால் எண்ணம் சிதைவுறும். செயலுக்கான முயற்சியும் நிறைவு பெறாது. விளைவாக செல்வம் உண்டாகாது.*

*அதைப் போன்றுதான், ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மை இல்லாதவன் இடத்தில், ஞானம் எனும் உயர்வு தோன்றாது.*

**136. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.**

**ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர்; இழுக்கத்தின்
ஏதம் படுபாக்கு அறிந்து.**

*ஒல்கார் = ஒல் + க் + ஆர். முழுமையான அதிர்வு(ள்ள) மெய்(யைப்) பிரியார்.*

*உரவோர் = உரம் + ஓர். உரத்தோடு ஒன்றானவர். முழுமையானவர்.*

*ஏதம் = ஏத் + அம். மிக உயர்ந்த தேகத் தன்மை.*

*படுபாக்கு = (ஏதம்) படும் + பாக்கு. மிக உயர்ந்த தேகத் தன்மை எண்ணத்தால் தொடரப்படுவது.*

*ஒழுக்கத்தால் (அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையால்) ஏற்படும் முழுமையான அதிர்வுள்ள மெய்யைப் பிரியார், உரத்தோடு ஒன்றானவர்கள். ஏனெனில், ஒழுக்கம் தவறினால், மிக உயர்ந்த தேகத் தன்மை, தொடர்ச்சியான எண்ண ஓட்டத்தால் தடைப்படும் என்பதை அவர்கள் அறிவார்கள்.*

**137. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி.**

**ஒழுக்கத்தின் எய்துவர், மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர், எய்தாப் பழி.**

*எய்துவர் = அடைவர்*

மேன்மை = மேல் + மை. மேல் = ம் + ஏல். கொண்டு மூடிய / அமைதியான மிக உயர்ந்த அதிர்வு. மை = ம் + ஐ. கொண்டு மூடி ஐக்கியமாதல். அசையாமை. வண்ணம். ஒளி. மேன்மை = அமைதியும் ஒளிர்மையும்.

எய்தா = (பிறப்பின் பலனை) அடையா

பழி = ப் + அழி. பிறப்பு அழிவு.

ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையால் அடைவர், அமைதியும் ஒளிர்மையுமான, காட்சியை. ஒழுக்கம் தவறினால், பிறப்பின் பலனான மேன்மையை அடையாமல், அரிய பிறப்பை அழிப்பர்.

**138. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்**
**என்று மிடும்பை தரும்.**

**நன்றிக்கு வித்து ஆகும், நல் ஒழுக்கம்; தீ ஒழுக்கம்**
**என்றும் இடும்பை தரும்.**

நல்லொழுக்கம் = நல் + ஒழுக்கம். நல் = ன் + அல். நெருக்கமில்லாத. அகந்தையில்லாத.

தீயொழுக்கம் = தீ + ஒழுக்கம். தீ = த் + ஈ. தேகம் தரும். தேகத்தை முதன்மைப்படுத்தும்.

இடும்பை = இடும் + பை. கருமம் சேரும் பிறப்பாகும்.

அகந்தையற்ற ஒழுக்கம் (ஞானம்), நல்ல செயலுக்குத் துவக்கமாகும். தேகத்தை முதன்மைப்படுத்தும் ஒழுக்கம் (யோகம்), கருமத்தால் பிறப்பைத் தரும்.

**139. ஒழுக்க முடையவற் கொல்லாவே தீய**
**வழுக்கியும் வாயாற் சொலல்.**

**ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே-தீய**
**வழுக்கியும், வாயால் சொலல்.**

ஒல் = முழுமையான அதிர்வு. முழுமை. இயல்வது.

தீய = தீ போன்ற. சுடுகின்ற. வருத்தும்.

ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையை உடையவர்க்கு, தவறியும் தீப்போன்று வருத்தும் சொல்லை வாயால் சொல்வதற்கு இயலாது. அகத்தில் இருந்து வழுவியதைச் சிந்திப்பரே அன்றி, புறத்தில் நடந்தது பற்றி அறியாது இருப்பர்.

**140. உலத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லா ரறிவிலா தார்.**

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல், பல கற்றும்,**
**கல்லார் அறிவிலாதார்.**

உலகம் = உல் + அகம். உள் அதிர்வு / புற அதிர்வு அகம். மக்கள். சான்றோர்.

ஒட்டல் = ஒட் + அல். முழுமையாய் ஒட்டித் தொடரல்.

ஒழுகல் = ஒழ் + உக் + அல். அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருத்தல்.

புறத்தில் மக்களோடு மக்களாய் இருப்பதையும், அகத்தில் சான்றோரின் ஒழுக்கத்தில் நிலைப்பதையும், கல்லாமல் போனால், பலவற்றைக் கற்றும் முட்டாளாகவே இருப்பர்.

ஒழுக்கமுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

முழுமையாய் ஆழ்ந்து, மெய்யாய் உள்ளிருக்கும் தன்மை, மனத்தை உதிர வைப்பதால், அதனால் உயிரை உணர முடிவதால், கருமம் கரைந்து பிறப்பறுக்க முடிவதால், அதை, ஒருவர், தன் உயிரினும் மேலாக, கருத வேண்டும்.

மனம் விரும்பி ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். பலவற்றைக் கற்றுத் தேர்ந்தாலும், கடைசியில், ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையே, பிறப்பறுக்க உதவும்.

ஒழுக்கமுடைமை மனிதப் பண்பு. ஒழுக்கம் தவறுதல் விலங்குப் பண்பாகி விடும்.

அசையாமையில் இருந்து தவறினால், 'ஓம்' எனும் மந்திரத்தை ஓதி மீண்டும் ஒழுக்கத்தில் உறையலாம். ஞானம் அடைந்தவர்கூட, எண்ணத்தை மனத்தில் சேர்த்தால், தன் நிலை கெடுவர்.

பொறாமை உடையவன் இடத்தில், செல்வம் சேராததைப் போன்று, ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மை இல்லாதவன் இடத்தில், ஞானம் எனும் உயர்வு சேராது.

ஒழுக்கம் தவறினால், மிக உயர்ந்த தேகத் தன்மை, தொடர்ச்சியான எண்ண ஓட்டத்தால் தடைப்படும் என்பதை அறிந்து, மன உறுதி படைத்தவர்கள், ஒழுக்கத்திலிருந்து விலகமாட்டார்கள்.

ஒழுக்கத்தால், ஞானம் எனும் உயர்வை அடைவர். ஒழுக்கம் தவறுவதால், ஞானத்தை அடையாதவர் எனும் பழியை அடைவர்.

அகந்தையற்ற ஒழுக்கம் (ஞானம்), நல்ல செயலுக்கு துவக்கமாகும். தேகத்தை முதன்மைப்படுத்தும் ஒழுக்கம் (யோகம்), கருமத்தால் பிறப்பைத் தரும்

ஒழுக்கம் உடையவற்கு, தவறியும், தீயனவற்றை வாயால் சொல்ல முடியாது.

புறத்தில் மக்களோடு மக்களாய் இருப்பதையும், அகத்தில் சான்றோரின் ஒழுக்கத்தில் நிலைப்பதையும், கல்லாமல் போனால், பலவற்றைக் கற்றும் முட்டாளாகவே இருப்பர்.

## 15. பிறனில் விழையாமை

*பிறனில் = பிறன் + இல். மற்றவன் வீடு, மனைவி. விழையாமை = விழையா + மை. விரும்பாத தன்மை. பிறனில் விழையாமை = மற்றவன் மனைவியை விரும்பாத தன்மை.*

**141. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.**

**பிறன்பொருளாள்-பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம், பொருள், கண்டார்கண் இல்.**

*பொருளாள் = பொருள் + ஆள். பொருள் = ப் + ஓர் + உள். கொண்டது ஒன்றாய் உள்ளே. நினைவு ஒன்றாய் உள்ள. முழுமை. பொருளாள் = முழுமையானவள்.*

*பெட்டு = ப் + எட்டு. கொண்டதை முயல். அடைய முயல்.*

*ஒழுகு = ஒழ் + உக் + உ. முழுமையாகவும் ஆழ்ந்தும் உள்மெய் வெளிப்படல். ஏங்குதல்.*

பேதைமை = ப் + ஏத் + அமை. கொண்டதை மிக உயர்த்தி தேகத்தில் பொருத்து. எண்ணத்தால் மிக உயர்வாய் தன்தேகத்தை இருத்துதல். தன் உடலை வலிமை மிகுந்ததாயும் அழகு மிகுந்ததாயும் எண்ணிக் கொளல்.

ஞாலம் = ஞ் + ஆல் + அம். நெருக்கமான இயக்கத்தை உறுதியாய்க் கொண்ட தன்மை. உலகம்.

*அறம் = அற் + அம். உயிர் பிரியும் / அறும் தன்மை. மனம் உயிரில் ஒன்றும் தன்மை.*

*பொருள் = ப் + ஓர் + உள். முழுமை. செம்பொருள். ஒளிர்மை. காட்சி.*

*கண்டார்கண் = கண்டவர் கண்களில். கண்டவர் இடத்தில்.*

*பிறனுக்கு உரிமையானவளை அடைய ஏங்குதலும், தன்னுடலை மிக உயர்வாக எண்ணிக் கொண்டு முயலும் முட்டாள்தனமும், உலகில் உயிரோடு ஒன்றி, செம்பொருள் காட்சி கண்டவர் கண்களிலும் மனத்திலும் இல்லை.*

**142. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.**

**அறன்கடை நின்றாருள் எல்லாம், பிறன்கடை
நின்றாரின், பேதையார் இல்.**

*உயிரின் நிலையிலிருந்து விலகித் தூர நிற்பவர்களில், பிறனின் இல்லாளுக்காக காத்து நிற்பவனைப் போன்ற அறிவிலி, வேறு யாருமில்லை.*

**143. விளிந்தாரின் வேறல்ல மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.**

**விளிந்தாரின் வேறு அல்லர் மன்ற - தெளிந்தார் இல்
தீமை புரிந்து ஒழுகுவார்.**

*விளிந்தார் = வ் + இளி + ன் + த் + ஆர். புறமும் அகமும் விரிந்து நெருங்கிய தேகமானவர். இறந்தார். பூத உடல். பிணம்.*

*மன்றம் = மன் + ற் + அம். மனத்திலிருந்து பிரிந்த தன்மை.*

*தெளிந்தார் = த் + எள் + இ + ன் + த் + ஆர். தேகம் உயர்ந்து மிகையாகி இருந்து நெருங்கிய தேகமானவர்.*

*மனத்திலிருந்து பிரிந்துப் புத்ததேகமானவர் வீட்டில், தீமை செய்பவர், பிணத்திற்குச் சமமானவர்.*

**144. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.**

**எனைத் துணையர் ஆயினும் என்னாம்-தினைத் துணையும்
தேரான், பிறன் இல் புகல்?**

*துணை = த் + உண் + ஐ. தேகத்தின் உள்ளே மிக நெருங்கி ஐக்கியமானது. பலம். அளவு. பெருமை. அறிவு. தேகத்தின் புறத்தே மிக நெருங்கி ஐக்கியமானது. நட்பு.*

*தேர் = த் + ஏர். தேகம் மிக உயர்ந்து இருத்தல்.*

*எவ்வளவு பெரிய ஆளாய் இருந்தும் என்ன, பிறன் மனைவியை அடைய முயல்பவன் சிறிதும் உயரமாட்டான்.*

**145. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.**

**'எளிது' என இல் இறப்பான் எய்தும்-எஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.**

*பழி = ப் + அழி. கொண்டதை அழிப்பது. மனத்தை அழிப்பது. குற்ற மனப்பான்மை. பழி = ப் + அழ் + இ. மனம் ஆழத்தில் இருப்பது.*

*அடைவது எளிது என்று பிறன் மனைவியைச் சேர்பவனை, குற்ற மனப்பான்மை அல்லது ஊர்ப்பழி, எந்நாளும் நீங்காது நிற்கும்.*

**146. பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்.**

**பகை, பாவம், அச்சம், பழி, என நான்கும்
இகவா ஆம்-இல் இறப்பான்கண்.**

இகவாவாம் = இகவு + ஆவாம். இகவு = இகம் + உ. இம்மையில் வெளிப்படல்.

பிறன் மனைவியைச் சேர்ந்தவன் இடத்திலும், கண்ணிலும், பகை, பாவம், அச்சம், பழி ஆகிய நான்கும் இப்பிறப்பு முழுவதும் நீங்காது.

**147. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்**
**பெண்மை நயவா தவன்.**

**அறன் இயலான் இல்வாழ் என்பான்-பிறன் இயலாள்**
**பெண்மை நயவாதவன்.**

நயவாதவன் = நயம் + ஆதவன். நயம் = ன் + அய் + அம். நெருங்கி இருக்கும் தன்மை. ஆதவன் = ஆத் + அவன். தேகமானவன். நயவாதவன் = நெருங்கிய தேகமாகாதவன். நெருங்காதவன். விரும்பாதவன்.

அறத்தை இயல்பாக அடைபவன் இல்வாழ்பவன், அவன் பிறனுக்கு இயல்பாய் உரிய பெண்ணை நெருங்க மாட்டான்.

**148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்**
**கறனொன்றோ ஆன்ற வொழுக்கு.**

**பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை, சான்றோர்க்கு**
**அறன் ஒன்றோ? ஆன்ற ஒழுக்கு.**

மனை = மன் + ஐ. மனதுடன் ஐக்கியமானது. மனை = ம் + அன் + ஐ. கொண்டு மூடி நெருங்கி ஐக்கியமானது.

அறம் மட்டுமே பயன்தரும் ஒழுக்கம் அல்ல. சான்றோர்க்கு, பிறன்மனைவியை விருப்பமுடன் பார்க்காத பேராண்மையும், அறத்திற்கு இணையான ஒழுக்கமாகும்.

**149. நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பில்**
**பிறர்க்குரியா டோடோயா தார்.**

**'நலக்கு உரியார் யார்? எனின், நாம நீர் வைப்பில்**
**பிறற்கு உரியாள் தோள் தோயாதார்.**

நலம் = ன் + அல் + அம். நெருங்கிய உயிர்ப்புள்ள அதிர்வுத் தன்மை. ஞானம்.

நாமம் = ன் + ஆம் + அம். நெருங்கக் கொண்டு மூடும் தன்மை.

வைப்பு = வை + ப் + உ. வை = வ் + ஐ. புறமும் அகமும் ஐக்கியமானது. நிலையானது. வைப்பு = நிலையாய் கொண்டு உள்ளிருப்பது.

தோள் = த் + ஒள். தேகம் முழுமையானதும் மிகையானதும்.

தோய் = த் + ஒய். தேகத்தில் முழுமையாய் உயிர்ப்புடன் இருத்தல்.

ஞானத்திற்கு உரியவர் யாரென்றால், தொடர்ந்து அலைகளால் மூட முயன்றும் நிலையாய் இருக்கும் மண்ணுலகில், பிறர்க்கு உரிய பெண்ணின் அழகு, மனத்தைத் தடுமாறச் செய்தாலும், மன உறுதியுடன் இருந்து, அவர்தம் தேகம் சேராதார்தான்.

**150. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று.**

**அறன் வரையான், அல்ல செயினும், பிறன் வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று.**

*வரை = வ் + அர் + ஐ. புறமும் அகமும் பிரிந்து ஐக்கியமானது. எல்லை.*

*அறத்தை எல்லையாகக் கொண்டவன், அறம் அல்லாதன செய்தாலும், பிறன் எல்லைக்குட்பட்ட பெண்ணை விரும்பாமை நல்லது.*

*பிறனில் விழையாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*பிறனுக்கு உரிமையானவளுக்காக ஏங்கும் முட்டாள்தனம், ஞானியரிடத்தில் இல்லை.*

*உயிரின் நிலையிலிருந்து விலகி தூர நிற்பவர்களில், பிறனின் இல்லாளுக்காக காத்து நிற்பவனைப் போன்ற அறிவிலி, வேறு யாருமில்லை.*

*மனத்திலிருந்து பிரிந்து புத்ததேகமானவர் வீட்டில், தீமை செய்பவர், பிணத்திற்குச் சமமானவர்.*

*எவ்வளவு பெரிய ஆளாய் இருந்தும் என்ன, பிறன் மனைவியை அடைய முயல்பவன் சிறிதும் உயரமாட்டான்.*

*அடைவது எளிது என்று பிறன் மனைவியைச் சேர்பவனை, குற்ற மனப்பான்மை அல்லது ஊர்ப்பழி, எந்நாளும் நீங்காது நிற்கும்.*

*பிறன் மனைவியைச் சேர்ந்தவன் இடத்திலும், கண்ணிலும், பகை, பாவம், அச்சம், பழி ஆகிய நான்கும் இப்பிறப்பு முழுவதும் நீங்காது.*

*அறத்தை இயல்பாக அடைபவன் இல்வாழ்பவன், அவன் பிறனுக்கு இயல்பாய் உரிய பெண்ணை நெருங்க மாட்டான்.*

*அறம் மட்டுமே பயன்தரும் ஒழுக்கம் அல்ல. சான்றோர்க்கு, பிறன்மனைவியை விருப்பமுடன் பார்க்காத பேராண்மையும், அறத்திற்கு இணையான ஒழுக்கமாகும்.*

*ஞானத்திற்கு உரியவர் யாரென்றால், தொடர்ந்து அலைகளால் மூட முயன்றும் நிலையாய் இருக்கும் மண்ணுலகில், பிறர்க்கு உரிய பெண்ணின் அழகு, மனத்தைத் தடுமாறச் செய்தாலும், மன உறுதியுடன் இருந்து, அவர்தம் தேகம் சேராதார்தான்.*

*அறத்தை எல்லையாகக் கொண்டவன், அறம் அல்லாதன செய்தாலும், பிறன் எல்லைக்குட்பட்ட பெண்ணை விரும்பாமை நல்லது.*

# 16. பொறையுடைமை

*பொறையுடைமை = பொறை + உடைமை. பொறை = ப் + ஒற் + ஐ. கொண்டது முழுமையாய் இருந்து ஐக்கியமாதல். பொறையுடைமை = (ஒழுக்கத்தால்) மனம் முழுமையாய் (உயிருடன்) ஐக்கியமாகித் தொடரும் தன்மை.*

**151. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை.**

**அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல, தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.**

*தன்னில் ஆழத் தோண்டுபவரையும் பொறுக்கின்ற நிலம் போல, தம்மை தாழ்த்திப் பேசுபவர்களைப் பொறுப்பர் அறிவுடையோர். தன்னைத் தாழ்த்திப் பேசுபவரின் அறியாமையை அறிந்தும், அப்படி பேசுவதாலேயே தான் தாழ்ந்து போய்விடவில்லை என்றும், தாழ்த்திப் பேசுவது தான் விலக நினைக்கும் தன்னுடைய உடலையும், அறிவையும் செயலையுமே தவிர அது தன் உயிரை எவ்வகையிலும் பாதிக்காது என்றும் உணர்பவர், அறிவுடையோர்.*

**152. பொறுத்தலி றப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.**

**பொறுத்தல், இறப்பினை என்றும்; அதனை
மறத்தல் அதனினும் நன்று.**

*இறப்பினை = இறப்பைப் போன்றது. மீண்டும் பிறக்கக் கூடியது.*

*பிறர் தனக்கு தீமை செய்தால், எதிர்வினை புரியாமல், தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வது, இறப்பைப் போன்றது. எதிர்வினை, மீண்டும், எப்பொழுதாவது பிறக்கலாம். அத்தீமையை மொத்தமாக மறத்தலோ, தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதைவிட மிகவும் நல்லது. ஏனெனில், மறத்தலால், பகை உணர்வும், எதிர்வினையும் என்றும் இல்லாமலாகும்.*

**153. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.**

**இன்மையுள் இன்மை விருந்து ஒரால், வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.**

*இன்மை = இல் + மை. இல்லா தன்மை. இல்லாமை.*

*விருந்தொரால் = விருந்து + ஒர் + ஆல். விருந்து = வ் + இருந்து. ஒர் = ஒன்றி. ஆல் = இயங்குதல். உறுதியாதல். விருந்தொரால் = விருந்துடன் ஒன்றி இயங்காத் தன்மை. இயைபின்மை.*

*வன்மை = வல் + மை. வல் = வ் + அல். புறமும் அகமும் அதிர்தல்.*

*மடவார் = மடம் + ஆர். மடம் = ம் + அட் + அம். கொண்டு மூடி ஒட்டித் தொடரும் தன்மை. கேள்விக்கு வாயைத் திறவாதவன்.*

*வந்த விருந்தினருடன் ஒன்றி இயங்காமல் போகும் மடமையை, இல்லாமையிலும் பெரிய இல்லாமைமையை, விருந்தினர் பொறுப்பது போன்று, மடையன் செய்யும் தீச்செயலை மிகுந்த மனவலிமையுடன் பொறுத்தல் வேண்டும்.*

**154. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை**
**போற்றி யொழுகப் படும்.**

**நிறை உடைமை நீங்காமை வேண்டின், பொறை**
**உடைமை போற்றி ஒழுகப்படும்.**

*நிறையுடைமை = நிறை + உடைமை. நிறை = ன் + இற் + ஐ. (உயிரோடு) நெருங்கி இருந்து (தேகத்திலிருந்து) பிரிந்து ஐக்கியமாதல். நிறை = ன் + இறை. நெருக்கமாய்ப் பரவி இருத்தல். ஒளிர்மை. முழுமை. உடைமை = உடை + மை. புறத்தே ஒட்டித்தொடர்ந்து ஐக்கியமாதல், அமைதியாதல். நிறையுடைமை = முழுமையின் தொடர்ச்சி.*

*பொறையுடைமை = பொறுமையின் தொடர்ச்சி. போற்றி = ப் + ஓற் + இ. மனம் முழுவதுமாய் பிரிந்து இருத்தல். அகமுழுமையின் தொடர்ச்சி நீங்காமல் இருக்க, மனப்பொறுமையின் தொடர்ச்சியை, முழுமனதுடன் கடைப்பிடிக்க வேண்டும்.*

**155. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்**
**பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.**

**ஒறுத்தாரை ஒன்றாக வையாரே; வைப்பர்,**
**பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.**

*ஒறு = ஒற் + உ. முழுவதுமாய் அறுத்து வெளிப்படு. அழித்தல்.*

*பொதி = ப் + ஒத் + இ. கொண்டு முழுதேகமாய் / வடிவமாய் இருத்தல். தீங்கு செய்தவரைப் பொறுக்காமல் அழிப்பவரைப் பொருட்டாக மதிக்க மாட்டார்கள் பெரியோர். மாறாக, பொறுத்தவரை, மதிப்புமிக்க பொன்னைப் போல் நிலையாக மனத்தில் கொள்வர்.*

**156. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ்.**

**ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம்; பொறுத்தார்க்குப்**
**பொன்றும் துணையும் புகழ்.**

*பொன்று = ப் + ஒன்று. கொண்டது ஒன்றாவது. வெளி ஒன்று. உயிரை விட்டு உடல் போனதும், வெளித்தன்மையுள்ள உயிர், உடல்*

*எனும் எல்லையற்று, பரந்த எல்லையில்லா வெளியாக ஒன்றாகும். இறப்பு. துணை = த் + உண் + ஐ. தேகத்தின் புறத்தே மிக நெருங்கி ஐக்கியமாவது. நட்பு. எல்லை. வரை.*

*புகழ் = ப் + உக் + அழ். கொண்டதன் உள்ளே மெய் உயிர்ப்புள்ள ஆழம். மனத்துள் மெய்யின் ஆழ்ந்த உயிர்ப்பு. மெய்யின்பம்.*

*தீங்கு செய்தவரை அழித்தவர்க்கு, அந்த ஒருநாள்தான் இன்பம். மாறாக, பொறுத்தவர்க்கோ இறக்கின்ற காலம்வரை மெய்யின்பம்.*

*பொறுத்தல் என்பது தன்னிலிருந்து பிரியாது இருத்தல். உயிரோடு ஒன்றி இருத்தல். அதுவே மெய்யின்பம் ஆகும்.*

**157. திறனல்ல தற்பிறர் செய்யினும் நோய்நொந்**
**தறனல்ல செய்யாமை நன்று.**

**திறன் அல்ல தன்-பிறர் செய்யினும், நோ நொந்து, அறன்**
**அல்ல செய்யாமை நன்று.**

*திறம் = த் + இற் + அம். தேகத்தில் இருந்து பிரியும் தன்மை. வலிமை. திறனல்ல = தேகத்தின் வலிமை அல்லாதன.*

*தற்பிறர் = தன் + பிறர். பகையான உறவினர். நோய் = ன் + ஓய். நெருங்கி முழுவதுமாகி இருத்தல். பிணி. நோவு = ன் + ஓஉ. நெருங்கி முழுவதுமாய் வெளிப்படல். வலி. பகையாகிவிட்ட உறவினர், தேகத்தின் வலிமை அற்று, மூலிகை மற்றும் வேதியியல் பொருள்கள் மூலம் செய்வினை செய்தாலும், ஏற்பட்ட பிணியின் வலியால் அறமல்லாததைச் செய்யாமல் இருத்தல் நல்லது.*

**158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்**
**தகுதியால் வென்று விடல்.**

**மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம் தம்**
**தகுதியான் வென்றுவிடல்.**

*தாந்தம் = தான் + தம்.*

*தகுதி = த் + அக் + உதி. தேகம் உயிர்ப்புள்ள மெய்யாய் வெளிப்படல். உயிரோடு ஒன்றல். பொறுமை.*

*வலிமை மற்றும் செல்வ மிகுதியால் எல்லை மீறிச் செய்தவரை, பொறுமையால் வென்றிடல் வேண்டும்.*

**159. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்.**

**துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச் சொல் நோற்கிற்பவர்.**

நோற்கிற்பவர் = பொறுப்பவர்.

உயிர்மையிலிருந்து விலகியவர் கூறிய இனிமையற்ற சொல்லைப் பொறுப்பவர், துறந்தாரைக் காட்டிலும் தூய்மையானவர்.

**160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின்.**

**உண்ணாது நோற்பார் பெரியர்-பிறர் சொல்லும்
இன்னாச் சொல் நோற்பாரின் பின்.**

மதிப்பில், பிறர்சொல்லும் இனிமையற்ற சொல்லைப் பொறுப்பவருக்குப் பின்புதான், உண்பதை விலக்கி உயிருடன் ஒன்றும் பெரியவர்.

பொறையுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

தோண்டுகின்றவரைப் பொறுக்கின்ற நிலம்போல, தம்மை இகழ்பவர்களைப் பொறுத்துக் கொள்ளுவர், அறிவுடையோர்.

தீமையைப் பொறுத்துக் கொள்ளுதல் இறப்பினைப் போன்றது. ஏனெனில், எதிர்வினை, மீண்டும் எப்பொழுதாவது பிறக்கலாம். ஆனால், மறந்து விடுவதோ பொறுத்தலைவிட நல்லது. ஏனெனில், தீமையை மறத்தலால், பகை உணர்வும், எதிர்வினையும் என்றுமே தோன்றாது.

வந்த விருந்தினருடன் ஒன்றி இயங்காமல் போகும் மடமையை, இல்லாமையிலும் பெரிய இல்லாமையை, விருந்தினர் பொறுப்பது போன்று, மடையன் செய்யும் தீச்செயலை, மிகுந்த மனவலிமையுடன் பொறுத்தல் வேண்டும்.

அகமுழுமையின் தொடர்ச்சி நீங்காமல் இருக்க, மனப்பொறுமையின் தொடர்ச்சியை, முழுமனதுடன் கடைப்பிடிக்க வேண்டும்.

தீங்கு செய்தவரைப் பொறுக்காமல், அழிப்பவரை, பொருட்டாக மதிக்க மாட்டார்கள், பெரியோர். மாறாக, தீங்கைப் பொறுத்தவரை, மதிப்புமிக்க பொன்னைப் போல், நிலையாக மனத்தில் கொள்வர்.

தீங்கு செய்தவரை அழித்தவர்க்கு, அந்த ஒருநாள்தான் இன்பம். மாறாக, பொறுத்தவர்க்கோ இறக்கின்ற காலம்வரை மெய்யின்பம்.

பகையாகிவிட்ட உறவினர், தேகத்தின் வலிமை அற்று, மூலிகை மற்றும் வேதியியல் பொருள்கள் மூலம் செய்வினை செய்தாலும், ஏற்பட்ட பிணியின் வலியால் அறமல்லாதவைச் செய்யாமல் இருத்தல் நல்லது. வலிமை மற்றும் செல்வ மிகுதியால் எல்லை மீறிச் செய்தவரை, பொறுமையால் வென்றிடல் வேண்டும். உயிர்மையிலிருந்து விலகியவர் கூறிய இனிமையற்ற சொல்லைப் பொறுப்பவர், துறந்தாரைக் காட்டிலும் தூய்மையானவர்.

பிறர்சொல்லும் இனிமையற்ற சொல்லைப் பொறுப்பவர், உண்பதை விலக்கி உயிருடன் ஒன்றும் பெரியவரைக் காட்டிலும், மதிப்பு மிக்கவர்.

# 17. அழுக்காறாமை

*அழுக்காறாமை = அழுக்கு + ஆறு + ஆமை. அழுக்கு ஆறு அடங்குதல். அழுக்காறாமை = அழுக்கு + ஆறாமை. அழுக்கு பிரியாமை. அழுக்காறாமை = பொறாமை எனும் மன அழுக்கு பிரியாமை.*

**161. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்**
**தழுக்கா றிலாத வியல்பு.**

**ஒழுக்கு ஆறாக் கொள்க-ஒருவன் தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு.**

*ஒழுக்கம் எனும் அகமும் புறமும் ஆழ்ந்து உள்ளே மெய்யாய் இருக்கும் தன்மையைத் தொடர்ந்து கடைப்பிடித்தால், ஒருவர் நெஞ்சம் பொறாமை இல்லாத இயல்பாகி விடும்.*

**162. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டும்**
**அழுக்காற்றி னன்மை பெறின்.**

**விழுப் பேற்றின் அஃது ஒப்பது இல்லை-யார் ம ட்டும்**
**அழுக்காற்றின் அன்மை பெறின்.**

*விழும்பேறு = விழும் + பேறு. விழும் = வ் + இழ் + உம். புறமும் அகமும் ஆழ்ந்து இருந்து உள் அமைதி. பேறு = ப் + ஏறு. ஏறு = ஏற் + உ. மிக உயர்ந்து பிரிந்து வெளிப்படு. பேறு = அகவெளி மிக உயர்ந்து பிரிந்து வெளிப்படல். விழும்பேறு = புறமும் அகமும் ஆழ்ந்து இருந்து உள் அமைதிபெற, அகவெளி மிக உயர்ந்து பிரிந்து வெளிப்படல்.*

*மாட்டு = ம் + ஆட் + உ. கொண்டு மூடி ஒட்டித் தொடர்ந்து வெளிப்படல். மௌனமாய்ப் பின்தொடரல்.*

*அன்மை = அல் + மை. இல்லாமை.*

*எவரிடமும் பொறாமை இல்லாத மனத்தன்மையைப் பெற்றால், அதற்கு இணையாக ஞானத்தைக் கொடுக்கும் பண்பு வேறேதும் இல்லை.*

*பொறாமை இருந்தால், மனம் வெளிச்சென்றவாறே இருக்கும். மனம் அமைதியற்று இருக்கும். பறிக்க நினைக்கும். செயலில் ஈடுபடும். கருமம் சேர்க்கும். ஊழ் சேரும். பிறப்பு வரும்.*

**163. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்**
**பேணா தழுக்கறுப் பான்.**

**அறன், ஆக்கம், வேண்டாதான் என்பான் பிறன் ஆக்கம்**
**பேணாது அழுக்கறுப்பான்.**

*பேண் = ப் + ஏண். கொண்டதை மிக உயர்த்தி மிக நெருக்கமாக்கு. வளர். காத்தல்.*

*அறத்தால் வரும் மெய்யின்பம் வேண்டாதவன், பொறாமையால், பிறருடைய செல்வத்தைக் காக்காமல் பிரிப்பான்.*

**164. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து.**

**அழுக்காற்றின் அல்லவை செய்யார்-இழுக்கு ஆற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து.**

*இழுக்காறு = கருமவினையால் ஏற்படும் பிறப்பு. ஊழ்வினை.*

*ஏதம் = ஏத் + அம். மிக உயரும் தேகத் தன்மை. ஏற்றம் = ஏற் + அம். மிக உயர்ந்து பிரியும் தன்மை.*

*பாக்கு = ப் + ஆக் + உ. வெளி மெய்யாகி வெளிப்படல்.*

*ஊழ்வினையால், உடல் மெய்யுணர்வை அடைய முடியாமல் படும் துன்பம் அறிந்து, பொறாமையால், தீங்கானவற்றைச் செய்ய மாட்டார், அறிவுடையோர்.*

**165. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.**

**அழுக்காறு உடையார்க்கு அது சாலும்-ஒன்னார்
வழுக்கியும் கேடு ஈன்பது.**

*ஒன்னார் = ஒன் + ஆர். ஒன்றாதவர். பகைவர். எதிரி.*

*வழுக்கியும் = தவறியும்.*

*எதிரிகள் தவறினாலும், ஒருவர்க்கு அழிவைத்தருவதற்கு பொறாமை ஒன்றே போதும்.*

**166. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும்.**

**கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.**

*ஒருவர், மற்றவர்க்குக் கொடுப்பதைக் கண்டு பொறாமைப்படுபவன், தான் மட்டுமின்றி, அவனுடைய உறவினரும், எளிய உணவும் உடையும் இல்லாமல், வறுமை அடைவர்.*

**167. அவ்வித் தழுக்கா றுடையானைச் செவ்வியாள்
தவ்வையைக் காட்டி விடும்.**

**அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.**

அவ்வித்து = அவ் + வித்து. பிறப்பை உண்டாக்கும்.

செவ்வியாள் = செவ்வி + ஆள். செவ்வி = ச் + எவ் + இ. இயக்கம் உயர்ந்து புறமும் அகமும் இருத்தல். செவ்வியாள் = சுறுசுறுப்பானவள். ஆக்கமுடையவள்.

தவ்வை = த் + அவ் + வை. தேகம் புறமும் அகமும் இன்றி நிலைத்தல். இயங்காது இருத்தல். சோம்பல்.

பிறப்பை உண்டாக்கும் பொறாமை உடையவனை, சுறுசுறுப்பு துணை நீங்க, சோம்பல் நிறைத்து விடும்.

**168. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்**
**தீயுழி யுய்த்து விடும்.**

**அழுக்காறு என ஒரு பாவி திருச் செற்று,**
**தீயுழி உய்த்துவிடும்.**

பாவி = ப் + ஆவ் + இ. பிறப்பை ஆக்குபவன்.

திருச்செற்று = திரு + செற்று. திரு = த் + இரு. தேகமாய் இரு. வடிவமாய் இரு. தேகம். செல்வம். செற்று = ச் + எற் + உ. இயக்கத்தை உயர்த்திப் பிரித்து வெளிப்படுத்து. அழி. திருச்செற்று = தேகத்தை / செல்வத்தை அழித்து.

தீயுழி = தீ + உழ் + இ. தீ உள் ஆழம் வரை இருத்தல்.

பொறாமை எனும் பிறப்பை ஆக்கும் தன்மை, உடலை / செல்வத்தை அழித்து, குற்ற மனப்பான்மையால், தீயினுள் இருப்பதைப்போல், துடிக்க வைக்கும்.

**169. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்**
**கேடு நினைக்கப் படும்.**

**அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும், செவ்வியான்**
**கேடும், நினைக்கப்படும்.**

செவ்வியான் = செவ்வி + ஆன். செவ்வி = ச் + எவ் + இ. இயக்கம் உயர்ந்து புறமும் அகமுமாய் நிலைப்பது. செவ்வியான் = மெய்யுணர்வாளர். உழைப்பாளன்.

அத்தகைய பொறாமை உடையவனின் செல்வமும், தூய மெய்யுணர்வாளரின் / உழைப்பாளனின் வறுமையும், கேள்விக்கும் சிந்தனைக்கும் உரியது. அது, ஊழ்வினையின் விநோதம்.

**170. அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்**
**பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.**

**அழுக்கற்று அகன்றாரும் இல்லை; அஃது இல்லார்**
**பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்.**

*பொதுவாக, பொறாமை, மனத்தில் இருந்து, பிரிந்தோடி உயர்ந்தாரும் இல்லை, அது இல்லாதவர், செல்வத்தில் குறைந்தாரும் இல்லை.*

*அழுக்காறாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*ஒருவர் மெய்யுணர்வில் தொடர்ந்து நிலைத்தால், பொறாமை இல்லாத மன இயல்பைப் பெறுவார்.*

*எவரிடமும் பொறாமை இல்லையென்றால், மனம் உயிரில் ஒன்றி நிலைக்கும்.*

*அறத்தால் வரும் மெய்யின்பம் வேண்டாதவன், பொறாமையால், பிறருடைய செல்வத்தைக் காக்காமல் அழிப்பான்.*

*கருமவினையால், மெய்யுணர்வை அடைய முடியாமல், உடல் படும் துன்பம் அறிந்து, பொறாமையால், தீங்கானவற்றைச் செய்ய மாட்டார், அறிவுடையோர்.*

*எதிரிகள் தவறினாலும், ஒருவர்க்கு அழிவைத்தருவதற்குப்*

*பொறாமை ஒன்றே போதும்.*

*ஒருவர், மற்றவர்க்குக் கொடுப்பதைக் கண்டு பொறாமைப்படுபவன், தான் மட்டுமின்றி, அவனுடைய உறவினரும், எளிய உணவும் உடையும் இல்லாமல், வறுமை அடைவர்.*

*பிறப்பை உண்டாக்கும் பொறாமை உடையவனை, சுறுசுறுப்பு துணை நீங்க, சோம்பல் நிறைத்து விடும்.*

*பொறாமை எனும் பிறப்பை ஆக்கும் தன்மை, உடலை / செல்வத்தை அழித்து, குற்ற மனப்பான்மையால், தீயினுள் இருப்பதைப்போல், துடிக்க வைக்கும்.*

*அத்தகைய பொறாமை உடையவனின் செல்வமும், தூய மெய்யுணர்வாளரின் வறுமையும், கேள்விக்கும் சிந்தனைக்கும் உரியது.*

*பொறாமை, மனத்தில் இருந்து, பிரிந்தோடி உயர்ந்தாரும் இல்லை, அது இல்லாதவர், செல்வத்தில் குறைந்தாரும் இல்லை.*

## 18. வெஃகாமை

*வெஃகு = வ் + எஃ + உ. புறமும் அகமும் உயர்ந்து பொருண்மையை வெளிப்படுத்து. வலிமையாலும் பேராசையாலும் பிறர்பொருளை அபகரித்தல். வெஃகாமை = பிறர் பொருளை அபகரிக்காமை.*

**171. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்**
**குற்றமு மாங்கே தரும்.**

**நடுவு இன்றி நன் பொருள் வெஃகின், குடி பொன்றி,**
**குற்றமும் ஆங்கே தரும்.**

*குடி = க் + உட் + இ. மெய் புறத்தில் தொடர்ந்து இருத்தல். மனைவி மக்கள்.*

*பொன்று = ப் + ஒன்று. கொண்டது ஒன்றாவது. தனிமைப்படுவது. அழிவது.*

*குற்றம் = க் + உற் + அம். மெய்யைப் புறத்தே பிரிக்கும் தன்மை. தண்டனை.*

*நியாயமில்லாமல் பிறர் உழைப்பால் ஈட்டிய பொருளை அபகரித்தால், (வலிமைமிக்கவரிடம் அல்லது அரசனிடம் முறையீடு செய்யப்பட்டால்), மனைவி மக்கள் தனிமைப்பட்டு விடுவர், தண்டனையும் வழங்கப்படும்.*

**172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்**
**நடுவன்மை நாணு பவர்.**

**படு பயன் வெஃகி, பழிப்படுவ செய்யார்- நடு**
**அன்மை நாணுபவர்.**

*அற்பப் பயனுக்காக ஆசைப்பட்டு, பழி என்றும் தொடரும் காரியங்களைச் செய்யமாட்டார்கள், நடுவு இல்லாமையைக் கண்டு வெட்கப்படுபவர்கள்.*

**173. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே**
**மற்றின்பம் வேண்டு பவர்.**

**சிற்றின்பம் வெஃகி, அறன் அல்ல செய்யாரே-**
**மற்று இன்பம் வேண்டுபவர்.**

*மற்றின்பம் = மற்ற + இன்பம். சிற்றின்பத்திற்கு எதிர் பேரின்பம். மற்றின்பம் = மற்று + இன்பம். மற்று = ம் + அற்று. கொண்டு மூடாமல். தூய வெளியாதல். மற்றின்பம் = தூய வெளியாகும் இன்பம். பேரின்பம்.*

*சிறிய இன்பத்திற்கு ஆசைப்பட்டு, உயிரோடு ஒன்றாத செயல்களைச் செய்யாதவரே, பேரின்பத்திற்கு ஆசைப்பட தகுதியானவர்.*

**174. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.**

**'இலம்' என்று வெஃகுதல் செய்யார்-புலம் வென்ற
புன்மையில் காட்சியவர்.**

*புன்மையில் = புல் + மை + இல். சிறுமை இல்லாத.*

*காட்சி = க் + ஆட்சி. மெய்யின் ஆட்சி. பெருந்தன்மைமிக்க தோற்றம்.*

*இல்லை என்பதற்காக ஆசைப்பட்டு, பிறர்பொருளை அபகரிக்கும் காரியங்களைச் செய்யமாட்டார், புலன்களை வென்று சிறுமை இல்லாத, மெய்யாட்சி உடையவர்.*

**175. அஃகி யகன்ற வறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.**

**அஃகி அகன்ற அறிவு என் ஆம்-யார் மாட்டும்
வெஃகி, வெறிய செயின்?**

*அஃகி = அஃ + இ. சுருங்கி. குறுகி. அகத்துள் ஆழ்ந்து.*

*அகன்ற = அகல் + ற. அகன்றுப் பிரிந்த. விரிந்துப் பிரிந்த. வெளியாய் விரிந்த.*

*வெறி = வ் + எறி. புறமும் அகமும் உயர்ந்து பிரித்தல். பிடுங்குதல். அபகரித்தல்.*

*அகத்துள் சுருங்கி, ஆழ்ந்து, தூய வெளியாய் விரிந்த அறிவால், என்ன பயன், யாருடைய பொருள்மீதாவது ஆசைப்பட்டு அபகரித்தால்?*

**176. அருள்வெஃகி யாற்றின்க ணின்றார் பொருள்வெஃகிப்
பொல்லாது சூழக் கெடும்.**

**அருள் வெஃகி, ஆற்றின்கண் நின்றான், பொருள் வெஃகிப்
பொல்லாத சூழ, கெடும்.**

*அருள் = அர் + உள். இருத்தல் உள்ளே. பிரித்தல் உள்ளே. உயிரோடு ஒன்றல். தேகம் மனம் பிரிதல். உயிர் நிலைத்தல்.*

*பொல்லாது = ப் + ஒல் + ஆத் + உ. மனம் மொத்தமும் அதிர்வாகி தேகமாகி வெளிப்படுதல். செயல்கள். வினைகள்.*

*சூழ = மிகுதியாக.*

*அருளுக்கு ஆசைப்பட்டு ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தோர், பொருளுக்கு ஆசைப்பட்டால், வினைகள் மிகுந்து, ஒழுக்கமுடன் அருளும் அழியும்.*

177. **வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்**
**மாண்டற் கரிதாம் பயன்.**

**வேண்டற்க, வெஃகி ஆம் ஆக்கம்-விளைவயின்**
**மாண்டற்கு அரிது ஆம் பயன்!**

*= ம் + ஆண் + ட் + அல். கொண்டு மூடி மிக நெருங்கி ஒட்டித்தொடரல். இறத்தல். அழிதல்.*

*அரிது = கடினம்.*

*ஆசைப்பட்டு அபகரித்து வரும் செல்வத்தை வேண்டாதே, ஏனென்றால், அதன் விளைவாய் வரும் வினைப்பயன், அழிவது கடினம்.*

178. **அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை**
**வேண்டும் பிறன்கைப் பொருள்.**

**'அஃகாமை செல்வத்திற்கு யாது?' எனின், வெஃகாமை**
**வேண்டும் பிறன் கைப் பொருள்.**

*தன்னுடைய செல்வம் குறையாமலிருக்க வேண்டும் என்றால், பிறனுடைய உரிமைப் பொருளுக்கு, ஆசைப்படாமல் இருக்க வேண்டும்.*

179. **அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேரும்**
**திறனறிந் தாங்கே திரு.**

**அறன் அறிந்து வெஃகா அறிவு உடையார்ச் சேரும்- திறன்**
**அறிந்து ஆங்கே திரு.**

*அறம் அறிந்து ஆசைப்படாத அறிவுடையோரின் திறனை அறிந்து, செல்வம் அவரைச் சேரும் தானாகவே.*

180. **இறலீனு மென்னாது வெஃகின் விறலீனும்**
**வேண்டாமை யென்னுஞ் செருக்கு.**

**இறல் ஈனும், எண்ணாது வெஃகின்; விறல் ஈனும்,**
**வேண்டாமை என்னும் செருக்கு.**

*இறல் = இற் + அல். இருப்பு அறுந்து இல்லாமல் போதல். இறப்பு. மரணம். அழிதல்.*

*விறல் = வ் + இறல். புறம் அகம் அழிதல். முழுமையாதல். தூய வெளியாதல்.*

*அழிவைத் தரும் என்று எண்ணாமல், பிறர் பொருள் மேல், சிலர் ஆசைப்பட்டால், ஆசையில்லாமை, என்னும் பெருமிதத்தால், ஞானம் அடைவர், வேறு சிலர்.*

**வெஃகாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஒருவன், நியாயமில்லாமல், பிறர் உழைப்பால் ஈட்டிய பொருளை அபகரித்தால், அவன் தன் மனைவி மக்களைப் பிரிந்து, தண்டனைக்கும் உள்ளாவான்.*

*நடுவு இல்லாமையைக் கண்டு வெட்கப்படுபவர்கள், அற்ப பயனுக்காக ஆசைப்பட்டு, பழி என்றும் தொடரும் காரியங்களைச் செய்யமாட்டார்கள்.*

*சிறிய இன்பத்திற்கு ஆசைப்பட்டு, உயிரோடு ஒன்றாத செயல்களைச் செய்யாதவரே, பேரின்பத்திற்கு ஆசைப்பட தகுதியானவர்.*

*புலன்களை வென்று சிறுமை இல்லாத, மெய்யாட்சி உடையவர், இல்லை என்பதற்காக ஆசைப்பட்டு, பிறர்பொருளை அபகரிக்கும் காரியங்களைச் செய்யமாட்டார்.*

*எவருடைய பொருள்மீதாவது ஆசைப்பட்டு அபகரித்தால், அகத்துள் ஆழ்ந்து, சுருங்கி, தூய வெளியாய் விரிந்த அறிவால், என்ன பயன்?*

*அருளுக்கு ஆசைப்பட்டு ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தோர், பொருளுக்கு ஆசைப்பட்டால், வினைகள் மிகுந்து, ஒழுக்கமுடன் அருளும் அழியும்.*

*ஆசைப்பட்டு அபகரித்து வரும் செல்வத்தை வேண்டாதே, ஏனென்றால், அதன் விளைவாய் வரும் வினைப்பயன், அழிவது கடினம்.*

*தன்னுடைய செல்வம் குறையாமலிருக்க வேண்டும் என்றால், பிறனுடைய உரிமைப் பொருளுக்கு, ஆசைப்படாமல் இருக்க வேண்டும்.*

*அறம் அறிந்து, ஆசைப்படாத, அறிவுடையோரின் திறனை அறிந்து, செல்வம், தானாகவே, அவரை வந்து சேரும்.*

*அழிவைத் தரும் என்று எண்ணாமல், பிறர் பொருள் மேல், சிலர் ஆசைப்பட்டால், ஆசையில்லாமை, என்னும் பெருமிதத்தால், ஞானம் அடைவர், வேறு சிலர்.*

# 19. புறங்கூறாமை

*புறங்கூறாமை = புறம் + கூறாமை. கூறாமை = சொல்லாமை. புறங்கூறாமை = ஒருவரைப் பற்றி, அவர் இல்லாதபோது, தவறாக பேசாமை.*

**181. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.**

**அறம் கூறான், அல்ல செயினும், ஒருவன்
புறம் கூறான் என்றல் இனிது.**

*அறம் பற்றிப் பேசாதவன், அறமற்றதைச் செய்தாலும், அவன் புறங்கூறான், என்று அறியப்படுதல் நல்லது.*

**182. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.**

**அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே-
புறன் அழீஇப் பொய்த்து நகை.**

*அறனழீஇ = அறன் + அழி + இ + இ. அறம் விலக்கி உறுதியாய் இருத்தல்.*

*புறனழீஇ = புறன் + அழி + இ + இ. புறம் மறைத்து நிலையாய் இருத்தல்.*

*நகை = ன் + அக் + ஐ. நெருக்கமாய் உயிரோடும் மெய்யோடும் ஐக்கியமாவது.*

*அறத்திலிருந்து முழுவதுமாய் விலகி, அறமற்றதைச் செய்வதைவிட, முகத்தில் தெரியும் அகத்தை மறைத்து, பொய்யாய் சிரிப்பது, மிகவும் தீங்கானது.*

**183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும்.**

**புறம் கூறி, பொய்த்து, உயிர் வாழ்தலின், சாதல்
அறம் கூறும் ஆக்கம் தரும்.**

*புறம் பேசிப் பொய்யாக (மன உளைச்சலுடன், செத்து செத்து) உயிர் வாழ்வதைக் காட்டிலும், (புறம் பேசாமல், தன் மனத்தோடு ஒன்றி) செத்துப் போவது, அறத்தால் வரும் பயனைக் கொடுக்கும்.*

**184. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க**
**முன்னின்று பின்னோக்காச் சொல்.**

**கண் நின்று, கண் அறச் சொல்லினும், சொல்லற்க- முன்**
**இன்று பின் நோக்காச் சொல்.**

*கண் எதிரே நின்று, வெளிப்படையாக, மற்றவரின் பார்வை நாணத்தால் விலகும்படி பேசினாலும் பரவாயில்லை, ஆனால், அன்று ஏன் அவரைப்பற்றி, பிறரிடம், மறைவாய் அப்படிச் சொன்னோமோ என்று, பின்னாளில் வருந்தும்படியான சொற்களை மட்டும் சொல்லக்கூடாது.*

**185. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்**
**புன்மையாற் காணப் படும்.**

**அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம் சொல்லும்**
**புன்மையால் காணப்படும்.**

*அன்மை = அல் + மை. இல்லாமை*

*புன்மை = புல் + மை. சிறுமை.*

*அறம்பற்றிப் பேசுபவர் நெஞ்சத்தில், அறம் இல்லாமை, அவர் புறம்பேசும் சிறுமையால், வெளிப்பட்டு விடும்.*

**186. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்**
**திறந்தெரிந்து கூறப் படும்.**

**பிறன் பழி கூறுவான் தன் பழியுள்ளும்**
**திறன் தெரிந்து கூறப்படும்.**

*பிறரைப் பற்றிப் புறம் சொல்லுபவரின் வாழ்க்கையிலும் நடத்தையிலும் உள்ள, மிக தீங்கானவற்றை அறிந்த வேறொருவர், அவற்றை வெளிப்படையாக சொல்லி, அவருடைய மானத்தை வாங்கி விடுவார். தீயவனுக்குத் தீயவன் உண்டு போலும்.*

**187. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
**நட்பாட றேற்றா தவர்.**

**பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்-நகச் சொல்லி**
**நட்பு ஆடல் தேற்றாதவர்.**

*எதையாவது பேசச் சொல்லி, அவர்தம் கூற்றைத் திரித்து, அவருக்கு இருக்கும் உறவுகளைப் பிரிப்பர், புறம் பேசுவோர். அவர்கள் சிரித்துப்பேசி நட்புடன் பழகும் பக்குவம் அடையாதவர்கள்.*

**188. துன்னியார் குற்றமுந் தூற்று மியல்பினார்**
**என்னைகொ லேதிலார் மாட்டு.**

**துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்,**
**என்னைகொல்; ஏதிலார்மாட்டு?**

*துன்னியார் = த் + உன் + இ + ஆர். தேகத்தின் புறத்தே நெருங்கி இருப்பவர். நண்பர். உறவினர். சுற்றம்.*

*ஏதிலார் = ஏது(ம்) + இலார். எந்த உறவும் இல்லாதவர். அந்நியர். பகைவர். அயலார்.*

*நெருங்கி இருப்பவர்களின் குறைகளைக்கூட ஊரறிய பரப்பும் இயல்பினை உடையவர்கள், எந்த உறவும் இல்லாத அந்நியரைப் பற்றி, எப்படியெல்லாம் சொல்வார்களோ? என்ன வேண்டுமானாலும் சொல்வார்கள்.*

**189. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்**
**புன்சொல் லுரைப்பான் பொறை.**

**அறன் நோக்கி ஆற்றும்கொல் வையம்-புறன் நோக்கிப்**
**புன் சொல் உரைப்பான் பொறை?**

*வையம் = வை + அம். வை = வ் + ஐ. புறமும் அகமும் ஐக்கியமாதல். அசையாமை. நிலைத்த தன்மை.*

*புன்சொல் = புல் + சொல். அற்ப, சிறிய, சின்ன சொல்.*

*பொறை = ப் + ஒற் + ஐ. கொண்டதை முழுவதுமாய்ப் பிரித்து ஐக்கியமாவது. புறக்கணிப்பது. விலகி நிற்பது.*

*அக்கம் பக்கம் பார்த்து, பேசப்படுபவர் அருகில் இல்லையென்று அறிந்து, அவரைப் பற்றித் தவறாகப் பேசுபவனைப் புறக்கணித்து (தாங்கி), உலகம் அசையாமல் இருப்பது, தான் இயற்றும் அறத்திற்காகத் தானோ?*

**190. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னு முயிர்க்கு.**

**ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கிற்பின், தீது**
**உண்டோ, மன்னும் உயிர்க்கு?**

*ஏதிலார் = ஏதும் + இலார். எந்த உறவும் இல்லாதவர். அந்நியர். பகைவர். அயலார்.*

*தீது = த் + ஈத் + உ. தேகம் தந்த தேகம் வெளிப்படுவது. பிறப்பால் வரும் பிறப்பு.*

*மன் = ம் + அன். கொண்டு மூடி உயிரை நெருங்குவது. மனம்.*

*எந்த உறவும் இல்லாத அயலாரின் குற்றத்தைக் காண்பதுபோல்,*

*(தன்னுடைய வாழ்வைப் பாதிக்கின்ற, எல்லா வகையிலும் தனக்கு மிகவும் நெருக்கமான) தன்னுடைய குற்றத்தைக் கண்டால், அது களையப்படும் (குற்றம் என தெரிந்தப்பின், அது தொடராது. தொடர்ந்தால், அது குற்றமாக பார்க்கப்படவில்லை என்று பொருள்!).*

*குற்றங்களைக் களைந்தப்பின், மறுபிறப்பு இருக்குமா? இருக்காது. மனமும் உயிரோடு கலந்துவிடும்.*

*அகந்தை இருக்கும் வரை, மனம் தனி இருப்பாய் இருக்கும். மனத்தின் தனி இருப்புக்குக் காரணமே, அகந்தைதான்! அகந்தை தன் குற்றத்தைக் காணாது, ஆனால், பிறர் குற்றத்தைக் காணும். ஆனால், மனம், அறிவின் அறிவால் (புலன்கள், எண்ணம், கருத்து, அகந்தை, சிந்தனை ஆகியவற்றின் உருவாக்கம், உறவுகள், இயக்கங்கள் பற்றிய தெளிவு) அகந்தையை மீறி, தன் குற்றத்தைக் காணத் துவங்கினால், அகந்தையும் அழியத் தொடங்கும். குற்றங்கள் களையப்பட்டால், அகந்தையும் இருக்காது. அகந்தையற்ற மனம், தனி இருப்பாக இருக்க முடியாமல், உயிருடன் கலந்துவிடும். அகந்தையற்ற, மனமற்ற உயிர், பிறப்பற்று நிலைக்கும்.*

**புறங்கூறாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அறம் பற்றிப் பேசாதவன், அறமற்றதைச் செய்தாலும், அவன் புறங்கூறான், என்று அறியப்படுதல் நல்லது.*

*அறத்திலிருந்து முழுவதுமாய் விலகி, அறமற்றதைச் செய்வதைவிட, முகத்தில் தெரியும் அக உணர்வை மறைத்து, பொய்யாய்ச் சிரிப்பது, மிகவும் தீங்கானது.*

*புறம் பேசிப் பொய்யாக உயிர் வாழ்வதைக் காட்டிலும், செத்துப் போவது, அறத்தால் வரும் பயனைக் கொடுக்கும்.*

*கண் எதிரே நின்று, வெளிப்படையாக, மற்றவரின் பார்வை நாணத்தால் விலகும்படி பேசினாலும் பரவாயில்லை, ஆனால், அன்று ஏன் அவரைப்பற்றி, பிறரிடம், மறைவாய் அப்படிச் சொன்னோமோ என்று, பின்னாளில் வருந்தும்படியான சொற்களை மட்டும் சொல்லக்கூடாது.*

*அறம்பற்றிப் பேசுபவர் நெஞ்சத்தில், அறம் இல்லாமை, அவர் புறம்பேசும் சிறுமையால், வெளிப்பட்டு விடும்.*

*பிறரைப் பற்றிப் புறம் சொல்லுபவரின் வாழ்க்கையிலும் நடத்தையிலும் உள்ள, மிக தீங்கானவற்றை அறிந்த வேறொருவர், அவற்றை வெளிப்படையாகச் சொல்லி, அவருடைய மானத்தை வாங்கி விடுவார்.*

*எதையாவது பேசச் சொல்லி, அவர்தம் கூற்றைத் திரித்து, அவருக்கு இருக்கும் உறவுகளைப் பிரிப்பர், புறம் பேசுவோர். அவர்கள் சிரித்துப்பேசி நட்புடன் பழகும் பக்குவம் அடையாதவர்கள்.*

*நெருங்கி இருப்பவர்களின் குறைகளைக்கூட ஊரறிய பரப்பும் இயல்பினை உடையவர்கள், எந்த உறவும் இல்லாத அந்நியரைப் பற்றி, எப்படியெல்லாம் சொல்வார்களோ? என்ன வேண்டுமானாலும் சொல்வார்கள்.*

*அக்கம் பக்கம் பார்த்து, பேசப்படுபவர் அருகில் இல்லையென்று அறிந்து, அவரைப் பற்றித் தவறாப் பேசுபவனைப் புறக்கணித்து (தாங்கி), உலகம் அசையாமல் இருப்பது, தான் இயற்றும் அறத்திற்காகத் தானோ?*

*எந்த உறவும் இல்லாத அயலாரின் குற்றத்தைக் காண்பதுபோல், தன்னுடைய குற்றத்தையும் கண்டால், அது களையப்படும். குற்றங்களைக் களைந்தப்பின், மறுபிறப்பு இருக்குமா? இருக்காது. மனமும் உயிரோடு கலந்துவிடும்.*

# 20. பயனில சொல்லாமை

*பயனில சொல்லாமை = பயனில + சொல்லாமை. பயனில = பயன் + இல. பயன் இல்லாதவை. பயனில சொல்லாமை = பயனற்றவை பேசாமை.*

**191. பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும்.**

**பல்லார் முனியப் பயன் இல சொல்லுவான்
எல்லாரும் எள்ளப்படும்.**

*பல்லார் = பல் + ஆர். பல் = ப் + அல். கொண்டதில் அதிர்வின்மை. மனவெளியில் உயிர்ப்புள்ள அதிர்வு. பல்லார் = மனத்தில் சலனமற்றவர். அசையாமல் இருப்பவர். ஞானி.*

*முனி = முன் + இ. முன் இருத்தல். புறம் வருதல். கோபம்.*

*எள் = எ + ள். உயர்ந்த மிகை அதிர்வு / உரத்த குரல். சிறியது.*

*ஞானிக்கு கோபம் வருமளவுக்கு, பயனற்றதைச் சொல்லுபவனை, அனைவரும், எள்ளைப் போன்று சிறியதாய்ப் பார்த்து, உரத்த குரலில் திட்டி விரட்டுவர்.*

**192. பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கண் செய்தலின் தீது.**

**பயன் இல பல்லார்முன் சொல்லல், நயன் இல
நட்டார்கண் செய்தலின், தீது.**

*நயம் = ன் + அய் + அம். நெருங்கி இருக்கும் தன்மை. அன்பு. பரிவு. மென்மை. இனிமை. நேர்மை.*

*நட்டார் = ன் + அட் + ஆர். நெருங்கி ஒட்டித் தொடர்பவர். மனைவி மக்கள். சுற்றம். உறவினர்.*

*ஞானியின்முன் பயனில்லாத சொற்களைச் சொல்வது, தன்னுடைய சொந்தத்திற்கு நேர்மையற்ற செயல்களைச் செய்வதைக் காட்டிலும், தீங்கானது.*

*சொந்தங்கள் நேர்மையற்று செய்யப்பட்ட தீங்கைப் புறக்கணிக்கலாம். ஞானி, பயனில்லாத சொற்களைப் பொறுத்துக் கொண்டாலும், அசையாமை எனும் தவம் கலைவதால் ஏற்படும் சலனங்கள், பயனற்ற சொற்களைச் சொன்னவனைப் பாதிக்கும். மறுபிறப்புக்கு வித்திடும்.*

**193. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.**

**நயன் இலன் என்பது சொல்லும் - பயன் இல**
**பாரித்து உரைக்கும் உரை.**

*பாரித்து = ப் + ஆர் + இத் + உ. கொண்டதைப் பிரித்து / உரத்து இருத்தி வடிவமாக்கி வெளிப்படுத்து.*

*உரைக்கும் உரை = சொன்னதை மிக விளக்கிச் சொல்வது. சொன்னதையே சொல்வது.*

*ஒருவன் நேர்மையற்றவன் என்பதை, அவன் பயனில்லாதவற்றை நீட்டி முழக்கிச் சொல்வதே, காட்டிவிடும்.*

**194. நயன்சாரா நன்மையு நீங்கும் பயன்சாராப்**
**பண்பில்சொற் பல்லா ரகத்து.**

**நயன் சாரா நன்மையின் நீக்கும்-பயன்சாராப்**
**பண்பு இல் சொல் பல்லாரகத்து.**

*அகத்து = மனத்தில்.*

*பயனற்ற பண்பில்லாத சொல், ஞானியர் மனத்தில் தோன்றினாலே, அவரிடம் நேர்மை சேராது, அவரைவிட்டு நன்மையும் நீங்கும்.*

**195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில**
**நீர்மை யுடையார் சொலின்.**

**சீர்மை சிறப்பொடு நீங்கும-ப் யன் இல**
**நீர்மை உடையார் சொலின்.**

*சீர்மை = சீர் + மை. சீர் = ச் + ஈர். இயக்கம் தருதல் / பிரிதல். சீர்மை = இயக்கம் தரும் / பிரியும் தன்மை. இயக்கத்தின் ஒழுங்கு. ஒழுக்கம்.*

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கத்தின் இறப்பு. இயக்கமின்மை. சத்தமின்மை. சலனமின்மை. அசைவின்மை. அமைதி.*

*நீர்மை = நீர் + மை. நீர் = ன் + ஈர். நெருக்கம் தருவது / பிரிவது. நீர்மையுடையார் = நீரின் தன்மை உடையவர். தான், தனது என்றில்லாமல் இயல்பாய் இருப்பவர். அகந்தை அற்றவர்.*

*அகந்தையற்று இயல்பாய் இருப்பவர், பயனற்ற சொல்லைக் கூறினார் என்றால், அவர்தம் ஒழுக்கம், அரிய அமைதியுடன், போய்விடும்.*

**196. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்**
**மக்கட் பதடி யெனல்.**

**பயன் இல் சொல் பாராட்டுவானை மகன் எனல்;**
**மக்கட் பதடி எனல்.**

*பாராட்டு = பார் + ஆட்டு. பார்த்தலும் ஆட்டுதலும். பார் = ப் + ஆர். கொண்டதில் இருந்து பிரிவது. மனத்திலிருந்து எண்ணம் பிரிதல். வாயிலிருந்து சத்தம் பிரிதல். பாராட்டு = சத்தமும் உடலசைவும்.*

*பதடி = ப் + அத் + அட் + இ. கொண்டதில் தேகமற்று / பயனின்றி ஒட்டித் தொடர்ந்து இருப்பது. வடிவத்தில் சாரமில்லை. சாரமற்ற உருவம்.*

*பயனற்ற சொற்களைச் சத்தமாகவும் உடலசைத்தும் சொல்லிக் கொண்டிருப்பவனை, பெற்றவன் வேண்டுமானால் மகனென்று சொல்லிக் கொள்ளலாம், மக்களோ, பதடி என்றே அழைப்பர்.*

**197. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்**
**பயனில சொல்லாமை நன்று.**

**நயன் இல சொல்லினும் சொல்லுக! சான்றோர்**
**பயன் இல சொல்லாமை நன்று.**

*சான்றோர் = சான்று + ஓர். முழுமையானவர். முன் உதாரண பெரியவர்கள்.*

*முன் உதாரண பெரியவர்கள், அன்பில்லாத சொன்னாலும் பரவாயில்லை, பயனற்ற சொல்லைச் சொல்லாமல் இருப்பது நல்லது.*

**198. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்**
**பெரும்பய னில்லாத சொல்.**

**அரும் பயன் ஆயும் அறிவினார் சொல்லார்-**
**பெரும் பயன் இல்லாத சொல்.**

*வாழ்வின் மிகச் சிறந்த பயனான வீடுபேற்றை / பிறப்பறுப்பை ஆயும் அறிவுடையோர், மிகவும் பயனில்லாத சொல்லைச் சொல்லமாட்டார்.*

**199. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த**
**மாசறு காட்சி யவர்.**

**பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்-மருள் தீர்ந்த**
**மாசு அறு காட்சியவர்.**

*பொருடீர்ந்த = பொருள் + தீர்ந்த. பொருளற்ற.*

*பொச்சாந்து = பொய் + சாந்து. பொய் = ப் + ஒய். கொண்டது முழுவதும் இருத்தல் உயிர்ப்புடன். மனம் முழுதும் இருத்தல். உடல் முழுதும் இருத்தல். வாய் முழுதும் இருத்தல். சாந்து = வண்ணம். நிறம்.*

*மருடீர்ந்த = மருள் + தீர்ந்த. மருள் = ம் + அருள். கொண்டு மூடப்பட்ட அருள். இருள். மயக்கம்.*

மாசறு = மாசு + அறு. தெளிவான.

காட்சி = க் + ஆட்சி. மெய்யின் ஆட்சி. மெய்யின்பத் தோற்றம்.

பொருளற்றச் சொற்களை சும்மா ஏமாற்றுவதற்காகக்கூட / வேடிக்கையாகக்கூட சொல்லமாட்டார்கள், அகந்தை இருள் நீங்கிய தெளிவான மெய்யின்பத் தோற்றமாய் இருப்பவர்.

**200. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல்.**

**சொல்லுக, சொல்லில் பயன் உடைய! சொல்லற்க,**
**சொல்லில் பயன் இலாச் சொல்!**

சொல்லுங்கள் பயனுடைய சொற்களைத் தேர்ந்தெடுத்து. சொல்லாமல் அமைதி காப்பீர், சொற்களில் / சொல்வதால் பயனில்லை என்றால்.

பயனில சொல்லாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

ஞானிக்குக் கோபம் வருமளவுக்கு, பயனற்றதைச் சொல்லுபவனை, பார்க்கும் அனைவரும் திட்டுவர்.

ஞானியின்முன் பயனில்லாத சொற்களைச் சொல்வது, தன்னுடைய சொந்தத்திற்கு நேர்மையற்ற செயல்களைச் செய்வதைக் காட்டிலும், தீங்கானது.

ஒருவன் நேர்மையற்றவன் என்பதை, அவன் பயனில்லாதவற்றை நீட்டி முழக்கிச் சொல்வதே, காட்டிவிடும்.

பயனற்ற பண்பில்லாத சொல், ஞானியர் மனத்தில் தோன்றினாலே,

அவரிடம் நேர்மை சேராது, அவரைவிட்டு நன்மையும் நீங்கும்.

அகந்தையற்று இயல்பாய் இருப்பவர், பயனற்ற சொல்லைக் கூறினார் என்றால், அவர்தம் ஒழுக்கம், அரிய அமைதியுடன், போய்விடும்.

பயனற்ற சொற்களைச் சத்தமாகவும் உடலசைத்தும் சொல்லிக் கொண்டிருப்பவனை, பெற்றவன் வேண்டுமானால் மகனென்று சொல்லிக் கொள்ளலாம், மக்களோ, பதடி என்றே அழைப்பர்.

முன் உதாரண பெரியவர்கள், அன்பில்லாதச் சொன்னாலும் பரவாயில்லை, பயனற்ற சொல்லைச் சொல்லாமல் இருப்பது நல்லது.

வாழ்வின் மிகச் சிறந்த பயனான வீடுபேற்றை / பிறப்பறுப்பை ஆயும் அறிவுடையோர், மிகவும் பயனில்லாத சொல்லைச் சொல்லமாட்டார்.

அகந்தை இருள் நீங்கிய, தெளிவான மெய்யின்பத் தோற்றமாய் இருப்பவர், பொருளற்றச் சொற்களை, வேடிக்கையாகக்கூட சொல்லமாட்டார்கள்.

சொல்லுங்கள் பயனுடைய சொற்களைத் தேர்ந்தெடுத்து. சொல்லாமல் அமைதி காப்பீர், சொற்களில் / சொல்வதால் பயனில்லை என்றால்.

# 21. தீவினையச்சம்

தீவினையச்சம் = தீவினை + அச்சம். தீவினை = தீ + வினை. தீ = த் + ஈ. தேகத்தைத் தருவது. பிறப்பைத் தருவது. வினை = வி + னை. வி = அப்பால். னை = ன் + ஐ. நெருங்கி ஐக்கியமாவது. வினை = (உயிருடன்) நெருங்கி ஐக்கியமாவதற்கு அப்பால். அமைதிக்கு அப்பால். செயல். தீவினை = பிறப்பைத் தரும் செயல். அழிக்கும் செயல்.

தீவினையச்சம் = பிறப்பைத் தரும் செயலுக்கு அஞ்சுதல்.

**201. தீவினைய ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்**
**தீவினை யென்னுஞ் செருக்கு.**

**தீவினையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர்-**
**தீவினை என்னும் செருக்கு.**

விழுமியார் = வ் + இழ் + உம் + இ + ஆர். புறமும் அகமும் ஆழ்ந்து இருந்து உள் அமைதியுடன் இருப்பவர்.

செருக்கு = ச் + எர் + உக் + உ. இயக்கம் உயர்ந்து இருத்தலை புறமெய்யால் வெளிப்படுத்தல். பிறர் அஞ்சுவதால் வரும் இன்பம்.

தீவினையை வாழ்வாகச் செய்பவர், பிறர் அஞ்சுவதால் தனக்குவரும் இன்பத்திற்காக, தீவினையைத் தொடர்வர், மறுபிறப்புக்கும் அஞ்சமாட்டார். முழுமையானவர், தீவினைக்கு அஞ்சுவர்.

**202. தீயவை தீய பயத்தலாற் றீயவை**
**தீயினு மஞ்சப் படும்.**

**தீயவை தீய பயத்தலால், தீயவை**
**தீயினும் அஞ்சப்படும்.**

தீய பயத்தல் = வருத்தும் மறுபிறப்பைத் தருதல்.

தீயவினைகள் துன்பமிக்க மறுபிறப்பை உண்டாக்குவதால், அவற்றைக் கண்டு, உடலைச்சுடும் தீயைக் காட்டிலும், அதிகமாக பயப்படவேண்டும்.

**203. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய**
**செறுவார்க்குஞ் செய்யா விடல்.**

**அறிவினுள் எல்லாம் தலை என்ப, தீய**
**செறுவார்க்கும் செய்யா விடல்.**

செறுவார் = ச் + எற் + உ + ஆர். இயக்கம் உயர்ந்து அறுத்து வெளிப்படச் செய்பவர். அறுப்பவர். பிரிப்பவர். துன்புறுத்துபவர். அழிப்பவர்.

*தன்னைத் துன்புறுத்துபவர்க்கும் தீங்கு செய்யாமல் விடுவது, அறிவின் உயர்ச்சியையும் முதிர்ச்சியையும் காட்டும் என்பர்.*

**204. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்**
**அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.**

**மறந்தும் பிறன் கேடு சூழற்க! சூழின், அறம்**
**சூழும், சூழ்ந்தவன் கேடு,**

*சூழ் = ச் + ஊழ். இயக்கம் மிக உள் ஆழத்தில். ஆழ்மனச் சிந்தனை.*

*தவறியும், மற்றவரைக் கெடுக்கச் சிந்திக்க வேண்டாம். அப்படி சிந்தித்தால், எங்கும் நிறைந்திருந்தும், பொருண்மையைப் பிரிந்திருக்கும் உயிர்மை, சிந்திப்பவரைக் கெடுக்க, இருத்தலின் உள் ஆழத்தில், ஒன்று சேர்ந்து, இயங்க ஆரம்பித்து விடும்.*

**205. இலனென்று தீயவை செய்யற்க செய்யின்**
**இலனாகும் மற்றும் பெயர்த்து.**

**'இலன்' என்று தீயவை செய்யற்க! செய்யின்,**
**இலன் ஆகும், மற்றும் பெயர்த்து.**

*பெயர்த்து = ப் + எய் + அர் + த் + உ. கொண்டதை மிக உயர்த்தி இருத்தப் பிரித்து தேகமாய் / வடிவமாய் வெளிப்படுத்துவது. இடம் பெயர்தல்.*

*தான், இல்லாதவன் என்று, பிறர்க்கு தீயவினை செய்யாதே. செய்தால், இருக்கும் மிச்சம் மீதமும், அடியோடு இல்லாமல் போய்விடும்.*

**206. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால**
**தன்னை யடல்வேண்டா தான்.**

**தீப் பால தான் பிறர்கண் செய்யற்க-நோய்ப் பால**
**தன்னை அடல் வேண்டாதான்!.**

*தீப்பால = தீயைப் போன்று அழிக்கக் கூடியனவற்றை.*

*நோய்ப்பால = பிணியைப் போன்று துன்புறுத்துபவை.*

*நோய் = ன் + ஓய். நெருங்கி முழுவதுமாய் இருந்து இயங்குதல்.*

*அடல் = அட் + அல். உயிரை ஒட்டித்தொடர்ந்து அதிர்வற்றதாய் ஆக்குதல். கொல்லுதல்.*

*நோயைப் போன்று துன்புறுத்துபவை (வறுமை, மடமை, சோர்வு) தன்னைக் கொல்ல விரும்பாதவன், தீயைப் போன்று அழிக்கக் கூடியனவற்றை பிறரிடத்தில் செய்ய வேண்டாம்.*

**207. எனைப்பகை யுற்றாரு முய்வர் விளைப்பகை**
**வீயாது பின்சென் றடும்.**

**எனைப் பகை உற்றாரும் உய்வர்; வினைப் பகை**
**வீயாது, பின் சென்று, அடும்.**

*உய்வர் = உய் + வ் + அர். உள் / வெளி இருந்து முழுமையாய் இயங்குவர். தப்பிப் பிழைப்பர்.*

*விளைப்பகை = தீவினைக் காரணத்தால் வந்த விளைவுப் பகை.*

*வீயாது = வ் + ஈயாது. புறம் அகம் வெளிப்படாமல். புலனாகாமல். மறைந்திருந்து. காலம், இடம் பார்த்து. பிரியாது.*

*எந்தப் பகை ஏற்பட்டாலும் தப்பிப் பிழைக்கலாம், ஆனால், தீவினைக் காரணத்தால் வந்த விளைவுப் பகை, வெளிப்படாமல் மறைந்திருந்து காலம் இடம் பார்த்து, பின்தொடர்ந்து வந்து தாக்கிக் கொல்லும்.*

**208. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை**
**வீயா தடியுறைந் தற்று.**

**தீயவை செய்தார் கெடுதல் நிழல் தன்னை**
**வீயாது அடி உறைந்தற்று.**

*உறை = உ + ற் + ஐ. உள்ளே / வெளியே பிரிந்து ஐக்கியமாவது.*

*அழிவைச் செய்தவர் அழிதல் உறுதி, எப்படி என்றால், நிழல் ஒருவரைப் பிரியாது காலடியில் மறைந்திருப்பது போல், தீவினைப் பயன், அறத்தின் ஒளியில், தீவினையர்தம் நிழலாய், அவருடைய இறப்பின்வரை, அவரோடேயே நிலையாக இருக்கும்.*

**209. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றும்**
**துன்னற்க தீவினைப் பால்.**

**தன்னைத் தான் காதலன் ஆயின், எனைத்து ஒன்றும்**
**துன்னற்க, தீவினைப் பால்!**

*காதல் = க் + ஆதல். மெய் ஆதல். மனம் மெய்யோடு ஒன்றுதல். காதல் = க் + ஆத் + அல். மெய் தேகமாய் / வடிவமாய் ஆதல்.*

*துன் = த் + உ + ன். தேகத்தின் புறத்தே / உள்ளே நெருக்கம்.*

*ஒருவன் தன்னைத் தானே விரும்புபவன் என்றால், தீவினைகளின் பக்கம், எத்தனை சிறிய அளவிலும் நெருங்கக் கூடாது.*

**210. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்**
**தீவினை செய்யா னெனின்.**

**அருங் கேடன் என்பது அறிக--மருங்கு ஓடித்**
**தீவினை செய்யான் எனின்!**

*மருங்கு = ம் + அர் + உங்கு. கொண்டு மூடியதைப் பிரித்துப் புறமிருத்தல்.*

*அவனுக்கு அழிவு வராது என்று அறிந்து கொள், கட்டு மீறி ஓடி அழிவைச் செய்யாதவன் என்றால்.*

*தீவினையச்சம் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*தீவினையை வாழ்வாகச் செய்பவர், பிறர் அஞ்சுவதால் தனக்குவரும் இன்பத்திற்காக, தீவினையைத் தொடர்வர், மறுபிறப்புக்கும் அஞ்சமாட்டார். முழுமையானவர், தீவினைக்கு அஞ்சுவர்.*

*தீயவினைகள் துன்பமிக்க மறுபிறப்பை உண்டாக்குவதால், அவற்றைக் கண்டு, உடலைச்சுடும் தீயைக் காட்டிலும், அதிகமாகப் பயப்படவேண்டும்.*

*தன்னைத் துன்புறுத்துபவர்க்கும் தீங்கு செய்யாமல் விடுவது, அறிவின் உயர்ச்சியையும் முதிர்ச்சியையும் காட்டும் என்பர்.*

*தவறியும், மற்றவரைக் கெடுக்கச் சிந்திக்க வேண்டாம். அப்படிச் சிந்தித்தால், எங்கும் நிறைந்திருந்தும், பொருண்மையைப் பிரிந்திருக்கும் உயிர்மை, சிந்திப்பவரைக் கெடுக்க, இருத்தலின் உள் ஆழத்தில், ஒன்றுச் சேர்ந்து, இயங்க ஆரம்பித்து விடும்.*

*தான், இல்லாதவன் என்று, பிறர்க்குத் தீயவினை செய்யாதே. செய்தால், இருக்கும் மிச்சம் மீதமும், அடியோடு இல்லாமல் போய்விடும்.*

*நோயைப் போன்று துன்புறுத்துபவை (வறுமை, மடமை, சோர்வு) தன்னைக் கொல்ல விரும்பாதவன், தீயைப் போன்று அழிக்கக் கூடியனவற்றைப் பிறரிடத்தில் செய்ய வேண்டாம்.*

*எந்தப் பகை ஏற்பட்டாலும் தப்பிப் பிழைக்கலாம், ஆனால், தீவினைக் காரணத்தால் வந்த விளைவுப் பகை, வெளிப்படாமல் மறைந்திருந்து காலம் இடம் பார்த்து, பின்தொடர்ந்து வந்து தாக்கிக் கொல்லும்.*

*அழிவைச் செய்தவர் அழிதல் உறுதி, எப்படி என்றால், நிழல் ஒருவரைப் பிரியாது காலடியில் மறைந்திருப்பது போல், தீவினைப் பயன், அறத்தின் ஒளியில், தீவினையர்தம் நிழலாய், அவருடைய இறப்பின்வரை, அவரோடேயே நிலையாக இருக்கும்.*

*ஒருவன் தன்னைத் தானே நேசிக்கிறவன் என்றால், தீவினைகளின் பக்கம், கொஞ்சங்கூட நெருங்கக் கூடாது.*

*கட்டு மீறி ஓடி அழிவைச் செய்யாதவன் என்றால், அவனுக்கு அழிவு வராது என்பதை, அறிந்து கொள்.*

# 22. ஒப்புரவறிதல்

*ஒப்புரவறிதல் = ஒப்புரவு + அறிதல். ஒப்புரவு = ஒப் + உர் + அ + உ. முழுமையாய்க் கொண்டு உள் இருந்து அகம் புறமாதல். ஒப்புரவு = ஒப்பு + உரவு. ஒப்பு = ஒப் + உ. முழுமையாய் கொண்டு வெளிப்படு. இணங்கு. உரவு = உர் + அ + உ. உள் இருந்து அகம் புறமாதல். புறந்தருதல். தீவினை, தனக்காக பிறரை அழிப்பது. ஒப்புரவு, பிறருக்காக தன்னை இழப்பது.*

*ஒப்புரவறிதல் = இணங்கி புறந்தருதலைப் பற்றி அறிதல்.*

**211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்**
**டென்னாற்றுங் கொல்லோ வுலகு.**

**கைம்மாறு வேண்டா கடப்பாடு; மாரிமாட்டு**
**என் ஆற்றும் கொல்லோ, உலகு?**

*கைம்மாறு = கை + மாறு. பண்டமாற்றம். பரிமாற்றம். பரிவர்த்தனை. பலன். பதில். கூலி. சம்பளம். நன்றி.*

*கடப்பாடு = கடல் + பாடு. கடல் = க் + அட் + அல். மெய்யை, நிலத்தை ஒட்டித் தொடர்ந்து அதிர்தல். பாடு = ப் + ஆடு. கொண்டதுடன் ஆடு. கடப்பாடு = கடலில் இருந்து நீராவியைக் கொண்டு மேகமாய் ஆடல். கடலின் தொழில். கடல்போன்று பரந்த தொழில்.*

*கடப்பாடு = கடம் + பாடு. கடம் = க் + அட் + அம். நிலத்தை, மெய்யை, பொருண்மையை ஒட்டித் தொடரும் தன்மை. பாடு = வேலை, தொழில். நீராக, ஆவியாக, மேகமாக, மழையாக எல்லாம் இந்தப் பூமிக்காக.*

*கடப்பாடு = கடன் + பாடு. கடன் = க் + அட் + அன். மெய்யை ஒட்டித் தொடர்பவன். கடன், பொருண்மை அற்று இருந்தும், அது உளவியல் இயக்கமாகி, கடன்பட்டாரை ஒரு நபர் போல் ஒட்டித் தொடர்வது. பாடு = ப் + ஆட் + உ. கொண்டதை ஒட்டித் தொடரச்செய்து வெளிப்படுத்து. உழைப்பு. கடப்பாடு = கடனுக்கு உழைப்பு.*

*மாரி = ம் + ஆர் + இ. கொண்டு மூடியதைப் பிரித்து இருப்பது / இறங்குவது. கொண்டு மூடியது சத்தமுடன் இருப்பது.*

*மாட்டு = ம் + ஆட் + உ. கொண்டு மூடியதை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுத்தல். மாட்டு = ம் + ஆட்டு. கொண்டு மூடியதை ஆட்டுவது.*

*பதிலுக்கு எதையும் எதிர்பாராமல், கடலில் உழைத்து, நீரைப் பிரித்து, மேகமாக்கி, தொடர்ச்சியாகப் பொழியும் மழைக்கு, உலகத்தால் எதைக் கொடுத்து ஈடு செய்ய முடியும்? இருக்கின்ற, கிடைக்கின்ற அனைத்தும் மழையால் வருவதால், அனைத்தையும் கொடுத்தாலே ஈடாகும்.*

**212. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.**

**தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற்பொருட்டு.**

*தாளாற்றி = தாள் + ஆற்றி. நிமிர்ந்த தேகத்தால் உழைத்து. உயிருடன் ஒன்றுதலைப் பிரிந்து.*

*தந்த = தன் + த் + அ. தனதான.*

*தக்கார் = த் + அக் + ஆர். தேகத்தின் உயிர் மெய்யாய் இருப்பவர், ஆனவர். மனைவி மக்கள். உறவினர். சுற்றம்.*

*வேளாண்மை = வேள் + ஆண்மை. வேள் = வ் + ஏள். புறமும் அகமும் மிக உயர்ந்த மிகை. ஆண்மை = ஆண் + மை. மிக நெருக்கமாக்கும் தன்மை.*

*உயிருடன் ஒன்றுதலைப் பிரிந்து, உழைத்துத் தனதாகும் பொருள் எல்லாம், மனைவி, மக்கள், சுற்றம், தகுதியானவர் ஆகியோர்க்கு, உரிமையாக்கத்தான்.*

**213. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற.**

**புத்தேள் உலகத்தும், ஈண்டும், பெறல் அரிதே
- ஒப்புரவின் நல்ல பிற.**

*புத்தேள் = ப் + உத் + ஏள். கொண்டதன் புறத்தேகம் மிக உயர்ந்த மிகை. அகம் புறத்தேகமாகி மிக உயர்ந்து ஒளிர்மையாதல். தான் தனதற்று, தன் உடல் மனம் அற்று, விண்தேகமாகி மிக உயர்ந்து ஒளிக்காட்சியாதல். ஞானியர்.*

*விண்தேகமானவர் உலகத்திலும், மண்ணுலகிலும், தன்னை இழந்து வெளிப்படுதல் எனும் ஒப்புரவைப் போன்ற பண்பு வேறெதுவும் இல்லை.*

**214. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.**

**ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்; மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும்.**

*ஒத்தது = ஒத் + அது. முழுமையான தேகமாவது. தனக்கும், குடும்பத்திற்கும், சமூகத்திற்கும், இயற்கைக்கும், இருத்தலுக்கும் இணக்கமாவது. உகந்தது. ஒன்றுவது. இயைபுடன் இயங்குவது.*

*தனக்கும், குடும்பத்திற்கும், சமூகத்திற்கும், இயற்கைக்கும், இருத்தலுக்கும் இணக்கமாவது அறிந்து இயங்குபவன், உயிருடன்*

*வாழ்பவனாகக் கருதப்படுவான். மற்றவர்கள், இறந்தவர்களைப்போல் புறக்கணிக்கப்படுவர்.*

**215. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.**

**ஊருணி நீர் நிறைந்தற்றே-உலகு அவாம்
பேர் அறிவாளன் திரு.**

*ஊருணி = ஊர் + உணி. உணி = உண்ணி.*

*உலகவாம் = உலகம் + ஆம். உலகத்திற்கு ஆகும்.*

*பேரறிவாளன் = பேர் + அறிவு + ஆளன். பேர் = ப் + ஏர். அகம் மிக உயர்ந்து இருத்தல் / பிரிதல். அறிவு = அறி + உ. அறுந்து புறம் இருத்தல். ஆளன் = ஆள் + அன். மிகையாகுபவன். ஒளிர்மையானவன். மெய்யுணர்ந்தவன். ஞானி. தான் தனது என்று இல்லாதவன்.*

*திரு = த் + இர் + உ. தேகம் / வடிவம் இருந்து வெளிப்படல். உடல். பொருள். செல்வம்.*

*ஊர்க்குளம் நிரம்பியதைப் போன்றது, உலகிற்கு, ஞானியரின் அருள் எனும் குறையாத செல்வம். யார் வேண்டுமானாலும், எப்பொழுது வேண்டுமானாலும், எவ்வளவு தேவையானாலும் கொண்டு செல்லலாம்.*

**216. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.**

**பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்-செல்வம்
நயன் உடையான்கண் படின்.**

*நயன் = ன் + அய் + அன். நெருங்கி உயிர்ப்புடன் இருப்பவன். தவசி. தவசி = த் + அவ(ம்) + ச் + இ. தேகமற்ற இயக்கமாய் இருப்பவன். உடல் மற்றும் மனமற்ற உணர்வினன். உயிரோடு ஒன்றியவன்.*

*ஊரின் நடுவே, பயன்தரும் மரம் பழுத்து இருப்பதைப் போன்றது, உயிர்ப்புடன் நெருங்கி உள்ள தவசியின் இடத்தில், செல்வம் மிகுதல்.*

**217. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.**

**மருந்து ஆகித் தப்பா மரத்தற்றால்-செல்வம்
பெருந்தகையான்கண் படின்.**

*தப்பா = தவறாகாத. சரியான.*

*பெருந்தகை = பெரும் + தகை. பெரும் = ப் + எர் + உம். கொண்டது உயர்ந்து பிரிந்து புறத்தில் அமைதியுறும். அகம் உயர்ந்து (தேகத்தைப்)*

*பிரிந்து புறத்தில் அமைதியடையும். தகை = த் + அக் + ஐ. தேகம், உயிர், மெய் ஐக்கியமாதல். முழுமையானவர். ஒருமையானவர். ஞானியர். மெய்யுணர்வாளர்.*

*தவறாமல் நோயைக் குணமாக்கும் மரத்தைப் போன்றது, அகம் உயர்ந்து (சூட்சும தேகத்தைப்) பிரிந்து புறத்தில் அமைதியடைந்து, (விண்) தேகம், உயிர், மெய்யுடன் ஐக்கியமாகி, ஒருமையானவரிடம் செல்வம் மிகுதலும், மற்றவர் வறுமைப்பிணி போக்கலும்.*

**218. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்**
**கடனறி காட்சி யவர்.**

**இடன் இல் பருவத்தும், ஒப்புரவிற்கு ஒல்கார்-**
**கடன் அறி காட்சியவர்.**

*இடனில் = இடம் + இல். தம்மிடம் இல்லாத.*

*ஒல்கார் = ஒல் + க் + ஆர். குறையார்.*

*கடன் = க் + அட் + அன். மெய் ஒட்டித் தொடர்வதன் நெருக்கம்.*

*உலகில் உள்ள எல்லா மெய் உயிர்களும், ஒன்றுடன் ஒன்று ஒட்டியும் நெருங்கியும் இருக்கும் தன்மையைக் கண்டவர், தம்மிடம் போதுமான பொருள் இல்லாத காலத்தும், தேவையானவர்க்கு அளித்திட, தயங்க மாட்டார்.*

**219. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர்மை**
**செய்யா தமைகலா வாறு.**

**நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும் நீர**
**செய்யாது அமைகலா ஆறு.**

*நல்கூர்தல் = ன் + அல் + கூர் + த் + அல். நெருங்கிய அதிர்வு குறுகிய தேகமாதல். வறுமையாதல்.*

*செயுநீர்மை = செய்யும் + நீர்மை. மழைமேகம்.*

*அமைகல் = அமை + கல். நிலைத்த / அசையாத கல்.*

*ஆவாறு = ஆவ் + ஆறு. ஆனவாறு.*

*நெருங்கி உயிர்ப்புடன் இருப்பவன் வறியவனாதல், மழைமேகம் பெய்யாது அசையாத கல்போல் ஆனதுபோலாம். அப்படி நடக்கவே நடக்காது.*

**220. ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்**
**விற்றுக்கோட் டக்க துடைத்து.**

**'ஒப்புரவினால் வரும், கேடு' எனின், அஃது ஒருவன் விற்றுக்**
**கோள் தக்கது உடைத்து.**

தேவையானவர்க்கு வழங்குவதால், வறுமை வரும் என்றால், தன்னை விற்றாவது, அவ்வறுமையை வாங்கிக் கொள்ளலாம்.

ஒப்புரவறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

எதையும் எதிர்பாராது கடமையாற்றும் மழைக்கு, இவ்வுலகத்தால், என்ன கைம்மாறு செய்துவிட முடியும் ?

உயிருடன் ஒன்றுதலைப் பிரிந்து, உழைத்துத் தனதாகும் பொருள் எல்லாம், மனைவி, மக்கள், சுற்றம், தகுதியானவர் ஆகியோர்க்கு, உரிமையாக்கத்தான்.

விண்ணுலகிலும், மண்ணுலகிலும், தன்னையே இழக்கும், ஒப்புரவைப் போன்ற ஒன்று, பெறுவதற்கு அரியது.

தனக்கும், குடும்பத்திற்கும், சமூகத்திற்கும், இயற்கைக்கும், இருத்தலுக்கும் இணக்கமாவது அறிந்து இயங்குபவன், உயிருடன் வாழ்பவனாகக் கருதப்படுவான். மற்றவர்கள், இறந்தவர்களைப்போல் கருதப்படுவர்.

ஊர்க்குளம் நிரம்பியதைப் போன்றது, உலகிற்கு, ஞானியரின் அருள் எனும் குறையாத செல்வம். யார் வேண்டுமானாலும், எப்பொழுது வேண்டுமானாலும், எவ்வளவு தேவையானாலும் கொண்டு செல்லலாம்.

ஊரின் நடுவே, பயன்தரும் மரம் பழுத்து இருப்பதைப் போன்றது, உயிர்ப்புடன் நெருங்கி உள்ள தவசியின் இடத்தில், செல்வம் வருதல்.

தவறாமல் நோயைக் குணமாக்கும் மரத்தைப் போல், ஞானியரிடம் உள்ள செல்வம், மற்றவர் வறுமைப் பிணியைப் போக்கும்.

மெய்யுணர்வால், உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும், ஒன்றோடு ஒன்று நெருக்கமாய்ப் பிணைக்கப்பட்டுள்ளது, என்பதை அறிந்த ஞானியர், தம்மிடம் போதுமான பொருள் இல்லாத காலத்தும், தேவையானவர்க்கு அளித்திட, தயங்க மாட்டார்.

நெருங்கி உயிர்ப்புடன் இருப்பவன் வறியவனாதல், மழைமேகம் பெய்யாது அசையாத கல்போல் ஆனதுபோலாம். அப்படி நடக்கவே நடக்காது.

தேவையானவர்க்கு வழங்குவதால், வறுமை வரும் என்றால், தன்னை விற்றாவது, அவ்வறுமையை வாங்கிக் கொள்ளலாம்.

# 23. ஈகை

*ஈகை = ஈ + கை. ஈ = தா. தருதல். கை = க் + ஐ. மெய் ஐக்கியமானது. ஐம்பூதங்களால் ஐக்கியமானது. மெய் ஐந்தாகப் பிரிவது. ஈகை = தருகின்ற கை. தா மெய்யோடு ஐக்கியமாகி. தா பிரித்து. தாம் தருகிறோம் என்ற எண்ணம் இன்றி, எதிர்பார்ப்பின்றித் தருதல். இயல்பாய்த் தருதல். செய்யாமல் செய்தல். உதவி.*

**221. வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம்**
**குறியெதிர்ப்பை நீர துடைத்து.**

**வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை; மற்று எல்லாம்**
**குறியெதிர்ப்பை நீரது உடைத்து.**

*வறியார் = வ் + அறியார். புறம் அகம் அறியமுடியாமல் பசியால் வாடுபவர். வறுமை = வ் + அறு + மை. புறம் அகம் அறுந்த தன்மை. இருள்.*

*குறி = க் + உற் + இ. மெய் / பொருண்மை புறத்து அறுந்து இருத்தல்.*

*எதிர்ப்பை = எதிர் + பை. பதில் பொருள். எதிர்ப்பார்ப்பு.*

*நீர் = ன் + ஈர். நெருங்கிப் பிரிவது. வருவது. இயல்பு.*

*உடைத்து = கொண்டது. உடையது.*

*உதவி = உ + தவி. புறம் வருதல் / கை கொடுத்தல் தவிப்பவர்க்கு.*

*பசியால் வாடுபவர்க்கு ஒன்றைத் தருவதே உதவி. மற்ற உதவி என்பதெல்லாம், பதிலுக்கு மிகையாக என்ன கிடைக்கும், என்று எதிர்ப்பார்க்கும் இயல்பை உடையது.*

*அவை உதவியல்ல, முதலீடு! கையில் கொடுத்து, பையில் வாங்குவது!*

**222. நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்**
**இல்லெனினு மீதலே நன்று.**

**'நல்லாறு' எனினும், கொளல் தீது; 'மேல் உலகம்**
**இல்' எனினும், ஈதலே நன்று.**

*நல்லாறு = நல் + ஆறு. நல்லவர். ஒழுக்கம் கொண்டவர். நேர்மையாய் ஈட்டிய பொருள்.*

*மேலுலகம் = மேல் + உலகம். மேல் = ம் + ஏல். கொண்டு மூடி மிக உயர்ந்து அதிர்தல். உலகம் = உல் + அகம். உள் அதிர்வு அகமாவது.*

*பெறுதல், பிணைப்பால், மறுபிறப்பை உருவாக்கிவிடும். மேல் உலகம் கிடையாது என்று சொன்னாலும், ஈதல் நல்லது.*

*பெறுதல் எனும் செயல், உளத்தில் ஒரு பிணைப்பை, கடனை, கடமையை ஏற்படுத்தி விடுகின்றது. உதவி செய்தவருக்கு, பதிலுக்குச்*

*செய்துவிட வேண்டும் எனத் துடிக்கின்றது. மனம் புறம் நோக்கிச் செல்கின்றது. உயிரில் நிலைக்க இயலாமல் போகின்றது.*

*எந்த எதிர்ப்பார்ப்புமின்றி உதவுதல் எனும் செயல், மனத்தை அகம் நோக்கி ஈர்க்கின்றது. உயிரில் ஒன்றுகின்றது. மேல் உலகம், விண்ணுலகம் சாத்தியம் ஆகின்றது.*

**223. இலனென்னு மெவ்வ முரையாம லீதல்
குலனுடையான் கண்ணே யுள.**

**'இலன்' என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன் உடையான் கண்ணே உள.**

*எவ்வம் = எவ் + அம். உயர்ந்த புற அகத் தன்மை. வெளிப்பாடு. துன்பம்.*

*குலம் = க் + உல் + அம். மெய்யுள் அதிரும் தன்மை. இரக்கம் உடையவன்.*

*ஒருவன், தான் இல்லாதவன் என்னும் துன்பத்தைச் சொல்லும் முன்பே தருதல், இரக்கம் உடையவனிடம் உள்ள பண்பு.*

*அல்லது*

*தன்னிடம் இல்லை என்னும் துன்பத்தைச் சொல்லாமல் தருவது, இரக்கம் உடையவனிடம் உள்ள பண்பு.*

**224. இன்னா திரக்கப் படுத லிரந்தவர்
இன்முகங் காணு மளவு.**

**இன்னாது, இரக்கப்படுதல்-இரந்தவர்
இன் முகம் காணும் அளவு.**

*வாய்ச்சொற்களால் இரக்கப்படுதல், இனியதல்ல (மாறாக, கேட்பவர்க்கு மேலும் அது துன்பம் விளைவிக்கும்), கேட்டவர்க்கு, அவருடைய முகம் இனிதாகும் அளவுக்கு, பசியாற உதவுவதே இனிமையாகும்.*

**225. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.**

**ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல்; அப் பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.**

*பசியைப் பொறுத்துக் கொள்வதில், தவம் செய்வோர் வலிமையானவர். ஆனால், மற்றவர்க்கு உணவளித்து அவர்தம் பசியைப் போக்குபவரின் வலிமை, தவசிகளின் வலிமையைக் காட்டிலும் வலிமையானது.*

**226. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.**

**அற்றார் அழி பசி தீர்த்தல்! அஃது ஒருவன்
பெற்றான் பொருள்வைப் உழி.**

*அற்றார் = இல்லாதவர்.*

*அழிபசி = ஆழ்ந்த அழிக்கும் பசி.*

*உழி = உழ் + இ. உள் ஆழத்தில் இருத்தல். உயிரின் ஆழத்தில் இருத்தல்.*

*பொருள் இல்லாதவரின் உடலையும் மனத்தையும் அறிவையும் அழிக்கின்ற பசியைப் போக்கியவன், அகமெனும் உள்ஆழப் புதையலைப் பெற்றவன் ஆவான்.*

**227. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்
தீப்பிணி தீண்ட லரிது.**

**பாத்து ஊண் மரீஇயவனைப் பசி என்னும்
தீப் பிணி தீண்டல் அரிது.**

*பாத்தூண் = பார்த்து + ஊண். உண் = தான் உண்ணல். ஊண் = பிறரை உண்ணச் செய்தல். பாத்தூண் = பசியுள்ளவர் யார் எனக் கண்டு உணவளித்தல்.*

*மரீஇயம் = மரி + ஈயம். மரி = ம் + அர் + இ. கொண்டு மூடியதில் பிரிந்து இருப்பது. எண்ணம். ஈயம் = ஈ + அம். தரும் / விடும் தன்மை. மரீஇயவன் = மறப்பவன். பசியுள்ளவர் யார் எனக் கண்டு உணவளித்து, அதை உடன் மறப்பவனை, பசிஎனும், தீயைப் போன்று அழிக்கின்ற, நோய் நெருங்குவது அரிது.*

**228. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.**

**ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல்-தாம் உடைமை
வைத்து இழக்கும் வன்கணவர்?**

*ஈத்துவக்கும் = ஈத்து + உவக்கும். உவக்கு = உ + அக் + உ. உள்ளே உயிரும் மெய்யும் ஒன்றி வெளிப்படல்.*

*வன்கணவர் = வல் + கண் + அவர். வல் = வலிமையான / உறுதியான / இளகாத / இரக்கமில்லா. வன்கணவர் = இரக்கமில்லா மனத்தைக் கண்ணால் காட்டுபவர்.*

*தருவதால் கிடைக்கும் இன்பம் அறியாமல், ஏனோ, தம் உடைமையை யாருக்கும் தராமல் பாதுகாத்து வைத்து, முழுமையாய் இழந்துவிடுகின்றனர் இந்த இரக்கமில்லாதவர்கள்.*

**229. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய**
**தாமே தமிய ருணல்.**

**இரத்தலின் இன்னாது மன்ற-நிரப்பிய**
**தாமே தமியர் உணல்.**

*மன்ற = ம் + அன் + ற் + அ. கொண்டு மூடுவதில் நெருங்கிப் பிரிய. மிகுதியாகி வழிய.*

*தமியர் = தம் + இயர். தமியர் = தம் + இயம் + அர். தன் மனைவி மக்கள்.*

*பிச்சை எடுத்தலைக் காட்டிலும் கேவலமானது, வழிய வழிய நிரப்பிய உணவை பிறர் யாருக்கும் தராமல், தானும் தன் குடும்பத்தினர் மட்டும் உண்பது.*

**230. சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்**
**ஈத லிசையாக் கடை.**

**சாதலின் இன்னாதது இல்லை; இனிது, அதூஉம்**
**ஈதல் இயையாக் கடை.**

*இசையாது = இணங்காது / இயலாது.*

*சாவதைக் காட்டிலும் மோசமானது ஒன்றில்லை. பிச்சை கேட்டவர்க்குத் தரவே முடியாமல் போய்விட்டால், அச்சாவும் இனிமையாகிவிடும்.*

*தன் இயலாமையை எண்ணி எண்ணி, வருந்தி வாழ்வதைவிட, சாவதே மேல்.*

*ஈகை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*பசியால் வாடுபவர்க்கு ஒன்றைத் தருவதே உதவி. மற்ற உதவியெல்லாம், திரும்ப எதிர்பார்க்கும் இயல்புடையன.*

*பெறுதல், பிணைப்பால், மறுபிறப்பை உருவாக்கிவிடும். மேல் உலகம் கிடையாது என்று சொன்னாலும், ஈதல் நல்லது. ஈதல், மேல் உலகம் தரும்.*

*ஒருவன், தான் இல்லாதவன் என்னும் துன்பத்தைச் சொல்லும் முன்பே தருதல், இரக்கம் உடையவனிடம் உள்ள பண்பு.*

*வாய்ச் சொற்களால் இரக்கப்படுதல், இனியதல்ல. கேட்டவர்க்கு, அவருடைய முகம் இனிதாகும் அளவுக்கு, பசியாற உதவுவதே இனிமையாகும்.*

*பசியைப் போக்குபவரின் வலிமை, தவசிகளின் வலிமையைக் காட்டிலும் வலிமையானது.*

*இல்லாதவரின் அழிக்கின்ற பசியைப் போக்கியவன், அகமெனும் உள்ஆழப் புதையலைப் பெற்றவன் ஆவான்.*

பசித்தவர்க்கு உணவு அளித்ததை மறந்தவனை, தீயைப் போன்று எரிக்கின்ற பசிநோய், நெருங்காது.

தருவதால் கிடைக்கும் இன்பம் அறியாமல், ஏனோ, தம் உடைமையைப் பாதுகாத்து வைத்து, இழந்துவிடுகின்றனர், இந்த இரக்கமில்லாதவர்கள்.

பிச்சை எடுத்தலைக் காட்டிலும் கேவலமானது, வழிய வழிய நிரப்பிய உணவை, தானும் தன் குடும்பத்தினர் மட்டுமே உண்பது.

சாவதைக் காட்டிலும் மோசமானது ஒன்றில்லை. பிச்சை கேட்டவர்க்குத் தரவே முடியாமல் போய்விட்டால், அச்சாவே இனிமையாகிவிடும்.

# 24. புகழ்

*புகழ் = ப் + உக் + அழ். அகவெளியில் உள்மெய் உயிரில் ஆழ்ந்திருத்தல். கொண்டதன் புறத்தே மெய் உயிரில் ஆழ்ந்திருத்தல்.*

**231. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல**
**ஊதிய மில்லை யுயிர்க்கு.**

**ஈதல்! இசைபட வாழ்தல்! அது அல்லது**
**ஊதியம் இல்லை, உயிர்க்கு.**

*இசைபட = இசை தொடர.*

*ஊதியம் = ஊத் + இயம். விரிந்து பரவும் தேகத் தன்மை.*

*பசியுள்ளவர்க்கு உணவளித்து, 'ம்' எனும் இசை தொடர வாழ்தலே, தவத்தால் அடையும் விரிந்து பரவும் தேகத் தன்மையை, அளிக்கும்.*

**232. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்**
**றீவார்மே னிற்கும் புகழ்.**

**உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று**
**ஈவார்மேல் நிற்கும் புகழ்.**

*நிற்கும் = நிலைக்கும்*

*பேசுகின்றவர்களின் பேச்சு எல்லாம், கேட்பவர்க்கு உணவை அளிப்பவரைப் பற்றிய உயர்வுச் சொல்லாகவே இருப்பதால், அவருடைய புகழ் நிலைத்து நிற்கும்.*

**233. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்**
**பொன்றாது நிற்பதொன் றில்.**

**ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால், பொன்றாது**
**நிற்பது ஒன்று இல்.**

*ஒன்றா = ஒன்றாத. ஒன்றான. ஒன்றாம். இலயமாகும். நிலையற்ற "பொன்றாது" க்கு எதிர்).*

*நிலையற்ற உலகத்தில், உயர்ந்த புகழைத்தவிர, அழியாது நிலைப்பது வேறு ஒன்றும் இல்லை.*

**234. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்**
**போற்றாது புத்தே ளுலகு.**

**நில வரை நீள் புகழ் ஆற்றின், புலவரைப்**
**போற்றாது, புத்தேள் உலகு.**

*நிலவரை = நிலத்தில் வாழும் வரை. வாழ்நாள் முழுதும்.*

*வாழ்நாள் முழுதும், பசித்தார்க்கு ஈந்தவனை, புலவர் புகழ்ந்து பாடுவர். வெறும் வாயால் புகழ்ந்த புலவரை விடுத்து, புகழுக்குக் காரணமான செயல் புரிந்தவரை, வாழ்த்துவர், ஞானியர்.*

**235. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்**
**வித்தகர்க் கல்லா லரிது.**

**நத்தம்போல் கேடும், உளதாகும் சாக்காடும்,**
**வித்தகர்க்கு அல்லால் அரிது.**

*நத்தம் = ன் + அத் + அம். நெருங்கி தேகமற்ற தன்மை. நெருங்கிய உயிர்ப்புள்ள தேகத் தன்மை.*

*உளதாகும் = உள் + அது + ஆகும். உள்மிகை முத்து ஆகும். உயிர் (அது = அத் + உ. தேகமற்று வெளிப்பட்டு) வெளி ஆகும்.*

*சாக்காடு = ச் + ஆக் + ஆட் + உ. இயக்கம் மெய்யாகி ஒட்டித் தொடர்ந்ததாகி வெளிப்படுவது. இறப்பு.*

*வித்தகர் = வித்து + அகல் + அர். அகந்தை எனும் வித்தை அகற்றியவர்.*

*சிப்பியைக் கெடுக்க உள்நுழையும் கிருமியை அகற்ற சுரக்கும் திரவம், இறுகி முத்தாவதைப் போல், தேகத்தின் புலன்களால் உருவாகும் அகந்தை எனும் வித்தை (சாகின்றபோதும் புலனடக்கத்தால்) அகற்றி, உயிரை ஒளிரும் வெளியாக்குவர், ஞானியர். ஞானியர் தவிர பிற யாருக்கும் அது அரிது.*

**236. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்**
**தோன்றலிற் றோன்றாமை நன்று.**

**தோன்றின், புகழொடு தோன்றுக! அஃது இலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று.**

*பிறக்கும் போதே, தான் வெளிப்படும் போதே, அகவெளியில், உள்மெய், உயிரில் ஆழ்ந்திருந்தால், அகந்தையின்றி மெய்யின்பம் மிகும், படைப்பாற்றல் சமூகத்திற்குப் பலனளிக்கும், ஞானத்திற்கான வழிகாட்டுதலும் நடைபெறும். தன்னுள் புகழ் இல்லாதவர்கள் பிறக்காமல், பொதுவெளியில், தோன்றாமல் இருத்தலே நல்லது.*

*புகழ் இல்லாதவர்களால், கருமங்களும், பிறப்புகளும், துன்பங்களுந்தான் கூடும்.*

**237. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை**
**இகழ்வாரை நோவ தெவன்.**

**புகழ்பட வாழாதார் தம் நோவார், தம்மை**
**இகழ்வாரை நோவது எவன்?**

*புகழ்தொடர வாழாதார் தன்னைத் திட்டிக்கொள்ள வேண்டும், தன் அகந்தையை நோக வேண்டும். செல்வம் இருந்தும் ஈயாமல் போன மடமையை நோக வேண்டும். அதை விடுத்து, தன்னை இகழ்பவர்களை நோவது எதற்காக?*

*பொருள் இருந்தும், கேட்டவர்க்கு உணவோ, பொருளோ தராமல் போன நடத்தையை மற்றவர்கள் தாழ்த்திப் பேசினால், அவர்களைத் திட்டுவது யார்? எதற்காக? அதே அகந்தைதானே. அதனால் பயனுண்டா? இடமும் பொருளும் காலமும் இருக்கும்போதே ஈதல் செய்.*

**238. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னும்**
**எச்சம் பெறாஅ விடின்.**

**'வசை' என்ப, வையத்தார்க்கு எல்லாம்-'இசை' என்னும்**
**எச்சம் பெறாஅ விடின்.**

*வசை = வ் + அசை. புறமும் அகமும் அசைதல். முன் பின் செல்லல். இன்பம் துன்பம். மறுபிறப்பு. விளைவு.*

*இசை = இ + சை. இருத்தல் இயக்கத்தோடு / சத்தத்தோடு ஐக்கியமாகி. நிலைத்தல் அதிர்வாக / ஒலியாக. ஓம்.*

*எச்சம் = எச் + அம். உயர்ந்த இயக்கத் தன்மை.*

*ஈதலால் அகந்தையற்று, புகழ் அமைதியுற்று, 'ம்' அதிர்வாக / ஒலியாக நிலைத்து, உயர்ந்த இயக்கத் தன்மையை அடையாவிட்டால், நிலையாய் இருக்கும் தன்மையுள்ள பூமியில் வாழ்பவர்க்கு, இழிவுச் சொல், மறுபிறப்பு உண்டாம்.*

**239. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா**
**யாக்கை பொறுத்த நிலம்.**

**வசை இலா வண் பயன் குன்றும்-இசை இலா**
**யாக்கை பொறுத்த நிலம்.**

*வசையிலா = முன்பின் அசைவு இல்லாமல். வளராமல். விளைவு இல்லாமல்.*

*வண்பயன் = வண் + பயன். வண் = வ் + அண். புறமும் அகமும் மிகை நெருக்கம். சமூக குடும்ப உறவுகள்.*

*அமைதியில்லாத உடலைத் தாங்கிய நிலத்தில், பயிர் வளராமல், விளைச்சல் இல்லாமல் போக, சமூக குடும்ப உறவுகள் பிளவுப்படும். அமைதியின்மை பெருகி, துன்பம் மிகும்.*

**240\. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய**
**வாழ்வாரே வாழா தவர்.**

**வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசை ஒழிய**
**வாழ்வாரே வாழாதவர்.**

*பிறப்பு ஒழிய வாழ்பவரே, வாழ்பவராகக் கருதப்படுவர். அகந்தையால், 'ம்' எனும் அமைதி ஒழிய வாழ்பவர், வாழாதவராக கருதப்படுவர்.*

*புகழ் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*பசியுள்ளவர்க்கு உணவளித்து, 'ம்' எனும் இசை தொடர வாழ்தலே, தவத்தால் அடையும் விரிந்து பரவும் தேகத் தன்மையை, அளிக்கும்.*

*பேசுகின்றவர்களின் பேச்சு எல்லாம், கேட்பவர்க்கு எல்லாம் உணவை அளிப்பவரைப் பற்றிய புகழ் சொல்லாகவே இருக்கும்.*

*நிலையற்ற உலகத்தில், உயர்ந்த புகழைத்தவிர, அழியாது நிலைப்பது வேறு ஒன்றும் இல்லை.*

*வாழ்நாள் முழுதும், பசித்தார்க்கு ஈந்தவனைப் போற்றும் ஒளிர் உலகம், அவனைப் பாடிய புலவரைப் போற்றாது.*

*முத்துச் சிப்பி, அழிவையும் ஆக்கமுடையதாய் ஆக்குவது போல், சாவையும் ஞானமாக்கும் திறமை, புலனடக்குபவரைத் தவிர மற்றவர்க்கு முடியாது.*

*பிறக்கும் போதே, தான் வெளிப்படும் போதே, அகவெளியில், உள்மெய், உயிரில் ஆழ்ந்திருத்தல் நல்லது. தன்னுள் புகழ் இல்லாதவர்கள் பிறக்காமல், பொதுவெளியில், தோன்றாமல் இருத்தலே நல்லது.*

*புகழ்தொடர வாழாதார், தன்னைத் தான் திட்டிக்கொள்ள வேண்டுமே தவிர, தன்னை இகழ்பவர்களை நோவது எதற்காக?*

*'ம்' எனும் இசையால், உயர்ந்த இயக்கத் தன்மையைப் பெறாவிட்டால், நிலையாய் இருக்கும் தன்மையுள்ள பூமியில் வாழ்பவர்க்கு, மறுபிறப்பு உண்டாம்.*

*அமைதியில்லாத உடலைத் தாங்கிய நிலத்தில், பயிர்கள் வளராமல், வளம் குறையும்.*

*பிறப்பு ஒழிய வாழ்பவரே, வாழ்பவர். 'ம்' எனும் அமைதி ஒழிய வாழ்பவர், வாழாதவர்.*

துறவற வியல்

## 25. அருளுடைமை

*அருளுடைமை = அருள் + உடைமை. அருள் = அர் + உள். இருப்பது உள்ளே. பிரிந்து இருப்பது உள்ளே. அருள் = அரு + ள். உருவற்ற மிகையான அதிர்வு. ஒளிர்மை. அருளுடைமை = ஒளிர்மையின் தொடர்ச்சி.*

**241. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்**
**பூரியார் கண்ணு முள.**

**அரு செல்வம், செல்வத்துள் செல்வம்; பொரு செல்வம்**
**பூரியார் கண்ணும் உள.**

*செல்வம் = செல் + வ் + அம். புறமும் அகமும் செல்லும் தன்மை. புறமும் அகமும் இயக்கம் உயர்ந்து அதிரும் தன்மை. செல்வத்தால் இயக்கமும் இன்பமும் மிகும். பூரியார் = ப் + ஊர் + இய் + ஆர். கொன்டதை நீள்புறத்தே பிரிக்கும் இயல்பினர். திருடர். கொள்ளையர்.*

*அருள் எனும் உயிரின் வடிவமற்ற ஒளிர்மை, இயக்கமும் இன்பமும் தரும் செல்வங்கள் எல்லாவற்றிலும் உயர்ந்தது. அது தடையின்றி வெளிச்செல்வது. வேண்டுபவர் தேவையான அளவுக்கு கொண்டு செல்வது. பொருள் செல்வம் திருடர்களிடமும் உள்ளது. அது ஒளிக்கப்பட்டது. தேவையானவர்க்கும் பயன்படாதது.*

**242. நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றான்**
**தேரினு மஃதே துணை.**

**நல் ஆற்றான் நாடி அருள் ஆள்க! பல் ஆற்றான்**
**தேரினும் அஃதே துணை.**

*நல் = ன் + அல். நெருங்கிய அதிர்வு. புலன்.*

*ஆற்று = ஆற் + உ. அறுத்து. அடக்கு. நாடி = ன் + ஆட் + இ. நெருங்கி ஒட்டித் தொடர்வதாய் இருந்து. கடைப்பிடித்து. தேர் = த் + ஏர். தேகம் மிக உயர்ந்து இருத்தல்.*

*புலனடக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து, மெய் முழுவதும் அருளால் ஒளிரட்டும். பலவற்றைப் பலரிடம் பயின்று உயர்ந்தாலும், புலனடக்கமே, கடைசியில் அருள்பெற உதவும்.*

**243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த**
**இன்னா வுலகம் புகல்.**

**அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை - இருள் சேர்ந்த**
**இன்னா உலகம் புகல்.**

*உயர்ந்த நெருக்கமான இயக்கத் தன்மையுடன் அருள் எனும் ஒளிர்மை கொண்டவர்கள், புலன்களால் வரும் அகந்தை எனும் அறியாமை இருள் நிரம்பிய, இனிமையற்ற உலகத்தினுள் நுழைய மாட்டார்கள்.*

**244. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப**
**தன்னுயி ரஞ்சும் வினை.**

**'மன் உயிர் ஓம்பி, அருள் ஆள்வாற்கு இல்' என்ப**
**தன் உயிர் அஞ்சும் வினை.**

*மன்னுயிர் = மன் + உயிர். மனம் கலந்த உயிர்.*

*ஓம்பு = ஓம் + ப் + உ. முழுமையாய் அமைதியாகி வெளியாய் வெளிப்படல்.*

*அகந்தையற்ற மனம் உயிருடன் ஒன்றும். புலன்களால் அகந்தை மீண்டும் எழா வண்ணம், ஓம் எனும் மந்திர ஒலியால், மனம் கலந்த உயிர் முழுமையாய் அமைதியாகித் தூய வெளியாகி, ஒளிமயமானவர்க்கு, அகந்தையால் உருவாகும் கருமம் இல்லை, மறுபிறப்பும் இல்லை.*

**245. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு**
**மல்லன்மா ஞாலங் கரி.**

**அல்லல், அருள் ஆள்வார்க்கு இல்லை; வளி வழங்கும்**
**மல்லல் மா ஞாலம் கரி.**

*அல்லல் = அல் + அல். உயிரின் ஏற்ற இறக்கம். துன்பம். கருமம்.*

*வளி = வ் + அள் + இ. புறமும் அகமும் உயிர்ப்புள்ள மிகை இருத்தல். வளி = வ் + அளி. புறத்தையும் அகத்தையும் தருவது, வாழ்விப்பது. காற்று.*

*அல்லன் = அல் + அன். அதிர்வானவன். அசைவற்றவன்.*

*மா = ம் + ஆ. அமைதியான.*

*ஞாலம் = ன் + ச் + ஆல் + அம். நெருங்கிய இயக்கம் உறுதியான தன்மை. கரி = க் + அர் + இ. மெய் பிரிந்து இருத்தல். கரி, தாவரமோ, உடலோ, பொருளோ இருந்து தீக்கிரையானதன் சாட்சி.*

*பூமி, அசைவற்றும் அமைதியாயும் இருந்து, உயிர்கள் உயிர்வாழ்வதற்கு அவசியமான காற்றை வழங்குகின்றது. அதே போல், ஞானியர் அசைவற்று அமைதியுடன் இருந்து, மனிதர் தெளிவு பெற, அருள் ஒளியை வழங்குகின்றனர்.*

**246. பொருணீங்கிப் பொச்சாந்தார் என்ப ரருணீங்கி**
**அல்லவை செய்தொழுகு வார்.**

**'பொருள் நீங்கிப் பொச்சாந்தார்' என்பர் - அருள் நீங்கி**
**அல்லவை செய்து ஒழுகுவார்.**

பொருணீங்கி = பொருள் + நீங்கி. பொருள் = ப் + ஓர் + உள். அகத்தில் ஒன்றாய் உள்ளது. மனசாட்சி. பொச்சாந்தார் = பொய் + சாந்து + ஆர். பொய்யான வண்ணம் பூசியவர். வேடதாரி. அருள் தரும் அசையாமையையும் அமைதியையும் விட்டுவிட்டு, கருமங்களைச் செய்பவரை, மனசாட்சியற்ற வேடதாரி என்பர்.

**247. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்**
**கிவ்வுலக மில்லாகி யாங்கு.**

**அருள் இல்லார்க்கு அவ் உலகம் இல்லை - பொருள் இல்லார்க்கு**
**இவ் உலகம் இல்லாகியாங்கு.**

அவ்வுலகம் = அந்த உலகம். நிலைபேறு. பிறப்பில்லாமை.

ஞானம் அடையாதவர்க்கு நிலைபேறு எனும் அவ்வுலகம் இல்லை. ஆனால், அவர்கள் இன்பம் துன்பம் உள்ள இவ்வுலகத்திலாவது வாழலாம். ஆனால், பொருளில்லாமல் வறுமையானவர், இவ்வுலகமும் இல்லையென்றாகி, வேறு எவ்வுலகம் செல்ல முடியும்?

அருளுக்கு முயற்சி செய்ய முடியவில்லை என்றால், பொருளுக்காகவாவது உழைக்க வேண்டும்.

**248. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றார்**
**அற்றார்மற் றாத லரிது.**

**பொருள் அற்றார் பூப்பர் ஒருகால்; அருள் அற்றார் அற்றார்**
**மற்று ஆதல் அரிது.**

பூப்பர் = ப் + ஊப் + அர். கொள்வதை விரிந்து பரந்து கொள்வர். பெரிதாய்க் கொண்டவர் ஆவர். பொருள் மிக்கவராவர். முகம் மலர்வர்.

மற்று = ம் + அற்று. அமைதி அற்று.

பொருளிழந்தவர் பொருள் மிக்கவராவர், ஒரு காலத்தில். ஆனால், ஞானியர் ஒரு முறை அருளை இழந்தாலும், இழந்ததுதான். மனம் அமைதி இழக்கும். மன அமைதி அற்று ஞானமடைதல் கடினம்.

**249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்**
**அருளாதான் செய்யு மறம்.**

**தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்-தேரின்,**
**அருளாதான் செய்யும் அறம்.**

தெருள் = த் + எர் + உள். தேகம் உயர்ந்து இருந்து உள் ஒளியாவது.

மெய்ப்பொருள் = மெய் + பொருள். மெய்யாகிய பொருள். உணரக்கூடிய புறம்.

*புலனடக்காதவன், மெய்ப்பொருளைக் கண்டதைப் போன்றது, தேகத்திலிருந்து உயர்ந்து அகவெளியாகி, ஒளிர்மையாகாதவன் செய்யும், நற்செயல்.*

**250. வலியார்முற் றன்னை நினைக்கத்தான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.**

**வலியார்முன் தன்னை நினைக்க-தான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து.**

*தன்னைவிட மென்மையானவரை அதிகாரம் செய்யும்போது, தான் வலிமையானவர் முன்பு எவ்வளவு பயப்படுகிறோம் என்று நினைத்துப் பார்த்து, மென்மையானவரின் மனம் நோகாமல் நடப்பதே அருளாகும்.*

**அருளுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அருள் எனும் உயிரின் வடிவமற்ற ஒளிர்மை, இயக்கமும் இன்பமும் தரும் செல்வங்கள் எல்லாவற்றிலும், உயர்ந்தது. பொருள் செல்வம், திருடர்களிடமும் பயனற்று உள்ளதே. புலனடக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து, மெய் முழுவதும் அருளால் ஒளிரட்டும். பலவற்றைப் பலரிடம் பயின்று உயர்ந்தாலும், புலனடக்கமே, கடைசியில் அருள்பெற உதவும்.*

*உயர்ந்த நெருக்கமான இயக்கத் தன்மையுடன் அருள் எனும் ஒளிர்மை கொண்டவர்கள், புலன்களால் வரும் அகந்தை எனும் அறியாமை இருள் நிரம்பிய, இனிமையற்ற உலகத்தினுள் நுழைய மாட்டார்கள்.*

*மனத்தை உயிருடன் சேர்த்துத் தூய வெளியாகி, ஒளிமயமானவர்க்கு, அகந்தையால் உருவாகும் கருமம் இல்லை, மறுபிறப்பும் இல்லை.*

*பூமி, அசைவற்றும் அமைதியாயும் இருந்து, உயிர்கள் உயிர்வாழ்வதற்கு அவசியமான காற்றை வழங்குகின்றது. அதே போல், ஞானியர் அசைவற்று அமைதியுடன் இருந்து, மனிதர் தெளிவு பெற, அருள் ஒளியை வழங்குகின்றனர். அருள் தரும் அசையாமையையும் அமைதியையும் விட்டுவிட்டு, கருமங்களைச் செய்பவரை, மனசாட்சியற்ற வேடதாரி என்பர். ஞானம் அடையாதவர்க்கு நிலைபேறு எனும் அவ்வுலகம் இல்லை. ஆனால், பொருளில்லாமல் வறுமையானவர், இவ்வுலகமும் இல்லையென்றாகி, வேறு எவ்வுலகம் செல்ல முடியும்?*

*பொருளிழந்தவர் பொருள் மிக்கவராவர் ஆகலாம், ஒரு காலத்தில். ஆனால், ஞானியர் ஒரு முறை அருளை இழந்தாலும், இழந்ததுதான். மீண்டும், ஞானமடைதல் கடினம். புலனடக்க ஒழுக்கத்தால் அகந்தையிலிருந்து உயராதவன், மெய்ப்பொருளை உணரமுடியாது. அதைப் போல், ஞான ஒளி இல்லாதவன் செய்வதும் அறமாகாது.*

*தன்னைவிட மென்மையானவரை அதிகாரம் செய்யும்போது, தான் வலிமையானவர் முன்பு எவ்வளவு பயப்படுகிறோம் என்று நினைத்துப் பார்த்து, மென்மையானவரின் மனம் நோகாமல் நடப்பதே அருளாகும்.*

# 26. புலால் மறுத்தல்

*புலால் = புல் + ஆல். புல்லால் இயக்கமானவை. ஆடு, மாடு போன்றவை. புலால் = புல் + ஆல். புலன் அதிர்வாதல். புலன்கள் விரைந்து இயங்குதல். புலன் எளிதில் அடங்காமை.*

*புலால் மறுத்தல் = இறைச்சி வேண்டாமை.*

**251. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு.**

**பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை; அருள் ஆட்சி
ஆங்கு இல்லை, ஊன் தின்பவர்க்கு.**

*ஊன் = நீள்புறத்தே நெருங்கி இருத்தல். பிற உடல். உன் = புறத்தே / உள்ளே நெருங்கி இருத்தல். தன்னுடல்.*

*பாதுகாக்காதவரிடம் பொருள் தொடர்ந்து நிலைக்காது. அதைப்போல், விலங்குகளின் இறைச்சி தின்பவர்க்கு, புலன் அடங்காமையால், அருள் உணர்வு தொடராது, அழியும்.*

**252. தன்னூன் பெருத்தற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்.**

**தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்?**

*தன்னுடலைப் பெருக்க விரும்பி, பிற உயிரின் உடலை உண்பவன், எப்படி அருள் உடையவன் ஆவான்?*

**253. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்றின்
உடல்சுவைத் துண்டார் மனம்.**

**படை கொண்டார் நெஞ்சம்போல் நன்று ஊக்காது-ஒன்றன
உடல்சுவை உண்டார் மனம்.**

*ஊக்கு = ஊக் + உ. நீள்புறத்தே பொருண்மை வெளிப்படுத்து. எண்ணம்.*

*ஆயுதம் தூக்கியவன் நெஞ்சம் போல், பிற உயிரின் உடலை இரசித்துச் சுவைத்து உண்டவர் மனம், நல்லதை நினைக்காது.*

**254. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.**

**'அருள்,அல்லது, யாது?' எனின்,-கொல்லாமை, கோறல்:**
**பொருள் அல்லது, அவ் ஊன் தினல்.**

*கோறல் = க் + ஓற் + அல். மெய்யை முழுமையாய் அறுத்தல். கொல்லல்.*

*பொருள் = ப் + ஒர் + உள். கொண்டது ஒன்றாய் உள் இருப்பது. மனம் ஒன்றி இருப்பது. அர்த்தம்.*

*அருள் இல்லாதது எதுவென்றால், கொல்லாமையைக் கொல்லுதல். மனம் உயிருடன் ஒன்றாமல் இருப்பதும், அர்த்தமற்றதும் எதுவென்றால், கொன்ற உயிரின் உடலைத் தின்னுதல்.*

**255. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண**
**அண்ணாத்தல் செய்யா தளறு.**

**உண்ணாமை உள்ளது உயிர்நிலை; ஊன் உண்ண,**
**அண்ணாத்தல் செய்யாது, அளறு.**

*அண்ணாத்தல் = அண் + ஆத்தல். மிக நெருக்கமாக்குதல்.*

*அளறு = அள் + அறு. மிகை அறுந்தது. ஒளி அற்றது. இருள். இயக்கமின்மை. நரகம் = ன் + அர் + அகம். நெருக்கம் பிரிந்த அகம். நிரயம் = நிர் + அய் + அம். இல்லாமை உயிர்ப்புள்ள தன்மை.*

*ஊன் உண்ணாமையால் உயிர்கள் நிலையாக இப்பூமியில் வாழ்கின்றன. எல்லா உயிர்களும் ஊன் தின்ன ஆரம்பித்தால், விரைவில் பூமியில் ஒரு உயிரும் இல்லாமல் போய்விடும்.*

*மனித உயிர்மை நிலை பெற, உண்ணாமை ஒரு கருவி. மறுதலையாக, உயிர் தன்னுள் நிலைப்பெற்று இருக்கையில், உணவும் தேவைப்படாது.*

*ஊனை உண்டால், வெளியின் இருள்நிறைந்த இயக்கமற்றத் தன்மை, உயிரை உடலுடன் மிக நெருக்கமாக்காது. அகம் உடலுக்காக ஏங்கும்போது, பிறப்பு தோன்றாது.*

**256. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்**
**விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.**

**தினற்பொருட்டால் கொல்லாது உலகு எனின், யாரும்**
**விலைப்பொருட்டால் ஊன் தருவார் இல்.**

*தின்பதற்காக மக்கள் உயிர்களைக் கொல்வதில்லை எனும்போது, பிறருக்காக உயிர்களைக் கொன்று, ஊனை விலைக்கு விற்கவும், எவரும் இருக்க மாட்டார்கள்.*

**257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றின்**
**புண்ண துணர்வார்ப் பெறின்.**

**உண்ணாமை வேண்டும், புலாஅல்-பிறிது ஒன்றன்**
**புண்; அது உணர்வார்ப் பெறின்.**

*ஊன், பிற உயிரின் புண் எனும் உணர்வு, ஒருவர் மனதில் உயர்ந்து நிலைத்தால், அவர், ஊன் உண்ணாமையை விரும்புவார்.*

**258. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்**
**உயிரிற் றலைப்பிரிந்த வூன்.**

**செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்,**
**உயிரின் தலைப்பிரிந்த ஊன்?**

*செயிரிற் = செய் + இர் + இன். செயலின். வினையின்.*

*தலைப்பிரிந்த = காரணம் பிரிந்த. புலன் அடங்கிய*

*காட்சியார் = மெய்யுணர்ந்தவர்.*

*தலைப்பிரிந்த = கொல்லப்பட்ட.*

*வினைக்குக் காரணமான புலனடக்கிய மெய்யுணர்வாளர், கொல்லப்பட்ட உயிரின் ஊனை உண்ணமாட்டார்.*

**259. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்**
**உயிர்செகுத் துண்ணாமை நன்று.**

**அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன்**
**உயிர் செகுத்து உண்ணாமை நன்று.**

*அவி = அவ் + இ. புறமும் அகமும் அற்று இருத்தல். வடிவம் இல்லாமல் போதல். அழிதல். பலி. இரத்தம்.*

*சொரி = ச் + ஓர் + இ. இயக்கம் ஒன்றாய் இருத்தல். ஒரே வேகத்தில் இயங்குதல். சீரான இயக்கம். தொடர்ந்துக் கொட்டுதல்.*

*வேட்டல் = வ் + ஏட் + அல். புறமும் அகமும் மிக உயர்த்தி ஒட்டித் தொடரல்.*

*செகு = ச் + எ + க் + உ. இயக்கம் உயர்ந்து மெய்யை வெளிப்படுத்து. கொல்.*

*பொருட்களைத் தொடர்ந்து கொட்டி, பலியிட்டு, தீக்கிரையாக்கப் பலவற்றை வேண்டுவதைவிட, ஒரு உயிரைக் கொன்று தின்னாமல் இருப்பது நல்லது.*

**260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா வுயிருந் தொழும்.**

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி,**
**எல்லா உயிரும் தொழும்.**

*தான் தின்பதற்காக கொல்லாதவனையும், பிறர் கொன்ற உயிரின் ஊனைத் தின்ன மறுப்பவனையும், எல்லா உயிர்களும் தெய்வம் போல் நினைத்து வணங்கும்.*

*புலால் மறுத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*பாதுகாக்காதவரிடம், பொருள், தொடர்ந்து நிலைக்காது. இறைச்சி தின்பவர்க்கு, அருள் உணர்வு, தொடர்ந்து நிலைக்காது.*

*தன்னுடலைப் பெருக்க விரும்பி, பிற உயிரின் உடலை உண்பவன், எப்படி அருள் உடையவன் ஆவான்?*

*ஆயுதம் தூக்கியவன் நெஞ்சம் போல், பிற உயிரின் உடலை இரசித்துச் சுவைத்து உண்டவர் மனம், நல்லதை நினைக்காது.*

*அருள் இல்லாதது எதுவென்றால், கொல்லாமையைக் கொல்லுதல். மனம் உயிருடன் ஒன்றாமல் இருப்பதும், அர்த்தமற்றதும் எதுவென்றால், கொன்ற உயிரின் உடலைத் தின்னுதல்.*

*இறைச்சி உண்ணாமையால், உயிர்கள் நிலைப்பெற்று உள்ளன. இறைச்சியையே, அனைத்து உயிர்களும் உண்டால், உயிர்களே பிறக்காது.*

*தின்பதற்காக மக்கள் உயிர்களைக் கொல்வதில்லை எனும்போது, ஊனை விலைக்கு விற்கவும், எவரும் இருக்க மாட்டார்கள்.*

*ஊன், பிற உயிரின் புண் எனும் உணர்வு, ஒருவர் மனதில் உயர்ந்து நிலைத்தால், அவர், ஊன் உண்ணாமையை விரும்புவார்.*

*வினைக்கு காரணமான புலனடக்கிய மெய்யுணர்வாளர், கொல்லப்பட்ட உயிரின் ஊனை உண்ணமாட்டார்.*

*பொருட்களைத் தொடர்ந்து கொட்டி, பலியிட்டு, தீக்கிரையாக்கப் பலவற்றை வேண்டுவதைவிட, ஒரு உயிரைக் கொன்று தின்னாமல் இருப்பது நல்லது.*

*தான் தின்பதற்காகக் கொல்லாதவனையும், பிறர் கொன்ற உயிரின் ஊனைத் தின்ன மறுப்பவனையும், எல்லா உயிர்களும் தெய்வம் போல் நினைத்து வணங்கும்.*

# 27. தவம்

*தவம் = த் + அவ் + அம். தேகம் உயிர்ப்புடன் புறம் அகம் இருக்கும் தன்மை. தேகம் புறம் அகம் இல்லாத் தன்மை. உயிரில் ஒன்றியத் தன்மை.*

**261. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற் குரு.**

**உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை,**
**அற்றே- தவத்திற்கு உரு.**

*உற்ற = உற் + அ. உள்ளே இருக்கும். உள்ளே பிரிந்த. புறம் பிரிந்த. உண்டான.*

*நோய் = ன் + ஓய். நெருங்கி முழுவதுமாய் இருந்து இயங்குவது. கருமம். பிறப்பு.*

*நோன்றல் = ன் + ஓன் + ற் + அல். நெருங்கி ஒன்றாகப் பிரிந்துஇருத்தல். புலன் அடக்கம்.*

*உறு = உற் + உ. உள்ளே இருந்து வெளிப்படும். உள்ளே பிரிந்து வெளிப்படும். புறம் பிரிந்து வெளிப்படும்.*

*கண் = க் + அண். மெய்யின் மிகை நெருக்கம். ஊன்.*

*அற்றே = அற் + ஏ. உயிருடன் இருத்தலே. உயிர் பிரிதலே.*

*தவத்திற் குரு = தவத்திற்கு உரு. தவத்தின் குரு. குரு = க் + உரு. மெய் உரு. மெய்மையின் தோற்றம்.*

*உண்டான பிறப்பில் புலன் அடக்கலும், உயிரைப் பிரித்து ஊன் வெளிப்படுத்தாமையுமே, தவம் எனும் உயிரில் ஒன்றியத் தன்மையின் தோற்றம்.*

*அல்லது*

*புலன் அடக்கலும், கொல்லாமையுமே மெய்யுணர்தலுக்கான உபதேசம்.*

**262. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை**
**யஃதிலார் மேற்கொள் வது.**

**தவமும் தவம் உடையார்க்கு ஆகும்; அவம், அதனை அஃது**
**இலார் மேற்கொள்வது.**

*அவம் = அவ் + அம். புறம் அகம் இல்லா தன்மை. உருவாகாமை. தோன்றாமை. அவம் = அ + வ் + அம். உயிர்ப்புள்ள புறம் அகத் தன்மை. பிறப்பு.*

*இடைவிடாமல் புலனடக்கி, உயிரோடு ஒன்றுபவரே, மெய்யுணர*

முடியும். புலனடக்காதவர்க்கு, உயிரோடு ஒன்றாதவர்க்கு, மெய்யுணர்வு உருவாகாது. ஆசையினால், மறுபிறப்பு உண்டாகும்.

**263. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்**
**மற்றை யவர்க டவம்.**

**துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி, மறந்தார்கொல்-**
**மற்றையவர்கள், தவம்!**

*துப்புரவு = த் + உப் + உர் + அ + உ. தேகம் உள்ளும் வெளியும் கொள்வதாய் புறத்தே உள்ளன. உணவு, குடிநீர், மருந்து, உடை, குளிநீர், உறையுள்.*

*துறந்தார் உயிருடன் இருக்க தேவையான அத்தியாவசியமான பொருட்களைத் தருவதையே நினைத்திருந்து, இல்லறத்தார் தாங்கள் செய்ய வேண்டிய தவத்தை மறந்து விட்டார்களா?*

*துறந்தார்க்குச் சேவை செய்வதும்கூட ஒரு வகையான தவம்தான்.*

**264. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்**
**எண்ணிற் றவத்தான் வரும்.**

**ஒன்னார்த் தெறலும், உவந்தாரை ஆக்கலும்,**
**எண்ணின், தவத்தான் வரும்.**

*ஒன்னார் = ஒன் + ஆர். ஒன்றாகாதார். பிரிப்பவர். துன்பம் தருபவர்.*

*தெறல் = த் + எற் + அல். தேகம் உயர்ந்துப் பிரிதல். அழிதல்.*

*உவந்தார் = உ + வந்தார். உள் / புறம் / முன் வந்தார். உதவியவர்.*

*துன்பம் தருபவரை அழித்தலும், உதவியவரைப் பொருளுடையவர் ஆக்கலும், தவம் செய்வோர் நினைத்தால் நடக்கும்.*

**265. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்**
**ஈண்டு முயலப் படும்.**

**வேண்டிய வேண்டியாங்கு எய்தலான், செய் தவம்**
**ஈண்டு முயலப்படும்.**

*செய் = ச் + எய். இயக்கம் உயர்ந்து இருந்து இயக்குவது.*

*விரும்பியதை விரும்பியவுடன் அடைவதால், இயங்கு ஆற்றலைத் தரும் உயிருடன் ஒன்றுதலுக்கு, இங்குப் புலனடக்கும் முயற்சி, நடைபெறும்.*

**266. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்**
**அவஞ்செய்வா ராசையுட் பட்டு.**

**தவம் செய்வார் தம் கருமம் செய்வார்; மற்று அல்லார் அவம் செய்வார், ஆசையுள் பட்டு.**

*தவம் செய்பவர், புலனடக்கி உயிரோடு ஒன்றுவதால், புதிய வினைகள் சேராது, எஞ்சிய முன்பிறப்பின் கருமங்களும் கழியும். மற்றவர்களோ புலனடக்காமல், உயிரோடு ஒன்றாமல், விரும்பியதை விரும்பியவுடன் அடையலாம் என்ற ஆசையுடன், தவம் செய்ய முயன்றால், அவர் மறுபிறப்பையே உருவாக்குவார். தவத்தின் பயன், பிறப்பு அறுத்தலே, விரும்பியதை விரும்பியவுடன் அடையும், ஆற்றல் பெறுவதற்கு அன்று.*

**267. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவற்கு.**

**சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும்-துன்பம்
சுடச்சுட நோற்கிற்பவர்க்கு.**

*சுட = ச் + உட் + அ. இயக்கம் உள்ளே / புறத்தே ஒட்டித் தொடர.*

*சுடர் = ச் + உட் + அர். இயக்கம் உள்ளே / புறத்தே ஒட்டித் தொடர்ந்து இருத்தல்.*

*பொன் = ப் + ஒன். கொண்டது ஒன்றாதல்.*

*துன்பம் = த் + உன் + ப் + அம். தேகத்தின் புறத்தே நெருங்கிக் கொள்ளும் தன்மை. புலன்கள்.*

*தீயில் சுடச்சுட, பொன், மாசுகள் நீங்கி, தீபம்போல் ஒளிரும். உயிரில் ஒன்றி, உடலசைவின்றி, தூய வெளியானவர்க்கு, அடக்க அடக்க, புலன்களும், ஞானஒளி மிக்கதாகும்.*

**268. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.**

**தன் உயிர் தான் அறப் பெற்றானை ஏனைய
மன் உயிர் எல்லாம் தொழும்.**

*தன் உயிரை, தன் தேகத்தின் புலன்களிடம் இருந்தும், மனத்திடம் இருந்தும், பிரித்தவனை, உயிரில் ஒன்றியவனை, மனம் உயிரில் இணைந்தவனை, தானே உயிரானவனை, இறைமைத் தன்மை கொண்டவனை, மற்ற மனம் கொண்ட உயிர்கள் எல்லாம் வணங்கும்.*

**269. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவற்கு.**

**கூற்றம் குதித்தலும் கைகூடும்-நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்டவர்க்கு.**

*கூற்று = க் + ஊற்று. மெய்யின் (தடையிலா) உற்று. பொருண்மை வெளிப்பாடு. சொல்.*

*உதித்தல் = தோன்றல்.*

*உயிருடன் ஒன்றியதால் பெற்ற ஆற்றலை, எண்ணத்தில் தொடர்ந்து இருத்துபவர்க்கு, சொன்ன சொல் பொருண்மையாக மாறும் சக்திகூட, கைவரும்.*

**270. இலர்பல ராகிய காரண நோற்பார்**
**சிலர்பலர் நோலா தவர்.**

**இலர் பலர் ஆகிய காரணம்-நோற்பார்**
**சிலர்; பலர் நோலா தவர்.**

*வறியவர் பலராகிய காரணம், புலனடக்கி உயிரோடு ஒன்றுபவர் சிலர், புலனடக்கி உயிரோடு ஒன்றாதவர், பலர்.*

*புலனடங்குவதால், புதிய வினைகள் சேராது. உயிரோடு ஒன்றுவதால், எஞ்சிய முன்பிறப்பு கருமங்களும் கழியும். கருமமின்மையால், உயிரை, செல்வம் தானாக வந்தடையும்.*

### தவம் அதிகாரப் பொருள் தொகுப்பு:

*உண்டான பிறப்பில் புலன் அடக்கலும், உயிரைப் பிரித்து ஊன் வெளிப்படுத்தாமையுமே, தவம் எனும் உயிரில் ஒன்றிய தன்மையின் தோற்றம்.*

*இடைவிடாமல் புலனடக்கி, உயிரோடு ஒன்றுபவரே, மெய்யுணர முடியும். புலனடக்காதவர்க்கு, உயிரோடு ஒன்றாதவர்க்கு, ஆசையினால், மறுபிறப்பே உண்டாகும்.*

*துறந்தார் உயிருடன் இருக்க தேவையான அத்தியாவசியமான பொருட்களைத் தருவதையே நினைத்திருந்து, இல்லறத்தார் தாங்கள் செய்ய வேண்டிய தவத்தை மறந்து விட்டார்களா?*

*துன்பம் தருபவரை அழித்தலும், உதவியவரைப் பொருளுடையவர் ஆக்கலும், தவம் செய்வோர் நினைத்தால் நடக்கும்.*

*விரும்பியதை விரும்பியவுடன் அடைவதால், இயங்கு ஆற்றலைத் தரும், உயிருடன் ஒன்றுதலுக்கு, இங்கு புலனடக்கும் முயற்சி, நடைபெறும்.*

*தவம் செய்பவர், புலனடக்கி உயிரோடு ஒன்றுவதால், புதிய வினைகள் சேராது, எஞ்சிய முன்பிறப்பின் கருமங்களும் கழியும். மற்றவர்களோ புலனடக்காமல், உயிரோடு ஒன்றாமல், விரும்பியதை விரும்பியவுடன் அடையலாம் என்ற ஆசையுடன், தவம் செய்ய முயன்றால், அவர் மறுபிறப்பையே உருவாக்குவார். தவத்தின் பயன், பிறப்பு அறுத்தலே, விரும்பியதை விரும்பியவுடன் அடையும், ஆற்றல் பெறுவதற்கு அன்று.*

தீயில் சுடச்சுட, பொன், மாசுகள் நீங்கி, தீபம்போல் ஒளிரும். உயிரில் ஒன்றி, உடலசைவின்றி, தூய வெளியானவர்க்கு, அடக்க அடக்க, புலன்களும், ஞானஒளி மிக்கதாகும்.

தன் உயிரை, தன் தேகத்தின் புலன்களிடம் இருந்தும், மனத்திடம் இருந்தும், பிரித்தவனை, இறைமைத் தன்மை கொண்டவனை, மற்ற மனம் கொண்ட உயிர்கள் எல்லாம், வணங்கும்.

உயிருடன் ஒன்றியதால் பெற்ற ஆற்றலை, எண்ணத்தில் தொடர்ந்து இருத்துபவர்க்கு, சொன்ன சொல் பொருண்மையாக மாறும் சக்திகூட, கைவரும்.

வறியவர் பலராகிய காரணம், புலனடக்கி உயிரோடு ஒன்றுபவர் சிலர், புலனடக்கி உயிரோடு ஒன்றாதவர், பலர்.

# 28. கூடாவொழுக்கம்

*கூடாவொழுக்கம் = கூடா + ஒழுக்கம். கைவராது உயிரோடு ஒன்றுதல்.*

**271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
அஞ்சு மகத்தே நகும்.**

**வஞ்ச மனத்தான் படிற்று ஒழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.**

*வஞ்சம் = வன் + ச் + அம். வலிமையான இயக்க தன்மை. பிறருக்கு தீங்கு இழைத்தல்.*

*படிறு = ப் + அட் + இறு. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து உறுதியாய்ப் பிடித்துக் கொள்ளல். மனத்தின் நீங்கா ஆசைகள்.*

*பூதம் = ப் + ஊத் + அம். கொண்டது விரிந்துப் பரந்து தேகமான / வடிவமான தன்மை.*

*தன் நீங்கா ஆசைகளுக்காக, பிறருக்கு தீங்கு இழைக்கும் மனமுடையவனைக் கண்டு, ஐம்பூதங்களும் உள்ளுக்குள் நகைக்கும், 'எப்படியெல்லாம் நடிக்கிறான், என்றைக்காவது ஒரு நாள் மாட்டிக் கொள்வான், எல்லா நேரமும் எண்ணத்தையோ செயலையோ மறைத்துவிட முடியாதே', என்று.*

**272. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின்.**

**வான் உயர் தோற்றம் எவன்செய்யும்-தன் நெஞ்சம்
தான் அறி குற்றப்படின்?**

*படின் = ப் + அட் + இன். கொண்டது ஒட்டித் தொடர்ந்தால். மனம் நினைவுகளைத் தொடர்ந்தால்.*

*என்னதான் மிக உயரமான மேடையிட்டு, ஆடம்பரமாய் அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்திருந்தாலும், தன் மனசாட்சி, தான் அறிந்தே செய்த குற்றங்களைத் தொடர்ந்து நினைவூட்டும்போது, கூனிக் குறுகத்தான் நேரிடும்.*

**273. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.**

**வலி இல் நிலைமையான் வல் உருவம் பெற்றம் புலியின்
தோல் போர்த்து மேய்ந்தற்று.**

பெற்றம் = ப் + எற் + அம். கொண்டது உயர்ந்து இருக்கும் / பிரியும் தன்மை.

புலனடக்கும் மன வலிமை இல்லாமல், துறவியின் மதிப்பும் மரியாதையும் மிக்க வேடத்தைப் பூண்டு, தன் ஆசைகளை நிறைவேற்றிக்கொள்பவன், புலியின் தோலைப் போர்த்திய பசுவைப் போன்றவனாவன்.

மாடென்றால், துரத்துவர். புலியென்றால், கொன்றேவிடுவர். குறைந்தது, வேடம் கலைந்துவிடும்.

**274. தவமறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.**

**தவம் மறைந்து, அல்லவை செய்தல்-புதல்மறைந்து
வேட்டுவன் புள் சிமிழ்த்தற்று.**

புள் = ப் + உள். கொள்வதன் உள். கூட்டிற்குள். கூட்டிற்குள்வசிக்கும் பறவை.

சிமிழ் = ச் + இம் + இழ். இயக்கம் இறங்கிக் கொண்டு மூடும் இறங்கும் ஆழ்ந்து. இயக்கம் நிலைத்து மூடும் நிலையாய் ஆழும். இருபக்கமும் சுற்றிப் பிடித்து அமுக்கு.

தவசியின் வேடத்தில், பெண்மையைச் சூறையாடுவது, புதருக்கு அருகே மறைந்து இருந்து, பறவையை வேட்டையாடிய கோழைமை போன்றதாகும்.

வேடன் பொதுவாகக் கண்ணி வைத்து அல்லது அம்பை எய்து பறவைகளைப் பிடிப்பான். அதை விடுத்து, பறவையின் கூட்டின் அருகே புதரில் மறைந்து இருந்து, சமயம் பார்த்து, கூட்டிற்குள் இருக்கும் பறவையை இருகைகளாலும் சுற்றிப் பிடித்து அமுக்குவது, ஏற்க முடியாதது. தன்னுடைய பேராசையால், கண்ணியில் உள்ள உணவை உண்ண வரும்போது மாட்டிக் கொள்வது வேறு, வேடனின் குறிவைத்து வேகமாக இயங்கும் திறமையாலோ அல்லது தன்னுடைய வேகமாய்ப் பறக்க முடியாத பலவீனத்தாலோ அம்புக்கு இரையாகி வீழ்வது வேறு. ஆனால், பாதுகாப்பு எனக் கருதி கூட்டில் கவனக் குறைவாய் இருக்கையில், புதரின் அருகில் மறைந்து இருந்து எதிர்பாராமல் பிடிபடுவது வேறு.

அதைப் போன்றே, தவசியின் வேடம் இன்றி, தன்னுடைய குணம் அல்லது திறமையாலோ அல்லது கற்பின் வலிமையற்ற தன்மையாலோ, ஒரு பெண்ணை அடைவது என்பது வேறு. அதை விடுத்து, ஒரு பெண்ணின் வீட்டிற்குள் தவசியின் வேடத்தில் நுழைந்து, அவள் எதிர்த்துப் போராட முடியாத நிலைமையைச் சாதகமாக்கிக் கொண்டு, அவளைத் தன் கைப்பிடிக்குள் கொண்டு வருவது ஏற்கமுடியாதது.

இரண்டும் ஆண்மையற்ற கோழைத்தனத்தின் வெளிப்பாடு.

**275. பற்றற்றோ மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
ஏதம் பலவுந் தரும்.**

**'பற்று அற்றேம்' என்பார் படிற்று ஒழுக்கம், 'எற்று! எற்று!' என்று
ஏதம் பலவும் தரும்.**

*ஏதம் = ஏத் + அம். மிக உயரும் தேகத் தன்மை. (மூச்சுக்காக ஏங்கி) தலையைத் தூக்கி வருந்துதல்.*

*ஆசைகளை விட்டுவிட்டேன் என்று சொல்லிக்கொண்டே, மறைவாக தன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளும்போது மாட்டிக் கொண்டவன், எதற்காகத் தான் இப்படிச் செய்தோமோ என்று, தப்பும் வழியின்றி, தலையைத் தூக்கி வேதனைப்படுவான்.*

**276. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.**

**நெஞ்சின் துறவார், துறந்தார்போல் வஞ்சித்து,
வாழ்வாரின் வன்கணார் இல்.**

*மனத்தில் ஆசைகளை விடாமல், ஆசைகளை விட்டவர்போல் நடித்து, தீங்கு செய்பவனைக் காட்டிலும், இரக்கமற்ற கொடியவன் வேறு யாரும் இருக்க முடியாது.*

**277. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.**

**புறம் குன்றி கண்டனையரேனும், அகம் குன்றி
மூக்கின் கரியார் உடைத்து.**

*புறங்குன்றி = உடலால் பணிந்து.*

*கண்டனையர் = கண்டு + அனையர். பார்த்து நெருங்குபவர்.*

*பிறரை, உடலால் பணிந்து, நேராகப் பார்த்து நெருங்குபவராயினும், மனம், குன்றிமணியின் மூக்கைப்போல் கருமையானது, தீய எண்ணம் உடையது.*

*அல்லது*

*தவசியைப் போன்று நடிப்பவர், குன்றிமணியைப் போன்று புறத்தே காவியால் சிவந்திருப்பினும், மனத்தில், குன்றிமணியின் மூக்கைப் போல், கரிய தீய எண்ணம் கொண்டிருப்பார்.*

**278. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.**

**மனத்தது மாசு ஆக, மாண்டார் நீர் ஆடி,**
**மறைந்து ஒழுகும் மாந்தர் பலர்.**

*நீராடுவதன் மூலம் தான் அழுக்கற்றவன் எனப் புற உலகத்திற்குக் காட்டிக் கொண்டே, மனத்தின் ஆசைகளை மறைவாக நிறைவேற்றிக் கொண்டு மாண்ட போலியான தவசிகள் பலர், மனிதருள் உண்டு.*

**279. கணைகொடிதி யாழ்கோடு செவ்விதாங் கன்ன**
**வினைபடு பாலாற் கொளல்.**

**கணை கொடிது; யாழ் கோடு செவ்விது; ஆங்கு அன்ன**
**வினைபடு பாலால் கொளல்.**

*கணை = க் + அண் + ஐ. மெய்யை / பொருண்மை மிக நெருங்கி ஐக்கியமாவது.*

*கொடிதி = கொடி + தி. கொடி = க் + ஒட் + இ. மெய் முழுவதும், அகமும் புறமும், ஒட்டித் தொடர்ந்து இருப்பது. நேரானது. தி = த் + இ. தேகமாய் இருப்பது. தேகத்தோடு தேகமாய் (அகலாமல் / அகற்றமுடியாமல்) இருப்பது. கொடிதி = உடலில் முழுமையாய் உள்சென்று இருந்து தேகத்தோடு தேகமாய் இருப்பது. மரணம் விளைவிப்பது. கொடுமையானது.*

*யாழ் = ய் + ஆழ். நிலையான உயிர்ப்பின் ஆழம். இருத்தலின் ஆழம்.*

*கோடு = க் + ஒட் + உ. மெய் / பொருண்மை அகமும் புறமும், உள்ளும் வெளியும் ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது. வளைவு.*

*செவ்விது = செவ்வி + து. செவ்வி = ச் + எவ் + இ. இயக்கம் / சத்தம் உயர்ந்து புறமும் அகமும் இருப்பது. து = த் + உ. தேகம் வெளிப்படுவது. செவ்விது = இசை முழுமையாகித் தேக மன உணர்வை இழப்பது. ஆனந்தம். இனிமையானது.*

*வடிவத்தில் நேரான அம்பு, துன்பம் தந்து உயிரைக் கொல்லும், உருவத்தில் வளைந்த யாழ், உயிரின் ஆனந்தம் தந்து வாழ்வை இனிமையாக்கும். எனவே, ஒன்றின் குணம், அதன் உருவத்திலும் வடிவத்திலும் அல்ல, அதன் செயலின் தன்மையைப் பொறுத்துதான் உள்ளது.*

*அதே போல், ஒரு நபரை, அவருடைய உருவத்தையும் தோற்றத்தையும் மட்டும் வைத்து முடிவு செய்யாமல், அவருடைய செயலின் விளைவைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும்.*

**280. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்**
**பழித்த தொழித்து விடல்.**

**மழித்தலும் நீட்டலும் வேண்டா - உலகம்**
**பழித்தது ஒழித்துவிடின்.**

மக்கள் தப்பு எனக் கூறும் ஏமாற்றுதல், தீங்கு செய்தல், பிறன்மனை புகுதல், கோழைத்தனம் போன்றவற்றை விட்டாலே போதும், தவசிகள், மொட்டை அடிக்கவும் தேவையில்லை, முடிவளர்க்கவும் தேவையில்லை.

கூடாவொழுக்கம் அதிகாரப் பொருள் தொகுப்பு:

தன் நீங்கா ஆசைகளுக்காக, பிறருக்கு தீங்கு இழைக்கும் மனமுடையவனைக் கண்டு, ஐம்பூதங்களும் உள்ளுக்குள் நகைக்கும்.

என்னதான் மிக உயரமான மேடையிட்டு, ஆடம்பரமாய் அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தில்அமர்ந்திருந்தாலும், தன் மனசாட்சி, தான் அறிந்தே செய்த குற்றங்களைத் தொடர்ந்து நினைவூட்டும்போது, கூனிக் குறுகத்தான் நேரிடும்.

புலனடக்கும் மன வலிமை இல்லாமல், துறவியின் மதிப்பும் மரியாதையும் மிக்க வேடத்தைப் பூண்டு, தன் ஆசைகளை நிறைவேற்றிக்கொள்பவன், புலியின் தோலைப் போர்த்திய பசுவைப் போன்றவனாவன்.

தவசியின் வேடத்தில், பெண்மையைச் சூறையாடுவது, புதருக்கு அருகே மறைந்து இருந்து, பறவையை வேட்டையாடிய கோழைமை போன்றதாகும்.

ஆசைகளை விட்டுவிட்டேன் என்று சொல்லிக்கொண்டே, மறைவாக தன் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளும்போது மாட்டிக் கொண்டவன், எதற்காகத் தான் இப்படிச் செய்தோமோ என்று, தப்பும் வழியின்றி, தலையைத் தூக்கி வேதனைப்படுவான்.

மனத்தில் ஆசைகளை விடாமல், ஆசைகளை விட்டவர்போல் நடித்து, தீங்கு செய்பவனைக் காட்டிலும், இரக்கமற்ற கொடியவன் வேறு யாரும் இருக்க முடியாது.

பிறரை, உடலால் பணிந்து, நேராகப் பார்த்து நெருங்குபவராயினும், மனம், குன்றிமணியின் மூக்கைப்போல் கருமையானது, தீய எண்ணம் உடையது.

நீராடுவதன் மூலம் தான் அழுக்கற்றவன் என புற உலகத்திற்குக் காட்டிக் கொண்டே, மனத்தின் ஆசைகளை மறைவாக நிறைவேற்றிக் கொண்டு மாண்ட போலியான தவசிகள் பலர், மனிதருள் உண்டு.

ஒரு நபரை, அவருடைய உருவத்தையும் தோற்றத்தையும் மட்டும் வைத்து முடிவு செய்யாமல், அவருடைய செயலின் விளைவைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும்.

மக்கள் தப்பு எனக்கூறும் ஏமாற்றுதல், தீங்கு செய்தல், பிறன்மனை புகுதல், கோழைத்தனம் போன்றவற்றை விட்டாலே போதும், தவசிகள், மொட்டை அடிக்கவும் தேவையில்லை, முடிவளர்க்கவும் தேவையில்லை.

## 29. கள்ளாமை

*கள்ளாமை = கள் + ஆ + மை. மயங்காமை. திருடாமை.*

**281. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.**

**எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்து ஒன்றும்
கள்ளாமை காக்க, தன் நெஞ்சு!**

*எள்ளாமை = எள் + ஆ + மை. எள் = எ + ள். உயரும் மிகை. சிறியது. உயர்ந்த அதிர்வுடையது. எள்ளாமை = சிறியதாகா தன்மை. சிறுமையாகா தன்மை.*

*கள்ளாமை = கள் + ஆ + மை. கள் = க் + அள். மெய் / பொருண்மை மிகை. மெய் / பொருண்மை எடு. கள்ளாமை = பொருள் எடுக்கா தன்மை. திருடாமை.*

*பிறர்முன் தலைகுனிந்து, சிறுமையாகாமல் இருக்க வேண்டும், என்று எண்ணுபவன், பிறரின், எந்தப் பொருளையும் திருடக்கூடாது, எனும் உறுதியை, மனத்தில் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும்.*

**282. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.**

**உள்ளத்தால் உள்ளலும் தீதே; 'பிறன் பொருளைக்
கள்ளத்தால் கள்வேம்' எனல்!**

*உள்ளம் = உள் + அம். உள் தன்மை. மனம்.*

*உள்ளல் = உள் + அல். உள் உயிர்ப்பலை. எண்ணம்.*

*கள்ளம் = கள் + அம். பொருளை எடுக்கும் தன்மை. திருடு.*

*கள்வேம் = எடுப்போம்.*

*பிறர் பொருளைத் திருடி எடுத்துக் கொள்வோம் என மனதில் நினைப்பதும் தீமையானதே.*

*திருடும் எண்ணம் தொடர்ந்தால், அடிக்கடி வந்தால், ஒருநாள், மனத்தால் கட்டுப்படுத்த முடியாமல், திருட நேரிடும். அகப்பட்டால், தலைகுனிவு நேரும். எனவே, மனதில் திருடும் எண்ணமே தோன்றாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.*

**283. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.**

**களவினால் ஆகிய ஆக்கம், அளவு இறந்து,
ஆவது போல, கெடும்.**

*களவு = கள் + அ + உ. மெய் எடுத்தல் அகமிருந்து புறமாய் / பொருண்மை எடுத்தல் உள்ளிருந்து வெளியே.*

*ஆக்கம் = ஆக் + அம். பொருளாகும் தன்மை. செல்வம்.*

திருடிச் சேர்க்கும் பொருள், கணக்கிட முடியாதது போல் பெருகி, திடீரென்று, கொஞ்சம்கூட மீதம் இல்லாமல், முழுவதுமாய் அழிந்து விடும்.

**284. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமந் தரும்.**

**களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமம் தரும்.**

*வீயா = வ் + ஈயா. புறம் அகம் தராத. நீங்காத.*

*விழுமம் = விழும் + அம். விழுகின்ற தன்மை. தாழ்வு.*

களவிடம் தோன்றிய ஆழ்ந்த விருப்பம், வளர்ந்து வெளிப்படும்போது, நீங்காத அவமானத்தை, நீங்காத தாழ்வைத் தரும்.

**285. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.**

**அருள் கருதி அன்புடையர் ஆதல் பொருள் கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.**

*அருள் = அர் + உள். இருத்தல் உள்ளே. உயிருடன் ஒன்றல். பிரிந்த மனம். தேகத்தைப் பிரிந்த மனம். அருள் = அரு + ள். உருவமற்ற மிகை. ஒளி. பிறர் நலன் கருதி எதிர்பார்ப்பின்றித் தருதல்.*

*பொச்சாப்பு = பொய் + சாய்ப்பு. தடுமாற்றம். நினைப்பு ஒன்றும், பார்வை மற்றொன்றுமாக. எதிர்காலத்து ஒன்றை நினைக்கையில், பார்வை மேலேறும். யாரும் அதைப் பார்த்துவிட்டால், அவரை நேராக எதிர்கொள்ளாமல், பார்வை பொய்யாக கீழே சாயும், தன் நினைவு அங்குதான் இருக்கிறது எனக் காட்டிக் கொள்ள.*

பிறர் பொருளைத் திருட எண்ணித் தடுமாறும் பார்வையுடன், வெறித்து நோக்கும் துறவியர் கண்களில், அருளுக்கான அன்பு இருக்காது.

அருள், உயிர் ஊற்றின் ஒளி ஓட்டம். அந்த ஒளி மெய்யை ஊடுருவி ஓடுதலே, இன்பமாகும். அந்த இன்பத்தை உணர்ந்தவர், எல்லா உயிரிடத்தும் அன்புடையராய் இருப்பர். அன்பு, அருளை மிகையாக்கி, மெய் இன்பத்தையும் அதிகமாக்கும். எனவே, ஞானியர், அருளை எண்ணி, எப்பொழுதும், எல்லா உயிரிடத்தும் அன்புடையவராய் இருப்பர். அந்த அன்பை உணர்ந்தவர்கள், அருளின் இழைகளையும் உணர்வர். ஞானியர் போல் தாமும் அருள்பெற வேண்டி, புலனடக்கம் முயல்வர்.

**286. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்**
**கன்றிய காத லவர்.**

**அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார்-களவின்கண்**
**கன்றிய காதலவர்.**

*திருடுதலின் மீது, கல் போன்று, உறுதியான விருப்பம் உடையவர், புலனடக்கி, உயிருடன் ஒன்ற மாட்டார்.*

**287. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னும்**
**ஆற்றல் புரிந்தார்க ணில்.**

**களவு என்னும் கார் அறிவு ஆண்மை அளவு என்னும்**
**ஆற்றல் புரிந்தார்கண் இல்.**

*அளவு = அள் + அ + உ. உயிரின்மிகை அகமும் புறமும். ஒளி.*

*திருடுதல் எனும் இருண்ட அறிவின் ஆட்சி, புலனடக்கி, ஞானம் என்னும் ஒளியைப் பெற்றவரிடம் இல்லை.*

**288. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்**
**களவறிந்தார் நெஞ்சிற் கரவு.**

**அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம்போல, நிற்கும்,**
**களவு அறந்தார் நெஞ்சில் கரவு.**

*கரவு = க் + அர் + அ + உ. மெய் / பொருண்மை பிரித்தல் உள்ளும் புறமும். ஒளிப்பும் மறைப்பும்.*

*ஞானியரின் அகம், உடலையும் மனத்தையும் நிலையாய்ப் பிரிந்திருத்தல் போன்று, திருட்டுத் துறவியின் மனத்தில் இருந்து பிரியாது, நிலைத்து இருக்கும், ஒளிப்பும் மறைப்பும்.*

**289. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல**
**மற்றைய தேற்றா தவர்.**

**அளவு அல்ல செய்து, ஆங்கே வீவர்-களவு அல்ல**
**மற்றைய தேற்றாதவர்.**

*வீவர் = வ் + ஈவர். புறம், அகம் தருவர். அழிவர். வீழ்வர்.*

*களவைத் தவிர மற்ற எதையும் கற்று அறியாதவர், அளவு கடந்த திருட்டால் அகப்பட்டு அடியோடு அழிவர்.*

**290. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தே ளுலகு.**

**கள்வார்க்குத் தள்ளும், உயிர்நிலை; கள்ளார்க்குத் தள்ளாது, புத்தேள் உலகு.**

புத்தேள் = ப் + உத் + ஏள். கொண்டதன் புறத்தேகம் மிக உயர்ந்த மிகை. அகம் புறத்தேகமாகி மிக உயர்ந்து ஒளிர்மையாதல். தான் தனதற்று, தன் உடல் மனம் அற்று, விண்தேகமாகி மிக உயர்ந்து ஒளிக்காட்சியாதல். ஞானியர்.

பொருளுக்கான மயக்கமின்றி, புலனடக்கி, அகந்தையற்று, எண்ணமும் அடங்கியவரால்தான், உயிரை உணரமுடியும், மனமும் உயிரில் ஒன்ற முடியும், உயிரும் நிலை பெறும். அப்படி இருக்க, பிறர் பொருளைத் திருடுபவரின் மனத்தை, உயிர் அருகினில் நெருங்க விடாது, உயிர்நிலை பெறுவதும் பல பிறப்புகளுக்கு தள்ளிப்போகும்.

திருடும் எண்ணம் சற்றும் இல்லாதவர், பற்றில்லாதவராகவே இருப்பார். அவர், புலனடக்கம் முயன்றால், தான் தனதற்று, தன் உடல் மனம் அற்று, உயிரை உணர்ந்து, உயிருடன் ஒன்றி நிலைபெற்று, விண்தேகமாகி, மிக உயர்ந்து ஒளிக்காட்சியாதல் தவறாமல் நடக்கும்.

கள்ளாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

பிறர்முன் தலைகுனிந்து, சிறுமையாகாமல் இருக்க வேண்டும், என்று எண்ணுபவன், பிறரின், எந்தப் பொருளையும் திருடக்கூடாது, எனும் உறுதியை, மனத்தில் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும்.

பிறர் பொருளைத் திருடி எடுத்துக் கொள்வோம் என மனதில் நினைப்பதும் தீமையானதே.

திருடிச் சேர்க்கும் பொருள், கணக்கிட முடியாதது போல் பெருகி, திடீரென்று, கொஞ்சம்கூட மீதம் இல்லாமல், முழுவதுமாய் அழிந்து விடும்.

களவிடம் தோன்றிய ஆழ்ந்த விருப்பம், வளர்ந்து வெளிப்படும்போது, நீங்காத அவமானத்தை, நீங்காத தாழ்வைத் தரும்.

பிறர் பொருளைத் திருட எண்ணித் தடுமாறும் பார்வையுடன், வெறித்து நோக்கும் துறவியர் கண்களில், அருளும்இருக்காது, அன்பும் இருக்காது.

திருடுதலின் மீது, கல் போன்று, உறுதியான விருப்பம் உடையவர், புலனடக்கி, உயிருடன் ஒன்ற மாட்டார்.

திருடுதல் எனும் இருண்ட அறிவின் ஆட்சி, புலனடக்கி, ஞானம் என்னும் ஒளியைப் பெற்றவரிடம் இல்லை.

ஞானியரின் அகம், உடலையும் மனத்தையும் நிலையாய்ப் பிரிந்திருத்தல் போன்று, திருட்டுத் துறவியின் மனத்தில் இருந்துப் பிரியாது, நிலைத்து இருக்கும், ஒளிப்பும் மறைப்பும்.

களவைத் தவிர மற்ற எதையும் கற்று அறியாதவர், அளவு கடந்த திருட்டால் அகப்பட்டு அடியோடு அழிவர்.

பொருளுக்கான மயக்கமின்றி, புலனடக்கி, அகந்தையற்று, எண்ணமும் அடங்கியவரால்தான், உயிரை உணரமுடியும், மனமும் உயிரில் ஒன்ற முடியும், உயிரும் நிலை பெறும். அப்படி இருக்க, பிறர் பொருளைத் திருடுபவரின் மனத்தை, உயிர் அருகினில் நெருங்க விடாது, உயிர்நிலை பெறுவதும் பல பிறப்புகளுக்கு தள்ளிப்போகும்.

## 30. வாய்மை

*வாய்மை = வ் + ஆய் + மை. புறமும் அகமும் ஆகி அமைதியாகும் தன்மை. உண்மை. உண்மை = உள் + மை. அகத்தின் தன்மை. வண்ணம். ஒளிர்மை. முரண்படாமை. வாய்மை = வாய் + மை. வாயின் வண்ணம், தன்மை.*

**291. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்.**

**'வாய்மை எனப்படுவது யாது?' எனின், யாது ஒன்றும்
தீமை இலாத சொலல்.**

*வாயின் தன்மை எது என்றால், அது சொல்வதால் ஏற்படும் விளைவால், பிற உயிருக்கு, எந்தத் தீங்கும் இல்லாதவாறு, இருக்க வேண்டும்.*

**292. பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.**

**பொய்ம்மையும் வாய்மை இடத்த-புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.**

*பொய் = ப் + ஒய். கொண்டது முழுவதும் நிலையாய் உயிர்ப்புடன். பொய் மனத்தில் என்றும் உயிர்ப்புடன் இருக்கும். பொய் மறக்க முடியாதது.*

*புரை = ப் + உர் + ஐ. கொண்டதன் உள்ளே / புறத்தே இருந்து ஐக்கியமாவது. தீங்கு.*

*பிறருக்கு தீங்கை இழைக்காமல், நன்மையை விளைவிக்கும் என்றால், பொய்யும், உண்மைக்குச் சமமாகும்.*

**293. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.**

**தன் நெஞ்சு அறிவது பொய்யற்க; பொய்த்தபின்,
தன் நெஞ்சே தன்னைச் சுடும்.**

*பொய்யற்க = பொய் + அற்க. அற்க = அற் + க் + அ. பிரி மெய்யையும் உயிரையும். பிரிய. பொய்யற்க = பொய் அகல.*

*பொய்த்தல் = பொய் ஆதல். பொய்த்தபின் = பொய்யென்று ஆகிய பிறகு.*

*தன் மனம் அறிவது பொய் அற்று இருக்க வேண்டும். அப்படி உண்மை என நம்பிய ஒன்று பொய்யாகி விட்டால், மடத்தனமாய் தப்பு செய்துவிட்டோமே என்று, தன் மனமே தன்னை வாட்டும்.*

*யாரும் சொல்வதை அப்படியே நம்பிவிடக்கூடாது. அது உண்மையா அல்லது பொய்யா என ஆராய வேண்டும்.*

**294. உள்ளத்தாற் பொய்யா தொழுகி லுலகத்தார்**
**உள்ளத்து ளெல்லா முளன்.**

**உள்ளத்தால் பொய்யாது ஒழுகின், உலகத்தார்**
**உள்ளத்துள் எல்லாம் உளன்.**

*புலனடக்கி, உள்ளத்து எண்ண ஓட்டத்தை, பொய்யின்றிக் காத்து வருபவன், உயர்ந்த மக்களின் உள்ளமெல்லாம், முன்மாதிரியாய் இருப்பான்.*

**295. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு**
**தானஞ்செய் வாரிற் றலை.**

**மனத்தொடு வாய்மை மொழியின், தவத்தொடு**
**தானம் செய்வாரின் தலை.**

*ஒருவர், மனதிலிருந்து சிறிதும் விலகாமல் நிலைத்து நின்று, உண்மை பேசினால், அவர், தவத்துடன் தானமும் செய்பவர்களுக்கும் மேலாக, கருதப்படுவார்.*

*மனத்தொடு நிற்றல் தவம். உண்மையால் விளைவது நன்மை, அது தானம்.*

**296. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை**
**எல்லா வறமுந் தரும்.**

**பொய்யாமை அன்ன புகழ் இல்லை; எய்யாமை,**
**எல்லா அறமும் தரும்.**

*பொய்யாமை = பொய் + ஆ + மை. பொய் ஆகாமை. புலன்களால் ஆசையும், ஆசையால் பொய்மையும் உருவாகிய வண்ணம் இருக்கும். பொய்மை உருவாகாமல் இருக்க ஆசை தோன்றக்கூடாது. ஆசை தோன்றாமல் இருக்க புலனடக்கம் தேவை.*

*புகழ் = ப் + உ + க் + அழ். அகத்தின் உள்ளே மெய்யில் உயிருடன் ஆழ்ந்திருத்தல்.*

*யெய்யாமை = ய் + எய் + ஆம் + ஐ. உயிர் உயர்ந்த உயிராய் அமைதியாகி ஐக்கியமாதல்.*

*ஒருவர் மனதில் (புலனடங்கி) பொய் உருவாகாமல் இருந்தால், அவர் மனத்தொடு ஒன்றி இருப்பார், மனமும் உயிரொடு ஒன்றி இருக்கும். விளைவாக, அவரும் உயிரொடு ஒன்றி, மெய் இன்பம் அடைவார்.*

*மெய் இன்பம் என உணரப்படும் உயிரின் புலம், தேகத்தையும் மனத்தையும் ஊடுருவிக் கடந்து, உயர்ந்து, அமைதியாகி, ஐக்கியமாகி நிலைபெறுதல், புதிய கருமம் சேராமல் பார்க்கும், கடந்த பிறப்புகளில் எஞ்சிய கருமங்களும் அறும். பெயராத இயற்கை எனும் பிறப்பற்ற நிலையும் நிலைக்கும்.*

**297. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று.**

**பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம் பிற**
**செய்யாமை செய்யாமை நன்று.**

*பொய்யாமை = பொய் + ஆ + மை. பொய் ஆகாமை.*

*செய்யாமை = செய் + ஆம் + ஐ. செய்தாகும் தன்மை. செய்யாமை = செய் + ஆ + மை. செய்யா தன்மை.*

*பொய் ஆகாமையை பொய் ஆகாமல், தவறாமல் தொடர்ந்து கடைப்பிடித்தால் (இடைவிடாது புலனடங்கினால்) போதும், வேறு முயற்சிகள் எதுவும் தேவையில்லை, தானாக (முந்தைய {296} குறளின் உரையில் கூறியபடி) பெயராத இயற்கையை அவர் அடைந்து விடுவார்.*

*புலனடங்காமை, பொய்மைக்கு வழி காட்டும்.*

**298 புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை**
**வாய்மையாற் காணப் படும்.**

**புறம் தூய்மை நீரான் அமையும்;-அகம் தூய்மை**
**வாய்மையால் காணப்படும்**

*ஒருவருடைய உடலின் தூய்மை, குளிக்கின்ற நீரின் தன்மையைப் பொறுத்தே இருக்கும். நீர் என்பதாலேயே தூய்மை என்பது அல்ல. அதைப் போல், ஒருவருடைய மனத்தின் தூய்மை, அவர் கூறினார் என்பதால் அல்ல. அவர் கூறிய சொல் பிறருக்கு தீங்கு இழைக்காததைப் பொறுத்தே, நன்மை செய்வதைப் பொறுத்தே, அறியப்படும்.*

*அவருடைய உருவத்தாலோ, தோற்றத்தாலோ அல்ல.*

**299. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.**

**எல்லா விளக்கும் விளக்கு அல்ல, சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.**

*இருட்டைப் போக்குவது, சான்றோர்க்கு, விளக்கல்ல. பிறப்பு எனும் இருளை அகற்றும், ஞான ஒளியே, விளக்காகும்.*

விளக்கு, இருளை நீக்குவது. புற இருளைப் போக்க, பல வகையான விளக்குகளை உருவாக்கலாம், உபயோகிக்கலாம். அவை எல்லாம், உயிரின் இயக்கமுடன் நெருக்கமாகி, தேகத்தைப் பிரிந்து ஒன்றியவர்க்கு, விளக்காக தெரிவதில்லை.

அவர்களுக்கு, புலனடங்கிய, ஆசையெழாத, பொய்யாகாத மனம் உயிரில் ஒன்றி, புதிய கருமங்களைத் தடுத்து, பழங்கருமங்களைக் கழித்து, பிறப்பு எனும் இருளை அகற்றும், ஒளியே விளக்காகும்.

**300. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்**
**வாய்மையி னல்ல பிற.**

**யாம் மெய்யாக் கண்டவற்றுள், இல்லை-எனைத்து**
**ஒன்றும் வாய்மையின் நல்ல பிற.**

வாய்மை = தீங்கிழைக்காமை மற்றும் நன்மை செய்தல்.

யாம் மெய்யாய்க் கண்ட புலனடக்கத்திலோ, ஆசையில்லா மனத்திலோ, பொய்மையிலா உளத்திலோ, அகந்தையில்லாத நெஞ்சத்திலோ, உயிருடன் ஒன்றிய மனத்திலோ, உயிர்வீச்சின் மெய் இன்பத்திலோ, ஒளிர்மையிலோ, அசையாமையிலோ, பிற உயிருக்கு தீங்கில்லாமை மற்றும் நன்மை செய்யும் வாய்மையைப் போன்று, சிறந்தது வேறெதுவும் இல்லை.

**வாய்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

வாயின் தன்மை எது என்றால், அது சொல்வதால் ஏற்படும் விளைவால், பிற உயிருக்கு, எந்தத் தீங்கும் இல்லாதவாறு, இருக்க வேண்டும்.

பிறருக்கு தீங்கை இழைக்காமல், நன்மையை விளைவிக்கும் என்றால், பொய்யும், உண்மைக்குச் சமமாகும்.

தன் மனம் அறிவது பொய் அற்று இருக்க வேண்டும். அப்படி உண்மை என நம்பிய ஒன்று பொய்யாகி விட்டால், மடத்தனமாய்த் தப்பு செய்துவிட்டோமே என்று, தன் மனமே தன்னை வாட்டும்.

புலனடக்கி, உள்ளத்து எண்ண ஓட்டத்தை, பொய்யின்றிக் காத்து வருபவன், உயர்ந்த மக்களின் உள்ளமெல்லாம், முன்மாதிரியாய் இருப்பான்.

ஒருவர், மனதிலிருந்து சிறிதும் விலகாமல் நிலைத்து நின்று, உண்மை பேசினால், அவர், தவத்துடன் தானமும் செய்பவர்களுக்கும் மேலாக, கருதப்படுவார்.

ஒருவர் மனதில் (புலனடங்கி) பொய் உருவாகாமல் இருந்தால், அவர் மனத்தொடு ஒன்றி இருப்பார், மனமும் உயிரொடு ஒன்றி இருக்கும். விளைவாக, அவரும் உயிரொடு ஒன்றி, மெய் இன்பம் அடைவார்.

பொய் ஆகாமையைப் பொய் ஆகாமல், தவறாமல் தொடர்ந்து கடைப்பிடித்தால் (இடைவிடாது புலனடங்கினால்) போதும், வேறு முயற்சிகள் எதுவும் தேவையில்லை. தானாக, பெயராத இயற்கையை, அவர் அடைந்து விடுவார்.

ஒருவருடைய உடலின் தூய்மை, குளிக்கின்ற நீரின் தன்மையைப் பொறுத்தே இருக்கும். நீர் என்பதாலேயே, தூய்மை என்பது அல்ல. அதைப் போல், ஒருவருடைய மனத்தின் தூய்மை, அவர் கூறினார் என்பதால் அல்ல. அவர் கூறிய சொல் பிறருக்குத் தீங்கு இழைக்காததைப் பொறுத்தே, நன்மை செய்வதைப் பொறுத்தே, அறியப்படும்.

இருட்டைப் போக்குவது, சான்றோர்க்கு, விளக்கல்ல. பிறப்பு எனும் இருளை அகற்றும், ஞான ஒளியே, விளக்காகும்.

யாம் மெய்யாய்க் கண்டவற்றில், பிற உயிருக்குத் தீங்கில்லாமை மற்றும் நன்மை செய்யும் வாய்மையைப் போன்று, சிறந்தது வேறெதுவும் இல்லை.

## 31. வெகுளாமை

*வெகுளாமை = வெகு + ள் + ஆ + மை. மிகையான அதிர்வு ஆகாத தன்மை. கோபம் கொள்ளாமை.*

**301. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கிலென் காவாக்கா லென்.**

**செல் இடத்துக் காப்பான் சினம் காப்பான்; அல் இடத்து,
காக்கின் என்? காவாக்கால் என்?**

*செல்லிடம் = செல் + இடம். போகின்ற இடம், வீட்டிற்கு வெளியே, வெளி இடம், அயலூர், அயல்நாடு. சினம் காட்டக்கூடிய இடம், நபர், காலம்.*

*சினம் = சின் + அம். சின் = சில். சில் = சிறிய. சினம் = சிறிய தன்மை.*

*புதிதாய்ச் செல்கின்ற இடத்திலும், தன் கோபத்தைக் காட்டக்கூடிய இடங்களிலும், கோபத்தை அடக்குபவனே, சினம் எனும் சிறுமையான செயலைச் செய்யாதவன்.*

*தன் வீட்டிலும், தன் கோபத்தைக் காட்ட முடியாத இடங்களிலும், கோபத்தை அடக்கினால் என்ன? அடக்கா விட்டால்தான் என்ன? அதற்கு, பயம் அல்லது பின்விளைவுகள் பற்றிய எண்ணம் காரணமாய் இருக்கலாம். அதில், தன் புலனை, மனத்தை, செயலைத் தானே கட்டுப்படுத்தும் பெருந்தன்மை இருக்காது.*

**302. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற.**

**செல்லா இடத்துச் சினம் தீது; செல் இடத்தும்,
இல், அதனின் தீய பிற.**

*தீது = தீ + த் + உ. தீ தேகத்தின் புறத்தே. உடல் தீங்கு.*

*தீய = தீ + ய் + அ. தீ நிலையான உயிரின் உள்ளே. உயிர் தீங்கு.*

*கோபத்தைக் காட்டக் கூடாத, வலிமை, அதிகாரம் மிக்க இடத்தில், கோபத்தைக் காட்டினால், உடலுக்கு தீமை வரும். தனக்கு அடி, உதை கிடைக்கலாம். உடல்வலியோடு அது முடிந்துவிடும். பரவாயில்லை. ஆனால், கோபத்தைக் காட்ட முடிந்த குடும்பத்தினர், வேலையாட்கள், வலிமை குன்றியவர் இடத்தில் கோபத்தைக் காட்டினால், அதைவிட உயிருக்குத் தீமை தருவது, வேறில்லை. ஏனெனில், பிறரின் மனவலியும், சாபமும், தனக்கு பிறப்பையே மீண்டும் உருவாக்கி விடும்.*

*கருமமும் ஊழும் மிகவும் நுணுக்கமானது. அதை எண்ணிப் பார்க்கத் தவறியதுதான், சமூகச் சீர்கேடுகளுக்கெல்லாம் காரணம்.*

**303. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய**
**பிறத்த லதனான் வரும்.**

**மறத்தல், வெகுளியை யார் மாட்டும்-தீய**
**பிறத்தல் அதனான் வரும்!**

*கோபம், யார் மேலும் வராமல், மனத்திலிருந்து அறுத்தல் வேண்டும், ஏனெனில், கோபத்தின் விளைவாய், துன்பமிக்க பிறப்பு வரும்.*

**304. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்**
**பகையு முளவோ பிற.**

**நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்**
**பகையும் உளவோ, பிற?**

*தன் மற்றும் பிறரின் சிரிப்பையும் மகிழ்ச்சியையும் கொன்றுவிடும், கோபத்தைவிட, வேறு எதிரி எதுவும் உள்ளதா என்ன?*

**305. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்**
**தன்னையே கொல்லுஞ் சினம்.**

**தன்னைத் தான் காக்கின், சினம் காக்க! காவாக்கால்,**
**ன்னையே கொல்லும், சினம்.**

*தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்றால், கோபம் வராமல் பார்த்துக் கொண்டால் போதும். ஆபத்து வேறு எதுவும் வராது. ஆனால், கோபத்தைக் கட்டுப்படுத்தவில்லை என்றால், அது பல எதிர்வினைகளைத் தோற்றுவித்து, கடைசியில் தன்னையே கொன்றுவிடும். தன் வாழ்வின் பயனை அடைய முடியாமல் செய்துவிடும்.*

**306. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும்**
**ஏமப் புணையைச் சுடும்.**

**சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி இனம் என்னும்**
**ஏமப் புணையைச் சுடும்.**

*ஏமம் = ஏம் + அம். மிக உயர்ந்து அமைதியுறும் தன்மை. ஆனந்தம். இன்பம். மகிழ்ச்சி.*

*புணை = ப் + உண் + ஐ. கொண்டதன் உள்ளே / புறத்தே மிக நெருங்கி ஐக்கியமாதல். மனைவி, மக்கள், உறவினர்.*

*கோபம், தன்னைக் கொண்டவரைக் கொன்று, அவருக்கு மகிழ்ச்சி, இன்பம் தந்த மனைவி, மக்கள், உறவினரையும் துன்புறுத்தும்.*

**307\. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு**
**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.**

**சினத்தைப் பொருள் என்று கொண்ட ன் கேடு நிலத்து**
**அறைந்தான் கை பிழையாதற்று.**

*பிழை = ப் + இழை. கொண்டதன் ஒரு பகுதி. கொண்டதுடன் இணைந்தது. இழை = இழ் + ஐ. ஆழ்ந்து இருந்து ஐக்கியமாதல். பிழை = கொண்டதுடன் ஆழ்ந்து (உயிர்ப்புடன்) இருத்தல். பிழையாது = உயிர்ப்பறும்.*

*தரையை அடித்தவன் கை, தவறாமல் பூமியில் பட்டு வலித்து, மரத்து, உயிர்ப்பற்றுப் போவதைப் போன்று, கோபத்தைத் தன் குணமாகக் கொண்டவன், அடிப்பட்டுத் துன்புற்று அழிவதும், கட்டாயம் நடக்கும்.*

**308\. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று.**

**இணர் எரி தோய்வன்ன இன்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று.**

*இணர் = இண் + அர். மிக நெருக்கமாய் இருந்து பிரிவது. ஓங்கி அடி.*

*எரி = எர் + இ. உயரே இருந்து நிலைப்பது. தீயால் சுடு.*

*தோய்வு = த் + ஓய் + உ. தேகத்தை முழுவதுமாய் இருத்து உள்ளே. நீரில் முக்கித் திணர வை.*

*ஓங்கி அடித்தல், தீயால் சுடுதல், நீரில் முக்குதல் போன்ற சித்திரவதைகள் செய்தாலும், கோபத்துடன் சேராதது நல்லது.*

**309\. உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தால்**
**உள்ளான் வெகுளி யெனின்.**

**உள்ளிய எல்லாம் உடன் எய்தும்-உள்ளத்தால்**
**உள்ளான் வெகுளி எனின்.**

*நினைத்ததை எல்லாம், உடனே அடையும், உள்ளம் உடையவன், ஞானி, கோபம் என்பதைக் கொள்ள மாட்டான்; மாறாக கோபம் கொண்டால், நினைத்ததை உடனே அடையும் வகையில், அவனால் நினைக்க முடியாது.*

**310\. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை.**

**இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை.**

தன்னை இழந்து கோபத்தைக் கொண்டவர், இறந்தவருக்கு ஒப்பாவர். கோபத்தை விட்டவர், தவசிகளுக்கு இணையாவர்.

வெகுளாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

புதிதாய் செல்கின்ற இடத்திலும், தன் கோபத்தைக் காட்டக்கூடிய இடங்களிலும், கோபத்தை அடக்குபவனே, சினம் எனும் சிறுமையான செயலைச் செய்யாதவன்.

கோபம் காட்ட முடியாத இடத்தில் காட்டினால், உடலுக்குதான் தீங்கு. கோபத்தை எளிதாக காட்ட முடியும் இடத்தில் காட்டினால், அது வாழ்வுக்கே தீங்கு, பிறப்பையே உருவாக்கி விடும்.

கோபம், யார் மேலும் வராமல், மனத்திலிருந்து அறுத்தல் வேண்டும், ஏனெனில், கோபத்தின் விளைவாய், துன்பமிக்க பிறப்பு வரும்.

தன் மற்றும் பிறரின் சிரிப்பையும் மகிழ்ச்சியையும் கொன்றுவிடும், கோபத்தைவிட, வேறு எதிரி எதுவும் உள்ளதா என்ன?

தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்றால், கோபம் வராமல் பார்த்துக் கொண்டால் போதும். கோபத்தைக் கட்டுப்படுத்தவில்லை என்றால், அது, தன்னையே கொன்றுவிடும்.

கோபம், தன்னைக் கொண்டவரைக் கொன்று, அவருக்கு மகிழ்ச்சி, இன்பம் தந்த மனைவி, மக்கள், உறவினரையும் துன்புறுத்தும்.

தரையை அடித்தவன் கை, தவறாமல் பூமியில் பட்டு வலித்து, மரத்து, உயிர்ப்பற்றுப் போவதைப் போன்று, கோபத்தைத் தன் குணமாகக் கொண்டவன், அடிபட்டுத் துன்புற்று அழிவதும், கட்டாயம் நடக்கும்.

ஓங்கி அடித்தல், தீயால் சுடுதல், நீரில் முக்குதல் போன்ற சித்திரவதைகள் செய்தாலும், கோபத்துடன் சேராதது நல்லது.

நினைத்ததை எல்லாம் உடனே அடையும் உள்ளம் உடையவன், ஞானி, கோபம் என்பதைக் கொள்ள மாட்டான்.

தன்னை இழந்து கோபத்தைக் கொண்டவர், இறந்தவருக்கு ஒப்பாவர். கோபத்தை விட்டவர், தவசிகளுக்கு இணையாவர்.

# 32. இன்னா செய்யாமை

*இன்னா செய்யாமை = இனிமையற்றதைச் செய்யாமை. தீங்கு செய்யாமை.*

**311. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.**

**சிறப்பு ஈனும் செல்வம் பெறினும், பிறர்க்கு இன்னா**
**செய்யாமை மாசு அற்றார் கோள்.**

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கத்தின் / சத்தத்தின் இறப்பு. பிறப்பின்மை. தனிமதிப்பு.*

*மாசு = ம் + ஆச் + உ. அமைதி இயக்கமாகி / சத்தமாகி வெளிப்படல். எண்ணம்.*

*கோள் = க் + ஓள். மெய் முழுமையாய் மிகையான அதிர்வாதல். ஒளிர்மை.*

*பிறவாமை எனும் செல்வத்தைத் தருவதாய்ச் சொன்னாலும், மறுத்து, பிறர்க்குத் தீங்கு இழைக்காதவர், மனம் அடங்கி ஒளிர்மை அடைவார், ஞானியாவார்.*

**312. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.**

**கறுத்து இன்னா செய்த அக்கண்ணும், மறுத்து இன்னா**
**செய்யாமை மாசு அற்றார் கோள்.**

*கறுத்து = க் + அறுத்து. மெய்யை அறுத்து. வதைத்து.*

*அறுத்து = மறந்து*

*மெய்யை வதைத்துத் தீங்கு செய்தபோதும், அதை மறந்து, பிறர்க்குத் தீங்கு இழைக்காதவர், மனம் அடங்கி ஒளிர்மை அடைவார், ஞானியாவார்.*

**313. செய்யாமை செற்றோர்க்கு மின்னாத செய்தபின்**
**உய்யா விழுமந் தரும்.**

**செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்,**
**உய்யா விழுமம் தரும்.**

*செற்றோர் = ச் + எற் + ஓர். இயக்கம் / சத்தம் உயர்ந்து இருப்போர். இயக்கம் / சத்தம் உயர்த்திப் பிரிப்போர். வலிமையானவர். கோபம் கொண்டவர். உய்யா = உய் + ஆ. உள் / புறம் உயிர்ப்புடன் இருக்க முடியாத. அமைதியற்ற. மீளமுடியாத.*

*விழுமம் = தாழ்வு.*

*கோபம் காட்டியவரிடமும் தீங்கு செய்யாது இருத்தல் வேண்டும். மாறாக, தீங்கு செய்து விட்டால், மீளமுடியாத தாழ்வு ஏற்படும்.*

**314. இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண**
**நன்னயஞ் செய்து விடல்.**

**இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண**
**நல் நயம் செய்து, விடல்.**

*ஒறு = ஒற் + உ. முழுமையாய் அறுத்து புறப்படுத்து. கொல். தண்டி.*

*தீங்கு செய்தவரைக் கொல்லுதல் (மனத்தளவில்), அவர் வெட்கப்படும்படி, அவருக்கு நன்மை செய்து விட்டு, வெளிக்காட்டாமல் போதல்.*

**315. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்**
**தன்னோய்போற் போற்றாக் கடை.**

**அறிவினான் ஆகுவது உண்டோ-பிறிதின் நோய்**
**தன் நோய்போல் போற்றாக்கடை?**

*அறிவு = அறி + உ. உயிர் பிரிந்து உள் இருத்தல் / உயிர் பிரிந்து புறம் இருத்தல். தேகம் மனத்தைப் பிரிந்து உயிர் இருத்தல்.*

*அறிவின் தேடலில், இறுதியில் உறுதியாவது, அனைத்து இருப்பும், அண்டத்தில் இருக்கும் எல்லாப் பொருள்களும், உயிர்களும், விண்ணின் மிக நெருக்கமான வெளியில் ஒற்றை மற்றும் ஒத்த தன்மையுடையதாய் இருப்பதே! எல்லா உயிர்களும் ஒன்றுடன் மற்றொன்று நெருங்கிய தொடர்புடையதே! அந்த அறிவே ஞானத்தின் அடிப்படை. மற்றவரின் நோயை, வலியை, பிறப்பை தன்னுடையதைப் போல் கருதாமல், அவர்க்கு தீங்கு செய்தால், அத்தகைய அறிவால் என்ன பயன் விளையப் போகின்றது?*

**316. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கட் செயல்.**

**இன்னா எனத் தான் உணர்ந்தவை, துன்னாமை**
**வேண்டும், பிறன்கண் செயல்.**

*இனிமையற்றவை என தான் உணர்ந்தவை, பிறரை நெருங்காமல் செய்ய வேண்டும்.*

**317. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.**

**எனைத்தானும், எஞ்ஞான்றும், யார்க்கும், மனத்தான் ஆம்
மாணா செய்யாமை தலை.**

*மாணா = மாண் + ஆ. கொண்டு மூடிய மிகை நெருக்கத்தை இல்லாமல் ஆக்குதல். நெருக்கத்தைப் பிரித்தல். தீங்கானவை.*

*எதுவாயினும், எக்காலத்தும், எவர்க்கும் மனத்தளவிலும் தீங்கு செய்யாததே சிந்தனையின், அறிவின் பயன்.*

**318. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.**

**தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான், என்கொலோ,
மன் உயிர்க்கு இன்னா செயல்?**

*இனிமையற்றவை, தன்னுடைய உயிர்க்கு துன்பம் விளைவிப்பதை அறிந்தும், ஒருவன் எதற்காகத்தான், உணர்வையும், எண்ணத்தையும், சாபத்தையும் வெளிப்படுத்தும் மனங்கொண்ட உயிர்க்கு, இனிமையற்ற செயலைச் செய்கின்றானோ?*

**319. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.**

**பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின், தமக்கு இன்னா
பிற்பகல் தாமே வரும்.**

*பிறர்க்கு இனிமையற்றதை, பகல் பன்னிரண்டு மணிக்கு முன்னால் செய்தால், தனக்கு இனிமையற்றது, பகல் பன்னிரண்டு மணிக்குப் பின்னால் தானாகவே வரும். எதிர்வினை வேறு வடிவத்தில், வேறு யார் மூலமாகவாவது, விரைவில் வரும்.*

**320. நோயெல்லா நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.**

**நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம்; நோய் செய்யார்,
நோய் இன்மை வேண்டுபவர்.**

*நோய், துன்பம், பிறப்பு ஆகிய சுமைகள் எல்லாம், பிறர்க்கு இனிமையற்ற செயல்களால், துன்பம் விளைவிப்பதால், வருபவை. பிறப்பில்லாமை வேண்டுபவர், பிறருக்கு துன்பம் தருகின்ற இனிமையற்ற செயலைச் செய்ய மாட்டார்.*

**இன்னா செய்யாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*பிறவாமை எனும் செல்வத்தைத் தருவதாய்ச் சொன்னாலும், மறுத்து, பிறர்க்குத் தீங்கு இழைக்காதவர், மனம் அடங்கி ஒளிர்மை அடைவார், ஞானியாவார்.*

*மெய்யை வதைத்துத் தீங்கு செய்தபோதும், அதை மறந்து, பிறர்க்குத் தீங்கு இழைக்காதவர், மனம் அடங்கி ஒளிர்மை அடைவார், ஞானியாவார்.*

*கோபம் காட்டியவரிடமும் தீங்கு செய்யாது இருத்தல் வேண்டும். மாறாக, தீங்கு செய்து விட்டால், மீளமுடியாத தாழ்வு ஏற்படும்.*

*தீங்கு செய்தவரைக் கொல்லுதல் (மனத்தளவில்), அவர் வெட்கப்படும்படி, அவருக்கு நன்மை செய்து விட்டு, வெளிக்காட்டாமல் போதல்.*

*எல்லா உயிர்களும் ஒன்றுடன் மற்றொன்று நெருங்கிய தொடர்புடையதே! அந்த அறிவே ஞானத்தின் அடிப்படை. மற்றவரின் நோயை, வலியை, பிறப்பை தன்னுடையதைப் போல் கருதாமல், அவர்க்குத் தீங்கு செய்தால், அத்தகைய அறிவால் என்ன பயன் விளையப் போகின்றது?*

*இனிமையற்றவை என தான் உணர்ந்தவை, பிறரை நெருங்காமல் செய்ய வேண்டும்.*

*எதுவாயினும், எக்காலத்தும், எவர்க்கும் மனத்தளவிலும் தீங்கு செய்யாததே சிந்தனையின், அறிவின் பயன்.*

*இனிமையற்றவை, தன்னுடைய உயிர்க்கு துன்பம் விளைவிப்பதை அறிந்தும், ஒருவன் எதற்காகத்தான், மனங்கொண்ட உயிர்க்கு, இனிமையற்ற செயலைச் செய்கின்றானோ?*

*பிறர்க்கு இனிமையற்றதை, பகல் பன்னிரண்டு மணிக்கு முன்னால் செய்தால், தனக்கு இனிமையற்றது, பகல் பன்னிரண்டு மணிக்குப் பின்னால் தானாகவே வரும்.*

*நோய், துன்பம், பிறப்பு ஆகிய சுமைகள் எல்லாம், பிறர்க்கு இனிமையற்ற செயல்களால், துன்பம் விளைவிப்பதால், வருபவை. பிறப்பில்லாமை வேண்டுபவர், பிறருக்கு துன்பம் தருகின்ற இனிமையற்ற செயலைச் செய்ய மாட்டார்.*

# 33. கொல்லாமை

*கொல்லாமை = கொல் + ஆ + மை. கொல் = க் + ஒல். மெய் முழுதும் அதிர்தல். துடித்தல். கொல்லாமை = உடலைத் துடிக்கச் செய்யாமை.*

**321. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.**

**அறவினை யாதுஎனில் கொல்லாமை; கோறல
பிறவினை எல்லாம் தரும்.**

*கோறல் = க் + ஒற் + அல். மெய்யை முழுவதுமாய் அறுத்தல். கொல்லுதல்.*

*தன் உயிரோடு ஒன்றும் செயல், எது என்றால், பிற உயிரைக் கொல்லாமல் இருத்தல். பிற உயிரைக் கொல்லும் காரணத்தால், வறுமை, துன்பம், பிணி, மறுபிறப்பு ஆகிய எல்லா விளைவுகளும் ஏற்படும்.*

**322. பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.**

**பகுத்துஉண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.**

*ஈட்டிய பொருளை, தன் மனைவி, மக்கள், சுற்றம் மட்டுமின்றி, கோழி, ஆடு, மாடு போன்ற பல உயிர்களுக்கும் பிரித்துக் கொடுத்துப் பாதுகாத்தல், அறிஞர்கள் அவசியமானவை என்று கூறியனவற்றுள், மிகவும் முக்கியமானது.*

**323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.**

**ஒன்றுஆக நல்லது கொல்லாமை; மற்று அதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.**

*உயிரோடு ஒன்றிட மிகவும் முக்கியமானது, பிற உயிரைக் கொல்லாமல் இருத்தல். கொல்லாமைக்குப்பின், உயிர்ப்பின் சாரத்தில் முக்கியமானது, பொய்யாமை.*

**324. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.**

**நல்ஆறு எனப்படுவது யாதுஎனின் யாதுஒன்றும்
கொல்லாமை சூழும் நெறி.**

*நல்வழி எனப்படுவது என்ன என்றால், பிற எந்த உயிரையும் கொல்லாமல் இருத்தலை மையயமாகக் கொண்ட கள்ளாமை, இன்னா செய்யாமை, வெகுளாமை போன்ற ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல்.*

**325. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்**
**கொல்லாமை சூழ்வான் றலை.**

**நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம், கொலை அஞ்சிக்**
**கொல்லாமை சூழ்வான், தலை.**

*இருக்கின்ற வாழ்வின் நிலைமைகள், பாவங்களைச் செய்யத் தூண்டும் என பயந்து, இல்லறத்தைத் துறந்தவர்களில், கொலை செய்துவிடுவோமோ என பயந்து, புலன்களை அடக்கி, கொல்லாமையை உறுதியாய்க் கடைப்பிடிப்பவனே, சிறந்தவன்.*

**326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லா துயிருண்ணுங் கூற்று.**

**கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல**
**செல்லாது, உயிர் உண்ணும் கூற்று.**

*மேல் = உயரும்.*

*கூற்று = க் + ஊற்று. மெய்யின் எழுச்சி. பிறப்பு. கூற்று = க் + ஊற் + உ. மெய்யை நீள்புறத்தே பிரித்து வெளிப்படுத்து. இறப்பு.*

*பிற உயிரைக் கொல்லாமல் இருத்தலை, ஒழுக்கமாய்க் கடைப்பிடிப்பவனுக்கு, வாழ்நாள் அதிகமாகும். மரணம், அவனை இடையில் நெருங்காது. அவன் இயல்பாக, ஆசை எதுவுமின்றி, உதிர்வான். மறுபிறப்பும், அவனுக்கு இல்லை.*

**327. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி**
**தின்னுயிர் நீக்கும் வினை.**

**தன் உயிர் நீப்பினும் செய்யற்க-தான் பிறிது**
**இன்னுயிர் நீக்கும் வினை.**

*தன் உயிர் போவதாய் இருந்தாலும், வேறொன்றின் உயிரைப் போக்கும் செயலைச் செய்யாதே.*

**328. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்**
**கொன்றாகு மாக்கங் கடை.**

**நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும், சான்றோர்க்குக்**
**கொன்று ஆகும் ஆக்கம் கடை.**

*கிடைக்கும் நல்ல பலன், பெரியதாய் இருப்பினும், ஞானியர், கொல்வதால் வரும் பலனை, இழிவாகக் கருதுவர்.*

**329. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவா ரகத்து.**

**கொலை வினையர் ஆகிய மாக்கள் புலை வினையர்,**
**புன்மை தெரிவார் அகத்து.**

*மாக்கள் = மா + கள். பெரும் மயக்கம். மை அறிவினர். இருண்ட அறிவினர்.*

*புலை = ப் + உலை. மனம் கொதிப்பவர். புலை = புல் + ஐ. சிறுமையோடு ஐக்கியமானவர். தோன்றித் தோன்றி அழிபவர்.*

*புன்மை = புல் + மை. சிறுமை.*

*கொலைச் செயலைத் தொழிலாகக் கொண்ட இருண்ட அறிவினர், புல்லைப் போன்று தோன்றி அழிந்து, மீண்டும் தோன்றி அழிந்த வண்ணம் இருப்பர், என்பதை அறிவர், அவர்களின் சிறுமையையும், அதனால் விளையும் பயனையும், அறிந்தவர்கள்.*

**330. உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்.**

**'உயிர் உடம்பின் நீக்கியார்' என்ப-செயிர் உடம்பின்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்.**

*செயிர் = ச் + எய் + இர். இயக்கம் உயர்ந்து இருந்துப் பிரிதல். தொழு நோய், புற்று நோய், முதலிய உடல் அழிக்கும் நோய்.*

*செல்லா = நடவாத. போகாத.*

*தொழு நோய், புற்று நோய், முதலிய உடலை அழிக்கும் நோயைக் கொண்டு, உயிரும் போகாமல் துடிப்பவரைக் கண்டால், உயிரை உடம்பில் இருந்து நீக்கியவராக (முற்பிறப்பில் கொலை செய்தவராக) இருப்பார் என்பர், காரணம், விளைவை அறிந்தோர்.*

## கொல்லாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

*தன் உயிரோடு ஒன்றும் செயல், எது என்றால், பிற உயிரைக் கொல்லாமல் இருத்தல். பிற உயிரைக் கொல்லும் காரணத்தால், வறுமை,*

*துன்பம், பிணி, மறுபிறப்பு ஆகிய எல்லா விளைவுகளும் ஏற்படும்.*

*ஈட்டியப் பொருளை, பல உயிர்களுக்கும் பிரித்துக் கொடுத்துப் பாதுகாத்தல், அறிஞர்கள் அவசியமானவை என்று கூறியனவற்றுள், மிகவும் முக்கியமானது.*

உயிரோடு ஒன்றிட மிகவும் முக்கியமானது, பிற உயிரைக் கொல்லாமல் இருத்தல். கொல்லாமைக்குப்பின், உயிர்ப்பின் சாரத்தில் முக்கியமானது, பொய்யாமை.

நல்வழி எனப்படுவது என்ன என்றால், பிற எந்த உயிரையும் கொல்லாமல் இருத்தலை மையயமாகக் கொண்ட கள்ளாமை, இன்னா செய்யாமை, வெகுளாமை போன்ற ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல்.

இருக்கின்ற வாழ்வின் நிலைமைகள், பாவங்களைச் செய்யத் தூண்டும் என பயந்து, இல்லறத்தைத் துறந்தவர்களில், கொலை செய்துவிடுவோமோ என பயந்து, புலன்களை அடக்கி, கொல்லாமையை உறுதியாய் கடைப்பிடிப்பவனே, சிறந்தவன்.

பிற உயிரைக் கொல்லாமல் இருத்தலை, ஒழுக்கமாய்க் கடைப்பிடிப்பவனுக்கு, வாழ்நாள் அதிகமாகும். மரணம், அவனை இடையில் நெருங்காது.

தன் உயிர் போவதாய் இருந்தாலும், வேறொன்றின் உயிரைப் போக்கும் செயலைச் செய்யாதே.

கிடைக்கும் நல்ல பலன், பெரியதாய் இருப்பினும், ஞானியர், கொல்வதால் வரும் பலனை, இழிவாகக் கருதுவர்.

கொலைச் செயலைத் தொழிலாகக் கொண்ட இருண்ட அறிவினர், புல்லைப் போன்று தோன்றி அழிந்து, மீண்டும் தோன்றி அழிந்த வண்ணம் இருப்பர், என்பதை அறிவர், அவர்களின் சிறுமையையும், அதனால் விளையும் பயனையும், அறிந்தவர்கள்.

தொழு நோய், புற்று நோய், முதலிய உடலை அழிக்கும் நோயைக் கொண்டு, உயிரும் போகாமல் துடிப்பவரைக் கண்டால், உயிரை உடம்பில் இருந்து நீக்கியவராக (முற்பிறப்பில் கொலை செய்தவராக) இருப்பார் என்பர், காரணம், விளைவை அறிந்தோர்.

## 34. நிலையாமை

*நிலையாமை = மாற்றமுடைமை. நிலையற்றவை. இயக்கம். துன்பம். பிறப்பு.*

**331. நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.**

**நில்லாதவற்றை நிலையின என்று உணரும்
புல்லறிவு ஆண்மை கடை.**

*உடல், மனம், மனைவி, மக்கள், பொருள் போன்ற நிலையற்றவற்றை நிலையானது என, ஓரறிவுள்ள புல்லைப் போன்று, உணர்கின்ற தன்மை கீழானது.*

**332. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.**

**கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே, பெருஞ் செல்வம்;
போக்கும், அது விளிந்தற்று.**

*கூத்து = க் + ஊத் + உ. மெய் நீள்புறத்தே தேகமாய் வெளிப்படல்.*

*அவை = அ + வை. அற்றது நிலை. அவை = அவ் + ஐ. உயிர்ப்புடன் புறமும் அகமும் ஐக்கியமானது.*

*குழாம் = க் + உழ் + ஆம். மெய் உள்ளே ஆழ்ந்திருந்து அமைதியாதல்.*

*அது = அத் + உ. தேகமற்று வெளிப்படுவது / உள்ளிருப்பது. ஊழ்.*

*விளி = வ் + இள் + இ. புறமும் அகமும் இருந்து மிகையாய் இல்லாமல் போவது. விளி = வ் + இழி. புறமும் அகமும் குறைதல்.*

*கூத்தைப் பார்க்க வந்த கூட்டம், கூத்து முடிந்ததும், ஒருவர்கூட இன்றிப் போய்விடுவதைப் போல், பெரிய செல்வமும், ஊழ்விளைவு முடிந்ததும், சிறிதுமின்றி விரைவாய்ப் போய்விடும்.*

**333. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.**

**அற்கா இயல்பிற்றுச் செல்வம்; அது பெற்றால்,
அற்குப ஆங்கே செயல்!**

*அற்கா = அற் + க் + ஆ. பிரிந்து பொருண்மையாகும். அற்கா = அல் + க் + ஆ. அதிர்ந்து பொருண்மையாகும். நிலையற்ற. அல்கா = அ + ல் + க் + ஆ. அதிர்வற்ற மெய்யாதல். நிலைத்தல்.*

*அற்குப = அல்குப. அல்குப = அல்கு + ப. அல்கு = அ + ல் + க் + உ.*

*அதிர்வற்று மெய் வெளிப்படுதல். குறை. அல்குப = குறை கொண்டதை. பாவம் குறைய.*

*நிலையில்லா இயல்புடையது செல்வம். அதைப் பெற்றால், பாவம் குறைய, உடனே, பசியாற்றல், நோய்போக்கல், கல்வி தருதல் போன்ற, நல்ல செயல்களைச் செய்துவிட வேண்டும்.*

**334. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்**
**வாள துணர்வார்ப் பெறின்.**

**நாள் என ஒன்றுபோல் காட்டி, உயிர், ஈரும்**
**வாளது-உணர்வார்ப் பெறின்.**

*ஒவ்வொரு நாளும் ஒரே மாதிரி இருப்பதுபோல் காட்டி, இனி வரும் எல்லா நாளும் இப்படித்தான் இருக்கப் போகின்றது என்ற போலி நம்பிக்கையை ஊட்டி, நாமும் ஒருநாள் இறந்துவிடுவோம் எனும் உண்மையை ஒளித்து, உடலில் தோன்றும் முதுமை, பிணி ஆகியவற்றை மறைத்து, காலம் என்பது உயிரைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தொடர்ந்து அறுக்கும் வாள், என்பதைக் கூர்ந்து சிந்திப்பவர் உணர்வர்.*

**335. நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை**
**மேற்சென்று செய்யப் படும்.**

**நாச் செற்று, விக்குள் மேல்வாராமுன், நல் வினை**
**மேற்சென்று செய்யப்படும்.**

*செற்று = ச் + எற் + உ. இயக்கம் / சத்தம் உயர்ந்து அறுந்து வெளிப்படல். நாச்செற்று = பேச்சு குழறி.*

*விக்குள் = விக் + உள். புறம் அகம் இடை மெய் புறத்தே மிகையாதல். உடல் விரிதல். விக்கல் = விக் + அல். புறம் அகம் இடை மெய் அதிர்தல். உடல் அதிர்தல்.*

*பேச்சு குழறி, விக்குள் மேல்வந்து, உயிர் பிரியா முன்பு, பசியாற்றல், நோய்போக்கல், கல்வி தருதல் போன்ற நல்லவினைகளை, தானே முன்வந்து செய்துவிட ~ண்டும்.*

**336. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்**
**பெருமை யுடைத்திவ் வுலகு.**

**'நெருநல் உளன், ஒருவன்; இன்று இல்லை! என்னும்**
**பெருமை உடைத்து, இவ் உலகு.**

*நெருநல் = நெரு + நல். நெரு = ன் + எர் + உ. நெருக்கமாய் உயர்ந்து இருந்து புறமாதல். கதிரவன் எழுந்து உயர்ந்து இருந்து பின்மறைதல். தோன்றி முடிந்த நாள். நேற்று. நெருநல் = நேற்று நன்கு.*

*நேற்று நன்கு இருந்தவன், இன்று இல்லை என்னும், வினோதமான சிறப்பை உடையது, இந்த உலகம். முதுமையாலும் பிணியாலும்தான் இறப்பு நிகழும் என்றில்லை, இளம் வயதிலும், ஆரோக்கியமாய் இருப்பதாய்த் தோன்றும்போதும் கூட இறப்பு நேரலாம். எனவே, நல்ல வினைகளை, இளமை முதுமை என்று பாராமல், இயன்றபோது செய்துவிட வேண்டும்.*

**337. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.**

**ஒருபொழுதும் வாழ்வது அறியார், கருதுப-
கோடியும் அல்ல, பல.**

*வாழ்வு என்பது என்ன, அது எவ்வளவு நிலையற்றது, இறப்பு எந்த நேரத்திலும் வரலாம், அதற்குள் நல்ல காரியங்களைச் செய்துவிடவேண்டும் என்ற எண்ணம் ஏதுமின்றி, ஒரு கோடி அல்ல, பல கோடிகளைச் சம்பாதிப்பது எப்படி என்று யோசித்துக் கொண்டிருக்கின்றனர், பலர்.*

**338. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்பொ டுயிரிடை நட்பு.**

**குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்றே-
உடம்பொடு உயிரிடை நட்பு.**

*குடம்பை = குடம் + பை. குடம் போன்று கொண்டு ஐக்கியமாவது. முட்டை. கூடு.*

*புள் = ப் + உள். கொள்வதன் உள் (இருப்பது). கூட்டுள். வானுள். பறவை.*

*முட்டையிலிருந்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு, முட்டையோடு தானாக அழிந்துப்போக விட்டுவிட்டு, பறவை பறந்து சென்று விடுவதைப் போன்று, உடம்பில் ஒரு குறிப்பிட்ட காலம் இருந்துவிட்டு, உடம்பு தானாக அழிந்துப்போக விட்டுவிட்டு, உயிர் பிரிந்துவிடும். உடம்பிற்கும் உயிர்க்குமான நட்பு, வாழுஞ் சிறிது காலம் மட்டுந்தான், நிலையானது அல்ல.*

**339. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.**

**உறங்குவது போலும், சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும், பிறப்பு.**

*சாக்காடு = ச் + ஆக் + ஆடு. இயக்கம் மெய்யாகி ஒட்டித்தொடர்ந்து வெளிப்படுவது.*

*இறப்பு, உறக்கம் போன்றது.*

உறக்கத்தில் நினைவுகள் கனவுகளாக மாறும். சிறிது நேரம், உடல், மனத்தின் தடையின்றி, உயிர் தன் இயல்பான பரந்த வெளியாகும்.

இறந்த பின் ஆசைகள், விளைவுகள் தன்முனைப்பாக மெய்யாக மாறும் வரை, உயிர் பரந்த வெளியாய் நிலைக்கும்.

பிறப்பு, உறங்கி விழித்தல் போன்றது.

விழித்த உடன், புலன்கள் இயங்கி, ஞாபகத்தைப் புதுப்பித்து, மனத்தை இயக்கும்.

பிறந்தவுடன், புலன்கள் இயங்கி, மெய்யில் உறைந்து இருக்கும், ஆசைகளையும், விளைவுகளையும், மறு உருவாக்கம் செய்து, மனத்தை அமைக்கும்.

**340. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுள்**
**துச்சி லிருந்த வுயிர்க்கு.**

**புக்கில் அமைந்தின்றுகொல்லோ-உடம்பினுள்**
**துச்சில் இருந்த உயிர்க்கு!**

புக்கில் = ப் + உக் + இல். அகத்தின் உள்ளே மெய்யாய் நிலைத்து இருத்தல். உடல், மன எல்லைகளைக் கடந்து பரந்த வெளியாய் நிலைத்தல்.

துச்சில் = த் + உச் + இல். தேகத்தின் உள்ளே இயக்கமாய் இருத்தல். துச்சில் = துஞ் + இல். தூங்கி இருத்தல்.

உடம்பில் தூங்கி இருந்த உயிர், உடல், மன எல்லைகளைக் கடந்து பரந்த வெளியாய் நிலைக்காமல் போனது ஏனோ?

நிலையாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

உடல், மனம், மனைவி, மக்கள், பொருள் போன்ற நிலையற்றவற்றை நிலையானது என, ஓரறிவுள்ள புல்லைப் போன்று, உணர்கின்ற தன்மை கீழானது.

கூத்தைப் பார்க்க வந்த கூட்டம், கூத்து முடிந்ததும், ஒருவர்கூட இன்றிப் போய்விடுவதைப் போல், பெரிய செல்வமும், ஊழ்விளைவு முடிந்ததும், சிறிதுமின்றி விரைவாய்ப் போய்விடும்.

நிலையில்லா இயல்புடையது செல்வம். அதைப் பெற்றால், பாவம் குறைய, உடனே, பசியாற்றல், நோய்போக்கல், கல்வி தருதல் போன்ற, நல்ல செயல்களைச் செய்துவிட வேண்டும்.

ஒவ்வொரு நாளும் ஒரே மாதிரி இருப்பதுபோல் காட்டி, காலம் என்பது உயிரைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தொடர்ந்து அறுக்கும் வாள் என்பதை, கூர்ந்து சிந்திப்பவர் உணர்வர்.

பேச்சு குழறி, விக்குள் மேல்வந்து, உயிர் பிரியா முன்பு, பசியாற்றல், நோய்போக்கல், கல்வி தருதல் போன்ற நல்லவினைகளை, தானே முன்வந்து செய்துவிட ~ண்டும்.

நேற்று நன்கு இருந்தவன், இன்று இல்லை என்னும், வினோதமான சிறப்பை உடையது, இந்த உலகம்.

வாழ்வு என்பது என்ன, என்ற அறிவு ஏதுமின்றி, ஒரு கோடி அல்ல, பல கோடிகளைச் சம்பாதிப்பது எப்படி என்று யோசித்துக் கொண்டிருக்கின்றனர், பலர்.

முட்டையிலிருந்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு, முட்டையோடு தானாக அழிந்து போக விட்டுவிட்டு, பறவை பறந்து சென்று விடுவதைப் போன்று, உடம்பில் ஒரு குறிப்பிட்ட காலம் இருந்துவிட்டு, உடம்பு தானாக அழிந்து போக விட்டுவிட்டு, உயிர் பிரிந்துவிடும். உடம்பிற்கும் உயிர்க்குமான நட்பு, வாழுஞ் சிறிது காலம் மட்டுந்தான், நிலையானது அல்ல.

இறப்பு, உறக்கம் போன்றது. பிறப்பு, உறங்கி விழித்தல் போன்றது. இறப்பும், பிறப்பும் கூட நிலையற்றது.

உடம்பில் தூங்கி இருந்த உயிர், உடல், மன எல்லைகளைக் கடந்து, பரந்த வெளியாய் நிலைக்காமல் போனது ஏனோ?

# 35. துறவு

*துறவு = த் + உறவு. தேகத்தின் உறவு. உறவு = உற் + அ + உ. புறம் பிரிதல் அகமும் புறமும். துறவு = தேகம் புறம் பிரிதல் அகமும் புறமும். உடலை விலக்கி, உயிருடன் ஒன்றுதல்.*

**341. யாதனின் யாதனி னீங்கியா னோதல்**
**அதனின் அதனி னிலன்.**

**யாதனின் யாதனின் நீங்கியான், நோதல்**
**அதனின் அதனின் இலன்.**

*எது எதனிடத்தில் எல்லாம் இருந்து ஒருவன் நீங்குகிறானோ, அது அதனால் வரும் துன்பம் அவனுக்கு இல்லை. தான், தனதிலிருந்து விலகியவனுக்கு, உடலுக்கு வரும் பசி, பிணி, காமம், பொருள் ஆகியவற்றாலும், அவற்றைத் தீர்க்க முயலும்போது ஏற்படும் சிக்கல்களாலும் துன்பங்கள் இல்லை.*

**342. வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபின்**
**ஈண்டியற் பால பல.**

**வேண்டின், உண்டாகத் துறக்க; துறந்தபின்,**
**ஈண்டு இயற்பால பல.**

*இயற்பால = இயல் + பால் + அ. இயற்றும் வகை.*

*நிறைய வேண்டுமென்றால், பொருள் இருக்கும்போதே துறந்துவிடு.*

*துறந்தப்பின், இங்கு, பொருள் இயல்பாய் வரும் வகை, பல.*

*பொருள் இல்லாதபோது துறந்தால், பொருளுக்கான ஆசை, மனத்தின் ஆழத்தில் எங்காவது மறைந்திருக்கலாம். பொருளுக்காகத் துறவை துறக்கவும் துணியலாம். ஆனால், பொருள் இருக்கும்போதே துறந்தால், புத்தனைப் போல், பொருளுக்கான ஆசை வராது.*

*புலனடங்கி, ஆசைகள் மறைந்து, உயிரில் ஒன்றியப்பிறகு, தான் தனதற்றப்பிறகு, உடலையும் மனத்தையும் கடந்து, உயிர் பரந்த வெளியாகும் பொழுது, தானே எல்லாமாக ஆகும்பொழுது, உலகத்திற்காக வேண்டுவதெல்லாம், பல வழிகளில் கிடைக்கும்.*

**343. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்**
**வேண்டிய வெல்லா மொருங்கு.**

**அடல் வேண்டும், ஐந்தன் புலத்தை; விடல் வேண்டும்,**
**வேண்டிய எல்லாம் ஒருங்கு.**

*அடல் = அட் + அல். உயிர்ப்புடன் ஒட்டித் தொடரல். வெற்றிப் பெறல். அடக்கல்.*

*துறவு என்றால், ஐம்புலன்களை அடக்க வேண்டும் மற்றும் ஆசைகள் அனைத்தையும், ஒருசேர விட்டுவிட வேண்டும்.*

**344. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை**
**மயலாகும் மற்றும் பெயர்த்து.**

**இயல்பு ஆகும், நோன்பிற்கு ஒன்று இன்மை; உடைமை**
**மயல் ஆகும், மற்றும் பெயர்த்து.**

*உடைமை = உ + டை + மை. புறத்தே ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாகும் இருள் தன்மை.*

*மயல் = மை + அல். கொண்டு மூடி ஐக்கியமாதல். இருள்.*

*உயிரோடு ஒன்றுதலுக்கு, எந்தப் புறப்பொருள் மீதான ஆசையும், தன்னைப் பற்றிய எண்ணமும் இல்லாதிருக்க வேண்டும். பின்பு, அந்த மனநிலையே தன் இயல்பாகிவிடும்.*

*ஆசை, இருளையும் மயக்கத்தையும் தந்து, பின் துறவு நிலையிலிருந்து தன்னை அகற்றி, பிறப்பெடுக்கச் செய்துவிடும்.*

**345. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்**
**உற்றார்க் குடம்பு மிகை.**

**மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பு அறுக்கல்**
**உற்றார்க்கு உடம்பும் மிகை.**

*பிறப்பறுப்பை முயல்பவர்களுக்கு உடம்பே, உடம்பு பற்றிய எண்ணமே பாரமாகும், முயற்சிக்குத் தடையாகும் போது, இன்னும் எதற்கு இந்தப் பொருளுடனான ஆசையும் முயற்சியும்?*

**346. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்**
**குயர்ந்த வுலகம் புகும்.**

**'யான்', 'எனது', என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு**
**உயர்ந்த உலகம் புகும்.**

*தான் அழகானவன், வலிமையானவன், அறிவானவன் எனும் அகந்தையையும், தனக்கு நிலம், வீடு, செல்வம், பணம், பொன், அதிகாரம் உள்ளது எனும் கருவத்தையும் அழிப்பவன், முழுமையை உணர்ந்த நிலையில் இருக்கும் வானோர்க்கும் மேலாக, அசையாமையில் நிலைப்பான்.*

**347. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்**
**பற்றி விடாஅ தவர்க்கு.**

**பற்றி விடாஅ இடும்பைகள்-பற்றினைப்**
**பற்றி, விடாஅ தவர்க்கு.**

*இடும்பை = இடும் + பை. பிறப்பு. துன்பம்.*

*ஆசையைப் பிடித்துக் கொண்டு விடமாட்டாதவர்களை, பிறப்புகளும் துன்பங்களும், பிடித்துக் கொண்டு விடாது.*

**348. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி**
**வலைப்பட்டார் மற்றை யவர்.**

**தலைப்பட்டார், தீரத் துறந்தார்; மயங்கி**
**வலைப்பட்டார், மற்றையவர்.**

*ஆசையின் இயல்பை எண்ணிப் புலன்களைத் தொடர்ந்து அடக்க முயன்றவர், தேகத்தைப் பற்றிய ஆசைகளை முழுமையாகத் துறப்பார். ஆசையினால் இன்பம் கிடைக்கும் என்று மயங்கியவர், பிறப்பெனும் வலைக்குள் சிக்கிக் கொள்வார்.*

**349. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று**
**நிலையாமை காணப் படும்.**

**பற்று அற்றகண்ணே பிறப்பு அறுக்கும்; மற்றும்**
**நிலையாமை காணப்படும்.**

*(தான், தனது பற்றிய) ஆசை முற்றிலுமாய் இல்லாமல் போன உடனே, அசையாமை உணரப்படும். மெய்யுணர்வு ஏற்படும். ஞானம் கிட்டும். அந்நிலையில், தன் இருப்பைத் தவிர, எஞ்சிய அனைத்தும் இயங்கிய நிலையில் இருப்பதைக் காண முடியும்.*

*உணவு, காமம், உறக்கம் ஆகிய மூன்றும் தேகத்தின் நிலையான தேவைகள். இவைகளை ஒட்டியே ஆசைகள் எழுகின்றன. அவைகளைப் பெறவும், பாதுகாக்கவும், தன்கைவிட்டுப் போகாமல் இருக்கவும், புலன்கள் தொடர்ந்து ஓடி இயங்கிய வண்ணம் உள்ளன. பொருளாசை, மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என ஆசைகள் பெருகுகின்றன. புலன்களின் இயக்கத்தால், தான் எனும் அகந்தைக் காற்றும், தனது எனும் சிந்தனைத் தீயும் உருவாகின்றன. அதிகார ஆசை எழுகின்றது. மனம் எனும் வெளியில், புலனாலும், அகந்தையாலும், சிந்தனையாலும் மீண்டும் மீண்டும் ஞாபகத் துகள்கள் புத்துயிர் ஊட்டப்பட்டு மிதக்கின்றன. ஆசைகள் கணக்கிலடங்காமல் பெருகுகின்றன. உடல், புலன், அகம், புத்தி, மனம் ஆகியவை சங்கிலித் தொடர்பைக் கொண்டுள்ளன. இந்தப் பிணைப்பு இருக்கும்வரை, இந்த ஐந்தையும் கடந்த இருப்பு ஒன்றை உணரமுடியாது.*

*ஏனென்றால், அந்த இருப்பு நிலையானது. பொருண்மை அற்றது. சலனம் அற்றது. எண்ணம் அற்றது. நினைவும் அற்றது. அந்த இருப்பு தூய வெளியானது. உணர்வு மயமானது.*

*எல்லாப் பொருளும், உயிரும் அந்த வெளியிலேயே மிதக்கின்றன. வெளியின் உணர்வுமயமான நிலையால், பொருள்கள் யாவும் இருப்பையும், உயிர்கள் யாவும் உயிர்ப்பையும் கொண்டுள்ளன. தூய வெளி, தானாக இயங்காமல், பிற அனைத்தும் இயங்க, அசையாமல் நிற்கின்றது. எனவே, வெளியே எல்லாப் பொருளையும், உயிரையும் ஊடுருவி நிற்கின்றது.*

*உடல் அசையாதபோது, புலன்கள் அடங்கியப் பிறகு, அகந்தை மறைந்த பிறகு, எண்ணம் அழிந்த பிறகு, நினைவுகள் ஒழிந்த பிறகு, ஏதுமற்ற சூனிய தூய வெளி, மனவெளியாய், அக ஒளியாய், மெய்யுணர்வாய் உணரப்படும்.*

*தனி உடலின் மனத்தின் சிறைகள் அற்று, ஒற்றை உணர்வாய் அனைத்தும் உணரப்படும். அது ஆனந்தம். அசையாமையில் உறைந்து, பிறப்பெனும் சலனம் இல்லாமல் போகும்.*

*பற்று அறாமல் போனால், பிறப்புகளை எடுக்க நேரிடும்.*

**350. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.**

**பற்றுக, பற்று அற்றான் பற்றினை; அப் பற்றைப்
பற்றுக, பற்று விடற்கு!.**

*பற்றுக = நுண்மையான இறையுணர்வை அறிந்து நினைவில் இருத்துக.*

*பற்று = ப் + அற்று. கொள்வது அற்று. புலன் உணர்வு அற்று. மனம் அற்று. எண்ணம் அற்று.*

*பற்றற்றான் = தான் எனும் அகந்தையும், தனது எனும் உடைமையும் அற்றவன். எண்ணமற்ற மனமும் அற்றவன். பொருண்மை, புலன், மனம், அகந்தை, எண்ணம் அற்றவன். தூய வெளி.*

*பற்று = ப் + அற் + உ. கொண்டு உயிர்ப்புடன் இருத்தல். தூய வெளி மெய் உணர்வாய் நிலைத்தல்.*

*பற்று = பிறப்பு. கருமவினை.*

*தான் எனும் அகந்தையும், தனது எனும் உடைமையும் அற்று, தூய வெளி மெய் உணர்வாய் நிலைக்கும், நுண்மையான இறையுணர்வை அறிந்து, நினைவில் நிறுத்தி, புலன்கள் அடங்க, தானும் அந்நிலையை உணர்ந்து, அசையாமையில் உறைய, ஆசைகள் அகல, கருமம் கரைய, பிறப்பு அறும்.*

*துறவு அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*எது எதனிடத்தில் எல்லாம் இருந்து ஒருவன் நீங்குகிறானோ, அது அதனால் வரும் துன்பம் அவனுக்கு இல்லை.*

*நிறைய வேண்டுமென்றால், பொருள் இருக்கும்போதே துறந்துவிடு.*

*துறந்தபின், இங்கு, பொருள் இயல்பாய் வரும் வகை, பல.*

*துறவு என்றால், ஐம்புலன்களை அடக்க வேண்டும் மற்றும் ஆசைகள் அனைத்தையும், ஒருசேர விட்டுவிட வேண்டும்.*

*உயிரோடு ஒன்றுதலுக்கு, எந்தப் புறப்பொருள் மீதான ஆசையும், தன்னைப் பற்றிய எண்ணமும் இல்லாதிருக்க வேண்டும். பின்பு, அந்த மனநிலையே தன் இயல்பாகிவிடும். ஆசை, இருளையும் மயக்கத்தையும் தந்து, பின் துறவு நிலையிலிருந்து தன்னை அகற்றி, பிறப்பெடுக்கச் செய்துவிடும்.*

*பிறப்பறுப்பை முயல்பவர்களுக்கு உடம்பே, உடம்பு பற்றிய எண்ணமே பாரமாகும், முயற்சிக்குத் தடையாகும் போது, இன்னும் எதற்கு இந்த பொருளுடனான ஆசையும் முயற்சியும்?*

*தான் எனும் அகந்தையையும், தனது எனும் கருவத்தையும் அழிப்பவன், முழுமையை உணர்ந்த நிலையில் இருக்கும் வானோர்க்கும் மேலாக, அசையாமையில் நிலைப்பான்.*

*ஆசையைப் பிடித்துக் கொண்டு விடமாட்டாதவர்களை, பிறப்புகளும் துன்பங்களும், பிடித்துக் கொண்டு விடாது.*

*ஆசையின் இயல்பை எண்ணி புலன்களைத் தொடர்ந்து அடக்க முயன்றவர், தேகத்தைப் பற்றிய ஆசைகளை முழுமையாகத் துறப்பார். ஆசையினால் இன்பம் கிடைக்கும் என்று மயங்கியவர், பிறப்பெனும் வலைக்குள் சிக்கிக் கொள்வார்.*

*(தான், தனதுப் பற்றிய) ஆசை முற்றிலுமாய் இல்லாமல் போன உடனே, அசையாமை உணரப்படும். மெய்யுணர்வு ஏற்படும். ஞானம் கிட்டும். அந்நிலையில், தன் இருப்பைத் தவிர, எஞ்சிய அனைத்தும் இயங்கிய நிலையில் இருப்பதைக் காண முடியும். பற்று அறாமல் போனால், பிறப்புகளை எடுக்க நேரிடும்.*

*தான் எனும் அகந்தையும், தனது எனும் உடைமையும் அற்று, தூய வெளி மெய் உணர்வாய் நிலைக்கும், நுண்மையான இறையுணர்வை அறிந்து, நினைவில் நிறுத்தி, புலன்கள் அடங்க, தானும் அந்நிலையை உணர்ந்து, அசையாமையில் உறைய, ஆசைகள் அகல, கருமம் கரைய, பிறப்பு அறும்.*

# 36. மெய்யுணர்தல்

*மெய்யுணர்தல் = மெய் + உணர்தல். மெய் = ம் + எய். கொண்டு மூடியது, அகம், உயர்ந்து உயிர்ப்பாக நிலைத்தல். தூயவெளி.மெய்யுணர்தல் = அகம் உயர்ந்து, உயிர்ப்பாக நிலைப்பதை, உணர்தல். தூய வெளி அனுபவம்.*

**351. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்**
**அருளானா மாணாப் பிறப்பு.**

**பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும்**
**மருளான் ஆம், மாணாப் பிறப்பு.**

*பொருள் = ப் + ஓர் + உ + ள். கொண்டது ஒன்று புறத்தில் மிகையாதல். உடல், மனம். பொருள் = ப் + ஓர் + உள். கொண்டது ஒன்றாய் உள் இருத்தல். மெய்.*

*மருள் = ம் + அருள். கொண்டு மூடிய அருள். அருள் = அர் + உள். இருப்பது உள்ளே, பிரிவது உள்ளே. அருள் = அரு + ள். உருவமற்ற மிகை. ஒளி. மருள் = கொண்டு மூடிய ஒளி. இருள். மயக்கம். அறியாமை.*

*ஆண் = ஆ + ண். மிக நெருக்கமாதல். தொடர்ச்சியான.*

*உடல், மனம், அகந்தை, சிந்தனை, தான், தனதுடைமை போன்றவற்றை நிலையானது என்றும், ஆனந்தம் தருவது என்றும், அறியாமையால் நம்பி, ஆசைகளின் பின்னே செல்வதால், தொடர்ச்சியாக வருவது, பிறப்பு.*

**352. இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி**
**மாசறு காட்சி யவர்க்கு.**

**இருள் நீங்கி இன்பம் பயக்கும்-மருள் நீங்கி**
**மாசு அறு காட்சியவர்க்கு.**

*மாசறு = மாசு + அறு. மனத்தின் இயக்கம் அற்று. மனத்தில் நினைவுகளின்றி.*

*காட்சி = க் + ஆட்சி. மெய் உணர்வு.*

*அறியாமை, ஆசை நீங்கி, மனத்தின் இயக்கமற்று, நினைவுகளின்றி, காண்பவர் காண்பது இன்றி, வெறும் காட்சியாய் நிலைப்பவர்க்கு, பிறப்பு எனும் இருள் நீங்கி, நிலைபேறு எனும் இன்பம் விளையும்.*

**353. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
**வான நணிய துடைத்து.**

**ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையகத்தின்**
**வானம் நணியது உடைத்து.**

*உடலாலும் மனத்தாலும் அடைவதுதான் உண்மையான இன்பமோ? அதைத் தவிர, நிலைபேறு, ஆனந்தம் என்பதெல்லாம் வெறும் கற்பனையோ? மாயையோ? இருக்கும் இன்பமான இப்பிறப்பை விட்டு விட்டு, இல்லாத ஆனந்தத்தைத் தேடி, முயன்று, வாழ்நாளை வீணடித்து, கடைசியில் எதுவும் இல்லாமல் போய்விடுமோ?*

*இத்தகைய சந்தேகங்களை எல்லாம் அறிவு பூர்வமாகவும், தருக்க முறையிலும் நீக்கி, புலன்களின் இயக்கம் இருக்கும் வரை, அகந்தையும், சிந்தனையும், மனமும் இருக்கும், ஆசையும் தொடரும், வினைகள் எனும் காரணத்தால், பிறப்பு எனும் விளைவு நிகழும் என்றும், செய்த வினைகளுக்கு ஏற்ப இன்ப துன்பமுள்ள பிறப்பு உண்டாகும் என்றும்; புலனடங்க, அகந்தையும் சிந்தனையும் மனமும் அடங்க, நினைவுகளற்ற இயக்கமற்ற மனம் அல்லது அகம், தூய வெளியாய் நிலைத்து மெய் உணரப்படும் என்பதை நேரடி அனுபவத்தால் தெளிந்தவர்களுக்கு, இவ்வுலகைக் காட்டிலும், நிலைபேறு உலகம் நெருக்கமானதாகும்.*

*அவர்கள், மெய்யுணர்விலேயே அதிக நேரம் நிலைப்பர். அதன் ஆனந்தத்தில் திளைப்பர். இடைவெளி அற்ற தூய வெளியே எங்கும் எதிலும் ஊடுருவி நிற்பதால், அனைத்தையும் உணர்வர். தாமே எல்லாமாய் இருப்பதால், தமையன்றி வேறெதுவும் இல்லாததால், ஆசையின்றி இருப்பர். கருமமும் கரைந்து, பிறப்பின்றி அமைதியில் நிலைப்பர்.*

**354. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே**
**மெய்யுணர் வில்லா தவர்க்கு.**

**ஐஉணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே -**
**மெய் உணர்வு இல்லாதவர்க்கு.**

*ஐந்து புலன்களின் உள்ளீட்டால்தான், மனம் இயங்குகின்றது. தான் என்பதையும், புறம் என்பதையும் வேறுபடுத்திப் பார்க்க முடிகின்றது. அகந்தை எழுகின்றது, சிந்தனையும் வருகின்றது. வாழ்வுகளைப் பார்க்க முடிகின்றது. நிலவும் சுயமுரண்பாடுடைய, ஏற்றத் தாழ்வுள்ள, எதிர்பாராத, பொருந்தாத நிலைமைகளுக்குக் காரணம் தேடுகின்றது.*

*வேறு எந்தக் காரணமும் பொருந்தாத நிலையில், காரணம் காரியம் காரணம், கருமம் பிறப்பு கருமம் எனும் சங்கிலித் தொடர் போல், பிறப்புக்கும், இன்ப துன்பத்திற்கும், கருமமே காரணம் என்றும்; பிறப்பு, கருமத்தை உருவாக்கும் என்றும்; அக்கருமத்திற்கு காரணம், ஆசையே என்றும்; அந்த ஆசைக்குக் காரணம், அகந்தையே என்றும்; அந்த அகந்தைக்குக் காரணம், புலன்களே என்றும்; அதே புலன்களின் உள்ளீட்டால் விளைந்த சிந்தனை மூலம் அறிந்து, புலனடக்கி, மனமடங்கி, தூய வெளி மெய் உணர்வை அடையாதவர்கள், ஐம்புலன்களைப் பெற்றிருந்தும் பயனில்லை.*

**355. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

**எப் பொருள் எத் தன்மைத்து ஆயினும், அப் பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

*எந்தப் பொருளானாலும், அது எந்தத் தன்மையைக் கொண்டிருந்தாலும், அதன் காரணப் பொருளைச் சிந்தித்து அறிவதே அறிவு.*

*ஒருவருடைய உடல், மனம், அறிவு, செல்வம் போன்றவை எவ்வளவு உயர்ந்திருப்பினும், தாழ்ந்திருப்பினும், அதற்கான காரணங்களை ஆராய்ந்து, முற்பிறப்பின் நல்வினை, தீவினையால் வந்ததா அல்லது இப்பிறப்பின் நல்வினை, தீவினையால் வந்ததா எனச் சிந்தித்து முடிவைக் காண்பது அறிவாகும்.*

*அல்லது*

*எல்லாப் பொருளின் உள்ளும், உயிரின் உள்ளும், தூய வெளி எனும் மெய்ப்பொருள் இறைந்து உள்ளது. வெளித்தோற்றத்தையும், வடிவத்தையும் அப்படியே கொள்ளாமல், பொருளின் உள் அமைப்பையும், அடிப்படையையும் நுணுகி நுணுகி ஆராயும்போது, உருவமற்ற, மிக மிக நுண்ணிய பொருண்மையான, தூய வெளியை கருத்தளவில் அடையலாம். பொருட்கள் அணுக்களால் ஆனவை என்றும், அணு மிக நுண்ணிய துகள்களாலும் வெளியாலும் ஆனது என்றும், அணுவில் உள்ள அந்த வெளியும் நுண்ணிய பொருண்மையானது என்றும், தூய வெளியும் நுண்மையான பொருண்மையானது என்றும் அறியலாம். இந்த அறிவே மெய்யுணர்விற்கு வழிகாட்டலாம்.*

**356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றீண்டு வாரா நெறி.**

**கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்,**
**மற்று ஈண்டு வாரா நெறி.**

*கற்று, சிந்தித்து மெய்ப்பொருள் எதுவென அறிந்தவர், புலனடக்கி, மனமடங்கி, தான், தனது அற்று, நினைவுகளற்று, தூய வெளி மெய் உணர்வை அடைந்து, ஆசை அகன்று, கருமம் கரைந்து, நிலைபேறு அடைந்து, மீண்டும் பிறப்பு எடுக்காமல் இருக்க முயற்சி செய்வர்.*

**357. ஓர்த்துள்ள முள்ள துணரி னொரு தலையாப்**
**பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.**

**ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையா,**
**பேர்த்து உள்ளவேண்டா பிறப்பு.**

*ஓர்த்தல் = ஓர் + த் + அல். ஓர் தேகம் உயிர்ப்புள்ள அதிர்வு. அகமும் புறமும் ஒன்றாகி தூய வெளியின் நுண்பொருண்மை ஆதல்.*

*உள்ளம் = உள் + அம். உள் தன்மை. அகம்.*

*உள்ளது = உள் + அது. மெய். தூய வெளி.*

*ஒருதலையாய் = இரண்டு கருத்துகளின்றி. ஒரே முடிவாய். உறுதியாய்.*

*மெய்யெனும் தூய வெளியின் நுண்பொருண்மையை, அகமும் புறமும் முழுமையாக உணர்ந்தவர், ஆனந்தித்தவர், உறுதியாய் மனம் மாறி பிறப்புக்கு ஆசைப்பட மாட்டார்.*

**358. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.**

**பிறப்பு என்னும் பேதைமை நீங்க, சிறப்பு என்னும்
செம்பொருள் காண்பது அறிவு.**

*பிறப்பு = ப் + இறப்பு. தூய வெளி இல்லாமை. இயக்கம்.*

*சிறப்பு = ச் + இறப்பு. இயக்கம் இல்லாமை.*

*செம்பொருள் = செம்(மை) + பொருள். செம் = ச் + எ + ம். இயக்கம் உயர்ந்தும் கொண்டு மூடியும். மெய். தூய வெளியின் நுண்பொருண்மை.*

*பிறப்பு என்றாலே புலன்களின் இயக்கமும், அதனால் உருவாகும் அகந்தையும், சிந்தனையும், பொருள் அல்லாதனவற்றை பொருள் எனக் கருதும் அறியாமையும் இருக்கும். ஆசைகளும், வினைகளும், கருமங்களும், பிறப்பைச் சங்கிலித் தொடராக்கும். உடல், மன இயக்கம் இல்லாமையில், தூய வெளியின் நுண்பொருண்மையை உணர்ந்தால், ஆசை, வினை, கருமம் அகன்று, பிறப்பு என்னும் அறியாமை நீங்கும்.*

**359. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.**

**சார்பு உணர்ந்து, சார்பு கெட ஒழுகின், மற்று அழித்துச்
சார்தரா, சார்தரும் நோய்.**

*சார்பு = அகந்தை, சிந்தனை, ஆசை, மனத்தின் காரணம், புலன்கள்.*

*சார்புகெட = புலனடங்க.*

*ஒழுகின் = தொடர்ந்து முயன்றால்.*

*மற்றழித்து = புலனடங்க, அதனால் உருவான அகந்தை, சிந்தனை, ஆசை, மனம் அழியும்.*

*சார்தரா = பிறப்பு தராது.*

*சார்தரு = கருமம் தரும்.*

*நோய் = ஆசை.*

*அகந்தை, சிந்தனை, மனம், தான், தனது போன்றவை எழுவதற்குக் காரணம், புலன்கள் என்பதை அறிந்து, புலன் அடக்கத்தைத் தொடர்ந்து*

*முயன்றால், புலன்கள் அடங்கி, அவற்றால் உருவானவைகளும் அழிந்து, கருமம் தரும் ஆசையின்றி, மறுபிறப்பு வராது.*

**360. காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்**
**நாமங் கெடக்கெடு நோய்.**

**காமம், வெகுளி, மயக்கம், இவை மூன்றன்**
**நாமம் கெட, கெடும் நோய்.**

*காமம் = க் + ஆம் + அம். மெய் / பொருண்மை கொண்டு மூடும் தன்மை. உடல் / பொருள் ஆசை. மெய்யாகும் தன்மை.*

*வெகுளி = வ் + எக் + உளி. புறமும் அகமும் உயரும் மெய் உளி போல் பிளப்பது. வெகுளி = வ் + எக் + உள் + இ. புறமும் அகமும் உயரும் மெய் புறத்தில் மிகையாய் இருப்பது. கோபம்.*

*மயக்கம் = மயம் + க் + அம். மெய்யின் தன்மை முழுமையாய் இருத்தல். மயக்கம் = மை + அக் + அம். இருண்ட உயிர் மெய்யின் தன்மை. அகந்தை. அறியாமை.*

*நாமம் = ன் + ஆம் + அம். நெருங்கிக் கொண்டு மூடும் தன்மை இருள். தொடர்ச்சி. நெருக்கமாகும் தன்மை.*

*புலன்களால் உருவாவதே தான், தனது எனும் அகந்தை அல்லது அறியாமை அல்லது மயக்கம். அதனால் விளைவது காமம் எனும் உடல் மற்றும் பொருள் மீதான ஆசை. அந்த ஆசையை நிறைவேற்றவும், ஆசை நிறைவேறாதபோதும் எழுவது வெகுளி எனும் கோபம்.*

*எனவே, புலனடக்கத்தால் அகந்தை அழிய, அதன் தொடர்ச்சியான ஆசையும் கோபமும் அடுத்து அழிய, எஞ்சுவது சலனமற்ற மனம். அதுவே, தூய மன வெளியின் மெய்யுணர்வாகி விடும். பின், ஆசையின்றி, கருமமின்றி, பிறப்பும் இல்லாமல் போகும்.*

*மெய்யுணர்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*உடல், மனம், அகந்தை, சிந்தனை, தான், தனதுடைமை போன்றவற்றை நிலையானது என்றும், ஆனந்தம் தருவது என்றும், அறியாமையால் நம்பி, ஆசைகளின் பின்னே செல்வதால், தொடர்ச்சியாக வருவது, பிறப்பு.*

*அறியாமை, ஆசை நீங்கி, மனத்தின் இயக்கமற்று, நினைவுகளின்றி, காண்பவர் காண்பது இன்றி, வெறும் காட்சியாய் நிலைப்பவர்க்கு, பிறப்பு எனும் இருள் நீங்கி, நிலைபேறு எனும் இன்பம் விளையும்.*

*சந்தேகங்கள் நீங்கி, புலன்களின் தாக்கமற்று, தெளிந்தவர்க்கு, மண்ணுலகைக் காட்டிலும், விண்ணுலகம் மிக அருகில் உள்ளது.*

*புலனடக்கி, மனமடங்கி, தூய வெளி மெய் உணர்வை அடையாதவர்கள், ஐம்புலன்களைப் பெற்றிருந்தும் பயனில்லை.*

*எந்தப் பொருளானாலும், அது எந்தத் தன்மையைக் கொண்டிருந்தாலும், அதன் காரணப் பொருளைச் சிந்தித்து அறிவதே அறிவு.*

கற்று, சிந்தித்து மெய்ப்பொருள் எதுவென அறிந்தவர், மீண்டும் பிறப்பு எடுக்காமல் இருக்க முயற்சி செய்வர்.

மெய்யெனும் தூய வெளியின் நுண்பொருண்மையை, அகமும் புறமும் முழுமையாக உணர்ந்தவர், ஆனந்தித்தவர், உறுதியாய் மனம் மாறி பிறப்புக்கு ஆசைப்பட மாட்டார்.

பிறப்பு என்னும் அறியாமை நீங்க, உடல், மன இயக்கம் இல்லாமையில், தூய வெளியின் நுண்பொருண்மையை உணர்தல், அறிவின் பயன்.

அகந்தை, சிந்தனை, மனம், தான், தனது போன்றவை எழுவதற்குக் காரணம், புலன்கள் என்பதை அறிந்து, புலன் அடக்கத்தைத் தொடர்ந்து முயன்றால், புலன்கள் அடங்கி, அவற்றால் உருவானவைகளும் அழிந்து, கருமம் தரும் ஆசையின்றி, மறுபிறப்பு வராது.

புலனடக்கத்தால் அகந்தை அழிய, அதன் தொடர்ச்சியான ஆசையும் கோபமும் அடுத்து அழிய, எஞ்சுவது சலனமற்ற மனம். அதுவே, தூய மன வெளியின் மெய்யுணர்வாகி விடும். பின், ஆசையின்றி, கருமமின்றி, பிறப்பும் இல்லாமல் போகும்.

# 37. அவாவறுத்தல்

*அவாவறுத்தல் = அவா + அறுத்தல். அவா = அ + வ் + ஆ. உயிர்ப்புள்ள புறமும் அகமும் உள்ளதாதல். உயிர்ப்புப் பெற்ற தனி இருப்பாதல். புறத்தையும், அகத்தையும் மீறித் தனி இருப்பாதல். ஆசையாதல்.*

*அவாவறுத்தல் = ஆசையாதலை அறுத்தல். புலனடக்கி ஆசை அறுத்தல்.*

**361. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும்**
**தவாஅப் பிறப்பீனும் வித்து.**

**'அவா' என்ப-' எல்லா உயிர்க்கும், எஞ்ஞான்றும்,**
**தவாஅப் பிறப்பு ஈனும் வித்து.**

*அவா = அ + ஆ. உயிராதல். உயிராகும் முயற்சி. அவா = அ + வ் + ஆ. உயிர் புறம்அகம் ஆதல். உயிர் வடிவமாகும் / உரு ஆகும் உந்துதல். ஆசை = ஆச் + ஐ. ஐ = அ + இ. உயிராய் இருத்தல் / நிலைத்தல். ஆசை = இயக்கமாகி உயிராய் இருத்தல் / நிலைத்தல்.*

*தவா = த் + அவா. தேகத்தின் உயிர்வடிவமாகும் உந்துதல். ஆசையாலும், அகந்தையாலும் செய்த தீவினைகளின் நினைவுகளும், அன்பாலும் கருணையாலும் செய்த நல்வினைகளின் நினைவுகளும், சாகின்ற பொழுது, உயிரைச் சூழ்ந்து நிற்கும். விளைவுகளின் தன்மைகளைப் பொறுத்து ஏதோ ஓர் வினை மிகையாகும். அந்த வினையைப் பொறுத்து, அந்த தேகத்தின் சாரமான மனத்தின் பிறப்பாசை அமையும். தவா = தவறா. அப் = வெளியற்று. அப் = அந்த.*

*எல்லா உயிர்க்கும் = ஆறு அறிவு உள்ள மனிதர்கள் மட்டுமல்ல. ஒன்று முதல் ஐந்து அறிவுள்ள உயிர்களும் கூட, ஆசை எனும் உயிர் வடிவமாகும் உந்துதலால்தான், பிறவிகள் எடுக்கின்றன. குறைந்த அறிவுள்ள உயிர்கள், உயர்ந்த அறிவுள்ள உயிர்களாவதற்கான சாத்தியம், அவற்றின் ஆசையைப் பொறுத்து அமையலாம். தீவினைகளை மிகவும் செய்தவன், பிறப்பாசையால், நாயாக பிறத்தல் சாத்தியம் என்றால், நல்வினைகளச் செய்த நாயும், பிறப்பாசையால், மனிதனாய் பிறத்தல் கூடுந்தானே.*

*எக்காலத்திலும், ஒன்று முதல் ஆறு அறிவு பெற்ற உயிர்களனைத்திலும், தங்களின் வினைகளுக்கேற்ப, மனத்தில் எழும் பிறப்பாசையே, காலங்கனிய, அவைகளுக்கு அந்தப் பிறப்பை விளைவிக்கும், விதையாகும்.*

**362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும்.**

**வேண்டுங்கால், வேண்டும் பிறவாமை; மற்று அது**
**வேண்டாமை வேண்ட, வரும்.**

*ஆசைப்படுவது என்றால், பிறவாமைக்கு ஆசைப்படு. புலனடக்க முயற்சியின்றி, வெறுமனே ஆசைப்பட்டால், பிறப்பு உண்டாகும்.*

*ஆசை எழும்போதெல்லாம், பிறவாமை எனும் இலக்கு மனதிலும் கண்முன்னும் தோன்ற வேண்டும். அது, ஆசையை வளராமல் முளையிலேயே கிள்ளி விடும். மேலும், பிறவாமைக்கான ஆசை மட்டும் போதாது, அதை அடைவதற்கான முயற்சியாக, புலனடக்கத்தை மேற்கொண்டால், அகந்தையற்று, ஆசையற்று, கருமமற்று, பிறப்பறும்.*

**363. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை**
**யாண்டு மஃதொப்ப தில்.**

**வேண்டாமை அன்ன விழுச் செல்வம் ஈண்டு இல்லை;**
**யாண்டும் அஃது ஒப்பது இல்.**

*வேண்டாமை = வ் + ஏண் + ட் + ஆம் + ஐ. புறமும் அகமும் மிக உயர்ந்து மிக நெருக்கமாகி அமைதியுற்று ஐக்கியமாதல். அமைதியான மனநிலை.*

*விழு = வ் + இழ் + உ. புறமும் அகமும், முழுமையாய், நிலையாய் ஆழ்ந்து உள் இருத்தல்.*

*யாண்டு = ய் + ஆண் + ட் + உ. உயிர்ப்புடன் மிக நெருக்கமாய்த் தொடர்ந்து வெளிப்படல். யாண்டும் = அங்கும். அசையாமையிலும். ஒளிமிகுந்த தூயவெளியிலும்.*

*ஆசையற்ற அமைதியான மனநிலை போன்று, முழுமையான நிலையான ஆழ்ந்த உயிர்ப்புநிலையை, ஆனந்தத்தைத் தருவது, இம்மண்ணுலகில் வேறெதுவும் இல்லை. மெய்யுணர்வை அடைந்த நிலையில், ஆசையற்ற மனநிலைக்கு ஈடானது, அவ்வுலகிலும், ஒளிமிகுந்த தூயவெளியிலும், வேறெதுவும் இல்லை.*

*இறையே, வேண்டுதல் வேண்டாமை இலான் ஆகவே இருக்கின்றான்!*

**364. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது**
**வாஅய்மை வேண்ட வரும்.**

**தூஉய்மை என்பது அவா இன்மை; மற்று அது**
**வாஅய்மை வேண்ட, வரும்.**

*தூஉய்மை = த் + ஊய் + மை. தேகம் ஆழ் உள்ளும் / நீள் புறத்தும் நிலைக்கும் உயிர்ப்புத் தன்மை. தூய வெளி. ஒளிர்மை.*

*வாஅய்மை = வா + அய் + மை. வருவது உயிர்பெறும் தன்மை. புலன் உள்ளீடு.*

*ஆசையற்ற மனத்தன்மையால் விளைவது, ஒளிமிக்க தூயவெளி. புலன்களின் உள்ளீட்டை விரும்ப உண்டாவது, மாசு எனும் ஆசை.*

**365. அற்றவ ரென்ப ரவாவற்றார் மற்றையார்**
**அற்றாக வற்ற திலர்.**

**அற்றவர் என்பார் அவா அற்றார்; மற்றையார்**
**அற்று ஆக அற்றது இலர்.**

*அற்றவர் = பிறப்பு அற்றவர்*

*அற்றாக = முழுமையாக*

*ஆசை இல்லாதவர், பிறப்பெடுக்க மாட்டார். பிறப்பு எடுப்பவர், முழுமையாக ஆசையை இழக்காதவர்.*

**366. அஞ்சுவ தோரு மறனே யொருவனை**
**வஞ்சிப்ப தோரு மவா.**

**அஞ்சுவது ஓரும் அறனே; ஒருவனை**
**வஞ்சிப்பது ஓரும் அவா**

*ஓர் = ஒன்று.*

*ஓர் = பிரி.*

*உயிர்பிரியும் காலத்தில், ஆசை வந்துவிடுமோ என அஞ்சி, அது வராமல் இருக்க, உயிர்ப்போடு தொடர்ந்து ஒன்றி நிலைப்பதும், அறமே. மெய்யுணர்ந்த பின்னும், ஆசை உண்டாகலாம். ஏனெனில், தன் நல்வினை காரணத்தால், எடுக்கும் அடுத்த பிறப்பு இன்பமிக்கதாய் இருக்கும் எனும் நம்பிக்கை ஊட்டி, ஆசை ஏமாற்றி, உயிர்ப்பில் உறைதலிலிருந்து, தன்னைப் பிரித்து விடும், பிறப்பெடுக்கச் செய்து விடும்.*

**367. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை**
**தான்வேண்டு மாற்றான் வரும்.**

**அவாவினை ஆற்ற அறுப்பின், தவா வினை**
**தான்வேண்டும் ஆற்றான் வரும்.**

*மனத்தில் உண்டாகும் ஆசையின் ஆற்றலை அழித்துவிட்டால், தேகத்தின் உந்துதல், தான் விரும்பியபடி அசையாமையில் நிலைக்கும்.*

*ஆசை இரண்டு வகைப்படும். மனத்தாசை. தேகத்தாசை. மனத்தாசை, புலன்களால் உருவான நினைவுகள் இருக்கும்வரை அடங்காமல் வெவ்வேறு வடிவங்களில் எழுந்து கொண்டே இருக்கும். மனத்தாசை தேகத்தாசையை இயக்கி பிறப்பை உருவாக்குகின்றது. மனத்தாசை அடங்கிவிட்டால், தேகத்தாசையைத் தன் விருப்பம்போல் அமைத்துக் கொள்ளலாம்.*

**368. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேல்**
**தவாஅது மேன்மேல் வரும்.**

**அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்; அஃது உண்டேல்,**
**தவாஅது மேன்மேல் வரும்.**

*மனத்தாசை இல்லாதவர்க்குப் பிறப்பு இல்லாமல் போகும். மனத்தாசை இருந்தால், தேகத்தாசை உந்தப்பட்டு, பிறப்பு மேலும் மேலும் வரும்.*

**369. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னும்**
**துன்பத்துட் டுன்பங் கெடின்.**

**இன்பம் இடையறாது, ஈண்டும் அவா என்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின்.**

*ஆசை என்பது, பிறப்பு எனும் துன்பத்தில் வரும் வறுமை, முதுமை, பிணி, இறப்பு போன்ற, பிற எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாய் உள்ளது. ஆசை அழிந்து விட்டால், ஆனந்தம் இடைவெளியற்று தொடர்ந்து உண்டாகும்.*

**370. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே**
**பேரா வியற்கை தரும்.**

**ஆரா இயற்கை அவா நீப்பின், அந் நிலையே**
**பேரா இயற்கை தரும்.**

*ஆரா = ஆர் + ஆ. பிரியாத.*

*இயற்கை = இயல்பு.*

*தானாகப் பிரியாத இயல்புடைய ஆசையை, புலனடக்க முயற்சியால் நீக்கியதும், நிலவும் அந்த அமைதியான மன நிலையே, அசையாமை, பிறப்பின்மை எனும் பெயரா இயல்பைத் தந்து விடும்.*

*அவாவறுத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*எக்காலத்திலும், ஒன்று முதல் ஆறு அறிவு பெற்ற உயிர்களனைத்திலும், தங்களின் வினைகளுக்கேற்ப, மனத்தில் எழும் பிறப்பாசையே, காலங்கனிய, அவைகளுக்கு அந்தப் பிறப்பை விளைவிக்கும், விதையாகும்.*

*ஆசைப்படுவது என்றால், பிறவாமைக்கு ஆசைப்படு. புலனடக்க முயற்சியின்றி, வெறுமனே ஆசைப்பட்டால், பிறப்பு உண்டாகும்.*

*ஆசையற்ற அமைதியான மனநிலை போன்று, முழுமையான நிலையான ஆழ்ந்த உயிர்ப்புநிலையை, ஆனந்தத்தைத் தருவது, இம்மண்ணுலகில் வேறெதுவும் இல்லை. மெய்யுணர்வை அடைந்த நிலையில், ஆசையற்ற மனநிலைக்கு ஈடானது, அவ்வுலகிலும், ஒளிமிகுந்த தூயவெளியிலும், வேறெதுவும் இல்லை.*

*ஆசையற்ற மனத்தன்மையால் விளைவது, ஒளிமிக்க தூயவெளி. புலன்களின் உள்ளீட்டை விரும்ப உண்டாவது, மாசு எனும் ஆசை.*

*ஆசை இல்லாதவர், பிறப்பெடுக்க மாட்டார். பிறப்பு எடுப்பவர், முழுமையாக ஆசையை இழக்காதவர்.*

*ஒருவரை நம்ப வைத்து ஏமாற்றுவது ஆசை. அதை நம்ப வேண்டாம். அஞ்ச வேண்டும், முழுமையாக்கும் அறத்திற்கு.*

*மனத்தில் உண்டாகும் ஆசையின் ஆற்றலை அழித்துவிட்டால், தேகத்தின் உந்துதல், தான் விரும்பியபடி அசையாமையில் நிலைக்கும்.*

*மனத்தாசை இல்லாதவர்க்கு பிறப்பு இல்லாமல் போகும். மனத்தாசை இருந்தால், தேகத்தாசை உந்தப்பட்டு, பிறப்பு மேலும் மேலும் வரும்.*

*எல்லா துன்பங்களுக்கும் காரணமான ஆசை அழிந்தால், என்றும், எப்பொழுதும், ஆனந்தம் தான்.*

*தானாக பிரியாத இயல்புடைய ஆசையை, புலனடக்க முயற்சியால் நீக்கியதும், நிலவும் அந்த அமைதியான மன நிலையே, அசையாமை, பிறப்பின்மை எனும் பெயரா இயல்பைத் தந்து விடும்.*

# 38. ஊழ்

*ஊழ் = ஊ + ழ். எங்கும் பரவி ஆழ்ந்து இருப்பது.*

*ஊழ், காரண காரியத்தால், நல்வினை தீவினையால், ஒன்று சேரும் நிலை ஆற்றல். காலத்தால் நிகழும் சூழல்களுக்கு ஏற்றவாறு, அது இயங்கு ஆற்றலாக வெளிப்படும். ஊழ், பொருண்மை, உயிரியலின் இயல்பு விதியாகின்றது.*

*மிகவும் நுணுக்கமான சிக்கலான தொடர்புகளையும், உறவுகளையும், இயக்கங்களையும் கொண்டுள்ளது, ஊழ். எனவே, ஊழ், தனிமனித அறிவுக்கும், ஆற்றலுக்கும் அப்பாற்பட்டு இயங்குகின்றது.*

*ஊழையே, அறம் எனலாம்; இயற்கை நீதி எனலாம்; தருமம் எனலாம்; யாராலும் மாற்ற முடியாத விதி எனலாம்.*

**371. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்**
**போகூழாற் றோன்று மடி.**

**ஆகு ஊழால் தோன்றும், அசைவு இன்மை; கைப்பொருள்**
**போகு ஊழால் தோன்றும், மடி.**

*ஊழ் = மிகுந்த உள் ஆழத்தில் இருப்பது. கருமம். வினைகளின் வெளிப்படாத விளைவு. விதி. உண்மை (உள் + மை). பால் (ப் + ஆல்) மனம் அதிர்வாதல்.*

*மடி = ம் + அட் + இ. மனம் செயலற்று தொடர்ந்து இருத்தல். சோம்பல். உடலின் மந்த நிலை. சுறுசுறுப்பின்மை.*

*கடந்த பிறப்பின் நல்வினையும், புலனடக்க முயற்சியும், அசைவின்மை எனும் பிறவாமையை, இப்பிறப்பில் உருவாக்கும். கடந்த பிறப்பின் தீவினையும், புலன் அடங்காமையும், இப்பிறப்பில் சோம்பலை உருவாக்கி, இருக்கின்ற செல்வத்தை இழக்கச் செய்து விடும்.*

**372. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்றும்**
**ஆகலூ ழுற்றக் கடை.**

**பேதைப் படுக்கும், இழவு ஊழ்; அறிவு அகற்றும்,**
**ஆகல் ஊழ் உற்றக்கடை.**

*இழப்பை உருவாக்கும் தீவினை ஊழ் இயங்கத் துவங்கினால், முட்டாள்தனம் அறிவை முடக்கிப் படுக்க வைத்து விடும். செல்வமும் கரையும். ஆக்கம் உருவாக்கும் நல்வினை ஊழ் இயங்கத் துவங்கினால், அறிவு விரிவடையும், அகமும் புறமும் ஒன்றாகும், மெய் உணரப்படும். செல்வமும் குவியும்.*

*ஊழால் முட்டாள்தனமும், புத்திசாலித்தனமும், ஞானமும் வெளிப்படும்.*

**373. நுண்ணிய நூற்பல கற்பினு மற்றுந்தன்**
**உண்மை யறிவே மிகும்.**

**நுண்ணிய நூல் பல கற்பினும், மற்றும் தன்**
**உண்மை அறிவே மிகும்.**

*உண்மை = உள் + மை. உள் வண்ணம் / தன்மை. ஊழ். விதி.*

*நுட்பமான நூல்கள் பல கற்று, செய்திகள் ஏராளமாய்த் தெரிந்து இருந்தாலும், பயன்படுத்த வேண்டிய காலம் வரும்போது, அவையெல்லாம் நினைவுக்கு வராமல், ஊழ் எனும் தன் உள் தன்மையின் அதாவது நல்வினை / தீவினை விளைவே வலிமையுடன் அறிவினூடே வெளிப்பட்டு செயலை முடிக்க வைக்கும்.*

*ஊழே, அறிவையும் இயக்குகின்றது.*

**374. இருவே றுலகத் தியற்கை திருவேறு**
**தெள்ளியா ராதலும் வேறு.**

**இரு வேறு, உலகத்து இயற்கை; திரு வேறு;**
**தெள்ளியர் ஆதலும் வேறு.**

*திரு = த் + இர் + உ. தேகம் நிலையாய் உள்ளே. அசையாமை. தானே எல்லாமாதல். திரு = த் + இரு. தேகமாய் / வடிவமாய் இருத்தல். செல்வம்.*

*தெள்ளியர் = த் + எள் + இயர். தேகத்தை உயர்த்தி ஒளியாக்கும் இயல்பினர். தான் ஏதுமில்லாமல் போதல். தூயவெளி ஆதல். தெளிந்த அறிவினர்.*

*நல்வினையால் ஏற்படும் ஞானம் இரண்டு வெவ்வேறு இயல்புகளை உடையது. ஒன்று, அசையாமையால் எல்லாமாதல், மற்றொன்று, மனம் அழிந்து ஏதுமற்ற தூயவெளியாதல்.*

*அல்லது*

*நல்வினையால் இரண்டு வகையான ஆக்கம் நிகழும். புறச்செல்வம் எனும் ஆக்கம், அறிவு, ஊக்கம், உழைப்பால் வருவது. அகத்தெளிவு அல்லது ஞானம் எனும் ஆக்கம், புலனடக்கம், அறிவின் விரிவாக்கம், அகந்தையின் அழிவால் வருவது.*

*ஊழால் வருவதே செல்வமும், ஞானமும்.*

**375. நல்லவை எல்லாந் தீயவாந் தீயவும்**
**நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.**

**நல்லவை எல்லாஅம் தீய ஆம்; தீயவும்**
**நல்ல ஆம்;-செல்வம் செயற்கு.**

*நல்ல இலாபம் மிக்க தொழில் எனத் தொடங்குவதும், தன்னை மீறிய காரணங்களால், இழப்பை உருவாக்கும். செல்வ அழிவை உண்டாக்கும் எனப் பொதுவாக நினைக்கப்படும் தொழில், எதிர்பாராத விதமாக நல்ல இலாபத்தை உருவாக்கும்.*

*தொழில் இலாபமும், இழப்பும், ஊழின் சிக்கலான இயக்கத்தால், தன்னால், தன் அறிவின் பொருட்டால் மட்டும் நிகழ்வதல்ல, அது பரவலான உலகத்தின் மொத்த கூட்டு வினையால் நடந்தேறுவது. எனவே, எளிதில் முன்கூட்டி அறியமுடியாதது.*

**376. பரியினு மாகாவாம் பாலல்ல யுய்த்துச்**
**சொரியினும் போகா தம.**

**பரியினும் ஆகாவாம், பால் அல்ல; உய்த்துச்**
**சொரியினும் போகா, தம.**

*பரி = ப் + அர் + இ. கொண்டதைப் பிரித்து இருத்துதல். மறைத்துப் பாதுகாத்தல்.*

*பால் = ப் + ஆல். கொண்டது இயக்கமாதல் / நிலையாதல். ஊழ்.*

*மறைத்துப் பாதுகாத்து வைத்தாலும் செல்வம் இல்லாமல் போகும், செல்வத்தைப் புறத்தே வாரி இறைத்தாலும் தன்னை விட்டுப் போகாமல் மீண்டும் வந்துச் சேரும். செல்வம் போவதும், வருவதும், ஊழ் எனும் தீவினை அல்லது நல்வினைப் பயனால்.*

**377. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி**
**தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.**

**வகுத்தான் வகுத்த வகை அல்லால், கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.**

*வகு = வ் + அக் + உ. புறம் அகம் உயிர் மெய் வெளிப்பாடு. பொருள் மற்றும் உயிரின் இருப்பு. உலகின் இயக்கம்.*

*வகுத்தல் = பிரித்தல். காரணம் காரியம்.*

*வகை = நல்வினை, தீவினை*

*ஒருவன் கோடிக்கணக்கில் செல்வத்தைச் சேர்த்து வைத்தாலும், காரண காரியங்களால் உண்டாகும் நல்வினை தீவினையைப் பொறுத்தே, அவன் அதை அனுபவிக்க முடியும்.*

**378. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால**
**ஊட்டா கழியு மெனின்.**

**துறப்பார்மன், துப்புரவு இல்லார்- உறற்பால**
**ஊட்டா கழியும் எனின்.**

புரம் = ப் + உரம். கொண்ட வலிமை / வளம்.

பொருள் இருந்து துறந்தவர்களும், பொருளின்றி பிறவாமை வேண்டியவர்களும், புலனடக்கம் எனும் முயற்சியால், இன்பத் துன்பங்களைத் தரும் நல்வினை, தீவினைகளைப் புதியதாய்ச் சேர்க்காமல், ஏற்கனவே சேர்ந்த கருமத்தையும் கரைத்து விட்டால், ஞானம் அடைவர்.

பொருளால் வரும் சிற்றின்பம் அனுபவிக்க மட்டுமல்ல, ஞானம் மூலம் வரும் பேரின்பம் அனுபவிக்கவும், ஊழ் காரணமாகின்றது.

**379. நன்றாங்கால் நல்லவாக் காண்பவ ரன்றாங்கால்**
**அல்லற் படுவ தெவன்.**

**நன்று ஆம் கால் நல்லவாக் காண்பவர், அன்று ஆம் கால்,**
**அல்லற்படுவது எவன்?**

தன் வாழ்வில், நல்லது நடக்கும்போது தான் செய்த நல்வினையால் விளைந்தது என்று கருதுபவர், கெட்டது நடக்கும்போது மட்டும், தான் செய்த தீயவினையால் விளைந்தது எனக் கருதாமல், தனக்கு ஏன் இப்படி நிகழ்ந்தது என்று வேதனைப்படுவது எதற்கு? அதனால் எப்பயனும் இல்லை. புலனடக்கம் ஒன்றே ஊழை மாற்றும் மருந்து.

வாழ்வில் நடக்கும் நல்லதும் கெட்டதும், சென்ற அல்லது நடக்கும் பிறப்பில், நாம் செய்த அல்லது செய்யும் நல்வினை தீவினைப் பயன்தான்.

**380. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினுந் தான்முந் துறும்.**

**ஊழின் பெருவலி யா உள-மற்று ஒன்று**
**சூழினும், தான் முந்துறும்?**

ஊழைக் காட்டிலும் வலிமையானவை எவை? அறிவு, செல்வம் ஆகியவற்றால், ஊழைத் தடுக்கப் பார்த்தாலும், எதிர்பாராத விதத்தில் தோன்றி விளைவை நிகழ்த்தி விடும். இறுதியில், ஊழே வெல்லும்.

ஊழ், வாழ்வின் கதாநாயகன்.

ஊழ் அதிகாரப் பொருள் தொகுப்பு:

கடந்த பிறப்பின் நல்வினையும், புலனடக்க முயற்சியும், அசைவின்மை எனும் பிறவாமையை, இப்பிறப்பில் உருவாக்கும். கடந்த பிறப்பின் தீவினையும், புலன் அடங்காமையும், இப்பிறப்பில் சோம்பலை உருவாக்கி, இருக்கின்ற செல்வத்தை இழக்கச் செய்து விடும்.

ஊழால் முட்டாள்தனமும், புத்திசாலித்தனமும், ஞானமும் வெளிப்படும்.

ஊழே, அறிவையும் இயக்குகின்றது.

ஊழால் வருவதே செல்வமும், ஞானமும்.

நல்ல இலாபம் மிக்க தொழில் எனத் தொடங்குவதும், தன்னை மீறிய காரணங்களால், இழப்பை உருவாக்கும். செல்வ அழிவை உண்டாக்கும் என பொதுவாக நினைக்கப்படும் தொழில், எதிர்பாராத விதமாக நல்ல இலாபத்தை உருவாக்கும். எல்லாம் ஊழால்.

செல்வம் போவதும், வருவதும், ஊழ் எனும் தீவினை அல்லது நல்வினைப் பயனால்.

ஒருவன் கோடிக்கணக்கில் செல்வத்தைச் சேர்த்து வைத்தாலும், காரண காரியங்களால் உண்டாகும் நல்வினை தீவினையைப் பொறுத்தே, அவன் அதை அனுபவிக்க முடியும்.

பொருளால் வரும் சிற்றின்பம் அனுபவிக்க மட்டுமல்ல, ஞானம் மூலம் வரும் பேரின்பம் அனுபவிக்கவும், ஊழ் காரணமாகின்றது.

வாழ்வில் நடக்கும் நல்லதும் கெட்டதும், சென்ற அல்லது நடக்கும் பிறப்பில், நாம் செய்த அல்லது செய்யும் நல்வினை தீவினைப் பயன்தான்.

ஊழைக் காட்டிலும் வலிமையானவை எவை? அறிவு, செல்வம் ஆகியவற்றால், ஊழைத் தடுக்கப் பார்த்தாலும், எதிர்பாராத விதத்தில் தோன்றி விளைவை நிகழ்த்தி விடும். இறுதியில், ஊழே வெல்லும்.

# பொருட்பால்

## அரசு இயல்

அரசு = அர் + அச் + உ. அர் = பிரி. கொல். உயிர்ப்புள்ள இருப்பாக்கு. அச் = இயக்கம் இல்லாமல் செய். சத்தம் இல்லாமல் செய். அச்சம். பயம். உயிர்ப்புள்ள இயக்கமாக்கு. உ = புறம். அகம். எங்கும். தன்னுடைய இருப்புக்கும் தொடர்ச்சிக்கும் ஆபத்து என அறிந்தால்.., உணர்ந்தால்.., அரசு, மனிதனை, குடும்பத்தை, சமூகத்தை, இனத்தைப் பிரித்து விடும், தனிமைப்படுத்தும், பயமுறுத்தும், கொல்லவும் செய்யும். அரசின் அதிகாரம், அதன் எல்லைக்கு உள்ளும், வெளியும், எங்கும் பரவும்.

அதே அரசால், இருப்புக்கு உயிர்ப்பூட்டவும், இயக்கமூட்டவும் முடியும். அரசு ஆக்கவும் வல்லது, அழிக்கவும் வல்லது. அரசுக்குச் சர்வாதிகாரம் உள்ளது.

# 39.இறைமாட்சி

*இறைமாட்சி = இறை + மாட்சி. இறை = பரவு. மாட்சி = ம் + ஆட்சி. கொண்டு மூடிய, பாதுகாப்பான, அமைதியான ஆட்சி. ஆட்சி = ஆட் + சி. தொடர்ச்சியாக்கப்பட்ட இயக்கம். ஆட்சி = ஆள் + சி. இயக்கத்தை ஆளுதல் / கட்டுப்படுத்தல்.*

*இறைமாட்சி = எங்கும் பரவிய அமைதியான ஆட்சி.*

**381. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்**
**உடையா னரசரு ளேறு.**

**படை, குடி,கூழ், அமைச்சு, நட்பு, அரண், ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு.**

*படை = ப் + அட் + ஐ. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாதல். படை = ப் + அடை. எண்ணியதை அடை.*

*குடி = க் + உட் + இ. மெய் புறத்தே ஒட்டித் தொடர்ந்து நிலைத்தல். குடி, குழு, சமூகம்.*

*கூழ் = க் + ஊ + ழ். பொருண்மை பரந்தும் ஆழ்ந்தும். வளம்.*

*அமைச்சு = அமை + ச் + உ. இயக்கத்தைப் பொருத்தி வெளிப்படுத்து.*

*நட்பு = ன் + அட் + ப் + உ. நெருக்கம், ஒட்டித் தொடரல், உள்ளம் வெளிப்படுத்தல்.*

*அரண் = அர் + அண். பிரிதலும், மிகை நெருக்கமும். அகழியும் மதிலும். நதியும் மலையும்.*

*உடை = உட் + ஐ. புறத்தே ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமானது.*

*ஏறு = ஏற் + உ. மிக உயரத்தில் பிரிந்து வெளிப்படுதல். உயர்ந்தவன். சிறந்தவன்.*

*நாடு முழுவதும் பரவி, தொடர்பு அறாத படை, எல்லையில் பாதுகாப்பு இடைவெளி விடாத படை; ஓரிடமாய் நிலைத்துத் தங்கும் குடும்பங்கள்; பயிர் வளமும், கனி வளமும் மிக்க நிலம்; வளங்களை மேம்படுத்தி வருவாயை அதிகரிக்கும் அமைச்சர்கள்; நெருக்கமாய் உடனிருந்து வெளிப்படையாய்ப் பேசும் நண்பர்கள்; நதியும் மலையும் கொண்ட நாடு, அகழியும் மதிலும் கொண்ட நகரம் ஆகிய ஆறினையும் தொடர்ச்சியாய்க் கொண்ட அரசன், அரசு, பிற எல்லா அரசர்களிலும், அரசுகளிலும் மிக உயர்ந்து தனிச்சிறப்புடன் விளங்கும்.*

**382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தற் கியல்பு.**

**அஞ்சாமை, ஈகை, அறிவு ஊக்கம், இந் நான்கும்**
**எஞ்சாமை-வேந்தற்கு இயல்பு.**

*அஞ்சாமை = அன் + ச் + ஆமை. இல்லாமை இயக்கம் அடங்குதல்.*

*எஞ்சாமை = என் (ள்) + ச் + ஆமை. சிறுகாமை. குறையாமை.*

*வேந்தன் = அகமும் புறமும் மிக உயர்ந்தவன்*

*வெளிப்பகைக்கோ அல்லது உட்பகைக்கோ பயப்படாமை, தேவைப்படுபவர்களுக்கு பொருளுதவுதல், அகத்தையும் புறத்தையும் அறிதல், ஆக்கத்திற்கான மன உந்துதல் மற்றும் முயற்சி ஆகிய நான்கும் குறையாமை அரசனுக்கு, அகமும் புறமும் மிக உயர்ந்த அரசாள்பவருக்குப் இயல்பான குணங்களாக இருக்க வேண்டும்.*

**383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு.**

**தூங்காமை, கல்வி, துணிவுடைமை, இம் மூன்றும்
நீங்கா-நிலன் ஆள்பவர்ககு.**

*விழிப்புணர்வுடன் இருத்தல், நிலைத்து கூர்ந்து சிந்தித்தல், ஆக்கம் அழித்தலை முன்கூட்டி செய்தல் ஆகிய மூன்று குணங்களும், நிலம் ஆள்பவர்க்கு, நிலையாய் இருக்க வேண்டும்.*

**384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.**

**அறன் இழுக்காது, அல்லவை நீக்கி, மறன் இழுக்கா
மானம் உடையது-அரசு.**

*மானம் = ம் + ஆன் + அம். கொண்டு மூடியத் தன்மை. மன அமைதி. பாதுகாப்பு.*

*அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் ஆகியவை இன்றி மன அமைதியுடன் இருந்து, விழிப்புணர்வுடன் இருத்தல், நிலைத்துக் கூர்ந்து சிந்தித்தல், ஆக்கம் அழித்தலை நேரடியாக, வெளிப்படையாக முன்கூட்டி செய்தல் (தூங்காமை, கல்வி, துணிவுடைமை) ஆகியவற்றால், நாட்டிற்கும் மக்களுக்கும் பாதுகாப்பைத் தருபவன் அரசன்.*

**385. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.**

**இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்த
வகுத்தலும், வல்லது-அரசு.**

*இயற்றல் = இயல் + அற்றல். இயற்கையான தடைகளை அகற்றுதல். மலை, காடு திருத்திப் பாதுகாப்பு வழங்கல், நீர்வளப் பணிகளான ஆற்றுக் கால்வாய், ஏரி, குளம், குட்டை உருவாக்குதல், கடல் தொழில்*

*செய்வோர்க்கு கருவிகளும், பாதுகாப்பும் தருதல், நீண்ட சாலைகள் அமைத்தல், பாதுகாப்பு அளித்தல்.*

*ஈட்டல் = ஈடு + அல். திட்டம் செயல்பாட்டினால் வருவாய்.*

*இயற்கையான தடைகளைச் சீர்திருத்தி (மலை, காடு திருத்தி பாதுகாப்பு வழங்கல், நீர்வளப் பணிகளான ஆற்றுக் கால்வாய், ஏரி, குளம், குட்டை உருவாக்குதல், கடல் தொழில் செய்வோர்க்குக் கருவிகளும், பாதுகாப்பும் தருதல், நீண்ட சாலைகள் அமைத்தல், பாதுகாப்பு அளித்தல்), மேற்கூறிய திட்டம் செயல்பாட்டால் வருவாய் ஈட்டி, களவு, ஊழல், இலஞ்சம் ஆகியவற்றிலிருந்து வருவாயைக் காப்பாற்றி, நிதியை மீண்டும் தேவையான துறைகளுக்கு, தேவையான அளவுக்கு ஒதுக்கும் அறிவும், உறுதியும் உடையதே அரசு.*

**386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்**
**மீக்கூறு மன்ன னிலம்.**

**காட்சிக்கு எளியன், கடுஞ் சொல்லன் அல்லனேல்,**
**மீக்கூறும், மன்னன் நிலம்.**

*காட்சிக்கு எளிமையாகவும், கோபமான சொற்களைப் பேசாதவனுமாக மன்னன் இருந்தால், மக்கள் அவனை மிகவும் புகழ்ந்து பேசுவார்கள்.*

**387. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்திவ் வுலகு.**

**இன் சொலால் ஈத்து, அளிக்க வல்லாற்குத் தன் சொலால்**
**தான் கண்டனைத்து, இவ் உலகு.**

*நல்ல சொற்களுடன், வருவாயைப் பிரித்து அளிக்கும் உறுதி உடையவர் கூறிய சொல்படியே, கண்ட கனவுப் படியே, நாடும் மக்களும் நடப்பர்.*

**388. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்**
**கிறையென்று வைக்கப் படும்.**

**முறை செய்து காப்பாற்றும் மன்னவன், 'மக்கட்கு**
**இறை' என்று வைக்கப்படும்.**

*நடைமுறைகள் அமைத்து, நடுவுநிலை தவறாமல் மனசாட்சியுடன் மக்களைக் காப்பாற்றும் அரசன், இறைவன் எனும் நிலைக்கு உயர்த்தப்பட்டு மதிக்கப்படுவான்.*

**389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீட் டங்கு முலகு.**

**செவி கைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக்கீழ்த் தங்கும், உலகு.**

*காதுகள் கசக்கும் சொற்களையும் பொறுத்துக் கொள்ளும் பண்புடைய வேந்தன் இருக்கிறான் என்றால், அவன் ஜனநாயகத்தை அனுமதிக்கிறான் என்று பொருள்; தன் ஆட்சியில் இருக்கும் குறைகளை அறிந்து, அவற்றைக் களைய முன்வருகிறான் என்று பொருள். அத்தகைய மன்னனின் ஆட்சியின்கீழ் மக்கள் இடம் பெயராமல் நிலைத்து வாழ்வர்.*

**390. கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க் கொளி.**

**கொடை, அளி, செங்கோல், குடி-ஓம்பல், நான்கும்**
**உடையான் ஆம், வேந்தர்க்கு ஒளி.**

*நன்கொடை, அன்பளிப்பு, நேர்மை தவறா நீதி, குடிமக்கள் நலம் காத்தல் ஆகிய நான்கையும் உடையவன், பிற வேந்தர்களுக்கு வழிகாட்டியாய் விளங்குவான்.*

*இறைமாட்சி அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*படை, மக்கள், வளம், நிர்வாகம், ஆபத்தில் உதவும் நண்பர்கள், இயற்கை செயற்கை அரண்கள் ஆகிய ஆறையும் உடைய அரசன், மற்ற அரசர்களில் இடையே, சிறந்து விளங்குவான்.*

*வெளிப்பகைக்கோ அல்லது உட்பகைக்கோ பயப்படாமை, தேவையானவர்களுக்குப் பொருள் உதவுதல், நாட்டு நிலைமைகள் தொடர்ந்து அறிதல், ஆக்கத்திற்கான மன உந்துதலுடைய முயற்சி ஆகிய நான்கும் குறையாமை, அரசனின், அரசாள்பவரின் குணங்களாக இருக்க வேண்டும்.*

*விழிப்புணர்வுடன் இருத்தல், நிலைத்துக் கூர்ந்து சிந்தித்தல், ஆக்கம் அழித்தலை முன்கூட்டி செய்தல் ஆகிய மூன்று குணங்களும், நிலம் ஆள்பவர்க்கு, நிலையாய் இருக்க வேண்டும்.*

*அறம் தவறாமல், தீங்கானவற்றை நீக்கி, மறம் தவறாமல், அதிகாரம் செலுத்துவது, அரசு.*

*இயற்கைத் தடைகளை அகற்றலும், விளைந்த வளத்தால் வருவாய் ஈட்டலும், ஈட்டிய வருவாயைப் பாதுகாத்தலும், பாதுகாத்த வருவாயைப் பிரித்தளித்தலும், செய்யக் கூடியது, அரசு.*

*காட்சிக்கு எளிமையாகவும், கோபமான சொற்களைப் பேசாதவனுமாக மன்னன் இருந்தால், மக்கள் அவனை மிகவும் புகழ்ந்துப் பேசுவார்கள்.*

*நல்ல சொற்களுடன், வருவாயைப் பிரித்து அளிக்கும் உறுதி உடையவர் கூறிய சொல்படியே, கண்ட கனவுப் படியே, நாடும் மக்களும் நடப்பர்.*

நடைமுறைகள் அமைத்து, நடுவுநிலை தவறாமல் மனசாட்சியுடன் மக்களைக் காப்பாற்றும் அரசன், இறைவன் எனும் நிலைக்கு உயர்த்தப்பட்டு மதிக்கப்படுவான்.

காதுகள் கசக்கும் சொற்களையும், பொறுத்துக் கொள்ளும் பண்புடைய வேந்தன், இருக்கிறான் என்றால், அத்தகைய மன்னனின் ஆட்சியின் கீழ், மக்கள் இடம் பெயராமல், நிலைத்து வாழ்வர்.

நன்கொடை, அன்பளிப்பு, நேர்மை தவறா நீதி, குடிமக்கள் நலம் காத்தல் ஆகிய நான்கையும் உடையவன், பிற வேந்தர்களுக்கு வழிகாட்டியாய் விளங்குவான்.

# 40. கல்வி

*கல்வி = கல் + வி. கல் = க் + அல். பொருண்மை / மெய் அதிர்வின்மை / அசைவின்மை. வி = வ் + இ. புறமும் அகமும் நிலைத்தல். கல்வி = கல்போல், உடலும் மனமும் அசைவற்று இருந்து, புறமும் அகமும் முழுமையாகி, ஒருமையாகி நிலைத்தல்.*

**391. கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க வதற்குத் தக.**

**கற்க, கசடு அற, கற்பவை; கற்றபின்,**
**ந்றக, அதற்குத் தக.**

*கற்க = க் + அற் + க் + அ. கற்க = கல் + க் + அ. கல் போல் அசைவற்று ஆகுக, மெய்யும் உயிரும். கசடு = க் + அச் + அட் + உ. மெய்யில் இயக்கமுடையதாயும், ஒட்டித் தொடர்ந்தும் வெளிப்படுவது. புலன் உணர்வுகளால் உருவாக்கப்படுவது. அகந்தை. தான், தனது எனும் எண்ணம். மனத்தின் பிற எல்லா இயக்கங்களுக்கும் அகந்தையே அடிப்படை. எல்லா வினைகளுக்கும் காரணம். மனத்தின் கண் மாசு.*

*கற்பவை = கற்பு + அவை. கற்பு = கல் + ப் + உ. கல்போல் மனத்துள் இருப்பது. தன் இயக்கம் அற்றவை, மன விருத்திகளான, ஆசை, கோபம், எண்ணம், புத்தி முதலியவை. புலனடக்கத்தால், அழிவன.*

*நிற்க = ன் + இற் + க் + அ. நிற்க = நில் + க. மனம் அழிந்தப்பின், இறுதியில் எஞ்சுவது சலனமற்ற தூயவெளி அல்லது சித்தம். சித்தமாக நிலைத்து விடு.*

*அதற்குத் தக = இறைக்கு நிகராக.*

*உடல், அக அசையாமையில், மனத்தின் இயக்கத்தை நிறுத்தி, தூயவெளியான சித்தத்தில், இறைக்கு நிகராக.*

*புலனடக்கத்தால், கல்லைப் போன்று உடலும் உயிரும், அசைவற்று இருந்தால், அகந்தை எனும் மனக் கண்ணில் விழுந்த மாசும், மாசின் ஊடே தோன்றிய மனக் காட்சிகளான, ஆசை, எண்ணம், புத்தி முதலியனவும் அழிய, எஞ்சும் சலனற்ற தூயவெளியான சித்தத்தில், இறைக்கு நிகராக, நிலைத்து விடு.*

**392. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழு முயிர்க்கு.**

**'எண்' என்ப, ஏனை 'எழுத்து' என்ப, இவ் இரண்டும்**
**'கண்' என்ப, வாழும் உயிர்க்கு.**

*எண்ணும், அதன் அடிப்படையில் அமைந்த எழுத்தும், புறமும் அகமும் ஆழ்ந்து அறியும் மனிதர்க்கு, கண்கள் போன்றவை.*

எண் இருத்தலின், உயிரின், வாழ்வின் அடிப்படை.

எண் என்பதுதான், புலன் உணர்வின், புலன் அறிவின் அடிப்படை. உணரப்படும் பல்வேறு அதிர்வு அலைகளின் அளவுகளும் (அளவும் எண்ணின் அடிப்படையில் ஆனது) எண்ணிக்கைகளுமே, அவற்றிற்கு இணையான வித்தியாசமான பதிவுகளை மனத்தில் ஏற்படுத்துகின்றன. தீதும் நன்றும் அறியப்படுகின்றன.

எழுத்தும், எண்ணின் அடிப்படையில் அமைந்ததுதான். எழுத்தின் ஒலி வடிவும், வரி வடிவும், எண்ணின் அடிப்படையில் அமைந்தவையே. ஒலி அதிர்வு அலைகளின் அமைப்பும், வெளி வடிவ அளவுகளின் நிர்ணயமும், எழுத்தின் ஒலி மற்றும் வரி வடிவத்தைத் தீர்மானிக்கின்றன.

புறத்தை அறிய பெரும்பாலும் உதவுவது எண். அகத்தை அறிய பெரும்பாலும் உதவுவது எழுத்து.

**393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு**
**புண்ணுடையர் கல்லா தவர்.**

**கண் உடையர் என்பவர் கற்றோர்; முகத்து இரண்டு**
**புண் உடையர், கல்லாதவர்.**

கற்றோர் மட்டுமே, கண்ணுடையவர். கல்லாதவரோ, முகத்தில் இரண்டு புண்களை உடையவர்.

புலன்கள், உடலைக் கிழித்தே, புண்கள்போல, வெளிப்பட்டன.

புலன் உறுப்புகளின் தோற்றமே, உயிர்கொண்ட உடல், புறத்தை அறிவதற்காகத்தான்.

கற்றவர்கள், கண்களின் பயனான அறிவை, எண் மற்றும் எழுத்து மூலமாக, அடைபவர்கள். கல்லாதவர்கள், கண்களால் கண்டவைகளைப் பகுத்துணராமல், உடலுக்கும் உயிருக்கும், வலியையும் துன்பத்தையும் வரவழைத்துக் கொள்வர். அதனால், கண்கள், கல்லாதவர்க்குப் புண்கள்.

**394. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்.**

**உவப்பத் தலைக்கூடி, உள்ளப் பிரிதல்**
**அனைத்தே-புலவர் தொழில்.**

உவப்பம் = உ + அப் + அம். புறத்தே தன் மனத்தை வெளிப்படுத்தும் தன்மை. புறத்திலிருந்து தன் அகம் கொள்ளும் தன்மை. எண்ணம், கருத்து, சிந்தனை பரிமாற்றம்.

உள்ளம் = உள் + அம். புறத்தே / உள்ளே மிகையாக்கும் தன்மை. விரிவாய் எண்ணுதல் / சிந்தித்தல்.

கருத்துப் பரிமாற்றமும், விரிவாக்கும் அல்லது விமரிசமாக்கும் சிந்தனையுமே, அறிஞர்களின் உழைப்பும் வாழ்வும் ஆகும்.

**395. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையாரே கல்லா தவர்.**

**உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்;
கடையரே, கல்லாதவர்.**

*கடையார் = க் + அடையார். பொருண்மை / மெய்யை அடையாதவர்.*

*செல்வம் உடையவர் முன், செல்வம் இல்லாதவர் நின்று, பொருளைப் பெறுவதைப் போல், கற்றவர் முன், கற்பவர் பணிந்து, அறிவைப் பெறுவர். கல்லாதவரோ, பொருளையும் அடையாமல், மெய்ப்பொருளையும் உணராமல் போவர்.*

**396. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.**

**தொட்டனைத்து ஊறும், மணற் கேணி;-மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும், அறிவு.**

*மணல் = மண் + அல். மண் மேலும் கீழுமாய், அலையைப் போல்.*

*கேணி = க் + ஏண் + இ. பொருண்மை மிக உயர்ந்து மிக நெருக்கமாய் நிலைத்தல்.*

*மாந்தர் = ம் + ஆன் + த் + அர். அமைதியான தேகத்தினர். புலனடக்கத்தால் அகந்தையும், மனமும் அழிந்தவர்.*

*தொட்டவுடன், நீர் புறம் பிரியும் ஆற்று மணல் கேணியைப் போல், புலனடக்கத்தால் அகந்தையும், மனமும் அழிந்தவர், அசைவற்றதும், உள்ளிருந்துப் பரவும் மெய்யறிவு.*

**397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.**

**யாதானும் நாடு ஆமால்; ஊர் ஆமால்; என், ஒருவன் சாம்
துணையும் கல்லாதவாறு?**

*கற்றவனுக்கு, எந்த நாடும் தன் நாடாக, எந்த ஊரும் அயல் ஊராக இல்லாததைப் பார்த்தும், எப்படி ஒருவனால், சாகின்ற வரையும், கல்லாமல் இருக்க முடிகின்றது?*

**398. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.**

**ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து.**

*ஒருமைக்கண் = புறமும் அகமும் ஒன்றிய முழுமையான மனக்கண்.*

*எழுமை = வரும் பிறப்பு.*

*ஏமாப்பு = ஏம் + ஆப் + உ. மிக உயர்ந்த அமைதியும், அறிவும் உள்ளதாய். பாதுகாப்பு.*

*புறமும் அகமும் ஒன்றிய முழுமையான மனக்கண்ணால் கற்ற கல்வி, ஒருவர்க்கு வரும் பிறப்பிலும், மிக உயர்ந்த அமைதியையும், அறிவையும் பாதுகாப்பையும் தரும்.*

**399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.**

**தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு,
காமுறுவர், கற்று அறிந்தார்.**

*தாம் கற்பதால் அடையும் இன்பத்தைக் கண்டு உலகமும் இன்பம் அடைவதைப் பார்த்து, மேலும் மேலும் கற்க மிகுந்த ஆசை கொள்வர், கற்றறிந்தவர்கள்.*

**400. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.**

**கேடு இல் விழுச் செல்வம் கல்வி; ஒருவற்கு
மாடு அல்ல, மற்றையவை.**

*விழு = வ் + இழ் + உ. புறமும் அகமும் நிலையாய் ஆழ்ந்து உள்ளே.*

*மாடு = ம் + ஆட் + உ. கொண்டு மூடியதை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது.*

*கல்வி, ஒருவற்கு அழிவற்ற நிலையான செல்வம். கல்வியைத் தவிர, மற்ற எச்செல்வமும், இவ்வுலகைப் பிரிந்த பின்பும், பின்தொடர்ந்து வராது.*

*கல்வி அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*உடல், அக அசையாமையில், மனத்தின் இயக்கத்தை நிறுத்தி, தூய வெளியான சித்தத்தில், இறைக்கு நிகராகு.*

*எண்ணும், அதன் அடிப்படையில் அமைந்த எழுத்தும், புறமும் அகமும் ஆழ்ந்து அறியும் மனிதர்க்கு, கண்கள் போன்றவை.*

*கற்றோர் மட்டுமே, கண்ணுடையவர். கல்லாதவரோ, முகத்தில் இரண்டு புண்களை உடையவர்.*

*கருத்துப் பரிமாற்றமும், விரிவாக்கும் அல்லது விமரிசமாக்கும் சிந்தனையுமே, அறிஞர்களின் உழைப்பும் வாழ்வும் ஆகும்.*

*செல்வம் உடையவர் முன், செல்வம் இல்லாதவர் நின்று, பொருளைப் பெறுவதைப் போல், கற்றவர் முன், கற்பவர் பணிந்து, அறிவைப் பெறுவர்.*

*கல்லாதவரோ, பொருளையும் அடையாமல், மெய்ப்பொருளையும் உணராமல் போவர்.*

*தொட்டவுடன், நீர் புறம் பிரியும் ஆற்று மணல் கேணியைப் போல், புலனடக்கத்தால் அகந்தையும், மனமும் அழிந்தவர், அசைவற்றதும், உள்ளிருந்து பரவும் மெய்யறிவு.*

*கற்றவனுக்கு, எந்த நாடும் தன் நாடாக, எந்த ஊரும் அயல் ஊராக இல்லாததைப் பார்த்தும், எப்படி ஒருவனால், சாகின்ற வரையும், கல்லாமல் இருக்க முடிகின்றது?*

*புறமும் அகமும் ஒன்றிய முழுமையான மனக்கண்ணால் கற்ற கல்வி, ஒருவர்க்கு வரும் பிறப்பிலும், மிக உயர்ந்த அமைதியையும், அறிவையும் பாதுகாப்பையும் தரும்.*

*தாம் கற்பதால் அடையும் இன்பத்தைக் கண்டு உலகமும் இன்பம் அடைவதைப் பார்த்து, மேலும் மேலும் கற்க மிகுந்த ஆசை கொள்வர், கற்றறிந்தவர்கள்.*

*கல்வி, ஒருவற்கு அழிவற்ற நிலையான செல்வம். கல்வியைத் தவிர, மற்ற எச்செல்வமும், இவ்வுலகைப் பிரிந்த பின்பும், பின்தொடர்ந்து வராது.*

## 41. கல்லாமை

*கல்லாமை = கல் + ஆ + மை. அசையாமை ஆகாமை.*

**401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.**

**அரங்கு இன்றி வட்டு ஆடியற்றே-நிரம்பிய
நூல் இன்றிக் கோட்டி கொளல்.**

*அரங்கு = அர் + அங்கு. பிரிந்த இடம். தனி இடம்.*

*வட்டாடு = வட்டு + ஆடு. வட்டமான அல்லது உருண்டையான பகடை கொண்டு சூதாடு.*

*நிரம்பிய நூல் = முழுமையான அறிவு.*

*கோட்டி = சபை.*

*கொளல் = ஏற்றுக் கொள்ளுதல்.*

*ஒதுக்குப் புறமான இடத்தில் ஆடும் சூதாட்டத்தை, ஊர் நடுவே ஆடினால், விரட்டி அடிக்கப்படுவது போல், இறையுணர்வை அடையும் முழுமையான அறிவின்றி, தான் சொல்வதை ஏற்றுக் கொள்ளும்படி, கற்றறிந்தவர் சபையில் உரைப்பவர், விரட்டி அடிக்கப்படுவார்.*

**402. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.**

**கல்லாதான் சொல் காமுறுதல், முலை இரண்டும்
இல்லாதாள் பெண் காமுற்றற்று.**

*கல்லாதான் = கல் + ஆத் + ஆன். கல் போன்ற அசையாத மனநிலையை அடையாதவன். மெய்யுணராதவன்.*

*பெண் = ப் + எண். கொண்டதை உயர்த்தி / வளர்த்து / பெருக்கி மிகுந்த நெருக்கமாக்குதல் / ஒன்றிணைத்தல். குழந்தை உண்டாகிப் பெறுதல். பெண்மை = தாய்மை.*

*மெய்யுணராதவன், கற்றறிந்தோர் சபையில் பேச விரும்புவது, உடல் வளர்ச்சி அடையாதவள், பிள்ளை பெற விரும்புவதைப் போன்றதாகும்.*

**403. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.**

**கல்லாதவரும் நனி நல்லர்-கற்றார்முன்
சொல்லாது இருக்கப்பெறின்.**

*கற்றவர் முன் வந்து, 'புதியது' என்று ஒன்றைச் சொல்லாமல் இருந்தால், மெய்யுணராத கல்லாதவர்கூட மிகவும் நல்லவர்தான்.*

**404. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினும்**
**கொள்ளா ரறிவுடை யார்.**

**கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும்,**
**கொள்ளார், அறிவு உடையார்.**

*ஒட்பம் = ஒண் + ப் + அம். முழுவதும் மிக நெருக்கமாய்க் கொண்டிருக்கும் தன்மை. மெய்யுணரும் வழி.*

*கழிய = க் + அழிய. மெய் அழிய. புலனடங்க.*

*மெய்யுணராதவர், புலனடக்கி மெய்யுணரும் வழியைக் கூறினாலும், அறிவுடையவர்கள், அதை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.*

**405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து**
**சொல்லாடச் சோர்வு படும்.**

**கல்லா ஒருவன் தகைமை, தலைப்பெய்து**
**சொல்லாட, சோர்வு படும்.**

*சபைத் தலைவர், பேசுபவரை அறிமுகம் செய்து, பேசப் போகும் தலைப்பைக் கூறியவுடன், கல்லாத ஒருவன், தன் திறமை குன்ற, துணிவு இழந்து, பேச்சற்றுப் போவான்.*

**406. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்**
**களரனையர் கல்லா தவர்.**

**உளர் என்னும் மாத்திரையர் அல்லால், பயவாக்**
**களர் அனையர்-கல்லாதவர்.**

*உள என்று அஃறிணையாகவே கருதப்படுவர், விளைவைத் தராத உயிர்ப்பற்ற களர் நிலத்தைப் போன்ற, கல்லாதவர்கள்.*

**407. நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்**
**மண்மாண் புனைபாவை யற்று.**

**நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம் மண்**
**மாண் புனை பாவை அற்று.**

*நுண்மையாக மிக நெருக்கமாக உள்ள தூய வெளியில், ஆழ்ந்து ஐக்கியமாகி, மெய் உணராமல், கற்றோர் அவையில், அழகுடையவனாயும், நல்லவனாயும் இருப்பது, மண்ணால் மிக நெருக்கமாக உருவாக்கிய,*

*உயிரற்ற அழகிய பொம்மையைப் போன்றதாகும். பார்க்கலாம், இரசிக்கலாம், ஆனால், மெய்யுணரும் வழி கிடைக்காது.*

**408. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே**
**கல்லார்கட் பட்ட திரு.**

**நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே-**
**கல்லார்கண் பட்ட திரு.**

*நல்லவர்களிடம் ஏற்படும் வறுமையைக் காட்டிலும், கல்லாதவர்களிடம் சேரும் செல்வம் மிகுந்த தீங்கை விளைவிக்கும்.*

**409. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்**
**கற்றா ரனைத்திலர் பாடு.**

**மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார், கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்து இலர் பாடு.**

*பாடு = ப் + ஆட் + உ. தூயவெளியான உயிரை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது.*

*செல்வமிக்க குடும்பத்தில் பிறந்தவராய் இருந்தும், கற்காதவர், ஏழைக் குடும்பத்தில் பிறந்தவராய் இருந்தும், கற்றவருக்கு, சமமாக மாட்டார்.*

*ஏனெனில், கல்வியானது ஒருவர்க்கு இப்பிறப்பிலும் உதவும், இறந்த பிறகும், உயிரை ஒட்டித் தொடர்ந்து துணையாகச் செல்லும். கற்றவரே உயர்ந்தவர். கற்காதவரே தாழ்ந்தவர்.*

**410. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்**
**கற்றாரோ டேனை யவர்.**

**விலங்கொடு மக்கள் அனையர்-இல குநூல்**
**கற்றாரொடு ஏனையவர்.**

*இலங்கு = இல் + அங்கு. இன்மை இடம். தூய வெளி.*

*விலங்கும், கற்காத மனிதரும், இன்றும் சமமே. தூயவெளியை உணரவைக்கும் நூலைக் கற்றவர், தேவரோடும், தெய்வத்தோடும், சித்தரோடும் சமமாவர்.*

*நன்மை செய்வதிலும், தீமை செய்வதிலும், விலங்கும் மனிதரும் இயல்பில் சமமே. கல்விதான் விலங்கையும் மனிதரையும் வேறுபடுத்துகின்றது, மனிதனை உயர்த்துகின்றது. விலங்கு, கற்க முடியாததால், தன்னிலையிலேயே நிற்கின்றது.*

**கல்லாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

ஒதுக்குப் புறமான இடத்தில் ஆடும் சூதாட்டத்தை, ஊர் நடுவே ஆடினால், விரட்டி அடிக்கப்படுவது போல், இறையுணர்வை அடையும் முழுமையான அறிவின்றி, தான் சொல்வதை ஏற்றுக் கொள்ளும்படி, கற்றறிந்தவர் சபையில் உரைப்பவர், விரட்டி அடிக்கப்படுவார்.

மெய்யுணராதவன், கற்றறிந்தோர் சபையில் பேச விரும்புவது, உடல் வளர்ச்சி அடையாதவள், பிள்ளை பெற விரும்புவதைப் போன்றதாகும்.

கற்றவர் முன் வந்து, 'புதியது' என்று ஒன்றைச் சொல்லாமல் இருந்தால், மெய்யுணராத கல்லாதவர்கூட மிகவும் நல்லவர்தான்.

மெய்யுணராதவர், புலனடக்கி மெய்யுணரும் வழியைக் கூறினாலும், அறிவுடையவர்கள், அதை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

சபைத் தலைவர், பேசுபவரை அறிமுகம் செய்து, பேசப்போகும் தலைப்பைக் கூறியவுடன், கல்லாத ஒருவன், தன் திறமை குன்ற, துணிவு இழந்து, பேச்சற்றுப் போவான்.

உள என்று அஃறிணையாகவே கருதப்படுவர், விளைவைத் தராத உயிர்ப்பற்ற களர் நிலத்தைப் போன்ற, கல்லாதவர்கள்.

நுண்மையாக மிக நெருக்கமாக உள்ள தூய வெளியில், ஆழ்ந்து ஐக்கியமாகி, மெய் உணராமல், கற்றோர் அவையில், அழகுடையவனாயும், நல்லவனாயும் இருப்பது, மண்ணால் மிக நெருக்கமாக உருவாக்கிய, உயிரற்ற அழகிய பொம்மையைப் போன்றதாகும். பார்க்கலாம், இரசிக்கலாம், ஆனால், மெய்யுணரும் வழி கிடைக்காது.

நல்லவர்களிடம் ஏற்படும் வறுமையைக் காட்டிலும், கல்லாதவர்களிடம் சேரும் செல்வம் மிகுந்த தீங்கை விளைவிக்கும்.

செல்வமிக்க குடும்பத்தில் பிறந்தவராய் இருந்தும், கற்காதவர், ஏழைக் குடும்பத்தில் பிறந்தவராய் இருந்தும், கற்றவருக்கு, சமமாக மாட்டார்.

விலங்கும், கற்காத மனிதரும், இன்றும் சமமே. தூயவெளியை உணரவைக்கும் நூலைக் கற்றவர், தேவரோடும், தெய்வத்தோடும், சித்தரோடும் சமமாவர்.

# 42. கேள்வி

*கேள்வி = கேள் + வி. கேள் முழுமையாய் நிலைத்ததை. கேள் = க் + ஏள். மெய் / பொருண்மை மிக உயர்ந்து மிகையாதல். நுண்ணிய பொருண்மையின் அதிர்வாதல். ஓம். அறச்சொல். இசை. கேள்வி = முழுமையான நிலையான இசை. காட்சி.*

**411. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.**

**செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம்; அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.**

*செல்வம் = செல் + வ் + அம். வ = உ + அ. செல்வம் = செல்வம் புறமும் அகமும் செல்லும் தன்மை உடையது. நிலையற்றது. செல்வம் புறமும் அகமும் இயக்கத்தை ஏற்படுத்துவது.*

*கல்வி எனும் செல்வத்தை, புலன்களின் மூலமாக பெறுகிறோம். செவிப்புலன் வழியாகப் பெறும் செல்வமே, பிற புலன்களின் வழியாக வரும் செல்வத்திற்கு எல்லாம் அடிப்படையாகின்றது, முக்கியமாகின்றது. செவிப்புலனின் அமைதி உணர்வே, இறுதியில், மெய்யுணர்வாகின்றது.*

*அறிவை, செவி, கண், மூக்கு, வாய் மற்றும் மெய் ஆகிய ஐந்து புலன்கள் மூலமும் பெறுகின்றோம். குழந்தையாய் பிறக்கும்போது, செவிப்புலன் மூலமே, முதன் முதலில் உணரத் தொடங்குகிறோம். மற்றப் புலன்கள் உணரவும், பகுத்துணரவும் செவிப்புலன் உதவுகின்றது.*

*ஐம்புலன்களிலும், கண் மற்றும் செவிப் புலன்களே அறிவை, கல்வியைப் பெறுவதில் பெரும் பங்காற்றுகின்றன. அதிலும் குறிப்பாக, செவிவழிக் கல்வி, எளிதில் அடையக் கூடியதால், எல்லாவற்றைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் பெறுகின்றது.*

*புற உலகை அறிதலிலும், மெய்யுணர்தலிலும், செவிப்புலனே மிக முக்கியமாய் உள்ளது. 'ஒலியின் நிலை (அசையாமை, அதிர்வின்மை) உணர்ந்து உயிர் உணர', செவிப்புலனே தேவை. செவிக்கல்வி முதலும் முடிவுமாய் உள்ளது. ஐந்து மூலங்களில், வெளியே முதன்மையானது, பிற நான்கு மூலங்களையும் உள்ளடக்கியது. வெளியின் பொருண்மையான வெளிப்பாடாகவே, செவி உள்ளது.*

*ஒலியின் அடக்கமும், மெய்யை உணர்தலும், தூயவெளியின் நிலையான இருப்பாகின்றது.*

**412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.**

**செவிக்கு உணவு இல்லாத போழ்து, சிறிது,
வயிற்றுக்கும் ஈயப்படும்.**

*செவி = ச் + எவ் + இ. இயக்கம் / சத்தம் உயர்ந்து முழுமையாகி / சமநிலையாகி இருப்பது. புறத்திற்கு ஏற்றவாறு உடலின் காற்று அழுத்த அளவை மாற்றி சமநிலைப்படுத்துவது. செவிக்குள் நடக்கும் மேலும் கீழுமான கடல் கொந்தளிப்பு போன்ற இயக்கமே, புற ஒலியையும் அக ஒலியையும் கிரகித்து வேற்படுத்தி உணர்த்துகின்றது.*

*செவிப்புலன் அமைதியை உணராதபோது, சிறிதளவு உணவு வயிற்றுக்கும் தரலாம்.*

*செவியின் உணவு, கடைசியில், அமைதியே. அந்த அமைதியே உயிரின் ஆற்றல் இயங்குவதை உணர்த்தும். உடலும், மற்ற எல்லா புலன்களும், மனமும் அடங்கும் போதுதான், அமைதியே, சத்தமின்மையே உணரப்படும். உடலும், புலன்களும், மனமும் அடங்கி இருக்கும்போது, உடலுக்கு அதிகமான ஆற்றல் தேவைப்படாது. எனவே சிறிது உணவு இருந்தாலே போதும்.*

**413. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்**
**ஆன்றாரோ டொப்பர் நிலத்து.**

**செவியுணவின் கேள்வி உடையார், அவியுணவின்**
**ஆன்றா ராடு ஒப்பர், நிலத்து.**

*அவி = அவ் + இ. புறமும் அகமும் இன்றி நிலைத்தல். அசையாமை. அழிதல்.*

*செவியின் அமைதியால் படரும் ஒளிக்காட்சியைத் / இசையைத் தொடர்ந்து கொண்டவர், வானில், அசையாமையை உணவாய்க் கொண்ட ஒருமையானவர்க்கு, முழுமையானவர்க்கு, இப்பூமியில் இணையாவர்.*

**414. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவன்**
**ஒற்கத்தி னூற்றாந் துணை.**

**கற்றிலன் ஆயினும் கேட்க; அஃது ஒருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்று ஆம் துணை.**

*ஒற்கம் = ஒல் + க் + அம். மெலிவு. வறுமை. இறப்பு.*

*ஒருவன் கற்காமல் இருந்தாலும், செவிப்புலன் உணர்வை, அமைதியைக் கேட்க. அது, இறப்பின்போது, அசையாமையைப் பற்றிக் கொள்ள, உதவும்.*

**415. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே**
**ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.**

**இழுக்கல் உடை உழி ஊற்றுக்கோல் அற்றே-**
**ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல்.**

இழுக்கல் = இழ் + உக் + அல். நிலையிலிருந்து கீழாய் புறத்தே (முன்னோக்கிய) மெய் அதிர்தல். வழுக்கல்.

உழி = உழ் + இ. புறத்தே / உள்ளே / கீழே ஆழத்தில் இருத்தல். முன்செல்லும் பாதை. வழி = வழ் + இ. முன்பின் செல்லும் பாதை. அழி = அழ் + இ. உள்செல்லும் பாதை.

வழுக்கும் இயல்புடைய பள்ளத்தில் இறங்கும் போது, கீழே விழாமல் தடுக்கும் ஊன்றுக்கோல் போல, புலனடக்கிய ஞானியரின் அறவுரை, வாழ்வின் சரிவுக் காலத்தில், அழிவைத் தடுக்கும்.

**416. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும்.**

**எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும்.**

எவ்வளவு கொஞ்சமாக இருந்தாலும், செவியை நெருங்கி அதிர்வதைக் கேளுங்கள். அந்த அளவுக்கு உயிருடன் நெருங்கி உயர முடியும்.

**417. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லாரிழைத்துணர்ந்**
**தீண்டிய கேள்வி யவர்.**

**பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார்-இழைத்து உணர்ந்து**
**ஈண்டிய கேள்வியவர்.**

இழை = இழ் + ஐ. நிலையாய் ஆழ்ந்து ஐக்கியமாவது.

உயிர்மையுடன் நிலையாய் ஆழ்ந்து, ஐக்கியமாகி உணர்ந்து, வெளிப்படுத்தும் சொல்லுடைய ஞானியர், தவறியும் முட்டாள்தனமாகப் பேச மாட்டார்.

**418. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்**
**தோட்கப் படாத செவி.**

**கேட்பினும் கேளாத் தகையவே-கேள்வியால்**
**தோட்கப் படாத செவி.**

தோட்கப் = தோல் + க் + அப். தேகம் முழுவதுமாய் அதிர்ந்து மெய்யைக் / பொருண்மையைக் கொள்ளும்.

அறச்சொல்லால் அதிர்ந்து, பொருண்மையைக் கொள்ளாத செவி, கேட்கக்கூடியதாய் இருப்பினும், செவிட்டுத் தன்மை உடையதே.

**419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய**
**வாயின ராத லரிது.**

**நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயினர் ஆதல் அரிது.**

*நுணங்கு = நுண் + அங்கு. நுண்ணிய இடம். நுண்ணிய தூயவெளி.*

*நுண்ணிய தூயவெளியின் / சித்த வெளியின் இசையை, ஓங்காரத்தை உணர்ந்தோரைத் தவிர, பிற எவரும், பணிவுடைய சொல்லினராதல் கடினம்.*

**420. செவியிற் சுவையுணரா வாயுணவின் மாக்கள்**
**அவியினும் வாழினு மென்.**

**செவியின் சுவை உணரா, வாய் உணர்வின், மாக்கள்**
**அவியினும் வாழினும் என்?**

*செவியின் ஓங்கார இசைச்சுவையை, ஞானச்சுவையை உணராமல், வாய் உணவை மட்டும் சுவைத்து உண்ணும், விலங்குகள் போன்ற மனிதர்கள், அழிந்தால் என்ன, வாழ்ந்தால் என்ன?*

*கேள்வி அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*கல்வி எனும் செல்வத்தை, புலன்களின் மூலமாகப் பெறுகிறோம். செவிப்புலன் வழியாக பெறும் செல்வமே, பிற புலன்களின் வழியாக வரும் செல்வத்திற்கு எல்லாம் அடிப்படையாகின்றது, முக்கியமாகின்றது. செவிப்புலனின் அமைதி உணர்வே, இறுதியில், மெய்யுணர்வாகின்றது.*

*செவிப்புலன் அமைதியை உணராதபோது, சிறிதளவு உணவு வயிற்றுக்கும் தரலாம்.*

*செவியின் அமைதியால் படரும் ஒளிக்காட்சியைத் / இசையைத் தொடர்ந்து கொண்டவர், வானில், அசையாமையை உணவாய்க் கொண்ட ஒருமையானவர்க்கு, முழுமையானவர்க்கு, இப்பூமியில் இணையாவர்.*

*ஒருவன் கற்காமல் இருந்தாலும், செவிப்புலன் உணர்வை, அமைதியைக் கேட்க. அது, இறப்பின்போது, அசையாமையைப் பற்றிக் கொள்ள, உதவும்.*

*வழுக்கும் இயல்புடைய பள்ளத்தில் இறங்கும் போது, கீழே விழாமல் தடுக்கும் ஊன்றுக்கோல் போல, புலனடக்கிய ஞானியரின் அறவுரை, வாழ்வின் சரிவுக் காலத்தில், அழிவைத் தடுக்கும்.*

*கொஞ்சமாக இருந்தாலும், செவியை நெருங்கி அதிர்வதைக் கேளுங்கள். அந்த அளவுக்கு உயிருடன் நெருங்கி உயர முடியும்.*

*உயிர்மையுடன் நிலையாய் ஆழ்ந்து, ஐக்கியமாகி உணர்ந்து, வெளிப்படுத்தும் சொல்லுடைய ஞானியர், தவறியும் முட்டாள்தனமாக பேச மாட்டார்.*

*அறச்சொல்லால் அதிர்ந்து, பொருண்மையைக் கொள்ளாத செவி, கேட்கக்கூடியதாய் இருப்பினும், செவிட்டுத் தன்மை உடையதே.*

*நுண்ணிய தூயவெளியின் / சித்த வெளியின் இசையை, ஓங்காரத்தை உணர்ந்தோரைத் தவிர, பிற எவரும், பணிவுடைய சொல்லினராதல் கடினம்.*

*செவியின் ஓங்கார இசைச்சுவையை, ஞானச்சுவையை உணராமல், வாய் உணவை மட்டும் சுவைத்து உண்ணும், விலங்குகள் போன்ற மனிதர்கள், அழிந்தால் என்ன, வாழ்ந்தால் என்ன?*

# 43. அறிவுடைமை

*அறிவுடைமை = அறிவு + உடைமை. அறிவு = அறி + உ. பகுத்துணர் புறத்தை, அகத்தை. உடைமை = தொடர்ச்சியாய் கொண்டிருத்தல். அறிவுடைமை = அகம், புறம் பற்றி தொடர்ந்து அறிதல்.*

**421. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்க லாகா வரண்.**

**அறிவு அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும்**
**உள் அழிக்கல் ஆகா அரண்.**

*அழிப்பிலிருந்து நாட்டைக் காப்பது, எதிரிகளின் பலம், பலவீனம், தன் பலம், பலவீனம் பற்றிய அறிவாகும். தான் அறிவானவன் என்றும், தன்னைச் சுற்றி அறிஞர்கள் இருக்கின்றார்கள் என்றும் தெரிந்தால், அதுவே எதிரிகள், நாட்டிற்குள் வராமல் தடுக்கும் உளவியல் அரணாகும்.*

**422. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீ**
**நன்றின்பா லுய்ப்ப தறிவு.**

**சென்ற இடத்தால் செலவிடா, தீது ஒரீஇ,**
**நன்றின்பால் உய்ப்பது-அறிவு.**

*தீதொரீஇ = தீது + ஒர் + ஈ + இ. தீங்கு ஒன்று தந்து இல்லா.*

*சென்ற இடத்தில் அவைதம் போக்கில் புலன்களைச் செல்லவிடாமல் (மனம், புலன்களின் மூலமாக ஏற்கனவே அறிந்த செய்திகளை வைத்தே முடிவுகளை எடுக்கின்றன. புதிய இடத்தில் காண்பனவற்றையும், அவற்றைப் பற்றிய முழுமையான செய்திகள் இல்லாதபோதும், பழைய செய்திகளோடு ஒப்பிட்டே முடிவுகளை எடுக்கின்றன. அவை தவறாகப் போய்விடலாம்), தீங்கு ஒன்றை உறுதியாய்த் தராத, நல்லது என்று தெளிவாய் அறிந்த ஒன்றை, அனுபவம் கொள்வது, அறிவு.*

**423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு.**

**எப் பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப் பொருள்**
**மெய்ப் பொருள் காண்பது-அறிவு.**

*எந்த கருத்தையும், யார் கூறுகின்றார் என்று ஆளை அல்லது நபரைப் பார்ப்பதைக் காட்டிலும், அவர் கூறிய கருத்தில், உண்மை இருக்கின்றதா என்றும், அது சுட்டும் உள்பொருளையும் அதற்கு தான் செய்ய வேண்டிய செயல்பாடுகள் என்ன என்றும், ஆராய்வதே அறிவு.*

**424. எண்பொருள வாகச் செலச் சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்ப தறிவு.**

**எண் பொருளவாகச் செலச் சொல்லி, தான் பிறர்வாய்**
**நுண் பொருள் காண்பது-அறிவு.**

*யார், என்ன கூறினார் என்பதை வெளிப்படையாய் சொல்லாமல், அதைப் பற்றி தான் என்ன கருதுகின்றோமோ, அந்த கருத்தை மட்டும், பல்வேறு துறைகளைக் கற்றறிந்தோர் சபையில், தான் நினைத்தவாறு சொல்லி, அவர்தம் நுண்ணிய கருத்துகளையும், விளக்கத்தையும், விமரிசத்தையும் கேட்பது அறிவு.*

**425. உலகந் தழீஇய தொட்ப மலர்தலும்**
**கூம்பலு மில்ல தறிவு.**

**உலகம் தழீஇயது ஒட்பம்; மலர்தலும்**
**கூம்பலும் இல்லது-அறிவு.**

*உலகம் = கற்ற பெரும்பான்மை.*

*தழீஇய = தழுவிய.*

*ஒட்பம் = உடன்பாடு.*

*தன் கருத்தையே வழிமொழிந்தார்கள் என்னும் அகமகிழ்ச்சியோ, தன் கருத்தை ஏற்காமல் போனார்களே என்னும் மனவருத்தமோ இன்றி, கற்றவர்களின் கருத்தை, ஏற்றுக் கொள்வதே, அறிவு.*

**426. எவ்வ துறைவ துலக முலகத்தோ**
**டவ்வ துறைவ தறிவு.**

**எவ்வது உறைவது உலகம், உலகத்தோடு**
**அவ்வது உறைவது-அறிவு.**

*எத்துறையில், எவ்வகையில், உலகம் நிலைப்பெற்றுள்ளதோ, அத்துறையில், அவ்வகையில், உலகத்தோடு நிலைப்பெறுவதே, அறிவு.*

*தான் விரும்பியபடி, உலகவழக்கிற்கு முரணாகச் செயல்படுதல், அறிவின்மை.*

**427. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்.**

**அறிவு உடையார் ஆவது அறிவார்; அறிவு இலார்**
**அஃது அறிகல்லாதவர்.**

*அறிவுடையவர், எது எது நடக்கும் என்று முன்கூட்டியே தருக்கரீதியாக அறிவர். அறிவில்லாதவர், அத்தருக்கத்தைக் கற்காதவர்.*

428. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

**அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சுவது**
**அஞ்சல், அறிவார் தொழில்.**

*அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமல் இருப்பது, முட்டாள்தனம். அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுவது, அறிவுடையார் கடமை.*

429. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

**எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை -**
**அதிர வருவதோர் நோய்.**

*எதிர்காலத்தில் நிகழப்போவதையும், அதிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளும் அறிவினையும் உடையவர்க்கு, அதிர்ச்சி தரக்கூடிய அழிவு வராது.*

430. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.

**அறிவு உடையார் எல்லாம் உடையார்; அறிவு இலார்**
**என் உடையரேனும் இலர்.**

*அறிவுடையார், எதையும் ஆக்கி, எல்லாம் உடையவராக முடியும். அறிவில்லாதவர், எவ்வளவுதான் வைத்திருந்தாலும் அறிவின்மையால் இழந்து, எதுவும் இல்லாதவராவர்.*

*அறிவுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*அழிப்பிலிருந்து நாட்டைக் காப்பது, எதிரிகளின் பலம், பலவீனம், தன் பலம், பலவீனம் பற்றிய அறிவாகும். தான் அறிவானவன் என்றும், தன்னைச் சுற்றி அறிஞர்கள் இருக்கின்றார்கள் என்றும் தெரிந்தால், அதுவே எதிரிகள், நாட்டிற்குள் வராமல் தடுக்கும் உளவியல் அரணாகும்.*

*சென்ற இடத்தில், அவைதம் போக்கில், புலன்களைச் செல்லவிடாமல், தீங்கு ஒன்றை உறுதியாய் தராத, நல்லது என்று தெளிவாய் அறிந்த ஒன்றை, அனுபவம் கொள்வது, அறிவு.*

*எந்த கருத்தையும், யார் கூறுகின்றார் என்று ஆளை அல்லது நபரைப் பார்ப்பதைக் காட்டிலும், அவர் கூறிய கருத்தில், உண்மை இருக்கின்றதா என்றும், அது சுட்டும் உள்பொருளையும் அதற்கு தான் செய்ய வேண்டிய செயல்பாடுகள் என்ன என்றும், ஆராய்வதே அறிவு.*

*தான் என்ன கருதுகின்றோமோ, அந்த கருத்தை மட்டும், பல்வேறு துறைகளைக் கற்றறிந்தோர் சபையில், தான் நினைத்தவாறு சொல்லி, அவர்தம் நுண்ணிய கருத்துகளையும், விளக்கத்தையும், விமரிசத்தையும் கேட்பது, அறிவு.*

*தன் கருத்தையே வழிமொழிந்தார்கள் என்னும் அகமகிழ்ச்சியோ, தன் கருத்தை ஏற்காமல் போனார்களே என்னும் மனவருத்தமோ இன்றி, கற்றவர்களின் கருத்தை, ஏற்றுக் கொள்வதே, அறிவு.*

*எத்துறையில், எவ்வகையில், உலகம் நிலைப்பெற்றுள்ளதோ, அத்துறையில், அவ்வகையில், உலகத்தோடு நிலைப்பெறுவதே, அறிவு.*

*அறிவுடையவர், எது எது நடக்கும் என்று முன்கூட்டியே தருக்கரீதியாக அறிவர். அறிவில்லாதவர், அத்தருக்கத்தைக் கற்காதவர்.*

*அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமல் இருப்பது, முட்டாள்தனம். அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுவது, அறிவுடையார் கடமை.*

*எதிர்காலத்தில் நிகழப்போவதையும், அதிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளும் அறிவினையும் உடையவர்க்கு, அதிர்ச்சி தரக்கூடிய அழிவு வராது.*

*அறிவுடையார், எதையும் ஆக்கி, எல்லாம் உடையவராக முடியும். அறிவில்லாதவர், எவ்வளவுதான் வைத்திருந்தாலும் அறிவின்மையால் இழந்து, எதுவும் இல்லாதவராவர்.*

# 44. குற்றங்கடிதல்

*குற்றங்கடிதல் = குற்றம் + கடிதல். குற்றம் = குறு + அம். சிறுமைத் தன்மை. கடிதல் = வெறுத்தல். விலக்கல்.*

*குற்றங்கடிதல் = சிறுமை குணங்களை வெறுத்து ஒதுக்குதல்.*

**431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து.**

**செருக்கும், சினமும், சிறுமையும், இல்லார்**
**பெருக்கம் பெருமிதம் நீர்த்து.**

*கருவமும், கோபமும், சிறுமையும் இல்லாதவர்கள், செல்வ வளர்ச்சியையும் பெருமிதத்தையும் இயல்பாய்ப் பெறுவர்.*

**432. இவறலு மாண்பிறந்த மானமு மாணா**
**உவகையு மேத மிறைக்கு.**

**இவறலும், மாண்பு இறந்த மானமும், மாணா**
**உவகையும்,-ஏதம், இறைக்கு.**

*இவறல் = இவ் + அறல். நிலையான புறம் அகம் பிரிதல். நிலை தடுமாற்றம். இவறல் = இ + வ் (உ + அ) + அறல். நிலையாய் இருந்து புறத்திருந்து அகம் பிரித்தல். அபகரித்தல். சுரண்டல். கொள்ளை அடித்தல். வரியிடல். பேராசை. உள்வந்த காற்றைச் சிறிதும் வெளிவிடாத உலைத்துருத்தி. உலோபம்.*

*கஞ்சத்தனமும், பண்பு இல்லாத மௌனமும், அடக்கமில்லாத மகிழ்ச்சி வெளிப்பாடும், அரசனுக்கு, துன்பத்தை விளைவிக்கும்.*

**433. தினைத்துணையுங் குற்றம் வரினும் பனைத்துணையாய்க்**
**கொள்வர் பழிநாணு வார்.**

**தினைத் துணையாம் குற்றம் வரினும், பனைத் துணையாக்**
**கொள்வர், பழி நாணுவார்.**

*சிறிதளவு சிறுமை நேர்ந்தாலும், மிகப் பெரியதாய் கருதுவர், பழிக்கு வெட்கப்படுபவர்கள்.*

**434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை.**

**குற்றமே காக்க, பொருளாக-குற்றமே,**
**அற்றம் தரூஉம் பகை.**

*செல்வத்தைக் காப்பதைப் போல், பழி வராமல் காத்தல் வேண்டும். பொருள் போனால், மீண்டும் பெற்றுக் கொள்ளலாம். பழி ஒரு முறை வந்துவிட்டால் போதும், அதை முற்றிலும் போக்குவது கடினம். பழியே ஒருவருக்கு அழிவைத் தரும் பகை.*

**435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.**

**வரும் முன்னர்க் காவாதான் வாழ்க்கை, எரி முன்னர்
வைத்தூறு போல, கெடும்.**

*தீங்கு, பழி வருவதற்கு முன், அதிலிருந்து தப்புவதற்கான முன்முயற்சிகள் எடுக்காதவன் வாழ்க்கை, எரிகின்ற தீயின் முன் உள்ள வைக்கோல்போர் போல், விரைவில் முழுவதுமாய் அழிந்து விடும்.*

**436. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகு மிறைக்கு.**

**தன் குற்றம் நீக்கி, பிறர் குற்றம் காண்கிற்பின்,
என் குற்றம் ஆகும் இறைக்கு?**

*மன்னன் எனப்படுபவன், தன்னுடைய குற்றம் குறைகளை நீக்கியப்பின், பிறர் குற்றங்களைக் கண்டாலே போதும், அவர்கள் அவற்றை உணர்ந்து களைந்து விடுவர். அதைக் கண்டு, தானும் புதிய குற்றம் குறைகள் ஏதும் தன்னிடம் வராமல் பார்த்துக் கொள்வான். பின்பு, எந்த குறை இருக்கப் போகின்றது மன்னனுக்கு? எக்குறையும் இருக்காது.*

**437. செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தின்றிக் கெடும்.**

**செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பாலது அன்றிக் கெடும்.**

*செய்ய வேண்டியவற்றை மக்களுக்குச் செய்யாமல், மக்களிடம் இருந்துப் பறித்துச் சேர்க்கும் உலோபியான அரசனின் செல்வம், தப்பாது அழிந்து விடும்.*

**438. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.**

**பற்று உள்ளம் என்னும் இவறன்மை, எற்றுள்ளும்
எண்ணப்படுவது ஒன்று அன்று.**

பற்றுள்ளம் (உடைமைத்தனம்) என்னும் கஞ்சத்தனம் வேறெந்த குணங்களிலும் நினைத்துக்கூடப் பார்க்கக் கூடாத ஒன்று. அரசன் எந்தக் காலத்திலும் உலோபியாக (உலோபி = உல் + ஒப் + இ. மனத்தின் இயக்கம், முழுவதையும் கொள்ளும் நிலைப்பு) இருக்கக் கூடாது.

**439. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க**
**நன்றி பயவா வினை.**

**வியவற்க எஞ்ஞான்றும் தன்னை; நயவற்க,**
**நன்றி பயவா வினை.**

வியம் = வி + அம். அப்பால் தன்மை. புறத்திருத்தும் தன்மை. வியப்பு.

எந்தக் காலத்திலும், தன்னைப் பற்றித் தானே பெருமை கொள்ள வேண்டாம். நன்மை தராத அத்தகைய செயலை, விரும்ப வேண்டாம்.

**440. காதலர் காத லறியாமை உய்க்கிற்பின்**
**ஏதில வேதிலார் நூல்.**

**காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்,**
**ஏதில, ஏதிலார் நூல்.**

ஏதில = ஏதும் இல்லை.

வேதிலார் = வேற்று + இல் + ஆர். பகைவர்.

அரசர் தன் ஆசைகளை, பலவீனங்களை வெளிக்காட்டாமல் அனுபவிப்பாராயின், பகைவரைப் பற்றி அறியும் நூல் எதுவும், அவருக்குத் தேவை இல்லை.

குற்றங்கடிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

கருவமும், கோபமும், சிறுமையும் இல்லாதவர்கள், செல்வ வளர்ச்சியையும் பெருமிதத்தையும் இயல்பாய்ப் பெறுவர்.

கஞ்சத்தனமும், பண்பு இல்லாத மௌனமும், அடக்கமில்லாத மகிழ்ச்சி வெளிப்பாடும், அரசனுக்கு, துன்பத்தை விளைவிக்கும்.

சிறிதளவு சிறுமை நேர்ந்தாலும் மிகப் பெரியதாய் கருதுவர், பழிக்கு வெட்கப்படுபவர்கள்.

செல்வத்தைக் காப்பதைப் போல், பழி வராமல் காத்தல் வேண்டும். பழியே ஒருவருக்கு அழிவைத் தரும் பகை.

தீங்கு, பழி வருவதற்கு முன், அதிலிருந்து தப்புவதற்கான முன்முயற்சிகள் எடுக்காதவன் வாழ்க்கை, எரிகின்ற தீயின் முன் உள்ள வைக்கோல்போர் போல், விரைவில் முழுவதுமாய் அழிந்து விடும்.

தன்னுடைய குற்றம் குறைகளை நீக்கியப்பின், பிறர் குற்றங்களைக் கண்டாலே போதும், அவர்கள் அவற்றை உணர்ந்து களைந்து விடுவர்.

பின்பு, எந்த குறை இருக்கப் போகின்றது மன்னனுக்கு? எக்குறையும் இருக்காது.

செய்ய வேண்டியவற்றை மக்களுக்குச் செய்யாமல், மக்களிடம் இருந்து பறித்துச் சேர்க்கும் உலோபியான அரசனின் செல்வம், தப்பாது அழிந்து விடும்.

பற்றுள்ளம் என்னும் கஞ்சத்தனம் வேறெந்த குணங்களிலும் நினைத்துக்கூடப் பார்க்கக் கூடாத ஒன்று. அரசன் எந்தக் காலத்திலும் உலோபியாக இருக்கக் கூடாது.

எந்தக் காலத்திலும், தன்னைப் பற்றித் தானே பெருமை கொள்ள வேண்டாம். நன்மை தராத அத்தகைய செயலை, விரும்ப வேண்டாம்.

அரசர் தன் ஆசைகளை, பலவீனங்களை வெளிக்காட்டாமல் அனுபவிப்பாராயின், பகைவரைப் பற்றி அறியும் நூல் எதுவும், அவருக்கு தேவை இல்லை.

# 45. பெரியாரைத் துணைக்கோடல்

*பெரியர் = ப் + எர் + இ + அர். கொண்டதில் உயர்ந்து இருந்து நிலைத்தவர். யோகி.*

*பெரியார் = ப் + எர் + இ + ஆர். கொண்டதில் உயர்ந்து இருந்து நிலைத்து பிரிந்தவர் / இருப்பவர். ஞானியர். வயதில், அறிவில், அனுபவத்தில் உயர்ந்தவர்.*

*கோடல் = க் + ஓட் + அல். மெய்யை முழுமையாய் ஒட்டித் தொடரல். சேர்தல். கோடல் = கோடு + அல். பிரிவு இல்லாமை. பிரியாமை.எல்லைக்குள் இருத்தல். கொள்ளுதல்.*

*பெரியாரைத் துணைக்கோடல் = ஞானியரைத் துணைப் பிரியாமை. ஞானியரின் துணை கொள்ளுதல்.*

**441. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை**
**திறனறிந்து தேர்ந்து கொளல்.**

**அறன் அறிந்து மூத்த அறிவு உடையார் கேண்மை,**
**திறன் அறிந்து, தேர்ந்து, கொளல்.**

*அறமறிந்து முதிர்ந்த அறிவுடையாரின், அமைதி ஆற்றலை அறிந்து, தெரிவு செய்து, தன்னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.*

**442. உற்றநோய் நீக்கி யுறாஅமன் முற்காக்கும்**
**பெற்றியார்ப் பேணிக் கொளல்.**

**உற்ற நோய் நீக்கி, உறாஅமை முன் காக்கும்**
**பெற்றியார்ப் பேணிக் கொளல்.**

*ஏற்பட்ட நோயை, துன்பத்தை, பிரச்சனையை நீக்கி, புதிய நோய், துன்பம், பிரச்சனை வராமல் முன் காக்கும் அனுபவம் மிக்கவர்களை ஆதரித்து, தன்னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.*

**443. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்**
**பேணித் தமராக் கொளல்.**

**அரியவற்றுள் எல்லாம் அரிதே-பெரியாரைப்**
**பேணித் தமராக் கொளல்.**

*தமர் = தம் + அர். தம்முடையவர்.*

*ஞானியரை ஆதரித்து தம்முடையவராய் ஆக்கிக் கொள்ளுதல், கடினமான எல்லாவற்றிலும், மிகக் கடினமானது.*

*ஏனெனில். ஞானியர் அகந்தையை விட்டவர். பிறருடைய அகந்தையையும் ஏற்காதவர். பணிவு ஒன்றே அவர்களைப் பணிய வைக்கும்.*

*அரசர் பொதுவாகப் பணியாதவர். எனவே, இயல்பாகவே, அரசர்க்கு, ஞானியரைத் தம்முடையவராய் ஆக்கிக் கொள்வது கடினந்தான். தனக்கும் இழுக்கு வராமல், ஞானியரும் தன்னிடம் குற்றம் காணாமல், பழகுவது கடினந்தான்.*

**444. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.**

**தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்,
வன்மையுள் எல்லாம் தலை.**

*தம்மைவிட வயதிலும், அறிவிலும், அனுபவத்திலும் உயர்ந்தவர்கள், தம்மைப் பிரியாது இருத்தல், வலிமைகள் எல்லாவற்றிலும் சிறந்தது.*

**445. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.**

**சூழ்வார் கண் ஆக ஒழுகலான், மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.**

*தன்னைச் சுற்றி இருக்கும் அமைச்சர்கள், சேனாதிபதிகள், ஒற்றர்கள், அறிஞர்கள் ஆகியோர், தான் நேரடியாகக் காண முடியாத சமூக நிலைமைகளைக் கண்டு, தமக்கு தெரிவிக்கும் கண்கள் போன்று இருத்தலால், அவர்களை, அரசன் மிகவும் நெருக்கமாக்கிக் கொள்ள வேண்டும்.*

**446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.**

**தக்கார் இனத்தனாய், தான் முக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்தது இல்.**

*தகுதி உடையவர்களுடன் சேர்ந்து, தானும் தகுதியுடையவனாகி இருக்கக் கூடியவனை, பகைவர்கள் வெற்றி கொண்டது இல்லை.*

**447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.**

**இடிக்கும் துணையாரை ஆள்வாரை, யாரே,
கெடுக்கும் தகைமையவர்?**

*ஆள் = அமைதியாக்கு. மிகையாக்கு.*

*தன்னிலும், தன் செயல்பாட்டிலும் இருக்கும் குற்றம் குறைகளைச் சுட்டிக் காட்டி, அதனால் வரும் நன்மை, தீய விளைவுகளை எடுத்துரைக்கும்*

*பெரியவர்களின் அறிவுரைகளை ஏற்று, அப்பெரியவர்களை தனக்கு நெருக்கமாகவே கொண்டுள்ளவனைக் கெடுக்க, எவருக்குத் தகுதி உள்ளது?*

**448. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பாரில் லானுங் கெடும்.**

**இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்,
கெடுப்பார் இலானும், கெடும்.**

*தன்னிலும், தன் செயலிலும், குற்றம், கூரைகளைச் சுட்டிக் காட்டும் நண்பர்களை, அமைச்சர்களைக் கருதிக் கொண்டு, புறத்தில் தன்னைச் சுற்றி நிகழ்வதையும் விளைகளையும் அறியாமல், கெடுப்பவர் யாரும் இல்லையென்றாலும், தானாகவே அழிந்து விடுவான்.*

**449. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை.**

**முதல் இலார்க்கு ஊதியம் இல்லை;-மதலை ஆம்
சார்பு இலார்க்கு இல்லை, நிலை.**

*மதலை = குழந்தை. தூண்.*

*மூலதனம் இல்லாதவர்க்கு வியாபார பெருக்கமோ, இலாபமோ இல்லை. அதனால், அவர் தன் காலில் தானாக நிற்க முடியாது. அமைச்சர், பெரியோர் போன்றோரின் துணை இல்லையென்றால், அரசனும், குழந்தையைப் போல் தானாய் நிற்க முடியாமல், விழுந்து விடுவான்.*

**450. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.**

**பல்லார் பகை கொளலின் பத்து அடுத்த தீமைத்தே-
நல்லார் தொடர் கைவிடல்.**

*பலரிடம் பகைமைக் கொள்வதைக் காட்டிலும், பத்து மடங்கு தீமையானது, பரந்த தொடர்புகளுடைய பெரியவர்களின் நட்பை விட்டு விடுதல்.*

*பெரியாரைத் துணைக்கோடல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*அறமறிந்து முதிர்ந்த அறிவுடையாரின், அமைதி ஆற்றலை அறிந்து, தெரிவு செய்து, தன்னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.*

*ஏற்பட்ட நோயை, துன்பத்தை, பிரச்சனையை நீக்கி, புதிய நோய், துன்பம், பிரச்சனை வராமல் முன் காக்கும் அனுபவம் மிக்கவர்களை ஆதரித்து, தன்னுடன் சேர்த்துக் கொள்ள வேண்டும்.*

ஞானியரை ஆதரித்துத் தம்முடையவராய் ஆக்கிக் கொள்ளுதல், கடினமான எல்லாவற்றிலும், மிகக் கடினமானது.

தம்மைவிட வயதிலும், அறிவிலும், அனுபவத்திலும் உயர்ந்தவர்கள், தம்மைப் பிரியாது இருத்தல், வலிமைகள் எல்லாவற்றிலும் சிறந்தது.

தன்னைச் சுற்றி இருக்கும் அமைச்சர்கள், சேனாதிபதிகள், ஒற்றர்கள், அறிஞர்கள் ஆகியோர், தான் நேரடியாக காண முடியாத சமூக நிலைமைகளைக் கண்டு, தமக்குத் தெரிவிக்கும் கண்கள் போன்று இருத்தலால், அவர்களை, அரசன் மிகவும் நெருக்கமாக்கிக் கொள்ள வேண்டும்.

தகுதி உடையவர்களுடன் சேர்ந்து, தானும் தகுதியுடையவனாகி இருக்கக் கூடியவனை, பகைவர்கள் வெற்றி கொண்டது இல்லை.

தன்னிலும், தன் செயல்பாட்டிலும் இருக்கும் குற்றம் குறைகளைச் சுட்டிக் காட்டி, அதனால் வரும் நன்மை, தீய விளைவுகளை எடுத்துரைக்கும் பெரியவர்களின் அறிவுரைகளை ஏற்று, அப்பெரியவர்களை தனக்கு நெருக்கமாகவே கொண்டுள்ளவனைக் கெடுக்க, எவரால் முடியும்?

தன்னிலும், தன் செயலிலும், குற்றம், குறைகளைச் சுட்டிக் காட்டும் நண்பர்களை, அமைச்சர்களை, பெரியவர்களைத் துணைக் கொள்ளாத மன்னன், கெடுப்பவர் யாரும் இல்லையென்றாலும், தானாகவே அழிந்து விடுவான்.

மூலதனம் இல்லாதவர்க்கு வியாபார பெருக்கமோ, இலாபமோ இல்லை. அதனால், அவர் தன் காலில் தானாக நிற்க முடியாது. அமைச்சர், பெரியோர் போன்றோரின் துணை இல்லையென்றால், அரசனும், குழந்தையைப் போல் தானாய் நிற்க முடியாமல், விழுந்து விடுவான்.

பலரிடம் பகைமைக் கொள்வதைக் காட்டிலும், பத்து மடங்கு தீமையானது, பரந்த தொடர்புகளுடைய பெரியவர்களின் நட்பை விட்டு விடுதல்.

# 46. சிற்றினஞ்சேராமை

*சிற்றினஞ்சேராமை = சிறிய + இனம் + சேராமை. சிறுமையை நிலையாய் நெருக்கமாய் கொண்டவர்களைச் சேராமை.*

**451. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்**
**சுற்றமாய்ச் சூழ்ந்து விடும்.**

**சிற்றினம் அஞ்சும், பெருமை; சிறுமைதான்**
**சுற்றமாச் சூழ்ந்துவிடும்.**

*சிற்றினம் = சிறு + இனம். சிறு = ச் + இறு. இயக்கத்தை விடாது பற்றிய. இயக்கத்தைத் தொடர்ந்து பிரித்து வெளிப்படுத்தும். எப்பொழுதும் இயங்கிக் கொண்டிருக்கும். அமைதியற்ற. இனம் = இன் + அம். நிலையாய் நெருங்கிய தன்மை. எப்பொழுதும் சேர்ந்தே இருக்கும் குணம். சிற்றினம் = எப்பொழுதும் சேர்ந்து இயங்கும் தன்மை. அமைதியற்ற கூட்டம்.*

*சிறுமை = சிறு + மை. சிறிய தன்மை. கீழான தன்மை.*

*அமைதியற்ற கூட்டத்தைக் கண்டால், மனத்தில் உயர்ந்தவர்கள், பயம் கொள்வர். ஏனெனில், அமைதியற்ற கூட்டம், எதையும் செய்து, தம் மதிப்பைக் குறைத்து விடும். சிறிய, கீழான மனத்தன்மையைக் கொண்டவர்தான், அமைதியற்ற கூட்டத்தை உறவாக அரவணைத்துக் கொள்வர்.*

**452. நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க்**
**கினத்தியல்ப தாகு மறிவு.**

**நிலத்து இயல்பா நீர் திரிந்து, அற்று ஆகும்;-**
**மாந்தர்க்கு இனத்து இயல்பது ஆகும், அறிவு.**

*நிலத்தின் இயல்பைப் பொறுத்து, அதில் கலந்த நீர், நிறம் மாறி வெளிப்படுவது போல், மனிதர்க்கு, சேரும் இனத்தின் இயல்பைப் பொறுத்து, அறிவு உண்டாகும்.*

**453. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானாம்**
**இன்னா னெனப்படுஞ் சொல்.**

**மனத்தான் ஆம், மாந்தர்க்கு உணர்ச்சி; இனத்தான் ஆம்,**
**'இன்னான்' எனப்படும் சொல்.**

*மனத்தைப் பொறுத்து மனிதர்க்கு உணர்ச்சி நேரும், சேரும் இனத்தைப் பொறுத்து, (அக்குணத்தானாய் இல்லாவிட்டாலும்) அக்குணத்தான் எனும் பெயர் வந்து சேரும்.*

**454. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.**

**மனத்து உளது போலக் காட்டி, ஒருவற்கு
இனத்து உளது ஆகும்-அறிவு.**

*ஒருவற்கு, எண்ணம் மற்றும் அறிவு, தன்னுடைய மனத்தில் இருந்தே எழுவது போல் தோன்றினாலும், அவர் சேர்ந்த இனத்தை, கூட்டத்தை, குழுவைப் பொறுத்தே, அந்த எண்ணமும் அறிவும் அமைகின்றது.*

**455, மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.**

**மனம் துகூய்மை, செய்வினை தூய்மை, இரண்டும்
இனம் தூய்மை தூவா வரும்.**

*தூவா = த் + ஊவ் + ஆ. தேகம் பிரிந்து சிதறாமல். முழுமையாய்.*

*ஒருவரது மனத்தின் தூய்மை, செயலின் தூய்மை ஆகிய இரண்டும், அவர் சேர்ந்த இனத்தின் தூய்மையைப் பொறுத்து முழுமையாய் அமையும்.*

**456. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.**

**மனம் தூயார்க்கு எச்சம் நன்று ஆகும்; இனம் தூயார்க்கு
இல்லை, நன்று ஆகா வினை.**

*மனம் தூய்மையாய் உடையவர்க்கு, நல்ல பிள்ளைகள் பிறப்பர். சேர்ந்த இனத்தால் தூய்மையாய் இருப்பவர்க்கு, நன்மை பயக்காத செயல் எதுவுமில்லை, அவருடைய எல்லாச் செயல்களும் நன்மை தரும்.*

**457. மனநல மன்னுயிர்க் காக்க மினநலம்
எல்லாப் புகழுந் தரும்.**

**மன நலம் மன் உயிர்க்கு ஆக்கம்; இன நலம்
எல்லாப் புகழும் தரும்.**

*ஒருவரின் மனநலம், பிற, மனம் கொண்ட உயிர்களுக்கு நன்மை விளைவிக்கும். இனநலமோ, அந்த இனத்திற்கும் அதன் உறுப்பினர் அனைவருக்கும் எல்லாப் புகழையும் தரும்.*

**458. மனநல னன்குடையா ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.**

**மன நலம் நன்கு உடையர் ஆயினும், சான்றோர்க்கு**
**இன நலம் ஏமாப்பு உடைத்து.**

*தன் மனம் நல்லதாக இருப்பினும், தான் சேரும் இனம், குழு நல்லதாய் இருந்தால், சான்றோர்க்கு, அதுவே பலமிக்க பாதுகாப்பாய் அமையும்.*

**459. மனநலத்தி னாகு மறுமைமற் றஃதும்**
**இனநலத்தி னேமாப் புடைத்து.**

**மன நலத்தின் ஆகும், மறுமை; மற்று அஃதும்**
**இன நலத்தின் ஏமாப்பு உடைத்து.**

*ஒருவரின் நல்ல மனத்தால், ஏற்படும் நல்வினையால், மறுமை உண்டாகும். அம்மறுமையும், தான் சேர்ந்த இனத்தின், குழுவின் நற்செயல்களால், பாதுகாப்புடையதாய், நன்மை அழியாததாய், அமையும்.*

**460. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்**
**அல்லற் படுவதூஉ மில்.**

**நல் இனத்தின் ஊங்கும் துணை இல்லை; தீ இனத்தின்**
**அல்லற்படுப்பதூஉம் இல்.**

*நல்லினத்தால், நல்ல குழுமத்தால் கிடைக்கும் பாதுகாப்பு வேறெங்கும் இல்லை. தீயினத்தால், தீய குழுமத்தால் ஏற்படும் தொல்லைகளும் வேறெங்கும் இல்லை.*

**சிற்றினஞ்சேராமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அமைதியற்ற கூட்டத்தைக் கண்டால், மனத்தில் உயர்ந்தவர்கள், பயம் கொள்வர். சிறிய, கீழான மனத்தன்மையைக் கொண்டவர்தான், அமைதியற்ற கூட்டத்தை உறவாக அரவணைத்துக் கொள்வர்.*

*நிலத்தின் இயல்பைப் பொறுத்து, அதில் கலந்த நீர், நிறம் மாறி வெளிப்படுவது போல், மனிதர்க்கு, சேரும் இனத்தின் இயல்பைப் பொறுத்து, அறிவு உண்டாகும்.*

*மனத்தைப் பொறுத்து மனிதர்க்கு உணர்ச்சி நேரும், சேரும் இனத்தைப் பொறுத்து, (அக்குணத்தானாய் இல்லாவிட்டாலும்) அக்குணத்தான் எனும் பெயர் வந்து சேரும்.*

*ஒருவற்கு, எண்ணம் மற்றும் அறிவு, தன்னுடைய மனத்தில் இருந்தே எழுவது போல் தோன்றினாலும், அவர் சேர்ந்த இனத்தை, கூட்டத்தை, குழுவைப் பொறுத்தே, அந்த எண்ணமும் அறிவும் அமைகின்றது.*

*ஒருவரது மனத்தின் தூய்மை, செயலின் தூய்மை ஆகிய இரண்டும், அவர் சேர்ந்த இனத்தின் தூய்மையைப் பொறுத்து முழுமையாய் அமையும்.*

மனம் தூய்மையாய் உடையவர்க்கு, நல்ல பிள்ளைகள் பிறப்பர். இனத்தால் தூய்மையாய் இருப்பவர்க்கு, நன்மை பயக்காத செயல் எதுவுமில்லை.

ஒருவரின் மனநலம், பிற, மனம் கொண்ட உயிர்களுக்கு நன்மை விளைவிக்கும். இனநலமோ, அந்த இனத்திற்கும் அதன் உறுப்பினர் அனைவருக்கும் எல்லாப் புகழையும் தரும்.

தன் மனம் நல்லதாக இருப்பினும், தான் சேரும் இனம், குழு நல்லதாய் இருந்தால், சான்றோர்க்கு, அதுவே பலமிக்க பாதுகாப்பாய் அமையும்.

ஒருவரின் நல்ல மனத்தால், ஏற்படும் நல்வினையால், மறுமை உண்டாகும். அம்மறுமையும், தான் சேர்ந்த இனத்தின், குழுவின் நற்செயல்களால், பாதுகாப்புடையதாய், நன்மை அழியாததாய், அமையும்.

நல்லினத்தால், நல்ல குழுமத்தால் கிடைக்கும் பாதுகாப்பு வேறெங்கும் இல்லை. தீயினத்தால், தீய குழுமத்தால் ஏற்படும் தொல்லைகளும் வேறெங்கும் இல்லை.

# 47. தெரிந்து செயல் வகை

*தெரிந்து செயல் வகை = செயல்களின் தன்மை அறிந்து வகைப்படுத்துதல்.*

**461. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கும்**
**ஊதியமுஞ் சூழ்ந்து செயல்.**

**அழிவதூ ம் ஆவதூஉம் ஆகி, வழிபயக்கும்**
**ஊதியமும் சூழ்ந்து, செயல்.**

*ஒரு செயலைச் செய்வதற்கு முன், அதனால் ஏற்படும் இடம், பொருள் அழிவு, மறு ஆக்கம், அதன் மூலம் ஏற்படும் பெருக்கம் அல்லது இலாபம் ஆகிய அனைத்தையும் சிந்திக்க வேண்டும்.*

**462. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்**
**கரும்பொருள் யாதொன்று மில்.**

**தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு**
**அரும் பொருள் யாது ஒன்றும் இல்.**

*செயலைத் தெரிந்த, தனக்கும் தெரிந்த மக்கள் குழுவைக் கொன்டு, பல வழிகளிலும் சிறந்த வழியைத் தேர்ந்தெடுத்து செய்வார்க்கு, கிடைப்பதற்கு அரிய பொருள் என்று எதுவும் இல்லை.*

**463. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை**
**ஊக்கா ரறிவுடை யார்.**

**ஆக்கம் கருதி, முதல் இழக்கும் செய்வினை**
**ஊக்கார், அறிவு உடையார்.**

*கிடைக்கக் கூடிய இலாபத்தை எண்ணி, அது கிடைக்காமல், கையில் இருக்கும் முதலையே இழக்கும் செயலை முயலமாட்டார்கள், அறிவுடையார்.*

**464. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னும்**
**ஏதப்பா டஞ்சு பவர்.**

**தெளிவு இலதனைத் தொடங்கார்-இளிவு என்னும்**
**ஏதப்பாடு அஞ்சுபவர்.**

*செய்யும் செயலில், செய்யும் ஆட்களில், செய்யும் இடத்தில், காலத்தில், கருவிகளில், விதத்தில், தெளிவும் உறுதியும் இல்லாமல்,*

*செயலைத் தொடங்க மாட்டார்கள், இகழ்ச்சியால் ஏற்படும் சிறுமையை எண்ணிப் பயப்படுபவர்கள்.*

**465. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்**
**பாத்திப் படுப்பதோ ராறு.**

**வகை அறச் சூழாது எழுதல், பகைவரைப்**
**பாத்திப் படுப்பது ஓர் ஆறு.**

*பல்வகை சாத்தியப்பாடுகளையும், மேற்கொள்ளும் செயலின் வழிமுறைகளையும், எதிரியின் பலம், இயக்கம், செயல் ஆகியவற்றையும், அவற்றை வெல்லும் திட்டங்கள் என அனைத்தையும் சிந்திக்காமல், நினைத்தவுடன், உணர்ச்சி வசப்பட்டு, போரிட முனைதல், வெள்ளமாக வரும் ஒரு ஆற்றுக்கு, பாத்தி கட்டி வழி ஏற்படுத்தியது போலாகும். எதிரிகள் விரைவாக, எளிதாகத் தன்னைத் தோற்கடிக்க வழிவகை செய்துவிடும், எதிரிகள் பரவி நிலைபெறச் செய்துவிடும்.*

**466. செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க**
**செய்யாமை யானுங் கெடும்.**

**செய்தக்க அல்ல செயக் கடும்; செய்தக்க**
**செயயாமையானும் கெடும்.**

*செய்யக் கூடாததைச் செய்தால், அழிவு ஏற்படும், செய்ய வேண்டியதைச் செய்யாமல் போனாலும், அழிவு ஏற்படும்.*

**467. எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்**
**எண்ணுவ மென்ப திழுக்கு.**

**எண்ணித் துணிக, கருமம்; துணிந்தபின்,**
**எண்ணுவம் என்பது இழுக்கு.**

*மேற்கொள்ளும் செயலில் வெற்றி ஏற்படுமா, தோல்வி ஏற்படுமா, தன்பலம், எதிரியின் பலம், இடம், காலம், கருவி என பலவற்றையும் தீர ஆராய்ந்து, முடிவில் வெற்றி கிடைப்பதற்குப் பெரும்பான்மையான சாத்தியம் உள்ளது என்று உறுதிப்படுத்தி, செயலைத் தொடங்கியப்பின், நிகழும் சில எதிர்பாராத செயல்பாடுகளைக் கண்டு, அஞ்சி, மீண்டும் ஆராயலாம் என்று எண்ணுவது, தொடங்கிய செயலை முன்னெடுத்துச் செல்ல முடியாமல், பின்னடைவை ஏற்படுத்தி, தோல்விக்கும் அழிவுக்கும் வழிகோலி விடும்.*

**468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.**

**ஆற்றின் வருந்தா வருத்தம், பலர் நின்று
போற்றினும், பொத்துப்படும்.**

*அவசியமற்ற இழப்புகளையும் துன்பங்களையும் ஏற்றுப் பெற்ற வெற்றியைப் பலர் பாராட்டினாலும், முடிவில், அச்செயலில் விளைந்த துன்பம் மேலோங்கி நிற்பதால், அவ்வெற்றி நினைவில் இருந்து மறைந்துவிடும்.*

**469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.**

**நன்று ஆற்றலுள்ளும் தவறு உண்டு-அவரவர்
பண்பு அறிந்து ஆற்றாக்கடை.**

*ஒவ்வொருவரின் குணம் அறிந்து, அதற்கு ஏற்றாற் போல் செய்யாமல் போனால், நல்லது செய்தாலும், தீமையாய் முடிந்து விடும்.*

**470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.**

**எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும்-தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.**

*இகழ்ச்சி வராத செயலைச் சிந்தித்துச் செய்ய வேண்டும். இயல்புக்கு மாறான செயலை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள், உலக மக்கள்.*

*தெரிந்து செயல் வகை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*ஒரு செயலைச் செய்வதற்கு முன், அதனால் ஏற்படும் அழிவு, மறு ஆக்கம், அதன் மூலம் ஏற்படும் பெருக்கம் ஆகிய அனைத்தையும் சிந்திக்க வேண்டும்.*

*செயலைத் தெரிந்த மக்கள் குழுவைக் கொன்டு, சிறந்த வழியைத் தேர்ந்தெடுத்துச் செய்வார்க்கு, கிடைப்பதற்கு அரிய பொருள் என்று எதுவும் இல்லை.*

*கிடைக்கக் கூடிய இலாபத்தை எண்ணி, அது கிடைக்காமல், கையில் இருக்கும் முதலையே இழக்கும் செயலை முயலமாட்டார்கள், அறிவுடையார்.*

*இகழ்ச்சியால் ஏற்படும் சிறுமையை எண்ணிப் பயப்படுபவர்கள், செய்யும் செயலில், தெளிவும் உறுதியும் இல்லாமல், செயலைத் தொடங்க மாட்டார்கள்.*

பல்வகை சாத்தியப்பாடுகளையும் சிந்திக்காமல், நினைத்தவுடன், உணர்ச்சி வசப்பட்டு, போரிட முனைதல், வெள்ளமாக வரும் ஒரு ஆற்றுக்கு, பாத்தி கட்டி வழி ஏற்படுத்தியது போலாகும்.

செய்யக் கூடாததைச் செய்தால், அழிவு ஏற்படும், செய்ய வேண்டியதைச் செய்யாமல் போனாலும், அழிவு ஏற்படும்.

வெற்றி கிடைப்பதற்குப் பெரும்பான்மையான சாத்தியம் உள்ளது என்று உறுதிப்படுத்தி, செயலைத் தொடங்கியப்பின், நிகழும் சில எதிர்பாராத செயல்பாடுகளைக் கண்டு, அஞ்சி, மீண்டும் ஆராயலாம் என்று எண்ணுவது, தோல்விக்கும் அழிவுக்கும் வழிகோலி விடும்.

அவசியமற்ற இழப்புகளையும் துன்பங்களையும் ஏற்றுப் பெற்ற வெற்றியைப் பலர் பாராட்டினாலும், முடிவில், அச்செயலில் விளைந்த துன்பம் மேலோங்கி நிற்பதால், அவ்வெற்றி நினைவில் இருந்து மறைந்துவிடும்.

ஒவ்வொருவரின் குணம் அறிந்து, அதற்கு ஏற்றாற் போல் செய்யாமல் போனால், நல்லது செய்தாலும், தீமையாய் முடிந்து விடும்.

இகழ்ச்சி வராத செயலைச் சிந்தித்துச் செய்ய வேண்டும். இயல்புக்கு மாறான செயலை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள், உலக மக்கள்.

# 48. வலியறிதல்

*வலியறிதல் = வலிமை அறிதல்.*

**471. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்.**

**வினை வலியும், தன்வலியும், மாற்றான் வலியும்,
துணை வலியும், தூக்கிச் செயல்.**

*ஒரு செயலைச் செய்வதற்கு தேவையான வலிமை, தன்னுடைய வலிமை, எதிரியின் வலிமை, அவரவர் நண்பர்களின் வலிமை ஆகிய யாவற்றையும் அளந்து, தம் வலிமை மிகுந்தால், செயலை மேற்கொள்ளலாம்.*

**472. ஒல்வ தறிவ தறிந்தான் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.**

**ஒல்வது அறிவது அறிந்து, அதன்கண் தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.**

*தன்னால் இயலும் செயலும், அதற்கு வேண்டிய வலிமைகளும் அறிந்து, அவற்றை ஒன்று சேர்த்த வலிமையுடையவனின், தலைமையின் கீழ் செயலாற்றுபவர்களுக்கு, நுழைய முடியாத இடம், ஏதுமில்லை, வெல்ல முடியாத காரியம், எதுவுமில்லை.*

**473. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.**

**உடைத் தம் வலி அறியார், ஊக்கத்தின் ஊக்கி,
இடைக்கண் முரிந்தார் பலர்.**

*சிதறும் தம் படை வலிமையறியாமல், மன எழுச்சியால் உந்தப்பட்டு, போரிட்டு, இடையிலேயே மனம் உடைந்து தோற்றவர் பலர், உலக வரலாற்றில் உண்டு.*

**474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.**

**அமைந்து ஆங்கு ஒழுகான், அளவு அறியான், தன்னை
வியந்தான், விரைந்து கெடும்.**

*மற்றவர்களோடு ஒத்து வாழாதவன், தன் மற்றும் பிறர் படையின் வலிமை அறியாதவன், தன் வலிமையைக் கண்டு தானே பெருமைப்பட்டுக் கொள்பவன், விரைவில் அழிவான்.*

**475. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்.**

**பீலி பெய் சாகாடும் அச்சு இறும்-அப் பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்.**

*பீலி = ப் + ஈல் + இ. கொண்டது தருவது மேலும் கீழுமாய் இருத்தல்.*

*சாகாடு = சா + காடு. இயக்கமான மரம்.*

*சிறிய கடமை அல்லது வேலையாய் இருப்பினும், மிகையாக, ஓய்வின்றி, ஒழிவின்றிச் செய்தால், செய்யும் நபரின் / படையின் மனவலிமையும், உடல் வலிமையும் குன்றி செயலிழக்க நேரிடும்.*

**476. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்**
**உயிர்க்கிறுதி யாகி விடும்.**

**நுனிச் கொம்பர் ஏறினார் அஃது இறந்து ஊக்கின்,**
**உயிர்க்கு இறுதி ஆகிவிடும்.**

*மரக்கிளையின் முனையை அடைந்தவர், அதன் வலிமையை அறிவதற்காக, மேலும் கீழும் ஆடினார் என்றால், ஏற்கனவே பாரத்தால் வலுவிழந்து இருக்கும் கிளை முறிந்து விழ, அவர் இறக்க நேரிடும். நெடுங்காலம் போரிட்ட படையின், உடல்நிலையையும் மனநிலையையும், சோதிக்கக் கூடாது.*

**477. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்**
**போற்றி வழங்கு நெறி.**

**ஆற்றின் அளவு அறிந்து ஈக; அது பொருள்**
**போற்றி வழங்கும் நெறி.**

*ஒரு செயலைச் செய்யத் தேவையான அளவு அறிந்து பொருளைத் தருக. அதுவே பொருளை மதித்து, சேமித்து, பாதுகாத்து அளிக்கின்ற முறை. இல்லையெனில், பொருள் வீணாவது மட்டுமல்லாமல், தேவையான போது, பற்றாக்குறை நேரிடும்.*

**478. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை**
**போகா றகலாக் கடை.**

**ஆகு ஆறு அளவு இட்டிது ஆயினும், கேடு இல்லை-**
**போகு ஆறு அகலாக்கடை.**

*வந்து சேர்கின்ற ஆற்றின் நீர் அளவு சிறியதாயினும் தவறில்லை, வெளியே போகின்ற கால்வாயின் நீர் அளவு மிக அதிகமாகக் கூடாது.*

*வருவாய் குறைவாய் இருந்தாலும் பரவாயில்லை, செலவு மிகையாக இருக்கக் கூடாது.*

*பெறுகின்ற ஆயுதங்கள் குறைவாய் இருந்தாலும் தவறில்லை, விநியோகிக்கும் ஆயுதங்கள் மிகையாக இருக்கக் கூடாது.*

*படையில் சேர்கின்ற நபர்கள் குறைவாய் இருந்தாலும் பரவாயில்லை, போரில் மடிகின்ற ஆட்கள் மிகையாக இருக்கக் கூடாது.*

**479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல**
**இல்லாகித் தோன்றிக் கெடும்.**

**அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகி, தோன்றாக் கெடும்.**

*வரவு, இருப்பு, செலவு ஆகியவற்றின் அளவு அறிந்து வாழாதவனின், மிகையாகச் செலவிடுபவனின், பொருளும் வாழ்க்கையும், நிறைய இருப்பது போல் தோன்றி, ஒன்றும் இல்லாமல் போய் விடும்.*

**480. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்.**

**உள வரை தூக்காத ஒப்புரவு ஆண்மை,**
**வள வரை வல்லைக் கெடும்.**

*தன்னிடம் இருக்கும் அளவை எண்ணாமல், எதிரிக்கு ஈடாகப் பொருளையும் படையையும் ஈடுபடுத்துதல், பொருளையும் ஆட்களையும் வழங்கும், நிலம் மக்கள் வரை, வலிமையை அழித்து விடும்.*

*வலியறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*ஒரு செயலைச் செய்வதற்குத் தேவையான வலிமை, தன்னுடைய வலிமை, எதிரியின் வலிமை, அவரவர் நண்பர்களின் வலிமை ஆகிய யாவற்றையும் அளந்து, தம் வலிமை மிகுந்தால், செயலை மேற்கொள்ளலாம்.*

*தன்னால் இயலும் செயலும், அதற்கு வேண்டிய வலிமைகளும் அறிந்து, அவற்றை ஒன்று சேர்த்த வலிமையுடையவனின், தலைமையின் கீழ் செயலாற்றுபவர்களுக்கு, நுழைய முடியாத இடம், ஏதுமில்லை, வெல்ல முடியாத காரியம், எதுவுமில்லை.*

*சிதறும் தம் படை வலிமையறியாமல், மன எழுச்சியால் உந்தப்பட்டு, போரிட்டு, இடையிலேயே மனம் உடைந்து தோற்றவர் பலர், உலக வரலாற்றில் உண்டு.*

*மற்றவர்களோடு ஒத்து வாழாதவன், தன் மற்றும் பிறர் படையின் வலிமை அறியாதவன், தன் வலிமையைக் கண்டு தானே பெருமைப்பட்டுக் கொள்பவன், விரைவில் அழிவான்.*

சிறிய கடமை அல்லது வேலையாய் இருப்பினும், மிகையாக, ஓய்வின்றி, ஒழிவின்றிச் செய்தால், செய்யும் நபரின் / படையின் மனவலிமையும், உடல் வலிமையும் குன்றி செயலிழக்க நேரிடும்.

மரக்கிளையின் முனையை அடைந்தவர், அதன் வலிமையை அறிவதற்காக, மேலும் கீழும் ஆடினார் என்றால், ஏற்கனவே பாரத்தால் வலுவிழந்து இருக்கும் கிளை முறிந்து விழ, அவர் இறக்க நேரிடும். படையின் தாங்கு சக்தியை, தானாகவே உணர வேண்டும். சோதிக்கக் கூடாது. அது கலகத்தில் முடியும்.

ஒரு செயலைச் செய்யத் தேவையான அளவு அறிந்து பொருளைத் தருக. அதுவே பொருளை மதித்து, சேமித்து, பாதுகாத்து அளிக்கின்ற முறை.

வந்து சேர்கின்ற ஆற்றின் நீர் அளவு சிறியதாயினும் தவறில்லை, வெளியே போகின்ற கால்வாயின் நீர் அளவு மிக அதிகமாகக் கூடாது.

வரவு, இருப்பு, செலவு ஆகியவற்றின் அளவு அறிந்து வாழாதவனின், மிகையாகச் செலவிடுபவனின், பொருளும் வாழ்க்கையும், நிறைய இருப்பது போல் தோன்றி, ஒன்றும் இல்லாமல் போய் விடும்.

தன்னிடம் இருக்கும் அளவை எண்ணாமல், எதிரிக்கு ஈடாக பொருளையும் படையையும் ஈடுபடுத்துதல், பொருளையும் ஆட்களையும் வழங்கும், நிலம் மக்கள் வரை, வலிமையை அழித்து விடும்.

# 49. காலமறிதல்

*காலமறிதல் = காலம் + அறிதல். காலம் = கால் + அம். நடக்கும் தன்மை. இயங்கும் தன்மை. பொழுது, நேரம், சமயம், பருவம், சந்தர்ப்பம், சூழ்நிலை.*

**481. பகல்வெல்லும் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும் பொழுது.**

**பகல் வெல்லும், கூகையைக் காக்கை;- இகல் வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும், பொழுது.**

*இகல் = இ + கல். நிலையான கல். தடை. வழி மறித்தல். கொள்ளையர். திருடர்கள். பகை. பயமுறுத்தல்.*

*ஆந்தையை, காக்கைகூட, பகலில் வெல்லும். பகையை வெல்ல, மன்னனுக்கு. சரியான சமயம் அவசியம்.*

*கோட்டான் அல்லது ஆந்தை எனும் பறவைக்கு, இரவில் கண்கள் நன்றாய்த் தெரியும். எனவே, இரவில், மற்ற பறவைகள் மற்றும் விலங்கினங்களை வேட்டையாடும். ஆனால், பகலிலோ கோட்டானுக்குப் பார்வை மங்கி விடும். எனவே, பகல் சமயம் பார்த்து, அதிக பலமோ, பறக்கும் சக்தியோ இல்லாத காக்கைகூட, கோட்டானைத் தாக்கி வென்றுவிடும்.*

*கோட்டானைப்போல், திருடர்களும், கொள்ளையர்களும் பொது மக்கள் உறங்கும் இரவு நேரத்திலேயே, பொதுவாகக் களவாடுவர். எனவே, நாட்டை, மக்களைக் காக்கும் அரசன், திருடர்களும் கொள்ளையர்களும் தூங்கும் பகல் நேரத்தில், சென்று தாக்கி அழிக்க வேண்டும்.*

**482. பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்**
**தீராமை யார்க்குங் கயிறு.**

**பருவத் தாடு ஒட்ட ஒழுகல்-திருவினைத்**
**தீராமை ஆர்க்கும் கயிறு.**

*இரவு, பகல் நேரம் மட்டுமல்ல. கோடை, மழை, பனி, காற்று போன்ற பருவநிலைகளையும், செயலுக்கு ஏற்றாற்போல், கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். பருவத்திற்கு ஏற்றாற்போல், உருவாகும் பிரச்சனைகளைத் தீர்க்கும் வழிகளுடன், திட்டமிட்டுச் செயல்பட்டால், வெற்றி பெறலாம். எதிர்படும் சிக்கல்களைத் தீர்க்கும் திட்டமின்றிச் செயல்பட்டால், அதுவே, எவராய் இருந்தாலும், அவர்களைப் பிணைக்கும் கயிறாகவோ, தூக்குக் கயிறாகவோ ஆகிவிடும்.*

**483. அருவினை யென்ப வுளவோ கருவியால்**
**கால மறிந்து செயின்.**

**அரு வினை என்ப உளவோ-கருவியான்**
**காலம் அறிந்து செயின்?**

*ஒரு செயலுக்குத் தேவையான கருவியால், சரியான காலம் பார்த்து செய்தால், முடியாத காரியங்கள் என்று எவையாவது உள்ளனவா என்ன?*

**484. ஞாலமுங் கருதினுங் கைகூடுங் காலம்**
**கருதி யிடத்தாற் செயின்.**

**ஞாலம் கருதினும், கைகூடும்-காலம்**
**கருதி, இடத்தான் செயின்.**

*சரியான காலத்தில், தனக்கு சாதகமான இடத்தில், செயல்களைச் செய்தால், உலகையே அடைய எண்ணினாலும், சாத்தியமே.*

**485. காலங் கருதி யிருப்பர் கலங்காது**
**ஞாலங் கருது பவர்.**

**காலம் கருதி இருப்பர்-கலங்காது**
**ஞாலம் கருதுபவர்.**

*சரியான காலத்திற்காக, குழப்பமின்றிக் காத்திருப்பர், ஞாலத்தை வெல்ல எண்ணுபவர்.*

**486. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்**
**தாக்கற்குப் பேருந் தகைத்து.**

**ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொரு தகர்**
**தாக்கற்குப் பேரும் தகைத்து.**

*வலிமையும் முயற்சியும் உடையவன் போரிடாமல் அமைதியாய் இருப்பது, சண்டையிடும் ஆடு, தாக்குவதற்குத் தனக்கேற்ற சமயம் அமைய, இடம் பெயர்வதற்கு, பின் வாங்குவதற்கு ஒப்பாகும்.*

**487. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்**
**துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.**

**பொள்ளென ஆங்கே புறம் வேரார்; காலம் பார்த்து,**
**உள் வேர்ப்பர், ஒள்ளியவர்.**

*எல்லோரும் அறியும் வகையில் மனத்தில் உள்ளதை வெளிப்படுத்தாமல், தகுந்த காலத்திற்காகக் காத்திருந்து, இரகசியமாகப் போருக்கான ஆயத்தம் செய்வர், தெளிவான அறிவுடைய மன்னர்.*

**488. செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை**
**காணிற் கிழக்காந் தலை.**

**செறுநரைக் காணின் சுமக்க; இறுவரை**
**காணின் கிழக்கு ஆம் தலை.**

*பகைமை பாராட்டும் வலிமை மிகுந்த மன்னரைக் கண்டால், மனப்பாரத்தைப் பொறுத்துக் கொள்க, அவர் இறக்கும் வரை. காத்து இருந்தால், நிலைமை தலை கீழாகலாம். நீயே கூட அவரைவிட வலிமை மிகுந்த மன்னனாகலாம்.*

**489. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே**
**செய்தற் கரிய செயல்.**

**எய்தற்கு அரியது இயைந்தக்கால், அந் நிலையே**
**செய்தற்கு அரிய செயல்.**

*அடைவதற்கு அரிய சந்தர்ப்பங்களும், சூழ்நிலைகளும் இயல்பாய் அமைந்த நிலைமையே, செய்தற்கு அரிய செயலைச் செய்யும் காலம்.*

**490. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த விடத்து.**

**கொக்கு ஒக்க, கூம்பும் பருவத்து; மற்று அதன்**
**குத்து ஒக்க, சீர்த்த இடத்து.**

*காலம் வரும்வரை, கொக்கைப் போல் வாய்மூடி, அசையாமல், அமைதியாய் காத்திருக்க வேண்டும். மேலும், மீன் நீச்சல் அற்று அருகில் வருகையில், கொக்கு, குத்திக் கொள்வது போல், பகைவனின் இயக்கமற்ற காலம் இடம் பார்த்து, குத்திக் கொல்ல வேண்டும்.*

**காலமறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*பகைவனை, தயார் நிலையில் இல்லாத சமயம், வலிமை குன்றிய சமயம் பார்த்துத் தாக்க வேண்டும்.*

*பருவத்திற்கு ஏற்றாற்போல், உருவாகும் பிரச்சனைகளைத் தீர்க்கும் வழிகளுடன், திட்டமிட்டுச் செயல்பட்டால், வெற்றி பெறலாம். எதிர்படும் சிக்கல்களைத் தீர்க்கும் திட்டமின்றிச் செயல்பட்டால், அதுவே, எவராய் இருந்தாலும், அவர்களைப் பிணைக்கும் கயிறாகவோ, தூக்குக் கயிறாகவோ ஆகிவிடும்.*

*ஒரு செயலுக்குத் தேவையான கருவியால், சரியான காலம் பார்த்துச் செய்தால், முடியாத காரியங்கள் என்று எவையாவது உள்ளனவா என்ன?*

*சரியான காலத்தில், தனக்குச் சாதகமான இடத்தில், செயல்களைச் செய்தால், உலகையே அடைய எண்ணினாலும், சாத்தியமே.*

*சரியான காலத்திற்காக, குழப்பமின்றிக் காத்திருப்பர், ஞாலத்தை வெல்ல எண்ணுபவர்.*

*வலிமையும் முயற்சியும் உடையவன் போரிடாமல் அமைதியாய் இருப்பது, சண்டையிடும் ஆடு, தாக்குவதற்குத் தனக்கேற்ற சமயம் அமைய, இடம் பெயர்வதற்கு, பின் வாங்குவதற்கு ஒப்பாகும்.*

*எல்லோரும் அறியும் வகையில் மனத்தில் உள்ளதை வெளிப்படுத்தாமல், தகுந்த காலத்திற்காகக் காத்திருந்து, இரகசியமாகப் போருக்கான ஆயத்தம் செய்வர், தெளிவான அறிவுடைய மன்னர்.*

*பகைமை பாராட்டும் வலிமை மிகுந்த மன்னரைக் கண்டால், மனப்பாரத்தைப் பொறுத்துக் கொள்க, அவர் இறக்கும் வரை. காத்து இருந்தால், நிலைமை தலை கீழாகலாம். நீயே கூட அவரைவிட வலிமை மிகுந்த மன்னனாகலாம்.*

*அடைவதற்கு அரிய சந்தர்ப்பங்களும், சூழ்நிலைகளும் இயல்பாய் அமைந்த நிலைமையே, செய்தற்கு அரிய செயலைச் செய்யும் காலம்.*

*காலம் வரும்வரை, கொக்கைப் போல் வாய்மூடி, அசையாமல், அமைதியாய் காத்திருக்க வேண்டும். மேலும், மீன் நீச்சல் அற்று அருகில் வருகையில், கொக்கு, குத்திக் கொள்வது போல், பகைவனின் இயக்கமற்ற காலம் இடம் பார்த்து, குத்திக் கொல்ல வேண்டும்.*

# 50. இடனறிதல்

*இடனறிதல் = இடம் + அறிதல். களம், புலம், வெளி, பாதுகாப்பு, சூழல் அறிதல்.*

**491. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று**
**மிடங்கண்ட பின்னல் லது.**

**தொடங்கற்க எவ் வினையும்; எள்ளற்க-முற்றும்**
**இடம் கண்டபின் அல்லது!**

*தன்னுடைய வெற்றிக்குச் சாதகமான, சண்டையிடும் இடத்தைத் தேர்ந்தெடுத்து அடையும் வரை, எதிரி சந்தேகப்படும்படி, எந்தச் செயலையும் செய்ய வேண்டாம், எதிரியைச் சீண்டும் விதமாக, எள்ளி நகையாட வேண்டாம்.*

**492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தாம்**
**ஆக்கம் பலவுந் தரும்.**

**முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கும் அரண் சேர்ந்து ஆம்**
**ஆக்கம் பலவும் தரும்.**

*முரட்டுத்தனமான முறுக்கேறிய வலிமையுள்ளவர்க்கும், அரண் எனும் பாதுகாப்பு, பல சாதகமான நன்மைகளைத் தரும்.*

**493. ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து**
**போற்றார்கட் போற்றிச் செயின்.**

**ஆற்றாரும் ஆற்றி அடுப-இடன் அறிந்து**
**போற்றார்கண் போற்றிச் செயின்?**

*பொதுவாக ஒரு செயலைச் செய்ய முடியாதவர்களும், வலிமை இல்லாதவர்களும்கூட, சரியான இடத்தைத் தேர்ந்தெடுத்து அடைந்து, ஆட்களையும் பொருளையும் பாதுகாக்க முடியாமற் போகும் எதிரியிடம், தன்னுடைய ஆட்களையும் பொருளையும் பாதுகாத்து, அச்செயலைச் செய்து வெற்றி பெறுவர். கொரில்லாப் போர் முறைகளில் ஒன்று.*

**494. எண்ணியார் எண்ண மிழப்ப ரிடனறிந்து**
**துன்னியார் துன்னிச் செயின்.**

**எண்ணியார் எண்ணம் இழப்பர்-இடன் அறிந்து**
**துன்னியார் துன்னிச் செயின்.**

*கோட்டைக்குள் இருப்பவராய் இருந்தாலும் சரி, முற்றுகை இடுபவராய் இருந்தாலும் சரி, எதிரியின் பலவீனமான இடத்தில், மிக நெருக்கமாக இருந்து, அழுத்தத்தைத் தொடர்ந்து கொடுத்தால், வெற்றி பெறுவோம் எனும் நம்பிக்கையை எதிராளி இழப்பர்.*

**495. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலின்**
**நீங்கி னதனைப் பிற.**

**நெடும் புனலுள் வெல்லும் முதலை; அடும், புனலின்**
**நீங்கின், அதனைப் பிற.**

*நீண்ட ஆழமான நீரோட்டத்துள் முதலை, பிற எல்லா விலங்குகளையும், அவை பொதுவாக எவ்வளவு வலிமையாய் இருந்தாலும், வெல்லும். அதே முதலை நீரோட்டத்தை நீங்கி, நிலத்திற்கு வந்துவிட்டால், பிற எல்லா உயிரினங்களும், வலிமை குன்றிய மிகச்சிறிய எறும்பு உள்பட, முதலையைத் துன்புறுத்தி வென்றுவிடும்.*

**496. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடும்**
**நாவாயு மோடா நிலத்து.**

**கடல் ஓடா, கால் வல் நெடுந் தேர்; கடல் ஒடும்**
**நாவாயும் ஓடா, நிலத்து.**

*நிலத்தில் ஓடும் வலிமையான சக்கரங்களைக் கொண்ட உயர்ந்த தேர், கடலில் ஓடாது. கடலில் (வாயுக்குள் அசையும் நாவைப்போல்), எல்லாத் திசையிலும் ஓடக்கூடிய படகும், நிலத்தில் ஓடாது.*

**497. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை**
**எண்ணி யிடத்தாற் செயின்.**

**அஞ்சாமை அல்லால், துணை வேண்டா-எஞ்சாமை**
**எண்ணி இடத்தான் செயின்.**

*தனக்கு சாதகமான இடத்தில், போரிட வேண்டிய எல்லாவற்றையும் முன்கூட்டியே சிந்தித்து ஒழுங்கமைத்தப்பின், வெற்றியைப் பெற, அஞ்சாமையைத் தவிர வேறெந்தத் துணையும் வேண்டியதில்லை.*

**498. சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையான்**
**ஊக்க மழிந்து விடும்.**

**சிறு படையான் செல் இடம் சேரின், உறு படையான்**
**ஊக்கம் அழிந்து விடும்.**

*தனக்கு சாதகமான இடத்தை அடைந்த சிறிய படையை, எதிர்க்கும் பெரும்படை நெருங்கினால், சிறிய படையின் தந்திரம் மிகுந்த வலிமையான தாக்குதலால், பெரும்படை தன் வெற்றி மற்றும் செயல் மீதான நம்பிக்கையை இழந்து விடும், தோற்று விடும்.*

**499. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்தர்
உறைநிலத்தோ டொட்ட லரிது.**

**சிறை நலனும் சீரும் இலர் எனினும், மாந்தர் உறை
நிலத்தோடு ஒட்டல் அரிது.**

*கோட்டையும், சேமிப்பும் இல்லை என்றாலும், போரிடும் மக்கள் வாழ்கின்ற இடத்தில், மறைந்து இருந்து எல்லாப் பக்கமும் அவர்கள் தாக்க முடிவதால், எதிரிப்படை நிலைத்து நிற்க முடியாது.*

**500. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.**

**கால் ஆழ் களரில் நரி அடும், கண் அஞ்சா
வேல் ஆள் முகத்த களிறு.**

*பயம் என்பதைக் கண்ணில் காட்டாத, ஈட்டியைப் போன்ற தும்பிக்கையை, முகத்தில் உடைய, உடலால் பெரியதும் உறுதியுமான யானையின் கால்கள், களிமண்ணில் புதைந்து விட்டால், யானையைக் கண்டாலே நடுங்கியோடும், உடலால் சிறியதும், வலிமை குன்றியதுமான நரியும், யானையைக் கொன்றுவிடும், வென்றுவிடும்.*

### இடனறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

*தன்னுடைய வெற்றிக்குச் சாதகமான, சண்டையிடும் இடத்தைத் தேர்ந்தெடுத்து அடையும் வரை, எதிரி சந்தேகப்படும்படி, எந்தச் செயலையும் செய்ய வேண்டாம், எதிரியைச் சீண்டும் விதமாக, எள்ளி நகையாட வேண்டாம்.*

*முரட்டுத்தனமான முறுக்கேறிய வலிமையுள்ளவர்க்கும், அரண் எனும் பாதுகாப்பு, பல சாதகமான நன்மைகளைத் தரும்.*

*பொதுவாக ஒரு செயலைச் செய்ய முடியாதவர்களும், வலிமை இல்லாதவர்களும்கூட, சரியான இடத்தைத் தேர்ந்தெடுத்து அடைந்து, ஆட்களையும் பொருளையும் பாதுகாக்க முடியாமற் போகும் எதிரியிடம், தன்னுடைய ஆட்களையும் பொருளையும் பாதுகாத்து, அச்செயலைச் செய்து வெற்றி பெறுவர். கொரில்லாப் போர் முறைகளில் ஒன்று.*

*கோட்டைக்குள் இருப்பவராய் இருந்தாலும் சரி, முற்றுகை இடுபவராய் இருந்தாலும் சரி, எதிரியின் பலவீனமான இடத்தில், மிக நெருக்கமாக இருந்து, அழுத்தத்தைத் தொடர்ந்து கொடுத்தால், வெற்றி பெறுவோம் எனும் நம்பிக்கையை எதிராளி இழப்பர்.*

*நீண்ட ஆழமான நீரோட்டத்துள் முதலை, பிற எல்லா விலங்குகளையும், அவை பொதுவாக எவ்வளவு வலிமையாய் இருந்தாலும், வெல்லும். அதே முதலை நீரோட்டத்தை நீங்கி, நிலத்திற்கு வந்துவிட்டால், பிற எல்லா உயிரினங்களும், வலிமை குன்றிய மிகச்சிறிய எறும்பு உள்பட, முதலையைத் துன்புறுத்தி வென்றுவிடும்.*

*நிலத்தில் ஓடும் வலிமையான சக்கரங்களைக் கொண்ட உயர்ந்த தேர், கடலில் ஓடாது. கடலில் (வாயுக்குள் அசையும் நாவைப்போல்), எல்லாத் திசையிலும் ஓடக்கூடிய படகும், நிலத்தில் ஓடாது.*

*தனக்குச் சாதகமான இடத்தில், போரிட வேண்டிய எல்லாவற்றையும் முன்கூட்டியே சிந்தித்து ஒழுங்கமைத்தப்பின், வெற்றியைப் பெற, அஞ்சாமையைத் தவிர வேறெந்தத் துணையும் வேண்டியதில்லை.*

*தனக்குச் சாதகமான இடத்தை அடைந்த சிறிய படையை, எதிர்க்கும் பெரும்படை நெருங்கினால், சிறிய படையின் தந்திரம் மிகுந்த வலிமையான தாக்குதலால், பெரும்படை தன் வெற்றி மற்றும் செயல் மீதான நம்பிக்கையை இழந்து விடும், தோற்று விடும்.*

*கோட்டையும், சேமிப்பும் இல்லை என்றாலும், போரிடும் மக்கள் வாழ்கின்ற இடத்தில், மறைந்து இருந்து எல்லாப் பக்கமும் அவர்கள் தாக்க முடிவதால், எதிரிப்படை நிலைத்து நிற்க முடியாது.*

*பயம் என்பதைக் கண்ணில் காட்டாத, ஈட்டியைப் போன்ற தும்பிக்கையை, முகத்தில் உடைய, உடலால் பெரியதும் உறுதியுமான யானையின் கால்கள், களிமண்ணில் புதைந்து விட்டால், யானையைக் கண்டாலே நடுங்கியோடும், உடலால் சிறியதும், வலிமை குன்றியதுமான நரியும், யானையைக் கொன்றுவிடும், வென்றுவிடும்.*

# 51. தெரிந்து தெளிதல்

*தெரிந்து தெளிதல் = குணங்களை அறிந்து சேனைத்தலைவர்களை, அறவோர்களை, அறிஞர்களை, அமைச்சர்களை, அலுவலர்களைத் தேர்ந்தெடுத்தல்.*

**501. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.**

**அறம் பொருள், இன்பம், உயிர் அச்சம், நான்கின்
திறம் தெரிந்து தேறப்படும்.**

*புலனடக்கம், பிற உயிர்களைக் கொல்லாது பொருள் சேர்த்தல், பிறனில் விழையாத இல்லற இன்பம், உயிர்ப்பயமில்லா துணிவு போன்றவற்றை உடையவர்களையே அமைச்சர்களாகவும், சேனைத்தலைவர்களாகவும் தேர்ந்தெடுத்தல் வேண்டும்.*

**502. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.**

**குடிப் பிறந்து, குற்றத்தின் நீங்கி, வடுப் பரியும்
நாண் உடையான்கட்டே தெளிவு.**

*பரி = ப் + அரி. கொண்டதைப் பிரி.*

*அன்பு, அறிவு, பணிவு ஆகிய பண்புகளைக் கொண்ட குடும்பத்தில் பிறந்து, அப்பண்புகளை மேலும் வளர்க்கும் சூழலில் வளர்ந்து, அழுக்காறு, வெகுளி, மடி, பயனில சொல்லாமை அடக்கமின்மை போன்ற குற்றங்கள் அகன்று, வெஃகுதல், களவு, சிற்றினம் சேர்தல், பிறனில் விழைதல் போன்ற பழிகளைத் தரும் குணங்களுக்கு அஞ்சி, அவை தன்னை ஒட்ட விடாமல் தள்ளுபவரையே தேர்வு செய்திட வேண்டும்.*

**503. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு.**

**அரிய கற்று, ஆசு அற்றார்கண்ணும், தெரியுங்கால்
இன்மை அரிதே, வெளிறு.**

*வெளிறு = வெள் + இறு. வெண்மை நிற்றல். தூய்மை.*

*கடினமான, நுட்பமான, புதியதானவைகளைக் கற்று, ஆசையும் அற்றவர் என்பவர் இடத்தில், கூர்ந்து நோக்கினால், அறிவுடைமை மற்றும் அவாவின்மை எனும் முழுத்தூய்மை இருப்பது கடினந்தான்.*

*கடினமானதைக் கற்பதன் பின்புலத்தில், பொதுவாக பொருளீட்டும் ஆசையும் இருக்கும். அத்தகையோர்க்கு பேராசை இல்லாமல் இருக்கலாம்,*

*ஆசையே இல்லாமல் இருப்பது பொதுவான இயல்பல்ல, நிகழ்வல்ல. குணத்துடன் சில குறைகள் இருப்பதும் பொது இயல்பே.*

**504. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.**

**குணம் நாடி, குற்றமும் நாடி, அவற்றுள்
மிகை நாடி, மிக்க கொளல்.**

*நல்ல பண்புகளையும், குற்றம் குறைகளையும் கண்டு அவை எவ்வளவு தூரம் செல்லும், எத்தகைய பயனளிக்கும், எவ்வளவு பாதிப்பை ஏற்படுத்தும் என்பதைக் கணக்கில் கொண்டு, தான் கண்டு விரும்பும் குணங்களைக் கூறி, அவற்றை மேலும் வளர்க்க வேண்டியதன் அவசியத்தையும் கூறி, பதவியில் அமர்த்த வேண்டும்.*

**505. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.**

**பெருமைக்கும், ஏனைச் சிறுமைக்கும், தத்தம்
கருமமே கட்டளைக் கல்.**

*கட்டளை = கட்டு + அள் + ஐ. இணைந்து மிகை ஐக்கியமானது. மிகையின் தன்மை.*

*கல் = க் + அல். பொருண்மை அதிர்வற்றது, அசைவற்றது. நிலைத்த தன்மை. நிலைமை.*

*குணத்தின் பெருமை அறிவதற்கும், குற்றத்தின் சிறுமை அறிவதற்கும் அவரவருடைய செயல்வினைகளே, (பொன்) உரைத்துப் பார்க்கும் கல்லாகும்.*

*வாழ்க்கை நிகழ்வுகளையும், அவற்றைக் கையாண்ட விதங்களையும் அறிவதன் மூலம், அவருடைய பெருமை, சிறுமையை அறியலாம். இன்றைய நடத்தை நேர்முகம் போன்றது.*

**506. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.**

**அற்றாரைத் தேறுதல் ஓம்புக; மற்று அவர்
பற்று இலர்; நாணார் பழி.**

*அற்றார் = ஆசை அற்றார். அறத்தில் நிற்பவர்.*

*பற்றிலர் = அறத்தைப் பற்றாதவர். பாவம், புண்ணியம் கருதாதவர்.*

*ஆசை அற்றாரை, அறத்தில் நிற்பவரைத் தேர்வுச் செய்து, அவருக்கு தேவையானதைத் தந்து பராமரிக்கவும். மற்றவர்கள், ஆசையுள்ளோர்,*

*அறத்தைப் பற்றாதவர்கள், பழிக்கு அஞ்சமாட்டார்கள். எனவே, அவர்களைத் தேர்வு செய்ய வேண்டாம்.*

**507. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.**

**காதன்மை கந்தா, அறிவு அறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும்.**

*காதன்மை = காதல் + மை. காதல் = க் + ஆத் + அல். மெய் ஆதல். காதன்மை = அசையாத் தன்மை. அன்பு.*

*கந்தா(ம்) = க் + அந்தாம். மெய் முடிவுறும்.*

*அன்பால் மெய்யுணரும் அறிவை அறியாதவரைத் தேர்ந்தெடுத்தல், எல்லா அறியாமையையும் தரும். அன்புடையோரே அறிவுடையோர், அறவோர்.*

*அறவோரை அறிதலுக்கான இலக்கணம் இது போலும்.*

**508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.**

**தேரான், பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.**

*தகுதியில்லாதவனையும், பகையாளையும் தேர்ந்தெடுத்தவன் வழிமுறை முடிவில்லா துன்பத்தைத் தரும்.*

*தேர்ந்தெடுக்கும் வழிமுறையில் தவறிருந்தால், தேர்ந்தெடுக்கப்படும் அனைவருமே தகுதியில்லாதவரும், தன் நாட்டிற்குத் தீங்கு விளைவிப்பவருமாய் இருக்க வாய்ப்புண்டு. எனவே, பதவிக்கும் வேலைக்கும் தேர்ந்தெடுக்கும் வழிமுறை, தகுதியானவர்களையும், நாட்டுப் பற்றுள்ளவர்களை மட்டுமே தேர்ந்தெடுக்கக் கூடியதாய் இருக்க வேண்டும்.*

**509. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.**

**தேறற்க யாரையும், தேராது; தேர்ந்த பின்,
தேறுக, தேறும் பொருள்.**

*ஆராயாமல், சோதித்தறியாமல், தகுதியில்லாமல் யாரையும் தேர்ந்தெடுக்கக் கூடாது. அவர் தகுதியடைந்தப்பின், அவர் மூலம் எதைச் சாதிக்க முடியுமோ, அதைச் சாதித்துக் கொள்ளவும்.*

**510. தேறான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவும்**
**தீரா விடும்பை தரும்.**

**தேரான் தெளிவும், தெளிந்தான்கண் ஐயுறவும்,**
**தீரா இடும்பை தரும்.**

தேர்ந்தெடுக்கத் தெரியாதவனின் தேர்ந்தெடுப்பும், தேர்ந்தெடுக்கப்பட்டவன் மீதான சந்தேகமும் முடிவில்லா துன்பத்தைத் தரும்.

தேர்ந்தெடுக்கும் வழிமுறை, பிழைகளற்றதாயும், தகுதியுள்ளவரையும், தம்நாட்டிற்கு தீங்கு விளைவிக்காதவரையும், தேர்ந்தெடுப்பதாய் இருக்க வேண்டும். தேர்ந்தெடுத்தப்பின் அவரைத் தேவையின்றிச் சந்தேகப்படாமல், நம்புதல் வேண்டும்.

தெரிந்து தெளிதல் அதொகாரப் பொருள் தொகுப்பு:

புலனடக்கம், பிற உயிர்களைக் கொல்லாது பொருள் சேர்த்தல், பிறனில் விழையாத இல்லற இன்பம், உயிர்ப்பயமில்லா துணிவு போன்றவற்றை உடையவர்களையே அமைச்சர்களாகவும், சேனைத்தலைவர்களாகவும் தேர்ந்தெடுத்தல் வேண்டும்.

அன்பு, அறிவு, பணிவு ஆகிய பண்புகளைக் கொண்ட குடும்பத்தில் பிறந்து, அப்பண்புகளை மேலும் வளர்க்கும் சூழலில் வளர்ந்து, அழுக்காறு, வெகுளி, மடி, பயனில சொல்லாமை அடக்கமின்மை போன்ற குற்றங்கள் அகன்று, வெஃகுதல், களவு, சிற்றினம் சேர்தல், பிறனில் விழைதல் போன்ற பழிகளைத் தரும் குணங்களுக்கு அஞ்சி, அவை தன்னை ஒட்ட விடாமல் தள்ளுபவரையே தேர்வு செய்திட வேண்டும்.

கடினமான, நுட்பமான, புதியதானவைகளைக் கற்று, ஆசையும் அற்றவர் என்பவர் இடத்தில், கூர்ந்து நோக்கினால், அறிவுடைமை மற்றும் அவாவின்மை எனும் முழுத்தூய்மை இருப்பது கடினந்தான்.

நல்ல பண்புகளையும், குற்றம் குறைகளையும் கண்டு அவை எவ்வளவு தூரம் செல்லும், எத்தகைய பயனளிக்கும், எவ்வளவு பாதிப்பை ஏற்படுத்தும் என்பதைக் கணக்கில் கொண்டு, தான் கண்டு விரும்பும் குணங்களைக் கூறி, அவற்றை மேலும் வளர்க்க வேண்டியதன் அவசியத்தையும் கூறி, பதவியில் அமர்த்த வேண்டும்.

குணத்தின் பெருமை அறிவதற்கும், குற்றத்தின் சிறுமை அறிவதற்கும் அவரவருடைய செயல்வினைகளே, (பொன்) உரைத்துப் பார்க்கும் கல்லாகும்.

ஆசை அற்றாரை, அறத்தில் நிற்பவரைத் தேர்வு செய்து, அவருக்கு தேவையானதைத் தந்து பராமரிக்கவும். மற்றவர்கள், ஆசையுள்ளோர், அறத்தைப் பற்றாதவர்கள், பழிக்கு அஞ்சமாட்டார்கள்.

அன்பால் மெய்யுணரும் அறிவை அறியாதவரைத் தேர்ந்தெடுத்தல், எல்லா அறியாமையையும் தரும். அன்புடையோரே அறிவுடையோர், அறவோர்.

தகுதியில்லாதவனையும், பகையாளையும் தேர்ந்தெடுத்தவன் வழிமுறை முடிவில்லா துன்பத்தைத் தரும்.

ஆராயாமல், சோதித்தறியாமல், தகுதியில்லாமல் யாரையும் தேர்ந்தெடுக்கக் கூடாது. அவர் தகுதியடைந்தப்பின், அவர் மூலம் எதைச் சாதிக்க முடியுமோ, அதைச் சாதித்துக் கொள்ளவும்.

தேர்ந்தெடுக்கத் தெரியாதவனின் தேர்ந்தெடுப்பும், தேர்ந்தெடுக்கப்பட்டவன் மீதான சந்தேகமும் முடிவில்லா துன்பத்தைத் தரும்.

# 52. தெரிந்து வினையாடல்

*தெரிந்து வினையாடல் = ஒரு செயலின் நன்மை, தீமைகளை அறிந்து, அதை நன்கு செய்தவர்களை அறிந்து, அச்செயலைச் செய்தல்.*

**511. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த**
**தன்மையா னாளப் படும்.**

**நன்மையும் தீமையும் நாடி, நலம் புரிந்த**
**தன்மையான் ஆளப்படும்.**

*ஒரு புதிய வினையால் விளையும், நன்மை தீமைகளை ஆராய்ந்து, கடந்தக் கால வரலாற்றில், அத்தகைய வினையில், நன்மைகளை மிகையாய்ப் புரிந்த அனுபவம் யாரிடம் உள்ளதோ, அவரைக் கொண்டு அவ்வினை செய்யப்பட வேண்டும்.*

**512. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை**
**ஆராய்வான் செய்க வினை.**

**வாரி பெருக்கி, வளம் படுத்து, உற்றவை**
**ஆராய்வான் செய்க வினை!**

*வாரி = வ் + ஆர் + இ. புறத்திலிருந்து அகமாய் பிரிந்து இருப்பது. வாரி = உ + ஆர் + இ. புறத்திலிருந்து வந்து இருப்பது. விளைவு. வருமானம்.*

*விளைச்சலைப் பெருக்கி, நாட்டை வளப்படுத்த தேவையானவைகளைப் பற்றிச் சிந்திப்பவன், அவற்றைச் செயல்புரிய, அமர்த்தப்பட வேண்டும்.*

*வருவாயை அதிகமாக்க, பயிர், காய், கிழங்கு, கனி, கால்நடைகளின் உற்பத்தியைப் பெருக்க வேண்டும். இவ்வுற்பத்திகளைப் பெருக்க மிகவும் தேவையான ஒன்று, நீர் வளம். நீர்வரத்தையும், கால்வாய்களையும், தேக்கங்களையும், விநியோகத்தையும் ஒழுங்கு செய்தல் வேண்டும். இடைப்படும் தடைகளை அகற்ற வேண்டும். நிலம் மற்றும் பயிர் பாதுகாப்பை ஏற்படுத்த வேண்டும். வணிகம் நடைபெற சாலைகள் அமைக்கப்பட்டு, பாதுகாப்பும் அளிக்கப்பட வேண்டும்.*

*கனிவளங்களைத் தூய்மையாக்கி, பயன்படு பொருள்களை உற்பத்தி செய்வதற்கான தொழில் வசதிகளை ஏற்படுத்தித் தருதல், வருவாயை மேலும் அதிகரிக்கும்.*

*கைவினைப் பொருட்கள், கலைப் பொருட்கள் ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்குதல், வருவாயை மேலும் அதிகரிக்கும்.*

**513. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கும்**
**நன்குடையான் கட்டே தெளிவு.**

**அன்பு, அறிவு தேற்றம், அவா இன்மை, இந் நான்கும்**
**நன்கு உடையான்கட்டே தெளிவு.**

*நாடு, மக்கள் மீதான அன்பு, செய்யும் வினைகளைப் பற்றிய அறிவு, குறிப்பிட்ட செயலுக்கான சிந்தனை, திட்டம், அபகரிக்கும் ஆசையின்மை ஆகிய நான்கும் நன்கு உள்ளவனையே வருவாய் பெருக்கும் வினைகள் செய்ய தெரிவு செய்ய வேண்டும்.*

**514. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்**
**வேறாகு மாந்தர் பலர்.**

**எனை வகையான் தேறியக்கண்ணும், வினை வகையான்**
**வேறாகும் மாந்தர் பலர்.**

*கல்வி, அறிவு, சிந்தனை, அனுபவம் எனப் பலவகையால் சோதித்து தேர்ந்தெடுத்தப் பின்னரும், கொடுக்கப்பட்ட வினையைச் செய்யும் விதத்தால், நினைத்ததற்கு மாறாய் இருப்பார்கள், பல மனிதர்கள்.*

**515. அறிந்தாற்றிற் செய்கிற்பாற் கல்லால் வினைதான்**
**சிறந்தானென் றேவற்பாற் றன்று.**

**அறிந்து, ஆற்றி, செய்கிற்பாற்கு அல்லால், வினைதான்**
**சிறந்தான் என்று ஏவற்பாற்று அன்று.**

*அறிவு, சிந்தனை, செயல், விதம் ஆகிய விரிவான ஆழமான திட்டம் கொண்ட ஒருவரைத் தவிர, வேறொருவரை வினைக்குரிய சிறந்தவன் என்று அமர்த்திவிடக் கூடாது.*

**516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ**
**டெய்த வுணர்வார் செயல்.**

**செய்வானை நாடி, வினை நாடி, காலத்தோடு**
**எய்த உணர்ந்து, செயல்!**

*செயலைச் செய்யக்கூடியவர் யார் யார் என ஆராய்ந்து, செயலின் விவரங்களையும் ஆராய்ந்து, குறிப்பிட்ட காலத்திற்குள் அச்செயலைச் செய்ய வேண்டிய அவசியத்தையும் உணர்ந்தவர் யாரோ, அவரை, அச்செயலைச் செய்யவிட வேண்டும்.*

**517. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்**
**ததனை யவன்கண் விடல்.**

**'இதனை, இதனால், இவன் முடிக்கும்' என்று ஆய்ந்து,**
**அதனை அவன்கண் விடல்.**

*குறிப்பிட்ட ஒரு செயலை, குறிப்பிட்ட ஒரு கருவியால், குறிப்பிட்ட ஒருவனால் செய்ய முடியும் என உறுதிப்படுத்தி, அச்செயலை அவனிடம் விட வேண்டும்.*

**518. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை**
**அதற்குரிய னாகச் செயல்.**

**வினைக்கு உரிமை நாடிய பின்றை, அவனை**
**அதற்கு உரியன் ஆகச் செயல்.**

*வினையைச் செய்யக் கூடியவர் யாரென்று ஆராய்ந்து, அவரிடம் அச்செயலை விட்டப் பின்னர், அச்செயலை அவர் செய்வதற்குரிய பயிற்சியையும் உதவிகளையும் அளித்தல் வேண்டும்.*

**519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக**
**நினைப்பானை நீங்குந் திரு.**

**வினைக்கண் வினைஉடையான் கேண்மை வேறு ஆக**
**நினைப்பானை நீங்கும் திரு.**

*கேண்மை = க் + ஏள் + மை. மெய் மிக உயர்ந்து மிகையாகும் தன்மை. உற்சாகம், சுறுசுறுப்பு.*

*ஒரு செயலைச் செய்பவன் உற்சாகமாகவும், சுறுசுறுப்பாகவும் இருந்தால், அவனுக்கு அச்செயலில் ஏதோ சுயலாபம் இருக்கின்றது போலும் என்று எண்ணி, அவனை நீக்கி, வேறொருவரை நியமித்தால், அச்செயல் ஒழுங்காய் முடிவுறாமல், செய்த முதலீடும் இழப்பாகி விடும்.*

**520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்**
**கோடாமை கோடா துலகு.**

**நாள் தோறும் நாடுக மன்னன் - வினை செய்வான்**
**கோடாமை கோடாது உலகு.**

*கோடு = க் + ஓட் + உ. மெய் மிக உயர்ந்து ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுதல். மலை. கோல். பிரிவு. பிளவு. ஒழுங்கு தவறுதல்.*

*ஒவ்வொரு நாளும் மன்னன், வினைசெய்பவனைக் கண்காணித்தல் வேண்டும். அப்பொழுதுதான், வினைபுரிபவன் ஒழுங்கு தவறாமல் இருப்பான். வினைபுரிபவன் ஒழுங்கு தவறாமல் இருப்பதைக் காணும் மக்களும், ஒழுங்கு தவறாமல் இருப்பார்கள்.*

**தெரிந்து வினையாடல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஒரு செயலின் நன்மை தீமைகளை ஆராய்ந்து, ஏற்கனவே, அத்தகைய செயலை, நன்கு செய்தவனைக் கொண்டு, அச்செயலைச் செய்தல் வேண்டும்.*

விளைச்சலைப் பெருக்கி, நாட்டை வளப்படுத்த தேவையானவைகளைப் பற்றி சிந்திப்பவன், அவற்றைச் செயல்புரிய, அமர்த்தப்பட வேண்டும்.

அன்பு, அறிவு, திட்டம், ஆசையின்மை ஆகிய நான்கையும் நன்கு உள்ளவனையே வருவாய் பெருக்கும் வினைகள் செய்ய தெரிவு செய்ய வேண்டும்.

எந்த வகையால் சோதித்துத் தேர்ந்தெடுத்தப் பின்னரும்கூட, கொடுக்கப்பட்ட வினையைச் செய்யும் விதத்தால், நினைத்ததற்கு மாறாய் இருப்பார்கள், பல மனிதர்கள்.

அறிவு, சிந்தனை, செயல், விதம் ஆகிய விரிவான ஆழமான திட்டம் கொண்ட ஒருவரைத் தவிர, வேறொருவரை வினைக்குரிய சிறந்தவன் என்று அமர்த்திவிடக் கூடாது.

செயலைச் செய்யக்கூடியவர் யார் யார் என ஆராய்ந்து, செயலின் விவரங்களையும் ஆராய்ந்து, குறிப்பிட்ட காலத்திற்குள் அச்செயலைச் செய்ய வேண்டிய அவசியத்தையும் உணர்ந்தவர் யாரோ, அவரை, அச்செயலைச் செய்யவிட வேண்டும்.

குறிப்பிட்ட ஒரு செயலை, குறிப்பிட்ட ஒரு கருவியால், குறிப்பிட்ட ஒருவனால் செய்ய முடியும் என உறுதிப்படுத்தி, அச்செயலை அவனிடம் விட வேண்டும்.

வினையைச் செய்யக் கூடியவர் யாரென்று ஆராய்ந்து, அவரிடம் அச்செயலை விட்டப் பின்னர், அச்செயலை அவர் செய்வதற்குரிய பயிற்சியையும் உதவிகளையும் அளித்தல் வேண்டும்.

ஒரு செயலைச் செய்பவன் உற்சாகமாகவும், சுறுசுறுப்பாகவும் இருந்தால், அவனுக்கு சுயலாபம் இருக்கின்றது என்று எண்ணி, அவனை நீக்கி, வேறொருவரை நியமித்தால், முதலீடு இழப்பாகி விடும்.

ஒவ்வொரு நாளும் மன்னன், வினைசெய்பவனைக் கண்காணித்தல் வேண்டும். வினைபுரிபவன் ஒழுங்கு தவறாமல் இருப்பதைக் காணும் மக்களும், ஒழுங்கு தவறாமல் இருப்பார்கள்.

## 53. சுற்றந்தழால்

*சுற்றந்தழால் = சுற்றம் + தழால். சுற்றம் = சுற்று + அம். வட்டம். தழால் = த் + அழ் + ஆல். தேகம் (அன்பில்) ஆழ்ந்து (ஆல் போல்) விரிந்து பரவி உறுதியாய் இருத்தல். சுற்றந்தழால் = உறவு வட்டங்கள், தேகமுடன் நெருங்கி, அன்புடன், உறுதியாய் இருத்தல்.*

**521. பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்**
**சுற்றத்தார் கண்ணே யுள.**

**பற்று அற்றகண்ணும் பழமை பாராட்டுதல**
**சுற்றத்தார் கண்ணே உள.**

*பற்று = செல்வம்.*

*ஒருவரிடம், இன்னாளில் செல்வம் இல்லாத போதும், அவர் முன்னாளில் செய்த உதவிகளைப் பற்றி, நன்றியுடன் பேசும் பண்பு, சுற்றத்தாரிடம் உண்டு.*

**522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா**
**ஆக்கம் பலவுந் தரும்.**

**விருப்பு அறாச் சுற்றம் இயையின், அருப்பு அறா**
**ஆக்கம் பலவும் தரும்.**

*அருப்பு = அர் + உப் + உ. பிரித்து புறத்தே கொண்டு வெளிப்படுத்தல். முயற்சி. அன்பால் பிரியாத சுற்றம், தன்னுடன் நிலையாய் ஒன்றி இருந்தால், துவங்கும் முயற்சிகள் தடையின்றி பல வெற்றிகளைத் தரும்.*

**523. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்**
**கோடின்றி நீர்நிறைந் தற்று.**

**அளவளாவு இல்லாதான் வாழ்க்கை-குளவளாக்**
**கோடு இன்றி நீர் நிறைந்தற்று.**

*நபர்களின் தன்மை அறிந்து, உரிய அளவாகச் செலவிடாதான் வாழ்க்கையும் செல்வமும், கரையில்லா குளத்தில் நிறைந்த நீர் வழிந்தோடி விடுவதைப் போல், வரண்டு வறுமையாகி விடும்.*

**524. சுற்றத்தார் சுற்றுப் படவொழுகல் செல்வந்தான்**
**பெற்றத்தால் பெற்ற பயன்.**

**சுற்ற தால் சுற்றப்பட ஒழுகல், செல்வம்தான்**
**பெற்ற தால் பெற்ற பயன்.**

*சுற்றத்தினர் தன்னைச் சூழ்ந்து வாழ்தல், தான் பெற்ற செல்வத்தால். அச்செல்வமோ, (தான் முற்பிறப்பில் செய்த நல்வினையால்) பெற்ற ஊழால் வந்த பயன்.*

**525. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.**

**கொடுத்தலும் இன் சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப்படும்.**

*ஒருவர், சுற்றத்தினருக்குப் பொருள் அளிப்பதோடு, இனிமையான உரையாடலையும் அவர்களுடன் நிகழ்த்தினால், சுற்றத்தின் சுற்றமும், அவர்தம் சுற்றமுமென, ஏராளமானோர் தன்னைச் சூழ்ந்து வருவர், சூழ வருவர்.*

**526. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.**

**பெருங்கொடையான், பேணான் வெகுளி, அவனின் மருங்கு
உடையார் மா நிலத்து இல்.**

*மிகுதியான பொருளை வழங்குபவன், கோபமான சொற்களையும் சொல்லாதவனாய் இருந்தால், அவனைச் சுற்றி இருக்கும் கூட்டம், உலகில் வேறு எங்கும், எவரிடத்திலும் இருக்காது.*

**527. காக்கை கரவாக் கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.**

**காக்கை கரவா கரைந்து உண்ணும்; ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள.**

*காக்கையைப் போன்று, தனக்குக் கிடைத்த பெரிய வாய்ப்பை மறைக்காமல், தன் சுற்றத்துடன் சேர்ந்து முயற்சி செய்யும் மனமுடையவர்க்கே, வெற்றியும், செல்வமும் மிகையாய்க் கிட்டும். தன் உறவுகளும், தன்னால் நன்மை பெறும். அதனால், சுற்றம் தன்னை விட்டு நீங்காது. தொடர்ந்து ஒத்துழைத்தால், அனைவருக்கும் வளம் பெருகும்.*

**528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையாய் நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.**

**பொது நோக்கான் வேந்தான் வரிசையா நோக்கின்,
அது நோக்கி வாழ்வார் பலர்.**

*எல்லோரையும் ஒன்றுபோல் பார்க்காமல், அவரவர் தகுதி, மேன்மை, குணம் போன்றவற்றின் அடிப்படையில் பொருள் தந்து, இனிமையாய் உரையாடி கவனித்தால், புறமும் அகமும் மிக உயர்ந்து இருக்கும் மன்னன், நியாயமாய் இருப்பதை உணர்ந்து, அதற்காகவே அவனைச் சூழ்ந்து வாழ்வர் பலர்.*

**529. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்**
**காரண மின்றி வரும்.**

**தமர்ஆகி, தன் - துறந்தார் சுற்றம் அமராமைக்**
**காரணம் இன்றி வரும்.**

*தம்முடையவராய் இருந்து, தன் கோபத்தாலும், வன்சொல்லாலும், தகுதிகளைக் கருதாதலாலும், சுயநலத்தால் பேராசையால் சுற்றத்தை முயற்சிகளில் ஈடுபடுத்தாதலாலும், தன்னை விட்டு நீங்கியவர், அக்காரணங்களை விலக்கி விட்டால், மீண்டும் தம்மைச் சூழ்ந்து வாழ்வர்.*

**530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**
**இழைத்திருந் தெண்ணிக் கொளல்.**

**உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை, வேந்தன்**
**இழைத்து இருந்து, எண்ணிக் கொளல்.**

*உழை = உழ் + ஐ. புறத்தே ஆழ்ந்து ஐக்கியமாதல்.*

*இழை = சோதி*

*இரு = சிந்தி*

*எண் = தகுதியை அள*

*புறத்தே ஆழ்ந்து நிலையாய் இருந்ததை விட்டுப் பிரிந்து, ஒரு காரணம் சொல்லித் தன்னிடம் வந்தவனை, சோதித்து, அமைதியாய்ச் சிந்தித்து, தகுதியைப் பொறுத்து ஏற்றுக்கொள்ள வேண்டும்.*

**சுற்றந்தழால் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஒருவரிடம், இன்னாளில் செல்வம் இல்லாதப் போதும், அவர் முன்னாளில் செய்த உதவிகளைப் பற்றி, நன்றியுடன் பேசும் பண்பு, சுற்றத்தாரிடம் உண்டு.*

*அன்பால் பிரியாத சுற்றம், தன்னுடன் நிலையாய் ஒன்றி இருந்தால், துவங்கும் முயற்சிகள் தடையின்றி பல வெற்றிகளைத் தரும்.*

*நபர்களின் தன்மை அறிந்து, உரிய அளவாக செலவிடாதான் வாழ்க்கையும் செல்வமும், கரையில்லா குளத்தில் நிறைந்த நீர் வழிந்தோடி விடுவதைப் போல், வரண்டு வறுமையாகி விடும்.*

சுற்றத்தினர் தன்னைச் சூழ்ந்து வாழ்தல், தான் பெற்ற செல்வத்தால். அச்செல்வமோ, (தான் முற்பிறப்பில் செய்த நல்வினையால்) பெற்ற ஊழால் வந்த பயன்.

ஒருவர், சுற்றத்தினருக்கு பொருள் அளிப்பதோடு, இனிமையான உரையாடலையும் அவர்களுடன் நிகழ்த்தினால், சுற்றத்தின் சுற்றமும், அவர்தம் சுற்றமுமென, ஏராளமானோர் தன்னைச் சூழ்ந்து வருவர், சூழ வருவர்.

மிகுதியான பொருளை வழங்குபவன், கோபமான சொற்களையும் சொல்லாதவனாய் இருந்தால், அவனைச் சுற்றி இருக்கும் கூட்டம், உலகில் வேறு எங்கும், எவரிடத்திலும் இருக்காது.

காக்கையைப் போன்று, தனக்குக் கிடைத்த பெரிய வாய்ப்பை மறைக்காமல், தன் சுற்றத்துடன் சேர்ந்து முயற்சி செய்யும் மனமுடையவர்க்கே, வெற்றியும், செல்வமும் மிகையாய்க் கிட்டும்.

எல்லோரையும் ஒன்றுபோல் பார்க்காமல், அவரவர் தகுதி, மேன்மை, குணம் போன்றவற்றின் அடிப்படையில் பொருள் தந்து, இனிமையாய் உரையாடிக் கவனித்தால், புறமும் அகமும் மிக உயர்ந்து இருக்கும் மன்னன், நியாயமாய் இருப்பதை உணர்ந்து, அதற்காகவே அவனைச் சூழ்ந்து வாழ்வர் பலர்.

தம்முடையவராய் இருந்து, தன்னை விட்டு நீங்கியவர், நீங்கியதற்கான காரணங்களை விலக்கி விட்டால், மீண்டும் தம்மைச் சூழ்ந்து வாழ்வர்.

புறத்தே ஆழ்ந்து நிலையாய் இருந்ததை விட்டுப் பிரிந்து, ஒரு காரணம் சொல்லி தன்னிடம் வந்தவனை, சோதித்து, அமைதியாய்ச் சிந்தித்து, தகுதியைப் பொறுத்து, ஏற்றுக்கொள்ள வேண்டும்.

# 54. பொச்சாவாமை

*பொச்சாவாமை = பொய் + சாவாமை. மன இயக்கத்தின் அடிப்படை, ஞாபகம். ஞாபகம், புலன்களின் உள்ளீட்டால் உருவானது. ஞாபகம், தற்போது இல்லாத ஒன்றின், மாறிய பழைமை ஒன்றின் பிம்பம், மாயை, பொய். எனவே, ஞாபகத்தை அடிப்படையாய்க் கொண்ட மனமும், பொய்மைதான். பொச்சாவாமை = ஞாபகம் அழியாமை. பொய்ச்சாவு = பொய்யான இறப்பு. மறதி. மெய்ச்சாவு = மெய்யான இறப்பு. மனம் அழிதல்.*

*ஞானத்திற்கு, மனம் அழிதல் வேண்டும். எனவேதான், அதன் முதல்படியாக, புலனடக்கம் அறிவுறுத்தப்படுகின்றது. புலனடங்க, அகந்தை, ஆசை, எண்ணம், ஞாபகம், புத்தி ஆகியவையும் அடங்கும். அவையெல்லாம் அடங்கியப்பின் மிஞ்சுவது, தூய மனவெளி. அத்தூய மனவெளியில் நிலைப்பது, ஞானம் எனும் மெய்யுணர்வை உணர்த்தி விடும். ஆனால், சமூக வாழ்வில் இயங்க, மனம், ஞாபகம், புலன்களின் உள்ளீடு ஆகிய அனைத்தும் தேவை. நாட்டை ஆளும் மன்னனுக்கோ, இவற்றின் தேவை, மிகவும் அதிகம். குறிப்பாக, மன்னனுக்கு, ஞாபகம் சாகாமல், மறக்காமல், உயிர்ப்புடன் இருக்க வேண்டும். இல்லையெனில், கடமை தவறிவிடுவான். கடமை தவறினால், பகைமை சூழும். நாடும், மன்னனும் அழிய நேரிடும்.*

**531. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த**
**உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.**

**இறந்த வெகுளியின் தீதே-சிறந்த**
**உவகை மகிழ்சியின் சோர்வு.**

*மிகையான கோபம் நண்பரை விலக்கி, பகைவரை நெருங்க வைக்கும். அதைவிட தீங்கானது, இயக்கத்தை இல்லாமலாக்கும் கேளிக்கைகள். அவை, மகிழ்ச்சியை அளித்து, நினைவைச் சோர்வடையச் செய்யும், ஞாபகத்தை இழக்க வைக்கும். அம்மறதியால், செய்ய வேண்டிய கடமைகளைச் செய்ய முடியாமற் போகும். விளைவால், உள்பகை உருவாகி, அரசை விரைவாய் அழித்து விடும்.*

**532. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை**
**நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.**

**பொச்சாப்புக் கொல்லும் புகழை-அறிவினை**
**நிச்சம் நிரப்புக் கொன்றாங்கு.**

*பொச்சாப்பு = பொய் + சாய்ப்பு. மனம், நினைவு, எண்ணம், ஞாபகம் ஆகியவற்றின் ஓய்வு, முழுவதும் சரியாக இயங்காமை. மயக்கம். மந்தம். மறதி.*

*நிச்சம் = நிச் + அம். நிச் = நி + ச். இயக்கமற்ற. நிலையான.*

*நிரப்பு = நிர் + அப்பு. அப்பு = அப் + உ. கொள்ள முடியாமல் வெளிப்படுவது / கொண்டு வெளிப்படுவது. நிரப்பு = தேங்கியது / தொடர்ந்து வெளியேறுவது. வரட்சி. வறுமை. தரித்திரம்.*

*அறிவு தொடர்ந்து இயங்கினால்தான், அது உயிர்ப்புடனும், வளர்ச்சியுடனும் இருக்கும். இயக்கமற்றுத் தேங்கினால், மறந்து விடும், அழிந்து விடும். வறுமை, அறிவை அழித்துவிடும்.*

*கள், பொன், பெண் தரும் போதை மயக்கத்தால், ஞாபகம் இயங்காமையால், மறதியால், அறிவை இழந்து, நாட்டிற்கும், மக்களுக்கும் தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமல் போவதால், மக்களிடம் தான் கொண்ட புகழ் அழியும்.*

**533. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்**
**தெப்பால்நூ லோர்க்குந் துணிவு.**

**பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை; அது உலகத்து**
**எப் பால் நூலோர்க்கும் துணிவு.**

*மறதி உள்ளவர்க்கு, ஞாபகம் இல்லாதவர்க்கு எத்தகைய புகழும் உண்டாகாது என்பது, எல்லாவகை சிந்தனையாளர்களினதும் உறுதியான முடிவு.*

*எந்த வகையான கல்விக்கும், சிந்தனைக்கும், செயலுக்கும் ஞாபகம் என்பது அடிப்படை. அத்தகைய ஞாபகம் இலையென்றால், இயங்க முடியாது, பிறரையும் இயங்க வைக்க முடியாது. இயங்காத அரசை, எதிரி விரைவில் வீழ்த்தி விடுவான்.*

**534. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை**
**பொச்சாப் புடையார்க்கு நன்கு.**

**அச்சம் உடையார்க்கு அரண் இல்லை; ஆங்கு இல்லை;**
**பொச்சாப்பு உடையார்க்கு நன்கு.**

*பயமுள்ள அரசன், எத்தகைய பலமுள்ள கோட்டையைப் பெற்றிருந்தாலும், பயனில்லை, அதை இழந்து விடுவான். அதைப் போல்,*

*மறதி உடையவன், எவ்வளவு செல்வம் வைத்திருந்தாலும், பயனில்லை, அதை விரைவில் இழந்து விடுவான்.*

**535. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை**
**பின்னூறி ரங்கி விடும்.**

**முன்னுறக் காவாது இழுக்கியான், தன் பிழை,**
**பின்ஊறு, இரங்கிவிடும்.**

*முன்னதாகவே அரணமைத்து, எதிரியை அழித்து, தன்னையும் தன்நாட்டையும் பாதுகாக்க மறந்தவன், தன் பிழையை எண்ணி, பின்னாளில், பலவகையில் தன்னையே நொந்துக் கொள்வான்.*

**536. இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை**
**வாயி னதுவொப்ப தில்.**

**இழுக்காமை யார்மாட்டும், என்றும், வழுக்காமை**
**வாயின், அஃது ஒப்பது இல்.**

*இழுக்காமை = மறக்காமை. வழுக்காமை = உளராமை.*

*எவரிடத்தும் என்றும் மனம் மறக்காமலும், வாய் உளராமலும் இருந்தால், அதற்கு இணையானது எதுவும் இல்லை.*

**537. அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்**
**கருவியாற் போற்றிச் செயின்.**

**அரிய என்று ஆகாத இல்லை-பொச்சாவாக்**
**கருவியான் போற்றிச் செயின்.**

*மறப்பு இல்லாத மனம் என்னும் கருவியைக் கொண்டு சிந்தித்துச் செயல்பட்டால், கடினமானது என்றோ, வெல்ல முடியாதது என்றோ எதுவும் இல்லை.*

*தான் வேறு, மனம் வேறு. மனம் என்பது ஞாபகத்தைப் பகுதிகளாகக் கொண்ட ஒரு இயந்திரம், ஒரு கருவி. ஞாபகம் பெரும்பாலும், ஒளி ஒலி / எனும் சார்பு வடிவங்களாகவே, மனத்தில் இருக்கின்றன. கண் மற்றும் செவிப் புலன்களின் ஊடாக வரும் உருவமும் சத்தமும், மனத்தில் பிம்பமாகவும் எதிரொலியாகவும் பதிகின்றன. அப்பதிவுகள், உயிரியல் இயக்கத்தால், மூளையில், மீண்டும் மீண்டும் புதுப்பிக்கப்படுகின்றன. எனவே, ஞாபகங்கள், கொள்கை அளவில், என்றுமே அழிவதில்லை. ஞாபகங்கள் தாமாக இணையும்போது கனவாகின்றது. ஞாபகங்களை நாமாக இணைக்கும்போது, சிந்தனையாகின்றது.*

*கள், பொன், பெண் ஆகியவற்றின் மிகையால், உயிரியல் இயக்கத்தின் வேகத்தால், ஞாபகங்கள் தடுமாறி தடம் மாறுகின்றன. சிந்தனையும் தடைபடுகின்றது. அவை இன்னும் மிகையானால், ஞாபகங்கள் இயங்காமல் சாய்கின்றன (பொய்ச்சாய்ப்பு), சிந்தனையும் ஓய்கின்றது (பொய்ச்சாவு), செயலும் ஒழிகின்றது. கடமைகள் மறக்கப்பட்டு, உயிரும் வாழ்வும் அழிவில் முடிகின்றது.*

*மனமும், மனத்தின் ஞாபகமும் தடுமாறாமல் காத்து, நாட்டை வளப்படுத்தவும், எதிரிகளிடம் இருந்து தன்னையும் நாட்டையும் காப்பாற்றவும், செய்யும் சிந்தனையில் ஏற்படும் இடைவெளிகளை நிரப்ப, புதிய செய்திகளை அறிந்தும், விவரம் அறிந்தவர்களை விசாரித்தும்,*

*நூல்களைக் கற்றும், மனத்தை உயிர்ப்புடனும், உறுதியுடனும் வைத்திருக்கும் மன்னன். நினைத்தால் செய்ய முடியாததோ, வெல்ல முடியாததோ எதுவும் இல்லை.*

**538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா**
**திகழ்ந்தார்க் கெழுமையு மில்.**

**புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும்;**
**இகழ்ந்தார்க்கு முமையும் இல்**

*அரசனின் நல்ல அவசியமான பண்புகள் என கூறப்படுவனவற்றை வளர்த்துச் செயல்பட வேண்டும். செயல்படாமல் புறக்கணிப்பவர்களுக்கு, வருகின்ற பிறப்பும் துன்பமாகும்.*

**539. இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்**
**மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.**

**இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக-தாம் தம்**
**மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து!**

*மைந்து = ம் + ஐந்து. கொண்டு மூடிய ஐந்து. வலிமை. மூடி மறைக்கப்பட்ட ஐம்புலன்கள். மயக்கம். இருள். அறியாமை. பைத்தியம். யானையின் மதம். மைந்து = மை + ன் + த் + உ. இருள் நெருக்கமாய் தேகத்தில் உள்இருப்பது.*

*தான், தன் மகிழ்ச்சியில் மயங்கி, இருளில் இருக்கும்போது, ஞாபகம் இழந்து, சிந்தனை மறந்து, காக்கும் செயலைப் புறக்கணித்து, அழிந்தவர்களை, நினைத்துப்பார்க்க வேண்டும். அப்போது, தானும் அவ்வாறு அழிந்து விடுவோமோ எனும் அச்சத்தாலேயே, மயக்கம் தெளிந்து விடும். கவனம் கூடிவிடும்.*

**540. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்**
**உள்ளிய துள்ளப் பெறின்.**

**உள்ளியது எய்தல் எளிதுமன்-மற்றும் தான்**
**உள்ளியது உள்ளப்பெறின்.**

*மனம் மற்றும் தானும், எண்ணியதைச் சிந்தித்தால், நினைத்ததை அடைதைல் எளிது.*

*தான் சிந்திப்பது. மனம் சிந்தனைக்கான கருவி. ஆசை, நினைப்பு, கடலின் அலைகளைப் போன்று, மேலோட்டமானவை. எண்ணம் சற்று ஆழமானது, ஆனால், நீரோட்டம் போல, பரவல் அற்றது. சிந்தனை ஆழ்ந்தும், பரந்தும், இணைந்தும், ஐக்கியமாகியும் இருப்பது, கடலின் தரையைப் போல்.*

*தான் நிலையானது; இயக்கம் அற்றது; வெறுமையானது. தான் தானாக சிந்திக்க முடியாதது. தான் சிந்திக்க மனம் தேவை. இயங்காத தான், ஞாபகங்கள் சேர்ந்து, எண்ணமாக இயங்குகின்ற மனத்தை அங்கங்கே நிலைநிறுத்தி, நங்கூரம் பாய்ச்சி, இணைத்து, ஐக்கியமான சிந்தனையாக்குகின்றது.*

**பொய்ச்சாவாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*மிகையான கோபத்தைவிட, ஞாபக மறதியை ஏற்படுத்தும், கடமைகளை மறக்க வைக்கும், கேளிக்கைகள் தீங்கானவை.*

*வறுமையால், அறிவு அழிவது போன்று, போதை மயக்கத்தால், புகழ் அழியும்.*

*மறதி உள்ளவர்க்கு, ஞாபகம் இல்லாதவர்க்கு எத்தகைய புகழும் உண்டாகாது என்பது, எல்லாவகை சிந்தனையாளர்களினதும் உறுதியான முடிவு.*

*பயமுள்ள அரசன், எத்தகைய பலமுள்ள கோட்டையைப் பெற்றிருந்தாலும், பயனில்லை, அதை இழந்து விடுவான். அதைப் போல், மறதி உடையவன், எவ்வளவு செல்வம் வைத்திருந்தாலும், பயனில்லை, அதை விரைவில் இழந்து விடுவான்.*

*முன்னதாகவே அரணமைத்து, எதிரியை அழித்து, தன்னையும் தன்நாட்டையும் பாதுகாக்க மறந்தவன், தன் பிழையை எண்ணி, பின்னாளில், பலவகையில் தன்னையே நொந்துக் கொள்வான்.*

*எவரிடத்தும் என்றும் மனம் மறக்காமலும், வாய் உளராமலும் இருந்தால், அதற்கு இணையானது எதுவும் இல்லை.*

*மறப்பு இல்லாத மனம் என்னும் கருவியைக் கொண்டு சிந்தித்துச் செயல்பட்டால், கடினமானது என்றோ, வெல்ல முடியாதது என்றோ எதுவும் இல்லை.*

*அரசனின் நல்ல அவசியமான பண்புகள் என கூறப்படுவனவற்றை வளர்த்துச் செயல்பட வேண்டும். செயல்படாமல் புறக்கணிப்பவர்களுக்கு, வருகின்ற பிறப்பும் துன்பமாகும்.*

*தான், தன் மகிழ்ச்சியில் மயங்கி, இருளில் இருக்கும்போது, காக்கும் செயலைப் புறக்கணித்து, அழிந்தவர்களை, நினைத்துப்பார்க்க வேண்டும்.*

*மனம் மற்றும் தானும், எண்ணியதைச் சிந்தித்தால், நினைத்ததை அடைதைல் எளிது.*

# 55. செங்கோன்மை

*செங்கோன்மை = செம் + கோல் + மை. செம்மையான கோல் தன்மை. வளம் உயரும் தன்மை. தண்டனையால் வெளிப்படும் இரத்தத்தில் கோல் தோய்ந்த தன்மை. கோல் = க் + ஓல். மெய் / பொருண்மை மிக உயர்ந்து அதிர்தல். பயம். கண்டிப்பு. அடி. குரல். நீதி. அளவு. திசை. வளம். பாதுகாப்பு. அமைதி.*

**541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டும்**
**தேர்ந்துசெய் வஃதே முறை.**

**ஓர்ந்து, கண்ணோடாது, இறை புரிந்து, யார்மாட்டும்**
**தேர்ந்து, செய்வஃதே முறை.**

*ஓர்ந்து = ஒரு பக்கமாய் இருந்து.*

*கண்ணோடல் = கண் + ஓடல். கண்புலன் விரும்பி நாடுதல். குறிப்பிட்ட தருணத்தில், சரியான அடிப்படையில்லாமல், மனம் விரும்பும் காட்சியை, கண் பெற்றுத் தருதல். கட்புலனின் உள்ளீடு மனத்தால் திரிக்கப்படுதல். விருப்பும் வெறுப்பும்.*

*திறை = த் + இறை. தேகம் நிலையாய் பிரிதல். உடல் உறுப்புகளைத் துண்டித்தல். உடலைத் தனிமைப்படுத்தல். தேகத்தை நிலையாக்குதல். சிறை = ச் + இறை. இயக்கம் நிலையாய்ப் பிரிதல். இயக்கம் இல்லாமலாக்குதல். தண்டனை = தண்டு + அனை. கோல் நெருக்கமாதல், அடித்தல். பிரம்படி, கசையடி. தண்டம் = தண்டு + அம். கோல் தன்மை. அடிக்குப் பதில் பணம்.*

*இறை = இ + ற் + ஐ. நிலையாய்ப் பிரிந்து ஐக்கியமாதல்.*

*முறை = ம் + உறை. அமைதி நிலைத்தல்.*

*ஒரு தலைப்பட்சமின்றி, விருப்பு வெறுப்பின்றி, தராசின் நிலையான முள்போல, உறுதியாய்த் தனித்திருந்து, விசாரணையின் ஊடே, யார் தவறிழைத்தவர் என புரிந்து, அவர் யாராய் இருந்தாலும், அவர் செய்த குற்றத்திற்கும், அவருடைய நிலைக்கும் ஏற்றவாறு, பொதுவாக அனைவரும் ஏற்குமாறு, அந்நிலையில் உள்ள வேறு எவரும், பிறரும், அக்குற்றத்தைச் செய்ய அஞ்சுமாறு, தண்டனை வழங்குவதே, சமூகத்தில் அமைதியை நிலவச் செய்யும் வழியாகும்.*

*வழக்கில் வாதி, பிரதிவாதிகளில், யாருடைய கூற்று உண்மையாக இருக்கும் என்பதை, அவர்களின் புறத்தோற்றத்தைக் கொண்டு அனுமாணிக்க முடியாது. உடையும், நடையும், பாவமும், பேச்சும் முழுமையாக நம்பக்கூடிய அடிப்படைகள் அல்ல.*

**542. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்**
**கோனோக்கி வாழுங் குடி.**

**வான் நோக்கி வாழும் உலகு எல்லாம்;-மன்னவன்**
**கோல் நோக்கி வாழும் குடி.**

*வானம் மழை பெய்தால்தான் தாவரம் வளரும், விலங்குகளும் பெருகும், மனிதர்களும் பயிர் செய்வர். நீரைக் கொண்டே உணவு, உடை, உறையுள் ஆகிய மனித வாழ்விற்கு இன்றியமையாத அனைத்தும் உருவாக்கப்படுகின்றன. மழையின்றி வாழ்வில்லை. எனவே, எல்லா உயிர்களும் மழையையே நம்பியே வாழ்கின்றன.*

*அதைப் போலவே, வளம் பெருக்கும் திட்டங்களுக்கும், புற எதிரிகளிடம் இருந்து பாதுகாப்பதற்கும், உள் கள்வரிடம் இருந்து பாதுகாப்பதற்கும், குற்றம் இழைப்பவரைத் தண்டிக்கவும், அமைதி காக்கவும், மன்னன் தேவை. மன்னன் அல்லது அரசு இன்றி, பொருளாதார வளர்ச்சியும், உயிர் மற்றும் சமூகப் பாதுகாப்பும், அமைதியும் இருக்காது. எனவே, மக்கள், மன்னனையே / அரசையே நம்பி வாழ்கின்றனர்.*

**543. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்**
**நின்றது மன்னவன் கோல்.**

**அந்தணர் நூற்கும், அறத்திற்கும், ஆதியாய்**
**நின்றது-மன்னவன் கோல்.**

*அந்தணர் = அன் + தண் + அர். தண் = த் + அண். தேகத்தோடு மிகையான நெருக்கம். அந்தணர் = தேகத்தோடு நெருக்கம் அற்றவர்.*

*கண்ணோட்டம் எப்படிக் குறைபாடுள்ள கட்புலன் உள்ளீடோ, அப்படியே மற்ற புலன்களின் உள்ளீடுகளும் குறைபாடுடையனவே. புலனறிவு ஏமாற்றக் கூடியதாய் உள்ளது. கூற்றுகள் அனைத்தும் உண்மையல்ல.*

*ஒரு வழக்கில், உண்மையை அறிய புலன்களின் நேரடி அறிவு மட்டும் போதாது. விசாரணை, குறுக்கு விசாரணை, தர்க்கம், முரண்பாடின்மை போன்றவற்றின் மூலமே உண்மையை அறிய முடியும். எனவே, புலன்களின் ஒருபக்க சார்பின்றி, எவ்வளவு விலகி நின்றி அறிய முடியுமோ, அந்த அளவுக்கு உண்மையை அறிவது எளிது. தர்க்கத்தையும், உள்முரணையும், புலன்களின் உள்ளீடுகள் குறுக்கிடுகின்றன. உண்மையோடு நியாயமும் தவறுகின்றது.*

*வழக்கில் மட்டுமல்ல, பொதுவான வாழ்விலும், புலன்களின் உள்ளீடுகள், உண்மையை அறிய முடியாமல் செய்கின்றன என்பதை, மன்னனின் அமைச்சர்கள், உதவியாளர்கள் போன்றோர் உணர்ந்தனர் போலும். தேகத்திலிருந்து / புலன்களிலிருந்து விலகி நிற்பதன் மூலம், இயற்கை, உடல், மனம், சமூகம் ஆகியவற்றின் பல ஆழ்ந்த உண்மைகளை, தர்க்கரீதியாக உள் முரண்பாடின்றி, அறிந்து நூல்களை இயற்றினர் போலும்.*

இயற்கை மற்றும் சமூக வாழ்வின் உண்மைகள் மட்டுமல்ல, இருத்தல், வாழ்வு, பிறப்பு, இறப்பு, ஏற்றத்தாழ்வுகள், கருமம், ஊழ், காரணகாரியம், வினைவிளைவு போன்ற கருத்துகளையும், அறத்தின் தத்துவத்தையும், தர்க்கரீதியாக உள் முரண்பாடின்றி, வெளிப்படுத்தினர். இதன் அடிப்படையில் அமையும் சமூக பொருளாதார வாழ்வும், தனிமனித குடும்ப வாழ்வும், வாழ்வின் இறுதிப் பயனான பிறப்பறுத்தலையும், இறையுடன் ஒன்றலையும், தர்க்கரீதியாகச் சாத்தியமாக்குகின்றது.

சட்டம், தண்டனையால் மட்டும், சமுதாயத்தில் தொடர்ச்சியாக அமைதியை நிலைநிறுத்திவிட முடியாது. மக்களின் கல்வி அறிவு, குற்றம் பற்றிய விழிப்புணர்வு, நீதி நெறி, அறத்தின் அவசியம் ஆகியவை, சட்டத்தின் தேவையையும், தண்டனையின் கொடுமையையும் குறைத்துவிடும். அரசின் பொருளாதார வளர்ச்சிக்கான முயற்சிகளுக்கும், நாட்டின் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கும், அதே கல்வி அறிவு அவசியமாகின்றது.

அறிஞர்களின் நூல்களும், அறம் எனும் தத்துவமும் நடைமுறையும், மக்களுக்கு மட்டுமல்ல, அரசர்களுக்கும் எல்லைகளை வகுத்து வழிநடத்தின.

மன்னன், நாட்டில் வளர்ச்சி, பாதுகாப்பு மற்றும் அமைதியை ஏற்படுத்த இயற்றிய சட்டமும் தண்டனையுமே, அறிஞர்கள் இயற்றிய நூல்களுக்கும், அறம் பற்றிய தத்துவத்திற்கும் நடைமுறைக்கும், துவக்கமாக இருந்தது. இதன் நீட்சியாக, கல்வியின் வளர்ச்சியும், அறவாழ்வும் பரவலானால், அரசு உதிர்ந்து விடும். குற்றம், சட்டம், தண்டனை, சிறை, மனநல காப்பகம், போர், அழிவு, அர்த்தமற்ற துன்பம் ஆகிய அனைத்தும் இல்லாமல் போகும்.

**544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்**
**அடிதழீஇ நிற்கு முலகு.**

**குடி தழீஇக் கோல் ஓச்சும் மா நில மன்னன்**
**அடி தழீஇ நிற்கும், உலகு.**

பரந்துப்பட்ட குடிமக்கள், நன்மை செய்யும்போது தழுவிப் பாராட்டியும், துன்பத்தில் இருக்கும்போது தழுவித் தேற்றியும், ஆட்சி செய்யும் மன்னனுக்கு, துன்பம் வந்தால், அதைப் போக்க, நாட்டு மக்கள் அனைவரும், அவன் பாதங்களை, பாதையைத் தழுவி உறுதியாய் நிற்பர்.

**545. இயல்புளிக் கோலோச்சு மன்ன னாட்டிற்**
**பெயலும் விளையுந் தொக்கு.**

**இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட-**
**பெயலும் விளையும் தொக்கு.**

இடம், மக்கள், வாழ்வு ஆகியனவற்றின், வரலாற்று இயல்பைக் கணக்கில் கொண்டு, ஆட்சி புரியும் மன்னனுடைய நாட்டில், மழை

*பெய்வதும், பயிர் விளைவதும், சரியான காலங்களில் நடந்து, தேவைக்கு மிகுதியாகும்.*

**546, வேலன்று வென்றி தருவது மன்னவன்**
**கோலது கோடா தெனின்.**

**வேல் அன்று, வென்றி தருவது; மன்னவன்**
**கோல்; அதூஉம், கோடாது எனின்.**

*வேல் போன்ற படைக்கருவிகளும், படைவீரர்களும் அல்ல, மன்னனுக்கு வெற்றியைத் தருவது. மன்னனுடைய ஆட்சி, வளம் சேர்ப்பதிலும், பாதுகாப்பதிலும், அமைதி காத்தலிலும், பாரபட்சமின்றி நேர்மையாய் இருந்தால், அதை வீழாமல் காக்கவும், அது மேலும் பரவவும் பாடுபடுவார்கள், மக்கள். அதுவே, அவனின் உண்மையான, நிலையான வெற்றி.*

**547. இறைகாக்கும் வையக மெல்லா மவனை**
**முறைகாக்கு முட்டா செயின்.**

**இறை காக்கும், வையகம் எல்லாம்; அவனை**
**முறை காக்கும், முட்டாச் செயின்.**

*நிலையான இந்த உலகத்தை எல்லாம், இறைமை முரண்பாடின்றி காக்கின்றது. அதைப்போல், மன்னனும், அரசும் உள்முரண்பாடின்றி, பாரபட்சமின்றி, மக்களைக் காத்தால், சிக்கலான சூழ்நிலையில், அவன் ஆற்றிய ஆட்சி முறையே, அவன் எடுக்கும் தெளிவான முடிவாகவும், வீரர்களின் தீரமாகவும், மக்களின் ஒத்துழைப்பாகவும், அவனைக் காப்பாற்றும்.*

**548. எண்பதத்தா னாடி முறைசெய்யா மன்னவன்**
**தண்பதத்தாற் றானே கெடும்.**

**எண் பதத்தான் ஓரா, முறை செய்யா, மன்னவன் தண்**
**பதத்தான் தானே கெடும்.**

*புலன் உணர்வுகளுக்கு அப்பால் இருந்து, நடுநிலையாய் எண்ணி ஆராய்ந்து, நீதியும் நியாயமும் வழங்காத மன்னன், தன் மற்றும் தன்னை நெருங்கியவர்களின் நலத்திற்காக எடுத்த முடிவுகளால், சிக்கலான சமயத்திலும், சரியான முடிவுகளை எடுக்க முடியாமல், தவறான முடிவுகளை எடுத்து, செயல்படுத்த முடியாமல், எதிரிகளின்றி, தானே அழிவான்.*

**549. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்.**

**குடி புறங்காத்து, ம்பி, குற்றம் கடிதல்
வடு அன்று; வேந்தன் தொழில்.**

*வடு = வ் + அடு. புறமும் அகமும் ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது. குற்ற மனப்பான்மை. களங்கம். குற்றம்.*

*குடிமக்களை பிறரிடம், பகைவரிடம் இருந்து துன்பம் வராமல் காப்பாற்றவும், அவர்களின் வாழ்வு சிறக்க வளங்களை வளர்க்கவும், குடிகளுக்கிடையில் ஏற்படும் குற்றங்களைத் தண்டிக்கவும், மன்னன் எடுக்கும் முடிவுகளும், நடைமுறைகளும் அவனுடைய மனசாட்சியை உறுத்தாது, புகழுக்கும் களங்கம் விளைவிக்காது, குற்றமாகக் கருதப்பட மாட்டாது, ஏனெனில், அவை வேந்தனுடைய கடமைகள், உலகம் இயற்கையான நீதியாக நியாயப்படுத்திக் கொண்ட அம்சங்கள்.*

**550. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனோடு நேர்.**

**கொலையின், கொடியாரை, வேந்து ஒறுத்தல் பைங்கூழ்
களை கட்டதனொடு நேர்.**

*கொடியைப் போன்று நீண்டு மறைந்து இருந்து, பல கொலைகளை தொடர்ந்து செய்யும் கொடியவர்களை, மன்னன் / அரசு முழுமையாய்க் கொன்று அழிப்பது, பயிரைச் சூழ்ந்த களையை வெட்டி எடுப்பதற்கு இணையான நல்ல செயலாகும்.*

*செங்கோன்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*ஒரு தலைப்பட்சமின்றி, உறுதியாய் தனித்திருந்து, விசாரணையின் ஊடே, யார் தவறிழைத்தவர் என புரிந்து, அவர் யாராய் இருந்தாலும், அவர் செய்த குற்றத்திற்கும், அவருடைய நிலைக்கும் ஏற்றவாறு, பொதுவாக அனைவரும் ஏற்குமாறு, தண்டனை வழங்குவதே, சமூகத்தில் அமைதியை நிலவச் செய்யும் வழியாகும்.*

*மழையை எதிர்பார்த்தே, உலக உயிர்கள் வாழ்கின்றன. அது போலவே, மன்னனின் / அரசின் பாதுகாப்பை எதிர்பார்த்தே, நாட்டு பொது மக்கள் உயிர் வாழ்கின்றனர்.*

*மன்னன், நாட்டில் வளர்ச்சி, பாதுகாப்பு மற்றும் அமைதியை ஏற்படுத்த இயற்றிய சட்டமும் தண்டனையுமே, அறிஞர்கள் இயற்றிய நூல்களுக்கும், அறம் பற்றிய தத்துவத்திற்கும் நடைமுறைக்கும், அடிப்படையாக, துவக்கமாக இருந்தது.*

*பரந்துப்பட்ட குடிமக்கள், நன்மை செய்யும்போது தழுவிப் பாராட்டியும், துன்பத்தில் இருக்கும்போது தழுவித் தேற்றியும், ஆட்சி செய்யும் மன்னனுக்கு, துன்பம் வந்தால், அதைப் போக்க, நாட்டு மக்கள் அனைவரும், அவன் பாதங்களை, பாதையைத் தழுவி உறுதியாய் நிற்பர்.*

இடம், மக்கள், வாழ்வு ஆகியனவற்றின், வரலாற்று இயல்பைக் கணக்கில் கொண்டு, ஆட்சி புரியும் மன்னனுடைய நாட்டில், மழை பெய்வதும், பயிர் விளைவதும், சரியான காலங்களில் நடந்து, தேவைக்கு மிகுதியாகும்.

வேல் போன்ற படைக்கருவிகளும், படைவீரர்களும் அல்ல, மன்னனுக்கு வெற்றியைத் தருவது. மன்னனுடைய ஆட்சி, பாரபட்சமின்றி நேர்மையாய் இருந்தால், அதை வீழாமல் காக்கவும், அது மேலும் பரவவும் பாடுபடுவார்கள், மக்கள். அதுவே, அவனின் உண்மையான, நிலையான வெற்றி.

நிலையான இந்த உலகத்தை எல்லாம், இறைமை முரண்பாடின்றி காக்கின்றது. அதைப்போல், மன்னனும், அரசும் உள்முரண்பாடின்றி, பாரபட்சமின்றி, மக்களைக் காத்தால், சிக்கலான சூழ்நிலையில், அவன் ஆற்றிய ஆட்சி முறையே, அவன் எடுக்கும் தெளிவான முடிவாகவும், வீரர்களின் தீரமாகவும், மக்களின் ஒத்துழைப்பாகவும், அவனைக் காப்பாற்றும்.

நடுநிலையாய் எண்ணி ஆராய்ந்து, நீதியும் நியாயமும் வழங்காத மன்னன், தன் மற்றும் தன்னை நெருங்கியவர்களின் நலத்திற்காகவே எடுத்த முடிவுகளின் பழக்கத்தால், சிக்கலான சமயத்திலும், சரியான முடிவுகளை எடுக்க முடியாமல், தவறான முடிவுகளை எடுத்து, செயல்படுத்த முடியாமல், எதிரிகளின்றி, தானே அழிவான்.

குடிமக்களை பிறரிடம், பகைவரிடம் இருந்து துன்பம் வராமல் காப்பாற்றவும், அவர்களின் வாழ்வு சிறக்க வளங்களை வளர்க்கவும், குடிகளுக்கிடையில் ஏற்படும் குற்றங்களைத் தண்டிக்கவும், மன்னன் எடுக்கும் முடிவுகளும், நடைமுறைகளும் அவனுடைய மனசாட்சியை உறுத்தாது, புகழுக்கும் களங்கம் விளைவிக்காது, குற்றமாக கருதப்பட மாட்டாது, ஏனெனில், அவை வேந்தனுடைய கடமைகள், உலகம் இயற்கையான நீதியாக நியாயப்படுத்திக் கொண்ட அம்சங்கள்.

கொடியைப் போன்று நீண்டு மறைந்து இருந்து, பல கொலைகளை தொடர்ந்து செய்யும் கொடியவர்களை, மன்னன் / அரசு முழுமையாய் கொன்று அழிப்பது, பயிரைச் சூழ்ந்த களையை வெட்டி எடுப்பதற்கு இணையான நல்ல செயலாகும்.

## 56. கொடுங்கோன்மை

*கொடுங்கோன்மை = கொடும் + கோல் + மை. கொடும் = கொட்டும். அடிக்கும். கொடுங்கோன்மை = அடிக்கும் கோலின் தன்மை. தொடர்ந்து துன்புறுத்தும் தன்மை. சீண்டி, உண்டாகும் எதிர்வினைக்காக தண்டிக்கும் தன்மை. பயமுறுத்தல். பயங்கரவாதம்.*

**551. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.**

**கொலை மேற்கொண்டாரின் கொடிதே-அலை மேற்கொண்டு
அல்லவை செய்து ஒழுகும் வேந்து.**

*அலை = அல் + ஐ. மேலும் கீழுமான இயக்கம் ஐக்கியமாதல். அடங்காத ஆசை. பேராசை.*

*அல்லவை = அல் + அவை. மேலும் கீழுமான அதிர்வுள்ளவை. வினை. வெஃகுதல், களவு, இன்னா செய்தல், சிற்றினம் சேரல், பிறனில் விழைதல், கொலை போன்றவை. மனம் ஒப்பாதவை. அறம் அற்றவை.*

*பேராசையால், வெஃகுதல், களவு, இன்னா செய்தல், சிற்றினம் சேரல், பிறனில் விழைதல், கொலை போன்ற அறமற்றவைகளைத் தொடர்ந்து செய்யும் மன்னன், கொலையையே தொழிலாகக் கொண்டவர்களைக் காட்டிலும் கொடுமையானவன். கொலைஞனின் கொடுமைக்கு எதிராக, மக்கள் மன்னனிடம் முறையிடலாம். மன்னனே கொடுமை செய்தால், மக்கள் யாரிடம் போய் முறையிட முடியும்?*

**552. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலும்
கோலொடு நின்றா னிரவு.**

**வேலொடு நின்றான், 'இடு' என்றது போலும்-
கோலொடு நின்றான் இரவு.**

*இரவு = இர் + அ + உ. பிரி உள்ளிருந்து புறமாய்.*

*படையொடு வந்து நின்று, இருப்பதைத் தந்துவிடுமாறு கட்டாயப்படுத்தும் மன்னன், வேலுடன் எதிர்ப்பட்டு நின்று, கையில் இருப்பதைப் போடு, என்று சொல்லும் கொள்ளையனைப் போன்றவன் ஆவான்.*

**553. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும்.**

**நாள்தொறும் நாடி, முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும்.**

ஒவ்வொரு நாளும், தானாக முன்வந்து, குடிமக்களிடம் இருந்து எழும் பிரச்சனைகளை விசாரித்து, ஆய்ந்து, நேர்மையாக நீதி நியாயம் வழங்காத மன்னனின் நாடு, ஒவ்வொரு நாளும், மோசமாகிக் கொண்டே போய், சிறிய பிரச்சனைகள் பெருஞ்சிக்கல்களாகி, எளிதில் தீர்க்க முடியாமல் போய், எவரையும் கட்டுப்படுத்த இயலாமலாகி, சரியான சமயத்திற்காகக் காத்திருக்கும் எதிரிகளால், எளிதில், விரைவில், அழிக்கப்பட்டு விடும்.

**554. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.**

**கூழும் குடியும் ஒருங்கு இழக்கும்-கோல் கோடி,
சூழாது, செய்யும் அரசு.**

கோடி = வளைந்து. பாரபட்சமாய்.

சூழாது = ஆராயாமல்.

ஒருதலைப் பட்சமாய், ஆராயமல், மன்னன், நீதி நியாயம் வழங்கினால், "இந்நாட்டில், இனி சரியான நியாயம் கிடைக்காது" என்ற முடிவுக்கு வந்து, பலகுடிமக்கள் தங்கள் செல்வத்துடன் வேறு நாட்டிற்கு இடம் பெயர்ந்து விடுவர். அதனால், அத்தகைய நியாயமற்ற மன்னன், வளங்களுடன் குடிமக்களையும் சேர்த்து இழந்து விடுவான். விளைவாக, நாட்டின் வளர்ச்சியும் குன்றும், புகழும் மங்கும்.

**555. அல்லற்பட் டாற்றா தழுதகண்ணீ ரன்றோ
செல்வத்தைத் தேய்க்கும் படை.**

**அல்லற்பட்டு, ஆற்றாது, அழுத கண்ணீர் அன்றே-
செல்வத்தைத் தேய்க்கும் படை.**

தேய் = த் + ஏய். தேகத்தை மிக உயர்த்தி இருத்து. அபகரி.

மன்னனால் துன்பப்பட்டு, பிற யாராலும் ஆறுதல் செய்ய முடியாமல், தானாகவும் தேற்றிக் கொள்ள முடியாமல், அழுத கண்ணீர்தான், (சுற்றியுள்ள மக்கள், தம்மன்னன் மேல் வெறுப்புக் கொள்ளவும், எதிரி மன்னன், தம் மன்னனைவிட நல்லவனாய் இருந்தால், அவனுக்கு செய்தி அனுப்பவும், போரெடுத்து வந்தவனுக்கு உதவவும்,) தன் மன்னனையும், அவனுடைய செல்வத்தையும் அழிக்கும் படையாக அமைந்தது.

**556. மன்னற்கு மன்னுதல் செங்கோன்மை யஃதிலனேல்
மன்னாவா மன்னர்க் கொளி.**

**மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை; அ இன்றேல்,
மன்னாவாம், மன்னர்க்கு ஒளி.**

*மன்னுதல் = மன் + நுதல். மனத்தின் சொல். வெளிப்படை. ஒளிவு மறைவின்மை.*

*மன்னாவா = மன் + ஆவ் + ஆ. மனம் (ஒளி) ஆகாது.*

*மன்னன், தன் மனதில் தோன்றியதை, பாரபட்சமின்றி, வெளிப்படையாய் சொல்வதே நீதி நியாயமாகும், புகழும் சேரும். இல்லையெனில், உண்மையை மறைப்பதால், மன்னனின் மனம் ஒளியற்று, இருண்டுவிடும். மனம் இருண்டால், உடலும், சொல்லும் இருளும். புகழும் மங்கும். மன்னன் துன்பம் அடைவான்.*

**557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழு முயிர்க்கு.**

**துளி இன்மை ஞாலத்திற்கு எற்று? அற்றே, வேந்தன்
அளி இன்மை வாழும் உயிர்க்கு.**

*வானம், மழை பெய்யா விட்டால், பூமிக்கும், உயிர்களுக்கும் எவ்வளவு துன்பமாய் இருக்குமோ, அப்படித்தான், வேந்தன் / அரசு, மக்களுக்கு வரட்சி அல்லது வறுமையின் போது, சேமிப்பைக் கொண்டு உதவாமல் இருப்பதும், துன்பத்தை விளைவிக்கும்.*

**558. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.**

**இன்மையின் இன்னாது, உடைமை-முறை செய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.**

*நியாயமில்லாத மன்னன் ஆட்சி செய்யும் நாட்டில், பொருள் இல்லாதவர்களைக் காட்டிலும், செல்வந்தர்கள்தான் மிகவும் துன்பப்படுவார்கள்.*

*பேராசை மிக்க மன்னன், எளியவர்களிடம் இருந்து சிறிது சிறிதாக வரியை வசூலிப்பதற்குப் பதில், ஏற்கனவே மொத்தமாய் சேர்த்து வைத்திருக்கும் செல்வந்தரிடம் இருந்து, அநியாய முறையில், ஏதாவது ஒரு காரணம் காட்டி, அளவுக்கு மிக அதிகமாக, செல்வத்தை அபகரிப்பான். மன்னனை / அரசை எதிர்த்து, எளியவரென்ன, செல்வந்தரென்ன, யார்தான் என்னதான் செய்துவிட முடியும்? துன்பப்படுவதைத் தவிர!*

**559. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.**

**முறை கோடி மன்னவன் செய்யின், உறை கோடி
ஒல்லாது, வானம் பெயல்.**

*உறை = உற் + ஐ. மேலே பிரிந்து ஐக்கியமானது. மேகம். நீர் சேமிப்பு.*

*நியாயம் தவறும் மன்னன் ஆட்சி செய்தால், மேகம் திசைமாறி ஓடிப் போகும், அந்நாட்டில், வானில் இருந்து, மழையாகப் பெய்ய முயற்சிக்காது.*

**560. ஆபயன் குன்று மறுதொழிலார் நூலிழப்பர்
காவலன் காவா னெனின்.**

**ஆபயன் குன்றும்; அறுதொழிலோர் நூல் மறப்பர்;-
காவலன் காவான் எனின்.**

*மன்னன், பேராசையில் இருந்து, தன்னைக் காக்காமல் போனால், ஆக்கப் பணிகள் குறையும், உழவர், நெசவாளர், கட்டிடவியலாளர், வணிகர், கல்வியாளர், அறவியலாளர் ஆகிய ஆறு ஆக்கும் தொழிலை உடையோர், சிந்திக்க முடியாமல், காலத்திற்கேற்ற நூல்களைப் படைக்க முடியாமல் போவர்.*

**கொடுங்கோன்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*பேராசையால், வெஃகுதல், களவு, இன்னா செய்தல், சிற்றினம் சேரல், பிறனில் விழைதல், கொலை போன்ற அறமற்றவைகளைத் தொடர்ந்து செய்யும் மன்னன், கொலையையே தொழிலாகக் கொண்டவர்களைக் காட்டிலும் கொடுமையானவன்.*

*படையொடு வந்து நின்று, இருப்பதைத் தந்துவிடுமாறு கட்டாயப்படுத்தும் மன்னன், வேலுடன் எதிர்ப்பட்டு நின்று, கையில் இருப்பதைப் போடு, என்று சொல்லும் கொள்ளையனைப் போன்றவன் ஆவான்.*

*ஒவ்வொரு நாளும், தானாக முன்வந்து, குடிமக்களிடம் இருந்து எழும் பிரச்சனைகளை விசாரித்து, ஆய்ந்து, நேர்மையாக நீதி நியாயம் வழங்காத மன்னனின் நாடு, ஒவ்வொரு நாளும், மோசமாகிக் கொண்டே போய், விரைவில், அழிக்கப்பட்டு விடும்.*

*ஒருதலைப் பட்சமாய், ஆராயமல், மன்னன், நீதி நியாயம் வழங்கினால், "இந்நாட்டில், இனி சரியான நியாயம் கிடைக்காது" என்ற முடிவுக்கு வந்து, பலகுடிமக்கள் தங்கள் செல்வத்துடன் வேறு நாட்டிற்கு இடம் பெயர்ந்து விடுவர். அதனால், அத்தகைய நியாயமற்ற மன்னன், வளங்களுடன் குடிமக்களையும் சேர்த்து இழந்து விடுவான்.*

*மன்னனால் துன்பப்பட்டு, பிற யாராலும் ஆறுதல் செய்ய முடியாமல், தானாகவும் தேற்றிக் கொள்ள முடியாமல், மக்கள் அழுத கண்ணீர்தான், அம்மன்னனையும், அவனுடைய செல்வத்தையும் அழிக்கும் படையாக அமைந்தது.*

*மன்னன், தன் மனதில் தோன்றியதை, பாரபட்சமின்றி, வெளிப்படையாய் சொல்வதே நீதி நியாயமாகும், புகழும் சேரும். இல்லையெனில், உண்மையை மறைப்பதால், மன்னனின் மனம் ஒளியற்று,*

இருண்டுவிடும். மனம் இருண்டால், உடலும், சொல்லும் இருளும். புகழும் மங்கும்.

வானம், மழை பெய்யா விட்டால், பூமிக்கும், உயிர்களுக்கும் எவ்வளவு துன்பமாய் இருக்குமோ, அப்படித்தான், வேந்தன் / அரசு, மக்களுக்கு வரட்சி அல்லது வறுமையின் போது, சேமிப்பைக் கொண்டு உதவாமல் இருப்பதும், துன்பத்தை விளைவிக்கும்.

நியாயமில்லாத மன்னன் ஆட்சி செய்யும் நாட்டில், பொருள் இல்லாதவர்களைக் காட்டிலும், செல்வந்தர்கள்தான் மிகவும் துன்பப்படுவார்கள்.

நியாயம் தவறும் மன்னன் ஆட்சி செய்தால், மேகம் திசைமாறி ஓடிப் போகும், அந்நாட்டில், வானில் இருந்து, மழையாக பெய்ய முயற்சிக்காது.

மன்னன், பேராசையில் இருந்து, தன்னைக் காக்காமல் போனால், ஆக்கப் பணிகள் குறையும், உழவர், நெசவாளர், கட்டிடவியலாளர், வணிகர், கல்வியாளர், அறவியலாளர் ஆகிய ஆறு ஆக்கும் தொழிலை உடையோர், சிந்திக்க முடியாமல், காலத்திற்கேற்ற நூல்களைப் படைக்க முடியாமல் போவர்.

# 57. வெருவந்த செய்யாமை

*வெருவந்தம் = வெருவு + அந்தம். வெருவு = வ் + எர் + உ + உ. புறமும் அகமும் உயர்ந்து ஓடுதல். அச்சம். வெருவந்தம் = அளவுகடந்த அச்சம்.*

*வெருவந்த செய்யாமை = நீதியையும் நியாயத்தையும், மிகுந்த பயம் கொண்டு வழங்காமை.*

**561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து.**

**தக்காங்கு நாடி, தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.**

*சம்பந்தப்பட்ட நபர்களையும், ஆதாரங்களையும், ஆவணங்களையும் ஆராய்ந்து, யாருக்கும் எதற்கும் பயப்படாமல், குற்றத்திற்கு ஏற்ற, பிறரும் ஒப்புக் கொள்ளும் தண்டனையை, வேந்தன் வழங்க வேண்டும்.*

**562. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.**

**கடிது ஓச்சி, மெல்ல எறிக-நெடிது ஆக்கம்
நீங்காமை வேண்டுபவர்.**

*கோலையோ, கனமான கல் போன்ற பொருளையோ வேகமாக ஓங்கி, பின் மெல்ல எறிவதுபோல், தனக்கும் தன் ஆட்சிக்கும் வளத்தைச் சேர்க்கும் நண்பர்கள் அல்லது அமைச்சர்கள் குற்றம் இழைத்தால், அவர்களால் உயரும் வளம், தம்மைவிட்டு நீங்காமல் இருக்க, கடுமையாகப் பேசி, சிறிய தண்டனையோடு விட்டு விட வேண்டும்.*

**563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லை கெடும்.**

**வெருவந்த செய்து ஒழுகும் வெங் கோலன் ஆயின்,
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.**

*வெண்கோல் = வெண்மை + கோல் / வெறுமை + கோல். காரணமின்றிய தண்டனை.*

*ஒருவந்தம் = ஒரு + அந்தம். ஒரு முடிவாய். நிச்சயமாய். மொத்தமாய். உறுதியாய்.*

*ஒல்லை = ஒல் + ஐ. முழுமையான அதிர்வு ஐக்கியமாகி. சூழும் பகையால். விரைவில்.*

*பயத்தால் கண்டவர்களையும் சந்தேகித்து, குற்றமற்றவர்களையும் வெறுமனே தண்டிப்பவன், நிச்சயமாய், சூழும் பகையால் விரைவில் அழிவான்.*

**564. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்தன்**
**உறைகடுகி யொல்லை கெடும்.**

**'இறை கடியன்' என்று உரைக்கும் இன்னாச் சொல் வேந்தன**
**உறை கடுகி ஒல்லைக் கெடும்.**

*கடியன் = க் + அடி + அன். மெய்யை அடிப்பவன். தண்டிப்பவன். கடியன் = க் + அட் + இயன். மெய்யை ஒட்டித் தொடரும் இயல்பினன். கடியன் = கடி + அன். பல்லைக் கடித்துக் கோபமாய்ப் பேசுபவன்.*

*விலகி நிற்க வேண்டிய அரசன், பிறரைத் தொடர்ந்து பின்பற்றினாலோ, எதற்கெடுத்தாலும் உடலியல் ரீதியாகத் தண்டித்தாலோ, எடுத்ததற்கெல்லாம் கோபமாய்ப் பேசினாலோ, பணிகளைச் செய்ய வேண்டியவர்கள், "இவன் கடியன், எப்பொழுதும் தொல்லை தருபவன், இவனுக்கு யார் வேலை செய்வார்கள்", என்று புறம்பேசி, பணிகளை ஒழுங்காகச் செய்ய மாட்டார்கள். அதனால், அவனுடைய வருவாயும் இருப்பும் குன்றி, விரைவில் அழிந்து விடுவான்.*

**565. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்**
**பேய்கண்ட தன்ன துடைத்து.**

**அருஞ்செவ்வி, இன்னா முகத்தான் பெருஞ் செல்வம்**
**பேஎய் கண்டன்னது உடைத்து.**

*குறைகள் சொல்வதைக் கேட்க, காட்சி தருவது இல்லை, அப்படி எப்போதாவது வந்தாலும், இனிமையில்லா கடுகடு முகத்துடன் இருப்பது, அப்படிப்பட்டவனிடம் உள்ள பெருஞ்செல்வம், (தானும் அனுபவிக்காமல், பிறரையும் அனுபவிக்கவிடாமல் தடுக்கும்) பேயிடம் அகப்பட்ட செல்வத்திற்கு ஒப்பானதாகும்.*

**566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வம்**
**நீடின்றி யாங்கே கெடும்.**

**கடுஞ் சொல்லன், கண் இலன் ஆயின், நெடுஞ் செல்வம்**
**நீடு இன்றி, ஆங்கே கெடும்.**

*அரசன் கடுமையாக கோபமாக பேசுபவனாயும், துன்பம் கண்டு இரக்கமற்றவனாயும் இருந்தால், அவனிடம் செல்வம் உயர்ந்து இருந்தாலும், நீடித்து நிற்காமல் அழிந்து விடும்.*

**567. கடுமொழியுங் கைகலந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் டேய்க்கு மரம்.**

**கடு மொழியும், கையிகந்த தண்டமும், வேந்தன்**
**அடு முரண் தேய்க்கும் அரம்.**

*அடுமுரண் = அடும் + உரண். தன்னை அடுத்து உள்ள வலிமை. தளபதி, அமைச்சர், அறிஞர், அறவோர், நண்பர்.*

*தேய்க்கும் = பிரிக்கும் / அழிக்கும்.*

*வேந்தனின் கடுமையான சொல்லும், அதற்கு இணையாக, அவன் விதிக்கும் கடுமையான அபராதமும், அவனுக்கு அருகில் இருக்கும் வலிமையான, தளபதி, அமைச்சர், அறிஞர், அறவோர், நண்பர் ஆகியோரை, அவனிடம் இருந்துப் பிரித்து அழிக்கும், அரமாகும்.*

**568. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்**
**சீறிற் குறுகுந் திரு.**

**இனத்து ஆற்றி, எண்ணாத வேந்தன் சினத்து ஆற்றிச்**
**சீறின், சிறுகும் திரு.**

*தளபதி, அமைச்சர், அறிஞர், அறவோர், நண்பர் ஆகியோரைக் கலந்து ஆலோசித்துச் செயல்படாமல், தன்னிச்சையாகச் செயல்பட்டுவிட்டு, பின், விளைவுகளைக் கண்டு, அனைவர் மேலும் கோபம் கொண்டு பாய்ந்தால், மற்றவர்கள் வீணாகப் பயந்து, வளப்பணிகளில் ஒத்துழைக்காமல் போவர், அவனுடைய செல்வமும் குறைந்து விடும்.*

*தளபதி, அமைச்சர், அறிஞர், அறவோர், நண்பர் ஆகியோரைக் கலந்து ஆலோசித்துச் செயல்படாமல், தன்னிச்சையாகச் செயல்பட்டுவிட்டு, பின், விளைவுகளைக் கண்டு, அனைவர் மேலும் கோபம் கொண்டு பாய்ந்தால், மற்றவர்கள் வீணாகப் பயந்து, வளப்பணிகளில் ஒத்துழைக்காமல் போவர், அவனுடைய செல்வமும் குறைந்து விடும்.*

**569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும்.**

**செரு வந்த போழ்தில், சிறை செய்யா வேந்தன்,**
**வெருவந்து, வெய்து கெடும்.**

*பகைவர் நாட்டிற்குள் ஊடுருவியுள்ளனர் என்று அறிந்து, அமைச்சர், தளபதி ஆகியோருடன் ஆலோசித்து, அவர்களைக் கைது செய்து சிறையில் அடைக்காமல் விட்டால், அவர்கள் நாடெங்கும் பரவி நாசவேலையில் ஈடுபடுவர். பின், அரசன், என்ன நடக்குமோ ஏது நடக்குமோ என்று, பயந்து பயந்து, வெந்து சாவான்.*

**570. கல்லார்ப் பிணிக்குங் கடுஞ்சொ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.**

**கல்லார்ப் பிணிக்கும், கடுங் கோல்; அது அல்லது
இல்லை, நிலக்குப் பொறை.**

*கடுமையாக பேசும் குணம், கல்லாத மன்னனை, நோய்போல் பற்றிக் கொள்ளும். அது அவனுக்கும் வலிமையல்ல, மக்களுக்கும் நல்லதல்ல, நிலத்துக்கோ பாரமாகும்.*

*வெருவந்த செய்யாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*சம்பந்தப்பட்ட நபர்களையும், ஆதாரங்களையும், ஆவணங்களையும் ஆராய்ந்து, யாருக்கும் எதற்கும் பயப்படாமல், குற்றத்திற்கு ஏற்ற, பிறரும் ஒப்புக் கொள்ளும் தண்டனையை, வேந்தன் வழங்க வேண்டும்.*

*கோலையோ, கனமான கல் போன்ற பொருளையோ வேகமாக ஓங்கி, பின் மெல்ல எறிவதுபோல், தனக்கும் தன் ஆட்சிக்கும் வளத்தைச் சேர்க்கும் நண்பர்கள் அல்லது அமைச்சர்கள் குற்றம் இழைத்தால், அவர்களால் உயரும் வளம், தம்மைவிட்டு நீங்காமல் இருக்க, கடுமையாகப் பேசி, சிறிய தண்டனையோடு விட்டு விட வேண்டும்.*

*பயத்தால் கண்டவர்களையும் சந்தேகித்து, குற்றமற்றவர்களையும் வெறுமனே தண்டிப்பவன், நிச்சயமாய், சூழும் பகையால் விரைவில் அழிவான்.*

*பணிகளைச் செய்ய வேண்டியவர்கள், "இவன் கடியன், எப்பொழுதும் தொல்லை தருபவன், இவனுக்கு யார் வேலை செய்வார்கள்", என்று புறம்பேசி, பணிகளை ஒழுங்காகச் செய்ய மாட்டார்கள். அதனால், மன்னனுடைய வருவாயும் இருப்பும் குன்றி, விரைவில் அழிந்து விடுவான்.*

*குறைகள் சொல்வதைக் கேட்க, காட்சி தருவது இல்லை, அப்படி எப்போதாவது வந்தாலும், இனிமையில்லா கடுகடு முகத்துடன் இருப்பது, அப்படிப்பட்டவனிடம் உள்ள பெருஞ்செல்வம், (தானும் அனுபவிக்காமல், பிறரையும் அனுபவிக்கவிடாமல் தடுக்கும்) பேயிடம் அகப்பட்ட செல்வத்திற்கு ஒப்பானதாகும்.*

*அரசன் கடுமையாகக் கோபமாகப் பேசுபவனாயும், துன்பம் கண்டு இரக்கமற்றவனாயும் இருந்தால், அவனிடம் செல்வம் உயர்ந்து இருந்தாலும், நீடித்து நிற்காமல் அழிந்து விடும்.*

*வேந்தனின் கடுமையான சொல்லும், அதற்கு இணையாக, அவன் விதிக்கும் கடுமையான அபராதமும், அவனுக்கு அருகில் இருக்கும் வலிமையான, தளபதி, அமைச்சர், அறிஞர், அறவோர், நண்பர் ஆகியோரை, அவனிடம் இருந்து பிரித்து அழிக்கும், அரமாகும்.*

*பகைவர் நாட்டிற்குள் ஊடுருவியுள்ளனர் என்று அறிந்து, அமைச்சர், தளபதி ஆகியோருடன் ஆலோசித்து, அவர்களைக் கைது செய்து சிறையில்*

அடைக்காமல் விட்டால், அவர்கள் நாடெங்கும் பரவி நாசவேலையில் ஈடுபடுவர். பின், அரசன், என்ன நடக்குமோ ஏது நடக்குமோ என்று, பயந்து பயந்து, வெந்து சாவான்.

கடுமையாகப் பேசும் குணம், கல்லாத மன்னனை, நோய்போல் பற்றிக் கொள்ளும். அது அவனுக்கும் வலிமையல்ல, மக்களுக்கும் நல்லதல்ல, நிலத்துக்கோ பாரமாகும்.

# 58. கண்ணோட்டம்

*கண்ணோட்டம் = கண் + ஓட்டம். கண் = க் + அண். மெய்யின் மிகை நெருக்கம். பொருண்மையின் மிக நெருக்கம். வெளி. இடம். ஓட்டம் = ஓட் + அம். முழுமையாக ஒட்டித்தொடரும் தன்மை.*

*கண், நம் உடலில் மிகவும் நெருக்கமாகவும் ஆழ்ந்தும் உள்ள புலன் உறுப்பு. கண் என்றால், துளையுள்ளது என பொருள். கண்ணில் உள்ள துளை வழியாகத்தான், பொருள்மேல் பட்டு பிரதிபலிக்கும் ஒளி, கண்ணுக்குள் சென்று விழித்திரையில் தெரிகின்றது.*

*கண்ணின் துளை / துளைகள் வழியாக மனத்தின் எண்ணங்களும் வெளிப்படுகின்றன. மனத்தின் எண்ணங்களுக்கு ஏற்றவாறு, கண்களும், முகமும், உடலும் ஒளி பெருகுகின்றன அல்லது மங்குகின்றன. ஒளியின் அடர்த்தியையும், அழுத்தத்தையும், ஓட்ட வேகத்தையும் கொண்டு, மனத்தின் எண்ணங்களை அனுமாணிக்கலாம்.*

*கண், புறத்தையும் அகத்தையும் பிரதிபலிக்கும் ஆடி.*

*கண்ணோட்டம் என்பது அடுத்தவரின் எண்ணத்தை அல்லது எதிர்பார்ப்பை கூர்ந்து உணர்ந்து, அதற்குரிய நியாயமான தீர்வை வெளிப்படுத்தல்.*

*நம் நெற்றியிலும் ஒரு கண் உள்ளது. அது உடலியல் கண்ணல்ல. ஞானக்கண். ஞானம் அடைந்தவர்க்கு தானாய்த் திறக்கும் உள் கண். அகமும் புறமும் அற்ற இருப்பில், ஒளியின் நிலைப்பு.*

**571. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை**
**உண்மையா னுண்டிவ் வுலகு.**

**கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை**
**உண்மையான், உண்டு இவ் உலகு.**

*கழி = க் + அழி. மெய்யை / பொருன்மையை அழி.*

*காரிகை = காரி + கை. கரிய கை. கருமேகம்.*

*உண்மை = உள் + மை. இருக்கும் தன்மை.*

*நிலம், தாவரம், உயிர், மனிதர் தேவையையும், எதிர்பார்ப்பையும் கண்டுணர்ந்து, தன்னுடலான கரிய மேகத்தையே அழித்து, மழையாக பெய்தலால், இந்த உலகம் இருந்து வாழ்கின்றது.*

*மண்ணின் கண்ணோட்டத்தோடு விண்ணின் கண்ணோட்டம் இயைகின்றது.*

**572. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலார்**
**உண்மை நிலக்குப் பொறை.**

**கண்ணோட்டத்து உள்ளது உலகியல்; அஃது இலார்**
**உண்மை நிலக்குப் பொறை.**

*பொறை = பாரம்.*

*வானும் நிலமும் மட்டுமல்ல, தாவரங்களும், உயிர்களும்கூட கண்ணோட்டத்தோடே வாழ்கின்றன. அதுதான் இயற்கையின் இயல்பான பண்பு. எனவே, மனிதருக்கும், குறிப்பாகத் தலைவனுக்கும், மன்னனுக்கும் கண்ணோட்டம் அவசியம் தேவை. கண்ணோட்டம் இல்லாதவரின் இருப்பு, நிலத்திற்குப் பாரமாகும்.*

**573. பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல் கண்ணென்னாம்**
**கண்ணோட்ட மில்லாத கண்.**

**பண் என் ஆம், பாடற்கு இயைபு இன்றேல்?-கண் என் ஆம்,**
**கண்ணோட்டம் இல்லாத கண்?**

*பண் = ப் + அண். கொண்டதன் மிகை நெருக்கம். இசை.*

*பாட்டோடு பொருந்தவில்லை என்றால், இசையால், மெட்டால் என்ன பயன்? கண்ணோட்டம் எனும் பரிந்துணர்வு பிறருக்காக இல்லையென்றால், கண்ணிருந்து என்ன பயன்? இசையைப் போன்று இனிமையானது, கண்ணோட்டமும்.*

**574. உளபோல் முகத்தெவன் செய்யு மளவினால்**
**கண்ணோட்ட மில்லாத கண்.**

**உளபோல் முகத்து எவன் செய்யும்- அளவினால்**
**கண்ணோட்டம் இல்லாத கண்?**

*உரிய இரக்கமுள்ள பரிந்துணர்வு இல்லாத கண், முகத்தில் இருப்பதுபோல் தோன்றினாலும், அதனால் என்ன பயன்? கண்ணோட்டம் இல்லாதது, கண் இல்லாததற்கு ஒப்பாகும். கண்ணோட்டம் இல்லாதவன் குருடன்.*

**575. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேல்**
**புண்ணென் றுணரப் படும்.**

**கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்; அஃது இன்றேல்,**
**புண் என்று உணரப்படும்.**

*கண்ணிற்கும், முகத்திற்கும் அழகு சேர்ப்பது, இரக்கமுள்ள பரிந்துணர்வு எனும் கண்ணோட்டம். கண்ணோட்டம் இல்லாத கண், முகத்தில் புண்ணைப்போல் அருவருப்பாய்க் காட்சி தரும்.*

**576. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ**
**டியைந்துகண் ணோடா தவர்.**

**மண்ணொடு இயைந்த மரத்து அனையர்-கண் ணாடு**
**இயைந்து கண்ணோடாதவர்.**

*பிறரின் இரக்கத் தகுந்த நிலைகண்டும் பரிவு காட்டாதவர், மண்ணோடு இணைந்து இயக்கமில்லாத மரத்தைப் போன்றவர்.*

**577. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையர்**
**கண்ணோட்ட மின்மையு மில்.**

**கண்ணோட்டம் இல்லவர் கண் இலர்; கண் உடையார்**
**கண்ணோட்டம் இன்மையும் இல்.**

*இரக்கமுள்ள பரிந்துணர்வு எனும் கண்ணோட்டம் இல்லாதவர் கண்ணில்லா குருடர். கண்கள் உடையவர், கண்ணோட்டம் இல்லாமல் இருப்பதே இல்லை. பார்வை என்பதைக் காட்டிலும், பரிவு என்பதே, கண்ணின் பயன்.*

**578. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்**
**குரிமை யுடைத்திவ் வுலகு.**

**கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு உரிமை**
**உடைத்து, இவ் உலகு.**

*கடமையும் தவறாமல், அதே சமயம், பரிவும் காட்டும் திறமை உடையவரே, இவ்வுலகை ஆளத் தகுந்தவர்.*

**579. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்**
**பொறுத்தாற்றும் பண்பே தலை.**

**ஒறுத்தாற்றும் பண்பினார்கண்ணும், கண்ணோடிப்**
**பொறுத்தாற்றும் பண்பே தலை.**

*பிறரைத் துன்புறுத்தி வாழும் பண்புடையவர் இடத்தும், அவர்கள் தவிர்க்க இயலாமல் அப்பாதையை மேற்கொண்டிருந்தால், தங்கள் தவறுகளுக்கு வருந்துவதாய் இருந்தால், பரிவு காட்டி, மன்னித்து நல்வழி காட்டுவதே தலைவனுக்குரிய பண்பாகும்.*

**580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்.**

**பெயக் கண்டும், நஞ்சு உண்டு அமைவர்-நயத்தக்க**
**நாகரிகம் வேண்டுபவர்.**

எதிரிகளால் தனக்கு அழிவு உறுதி என்று அறிந்தப்பின்னர், மன்னன், தன் மக்களையும் நாட்டையும் அழிவில் இருந்து காக்கும் பரிந்துணர்வுடன், தனக்கு எதிரே நஞ்சு கலக்கப்பட்டாலும், கலங்காமல் அருந்தி அமைதியாய் இறப்பான். மன்னன் இறந்தான் என்று எதிரி அறிந்தால், மக்களை வீணாக அவன் அழிக்க மாட்டான். உயிர்கள் வாழ, மேகம் தன்னை அழித்துக் கொள்வது போல், மக்கள் வாழ, மன்னன் தன்னை அழித்துக் கொள்வான்.

**கண்ணோட்டம் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

நிலம், தாவரம், உயிர், மனிதர் தேவையையும், எதிர்பார்ப்பையும் கண்டுணர்ந்து, தன்னுடலான கரிய மேகத்தையே அழித்து, மழையாக பெய்தலால், இந்த உலகம் இருந்து வாழ்கின்றது.

தாவரங்களும், உயிர்களும்கூட கண்ணோட்டத்தோடே வாழ்கின்றன. கண்ணோட்டம் இல்லாதவரின் இருப்பு, நிலத்திற்கு பாரமாகும்.

பாட்டோடு பொருந்தவில்லை என்றால், இசையால், மெட்டால் என்ன பயன்? கண்ணோட்டம் எனும் பரிந்துணர்வு பிறருக்காக இல்லையென்றால், கண்ணிருந்து என்ன பயன்?

உரிய இரக்கமுள்ள பரிந்துணர்வு இல்லாத கண், முகத்தில் இருப்பதுபோல் தோன்றினாலும், அதனால் என்ன பயன்?

கண்ணிற்கும், முகத்திற்கும் அழகு சேர்ப்பது, இரக்கமுள்ள பரிந்துணர்வு எனும் கண்ணோட்டம். கண்ணோட்டம் இல்லாத கண், முகத்தில் புண்ணைப்போல் அருவருப்பாய் காட்சி தரும்.

பிறரின் இரக்கத் தகுந்த நிலைகண்டும் பரிவு காட்டாதவர், மண்ணோடு இணைந்து இயக்கமில்லாத மரத்தைப் போன்றவர்.

இரக்கமுள்ள பரிந்துணர்வு எனும் கண்ணோட்டம் இல்லாதவர் கண்ணில்லா குருடர். கண்கள் உடையவர், கண்ணோட்டம் இல்லாமல் இருப்பதே இல்லை.

கடமையும் தவறாமல், அதே சமயம், பரிவும் காட்டும் திறமை உடையவரே, இவ்வுலகை ஆளத் தகுந்தவர்.

பிறரைத் துன்புறுத்தி வாழும் பண்புடையவர் இடத்தும், அவர்கள் தவிர்க்க இயலாமல் அப்பாதையை மேற்கொண்டிருந்தால், தங்கள் தவறுகளுக்கு வருந்துவதாய் இருந்தால், பரிவு காட்டி, மன்னித்து நல்வழி காட்டுவதே தலைவனுக்குரிய பண்பாகும்.

எதிரிகளால் தனக்கு அழிவு உறுதி என்று அறிந்தப்பின்னர், மன்னன், தன் மக்களையும் நாட்டையும் அழிவில் இருந்து காக்கும் பரிந்துணர்வுடன், தனக்கு எதிரே நஞ்சு கலக்கப்பட்டாலும், கலங்காமல் அருந்தி அமைதியாய் இறப்பான். மன்னன் இறந்தான் என்று எதிரி அறிந்தால், மக்களை வீணாக அவன் அழிக்க மாட்டான். உயிர்கள் வாழ, மேகம் தன்னை அழித்துக் கொள்வது போல், மக்கள் வாழ, மன்னன் தன்னை அழித்துக் கொள்வான்.

## 59. ஒற்றாடல்

*ஒற்றாடல் = ஒற்று + ஆடல். ஒற்று = ஒற் + உ. ஒன்றாக வெளிப்படுத்து. புறத்தோடு ஒன்றுவதாக வெளிப்படுத்து. முழுமையாக பிரித்து வெளிப்படுத்து. உளவு. உளவு = உள் + அ + உ. ஆழ்ந்துள்ளதை அகவயப்படுத்திப் புறவயப்படுத்து. தனியாக. மறைவாக. ஒருவராக. ஆடல் = ஆட் + அல். ஒட்டித்தொடர்ந்து அதிர்தல் / இயங்கல். நடித்தல்.*

*ஒற்றாடல் = தனித்து மறைவாய் இயங்குதல் / இயக்குதல். உளவு செய்தல்.*

**581. ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டும்**
**தெற்றென்க மன்னவன் கண்.**

**ஒற்றும் உரை சான்ற நூலும், இவை இரண்டும்**
**தெற்றென்க, மன்னவன் கண்.**

*சங்கேத மொழியில் உள்ள உளவு அறிக்கை, அதற்கு விளக்கமும் உதாரணமும் கொண்ட நூல், ஆகிய இரண்டிலும் மன்னன் தெளிவாய் இருந்தால், அவனுடைய மனமும், கண்ணும் தெளிவாய் இருக்கும்.*

**582. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்**
**வல்லறிதல் வேந்தன் தொழில்.**

**எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்**
**வல்லறிதல், வேந்தன் தொழில்.**

*பகைவர், நண்பர், நடுநிலையாளர் ஆகிய அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த அனைவருக்கும், நடக்கும் நல்லவை கெட்டவை ஆகிய அனைத்தும், எல்லா நாட்களிலும், உறுதியாகவும் விரைவாகவும் அறிய வேண்டியது அசசனின் கடமை.*

**583. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்**
**கொற்றங் கொளக்கிடந்த தில்.**

**ஒற்றினான் ஒற்றி, பொருள் தெரியா மன்னவன்**
**கொற்றம் கொளக் கிடந்தது இல்.**

*உளவினால் பெற்ற செய்திகளைக் கொண்டு, பகைவர்கள் இனி என்ன செய்யப் போகிறார்கள் என்று யூகித்தறியவும், தன்னைப் பாதுகாக்க என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று சிந்தித்தும், உரியவர்களுடன் ஆலோசித்தும், நண்பர்கள் உண்மையிலேயே இன்னும் நண்பர்கள்தானா? நடுநிலையாளர்கள் நண்பர்களாகப் பார்க்கிறார்களா? எதிரிகளாகப் பார்க்கிறார்களா? ஏன் இப்படி செய்கிறார்கள்? மக்கள்*

*என்ன நினைக்கிறார்கள்? தன் ஆட்சியில் உள்ள குறைகள் என்ன? என்று செய்திகளின் பின்புலத்தை, முக்கியத்துவத்தை, விளைவை, சிந்திக்காத மன்னனின் ஆட்சி, எதையும் சாதிக்காது.*

**584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.**

**வினைசெய்வார், தம் சுற்றம், வேண்டாதார், என்று ஆங்கு
அனைவரையும் ஆராய்வது-ஒற்று.**

*தனக்கு கீழாகப் பணிபுரியும் சேனாதிபதிகள், அமைச்சர்கள் மற்றும் உறவினர்கள், தன்னை வெறுப்பவர்கள் ஆகிய அனைவரின் சொற்களையும், செயல்களையும் ஆராய்ந்து அறிவது, உளவு.*

**585. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று.**

**கடாஅ உருவொடு கண் அஞ்சாது, யாண்டும்
உகா அமை வல்லதே-ஒற்று.**

*பகைவர் நாட்டில் உளவு செய்கையில், கேள்வி எழாத, சந்தேகம் வராத உருவத்துடனும், எப்படியாவது சந்தேகம் வந்துவிட்டால், கண்களில் சிறிதும் பயம் இல்லாமல் எதிர்த்து நின்று சண்டையிட்டுப்பின் தப்பியோடியும், எதிர்பாராமல் பிடிபட்டுவிட்டால், சாமம், தானம், பேதம், தண்டம் என எந்த வழிகளை எதிரி கடைப்பிடித்தாலும், தன்னைப் பற்றிச் சொல்லாத உடல் வலிமை, மனவலிமை உடையவனே ஒற்றன் ஆவான்.*

**586. துறந்தார் படிவத்தா ராகி யிறந்தாராய்ந்
தென்செயினும் சோர்வில தொற்று.**

**துறந்தார் படி த்தவர் ஆகி இறந்து, ஆராய்ந்து, என்
செயினும் சோர்வு இலது-ஒற்று.**

*துறந்தவர் அல்லது சாமியார் வேடம் பூண்டு, எந்தவிதச் சலனமும் அற்று, புறத்தில் நிகழ்வனவற்றைப் பிறர் அறியாத வகையில் கண்டும், கேட்டும், ஆராய்ந்தும், அப்படியும் யாருக்கேனும் சந்தேகம் வந்து, துருவித் துருவிக் கேட்டால் பொறுமையாய் சாமர்த்தியமாய்ப் பதில் கூறியும், என்னதான் சித்திரவதை செய்தாலும் பொறுத்துக் கொண்டு, பலத்தால் எதிர்ப்பைக் காட்டாமல், சோர்ந்திடாமல், தன்னைப் பற்றிய உண்மையைச் சொல்லாத மனவலிமை உடையவனே ஒற்றன் ஆவான்.*

**587. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.**

**மறைந்தவை கேட்க வற்று ஆகி, றிந்தவை
ஐயப்பாடு இல்லதே-ஒற்று.**

*மறைந்தவை = மறைந்து + அவை.*

*வற்று = வ் + அற்று. புறமும் அகமும் அற்று. விருப்பம் இல்லாமல். பகைவரின் அவைக்குள், மாறுவேடத்தில் நுழைந்து, அங்குப் பேசப்படுவனவற்றின் மேல், அக்கரை காட்டாதது போல் நடந்து, அறிந்தவற்றைச் சந்தேகத்திற்கு இடமின்றி உறுதிசெய்வதே, உளவு.*

**588. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல்.**

**ஒற்று ஒற்றித் தந்த பொருளையும், மற்றும் ஓர்
ஒற்றினால் ஒற்றி, கொளல்.**

*ஒற்று = உளவு. யூகி. அனுமாணி. பகுத்தறி. உறுதிப்படுத்து.*

*உளவு அறிக்கையில் இருந்து யூகிக்கப்பட்ட அல்லது அனுமாணிக்கப்பட்ட செய்திகளை, அதே ஒற்றன் மூலம் மீண்டும் ஒரு உளவாலோ அல்லது வேறோர் ஒற்றனாலோ உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.*

**589. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.**

**ஒற்று ஒற்று உணராமை ஆள்க; உடன் மூவர்
சொல் தொக்க தேறப்படும்.**

*ஒரு ஒற்றனை, மற்றொரு ஒற்றனுக்கு தெரியாமல், உளவில் அமர்த்த வேண்டும். செய்தியின் தீவிரத்தைப் பொறுத்து, மூன்று நபர்களைக் கூட உளவு பார்க்க அனுப்பலாம். அம்மூவர்களின் ஒரே காலத்து அறிக்கைகளையும் சேர்த்துப் பார்த்து, உண்மையை அறிந்து உறுதிப்படுத்த வேண்டும்.*

**590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா னாகு மறை.**

**சிறப்பு அறிய ஒற்றின்கண் செய்யற்க; செய்யின்,
புறப்படுத்தான் ஆகும், மறை.**

*ஒற்றனைப் பாராட்டுதலும், சன்மானம் தருதலும் பலர் அறிய செய்யக் கூடாது. செய்தால், மறைந்திருப்பவனைத் தானே (காட்டிக்*

கொடுத்தது) வெளிப்படுத்தியது போல் ஆகிவிடும். அது அவனுக்கும் அவன் குடும்பத்திற்கும் ஆபத்தை ஏற்படுத்திவிடும். அவனால் தொடர்ந்து உளவு வேலையையும் செய்ய முடியாது.

ஒற்றாடல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

சங்கேத மொழியில் உள்ள உளவு அறிக்கை, அதற்கு விளக்கமும் உதாரணமும் கொண்ட நூல், ஆகிய இரண்டிலும் மன்னன் தெளிவாய் இருந்தால், அவனுடைய மனமும், கண்ணும் தெளிவாய் இருக்கும்.

பகைவர், நண்பர், நடுநிலையாளர் ஆகிய அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த அனைவருக்கும், நடக்கும் நல்லவை கெட்டவை ஆகிய அனைத்தும், எல்லா நாட்களிலும், உறுதியாகவும் விரைவாகவும் அறிய வேண்டியது அசசனின் கடமை.

உளவினால் பெற்ற செய்திகளைக் கொண்டு, அவற்றின் பின்புலத்தை, முக்கியத்துவத்தை, விளைவை, சிந்திக்காத மன்னனின் ஆட்சி, எதையும் சாதிக்காது.

தனக்கு கீழாக பணிபுரியும் சேனாதிபதிகள், அமைச்சர்கள் மற்றும் உறவினர்கள், தன்னை வெறுப்பவர்கள் ஆகிய அனைவரின் சொற்களையும், செயல்களையும் ஆராய்ந்து அறிவது, உளவு.

சந்தேகம் வராத உருவத்துடனும், சந்தேகம் வந்துவிட்டால், கண்களில் சிறிதும் பயம் இல்லாமல், எதிர்த்து நின்று சண்டையிட்டு தப்பித்தும், எதிர்பாராமல் பிடிபட்டுவிட்டால், தன்னைப் பற்றிச் சொல்லாத உடல் வலிமையும், மனவலிமையும் உடையவனே ஒற்றன் ஆவான்.

துறந்தவர் அல்லது சாமியார் வேடம் பூண்டு, என்னதான் சித்திரவதை செய்தாலும் பொறுத்துக் கொண்டு, தன்னைப் பற்றிய உண்மையைச் சொல்லாத மனவலிமை உடையவனே ஒற்றன் ஆவான்.

பகைவரின் அவைக்குள், மாறுவேடத்தில் நுழைந்து, அங்கு பேசப்படுவனவற்றின் மேல், அக்கரை காட்டாதது போல் நடந்து, அறிந்தவற்றைச் சந்தேகத்திற்கு இடமின்றி உறுதிசெய்வதே, உளவு.

உளவு அறிக்கையில் இருந்து யூகிக்கப்பட்ட அல்லது அனுமாணிக்கப்பட்ட செய்திகளை, அதே ஒற்றன் மூலம் மீண்டும் ஒரு உளவாலோ அல்லது வேறோர் ஒற்றனாலோ உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஒரு ஒற்றனை, மற்றொரு ஒற்றனுக்கு தெரியாமல், உளவில் அமர்த்த வேண்டும். செய்தியின் தீவிரத்தைப் பொறுத்து, மூன்று நபர்களைக் கூட உளவு பார்க்க அனுப்பலாம். அம்மூவர்களின் ஒரே காலத்து அறிக்கைகளையும் சேர்த்துப் பார்த்து, உண்மையை அறிந்து உறுதிப்படுத்த வேண்டும்.

ஒற்றனைப் பாராட்டுதலும், சன்மானம் தருதலும் பலர் அறிய செய்யக் கூடாது. செய்தால், மறைந்திருப்பவனைத் தானே (காட்டிக் கொடுத்தது) வெளிப்படுத்தியது போல் ஆகிவிடும்.

## 60. ஊக்கமுடைமை

*ஊக்கமுடைமை = ஊக்கம் + உடைமை. ஊக்கம் = ஊ + க் + அம்.ஆழ்ந்த மெய்யின் தன்மை. நீள்புறத்தே பொருண்மையாக்கும் தன்மை. வினையாற்றும் விருப்பம். வளம் சேர்க்கும் முயற்சி.*

*ஊக்கமுடைமை = தொடர்ச்சியான வினையாற்றும் விருப்பம்.*

**591. உடைய ரெனப்படுவ தூக்க மஃதிலார்**
**உடைய ருடையரோ மற்று.**

**உடையர் எனப்படுவது ஊக்கம்; அஃது இல்லார்**
**உடையது உடையரோ, மற்று?**

*செல்வம் உடையவர் அல்லது இருக்கப்பட்டவர் என்றால், அவர் பெற்ற செல்வம் அல்லது பொருள், ஊக்கம் ஆகும். ஊக்கம் இல்லாதவர், வேறு எல்லச் செல்வமும் பொருளும் வைத்திருந்தாலும், செல்வந்தர் ஆகிவிடுவாரா என்ன? ஆகமாட்டார்.*

**592. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை**
**நில்லாது நீங்கி விடும்.**

**உள்ளம் உடைமை உடைமை; பொருள் உடைமை**
**நில்லாது நீங்கிவிடும்.**

*உள்ளத்தில் ஊக்கம் இருத்தலே நிலையான சொத்து. பொருள் செல்வம் நிலைக்காமல் போய்விடும்.*

*ஊக்கம் இருந்தால், சொத்துகளை மென்மேலும் உருவாக்கலாம். மாறாக, ஊக்கமுடன் உழைக்காமல் போனால், செல்வம் எவ்வளவு இருப்பு இருந்தாலும், எல்லாம் செலவாகி கரைந்து, ஒரு நாள், ஒன்றும் இல்லாமல் போய் விடும்.*

**593. ஆக்கமிழந் தோமென் றலம்வரா ரூக்கம்**
**ஒருவந்தங் கைத்துடை யார்.**

**'ஆக்கம் இழந்தேம்!' என்று அல்லாவார்-ஊககம்**
**ஒருவந்தம் கைத்து உடையார்.**

*அலம் = அல் + அம். இல்லா தன்மை. பிச்சை. இரத்தல்.*

*எங்கள் செல்வத்தையெல்லாம் இழந்துவிட்டோம், எங்களிடம் ஒன்றும் இல்லை, யாராவது ஏதாவது தாருங்கள் என்று ஊரில் வலம் வரமாட்டார்கள், ஊக்கத்தையும் உழைப்பையும் உறுதியாகக் கையில் கொண்டவர்கள்.*

**594. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா**
**ஊக்க முடையா னுழை.**

**ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும்-அசைவு இலா**
**ஊக்கம் உடையானுழை.**

*அதர் = அத் + அர். தேகமற்று இருத்தல். வினாய் = வின் + ஆய். வெளியாகி. உறுதியான தளர்ச்சியில்லா ஊக்கமுடன் உழைத்தால், செல்வம் அருவமாய் வெளியினூடே உடனடியாய் வந்து சேரும்.*

**595. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத் தனைய துயர்வு.**

**வெள்ளத்து அனைய, மலர் நீட்டம்;-மாந்தர்தம்**
**உள்ளத்து அனையது, உயர்வு.**

*நீரின் அளவைப் பொறுத்து, கொடி உயர, தாமரை மலர் வெளியே நீளும். அதைப் போல், மனிதர்களின் ஊக்கத்தின் அளவைப் பொறுத்து, உழைப்பு உயர, வாழ்வில் வளர்ச்சியும் உண்டாகும்.*

**596. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது**
**தள்ளினுந் தாளாண்மை நீர்த்து.**

**உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்; மற்று அது**
**தள்ளினும், தள்ளாமை நீர்த்து.**

*மற்றது = உழைப்பைத் தவிர்த்த பிற காரணிகள். இடம், காலம், பொருள் போன்றவை.*

*தாளாண்மை = தாள் + ஆண்மை. உழைத்தல். கால்களை / மக்களை ஆளுதல். ஊக்கமுடன் உழைக்கச் செய்தல்.*

*நீர்த்து = நீர் போல் பரவும் தன்மை.*

*எண்ணுவது எல்லாம் உயர்வாய் எண்ண வேண்டும். உயர்ந்த குறிக்கோளை அல்லது இலட்சியத்தை மக்கள்முன் வைக்க வேண்டும். குறிக்கோளை அடைய காலதாமதம் ஆனாலும் அல்லது பிற காரணங்களால் தாமதித்தாலும், அல்லது நிறைவேறாமல் போனாலும், பரவாயில்லை. மக்களை ஊக்கமுடன் உழைக்கச் செய்தது, அதற்குரிய இயல்பான பலனை, பரவலாகத் தரும்.*

**597. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பின்**
**பட்டுப்பா டூன்றுங் களிறு.**

**சிதைவிடத்து ஒல்கார், உரவோர்;-புதை அம்பின்**
**பட்டுப் பாடு ஊன்றும் களிறு.**

*உடலைத் தைத்துப் புதைந்த அம்புகளால், கீழே விழுந்த யானை, முழுவலிமையுடன் முயன்று எழுந்து நிற்கும். அதைப்போல், அழிகின்ற நேரத்திலும் கூட தளரமாட்டார்கள், ஊக்கமுடையவர்கள், மனவலிமை உடையவர்கள். அவர்கள் உயிர்போகும் வரை ஊக்கமுடன் உழைத்துக் கொண்டே இருப்பார்கள்.*

**598. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து**
**வள்ளியோ மென்னுஞ் செருக்கு.**

**உள்ளம் இலாதவர் எய்தார்-' உலகத்து**
**வள்ளியம்' என்னும் செருக்கு.**

*உள்ளம் = ஊக்கம்*

*வள்ளியம் = வள் + இயம். வளம்.*

*ஊக்கம் இல்லாதவர், உழைக்காதவர், ஊக்குவித்து உழைக்கச் செய்யாதவர், தான் வளமுடையவன் என்று உலகத்தில் பெருமிதம் கொள்ள முடியாது.*

**599. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை**
**வெருவும் புலிதாக் குறின்.**

**பரியது கூர்ங் கோட்டது ஆயினும், யானை**
**வெரூஉம், புலி தாக்குறின்.**

*உடலில் பெரியதாகவும், கூரிய தந்தக் கொம்புகளைக் கொண்டிருந்தாலும், புலி தாக்க வந்தால், யானை அஞ்சும். ஊக்கமும் உழைப்பும் மட்டும் போதாது, விரைவும், சுறுசுறுப்பும் தேவை.*

**600. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்**
**மரமக்க ளாதலே வேறு.**

**உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை; அஃது இல்லார்**
**மரம்; மக்கள் ஆதலே வேறு.**

*வெறுக்கை = வ் + எறு + கை. புறமும் அகமும், முழுமையாக உயர்த்தும் கை. உதவி.*

*தன் ஊக்கமும், முயற்சியும், உழைப்புந்தான், ஒருவர் முழுமையாய் உயர்வதற்கு உதவும் கை. அது இல்லாதவர், வேறெதுவுமில்லை, மரக்கட்டையால் செய்யப்பட்ட பொம்மைகளே! அவர்கள் வாழ்வில் உயரவே மாட்டார்கள்.*

**ஊக்கமுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*செல்வம் உடையவர் அல்லது இருக்கப்பட்டவர் என்றால், அவர் பெற்ற செல்வம் அல்லது பொருள், ஊக்கம் ஆகும். ஊக்கம் இல்லாதவர், செல்வந்தர் ஆகிவிடுவாரா என்ன? ஆகமாட்டார்.*

*உள்ளத்தில் ஊக்கம் இருத்தலே நிலையான சொத்து. பொருள் செல்வம் நிலைக்காமல் போய்விடும்.*

*ஊக்கத்தையும் உழைப்பையும் உறுதியாக கையில் கொண்டவர்கள், எங்கள் செல்வத்தையெல்லாம் இழந்துவிட்டோம், எங்களிடம் ஒன்றும் இல்லை, யாராவது ஏதாவது தாருங்கள், என்று ஊரில் பிச்சை எடுக்க மாட்டார்கள்.*

*உறுதியான தளர்ச்சியில்லா ஊக்கமுடன் உழைத்தால், செல்வம் அருவமாய் வெளியினூடே உடனடியாய் வந்து சேரும்.*

*நீரின் அளவைப் பொறுத்து, கொடி உயர, தாமரை மலர் வெளியே நீளும். அதைப் போல், மனிதர்களின் ஊக்கத்தின் அளவைப் பொறுத்து, உழைப்பு உயர, வாழ்வில் வளர்ச்சியும் உண்டாகும்.*

*எண்ணுவது எல்லாம் உயர்வாய் எண்ண வேண்டும். அதற்கு ஏற்றவாறு ஊக்கமுடன் உழைக்க வேண்டும். பிற காரணங்களால் தாமதித்தாலும், அல்லது நிறைவேறாமல் போனாலும், பரவாயில்லை. ஊக்கமுடன் உழைத்தது, அதற்குரிய இயல்பான பலனைத் தரும்.*

*உடலைத் தைத்துப் புதைந்த அம்புகளால், கீழே விழுந்த யானை, முழுவலிமையுடன் முயன்று எழுந்து நிற்பதைப்போல், அழிகின்ற நேரத்திலும் கூட தளரமாட்டார்கள், ஊக்கமுடையவர்கள், மனவலிமை உடையவர்கள். அவர்கள் உயிர்போகும் வரை ஊக்கமுடன் உழைத்துக் கொண்டே இருப்பார்கள்.*

*ஊக்கம் இல்லாதவர், உழைக்காதவர், ஊக்குவித்து உழைக்கச் செய்யாதவர், தான் வளமுடையவன் என்று உலகத்தில் பெருமிதம் கொள்ள முடியாது.*

*உடலில் பெரியதாகவும், கூரிய தந்தக் கொம்புகளைக் கொண்டிருந்தாலும், புலி தாக்க வந்தால், யானை அஞ்சும். ஊக்கமும் உழைப்பும் மட்டும் போதாது, விரைவும், சுறுசுறுப்பும் தேவை.*

*தன் ஊக்கமும், முயற்சியும், உழைப்புந்தான், ஒருவர் முழுமையாய் உயர்வதற்கு உதவும் கை. அது இல்லாதவர், வேறெதுவுமில்லை, மரக்கட்டையால் செய்யப்பட்ட பொம்மைகளே!*

# 61. மடியின்மை

*மடியின்மை = மடி + இன்மை. மடி = ம் + அட் + இ. மௌனமாய் ஒட்டித் தொடர்ந்து இருத்தல். மடி = ம் + அடி. கொண்டு மூடிய பாதம் / கால். கால் மடங்கி அமர்தல். அசையாமல் இருத்தல். ஊக்கமின்றி, முயற்சியின்றி, உழைப்பின்றி இருத்தல். சோம்பல். இன்மை = இல் + மை. இல்லாமை.*

*மடியின்மை = சோம்பல் இல்லாமை.*

**601. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னும்**
**மாசூர மாய்ந்து விடும்.**

**குடி என்னும் குன்றா விளக்கம், மடி என்னும்**
**மாசு ஊர, மாய்ந்து கெடும்.**

*குடி என்பது தகப்பன், மகன், பெயரன் எனத் தொடர்ச்சியாய், ஒரு விளக்கு மற்றொரு விளக்கை ஏற்றுவதுபோல், இடைவெளியின்றி வருவது. யாராயினும், ஊக்கமுள்ள முயற்சியும் உழைப்பும், வாழ்வின் தடைகளை அகற்றிட, அவர்தம் வாழ்வு ஒளிமிக்கதாகும்.*

*அகல் விளக்காகட்டும், மெழுகுவர்த்தியாகட்டும், திரி எரிந்து கரியாகி எண்ணெயில் விழுந்து விட்டாலோ, காற்றில் பறந்து வந்த தூசுகள் அந்த எண்ணெயில் விழுந்து விட்டாலோ, அம்மாசுகள் தொடர்ந்து ஊர்ந்துச் சென்று, திரியின் எண்ணெய் துவாரங்களை அடைக்கப் பார்க்கும். திரியில் வெற்றிடம் உருவாகும். அவ்வெற்றிடத்தை நிரப்ப எண்ணெய் விரைந்தோடும். தடைப்படுத்தி நிற்கும் மாசை விலக்கித் தள்ளி விட்டு, திரியின் துவாரத்தினுள் நுழைந்து எண்ணெய் மேலேறி ஒளியாகும். ஆனால், மாசுகள் மிகுந்துவிட்டால், திரியின் எண்ணெய் துவாரங்கள் அனைத்தும் அடைந்துவிட்டால், எண்ணெய் இருந்தாலும், விளக்கு அணைந்து விடும்.*

*வாழ்வில் சோம்பல் என்பது விளக்கில் மாசைப் போன்றது. சோம்பல், ஊக்கத்தையும் முயற்சியையும் உழைப்பையும் தடுத்துவிடும். புதிய ஆக்கம் ஏதுமின்றி, இருப்பும் சொத்தும் கரைந்து, வாழ்வு இருண்டுவிடும். இளமையிலேயே மடிந்து, வழித்தோன்றல்களும் அற்று, வம்சமே அழிந்துவிடும்.*

**602. மடியை மடியா வொழுகல் குடியைக்**
**குடியாக வேண்டு பவர்.**

**மடியை மடியா ஒழுகல்-குடியைக்**
**குடியாக வேண்டு பவர்!**

*சோம்பலே சோர்ந்து சோம்பிப் போகுமளவுக்கு, ஊக்கமுடைய*

*முயற்சியுடனும் உழைப்புடனும் இடைவிடாது போராடுவர், தொடர்ந்து வந்த தம் வம்சம், இனியும் தொடர விரும்புபவர்.*

**603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த**
**குடிமடியுந் தன்னினு முந்து.**

**மடி மடிக் கொண்டு ஒழுகும் பேதை பிறந்த**
**குடி மடியும், தன்னினும் முந்து.**

*மடி = சோம்பல். கால்களைச் சேர்த்து அமர்ந்தால் ஏற்படும் குழிவானப் பகுதி. அழிவு.*

*சோம்பலையே தன் குழந்தையைப் போல் மடியில் வைத்துக் கொஞ்சும் முட்டாளுடைய வம்சம், அவனுக்கு முன்பே அழிந்து விடும். அவன் இருப்பதையே உலகோர் கண்டு கொள்ளார்.*

**604. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து**
**மாண்ட வுஞற்றி லவர்க்கு.**

**குடி மடிந்து, குற்றம் பெருகும்-மடி மடிந்து,**
**மாண்ட உஞற்றி லவர்க்கு.**

*மடிந்து = சேர்ந்து. குவிந்து.*

*உஞற்று = உன் + ச் + அற்று. உயரத்தை நெருங்கும் இயக்கம், முயற்சி வெளிப்படுத்து.*

*சோம்பல் குவிந்து இறந்த, முயற்சி இல்லாதவரின் குடும்ப அமைப்பு, அழிந்து, சிதறி, எஞ்சியவர்களால் குற்றங்களும் பெருகும்.*

**605. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**
**கெடுநீரார் காமக் கலன்.**

**நெடு நரீ , மறவி,மடி,,துயில், நான்கும்**
**கெடு நீரார் காமக் கலன்.**

*நெடுநீர் = மெதுவாக பாயும் நீர். மந்தம்.*

*மந்தம் (மெதுவாக இயங்கும் தன்மை), மறத்தல், சோம்பல், தூக்கம் ஆகிய நான்கும், அழியும் இயல்புடையவர்கள் விரும்பும் சொத்து.*

**606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்**
**மாண்பய மெய்த லரிது.**

**படி உடையார் பற்று அமைந்தக்கண்ணும், மடி உடையார்**
**மாண் பயன் எய்தல் அரிது.**

*படியுடையார் = படி + உடையார். அளவு உடையவர். அறிஞர். ஞானி.*

*ஞானியர், ஒருவருடைய நல்வாழ்வில் அக்கறை காட்டிய போதிலும், அவர் சோம்பல் உடையவராய் இருந்தால், ஞானம் அடைய முடியாது. சமூக வாழ்விற்கு மட்டுமல்ல, துறவு வாழ்விற்கும் ஊக்கமுள்ள முயற்சி தேவை. சோம்பல் உதவாது.*

**607. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து**
**மாண்ட வுஞற்றி லவர்.**

**இடி புரிந்து, எள்ளும் சொல் கேட்பர்-மடி புரிந்து**
**மாண்ட உஞற்று இலவர்.**

*ஒருவரை ஒருவர் இடித்து, கைகொட்டி, சிறுமையாகப் பேசுவதை, எதிர்த்துப் பேசும் திறனும் துணிவும் இல்லாமல் கேட்பர், சோம்பலால் வெட்கமும் மானமும் இழந்துப்போன முயற்சி இல்லாதவர்.*

**608. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்**
**கடிமை புகுத்தி விடும்.**

**மடிமை குடிமைக்கண் தங்கின், தன் ஒன்னார்க்கு**
**அடிமை புகுத்திவிடும்.**

*சோம்பல், அரசனிடமோ அல்லது குடியானவனிடமோ தொடர்ந்து இருந்தால், அது தன் பகையிடம் அல்லது தன்னைப் போன்றவர்களிடம், அவரை அடிமையாக்கி விடும்.*

**609. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்**
**மடியாண்மை மாற்றக் கெடும்.**

**குடி, ஆண்மையுள் வந்த குற்றம், ஒருவன்**
**மடி ஆண்மை மாற்ற, கெடும்.**

*மக்களை ஆள்வதில் வந்த சோம்பல், மெத்தனம், சுணக்கம், அதனால் ஏற்பட்ட விளைவுகளான, வறுமை, செல்வக் குறைவு, திருடு, கொள்ளை, பகையின் ஊடுருவல் போன்ற குற்றங்களைக் கண்டு, சுதாரித்து, சோம்பலின் ஆட்சியை நீக்கி, ஊக்கமுள்ள முயற்சிகளை மேற்கொண்டால், அக்குற்றங்கள் அழிந்துவிடும்.*

**610. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்**
**தாஅய வெல்லா மொருங்கு.**

**மடி இலா மன்னவன் எய்தும்-அடி அளந்தான்**
**தாஅயது எல்லாம் ஒருங்கு.**

அடியளந்தான் = அடி + அளம் + தான். அடி = அட் + இ. உயிரை ஒட்டித் தொடர்ந்து நிலைத்தல். அளம் = அள் + அம். மிகைத் தன்மை. ஒளி. அடியளந்தான் = உயிர்வெளியின் ஒளியானவன். ஞானி.

தாஅய = தாய = த் + ஆய் + அ. தேகமாக.

உயிரை ஒட்டித் தொடர்ந்து நிலைத்த ஞானி, இருக்கின்ற அனைத்தையும் ஒரே சமயத்தில் தானாக உணர்வதுபோல், சோம்பல் இல்லாத மனத்தினன், ஊக்கமுள்ள முயற்சியை நிலையாய்க் கொண்டவன், எதையும், எல்லாவற்றையும் அடைய முடியும்.

**மடியின்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

குடி என்பது தகப்பன், மகன், பெயரன் என தொடர்ச்சியாய், ஒரு விளக்கு மற்றொரு விளக்கை ஏற்றுவதுபோல், இடைவெளியின்றி வருவது. யாராயினும், ஊக்கமுள்ள முயற்சியும் உழைப்பும், வாழ்வின் தடைகளை அகற்றிட, அவர்தம் வாழ்வு ஒளிமிக்கதாகும். ஆனால், வாழ்வில் சோம்பல் வந்துவிட்டால், அது ஊக்கத்தையும் முயற்சியையும் உழைப்பையும் தடுத்துவிடும். புதிய ஆக்கம் ஏதுமின்றி, இருப்பும் சொத்தும் கரைந்து, வாழ்வு இருண்டுவிடும். இளமையிலேயே மடிந்து, வழித்தோன்றல்களும் அற்று, வம்சமே அழிந்துவிடும்.

சோம்பலே சோர்ந்து சோம்பிப் போகுமளவுக்கு, ஊக்கமுடைய முயற்சியுடனும் உழைப்புடனும் இடைவிடாது போராடுவர், தொடர்ந்து வந்த தம் வம்சம், இனியும் தொடர விரும்புபவர்.

சோம்பலையே தன் குழந்தையைப் போல் மடியில் வைத்துக் கொஞ்சும் முட்டாளுடைய வம்சம், அவனுக்கு முன்பே அழிந்து விடும். அவன் இருப்பதையே உலகோர் கண்டுக் கொள்ளார்.

சோம்பல் குவிந்து இறந்த, முயற்சி இல்லாதவரின் குடும்ப அமைப்பு, அழிந்து, சிதறி, எஞ்சியவர்களால் குற்றங்களும் பெருகும்.

மந்தம், மறத்தல், சோம்பல், தூக்கம் ஆகிய நான்கும், அழியும் இயல்புடையவர்கள் விரும்பும் சொத்து.

ஞானியர், ஒருவருடைய நல்வாழ்வில் அக்கறை காட்டிய போதிலும், அவர் சோம்பல் உடையவராய் இருந்தால், ஞானம் அடைய முடியாது. சமூக வாழ்விற்கு மட்டுமல்ல, துறவு வாழ்விற்கும் ஊக்கமுள்ள முயற்சி தேவை. சோம்பல் உதவாது.

ஒருவரை ஒருவர் இடித்து, கைகொட்டி, சிறுமையாகப் பேசுவதை, எதிர்த்துப் பேசும் திறனும் துணிவும் இல்லாமல் கேட்பர், சோம்பலால் வெட்கமும் மானமும் இழந்துப்போன முயற்சி இல்லாதவர்.

சோம்பல், அரசனிடமோ அல்லது குடியானவனிடமோ தொடர்ந்து இருந்தால், அது தன் பகையிடம் அல்லது தன்னைப் போன்றவர்களிடம், அவரை அடிமையாக்கி விடும்.

மக்களை ஆள்வதில் வந்த குற்றங்களைக் கண்டு, சுதாரித்து, சோம்பலின் ஆட்சியை நீக்கி, ஊக்கமுள்ள முயற்சிகளை மேற்கொண்டால், அக்குற்றங்கள் அழிந்துவிடும்.

உயிரை ஒட்டித் தொடர்ந்து நிலைத்த ஞானி, இருக்கின்ற அனைத்தையும் ஒரே சமயத்தில் தானாக உணர்வதுபோல், சோம்பல் இல்லாத மனத்தினன், ஊக்கமுள்ள முயற்சியை நிலையாய்க் கொண்டவன், எதையும், எல்லாவற்றையும் அடைய முடியும்.

# 62. ஆள்வினை உடைமை

*ஆள்வினையுடைமை = ஆள் + வினை + உடைமை. மக்களையும், செயலையும் நிர்வகிக்கும் திறமை கொண்டிருத்தல்.*

**611. அருமை யுடைத்தென் றயாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.**

**அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்;
பெருமை முயற்சி தரும்.**

*அயாவாமை = அய் + ஆவ் + ஆமை. வியக்காமை. தயங்காமை. அஞ்சாமை. சோர்வடையாமை.*

*பெருமை = தன் மதிப்பு. சுய நம்பிக்கை. படைபலம். செயல் வீரர்கள்.*

*ஒரு இலட்சியத்தை அடைவது கடினம் என்று சோர்வடையாமை வேண்டும். தன்மீதும், தன்னைச் சுற்றியுள்ளவர் மீதும் கொள்ளும் நம்பிக்கை, முயற்சியைத் தரும், பலத்தைக் கூட்டும், துணிவை அளிக்கும், வெற்றியைத் தரும்.*

**612. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.**

**வினைக்கண் வினைகெடல் ஓம்பல்-வினைக் குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று, உலகு!**

*ஒரு செயல் நடக்கும் போது, அச்செயல் நிறைவடையாமல் தடையாவது, வினைக்குறை ஆகும். வினைக்குறை செய்தவரை, உலகம் (பழிக்க) மறக்காது.*

**613. தாளாண்மை என்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.**

**தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே-
வேளாண்மை என்னும் செருக்கு.**

*தாளாண்மை = தாள் + ஆண்மை. கால்களை / மக்களை ஆளுதல். ஊக்கமுடன் உழைக்கச் செய்தல்.*

*வேளாண்மை = வேள் + ஆண்மை. வேள் = வ் + ஏள். புறமும் அகமும் மிக உயர்ந்த மிகை. புறம் மற்றும் அக வளம். முழுமையான வளம். வேளாண்மை = வளத்தை ஆளுதல். வளத்தை அனுபவித்தல், அளித்தல்.*

*உழைப்பு உள்ளவனிடத்தில் / மக்களை நிர்வகிக்கும் திறமை உள்ள மன்னனிடத்தில், தான் வளமுடையவன் என்னும் தற்பெருமை நீங்காது.*

**614. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை**
**வாளாண்மை போலக் கெடும்.**

**தாளாண்மை இல்லாதான் வேளாண்மை, பேடிகை**
**வாள் ஆண்மை போலக் கெடும்.**

*வாளாண்மை = வாள் + ஆண்மை. வாளை ஆளும் / வீசும் தன்மை.*

*உழைக்காதவன் அல்லது மக்களை நிர்வகிக்கும் திறமை இல்லாத மன்னன், தான் வளமுடையவன் எனக் கொள்ளும் தற்பெருமை, கோழையின் கை வாளை வீசி இழப்பதைப் போல், இழக்கப்படும்.*

**615. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்**
**துன்பந் துடைத்தூன்றுந் தூண்.**

**இன்பம் விழையான், வினை விழைவான் தன் கேளிர்**
**துன்பம் துடைத்து ஊன்றும் தூண்.**

*கேளிர் = கேள் + இர். கேட்டு இருப்பவர்கள். தன்சொல் கேட்பவர்கள். தனக்கு கீழ்ப்படிந்தவர்கள். தன் மக்கள், சுற்றம், குடும்பத்தினர்.*

*தனக்கென இன்பத்தை விரும்பாமல், (பிறருக்காக) செயல் செய்வதையே விரும்புபவன், (பகைவர்களால்) தன்மக்களுக்கு ஏற்பட்ட துன்பத்தை முழுவதுமாய் அகற்றி, அவர்கள் மீண்டும் எழுந்து தம் காலில் நிற்க, தூண்போல் உதவுவான்.*

**616. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை**
**இன்மை புகுத்தி விடும்.**

**முயற்சி திருவினை ஆக்கும்; முயற்று இன்மை**
**இன்மை புகுத்திவிடும்.**

*முயற்சி செல்வத்தை / ஞானத்தை உருவாக்கும். முயற்சியின்மை, வறுமையில் / இருளில் தள்ளி விடும்.*

**617. மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்**
**தாளுளா டாமரையி னாள்.**

**'மடி உளான், மா முகடி' என்ப; மடி இலான்**
**தாள் உளான், தாமரையினாள்.**

*மாமுகடி = பெரிய முகடு + இ. இருண்ட அண்டம் நிலைமை. சூன்யம். இருள். கருமை.*

*சோம்பல் உடையவன் உடல் முழுவதும் கருமை என்பர். சோம்பல் இல்லாதவன், முயற்சி உடையவன் கால்கள்கூட தாமரையின் மிகையான செம்மை.*

**618. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.**

**பொறி இன்மை யார்க்கும் பழி அன்று; அறிவு அறிந்து,
ஆள்வினை இன்மை பழி.**

*பொறி = புலன்.*

*புலன்கள் இல்லாமையால் எவரையும் மக்கள் பழிப்பதில்லை. சோம்பலாலும், முயற்சியாலும் அடையும் தீமை, நன்மைகளைக் கண்டும், கேட்டும், அறிந்தப் பின்னும், மக்களை வழிநடத்தும், நிர்வகிக்கும் செயலின்மை அல்லது உழைக்காமை பழிக்கப்படும்.*

*புலன்கள் இல்லாமையால் எவரையும் மக்கள் பழிப்பதில்லை. சோம்பலாலும், முயற்சியாலும் அடையும் தீமை, நன்மைகளைக் கண்டும், கேட்டும், அறிந்த பின்னும், மக்களை வழிநடத்தும், நிர்வகிக்கும் செயலின்மை அல்லது உழைக்காமை பழிக்கப்படும்.*

**619. தெய்வத்தா லாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.**

**தெய்வத்தான் ஆகாதுஎனினும், முயற்சி தன்
மெய் வருத்தக் கூலி தரும்.**

*தெய்வம் = த் + எய் + வ் + அம். ஞானி. ஊழ். விதி.*

*உழைப்பிற்கு எதிர்பார்த்த மிகுந்த வருவாய், ஊழால் தடைப்பட்டாலும், தன் உடல் வருந்திய அளவுக்காவது பலன் கிடைக்கும்.*

*ஊழை, விதியை, சோதிடத்தைக் காரணம் காட்டி முயற்சி செய்யாமல், உழைக்காமல், சோம்பலாய் இருக்கக் கூடாது.*

**620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.**

**ஊழையும் உப்பக்கம் காண்பர்-உலைவு இன்றித்
தாழாது உஞற்றுபவர்.**

*உப்பக்கம் = புறப்பக்கம். அப்பக்கம் = அகப்பக்கம்.*

*தடுமாற்றமின்றி, தளராமல் முயற்சி செய்பவர், வேறு பலவித தடைகளையும், எவற்றிலும் வலிமையான ஊழையும், புறமுதுகு காட்டி ஓடக் காண்பர்.*

**ஆள்வினையுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஒரு இலட்சியத்தை அடைவது கடினம் என்று சோர்வடையாமை வேண்டும். தன்மீதும், தன்னைச் சுற்றியுள்ளவர் மீதும் கொள்ளும்*

நம்பிக்கை, முயற்சியைத் தரும், பலத்தைக் கூட்டும், துணிவை அளிக்கும், வெற்றியைத் தரும்.

ஒரு செயல் நடக்கும் போது, அச்செயல் நிறைவடையாமல் தடையாவது, வினைக்குறை ஆகும். வினைக்குறை செய்தவரை, உலகம் (பழிக்க) மறக்காது.

உழைப்பு உள்ளவனிடத்தில் / மக்களை நிர்வகிக்கும் திறமை உள்ள மன்னனிடத்தில், தான் வளமுடையவன் என்னும் தற்பெருமை நீங்காது.

உழைக்காதவன் அல்லது மக்களை நிர்வகிக்கும் திறமை இல்லாத மன்னன், தான் வளமுடையவன் எனக் கொள்ளும் தற்பெருமை, கோழையின் கை வாளை வீசி இழப்பதைப் போல், இழக்கப்படும்.

தனக்கென இன்பத்தை விரும்பாமல், செயல் செய்வதையே விரும்புபவன், தன்மக்களுக்கு ஏற்பட்ட துன்பத்தை முழுவதுமாய் அகற்றி, அவர்கள் மீண்டும் எழுந்து தம் காலில் நிற்க, தூண்போல் உதவுவான்.

முயற்சி செல்வத்தை / ஞானத்தை உருவாக்கும். முயற்சியின்மை, வறுமையில் / இருளில் தள்ளி விடும்.

முயற்சி செல்வத்தை / ஞானத்தை உருவாக்கும். முயற்சியின்மை, வறுமையில் / இருளில் தள்ளி விடும்.

உழைப்பிற்கு எதிர்பார்த்த மிகுந்த வருவாய், ஊழால் தடைப்பட்டாலும், தன் உடல் வருந்திய அளவுக்காவது பலன் கிடைக்கும்.

தடுமாற்றமின்றி, தளராமல் முயற்சி செய்பவர், வேறு பலவித தடைகளையும், எவற்றிலும் வலிமையான ஊழையும், புறமுதுகு காட்டி ஓடக் காண்பர்.

# 63. இடுக்கணழியாமை

*இடுக்கணழியாமை = இடுக்கண் + அழியாமை. இடுக்கண் = இடு + கண். இடு = இட் + உ. நிலையாய் ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது. ஊழ். கண் = துளை. வெளிச் செல்லும் வழி. இடுக்கண் = ஊழ் கழிந்து / பாய்ந்து வரும் வழி.*

*இடுக்கணழியாமை = ஊழ் கழியும் வழி அழியாமை.*

**621. இடுக்கண் வருங்கா னகுக வதனை**
**அடுத்தூர்வ தஃதொப்ப தில்.**

**இடுக்கண் வருங்கால் நகுக! அதனை**
**அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்.**

*ஊர்வது = பரவுவது. ஒப்பது = இணையானது*

*ஊழால் வரும் தடைகளைக் கண்டு, அவை முற்பிறப்பில் / முற்பிறப்புகளில் செய்த வினைகளின் விளைவுகள், அவை வந்துதான் ஊழ் கழியும், அவை இயற்கையின் பொருளியல் விதிகளுக்கு உட்பட்டவை, காரணம் காரியம், வினை விளைவு ஆகிய இரட்டைத் தன்மைகளின் இருப்பு, அவை காலத்தோடு தொடர்புடையன, அவற்றை யாராலும் மாற்ற முடியாது, அவை இயந்திரகதியில் இயங்குவன, அவற்றைக் கண்டு அஞ்சுவதால் மனம் தடுமாறி மேலும் பல வினைகளும் விளைவுகளும் ஊழாய் சேருகின்றன, அவற்றைக் கண்டும் காணாமல், ஊக்கத்தையும், முயற்சியையும், உழைப்பையும் இடைவிடாது மேற்கொண்டால் ஊழும் தோற்கும் என்று அறிந்து மெல்ல சிரித்துவிடல் வேண்டும். அப்புரிந்துணர்வே, ஊழ் விரிந்துப் பரவுவதற்கு இணையாக, மனம் முழுவதும் பரவி, ஊழின் பாதிப்பிலிருந்து மனத்தையும் வாழ்வையும் பாதுகாக்கும்.*

**622. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையான்**
**உள்ளத்தி னுள்ளக் கெடும்.**

**வெள்ளத்து அனைய இடும்பை, அறிவு உடையான்**
**உள்ளத்தின் உள்ளக் கெடும்.**

*வெள்ளத்தைப் போன்று பாய்ந்து ஓடி வருவது ஊழ், அது தன்னை, தன் மனத்தை அடித்துச் செல்லாமல், விலகி நிற்கவேண்டும், அதன் வேகம் தணிந்த பின் மீண்டும் தன் ஊக்கமுள்ள முயற்சியை மேற்கொள்ள வேண்டும், ஊழின் துவக்கம், இயல்பு, இயக்கம் பற்றிச் சிந்தித்தாலே, ஊழின் மனத்தைப் பாதிக்கும் வலிமை அழிந்து விடும்.*

**623. இடும்பைக் கிடும்பைப் படுப்ப ரிடும்பைக்**
**கிடும்பைப் படாஅ தவர்.**

**இடும்பைக்கு இடும்பை படுப்பர்- இடும்பைக்கு**
**இடும்பை படாஅதவர்.**

*இடும்பை = இடும் + பை. வினையால் விளைவு சேரும் இடம். ஊழ். பாடை.*

*ஊழால் கவலைப் படாதவர், ஊழுக்கு கவலையைத் தருவர்.*

*தான் இயங்கிய விதம் சரிதானா, தன்னுடைய இயல்பு இவருக்கு எப்படி தெரியும், தன் அளப்பரிய சக்தியை இவர் எப்படி தன் அறிவாலும், ஊக்கத்தாலும் வென்றார், யாரும் வெல்ல முடியாது என்று இறுமாந்திருந்த தான், இவரிடம் தோற்று விட்டோமே என்று, ஊழ் கவலைப்படும்.*

**624. மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற**
**விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.**

**மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான் உற்ற**
**இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.**

*தடையான வழியெல்லாம், வலிந்து முயன்று, வண்டியின் காளைமாடு கடப்பதைப் போல், தளரா ஊக்கமுடனும், விடாமுயற்சியுடனும் உழைத்தால், அது வந்த ஊழிற்கே இடைஞ்சல் ஆகிவிடும்.*

**625. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற**
**இடுக்க ணிடுக்கட் படும்.**

**அடுக்கி வரினும், அழிவு இலான் உற்ற**
**இடுக்கண் இடுக்கண் படும்.**

*ஊழின் வெள்ளம், அடுத்தடுத்து தொடர்ந்து வந்தாலும், மனம் தளர்ந்து அழியாதவன், ஊழையே, தன் தளரா ஊக்கம் மற்றும் இடைவிடா முயற்சியெனும் வெள்ளத்தால் மூழ்கடிப்பான்.*

**626. அற்றோமென் றல்லற் படுபவோ பெற்றோமென்**
**றோம்புத றேற்றா தவர்.**

**'அற்றேம்!' என்று அல்லற்படுபவோ-'பெற்றேம்!' ன்று**
**ஓம்புதல் தேற்றாதவர்.**

*நல்வினை ஊழால், செல்வத்தைப் பெற்றக் காலத்தில், பிற்காலத்தில், கெட்ட காலத்தில் உதவும் என்று பாதுகாக்கத் தவறியவர், தீவினை ஊழால், ஒன்றும் இல்லாமல் போனோமே என்று புலம்பலாமா?*

*ஊழ் இரண்டு வகைப்படும். நல்வினை ஊழ், தீவினை ஊழ். நல்வினை ஊழால், செல்வம், கல்வி, நட்பு, சுற்றம், இன்பம் சேரும். தீவினை ஊழால், வறுமை, மடமை, பகை, தனிமை, துன்பம் சேரும். எதிர்பாராத நன்மையும், தீமையும் ஊழால் வருவன என்று அறிந்து, தன் ஊக்கத்தையும், முயற்சியையும், உழைப்பையும் தளராது எக்காலத்தும் மேற்கொள்பவன், நல் ஊழைக் கண்டு மகிழ்வதில்லை, தீ ஊழைக் கண்டு கலங்குவதுமில்லை.*

**627. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்.**

**'இலக்கம், உடம்பு இடும்பைக்கு' என்று, கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம், மேல்.**

*இலக்கம் = இலக்கு + அம். இலக்கான தன்மை.*

*கையாறு = கை + ஆறு. மனம் உடைதல். துன்பம். கையறு = கை + அறு. ஒன்றும் செய்ய முடியாத நிலை. துன்பம்.*

*ஊழின் இலக்கு உடம்பு என்றும், உடம்பின் வேதனையுடன் மனம் ஒன்றாமல் இருக்க முடியும் என்றும் அறிந்த உயர்ந்தவர்கள், ஊழால் வரும் தடைகளைக் கண்டு துன்பம் அடையாமல், விலகி நின்றும், ஊக்கமுள்ள முயற்சியுடன் உழைத்தும், அமைதி காப்பர்.*

**628. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன்.**

**இன்பம் விழையான், 'இடும்பை இயல்பு' என்பான்
துன்பம் உறுதல் இலன்.**

*ஆசையுடன் இன்பத்தை விரும்பாதவனும், ஊழைத் தவிர்க்கமுடியாத இயக்க இயல்பு என்று அறிந்து உணர்ந்தவனும், தடைகளைக் கண்டு துன்பப் படுவதில்லை.*

**629. இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துள்
துன்ப முறுத லிலன்.**

**இன்பத்துள் இன்பம் விழையாதான், துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்.**

*ஆனந்தத்தையே ஆசைப்படாதவன் இடத்தில், துன்பத்துள் துன்பமான அகந்தையால் வரும் ஆசை தோன்றாது.*

*இறையுணர்வு, மெய்யுணர்வு, ஆனந்தம் ஆசையால் அடையப்படுவதில்லை. புலனடக்கம் எனும் தளராத முயற்சியால், இயல்பாய், தானாய் வருவது. அத்தகையவன் மனத்தில், பிற ஆசைகளும்*

*தோன்றாது, கருமமும் சேராது, ஊழும் கூடாது, பிறப்பும் தொடராது, துன்பமும் கிடையாது.*

**630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்**
**ஒன்னார் விழையுஞ் சிறப்பு.**

**இன்னாமை இன்பம் எனக் கொளின், ஆகும், தன்**
**ஒன்னார் விழையும் சிறப்பு.**

*துன்பத்தையே இன்பமாகக் கொண்டால், பகைவர்களும், இவன் எதையும் தாங்குவான், எவரையும் வெல்வான் என்றும், இவனே தத்தம் பகையிடமிருந்து காக்கக்கூடியவன் என்றும் கருதி, அவன் தலைமையை ஏற்பர்.*

*துன்பத்தையே இன்பமாகப் பார்ப்பது, அனைத்தையுமே இன்பமாகப் பார்ப்பதாகும். அத்தகையவனுக்கு, ஊழ் என்பதோ அதனால் வரும் தடை என்பதோ ஒரு பொருட்டில்லை. தளரா ஊக்கமுடனும், விடா முயற்சியுடனும் உழைத்து, அவன் அடைய முடியாதது எதுவுமே இல்லை, அது புற உலகாயினும் சரி, அக உலகாயினும் சரி. அவனுக்கு துன்பம் என்பதே இல்லை. என்றும் ஆனந்தம்தான்.*

**இடுக்கணழியாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஊழின் விளைவுகள் வாழ்வில் வரும்போது, ஊக்கத்தையும், முயற்சியையும், உழைப்பையும் இடைவிடாது மேற்கொண்டால் ஊழும் தோற்கும் என்று அறிந்து மெல்ல சிரித்துவிட வேண்டும். அப்புரிந்துணர்வே, ஊழ் விரிந்து பரவுவதற்கு இணையாக, மனம் முழுவதும் பரவி, ஊழின் பாதிப்பிலிருந்து மனத்தையும் வாழ்வையும் பாதுகாக்கும்.*

*வெள்ளத்தைப் போன்று பாய்ந்து ஓடி வருவது ஊழ், அது தன்னை, தன் மனத்தை அடித்துச் செல்லாமல், விலகி நிற்கவேண்டும், அதன் வேகம் தணிந்தப்பின் மீண்டும் தன் ஊக்கமுள்ள முயற்சியை மேற்கொள்ள வேண்டும், ஊழின் துவக்கம், இயல்பு, இயக்கம் பற்றிச் சிந்தித்தாலே, ஊழின் மனத்தைப் பாதிக்கும் வலிமை அழிந்து விடும்.*

*ஊழால் கவலைப் படாதவர், ஊழுக்கு கவலையைத் தருவர்.*

*தடையான வழியெல்லாம், வலிந்து முயன்று, வண்டியின் காளைமாடு கடப்பதைப் போல், தளரா ஊக்கமுடனும், விடாமுயற்சியுடனும் உழைத்தால், அது வந்த ஊழிற்கே இடைஞ்சல் ஆகிவிடும்.*

*ஊழின் வெள்ளம், அடுத்தடுத்துத் தொடர்ந்து வந்தாலும், மனம் தளர்ந்து அழியாதவன், ஊழையே, தன் தளரா ஊக்கம் மற்றும் இடைவிடா முயற்சியெனும் வெள்ளத்தால் மூழ்கடிப்பான்.*

*நல்வினை ஊழால், செல்வத்தைப் பெற்றக் காலத்தில், பிற்காலத்தில், கெட்ட காலத்தில் உதவும் என்று பாதுகாக்கத் தவறியவர், தீவினை ஊழால், ஒன்றும் இல்லாமல் போனோமே என்று புலம்பலாமா?*

ஊழின் இலக்கு உடம்பு என்றும், உடம்பின் வேதனையுடன் மனம் ஒன்றாமல் இருக்க முடியும் என்றும் அறிந்த உயர்ந்தவர்கள், ஊழால் வரும் தடைகளைக் கண்டு துன்பம் அடையாமல், விலகி நின்றும், ஊக்கமுள்ள முயற்சியுடன் உழைத்தும், அமைதி காப்பர்.

ஆசையுடன் இன்பத்தை விரும்பாதவனும், ஊழைத் தவிர்க்கமுடியாத இயக்க இயல்பு என்று அறிந்து உணர்ந்தவனும், தடைகளைக் கண்டு துன்பப் படுவதில்லை.

ஆனந்தத்தையே ஆசைப்படாதவன் இடத்தில், துன்பத்துள் துன்பமான அகந்தையால் வரும் ஆசை தோன்றாது.

துன்பத்தையே இன்பமாகக் கொண்டால், பகைவர்களும், இவன் எதையும் தாங்குவான், எவரையும் வெல்வான் என்றும், இவனே தத்தம் பகையிடமிருந்து காக்கக்கூடியவன் என்றும் கருதி, அவன் தலைமையை ஏற்பர்.

**அங்கவியல்**

அங்கவியல் = அங்கம் + இயல். உறுப்பு, பகுதி இயல். அமைச்சு, அரசின் உறுப்பு.

# 64. அமைச்சு

*அமைச்சு = அமை + ச் + உ. அமை இயக்கம் வெளிப்படுத்து. திட்டமிட்டுச் செயலை நடத்து.*

*இக்குறள்கள், இராணுவம், கட்டுமாணம், விவசாயம், தொழில், மருத்துவம், கல்வி, கலைகள், ஆன்மீகம் என பல, ஏன், எல்லா துறைகளுக்கும் பொருந்தும். குறள், பல களங்களிலும், பல தளங்களிலும் பொருந்தும் அருமை, பெருமை! 64 ம் அதிகாரம் 64 கலைகளுக்கும் பொருந்தும் போலும். திருக்குறள், ஒரு உலக நூல், பொது நூல், அதே சமயம், ஒவ்வொருவருக்குமான தனி நூல்.*

**631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்**
**அருவினையு மாண்ட தமைச்சு.**

**கருவியும், காலமும், செய்கையும், செய்யும்**
**அருவினையும், மாண்டது-அமைச்சு.**

*கருவி = தேவையான பொருட்களும், ஆயுதங்களும்.*

*காலம் = பருவம், மாதம், வாரம், நாள், கிழமை, சமயம், காலை, மாலை, இரவு, கால எல்லை, துவக்கம், இடைவெளி, முடிவு.*

*செய்கை = செய் + கை. செய்கின்ற கை. பொருட்களையும், ஆயுதங்களையும் கையாளும் ஆட்கள்.*

*செய் = நிதி.*

*அருவினை = அரு + வினை. கருத்தளவிலான செயல். திட்டம். அருவினை = செயல் திட்டம். கருவி, காலம், செய்கை, நிதி ஆகிய அனைவற்றையும் உள்ளடக்கிய திட்டம். வேலை ஓட்டம்.*

*கருவி, காலம், வேலையாள், நிதி, திட்டம் ஆகியவற்றை நிர்வகித்த அனுபவம் உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

**632. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ**
**டைந்துடன் மாண்ட தமைச்சு.**

**வன்கண், குடிகாத்தல், கற்று அறிதல், ஆள்வினையோடு,**
**ஐந்துடன் மாண்டது-அமைச்சு.**

*வன்கண் = வல் + கண். உறுதியான பார்வை. தவறு நேராமை. மன உறுதி. கண்காணிப்பு.*

*குடிகாத்தல் = வேலையாட்களின் நலமும் பாதுகாப்பும்.*

*கற்றறிதல் = கற்று + அறிதல். தடைகளும் தீர்வுகளும். நிபுணர்களின் ஆலோசனை. தேவையான மாறுதல்கள்.*

*ஆள்வினை = ஆள், வேலை நிர்வாகம். மேற்பார்வை.*

*பணி கண்காணிப்பு, வேலையாட்களின் நலம் மற்றும் பாதுகாப்பு, சிக்கல்களுக்கு நிபுணர்களின் ஆலோசனை, ஆள்வேலை நிர்வாகம் ஆகிய நிர்வாகக் காரணிகளுடன் மேல்கூறிய கருவி, காலம், வேலையாள், நிதி, திட்டம் ஆகிய ஐந்து உற்பத்திக் காரணிகளையும், ஒருங்கிணைத்து நிர்வகித்த அனுபவமுள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

**633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.**

**பிரித்தலும், பேணிக்கொளலும், பிரிந்தார்ப்
பொருத்தலும், வல்லது-அமைச்சு**

*ஒரு பணி நடக்கையில், அந்த இடத்தில் ஏற்கனவே வாழ்பவர்களை அவ்விடத்தில் இருந்து அப்புறப்படுத்தல், அப்படிப் பிரிக்கப்பட்டவர்களுக்கு தற்காலிகமாக வாழ்வாதாரங்களைத் தருதல், அவர்கள் நிரந்தரமாக வாழ்வதற்கு மாற்று ஏற்பாடுகளைச் செய்து தருதல் ஆகிய வலிமை உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

**634. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.**

**தெரிதலும், தேர்ந்து செயலும், ஒருதலையாச்
சொல்லலும் வல்லது-அமைச்சு.**

*ஒருதலையாய் = குழப்பமின்றி*

*ஒரு செயலைச் செய்யும் எல்லா விதங்களும் அறிந்து, அவற்றில் எது சிறந்தது மற்றும் சாத்தியமானது எனக் கலந்தாலோசித்து, குழப்பமின்ற அத்திட்டத்தை விளக்கிச் சொல்லும் வலிமை உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

**635. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றும்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.**

**அறன் அறிந்து, ஆன்று அமைந்து சொல்லான், எஞ்ஞான்றும்
திறன் அறிந்தான், தேர்ச்சித் துணை.**

*காரணம் காரியம், வினை விளைவு, நல்வினை, தீவினை, இன்பம், துன்பம், ஆக்கம், அழிவு, ஊழ், போன்றவற்றை அறிந்தவனை, அதன்படி, ஆக்கம் விளைவிக்கும் ஆலோசனை கூறுபவனை, ஒவ்வொரு நாளும் புதிது புதிதாய் தோன்றும் நுட்பங்கள், கருவிகள் மற்றும் அவற்றில் திறமை உடையவர்கள், எவை, எவர் என அறிந்தவனைத் தேர்ந்தெடுத்தால், அவன் அரசனுக்கு / அரசுக்கு / அரசாங்கத்துக்கு நல்ல துணையாவான்.*

**636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்**
**யாவுள முன்னிற் பவை.**

**மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதி நுட்பம்**
**யா உள, முன் நிற்பவை**

*நுணுக்கமான சிந்தனையும், நூல்களைத் தொடர்ந்து கற்றறியும் பழக்கமும் உடையவருக்கு, தெரியாத, புரியாத, புதிரான பெரிய நுணுக்கம் என்று எவை இருக்க முடியும்?*

**637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்**
**தியற்கை யறிந்து செயல்.**

**செயற்கை அறிந்தக் கடைத்தும், உலகத்து**
**இயற்கை அறிந்து, செயல்!**

*செயற்கை = செயல் + கை. இயந்திரம். தொழில் நுட்பக் கருவிகள்.*

*இயற்கை = இயல் + கை. இயல்பு.*

*அதிநுட்பத்தால் உருவான தொழில் நுட்பக் கருவிகள் பற்றி அறிந்திருந்தப் போதிலும், குறிப்பிட்ட சமூகத்தின் வளர்ச்சி, கல்வி, அறிவு, மனநிலை போன்றவற்றின் இயல்பை அறிந்து, பணியாற்ற வேண்டியது அமைச்சனின் அறிவுடைமையும் கடமையுமாகும்.*

*வேலையாட்கள், தொழில் நுட்பக் கருவிகளின் அருமை புரிந்து, ஒத்துழைக்கவில்லை என்றால், கருவிகளும் வீணாகும், பணியும் நிறைவேறாது. பொருள் விரயத்தால், மன்னனின் கோபத்திற்கு ஆளாக நேரிடும்.*

**638. அறிகொன் றறியா னெனினு முறுதி**
**உழையிருந்தான் கூறல் கடன்.**

**அறி கொன்று, அறியான் எனினும், உறுதி**
**உழையிருந்தான் கூறல் கடன்.**

*அறிந்திருக்க வேண்டிய ஒன்றை மன்னன் அறியவில்லை என்றாலும், பணியைப் பற்றித் தெளிவாகக் கூற வேண்டியது, உடனிருந்து பணியாற்றிய அமைச்சனின், அலுவலரின் கடமை.*

**639. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வர்**
**எழுபது கோடி தலை.**

**பழுது எண்ணும் மந்திரியின், பக்கத்துள் தெவ் ஓர்**
**எழுபது கோடி உறும்.**

*ஒரு அரசனுக்கும், அவன் நாட்டிற்கும், தீங்கை விளைவிக்க எண்ணும் அமைச்சனைக் காட்டிலும், மிக அருகிலேயே எழுபது கோடி தலைகள் கொண்ட பகைவர் இருப்பது, எவ்வளவோ மேலானதாகும்.*

**640. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.**

**முறைப்படச் சூழ்ந்தும், முடிவிலவே செய்வர்-
திறப்பாடு இலாஅதவர்.**

*முறையாக சிந்தித்துத் தீட்டப்பட்ட திட்டத்தையும், பணியையும் முடிக்கப்படாமலே விட்டு விடுவான், திறமையுடன் தன்கடமையைச் செய்யாத அமைச்சன்.*

**அமைச்சு அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*கருவி, காலம், வேலையாள், நிதி, திட்டம் ஆகியவற்றை நிர்வகித்த அனுபவம் உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

*பணி கண்காணிப்பு, வேலையாட்களின் நலம் மற்றும் பாதுகாப்பு, சிக்கல்களுக்கு நிபுணர்களின் ஆலோசனை, ஆள்வேலை நிர்வாகம் ஆகிய நிர்வாகக் காரணிகளுடன் மேல்கூறிய கருவி, காலம், வேலையாள், நிதி, திட்டம் ஆகிய ஐந்து உற்பத்திக் காரணிகளையும், ஒருங்கிணைத்து நிர்வகித்த அனுபவமுள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

*ஒரு பணி நடக்கையில், அந்த இடத்தில் ஏற்கனவே வாழ்பவர்களை அவ்விடத்தில் இருந்து அப்புறப்படுத்தல், அப்படிப் பிரிக்கப்பட்டவர்களுக்கு தற்காலிகமாக வாழ்வாதாரங்களைத் தருதல், அவர்கள் நிரந்தரமாக வாழ்வதற்கு மாற்று ஏற்பாடுகளைச் செய்து தருதல் ஆகிய வலிமை உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

*ஒரு செயலைச் செய்யும் எல்லா விதங்களும் அறிந்து, அவற்றில் எது சிறந்தது மற்றும் சாத்தியமானது எனக் கலந்தாலோசித்து, குழப்பமின்றிஅத்திட்டத்தை விளக்கிச் சொல்லும் வலிமை உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.*

*காரணம் காரியம், வினை விளைவு, நல்வினை, தீவினை, இன்பம், துன்பம், ஆக்கம், அழிவு, ஊழ், போன்றவற்றை அறிந்தவனை, அதன்படி, ஆக்கம் விளைவிக்கும் ஆலோசனை கூறுபவனை, ஒவ்வொரு நாளும் புதிது புதிதாய் தோன்றும் நுட்பங்கள், கருவிகள் மற்றும் அவற்றில் திறமை உடையவர்கள், எவை, எவர் என அறிந்தவனைத் தேர்ந்தெடுத்தால், அவன் அரசனுக்கு / அரசுக்கு / அரசாங்கத்துக்கு நல்ல துணையாவான்.*

*நுணுக்கமான சிந்தனையும், நூல்களைத் தொடர்ந்துக் கற்றறியும் பழக்கமும் உடையவருக்கு, தெரியாத, புரியாத, புதிரான பெரிய நுணுக்கம் என்று எவை இருக்க முடியும்?*

*அதிநுட்பத்தால் உருவான தொழில் நுட்பக் கருவிகள் பற்றி அறிந்திருந்தப் போதிலும், குறிப்பிட்ட சமூகத்தின் வளர்ச்சி, கல்வி, அறிவு,*

மனநிலை போன்றவற்றின் இயல்பை அறிந்து, பணியாற்ற வேண்டியது அமைச்சனின் அறிவுடைமையும் கடமையுமாகும்.

அறிந்திருக்க வேண்டிய ஒன்றை மன்னன் அறியவில்லை என்றாலும், பணியைப் பற்றித் தெளிவாகக் கூற வேண்டியது, உடனிருந்து பணியாற்றிய அமைச்சனின், அலுவலரின் கடமை.

ஒரு அரசனுக்கும், அவன் நாட்டிற்கும், தீங்கை விளைவிக்க எண்ணும் அமைச்சனைக் காட்டிலும், மிக அருகிலேயே எழுபது கோடி தலைகள் கொண்ட பகைவர் இருப்பது, எவ்வளவோ மேலானதாகும்.

முறையாக சிந்தித்துத் தீட்டப்பட்ட திட்டத்தையும், பணியையும் முடிக்கப்படாமலே விட்டு விடுவான், திறமையுடன் தன்கடமையைச் செய்யாத அமைச்சன்.

# 65. சொல்வன்மை

*சொல்வன்மை = சொல் + வன்மை. வன்மை = வல் + மை. வலிமை. சொல்வன்மை = சொல்லின் வலிமை.*

**641. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்**
**யாநலத் துள்ளதூஉ மன்று.**

**'நா நலம் என்னும் நலன் உடைமை; அந் நலம்**
**யா நலத்து உள்ளதூஉம் அன்று.**

*நா = ன் + ஆ. நெருக்கமாவது. மனதுடன், உயிருடன் நெருக்கமாவது.*

*நாக்கின் நன்மை என்றாலே, அது எல்லா நன்மையையும் உடையது என்றுப் பொருள். அவ்வாறு எல்லா நன்மையையும், தன்னகத்துள் கொண்டது, வேறெதுவுமில்லை, வேறெந்த உடல், புலன் உறுப்புமில்லை.*

*தனிமனித வாழ்வு, குடும்ப வாழ்வு, சமூக வாழ்வு, உலக வாழ்வு என்று மனித வாழ்வின் எல்லா நிலையிலும், எல்லா நன்மையும் ஆக்கமும் பெற வேண்டும் என்றால், நா, சொல், வெளிப்பாடு உண்மையாகவும், வலிமையாகவும், உறுதியாகவும், இனிமையாகவும், பயனுடையதாகவும் இருக்க வேண்டும்.*

**642. ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்**
**காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.**

**ஆக்கமும், கேடும், அதனால் வருதலால்,**
**காத்து ஓம்பல், சொல்லின்கண் சோர்வு.**

*நன்மையும் தீமையும் சொல்லால் வருவதால், வெளிப்பாட்டு முறையிலும், சொல்லின் தேர்விலும் நிதானத்தைக் கடைப்பிடித்தல் வேண்டும்.*

**643. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாஞ் சொல்.**

**கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய், கேளாரும்**
**வேட்ப, மொழிவது ஆம்-சொல்.**

*கேட்டவர்கள் ஒப்புக்கொண்டு கட்டுப்படும் வகையிலும், நேரடியாய் கேட்காதவர்களும், அவர் என்ன பேசினார் எனக் கேட்க ஆவலுடன் இருக்கும் வகையிலும், பேசுவதே சிறந்தச் சொல்.*

**644. திறனறிந்து சொல்லுக சொல்லை யறமும்**
**பொருளு மதனினூங் கில்.**

**திறன் அறிந்து சொல்லுக, சொல்லை; அறனும்**
**பொருளும் அதனின் ஊஉங்கு இல்.**

*சொல்லின் வலிமையையும், அது உண்டாக்கும் விளைவையும் சிந்தித்து, பயனுள்ள சொல்லைச் சொல்ல வேண்டும். அச்சொல்லைக் காட்டிலும், அறம் பயப்பதும், செல்வம் தருவதும் வேறெதுவும் இல்லை.*

**645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை**
**வெல்லுஞ்சொல் லின்மை யறிந்து.**

**சொல்லுக சொல்லை-பிறிது ஓர் சொல் அச் சொல்லை**
**வெல்லும் சொல் இன்மை அறிந்து.**

*ஒரு சொல்லை விட வேறு எந்தச் சொல்லும், சிறப்பாய் இல்லை என்பதை அறிந்து, அச்சொல்லைச் சொல்ல வேண்டும்.*

*ஒரு விடயத்தைப் பற்றிப் பேச, இணையான சொற்கள் பல உள்ளன. ஆனால், அவை ஏற்படுத்தும் பாதிப்பும் விளைவும், இடம், காலம், அவைக்கு ஏற்றவாறு மாறுபடுகின்றன. எனவே, எப்பயன் வேண்டுமோ, அப்பயனைத் தரும் சொற்களில், மிகச் சிறந்த சொல்லைத் தேர்ந்தெடுத்துப் பேச வேண்டும்.*

**646. வேட்பத்தான் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்**
**மாட்சியின் மாசற்றார் கோள்.**

**வேட்பத் தாம் சொல்லி, பிறர் சொல் பயன் கோடல்**
**மாட்சியின் மாசு அற்றார் கோள்.**

*மாட்சி = ம் + ஆட்சி. அமைதி ஆட்சி.*

*பிறர் விரும்ப, தான் பேசி, பிறர் சொல்வதன் பயனை ஏற்றுக் கொள்ளுதல், அமைதியை ஆளும், மனக்களங்கம் அற்ற அமைச்சரின், நோக்கமாக இருக்க வேண்டும்.*

**647. சொல்வலன் சோர்வில னஞ்சா னவனை**
**இகல்வெல்லல் யார்க்கு மரிது.**

**சொலல் வல்லன், சோர்வு இலன், அஞ்சான், அவனை**
**இகல் வெல்லல் யார்க்கும் அரிது.**

*இகல் = இ + கல். நிலையான தடை. பகை. பயமுறுத்தல்.*

*பேசுவதில் வல்லவனாயும், ஊக்கத்தில் தளராதவனாயும், வினைக்கு அஞ்சாதவனாயும் இருப்பவனை, பயமுறுத்தி வெல்வது, எவராலும் முடியாது.*

**648. விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்.**

**விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்-நிரந்து இனிது**
**சொல்லுதல் வல்லார்ப் பெறின்.**

*இரந்து = விரும்பிக் கெஞ்சிக் கேட்க.*

*மக்கள் விரும்பி கெஞ்சிக் கேட்க, இனிமையாகப் பேசும் வல்லவர்களை அரசன் பெற்றால், "அடுத்து என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள், நாங்கள் தயார்" என்று மக்கள் உற்சாகமுடன் முன்வருவார்கள்.*

**649. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற**
**சிலசொல்ல றேற்றா தவர்.**

**பல சொல்லக் கா றுவர் மன்ற-மாசு**
**அற்ற சில சொல்லல் தேற்றாதவர்.**

*மன்ற = மன் + ற் + அ. மனம் பிரிந்த.*

*மனத்திலிருந்து பிரிந்த, களங்கமில்லாத சில சொற்களால் ஒன்றைப் புரிந்து கொள்ள முயலாதவர் / முடியாதவர்தான், ஆழமில்லாத, வீணான, பிறரைச் சாடுகின்ற, பயனற்ற பல சொற்களைக் கேட்க மிகவும் ஆசைப்படுவர்.*

**650. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற**
**துணர விரித்துரையா தார்.**

**இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர்-கற்றது**
**உணர விரித்து உரையாதார்.**

*இணரூழ்த்து = இண் + அர் + ஊழ் + த் + உ. மிக நெருங்கியும், தனித்தனியாயும், பரந்து விரிந்தும், ஆழ்ந்து நீண்டும், வடிவமாய் வெளிப்படல்.*

*மிக நெருங்கியும், தனித்தனியாயும், பரந்து விரிந்தும், ஆழ்ந்து நீண்டும், என ஒரு மலருக்குரிய அனைத்துப் புற வடிவங்களைக் கொண்டிருந்தும், மலரின் முக்கியச் சாரமான மணம் இல்லாத கொத்துமலரைப் போன்றவர், தான் கற்ற பல நூல்களின் கருத்தை, பிறர் அறிந்துணரும் வகையில் விரிவாக, விளக்கமாக பேச முடியாதவர்.*

**சொல்வன்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*நாக்கின் நன்மை என்றாலே, அது எல்லா நன்மையையும் உடையது என்று பொருள். அவ்வாறு எல்லா நன்மையையும், தன்னகத்துள் கொண்டது, வேறெதுவுமில்லை, வேறெந்த உடல், புலன் உறுப்புமில்லை.*

நன்மையும் தீமையும் சொல்லால் வருவதால், வெளிப்பாட்டு முறையிலும், சொல்லின் தேர்விலும் நிதானத்தைக் கடைப்பிடித்தல் வேண்டும்.

கேட்டவர்கள் ஒப்புக்கொண்டு கட்டுப்படும் வகையிலும், நேரடியாய் கேட்காதவர்களும், அவர் என்ன பேசினார் எனக் கேட்க ஆவலுடன் இருக்கும் வகையிலும், பேசுவதே சிறந்தச் சொல்.

சொல்லின் வலிமையையும், அது உண்டாக்கும் விளைவையும் சிந்தித்து, பயனுள்ள சொல்லைச் சொல்ல வேண்டும். அச்சொல்லைக் காட்டிலும், அறம் பயப்பதும், செல்வம் தருவதும் வேறெதுவும் இல்லை.

ஒரு சொல்லை விட வேறு எந்தச் சொல்லும், சிறப்பாய் இல்லை என்பதை அறிந்து, அச்சொல்லைச் சொல்ல வேண்டும்.

பிறர் விரும்ப, தான் பேசி, பிறர் சொல்வதன் பயனை ஏற்றுக் கொள்ளுதல், அமைதியை ஆளும், மனக்களங்கம் அற்ற அமைச்சரின், நோக்கமாக இருக்க வேண்டும்.

பேசுவதில் வல்லவனாயும், ஊக்கத்தில் தளராதவனாயும், வினைக்கு அஞ்சாதவனாயும் இருப்பவனை, பயமுறுத்தி வெல்வது, எவராலும் முடியாது.

மக்கள் விரும்பி கெஞ்சிக் கேட்க, இனிமையாகப் பேசும் வல்லவர்களை அரசன் பெற்றால், "அடுத்து என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள், நாங்கள் தயார்" என்று மக்கள் உற்சாகமுடன் முன்வருவார்கள்.

மனத்திலிருந்துப் பிரிந்த, களங்கமில்லாத சில சொற்களால் ஒன்றைப் புரிந்து கொள்ள முயலாதவர் / முடியாதவர்தான், ஆழமில்லாத, வீணான, பிறரைச் சாடுகின்ற, பயனற்ற பல சொற்களைக் கேட்க மிகவும் ஆசைப்படுவர்.

மிக நெருங்கியும், தனித்தனியாயும், பரந்து விரிந்தும், ஆழ்ந்து நீண்டும், என ஒரு மலருக்குரிய அனைத்துப் புற வடிவங்களைக் கொண்டிருந்தும், மலரின் முக்கியச் சாரமான மணம் இல்லாத கொத்துமலரைப் போன்றவர், தான் கற்ற பல நூல்களின் கருத்தை, பிறர் அறிந்துணரும் வகையில் விரிவாக, விளக்கமாக பேச முடியாதவர்.

## 66. வினைத்தூய்மை

*வினைத்தூய்மை = வினை + தூய்மை. வினை = வ் + இ + ன் + ஐ. புறமும் அகமும் நிலையாய் நெருங்கி ஐக்கியமாதல். செயல். காரணம் காரியம் விளைவு சங்கிலியின் தொடர்ச்சி. கருமம். ஊழ்.*

*தூய்மை = தேகத்தின் ஆழ் உள்ளே உயிர்ப்பின் தன்மை. ஆசையற்ற, வெறுப்பற்ற, எண்ணமற்ற தன்மை. இறைமை.*

*வினைத்தூய்மை = செயலின் கருமம் அற்ற தன்மை.*

**651. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்**
**வேண்டிய வெல்லாந் தரும்.**

**துணை நலம் ஆக்கம் தரூஉம்; வினை நலம்**
**வேண்டிய எல்லாம் தரும்.**

*துணையான அமைச்சர்களின் திறமை, செல்வத்தை உருவாக்கும், ஆனால், அறவழியில் நற்செயல் நிகழ்த்தினால், கேட்டதெல்லாம் கிடைக்கும், நினைத்தது எல்லாம் நடக்கும்.*

**652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு**
**நன்றி பயவா வினை.**

**என்றும் ஒருவுதல் வேண்டும்-புகழொடு**
**நன்றி பயவா வினை.**

*ஒருவு = ஒரு + உ. ஒன்றாக வெளிப்படுத்து. முழுமையாக நீக்கு.*

*புகழையும், பொது நன்மையையும், அளிக்காது என்றால், அச்செயலை ஒரேயடியாக நீக்குதல் வேண்டும்.*

**653. ஓதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை**
**யாஅது மென்னு மவர்.**

**ஓஒதல் வேண்டும், ஒளி மாழ்கும் செய்வினை-**
**'ஆஅதும்!' என்னுமவர்.**

*ஓது = ஓத் + உ. முழுமையாக தேகத்தை / வடிவத்தை வெளிப்படுத்து.*

*மாழ்கு = ம் + ஆழ் + க் + உ. கொண்டு மூடி ஆழத்தில் பொருண்மையாய் உள்ளிருத்து.*

*யாஅது = ய் + ஆத் + உ. நிலையான உயிர்ப்புள்ள தேகமாய் வெளிப்படல். மெய்யுணர்வு.*

*மென் = ம் + என். முயல். மனம் உயர்ந்து நெருங்குவது.*

*மெய்யுணர்வை அடைய முயல்பவர், மனம் மற்றும் அறிவின் தெளிவை இருளில் ஆழ்த்தும் செயலை, முழுமையாக ஒதுக்கி விடல் வேண்டும்.*

**654. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்**
**நடுக்கற்ற காட்சி யவர்.**

**இடுக்கண் படினும், இளிவந்த செய்யார்-**
**நடுக்கு அற்ற காட்சியவர்.**

*ஊழால் தாழ்ந்தாலும், ஏற்கனவே, பலருக்கு பழிவந்த செயல்களைச் செய்யமாட்டார்கள், தெளிவான அறிவுடையவர், கலக்கமற்ற மெய் ஆள்பவர், புலனடங்கியவர்.*

**655. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்**
**மற்றன்ன செய்யாமை நன்று.**

**'எற்று!' என்று இரங்கு செய்யற்க;**
**செய்வானேல், மற்று அன்ன செய்யாமை நன்று.**

*"ஏன்தான் அப்படிச் செய்தோமோ", என்று வருந்தும்படியான செயல்களைச் செய்யாதே. அப்படி ஏதாவது ஒன்றை, தெரியாமல் செய்துவிட்டால், அதைப் போன்று வேறெதையும் செய்யாமல் பார்த்துக் கொள்வது நல்லது.*

**656. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை.**

**ஈன்றாள் பசி காண்பான் ஆயினும், செய்யற்க-**
**சான்றோர் பழிக்கும் வினை.**

*சான்றோர் = சான்று + ஓர். உதாரண மனிதர். சான்றோர் = ச் + ஆன் + ற் + ஓர். இயக்கமுடன் ஒன்றிப் பிரிந்து முழுமையானவர். மெய்யுணர்ந்தோர்.*

*பெற்ற தாய், பசியுடன் இருப்பதைப் பார்த்து வருந்தினாலும், முன்மாதிரியாய் வாழும் மெய்யுணர்ந்தோர் விலக்கும், தீவினையைத் தரும், குற்ற உணர்ச்சியைத் தரும், செயல்களைச் செய்ய வேண்டாம்.*

**657. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்**
**கழிநல் குரவே தலை.**

**பழி மலைந்து எய்திய ஆக்கத்தின், சான்றோர்**
**கழி நல்குரவே தலை.**

*கழி = க் + அழி. மெய் அழிக்கும். உடலை அழிக்கும்.*

*நல்குரவு = நல் + குரவு. குரவு = க் + உர் + அ + உ. உடலைப் புறம் பிரித்து, உயிரை வெளிப்படுத்தும். உடலை அழித்து உயிரையும் போக்கும். வறுமை. வறுமை, ஞானத்திற்கு வழிகாட்டலாம். அதனால், நல்குரவு.*

*குற்றங்களும், குற்ற உணர்ச்சிகளும் மலைபோல் பெருக, அடையும் செல்வத்தைக் காட்டிலும், முன்மாதிரியாய் வாழும் மெய்யுணர்ந்தோர்க்கு, உடலை அழித்து, உயிரையும் போக்கும் வறுமையே, விரும்பி எண்ணத் தக்கது.*

**658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்**
**முடிந்தாலும் பீழை தரும்.**

**கடிந்த கடிந்து ரார் செய்தார்க்கு**
**அவைதாம் முடிந்தாலும், பீழை தரும்.**

*கடி = க் + அட் +இ. மெய்யை ஒட்டித் தொடர்ந்து நிலைத்தல். மேல் பற்களை கீழ் பற்களுடன் சேர்த்தல். வெறுப்புடன் வேண்டாம் என மறுத்தல். விலக்கல். பிரித்தல்.*

*பீழை = ப் + ஈழ் + ஐ. மனத்தில் நீங்காத தாழ்வைத் தரும்.*

*வினையின் விளைவை அறிந்தோர், விரும்பாது ஒதுக்கியவைகளை, ஒதுக்காமல் செய்பவர்க்கு, அச்செயல்கள் எப்படியாவது முடிந்து விட்டாலும், மனத்தில் நீங்காத தாழ்வுணர்ச்சியை ஏற்படுத்தி விடும்.*

**659. அழக்கொண்ட தெல்லா மழப்போ மிழப்பினும்**
**பிற்பயக்கும் நற்பா லவை.**

**அழக் கொண்ட எல்லாம் அழப் போம்; இழப்பினும்,**
**பிற்பயக்கும், நற்பாலவை.**

*பிறர் அழ, நியாயமற்ற செயல்களால் ஈட்டிய செல்வம் எல்லாம், தானும் அழுகின்ற வகையில் போய்விடும். நல்ல செயல்களால் அடைந்த செல்வம், இன்று இழந்தாலும், நாளை மீண்டும் வந்து சேரும்.*

**660. சலத்தாற் பொருள்சேய்தே மாத்தல் பசுமட்**
**கலத்துணீர் பெய்திரிஇ யற்று.**

**சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல்-பசு மண்**
**கலத்துள் நீர் பெய்து, இரீஇயற்று.**

*சலம் = ச் + அல் + அம். இயக்கம் அதிரும் தன்மை. ஓட்டம். உணர்ச்சி. ஆசை. பேராசை. கோபம். வன்முறை. பயமுறுத்தல்.*

*சேய் = ச் + ஏய். இயக்கம் மிக உயர்ந்து நிலையாவது. பெருஞ் செல்வம். குழந்தை.*

பேராசையால், வன்முறையால் சேர்த்தப் பெருஞ்செல்வம், பச்சை மண்ணால் செய்த பானையில், நீர் ஊற்றினால் கரைந்து உடைந்து ஓடிவிடுவதைப்போல், கொஞ்சமும் மிஞ்சாமல் அழிந்துப் போகும்.

வினைத்தூய்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:

துணையான அமைச்சர்களின் திறமை, செல்வத்தை உருவாக்கும், ஆனால், அறவழியில் நற்செயல் நிகழ்த்தினால், கேட்டதெல்லாம் கிடைக்கும், நினைத்தது எல்லாம் நடக்கும்.

புகழையும், பொது நன்மையையும், அளிக்காது என்றால், அச்செயலை ஒரேயடியாக நீக்குதல் வேண்டும்.

மெய்யுணர்வை அடைய முயல்பவர், மனம் மற்றும் அறிவின் தெளிவை இருளில் ஆழ்த்தும் செயலை, முழுமையாக ஒதுக்கி விடல் வேண்டும்.

ஊழால் தாழ்ந்தாலும், ஏற்கனவே, பலருக்கு பழிவந்த செயல்களைச் செய்யமாட்டார்கள், தெளிவான அறிவுடையவர், கலக்கமற்ற மெய் ஆள்பவர், புலனடங்கியவர்.

"ஏன்தான் அப்படிச் செய்தோமோ", என்று வருந்தும்படியான செயல்களைச் செய்யாதே. அப்படி ஏதாவது ஒன்றை, தெரியாமல் செய்துவிட்டால், அதைப் போன்று வேறெதையும் செய்யாமல் பார்த்துக் கொள்வது நல்லது.

பெற்ற தாய், பசியுடன் இருப்பதைப் பார்த்து வருந்தினாலும், முன்மாதிரியாய் வாழும் மெய்யுணர்ந்தோர் விலக்கும், தீவினையைத் தரும், குற்ற உணர்ச்சியைத் தரும், செயல்களைச் செய்ய வேண்டாம்.

குற்றங்களும், குற்ற உணர்ச்சிகளும் மலைபோல் பெருக, அடையும் செல்வத்தைக் காட்டிலும், முன்மாதிரியாய் வாழும் மெய்யுணர்ந்தோர்க்கு, உடலை அழித்து, உயிரையும் போக்கும் வறுமையே, விரும்பி எண்ணத் தக்கது.

வினையின் விளைவை அறிந்தோர், விரும்பாது ஒதுக்கியவைகளை, ஒதுக்காமல் செய்பவர்க்கு, அச்செயல்கள் எப்படியாவது முடிந்து விட்டாலும், மனத்தில் நீங்காத தாழ்வுணர்ச்சியை ஏற்படுத்தி விடும்.

பிறர் அழ, நியாயமற்ற செயல்களால் ஈட்டிய செல்வம் எல்லாம், தானும் அழுகின்ற வகையில் போய்விடும். நல்ல செயல்களால் அடைந்த செல்வம், இன்று இழந்தாலும், நாளை மீண்டும் வந்து சேரும்.

பேராசையால், வன்முறையால் சேர்த்தப் பெருஞ்செல்வம், பச்சை மண்ணால் செய்த பானையில், நீர் ஊற்றினால் கரைந்து உடைந்து ஓடிவிடுவதைப்போல், கொஞ்சமும் மிஞ்சாமல் அழிந்து போகும்.

# 67. வினைத்திட்பம்

*வினைத்திட்பம் = வினை + திட்பம். திட்பம் = திண்பம் = த் + இ + ண் + ப் + அம். தேகம் நிலைத்து மிக நெருங்கி மனத்துடன் இருக்கும் தன்மை. உறுதி. திண்மை.*

**661. வினைதிட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்**
**மற்றைய வெல்லாம் பிற.**

**வினைத் திட்பம் என்பது ஒருவன் மனத் திட்பம்;**
**மற்றைய எல்லாம் பிற.**

*ஒரு செயலின் உறுதி, வலிமை என்பது அதைச் செய்பவனின் மனஉறுதி, மனவலிமை ஆகும். செயலைச் செய்யத் தேவையான பிற காரணிகள், கருவி, செல்வம், திட்டம், கண்காணிப்பு, நிர்வாகம் முதலியன எல்லாம், மனஉறுதிக்கும், மனவலிமைக்கும் அடுத்தவையே, இரண்டாம் பட்சமானவையே.*

*ஒரு செயலைச் செய்ய, எல்லா காரணிகளும் மிகையாக இருந்தாலும், மனஉறுதி இல்லையென்றால், அச்செயல் வெற்றிபெறவே முடியாது.*

**662. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டின்**
**ஆறென்ப ராய்ந்தவர் கோள்.**

**ஊறு ஓரால், உற்றபின் ஒல்காமை, இவ் இரண்டின்**
**ஆறு என்பர் - ஆய்ந்தவர் கோள்.**

*ஓரால் = ஓர் + ஆல். ஒன்று ஆகாமல்.*

*முதலில், செயலுக்கு தீங்கு ஒன்று வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படி, எதிர்பாராத விதமாக தீங்கு வந்துவிட்டால், தளராமை வேண்டும். இவ்விரண்டின் வழியேதான், இலக்கினை, வெற்றியை அடைய முடியும் என்று ஆராய்ந்து அறிந்தவர் கூறுவர்.*

**663. கடக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடக்கொட்கின்**
**எற்றா விழுமந் தரும்.**

**கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை; இடைக்கொட்கின்,**
**எற்றா விழுமம் தரும்.**

*ஒரு செயல், கடைசியாக வெளிப்படையாகும்படி செய்வதுதான், தீங்கு வராமல் ஆளுகின்ற தன்மை. அச்செயல், இடையில் தெரிந்துவிட்டால், எதிரியின் இடைஞ்சல்களால், வெல்லமுடியாத தோல்வியைத் தரும்.*

**664. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம்**
**சொல்லிய வண்ணஞ் செயல்.**

**சொல்லுதல் யார்க்கும் எளிய; அரிய ஆம்,**
**சொல்லிய வண்ணம் செயல்.**

*முதலிலேயே தீங்கு வராமல் பார்த்திருக்க வேண்டும், செயலின் இரகசியம் காத்திருக்க வேண்டும் என்று சொல்லுவது எல்லோருக்கும் சுலபம். ஆனால், நடைமுறையில், சொல்லியவாறு செய்தல் மிகவும் கடினம்.*

**665. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்**
**ஊறெய்தி யுள்ளப் படும்.**

**வீறு எய்தி மாண்டார் வினைத் திட்பம், வேந்தன்கண்**
**ஊறு எய்தி, உள்ளப்படும்.**

*மேற்கொண்ட செயலில், வெற்றி அடைந்து இறந்தவரின் வீரசாகசத்தையும், மன உறுதியையும் கண்டு, மன்னன், தானே வீரசாகசம் புரிந்ததாகவும், மன உறுதி படைத்தவனாகவும் எண்ணிக் கொள்ளாமல், அவ்வீரன் அடைந்த தீங்கைத் தானே அடைந்ததுபோல் எண்ணிப் பார்க்க வேண்டும்.*

**666. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்.**

**எண்ணிய எண்ணியாங்கு எய்துப-எண்ணியார்**
**திண்ணியர் ஆகப்பெறின்.**

*ஒன்றை அடைய எண்ணுபவர், மன உறுதியுடன் செயல்பட்டால், அவர் நினைத்ததை நினைத்தபடியே அடைவார்.*

**667. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்**
**கச்சாணி யன்னா ருடைத்து.**

**உருவு கண்டு எள்ளாமை வேண்டும்-உருள் பெருந் தேர்க்கு**
**அச்சு ஆணி அன்னார் உடைத்து.**

*உருவத்தையும் வடிவத்தையும் கண்டு சிறுமையாக கருதக் கூடாது. ஏனெனில், உருண்டோடும் பெரிய தேருக்கு அச்சாணி மிகவும் சிறியதுதான், ஆனாலும், அது வலிமையானதாக உள்ளது. அதைப் போல், ஒருவரின் உருவம் சிறியதாய் இருந்தாலும், அவர் மனவலிமை வாய்ந்தவராயும், முக்கியத்துவம் உடையவராயும் இருக்கலாம்.*

**668. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது**
**தூக்கங் கடிந்து செயல்.**

**கலங்காது கண்ட வினைக்கண், துளங்காது**
**தூக்கம் கடிந்து செயல்.**

*துளங்கு = துள் + அங்கு. துள் = த் + உள். தேகம் புறத்தே மிகையாதல். மிகையான மேலும் கீழுமான அசைவு. பயம். நடுக்கம். தடுமாற்றம்.*

*தூக்கம் = சோர்வு. தளர்ச்சி. அயர்ச்சி.*

*குழப்பமின்றி ஆராய்ந்து, முடிவெடுத்து, மேற்கொள்ளும் செயலில், தடுமாறாமலும், சோர்வை விலக்கியும் ஈடுபடல் வேண்டும்.*

**669. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி**
**இன்பம் பயக்கு மெனின்.**

**துன்பம் உறவரினும் செய்க, துணிவு ஆற்றி**
**இன்பம் பயக்கும் வினை.**

*ஒரு செயல் இன்பத்தை விளைவிக்கும் என்றால், இடையில், துன்பம் தன்னை வருத்த வரும் என்றாலும், அச்செயலை மனத்துணிவுடன் செய்ய வேண்டும்.*

**670. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்**
**வேண்டாரை வேண்டா துலகு.**

**எனைத் திட்பம் எய்தியக்கண்ணும், வினைத் திட்பம்**
**வேண்டாரை வேண்டாது, உலகு**

*பிற எல்லா வலிமையும் உடையவராய் இருந்தாலும், மனவலிமை இல்லாதவரை, மன உறுதி அற்றவரை, மக்கள் ஒதுக்கி விலக்கி விடுவார்கள்.*

*வினைத்திட்பம் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*ஒரு செயலின் உறுதி, வலிமை என்பது அதைச் செய்பவனின் மனஉறுதி, மனவலிமை ஆகும். செயலைச் செய்யத் தேவையான பிற காரணிகள், கருவி, செல்வம், திட்டம், கண்காணிப்பு, நிர்வாகம் முதலியன எல்லாம், மனஉறுதிக்கும், மனவலிமைக்கும் அடுத்தவையே, இரண்டாம் பட்சமானவையே.*

*முதலில், செயலுக்கு தீங்கு ஒன்று வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படி, எதிர்பாராத விதமாக தீங்கு வந்துவிட்டால், தளராமை வேண்டும். இவ்விரண்டின் வழியேதான், இலக்கினை, வெற்றியை அடைய முடியும் என்று ஆராய்ந்து அறிந்தவர் கூறுவர்.*

*ஒரு செயல், கடைசியாக வெளிப்படையாகும்படி செய்வதுதான், தீங்கு வராமல் ஆளுகின்ற தன்மை. அச்செயல், இடையில் தெரிந்துவிட்டால், எதிரியின் இடைஞ்சல்களால், வெல்லமுடியாத தோல்வியைத் தரும்.*

*முதலிலேயே தீங்கு வராமல் பார்த்திருக்க வேண்டும், செயலின் இரகசியம் காத்திருக்க வேண்டும் என்று சொல்லுவது எல்லோருக்கும்*

சுலபம். ஆனால், நடைமுறையில், சொல்லியவாறு செய்தல் மிகவும் கடினம்.

மேற்கொண்ட செயலில், வெற்றி அடைந்து இறந்தவரின் வீரசாகசத்தையும், மன உறுதியையும் கண்டு, மன்னன், தானே வீரசாகசம் புரிந்ததாகவும், மன உறுதி படைத்தவனாகவும் எண்ணிக் கொள்ளாமல், அவ்வீரன் அடைந்த தீங்கைத் தானே அடைந்ததுபோல் எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஒன்றை அடைய எண்ணுபவர், மன உறுதியுடன் செயல்பட்டால், அவர் நினைத்ததை நினைத்தபடியே அடைவார்.

உருவத்தையும் வடிவத்தையும் கண்டு சிறுமையாக கருதக் கூடாது. ஏனெனில், உருண்டோடும் பெரிய தேருக்கு அச்சாணி மிகவும் சிறியதுதான், ஆனாலும், அது வலிமையானதாக உள்ளது. அதைப் போல், ஒருவரின் உருவம் சிறியதாய் இருந்தாலும், அவர் மனவலிமை வாய்ந்தவராயும், முக்கியத்துவம் உடையவராயும் இருக்கலாம்.

குழப்பமின்றி ஆராய்ந்து, முடிவெடுத்து, மேற்கொள்ளும் செயலில், தடுமாறாமலும், சோர்வை விலக்கியும் ஈடுபடல் வேண்டும்.

ஒரு செயல் இன்பத்தை விளைவிக்கும் என்றால், இடையில், துன்பம் தன்னை வருத்த வரும் என்றாலும், அச்செயலை மனத்துணிவுடன் செய்ய வேண்டும்.

பிற எல்லா வலிமையும் உடையவராய் இருந்தாலும், மனவலிமை இல்லாதவரை, மன உறுதி அற்றவரை, மக்கள் ஒதுக்கி விலக்கி விடுவார்கள்.

# 68. வினை செயல் வகை

**வினை செயல் வகை = வினை செய்யும் விதம்.**

**671. சூழ்ச்சி முடிவு துணிசெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.**

**சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல்; அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது.**

*கலந்தாலோசித்தல், முடிவெடுத்தல், துணிதல், செய்தல் என்று செயலின் நிலைகள் நான்காய் இருப்பினும், துணிந்தவுடன், இடைவெளியின்றி, செயலில் இறங்கிவிட வேண்டும். துணிவு குறைந்து மனத்துள்ளேயே, வெளிப்படாமல், நின்றுவிட்டால், அது தீங்காய், தீமையாய், துன்பமாய் முடிந்து விடும்.*

**672. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.**

**தூங்குக, தூங்கிச் செயற்பால; தூங்கற்க,
தூங்காது செய்யும் வினை.**

*ஆறப்போட்டுச் செய்ய வேண்டிய செயல்களை, மெதுவாக செய்ய வேண்டும். இடைவெளி விடாமல் செய்ய வேண்டிய செயல்களை, விரைவாகவும் கவனமாகவும் செய்ய வேண்டும்.*

*கட்டுமாணத்தில் அடித்தளம் போடும்போதும், போர்முனையில் கண்ணிகளைப் பொருத்தும்போதும் நிதானமாகச் செய்ய வேண்டும். அதே கட்டுமாணத்தில் கூரைத்தளம் போடும்போதும், போர்முனையில் காவல் காக்கும் போதும் இடைவெளி விடாமல் செய்ய வேண்டும்.*

**673. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.**

**ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்றே; ஒல்லாக்கால்,
செல்லும் வாய் நோக்கிச் செயல்.**

*முடிகின்ற வழியெல்லாம் ஒரு செயலைச் செய்வது நல்லது. ஒருவழியில் முடியா விட்டால், வேறு எவ்வழியில் நடக்குமோ, அவ்வழியில் சென்று செய்தல் வேண்டும்.*

*ஆற்று நீரைச் சேமிக்க வேண்டும் என்றால், மதகு கட்டலாம், கால்வாய் பிடிக்கலாம், ஆழ்கிணறு தோண்டலாம், இறைக்கலாம், ஏற்றலாம். ஒன்று உடனடி சாத்தியம் இல்லை என்றால், வேறு எதனால் முடியுமோ அதனால் செய்யலாம்.*

**674. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்.**

**வினை, பகை, என்று இரண்டின் எச்சம், நினையுங்கால்,
தீ எச்சம் போலத் தெறும்.**

*தெறு = த் + எறு. தேகம் உயர்ந்து பிரிந்து வெளிப்படல். சுடுவதால் விலகுதல்.*

*செயல், பகைவன் எனும் இரண்டின் மிச்சம் மீதியை நினைக்கும் போதெல்லாம், மீண்டும் பரவி எரித்து அழிக்கும் தீயின் மிச்சம் போல உடலைச் சுட வேண்டும். செயலையும், பகைவனையும் முற்றிலுமாய் முடிக்க வேண்டும், ஒழிக்க வேண்டும்.*

**675. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருடீர வெண்ணிச் செயல்.**

**பொருள், கருவி, காலம், வினை, இடனொடு ஐந்தும்
இருள் தீர எண்ணிச் செயல்!**

*பொருள், கருவி, காலம், இடம், செயல் ஆகிய ஐந்திலும் குழப்பமின்றி, சந்தேகமின்றி, தெளிவாகச் சிந்தித்து, எல்லச் சாத்தியப்பாடுகளையும் கணக்கில் கொண்டு, தனக்குச் சாதகமானவைகளை உறுதிப்படுத்தியப்பின் செயல்பட வேண்டும்.*

**676. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.**

**முடிவும், இடையூறும், முற்றியாங்கு எய்தும்
படுபயனும், பார்த்துச் செயல்!**

*ஒரு வேளை, செயலின் முடிவும் இடையூறும் ஏற்பட்டு, தான் அங்கு அடையக்கூடிய தோல்வியையும், அதன் விளைவையும் சேர்த்துக் கணக்கில் கொண்டு, ஒரு வினையைக் கவனமாகச் செய்ய வேண்டும்.*

**677. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
உள்ளறிவா னுள்ளங் கொளல்.**

**செய்வினை செய்வான் செயல்முறை, அவ் வினை
உள் அறிவான் உள்ளம் கொளல்.**

*செய்யப்படும் செயல், செய்யக்கூடியவன், செயல்முறை ஆகியவற்றைப் பொறுத்து, அத்தகைய செயலைப் பற்றிய ஆழமான அறிவும் அனுபவமும் உள்ளவனின், ஆலோசனையைப் பெறுதல் வேண்டும்.*

**678. வினையால் வினையாக்கிக் கோட னனைகவுள்
ஆனையா லானையாத் தற்று.**

**வினையான் வினை ஆக்கிக்கோடல்-நனை கவுள்
யானையால் யானை யாத்தற்று.**

*கோடல் = கோடு + அல். எல்லை. கொள்ளுதல்.*

*அனைக = சேர்த்து.*

*ஏற்கனவே உள்ள ஒரு ஆனையைக் கொண்டு, வேறொரு புதிய ஆனையைப் பிடிப்பது போல, சாத்தியமானால், ஒரு செயலால் மற்றொரு செயலையும், சேர்த்து முடித்துக் கொள்ள வேண்டும்.*

**679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.**

**நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே-
ஒட்டாரை ஒட்டிக்கொளல்.**

*நட்டார் = ன் + அட் + ஆர். நெருங்கி ஒட்டித் தொடர்பவர். நண்பர். (ஆர் = ஆனவர்)*

*ஒட்டார் = ஒட் + ஆர். முழுமையாய் ஒட்டித் தொடராதவர். அகமும் புறமும் ஒட்டித் தொடராதவர். விலகுபவர். நெருங்காதவர். பகைவர். (ஆர் = பிரிந்தவர்)*

*நண்பருக்கு நன்மை செய்வதைக் காட்டிலும், விரைவாய், வலிமையான பகைவரை, தனக்கு இணக்கமாக்கிக் கொள்ள வேண்டும்.*

*நண்பர் பொறுப்பார். பகைவர் பொறுக்க மாட்டார்.*

**680. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.**

**உறை சிறியார் உள் நடுங்கல் அஞ்சி, குறை பெறின்,
கொள்வர் பெரியார்ப் பணிந்து.**

*உறை = இடம். இருப்பு. வாள்.*

*உள் = மக்கள், படை, தன் மனம்.*

*குறை = இடக்குறைவு. செல்வக்குறைவு. மதிப்புக்குறைவு.*

*சிறிய அரசர் பெரிய மன்னரிடம் போரிட்டு முற்றிலுமாக அழிந்து விடுவதற்கு அஞ்சி, தன்னுடைய ஆளும் இடமும், வருவாயும், மதிப்பும் குறைந்தாலும் பரவாயில்லை என்று, பெரிய மன்னரிடம் பணிந்து, அவர் சொல்படி நடப்பர்.*

## வினை செயல் வகை அதிகாரப் பொருள் தொகுப்பு:

கலந்தாலோசித்தல், முடிவெடுத்தல், துணிதல், செய்தல் என்று செயலின் நிலைகள் நான்காய் இருப்பினும், துணிந்தவுடன், இடைவெளியின்றி, செயலில் இறங்கிவிட வேண்டும். துணிவு குறைந்து மனத்துள்ளேயே, வெளிப்படாமல், நின்றுவிட்டால், அது தீங்காய், தீமையாய், துன்பமாய் முடிந்து விடும்.

ஆறப்போட்டுச் செய்ய வேண்டிய செயல்களை, மெதுவாகச் செய்ய வேண்டும். இடைவெளி விடாமல் செய்ய வேண்டிய செயல்களை, விரைவாகவும் கவனமாகவும் செய்ய வேண்டும்.

முடிகின்ற வழியெல்லாம் ஒரு செயலைச் செய்வது நல்லது. ஒருவழியில் முடியா விட்டால், வேறு எவ்வழியில் நடக்குமோ, அவ்வழியில் சென்று செய்தல் வேண்டும்.

செயல், பகைவன் எனும் இரண்டின் மிச்சம் மீதியை நினைக்கும் போதெல்லாம், மீண்டும் பரவி எரித்து அழிக்கும் தீயின் மிச்சம் போல உடலைச் சுட வேண்டும். செயலையும், பகைவனையும் முற்றிலுமாய் முடிக்க வேண்டும், ஒழிக்க வேண்டும்.

பொருள், கருவி, காலம், இடம், செயல் ஆகிய ஐந்திலும் குழப்பமின்றி, சந்தேகமின்றி, தெளிவாகச் சிந்தித்து, எல்லாச் சாத்தியப்பாடுகளையும் கணக்கில் கொண்டு, தனக்குச் சாதகமானவைகளை உறுதிப்படுத்தியப்பின் செயல்பட வேண்டும்.

ஒரு வேளை, செயலின் முடிவும் இடையூறும் ஏற்பட்டு, தான் அங்கு அடையக்கூடிய தோல்வியையும், அதன் விளைவையும் சேர்த்துக் கணக்கில் கொண்டு, ஒரு வினையைக் கவனமாகச் செய்ய வேண்டும்.

செய்யப்படும் செயல், செய்யக்கூடியவன், செயல்முறை ஆகியவற்றைப் பொறுத்து, அத்தகைய செயலைப் பற்றிய ஆழமான அறிவும் அனுபவமும் உள்ளவனின், ஆலோசனையைப் பெறுதல் வேண்டும்.

ஏற்கனவே உள்ள ஒரு ஆனையைக் கொண்டு, வேறொரு புதிய ஆனையைப் பிடிப்பது போல, சாத்தியமானால், ஒரு செயலால் மற்றொரு செயலையும், சேர்த்து முடித்துக் கொள்ள வேண்டும்.

நண்பருக்கு நன்மை செய்வதைக் காட்டிலும், விரைவாய், வலிமையான பகைவரை, தனக்கு இணக்கமாக்கிக் கொள்ள வேண்டும்.

சிறிய அரசர் பெரிய மன்னரிடம் போரிட்டு முற்றிலுமாக அழிந்து விடுவதற்கு அஞ்சி, தன்னுடைய ஆளும் இடமும், வருவாயும், மதிப்பும் குறைந்தாலும் பரவாயில்லை என்று, பெரிய மன்னரிடம் பணிந்து, அவர் சொல்படி நடப்பர்.

# 69. தூது

*தூது = த் + ஊது. தேகத்தை, வடிவத்தை விரித்துச் சொல்வது. தூது = த் + ஊ + த் + உ. தேகத்தை, வடிவத்தை தூரத்திற்கு எடுத்துச் சென்று தேகமாய், வடிவமாய் வெளிப்படுத்துவது.*

**681. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்**
**பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.**

**அன்பு உடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், வேந்து அவாம்**
**பண்பு உடைமை, தூது உரைப்பான் பண்பு.**

*அன்பு = அன் + ப் + உ. உயிர்ப்புடன் நெருங்கி மனம் வெளிப்படுவது.*

*ஆன்ற = ஆன் + ற. நெருங்கிப் பிரிந்த. வெளியின் நுண்ணிய இயக்கமுடன் நெருங்கி தூய வெளியாய் நிலைத்த. மெய்யுணர்வு அடைந்த.*

*வேந்தவாம் = வேந்த(ர்) + அவா(வு)ம்.*

*அனைவரிடத்தும் அன்பும், மெய்யுணர்வு பெற்ற குடும்பப் பாரம்பரியமும், மன்னன் விரும்பும் குணங்களான நேரம் தவறாமை, இன்முகம், பணிவு, நல்ல எண்ணம், கீழ்ப்படிதல், அவை அடக்கம், சொல்வன்மை, அறிவுக் கூர்மை, கவனம், உடல் வலிமை, மன வலிமை, துணிவு போன்றவை, தூது சொல்பவனின் பண்புகள்.*

**682. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்**
**கின்றி யமையாத மூன்று.**

**அன்பு, அறிவு ஆராய்ந்த சொல்வன்மை-தூது உரைப்பார்க்கு**
**இன்றியமையாத மூன்று.**

*அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை ஆகிய மூன்று பண்புகளும், தூது சொல்பவர்க்கு, இன்றியமையாதன.*

**683. நூலாரு ணூல்வல்லா னாகுதல் வேலாருள்**
**வென்றி வினையுரைப்பான் பண்பு.**

**நூலாருள் நூல் வல்லன் ஆகுதல்-வேலாருள்**
**வென்றி வினை உரைப்பான் பண்பு.**

*கற்றறிந்த அறிஞர்கள், அமைச்சர்கள் வியக்கும் வண்ணம், நூல்களின் நுண்ணிய சாரத்தை நன்கு அறிந்திருத்தலும், ஆயுதங்கள் ஏந்திய படையின் நடுவில், துணிவுடன் சென்று, சொல்லாலே வெல்லுதலும், தன் மன்னனின் எண்ணத்தை உரைக்கும், தூதுவனின் பண்புகளாம்.*

**684. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின்**
**செறிவுடையான் செல்க வினைக்கு.**

**அறிவ, ,உரு, ஆராய்ந்த கல்வி, இம் மூன்றன்**
**செறிவு உடையான் செல்க, வினைக்கு.**

*செறிவு = ச் + எற் + இ + உ. இயக்கம் உயர்ந்து நெருங்கி நிலையாய் உள்ளிருத்தல்.*

*ஐயமற்ற இடைவெளியற்ற அறிவு, காண்போர் உடனடியாக மரியாதை செலுத்த வைக்கும் ஆளுமை மிக்க உடல் உருவம், குறை நிறைகளைக் கண்டறியும் நுணுக்கமான படிப்பு ஆகிய மூன்றிலும் சிறந்தவன், தூது செல்ல தகுதியானவன்.*

**685. தொகச்சொலித் தூவாதநீக்கி நகச் சொல்லி**
**நன்றி பயப்பதாந் தூது.**

**தொகச் சொல்லி, தூவாத நீக்கி, நகச் சொல்லி,**
**நன்றி பயப்பது ஆம்-தூது.**

*தொக = த் + ஒக் + அ. தேகம், வடிவம் முழுமையான பொருண்மையாக. ஒன்று சேர. தொகுத்து.*

*தூவு = த் + ஊவ் + உ. தேகம், வடிவம் விரிந்து பரந்து அகமும் புறமுமாய் வெளிப்படுத்து. பரவலாக்கு. பெரியதாக்கு.*

*ஏற்கனவே விரிவாகக் கூறியவற்றைத் தொகுத்துச் சொல்லி, கூறிய சொற்களில் சிலவற்றைத் தவறாகப் புரிந்து கொண்டு விடாமல், அவற்றை விளக்கி, விலக்கி, கடைசியில், நட்பு ரீதியாகப் பிரியும் வகையில், சபையே புன்னகைப் பூக்குமாறு செய்து, விரும்பிய நன்மையை விளைவிப்பது, தூது.*

**686. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்**
**தக்க தறிவதாந் தூது.**

**கற்று, கண் அஞ்சான், செலச் சொல்லி, காலத்தால்**
**தக்கது அறிவது ஆம்-தூது.**

*தூது சொல்ல வந்த நாட்டில், மன்னன் கோபமுடன் இருப்பதை அறிந்தும், கண்களில் சிறிதும் பயமின்றி, மனவலிமையுடனும், மன உறுதியுடனும், தான் சொல்ல வந்ததை மன்னன் அறியும்படி செய்து, தூதால் விளைந்த பயனை காலந்தவறாமல், தாமதிக்காமல், அறிவதுதான், தன் மன்னனுக்கு விரைவாக அறிவிப்பதுதான், தூது.*

**687. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்**
**தெண்ணி யுரைப்பான் தலை.**

**கடன் அறிந்து, காலம் கருதி, இடன் அறிந்து,**
**எண்ணி, உரைப்பான் தலை.**

*தூது சொல்ல வந்த கடமை அறிந்து, அதைச் சொல்லியாக வேண்டிய அவசியம் உணர்ந்து, தான் சொல்ல வந்த செய்தியின் அவசரத்தைக் கணக்கில் கொண்டு, தூதைக் கேட்கும் மன்னனின் பணிகளையும், மனநிலையையும் அறிந்து, அவன் எந்த இடத்தில் இருந்து தூதைக் கேட்டால் தனக்கு நல்ல பயன் விளையும் என்று அறிந்து, எப்படி பேசுவது, தூதைக் கேட்கும் மன்னன் என்ன கேள்வி கேட்பான், தான் என்ன பதில் சொல்ல வேண்டும் என்று சிந்தித்து, சரியான காலம், இடம், வகை அறிந்து தூது உரைப்பவன், சிறந்த தூதுவன் ஆவான்.*

*தூது சொல்ல வந்த கடமை அறிந்து, அதைச் சொல்லியாக வேண்டிய அவசியம் உணர்ந்து, தான் சொல்ல வந்த செய்தியின் அவசரத்தைக் கணக்கில் கொண்டு, தூதைக் கேட்கும் மன்னனின் பணிகளையும், மனநிலையையும் அறிந்து, அவன் எந்த இடத்தில் இருந்து தூதைக் கேட்டால் தனக்கு நல்ல பயன் விளையும் என்று அறிந்து, எப்படி பேசுவது, தூதைக் கேட்கும் மன்னன் என்ன கேள்வி கேட்பான், தான் என்ன பதில் சொல்ல வேண்டும் என்று சிந்தித்து, சரியான காலம், இடம், வகை அறிந்து தூது உரைப்பவன், சிறந்த தூதுவன் ஆவான்.*

**688. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்**
**வாய்மை வழியுரைப்பான் பண்பு.**

**தூய்மை, துணைமை, துணிவுடைமை இம்மூன்றின்**
**வாய்மை வழி உரைப்பான் பண்பு.**

*வாய்மை = வ் + ஆய் + மை. புறமும் அகமும் ஆன வண்ணம். அமைந்த விதம். தன் முன் எண்ணம் இல்லாமை, தன் மன்னனின் கருத்துக்கு முழு ஆதரவு, தன்னுடல் உயிரைப் பற்றிய பயமில்லாமை, ஆகிய இம்மூன்றும் அமைந்ததைப் பொறுத்தே, தூது சொல்பவனின் இயல்பு இருக்கும்.*

**689. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்**
**வாய்சோரா வன்க ணவன்.**

**விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான்-வடு மாற்றம்**
**வாய்சோரா வன்கணவன்.**

*விடுமாற்றம் = விடு + மாற்றம். விடுமாற்றம் = விடும் + ஆற்றம்.*

*வடுமாற்றம் = வடு + மாற்றம். வடும் + ஆற்றம்.*

*வாய்சோரா = வாய்தவறா. உளராத.*

*வன்கண் = வன் + கண். வலிமையான கண். உறுதியான பார்வை. மன வலிமை. மன உறுதி. கண் மனத்தின் ஆடி.*

*தன் மன்னன் கூறிய மாறுதலை, அவன் கூறிய வழியே, வேறொரு மன்னனுக்குச் சொல்லுபவனும், தன் மன்னன் மேல் குற்றம் வராதபடியும், மற்ற மன்னன், தான் சொல்வதைக் குற்றமாக எடுத்துக் கொள்ளாதபடியும், எதையும் உளறாமல், மன உறுதியுடன் காப்பவன், தூதன்.*

**690. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்**
**குறுதி பயப்பதாந் தூது.**

**இறுதி பயப்பினும், எஞ்சாது, இறைவற்கு**
**உறுதி பயப்பது ஆம்-தூது.**

*தான் சொல்லும் தூதால், தன் உயிரே போனாலும், வாழ்வே முடிந்தாலும், மிச்சம் மீதமில்லாமல், முழுமையாகச் சொல்லிவிட வேண்டும், தூதன். பகைவர், தன் உறுதியைக் கண்டு, தன் மன்னனும் அத்தகைய உறுதியுடையவன், வலிமையுடையவன் என்று கருதி, அஞ்சுவர், தயங்குவர்.*

**தூது அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அனைவரிடத்தும் அன்பும், மெய்யுணர்வு பெற்ற குடும்பப் பாரம்பரியமும், மன்னன் விரும்பும் குணங்களான நேரம் தவறாமை, இன்முகம், பணிவு, நல்ல எண்ணம், கீழ்ப்படிதல், அவை அடக்கம், சொல்வன்மை, அறிவுக் கூர்மை, கவனம், உடல் வலிமை, மன வலிமை, துணிவு போன்றவை, தூது சொல்பவனின் பண்புகள்.*

*அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை ஆகிய மூன்று பண்புகளும், தூது சொல்பவர்க்கு, இன்றியமையாதன.*

*கற்றறிந்த அறிஞர்கள், அமைச்சர்கள் வியக்கும் வண்ணம், நூல்களின் நுண்ணிய சாரத்தை நன்கு அறிந்திருத்தலும், ஆயுதங்கள் ஏந்திய படையின் நடுவில், துணிவுடன் சென்று, சொல்லாலே வெல்லுதலும், தன் மன்னனின் எண்ணத்தை உரைக்கும், தூதுவனின் பண்புகளாம்.*

*ஐயமற்ற இடைவெளியற்ற அறிவு, காண்போர் உடனடியாக மரியாதை செலுத்த வைக்கும் ஆளுமை மிக்க உடல் உருவம், குறை நிறைகளைக் கண்டறியும் நுணுக்கமான படிப்பு ஆகிய மூன்றிலும் சிறந்தவன், தூது செல்ல தகுதியானவன்.*

*ஏற்கனவே விரிவாகக் கூறியவற்றைத் தொகுத்துச் சொல்லி, கூறிய சொற்களில் சிலவற்றைத் தவறாகப் புரிந்து கொண்டு விடாமல், அவற்றை விளக்கி, விலக்கி, கடைசியில், நட்பு ரீதியாகப் பிரியும் வகையில், சபையே புன்பூக்குமாறு செய்து, விரும்பிய நன்மையை விளைவிப்பது, தூது.*

*தூது சொல்ல வந்த நாட்டில், மன்னன் கோபமுடன் இருப்பதை அறிந்தும், கண்களில் சிறிதும் பயமின்றி, மனவலிமையுடனும், மன உறுதியுடனும், தான் சொல்ல வந்ததை மன்னன் அறியும்படி செய்து, தூதால் விளைந்த பயனை காலந்தவறாமல், தாமதிக்காமல், அறிவதுதான், தன் மன்னனுக்கு விரைவாக அறிவிப்பதுதான், தூது.*

தன் முன்எண்ணம் இல்லாமை, தன் மன்னனின் கருத்துக்கு முழு ஆதரவு, தன்னுடல் உயிரைப் பற்றிய பயமில்லாமை, ஆகிய இம்மூன்றும் அமைந்ததைப் பொறுத்தே, தூது சொல்பவனின் இயல்பு இருக்கும்.

தன் மன்னன் கூறிய மாறுதலை, அவன் கூறிய வழியே, வேறொரு மன்னனுக்குச் சொல்லுபவனும், தன் மன்னன் மேல் குற்றம் வராதபடியும், மற்ற மன்னன், தான் சொல்வதைக் குற்றமாக எடுத்துக் கொள்ளாதபடியும், எதையும் உளறாமல், மன உறுதியுடன் காப்பவன், தூதன்.

தான் சொல்லும் தூதால், தன் உயிரே போனாலும், வாழ்வே முடிந்தாலும், மிச்சம் மீதமில்லாமல், முழுமையாகச் சொல்லிவிட வேண்டும், தூதன். பகைவர், தன் உறுதியைக் கண்டு, தன் மன்னனும் அத்தகைய உறுதியுடையவன், வலிமையுடையவன் என்று கருதி, அஞ்சுவர், தயங்குவர்.

# 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

*மன்னரைச் சேர்ந்தொழுகல் = மன்னருடன் சேர்ந்து பழகுதல்.*

**691. அகலா தணுகாது தீக்காய்வார் போல்வர்**
**இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.**

**அகலாது, அணுகாது, தீக் காய்வார் போல்க-**
**இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார்.**

*இகல் = இ + கல். நிலையான கல். மனத்தில் உள்ளதை வெளிக்காட்டாதவர். முன்கோபக்காரர். குறை காணுபவர். புறத்தைப் பொறுத்து விரைவாய் மனநிலை மாறுபவர். பயமுறுத்தல். தன் மனத்தில் நிலைத்து, பிறரை ஆட்டி வைத்தல். உளவியல் கட்டளை.*

*அடிக்கடி, எதிர்பாராவிதமாக மனம் மாறும் வேந்தரோடு பழகுபவர், அதிகம் நெருங்காமலும், அதிகம் விலகாமலும், தீக்காய்வது போல், மிகவும் கவனமாக இருப்பர்.*

**692. மன்னர் விழைப விழையாமை மன்னரான்**
**மன்னிய வாக்கந் தரும்.**

**மன்னர் விழைப விழையாமை, மன்னரால்**
**மன்னிய ஆக்கம் தரும்.**

*மன்னிய = மன் + இய. மனத்தின் இயல்பான. விரும்பிய.*

*மன்னர் விரும்புவனவற்றைத் தான் விரும்பாமை கண்டு, மன்னர், தான் விரும்புவது யாது எனக்கேட்டு அச்செல்வத்தைத் தருவார்.*

*மன்னர் விரும்புவதைத் தான் விரும்பாமையால், மன்னர் விரும்பியதை முழுமையாக, மனச் சஞ்சலமின்றி அனுபவிப்பார். திருப்தியும், அமைதியும் அடைந்து, அவராகவே, தான் விரும்புவது எது எனக்கேட்டு, அதைத் தருவார். எதிர்மறையாக, மன்னர் விரும்புவதைத் தானும் விரும்பினால், மன்னர் மனம், நெருடிச் சஞ்சலப்பட்டு, முழுமையாக அனுபவிக்க முடியாமல் போகும். அதனால், மன்னர் கோபம் அடைந்து, அதைத் தன்மேல், வேறு வழியில் காண்பிப்பார்.*

**693. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்**
**தேற்றுதல் யார்க்கு மரிது.**

**போற்றின் அரியவை போற்றல்-கடுத்தபின்,**
**தேற்றுதல் யார்க்கும் அரிது.**

*புகழ்வதாய் இருந்தால், மன்னனிடம் உள்ள, அரிய நல்ல குணங்களைப் போற்ற வேண்டும். மாறாக, அற்பமானதைப் புகழ்ந்தால், மன்னன்*

*எரிச்சலுற்று, கோபிப்பான். பிறகு, அவனைச் சமாதானப்படுத்துவது, எவராய் இருந்தாலும் கடினம்தான்.*

**694. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுகல்**
**ஆன்ற பெரியா ரகத்து.**

**செவிச் சொல்லும், சேர்ந்த நகையும், அவித்து ஒழுகல்-**
**ஆன்ற பெரியார் அகத்து.**

*கூட்டம் கலைந்த அரசவையில், காதோடு வாய் இரகசியம் பேசுவதும், சேர்ந்து சிரிப்பதும், இல்லாமல் நடந்து கொள்ள வேண்டும்.*

**695. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை**
**விட்டக்காற் கேட்க மறை.**

**எப் பொருளும் ஓரார், தொடரார், மற்று அப் பொருளை**
**விட்டக்கால் கேட்க, மறை.**

*ஓரார் = ஓர் + ஆர். ஒன்றாகப் பிரிக்க மாட்டார்.*

*மன்னருடன் பழகத் தெரிந்த அமைச்சர், தன்னுடைய அமைச்சகம் சம்பந்தப்பட்ட விவகாரமாய் இருந்தாலும், மன்னர் வேறொருவருடன் பேசும்போது குறுக்கிட்டு, தனக்கும் அவ்விடயம் தெரியும், எனக் காட்டிக் கொள்ள மாட்டார், இடையில், ஏதோ ஒரு காரணத்தால், அவர்கள் பேச்சுத் தடைப்பட்டால், பேச்சு விட்ட இடத்திலிருந்து தொடர எடுத்துக் கொடுக்க மாட்டார், மேலும், அவ்விடயத்தில் முக்கியமானது என தான் கருதும் செய்தி பேசப்படாமல் விடுபட்டால், அதை மறைவாக, மன்னன் தனித்திருக்கும்போது கேட்பார்.*

*மாறாக, அமைச்சர், பேச்சில் குறுக்கிட்டால், மன்னர், அடுத்தவர்முன் முக்கியத்துவம் இழப்பார், மனவியல் ரீதியாக இடைஞ்சல் அடைவார், அவருடைய அதிகாரம் கேள்விக்குள்ளாக்கப் பட்டது போல் உணர்வார். கோபத்தால் அமைச்சரைக் கடிந்து கொள்வார்.*

**696. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில**
**வேண்டுப வேட்பச் சொலல்.**

**குறிப்பு அறிந்து, காலம் கருதி, வெறுப்பு இல**
**வேண்டுப, வேட்பச் சொலல்.**

*மன்னரிடம் பணிபுரிபவர்கள், மன்னரின் மனநிலை அறிந்து, பொருத்தமான காலத்தைத் தேர்ந்தெடுத்து, வெறுக்காத விடயங்களை, விரும்புகின்ற செய்திகளை, அவர் விரும்புகின்ற வகையில், சொல்ல வேண்டும்.*

**697. வேட்பன சொல்லி விளைவில வெஞ்ஞான்றும்
கேட்பினுஞ் சொல்லா விடல்.**

**வேட்பன சொல்லி, வினை இல எஞ்ஞான்றும் கேட்பினும்,
சொல்லா விடல்.**

*பணியாளர், தான் விரும்புவனவற்றை, எத்தனை முறை சொன்னாலும், அதற்குரிய பலன் கிடைக்கவில்லையென்றால், மன்னன், மீண்டும் மீண்டும் அதைப்பற்றிக் கேட்டாலும், அதைச் சொல்லாமல் விட்டு விட வேண்டும்.*

*அது மன்னனுக்கு உளரீதியான சொல் விளையாட்டு. பலனைத் தரவேண்டும் என்பதற்காகக் கேட்பதில்லை. நேரம் கடத்தவோ, வேடிக்கையாகவோ கேட்பது. அக்கறையின்றி கேட்பது. வேறு எதையோ சிந்தித்த வண்ணம் கேட்பது. அதற்குப் பதில் சொல்ல வேண்டியதில்லை. பதில் சொல்லவில்லையே என்று வருந்தவும் மாட்டான்.*

**698. இளைய ரினமுறைய ரென்றிகழா நின்ற
ஒளியோ டொழுகப் படும்.**

**'இளையர், இன முறையர்' என்று இகழார், நின்ற
ஒளியோடு ஒழுகப்படும்.**

*மன்னரைப் பற்றிப் பிறரிடம் பேசுகையில், மன்னர், தன்னைவிட வயதில் சிறியவர், தன்னுடைய இனத்தவர், தனக்கு இந்த உறவுடையவர் என்று சிறுமையாக்கி, இணையாக்கி, நெருக்கமாக்கிப் பேசாமல், மன்னருக்குரிய மரியாதையையும் மதிப்பையும் கொடுத்துப் பேச வேண்டும்.*

**699. கொளப்பட்டோ மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.**

**'கொளப்பட்டேம்' என்று எண்ணி, கொள்ளாத செய்யார்-
துளக்கு அற்ற காட்சியவர்.**

*துளக்கு = துள் + அக் + உ. அசைவு உள்ளும் புறமும் வெளிப்படல்.*

*மன்னரிடம் சேர்த்துக் கொள்ளப்பட்டோம், அவருடைய ஆதரவு தனக்குள்ளது என்று நினைத்து, மன்னர் ஏற்றுக் கொள்ள முடியாத செயல்களைச் செய்ய மாட்டார்கள், அசைவற்று மெய்யுணர்ந்தவர்.*

**700. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.**

**பழையம் எனக் கருதி, பண்பு அல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.**

கெழுதகைமை = க் + எழு + தகை + மை. மெய் உயர்ந்து இணையாக்கும் தன்மை.

தானும் மன்னனும் பழைய நண்பர்கள் என்ற நினைப்பில், தானும் மன்னனுக்கு இணையானவன் என்று தன்னை உயர்த்திக் கொண்டு, தகுதியற்றதைச் செய்வது, அதே மன்னனால், அதிகாரத்திற்கான போட்டியாக உணரப்பட்டு, அழிவைத் தரும்.

**மன்னரைச் சேர்ந்தொழுகல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

அடிக்கடி, எதிர்பாராவிதமாக மனம் மாறும் வேந்தரோடு பழகுபவர், அதிகம் நெருங்காமலும், அதிகம் விலகாமலும், தீக்காய்வது போல், மிகவும் கவனமாக இருப்பர்.

மன்னர் விரும்புவனவற்றைத் தான் விரும்பாமை கண்டு, மன்னர், தான் விரும்புவது யாது எனக்கேட்டு அச்செல்வத்தைத் தருவார்.

புகழ்வதாய் இருந்தால், மன்னனிடம் உள்ள, அரிய நல்ல குணங்களைப் போற்ற வேண்டும். மாறாக, அற்பமானதைப் புகழ்ந்தால், மன்னன் எரிச்சலுற்று, கோபிப்பான். பிறகு, அவனைச் சமாதானப்படுத்துவது, எவராய் இருந்தாலும் கடினம்தான்.

கூட்டம் கலைந்த அரசவையில், காதோடு வாய் இரகசியம் பேசுவதும், சேர்ந்து சிரிப்பதும், இல்லாமல் நடந்துக் கொள்ள வேண்டும்.

மன்னருடன் பழகத் தெரிந்த அமைச்சர், தன்னுடைய அமைச்சகம் சம்பந்தப்பட்ட விவகாரமாய் இருந்தாலும், மன்னர் வேறொருவருடன் பேசும்போது குறுக்கிட்டு, தனக்கும் அவ்விடயம் தெரியும், எனக் காட்டிக் கொள்ள மாட்டார், இடையில், ஏதோ ஒரு காரணத்தால், அவர்கள் பேச்சு தடைப்பட்டால், பேச்சு விட்ட இடத்திலிருந்து தொடர எடுத்துக் கொடுக்க மாட்டார், மேலும், அவ்விடயத்தில் முக்கியமானது என தான் கருதும் செய்தி பேசப்படாமல் விடுபட்டால், அதை மறைவாக, மன்னன் தனித்திருக்கும்போது கேட்பார்.

மன்னரிடம் பணிபுரிபவர்கள், மன்னரின் மனநிலை அறிந்து, பொருத்தமான காலத்தைத் தேர்ந்தெடுத்து, வெறுக்காத விடயங்களை, விரும்புகின்ற செய்திகளை, அவர் விரும்புகின்ற வகையில், சொல்ல வேண்டும்.

பணியாளர், தான் விரும்புவனவற்றை, எத்தனை முறை சொன்னாலும், அதற்குரிய பலன் கிடைக்கவில்லையென்றால், மன்னன், மீண்டும் மீண்டும் அதைப்பற்றிக் கேட்டாலும், அதைச் சொல்லாமல் விட்டு விட வேண்டும்.

மன்னரைப் பற்றிப் பிறரிடம் பேசுகையில், மன்னர், தன்னைவிட வயதில் சிறியவர், தன்னுடைய இனத்தவர், தனக்கு இந்த உறவுடையவர் என்று சிறுமையாக்கி, இணையாக்கி, நெருக்கமாக்கிப் பேசாமல், மன்னருக்குரிய மரியாதையையும் மதிப்பையும் கொடுத்துப் பேச வேண்டும்.

மன்னரிடம் சேர்த்துக் கொள்ளப்பட்டோம், அவருடைய ஆதரவு தனக்குள்ளது என்று நினைத்து, மன்னர் ஏற்றுக் கொள்ள முடியாத செயல்களைச் செய்ய மாட்டார்கள், அசைவற்று மெய்யுணர்ந்தவர்.

தானும் மன்னனும் பழைய நண்பர்கள் என்ற நினைப்பில், தானும் மன்னனுக்கு இணையானவன் என்று தன்னை உயர்த்திக் கொண்டு, தகுதியற்றதைச் செய்வது, அதே மன்னனால், அதிகாரத்திற்கான போட்டியாக உணரப்பட்டு, அழிவைத் தரும்.

# 71. குறிப்பறிதல்

*குறிப்பு = குறி + ப் + உ. குறி = க் + உற் + இ. பொருண்மை / மெய் புறத்தே பிரிந்து நிலைப்பது. குறி = குறு + இ. குறுகி இருத்தல். சிறியதாய் இருத்தல். குறி = க் + உறி. பொருண்மை, எளிதில் அடையாதவாறு, உயர்ந்து இருத்தல். குறிப்பு = குறி + ப் + உ. குறுகியதைக் கொண்டு மனத்தை வெளிப்படுத்துவது.*

*குறிப்பறிதல் = ஒருவர் தன் மனத்தை, விரைவான பார்வை, சிறிய சைகை, ஒற்றைச்சொல் போன்றவற்றைக் கொண்டு, வெளிப்படுத்துவதை, அறிந்துக் கொள்ளுதல்.*

**701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.**

**கூறாமை நோக்கி, குறிப்பு அறிவான், எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்கு அணி.**

*மன்னன் எதுவும் கூறாததைக் கூர்ந்து கவனித்து, அவன் என்ன நினைக்கின்றான் என்பதை, அவனுடைய உடல் அசைவுகளாலும், முகமாற்றங்களாலும், கண்ணோட்டத்தாலும் அறிபவன், எந்நாளும் நிலையற்று, அமையாது, தொடர்ந்து அலைகளால் அசைந்தாடும் கடல், நிலையான பூமிக்கு, ஒளிரும் அணிகலனாவது போல், விரைவாக எண்ணத்தை அறிந்து, சுறுசுறுப்பாக இயங்கி, மன்னனுக்கு சிறப்பும் மதிப்பும் சேர்க்கும் அணிகலனாவான்.*

**702. ஐயப் படாஅு தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.**

**ஐயப்படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத் தாடு ஒப்பக் கொளல்.**

*சந்தேகமின்றி, தெளிவாக, உறுதியாக, மனத்தின் எண்ணத்தை, வெளிப்படுத்தாமலே, குறிப்பால் அறிபவனை, தெய்வத்திற்கு இணையாகக் கருதி, மன்னன், தன்னோடு சேர்த்துக் கொள்ள வேண்டும்.*

**703. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.**

**குறிப்பின் குறிப்பு உணர்வாரை, உறுப்பினுள்
யாது கொடுத்தும், கொளல்.**

*புறக்குறிப்பைக் கொண்டு அகக்குறிப்பை, எண்ணத்தை உணர்பவரை, பதவியில் எதைக் கொடுத்தாவது, மன்னன், தன்னுடையவராய் ஆக்கிக் கொள்ள வேண்டும்.*

**704. குறித்தது கூறாமைக் கொள்வரோ டேனை**
**உறுப்போ ரனையரால் வேறு.**

**குறித்தது கூறாமைக் கொள்வா ராடு, ஏனை**
**உறுப்பு ஓரனையரால், வேறு.**

*அனையரால் = நெருங்கி இருக்கும் திறனால்.*

*மன்னனின் குறிப்பை, கூறாமையின் மூலமாகவே அறிந்துணர்பவரோடு, மற்றைய பொறுப்புடையவர்கள், மன்னனின் மனத்தோடு நெருங்கி இருக்கும் திறனால் வேறுபடுகின்றனர்.*

**705. குறிப்பிற் குறிப்புணரா வாயி நுறுப்பினுள்**
**என்ன பயத்தவோ கண்.**

**குறிப்பின் குறிப்பு உணராஆயின், உறுப்பினுள்**
**என்ன பயத்தவோ, கண்?**

*குறிப்பால் எண்ணத்தை, கருத்தை உணராவிட்டால், புலன்களில் சிறந்த கண்ணால், விளையும் பயன் என்ன? ஒன்றுமில்லை. கண்ணின் உயர்ந்தப் பயன், குறிப்பறிதல்.*

*மெய், வாய், முக்கு, கண், செவி ஆகிய ஐம்புலன்களில் மிகவும் சிறந்தவை கண்ணும் செவியும். இவை இரண்டிலும் சிறந்தது, கண்.*

*குறிப்பு அறிதலுக்கு, உடலின் சிறிய அசைவுகளையும், முகமாற்றங்களையும், கண்ணோட்டத்தையும் கண்டறியும், நுணுக்கமான பார்வை, மிகவும் அவசியம். கண்ணற்றவர் குறிப்பறிய முடியாது.*

**706. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்.**

**அடுத்தது காட்டும் பளிங்குபோல், நெஞ்சம் கடுத்தது**
**காட்டும், முகம்.**

*தனக்கு அடுத்து இருப்பதை, அது உள்ளவாறே காட்டுவது, பளிங்கு. அதைப் போலவே, நெஞ்சத்தை அடுத்து இருக்கும் எண்ணத்தை, அது உள்ளபடியே காட்டுவது, முகம்.*

*முகமாற்றங்கள், எண்ணங்களை வெளிப்படுத்தும் குறிப்புகள்.*

**707. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும்**
**காயினுந் தான்முந் துறும்.**

**முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ-உவப்பினும்**
**காயினும், தான் முந்துறும்?**

*முதுக்குறைந்தது = முது + க் + உறைந்தது. முதிய / முதலாவதாக மெய் / பொருண்மை நிலைத்தது.*

*உடல் உருவாகும்போது, முகத்தைக் காட்டிலும், முதலாவதாக நிலைத்த உறுப்பு, ஏதும் உள்ளதா? மகிழ்ந்தாலும், கோபித்தாலும் மற்ற எல்லா உறுப்புகளைக் காட்டிலும், முகம் முதலாக வந்து, காட்டி நிற்கிறதே.*

**708. முகநோக்கி நிற்க வமையு மகனோக்கி**
**உற்ற துணர்வார்ப் பெறின்.**

**முகம் நோக்கி நிற்க அமையும்-அகம் நோக்கி,**
**உற்றது உணர்வார்ப் பெறின்.**

*மன்னன் முகத்தைக் கூர்ந்துப் பார்த்து, அதில் தெரியும் அவனுடைய மனத்தைக் கூர்ந்துப் பார்த்து, அங்குத் தோன்றும் எண்ணத்தையும் உணர்பவனைப் பெற்றால் போதும், மன்னனுக்கு அதைவிட பெறுவதற்கு வேறொன்றும் இல்லை.*

**709. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்**
**வகைமை யுணர்வார்ப் பெறின்.**

**பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும்-கண்ணின்**
**வகைமை உணர்வார்ப் பெறின்.**

*கண்ணின் நிலைகளையும், இயக்கங்களையும், மாறுதல்களையும் அவற்றின் பொருளையும் உணர்ந்தவர்களை, மன்னன், தன்னிடம் கொண்டிருந்தால், கண்கள் சொல்லிவிடும் பகைமையையும், நட்பையும், மன்னனால் பிரித்து அறிய முடியும்.*

**710. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்**
**கண்ணல்ல தில்லை பிற.**

**'நுண்ணியம்' என்பார் அளக்கும் கோல், காணுங்கால்,**
**கண் அல்லது, இல்லை பிற.**

*விலையுயர்ந்த, அரிய பொருளை அளக்கும் கருவி, நுண்ணியது என்பார். ஆனால், குறிப்பறிதலையும் கணக்கில் கொண்டு பார்க்கப் போனால், வெளிப்படுத்துவதிலும், கண்டறிவதிலும், கண்ணைக் காட்டிலும், நுண்ணியது வேறெதுவும் இல்லை.*

**குறிப்பறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*மன்னன் எதுவும் கூறாததைக் கூர்ந்து கவனித்து, அவன் என்ன நினைக்கின்றான் என்பதை, அவனுடைய உடல் அசைவுகளாலும்,*

முகமாற்றங்களாலும், கண்ணோட்டத்தாலும் அறிபவன், எந்நாளும் நிலையற்று, அமையாது, தொடர்ந்து அலைகளால் அசைந்தாடும் கடல், நிலையான பூமிக்கு, ஒளிரும் அணிகலனாவது போல், விரைவாக எண்ணத்தை அறிந்து, சுறுசுறுப்பாக இயங்கி, மன்னனுக்கு சிறப்பும் மதிப்பும் சேர்க்கும் அணிகலனாவான்.

சந்தேகமின்றி, தெளிவாக, உறுதியாக, மனத்தின் எண்ணத்தை, வெளிப்படுத்தாமலே, குறிப்பால் அறிபவனை, தெய்வத்திற்கு இணையாகக் கருதி, மன்னன், தன்னோடு சேர்த்துக் கொள்ள வேண்டும்.

புறக்குறிப்பைக் கொண்டு அகக்குறிப்பை, எண்ணத்தை உணர்பவரை, பதவியில் எதைக் கொடுத்தாவது, மன்னன், தன்னுடையவராய் ஆக்கிக் கொள்ள வேண்டும்.

மன்னனின் குறிப்பை, கூறாமையின் மூலமாகவே அறிந்துணர்பவரோடு, மற்றைய பொறுப்புடையவர்கள், மன்னனின் மனத்தோடு நெருங்கி இருக்கும் திறனால் வேறுபடுகின்றனர்.

குறிப்பால் எண்ணத்தை, கருத்தை உணராவிட்டால், புலன்களில் சிறந்த கண்ணால், விளையும் பயன் என்ன? ஒன்றுமில்லை. கண்ணின் உயர்ந்தப் பயன், குறிப்பறிதல்.

தனக்கு அடுத்து இருப்பதை, அது உள்ளவாறே காட்டுவது, பளிங்கு. அதைப் போலவே, நெஞ்சத்தை அடுத்து இருக்கும் எண்ணத்தை, அது உள்ளபடியே காட்டுவது, முகம்.

உடல் உருவாகும்போது, முகத்தைக் காட்டிலும், முதலாவதாக நிலைத்த உறுப்பு, ஏதும் உள்ளதா? மகிழ்ந்தாலும், கோபித்தாலும் மற்ற எல்லா உறுப்புகளைக் காட்டிலும், முகம் முதலாக வந்து, காட்டி நிற்கிறதே.

மன்னன் முகத்தைக் கூர்ந்து பார்த்து, அதில் தெரியும் அவனுடைய மனத்தைக் கூர்ந்து பார்த்து, அங்குத் தோன்றும் எண்ணத்தையும் உணர்பவனைப் பெற்றால் போதும், மன்னனுக்கு அதைவிட பெறுவதற்கு வேறொன்றும் இல்லை.

கண்ணின் நிலைகளையும், இயக்கங்களையும், மாறுதல்களையும் அவற்றின் பொருளையும் உணர்ந்தவர்களை, மன்னன், தன்னிடம் கொண்டிருந்தால், கண்கள் சொல்லிவிடும் பகைமையையும், நட்பையும், மன்னனால் பிரித்து அறிய முடியும்.

விலையுயர்ந்த, அரிய பொருளை அளக்கும் கருவி, நுண்ணியது என்பார். ஆனால், குறிப்பறிதலையும் கணக்கில் கொண்டு பார்க்கப் போனால், வெளிப்படுத்துவதிலும், கண்டறிவதிலும், கண்ணைக் காட்டிலும், நுண்ணியது வேறெதுவும் இல்லை.

# 72. அவையறிதல்

*அவையறிதல் = அவை + அறிதல். சபை அறிதல். கூட்டத்தின் தன்மை அறிதல்.*

**711. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்**
**தொகையறிந்த தூய்மை யவர்.**

**அவை அறிந்து, ஆராய்ந்து, சொல்லுக - சொல்லின்**
**தொகை அறிந்த தூய்மையவர்.**

*அவை = அ + வை. வை = வ் + ஐ. புறமும் அகமும் ஐக்கியமானது. நிலையானது. மெய்யுணர்ந்தவர். அசையாமை. அவை = உயிர்ப்புள்ள மெய்யுணர்ந்தோர். நிலையற்றோர். இயங்குபவர். அறிஞர் கூட்டம்.*

*தொகை = சேர்க்கை.*

*தூய்மை = முன் எண்ணம் இல்லாமை. அகந்தை, பயம் இல்லாமை. மெய்யுணர்வு.*

*சொற்களின் அமைப்புகளையும், அவற்றால் விளையும் பயன்களையும் அறிந்த மெய்யுணர்வாளர், அறிஞர் கூட்டம் எதுவென தெரிந்து, அவர்தம் தன்மையை ஆராய்ந்து, அதற்கேற்றாற் போல், பேச வேண்டும்.*

**712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்**
**நடைதெரிந்த நன்மை யவர்.**

**இடை தெரிந்து, நன்கு உணர்ந்து, சொல்லுக-சொல்லின்**
**நடை தெரிந்த நன்மையவர்!**

*சொல்லின் ஓட்டத்தையும், அதன் பயனையும் அறிந்தவர், கூறும் சொற்களால், வெளிப்படும் பொருளில், ஏற்படும் இடைவெளியை விளக்கத் தெரிந்தும், கூறுகின்ற பொருளை, முழுமையாக அறிந்துணர்ந்தும் சொல்ல வேண்டும்.*

**713. அவையறியார் சொல்லின்மேற் கொள்பவர் சொல்லின்**
**வகையறியார் வல்லதூஉ மில்.**

**அவை அறியார், சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின்**
**வகை அறியார்; வல்லதூஉம் இல்.**

*அறிஞர் கூட்டத்தின் தன்மையை அறியாதவர், சொல்லின் மேலோட்டமான பொருள் கொள்பவர், சொல்லின் அமைப்புகளையும், அவற்றால் விளையும் பயன்களையும் அறியாதவர், வேறு எதிலும்கூட வல்லவராய் இருக்க முடியாது.*

**714. ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.**

**ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல், வெளியார்முன்
வான் சுதை வண்ணம் கொளல்.**

*ஒளியார் = தூயவெளியின் ஒளிர்மையானவர். மெய்யுணர்ந்தவர். நிலைத்தவர். அகம் உறைபவர்.*

*வெளியார் = மெய்யுணராதவர். இயங்குபவர். புறம் விரைபவர்.*

*வான்சுதை = மேகம்.*

*தூயவெளியின் ஒளிர்மையாய் மெய்யுணர்ந்தவர் சபையில், தானும், அகத்தில் உறைந்து, வெண்மையுடையவராய் ஆதல் வேண்டும். புறவாழ்வில் ஈடுபடுவோர் கூட்டத்தில், அவர்களுடைய கருத்துக்கு இணங்க, வானம் மேகத்தின் நிறமாவதுபோல், தன் எண்ணத்தையும் சொற்களையும் மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும். சபைகளின் இயல்புக்கு ஏற்றவாறு, தன்னை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.*

**715. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.**

**'நன்று' என்றவற்றுள்ளும் நன்றே-முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.**

*முதிர்ந்த ஞானிகள், அறிஞர்கள் கூடிய அவையில், ஒரு பொருளைப் பற்றி உணர்ச்சிவசப்பட்டு, அவசரப்பட்டு, பேசாத அடக்கம், நல்லவை என்று சொல்லப்படும் குணங்கள் எல்லாவற்றுள்ளும், மிகவும் நல்லது.*

**716. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுவார் முன்ன ரிழுக்கு.**

**ஆற்றின் நிலைதளர்ந்தற்றே-வியன் புலம் ஏற்று,
உணர்வார்முன்னர் இழுக்கு.**

*வியம் = வி + அம். அப்பால் உள்ள தன்மை. பொருண்மைக்கு அப்பால் உள்ள தன்மை. தூயவெளி.*

*தூயவெளிப் புலத்திற்கு, தம் மனத்தை உயர்த்துவோர் குழுமிய அவையில், தவறான சொல்லையோ கருத்தையோ கூறினால், வெள்ளமாய் ஓடுகின்ற ஆற்றின் நடுவே நின்று, நிலைதடுமாறி விழுந்து, மூழ்கி, அடித்துச் செல்வது போல், இருந்த இடம் தெரியாமல், காணாமல் போய்விடுவர்.*

**717. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லார கத்து.**

**கற்று அறிந்தார் கல்வி விளங்கும்-கசடு அறச்**
**சொல் தெரிதல் வல்லார் அகத்து.**

*தேவையற்ற, பயனற்ற சொற்களை விலக்கி, பயனுள்ள சொற்களைத் தேர்ந்தெடுக்கும், திறமையுள்ளவர்கள் சபையில், கற்றறிந்தவரின் கருத்துகள் ஏற்கப்பட்டு, புகழப்படும்.*

**718. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வன**
**பாத்தியு ணீர்சொரிந் தற்று.**

**உணர்வது உடையார்முன் சொல்லல் - வளர்வதன்**
**பாத்தியுள் நீர் சொரிந்தற்று.**

*தான் புதிதாய் உணர்ந்ததை, ஏற்கனவே, அதை நன்கறிந்தவர் சபையில் கூறுவது என்பது, வளர்ந்த காட்டிற்கு பாத்திகட்டி, தண்ணீர் ஊற்றியது போன்றதாகும். அதனால், யாருக்கும் எப்பயனும் இல்லை.*

**719. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்**
**நன்கு செலச்சொல்லு வார்.**

**புல் அவையுள் பொச்சாந்தும் சொல்லற்க-நல் அவையுள்**
**நன்கு செலச் சொல்லுவார்!**

*நல்ல கருத்துகளைப் பேசும் அவையில், பயனுள்ள கருத்துகளை, ஏற்கும் வகையில் சொல்லுபவர், கல்லாதவர் சபையில், வேடிக்கையாகக்கூட பேசிவிடக் கூடாது.*

**720. அங்கணத் துக்க வமிர்தற்றாற் றங்கணத்**
**தல்லார்முற் கோட்டி கொளல்.**

**அங்கணத்துள் உக்க அமிழ்து அற்றால்-தம் கணத்தர்**
**அல்லார்முன் கோட்டி கொளல்.**

*தனக்கு ஒப்பில்லாதவர்முன், அறிவின் எல்லையைக் காட்டி, பாராட்டைப் பெறுதல் என்பது, தூய்மையற்ற இடத்தில் உதிர்த்த அமிர்தம்போல், யாருக்கும் பயனற்று, வீணாகி விடும்.*

**அவையறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*சொற்களின் அமைப்புகளையும், அவற்றால் விளையும் பயன்களையும் அறிந்த மெய்யுணர்வாளர், அறிஞர் கூட்டம் எதுவென தெரிந்து, அவர்தம் தன்மையை ஆராய்ந்து, அதற்கேற்றாற் போல், பேச வேண்டும்.*

*சொல்லின் ஓட்டத்தையும், அதன் பயனையும் அறிந்தவர், கூறும் சொற்களால், வெளிப்படும் பொருளில், ஏற்படும் இடைவெளியை*

விளக்கத் தெரிந்தும், கூறுகின்ற பொருளை, முழுமையாக அறிந்துணர்ந்தும் சொல்ல வேண்டும்.

அறிஞர் கூட்டத்தின் தன்மையை அறியாதவர், சொல்லின் மேலோட்டமான பொருள் கொள்பவர், சொல்லின் அமைப்புகளையும், அவற்றால் விளையும் பயன்களையும் அறியாதவர், வேறு எதிலும்கூட வல்லவராய் இருக்க முடியாது.

தூயவெளியின் ஒளிர்மையாய் மெய்யுணர்ந்தவர் சபையில், தானும், அகத்தில் உறைந்து, வெண்மையுடையவராய் ஆதல் வேண்டும். புறவாழ்வில் ஈடுபடுவோர் கூட்டத்தில், அவர்களுடைய கருத்துக்கு இணங்க, வானம் மேகத்தின் நிறமாவதுபோல், தன் எண்ணத்தையும் சொற்களையும் மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.

முதிர்ந்த ஞானிகள், அறிஞர்கள் கூடிய அவையில், ஒரு பொருளைப் பற்றி உணர்ச்சிவசப்பட்டு, அவசரப்பட்டு, பேசாத அடக்கம், நல்லவை என்று சொல்லப்படும் குணங்கள் எல்லாவற்றுள்ளும், மிகவும் நல்லது.

தூயவெளிப் புலத்திற்கு, தம் மனத்தை உயர்த்துவோர் குழுமிய அவையில், தவறான சொல்லையோ கருத்தையோ கூறினால், வெள்ளமாய் ஓடுகின்ற ஆற்றின் நடுவே நின்று, நிலைதடுமாறி விழுந்து, மூழ்கி, அடித்துச் செல்வது போல், இருந்த இடம் தெரியாமல், காணாமல் போய்விடுவர்.

தேவையற்ற, பயனற்ற சொற்களை விலக்கி, பயனுள்ள சொற்களைத் தேர்ந்தெடுக்கும், திறமையுள்ளவர்கள் சபையில், கற்றறிந்தவரின் கருத்துகள் ஏற்கப்பட்டு, புகழப்படும்.

தான் புதிதாய் உணர்ந்ததை, ஏற்கனவே, அதை நன்கறிந்தவர் சபையில் கூறுவது என்பது, வளர்ந்த காட்டிற்குப் பாத்திகட்டி, தண்ணீர் ஊற்றியது போன்றதாகும். அதனால், யாருக்கும் எப்பயனும் இல்லை.

நல்ல கருத்துகளைப் பேசும் அவையில், பயனுள்ள கருத்துகளை, ஏற்கும் வகையில் சொல்லுபவர், கல்லாதவர் சபையில், வேடிக்கையாகக்கூட பேசிவிடக் கூடாது.

தனக்கு ஒப்பில்லாதவர்முன், அறிவின் எல்லையைக் காட்டி, பாராட்டைப் பெறுதல் என்பது, தூய்மையற்ற இடத்தில் உதிர்த்த அமிர்தம்போல், யாருக்கும் பயனற்று, வீணாகி விடும்.

# 73. அவையஞ்சாமை

*அவையஞ்சாமை = அவை + அஞ்சாமை. சபையில் பயப்படாமை.*

**721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்**
**தொகையறிந்த தூய்மை யவர்.**

**வகை அறிந்து, வல் அவை, வாய்சோரார்-சொல்லின்**
**தொகை அறிந்த தூய்மையவர்.**

*சொல்லின் அமைப்புகளையும், விளையும் பயன்களையும் அறிந்த மெய்யுணர்வாளர், சொல்லும் விதத்தையும் அறிந்து, திறமைமையானவர்கள் கூடிய சபையில், தயங்காமல் சரளமாகப் பேசுவார்.*

**722. கற்றாருட் கற்றா ரெனப்படுவார் கற்றார்முற்**
**கற்ற செலச்சொல்லு வார்.**

**கற்றாருள் கற்றார் எனப்படுவர்-கற்றார்முன்**
**கற்ற செலச் சொல்லுவார்.**

*பிறர் கற்பதற்கு முன் தான் கற்று, அதை மற்றவர்கள் ஏற்கும்படி, புரியும்படி சொல்லுபவர், கற்றவர்கள் மத்தியில், கற்றவர் என மதிக்கப்படுவார்.*

**723. பகையகத்துச் சாவா ரெளிய ரரியர்**
**அவையகத் தஞ்சா தவர்.**

**பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்,**
**அவையகத்து அஞ்சாதவர்.**

*பகைவர் நாட்டிற்குள் சென்று, போரிட்டு இறப்பவர், சாதாரணமானவர். கற்றோர் சபைக்குள் சென்று, அஞ்சாமல் பேசுபவர், அபூர்வமானவர்.*

**724. கற்றாருட் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற**
**மிக்காருண் மிக்க கொளல்.**

**கற்றார்முன் கற்ற செலச் சொல்லி, தாம் கற்ற,**
**மிக்காருள், மிக்க கொளல்.**

*கற்றவர் முன்பு, தான் கற்றதை அவர் ஏற்குமாறு சொல்லி, தான்கற்றதைவிட அதிகமாக கற்றவரின், புதிய உயர்ந்த கருத்துகளை ஏற்றுக் கொள்வதும், அவைக்கு அஞ்சாத குணத்தைக் காட்டும்.*

**725. ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு.**

**ஆற்றின், அளவு அறிந்து கற்க-அவை அஞ்சா
மாற்றம் கொடுத்தற்பொருட்டு.**

*அவைக்கு அஞ்சாமல், விளக்கம் கொடுக்க வேண்டிய காரணத்திற்காக, பேசப்போகும் சொற்கள், அவற்றின் பொருள், திறன், இணையான சொற்கள், ஒப்புமை, சான்று, தருக்கம் ஆகியனவற்றைக் கற்று அறிதல் வேண்டும்.*

**726. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.**

**வாளொடு என் வன்கண்ணர் அல்லார்க்கு?-நூலொடு என்,
நுண் அவை அஞ்சுபவர்க்கு?**

*மனவலிமையும், உறுதியான பார்வையும் இல்லாதவர்க்கு, வாள் வைத்து இருப்பதால் என்ன பயன் விளையப் போகின்றது? நுண்ணிய கருத்துகளைப் பேசும் சபையைக் கண்டு அஞ்சுபவர்க்கு, நூலால் என்ன பயன் விளையப் போகின்றது?*

**727. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.**

**பகையகத்துப் பேடி கை ஒள் வாள்-அவையகத்து
அஞ்சுமவன் கற்ற நூல்.**

*பகைவர் மத்தியில் உள்ள கோழையின் கையில், வாள் தடுமாறுவதைப் போல், அறிஞர் சபையினுள், பேச பயப்படுபவன் கற்ற நூல் கருத்தும், குழம்பிப் போகும்.*

**728. பல்லவை கற்றும் பயமிலவே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.**

**பல்லவை கற்றும், பயம் இலரே-நல் அவையுள்
நன்கு செலச் சொல்லாதார்.**

*கற்றவர் அவையில், பயன்தரும் கருத்துகளை ஏற்கும்படி, புரியும்படி சொல்ல முடியாதவர், பல நூல்களைக் கற்றிருந்தும், பல அவைகளைக் கண்டிருந்தும் பயனில்லை.*

**729. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து**
**நல்லா ரவையஞ்சு வார்.**

**'கல்லாதவரின் கடை' என்ப-' கற்று அறிந்தும்,**
**நல்லார் அவை அஞ்சுவார்'.**

*கற்று அறிந்திருந்தும், நல்லவர் சபையில் பேச அஞ்சுபவரை, கற்காதவரைக் காட்டிலும் கீழாகக் கருதுவர், உலக மக்கள்.*

**730. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்**
**கற்ற செலச்சொல்லா தார்.**

**உளர் எனினும், இல்லாரொடு ஒப்பர்-களன் அஞ்சி,**
**கற்ற செலச் சொல்லாதார்.**

*அவைக்களம் பயந்து, கற்றதை ஏற்கும்படி, புரியும்படி சொல்லாதவர், உயிரோடு இருந்தாலும், இறந்தவர்க்கு ஈடாக கருதப்படுவர்.*

**அவையஞ்சாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*சொல்லின் அமைப்புகளையும், விளையும் பயன்களையும் அறிந்த மெய்யுணர்வாளர், சொல்லும் விதத்தையும் அறிந்து, திறமைமையானவர்கள் கூடிய சபையில், தயங்காமல் சரளமாகப் பேசுவார்.*

*பிறர் கற்பதற்கு முன் தான் கற்று, அதை மற்றவர்கள் ஏற்கும்படி, புரியும்படி சொல்லுபவர், கற்றவர்கள் மத்தியில், கற்றவர் என மதிக்கப்படுவார்.*

*பகைவர் நாட்டிற்குள் சென்று, போரிட்டு இறப்பவர், சாதாரணமானவர். கற்றோர் சபைக்குள் சென்று, அஞ்சாமல் பேசுபவர், அபூர்வமானவர்.*

*கற்றவர் முன்பு, தான் கற்றதை அவர் ஏற்குமாறு சொல்லி, தான்கற்றதைவிட அதிகமாக கற்றவரின், புதிய உயர்ந்த கருத்துகளை ஏற்றுக் கொள்வதும், அவைக்கு அஞ்சாத குணத்தைக் காட்டும்.*

*அவைக்கு அஞ்சாமல், விளக்கம் கொடுக்க வேண்டிய காரணத்திற்காக, பேசப்போகும் சொற்கள், அவற்றின் பொருள், திறன், இணையான சொற்கள், ஒப்புமை, சான்று, தருக்கம் ஆகியனவற்றைக் கற்று அறிதல் வேண்டும்.*

*மனவலிமையும், உறுதியான பார்வையும் இல்லாதவர்க்கு, வாள் வைத்து இருப்பதால் என்ன பயன் விளையப் போகின்றது? நுண்ணிய கருத்துகளைப் பேசும் சபையைக் கண்டு அஞ்சுபவர்க்கு, நூலால் என்ன பயன் விளையப் போகின்றது?*

*பகைவர் மத்தியில் உள்ள கோழையின் கையில், வாள் தடுமாறுவதைப் போல், அறிஞர் சபையினுள், பேச பயப்படுபவன் கற்ற நூல் கருத்தும், குழம்பிப் போகும்.*

*கற்றவர் அவையில், பயன்தரும் கருத்துகளை ஏற்கும்படி, புரியும்படி சொல்ல முடியாதவர், பல நூல்களைக் கற்றிருந்தும், பல அவைகளைக் கண்டிருந்தும் பயனில்லை.*

*கற்று அறிந்திருந்தும், நல்லவர் சபையில் பேச அஞ்சுபவரை, கற்காதவரைக் காட்டிலும் கீழாகக் கருதுவர், உலக மக்கள்.*

*அவைக்களம் பயந்து, கற்றதை ஏற்கும்படி, புரியும்படி சொல்லாதவர், உயிரோடு இருந்தாலும், இறந்தவர்க்கு ஈடாக கருதப்படுவர்.*

# 74. நாடு

*இந்த அதிகாரம், நாடு, எப்படி, ஏன், எதற்காக எழுந்து உருவானது என்ற பொது வரலாற்றையும், நாட்டின் வளம், தலைவனின் அவசியம் போன்றவற்றையும் விவரிக்கின்றது.*

**731. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.**

**தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்வு இலாச்
செல்வரும், சேர்வது-நாடு.**

*தள்ளா = தவறா. காலம் பொய்யாமல்.*

*தக்காரும் = உழவர், நெசவாளர், கட்டிடத் தொழிலாளர், பிற கைவினைஞர்கள்.*

*மழையால், மிகையான விளைச்சல் தரும் நிலத்தில், உழவிற்காகவும் அதன் தொடர்புடைய சமூக வாழ்விற்காகவும் உற்பத்தியில் ஈடுபடும் உழவர், நெசவாளர், கட்டிடத் தொழிலாளர், கைவினைஞர்கள், கலைஞர்கள் ஆகியோரும், பண்ட பரிமாற்றத்தால், எப்பொழுதும் உபரியை ஈட்டி, தொடர்ந்து உயர்ந்த வண்ணம் இருக்கும் வியாபாரிகளும், ஒன்றுச் சேர்ந்திருப்பது நாடு.*

**732. பெரும்பொருளாற் பெட்டக்க தாக்கி யருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.**

**பெரும் பொருளா பெட்டக்கது ஆகி, அருங்
கேட்டால், ஆற்ற விளைவது-நாடு.**

*சமூகம், மிகுந்த உபரிப்பொருளைச் சேமித்துப் பாதுகாக்கையில், அதைத் தாக்கி வந்த பேரழிவால், மக்களைத் தேற்றவும், சமூகத்தை வழிநடத்தவும் உருவாவது, நாடு.*

**733. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.**

**பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி, இறைவற்கு
இறை ஒருங்கு நேர்வது-நாடு.**

*பொறை = பகை*

*தாங்கி = தடுத்து நின்று*

*இறை = உறுதியாய் நிற்பவன். பிரிந்து தனிமனிதர்களாய் இருக்கும் மக்கள்.*

*நேர்வது = நிகழ்வது.*

*பகை ஒன்று சேர்ந்து, தாக்க வரும்போது, தடுத்து நின்று, உறுதியாய் நிற்பவனுடன், மக்கள் ஒன்றிணைய, நிகழ்வது நாடு.*

**734. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையும்**
**சேரா தியைவது நாடு.**

**உறு பசியும், ஓவாப் பிணியும், செறு பகையும்,**
**சேராது இயல்வது-நாடு.**

*ஓவு = ஓ + உ. முழுமையாய் புறம்போ. நீங்கு.*

*செறு = ச் + எற் + உ. இயக்கம் உயர்ந்து பிரித்து வெளிப்படும். கொள்ளை, கொலை செய்யும்.*

*துன்பந்தரும் பசியும், நீங்காத நோயும், வருத்தும் பகையும், நெருங்காமல் இருக்க வேண்டிய காரணிகள், பொருந்தி இருப்பது, நாடு.*

**735. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்கும்**
**கொல்குறும்பு மில்லது நாடு.**

**பல் குழுவும், பாழ்செய்யும் உட்பகையும், வேந்து அலைக்கும்**
**கொல் குறும்பும், இல்லது-நாடு.**

*பல முரண்பாடான நோக்கங்களையும், நலன்களையும், செயல்திட்டங்களையும் உடைய குழுக்களும்; கொண்ட செல்வத்தையும், வெற்றிகளையும் உடன் இருந்தே அழிக்கும் துரோகிகளையும்; அரசனைக் குழப்புவதற்காக, களக்கமடைய செய்வதற்காகச் செய்யும் குறுகிய நோக்கமுள்ள கொலைகளும், இல்லாதது நாடு.*

**736. கேடறியா கெட்ட விடத்தும் வளங்குன்றா**
**நாடென்ப நாட்டிற் றலை.**

**கேடு அறியா, கெட்ட இடத்தும் வளம் குன்றா**
**நாடு, என்ப, நாட்டின் தலை.**

*பகைவராலோ, இயற்கைச் சீற்றத்தாலோ இதுவரை அழிவு இல்லாமல் இருந்து, எதிர்பாராதவிதமாக அழிவு ஏற்பட்டாலும், இயற்கை வளங்களான நிலம், நீர், கனிவளம் போன்றவை குறையாமல் இருந்தால், உழைப்பால், மீண்டும் அந்நாடு செழிப்படைந்து விடும். அவ்வாறு, அழிவுக்குட்பட்டாலும், மீண்டும் எழுந்து நிற்கும் நாடே, நாடுகளுள் சிறந்தது, பிற நாடுகளுக்கும் தலைமை ஏற்கும்.*

**737. இருபுனலு மேய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணு நாட்டிற் குறுப்பு.**

**இரு புனலும், வாய்ந்த மலையும், வரு புனலும்,**
**வல் அரணும்,-நாட்டிற்கு உறுப்பு.**

*ஏய்ந்த = ஏ + ய் + ன் + த. மிக உயர்ந்த உறுதியான நெருக்கமான வடிவமுள்ள.*

*மழை நீரோட்டம், ஊற்று நீரோட்டம் என இரண்டு ஆறுகளும்; மிக உயர்ந்த உறுதியான நெருக்கமான மலையும்; வேறு நாட்டிலிருந்து வெள்ளமாய் வரும் ஆறும்; வலிமையான கோட்டையும் நாட்டின் அவசியமான அங்கங்களாகும்.*

**738. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்**
**அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.**

**பிணி இன்மை, செல்வம், விளைவு இன்பம், ஏமம்-**
**அணி என்ப, நாட்டிற்கு-இவ் ஐந்து.**

*விளைவு = உழைப்பு, பயிர் விளைச்சல்.*

*ஏமம் = ஏம் + அம். மிக உயர்ந்த அமைதித் தன்மை.*

*தீராத நோயின்மை, பொருள் செல்வம், பயிர்களின் விளைச்சல் அல்லது உழைப்பு, மக்களின் தனி, குடும்ப, சமூக இன்பம், பாதுகாப்பு அல்லது மெய்யுணர்வால் வரும் ஆனந்தம், ஆகிய ஐந்தையும், நாட்டிற்கு அழகு, என்பர்.*

**739. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாட வளந்தரு நாடு.**

**நாடு, என்ப, நாடா வளத்தன; நாடு அல்ல,**
**நாட, வளம் தரும் நாடு.**

*தேடி அலையாமலேயே, எல்லா இடத்தும், ஏதாவது ஒரு வளத்துடன், எளிதாய் உழைத்து, இன்பமாய் வாழ்கின்ற இடத்தையே, நாடென்பர். தேடித் தேடி, வளத்தைக் கண்டுப்பிடித்து, கடினமாய் உழைத்து, பொருளை உருவாக்கி, செல்வமாக்கி, எப்படியோ வாழ்கின்ற இடம், நாடல்ல.*

**740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றி**
**வேந்தமை வில்லாத நாடு.**

**ஆங்கு அமைவு எய்தியக்கண்ணும் பயம் இன்றே-**
**வேந்து அமைவு இல்லாத நாடு.**

மேற்கண்ட வளங்களை எல்லாம், ஒரு நாடு அடைந்திருந்தாலும், மன்னன் நிலையாக இல்லாத நாட்டில், அவற்றால், எந்தப் பயனுமில்லாமல் போய்விடும்.

## நாடு அதிகாரப் பொருள் தொகுப்பு:

தவறாத மழையால், மிகையான விளைச்சல் தரும் நிலத்தில், உழவிற்காகவும் அதன் தொடர்புடைய சமூக வாழ்விற்காகவும் உற்பத்தியில் ஈடுபடும் உழவர், நெசவாளர், கட்டிடத் தொழிலாளர், கைவினைஞர்கள், கலைஞர்கள் ஆகியோரும், பண்ட பரிமாற்றத்தால், எப்பொழுதும் உபரியை ஈட்டி, தொடர்ந்து உயர்ந்த வண்ணம் இருக்கும் வியாபாரிகளும், ஒன்றுச் சேர்ந்திருப்பது நாடு.

சமூகம், மிகுந்த உபரிப்பொருளைச் சேமித்துப் பாதுகாக்கையில், அதைத் தாக்கி வந்த பேரழிவால், மக்களைத் தேற்றவும், சமூகத்தை வழிநடத்தவும் உருவாவது, நாடு.

பகை ஒன்று சேர்ந்து, தாக்க வரும்போது, தடுத்து நின்று, உறுதியாய் நிற்பவனுடன், மக்கள் ஒன்றிணைய, நிகழ்வது நாடு.

துன்பந்தரும் பசியும், நீங்காத நோயும், வருத்தும் பகையும், நெருங்காமல் இருக்க வேண்டிய காரணிகள், பொருந்தி இருப்பது, நாடு.

பல முரண்பாடான நோக்கங்களையும், நலன்களையும், செயல்திட்டங்களையும் உடைய குழுக்களும்; கொண்ட செல்வத்தையும், வெற்றிகளையும் உடன் இருந்தே அழிக்கும் துரோகிகளையும்; அரசனைக் குழப்புவதற்காக, களக்கமடையச் செய்வதற்காகச் செய்யும் குறுகிய நோக்கமுள்ள கொலைகளும், இல்லாதது நாடு.

பகைவராலோ, இயற்கைச் சீற்றத்தாலோ இதுவரை அழிவு இல்லாமல் இருந்து, எதிர்பாராதவிதமாக அழிவு ஏற்பட்டாலும், இயற்கை வளங்களான நிலம், நீர், கனிவளம் போன்றவை குறையாமல் இருந்தால், உழைப்பால், மீண்டும் அந்நாடு செழிப்படைந்து விடும். அவ்வாறு, அழிவுக்குட்பட்டாலும், மீண்டும் எழுந்து நிற்கும் நாடே, நாடுகளுள் சிறந்தது, பிற நாடுகளுக்கும் தலைமை ஏற்கும்.

மழை நீரோட்டம், ஊற்று நீரோட்டம் என இரண்டு ஆறுகளும்; மிக உயர்ந்த உறுதியான நெருக்கமான மலையும்; வேறு நாட்டிலிருந்து வெள்ளமாய் வரும் ஆறும்; வலிமையான கோட்டையும் நாட்டின் அவசியமான அங்கங்களாகும்.

தீராத நோயின்மை, பொருள் செல்வம், பயிர்களின் விளைச்சல் அல்லது உழைப்பு, மக்களின் தனி, குடும்ப, சமூக இன்பம், பாதுகாப்பு அல்லது மெய்யுணர்வால் வரும் ஆனந்தம், ஆகிய ஐந்தையும், நாட்டிற்கு அழகு, என்பர்.

தேடி அலையாமலேயே, எல்லா இடத்தும், ஏதாவது ஒரு வளத்துடன், எளிதாய் உழைத்து, இன்பமாய் வாழ்கின்ற இடத்தையே, நாடென்பர். தேடித் தேடி, வளத்தைக் கண்டுப்பிடித்து, கடினமாய் உழைத்து, பொருளை உருவாக்கி, செல்வமாக்கி, எப்படியோ வாழ்கின்ற இடம், நாடல்ல.

மேற்கண்ட வளங்களை எல்லாம், ஒரு நாடு அடைந்திருந்தாலும், மன்னன் நிலையாக இல்லாத நாட்டில், அவற்றால், எந்தப் பயனுமில்லாமல் போய்விடும்.

## 75. அரண்

*அரண் = அர் + அண். அறுந்தும், மிக நெருக்கமாகவும் இருப்பது. அகழியும், உறுதியான, அகலமான சுவரும் உடையது.*

**741. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்**
**போற்று பவர்க்கும் பொருள்.**

**ஆற்றுபவர்க்கும் அரண் பொருள்; அஞ்சித் தற்**
**போற்றுபவர்க்கும் பொருள்.**

*ஆற்று = ஆற் + உ. பிரித்து வெளிப்படுத்து. போரிடு.*

*அரண் = அர் + அண். பிரிந்தும் மிக நெருங்கியும்.*

*பொருள் = ப் + ஓர் + உள். கொண்டது ஒன்றாய் உள்ளிருத்தல். முழுமையாய் ஒரே தன்மையாய் இருத்தல். நிலைத்தல். செல்வம்.*

*போற்று = ப் + ஓற் + உ. கொண்டதுடன் ஒன்றி வெளிப்படு. காப்பாற்று.*

*தாக்குபவர்க்கும், தங்கள் உயிர்களைப் பாதுகாக்கும் தடுப்பரண், செல்வம். பயந்து, தங்களைப் பாதுகாத்துக் கொள்பவர்க்கும் கோட்டை, செல்வம். அரண், இருவருக்கும் முக்கியமாது.*

**742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழல்**
**காடு முடைய தரண்.**

**மணி நீரும், மண்ணும், மலையும், அணி நிழற்**
**காடும், உடையது - அரண்.**

*மணி = ம் + அண் + இ. கொண்டு மூடி மிக நெருங்கி நிலைத்தது. மணி = மண் + இ. மண்ணில் நிலைத்தது. மாணிக்கம், வைரம், மரகதம் போன்ற கற்களில், மிக விரும்பத்தக்க குணங்களில் ஒன்று, ஒளி தடையின்றி ஊடுருவும் தெளிவாகும்.*

*தெளிவான நீரும், திறந்த நீண்ட நிலப்பரப்பும், உயர்ந்த மலையும், அடர்ந்து நிழல் தரும் நெருங்கி வளர்ந்த காடும், ஒரு நாட்டிற்கு இயற்கையான அரண்களாகும்.*

**743. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கும்**
**அமைவரண மென்றுரைக்கும் நூல்.**

**உயர்வு, அகலம், திண்மை, அருமை, இந் நான்கின்**
**அமைவு அரண்' என்று உரைக்கும் நூல்.**

*அருமை = அரு + மை. வெளிப்படாத தன்மை. மறைவு. இரகசியம்.*

*கோட்டை மதில்சுவரின் உயரம், அகலம், உறுதியான வலிமை, பொறிகளின் இரகசியம் ஆகிய நான்கும், கோட்டைக்கு அவசியமான பண்புகள், என்று ஆய்வு நூல்கள் கூறுகின்றன.*

**744. சிறுகாப்பிற் பேரிடத் தாகி யுறுபகை**
**ஊக்க மழிப்ப தரண்.**

**சிறு காப்பின் பேர் இடத்தது ஆகி, உறு பகை**
**ஊக்கம் அழிப்பது-அரண்.**

*கோட்டையின் சிறிய பகுதியைக் காப்பதற்கு, வீரர்கள் ஓரிடத்திலேயே குவிந்து நிற்காமல், விரிந்து பரந்து பல கோணங்களில் இருந்தும் தாக்கினால், முற்றுகையிடும் பகையின் முயற்சியும் தைரியமும் அழிந்து விடும்.*

**745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்**
**நிலைக்கெளிதா நீர தரண்.**

**கொளற்கு அரிதாய், கொண் கூழ்த்து ஆகி, அகத்தார்**
**நிலைக்கு எளிது ஆம் நீரது-அரண்.**

*தாகு = குடி.*

*பெறுவதற்குக் கடினமாய் கொண்ட உணவை, கோட்டையில் உள்ளோர், கஞ்சியாக்கிக் குடித்து, நிலைமைக்கு ஏற்றாற்போல் எளிமையாய் உடுத்து, நீரைப் போல் விரைவாக இயங்க வேண்டும்.*

**746. எல்லாப் பொருளு முடைத்தா யிடைத்துதவும்**
**நல்லா ளுடைய தரண்.**

**எல்லாப் பொருளும் உடைத்தாய், இடத்து உதவும்**
**நல் ஆள் உடையது-அரண்.**

*இடைத்து = தடுத்து.*

*மாறாக, எல்லாப் பொருட்களும் இருந்தாலும், அவற்றையெல்லாம் உண்டுக் களித்து விடாமல், தடுத்துக் காத்து, உறுதியற்ற முற்றுகையின் காலம் நீண்டால், பிரித்தளிக்கும் நிர்வாகத் திறமை கொண்டவர்கள், கோட்டையைக் காக்கும் பணியில் இருக்க வேண்டும்.*

**747. முற்றியு முற்றா தெறிந்து மறைபடுத்தும்**
**பற்றற் கரிய தரண்.**

**முற்றியும், முற்றாது எறிந்தும், அறைப்படுத்தும்,**
**பற்றற்கு அரியது-அரண்.**

*அறைபடுத்து = அறு படுத்து. சுரங்கப் பாதை அமைத்தல்.*

*சுற்றி வளைத்து, யாரும் உள்ளோ வெளியோ செல்லாதவாறு பார்த்தும்; ஓரிடத்தில் குவிந்து, கோட்டையைப் பாதுகாக்கும் வீரர்களின் நிலைகளை, ஆயுதங்களை வீசி தொடர்ந்து தாக்கியும்; அகழிக்கு அடியில், சுரங்கப்பாதை அமைத்து, ஊர்ந்து வந்தும், கோட்டையைக் கைப்பற்றுவது, கடினமாய் இருக்க வேண்டும்.*

**748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்**
**பற்றியார் வெல்வ தரண்.**

**முற்று ஆற்றி முற்றியவரையும், பற்று ஆற்றி,**
**பற்றியார் வெல்வது - அரண்.**

*முற்றுகையை அறுத்து, முற்றுகையிட்ட பகைவரின் உறுதியையும் அழித்து, கோட்டையையும் நாட்டையும் கைவிடாதவர், அரணால் வெல்பவர். அல்லது, முற்றுகையிட்டு, முற்றுகையிடப்பட்டவரையும் உறுதிகுலையச் செய்து, விடாமுயற்சியுடன் உறுதியுடன் போரிடுபவர், கோட்டையை வெல்வர்.*

**749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து**
**வீறெய்தி மாண்ட தரண்.**

**முனை முகத்து மாற்றலர் சாய, வினைமுகத்து**
**வீறு எய்தி மாண்டது-அரண்.**

*கோட்டையின் சுவர்நுனிக்கு வந்த எதிரிகள், செத்து மடிய, சண்டை உக்கிரமாக இருக்கும் அவ்விடத்தில், வீரசாகசம் புரிந்து, தன்னை இழந்தாவது காப்பது, அரண்.*

**750 எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி**
**இல்லார்க ணில்லா தரண்.**

**எனை மாட்சித்து ஆகியக்கண்ணும், வினை மாட்சி**
**இல்லார்கண் இல்லது-அரண்.**

*எவ்வளவு சிறப்புடைய பண்புகளை, ஒரு கோட்டை கொண்டிருந்தாலும், துணிவுடன் போரிடும் வீரம் இல்லாதவரிடம், அக்கோட்டை இல்லாமல் போய்விடும்.*

**அரண் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*தாக்குபவர்க்கும், தங்கள் உயிர்களைப் பாதுகாக்கும் தடுப்பரண், செல்வம். பயந்து, தங்களைப் பாதுகாத்துக் கொள்பவர்க்கும் கோட்டை, செல்வம். அரண், இருவருக்கும் முக்கியமாது.*

தெளிவான நீரும், திறந்த நீண்ட நிலப்பரப்பும், உயர்ந்த மலையும், அடர்ந்து நிழல் தரும் நெருங்கி வளர்ந்த காடும், ஒரு நாட்டிற்கு இயற்கையான அரண்களாகும்.

கோட்டை மதில்சுவரின் உயரம், அகலம், உறுதியான வலிமை, பொறிகளின் இரகசியம் ஆகிய நான்கும், கோட்டைக்கு அவசியமான பண்புகள், என்று ஆய்வு நூல்கள் கூறுகின்றன.

கோட்டையின் சிறிய பகுதியைக் காப்பதற்கு, வீரர்கள் ஓரிடத்திலேயே குவிந்து நிற்காமல், விரிந்து பரந்து பல கோணங்களில் இருந்தும் தாக்கினால், முற்றுகையிடும் பகையின் முயற்சியும் தைரியமும் அழிந்து விடும்.

பெறுவதற்குக் கடினமாய் கொண்ட உணவை, கோட்டையில் உள்ளோர், கஞ்சியாக்கிக் குடித்து, நிலைமைக்கு ஏற்றாற்போல் எளிமையாய் உடுத்து, நீரைப் போல் விரைவாக இயங்க வேண்டும்.

மாறாக, எல்லாப் பொருட்களும் இருந்தாலும், அவற்றையெல்லாம் உண்டுக் களித்து விடாமல், தடுத்துக் காத்து, உறுதியற்ற முற்றுகையின் காலம் நீண்டால், பிரித்தளிக்கும் நிர்வாகத் திறமை கொண்டவர்கள், கோட்டையைக் காக்கும் பணியில் இருக்க வேண்டும்.

சுற்றி வளைத்து, யாரும் உள்ளோ வெளியோ செல்லாதவாறு பார்த்தும்; ஓரிடத்தில் குவிந்து, கோட்டையைப் பாதுகாக்கும் வீரர்களின் நிலைகளை, ஆயுதங்களை வீசி தொடர்ந்துத் தாக்கியும்; அகழிக்கு அடியில், சுரங்கப்பாதை அமைத்து, ஊர்ந்து வந்தும், கோட்டையைக் கைப்பற்றுவது, கடினமாய் இருக்க வேண்டும்.

முற்றுகையை அறுத்து, முற்றுகையிட்ட பகைவரின் உறுதியையும் அழித்து, கோட்டையையும் நாட்டையும் கைவிடாதவர், அரணால் வெல்பவர். அல்லது, முற்றுகையிட்டு, முற்றுகையிடப்பட்டவரையும் உறுதிகுலையச் செய்து, விடாமுயற்சியுடன் உறுதியுடன் போரிடுபவர், கோட்டையை வெல்வர்.

கோட்டையின் சுவர்நுனிக்கு வந்த எதிரிகள், செத்து மடிய, சண்டை உக்கிரமாக இருக்கும் அவ்விடத்தில், வீரசாகசம் புரிந்து, தன்னை இழந்தாவது காப்பது, அரண்.

எவ்வளவு சிறப்புடைய பண்புகளை, ஒரு கோட்டை கொண்டிருந்தாலும், துணிவுடன் போரிடும் வீரம் இல்லாதவரிடம், அக்கோட்டை இல்லாமல் போய்விடும்.

## 76. பொருள் செயல் வகை

*பொருள் செயல் வகை = பொருள் செயலாற்றும் விதம்.*

**751. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருளல்ல தில்லை பொருள்.**

**பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருள் அல்லது, இல்லை பொருள்.**

*பொருள் = மதிப்பு. முக்கியத்துவம். செல்வம். பொருண்மை.*

*இதுவரை, எதற்கும் மதிக்கப்படாதவரையும் கூட, மக்கள் முக்கியத்துவம் கொடுத்து, திரும்பிப் பார்த்து, கவனிப்பது, அவரிடம் உள்ள செல்வத்தால்தானே தவிர, வேறு எந்த பொருளாலும் இல்லை.*

**752. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை**
**எல்லாருஞ் செய்வர் சிறப்பு.**

**இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை**
**எல்லாரும் செய்வர், சிறப்பு.**

*பொருள் இல்லாத வறியவரை, எல்லாரும் சிறுமையாகப் பேசுவர். செல்வம் உள்ளவரை எல்லாரும் பெருமையாய், புகழ்ந்து பேசுவர்.*

**753. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளகற்றும்**
**எண்ணிய தேயத்துச் சென்று.**

**பொருள் என்னும் பொய்யா விளக்கம், இருள் அறுக்கும்-**
**எண்ணிய தேயத்துச் சென்று.**

*பொய்யா = தவறா.*

*இருள் = அறியாமை. பிறப்பு. பகை. பசி.*

*பொருள் எனும் தவறாத வெளிச்சம், பசி, பகை, அறியாமை, பிறப்பு போன்ற இருளை, நினைத்த தேசத்திற்கு சென்று, அகற்றும்.*

**754. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து**
**தீதின்றி வந்த பொருள்.**

**அறன் ஈனும்; இன்பமும் ஈனும்;-திறன் அறிந்து,**
**தீது இன்றி வந்த பொருள்.**

*நல்வினையால், யாருக்கும் தீங்கிழைக்காமல் ஈட்டிய செல்வம், தேகத்திலிருந்து பிரிந்து நிற்கும் வலிமையையும், இன்பத்தையும் அளிக்கும்.*

**755. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்**
**புல்லார் புரள விடல்.**

**அருளொடும், அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்**
**புல்லார், புரள விடல்.**

*அருள் = அர் + உள். தேகம், அகந்தையற்ற மனம். அருள் = அரு + ள். உருவற்ற மிகை. ஒளி.*

*எதிர்பார்ப்பில்லாமல், மனம்விரும்பி, பிறர்க்கு உதவும் (தரும) நோக்கத்துடனும், ஆதரவையும் நெருக்கத்தையும் குறிக்கும் எண்ணத்துடனும், செல்வந்தரும், குடிகளும் மன்னனுக்கு அளிக்கும் செல்வத்தைத் தவிர, வேறு வகையில் கிடைத்த செல்வத்தை, ஏழை எளியோர், தங்கள் விருப்பம்போல், அனுபவிக்க விட்டுவிட வேண்டும்.*

**756. உறுபொருளு முல்கு பொருளுந்த னொன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்.**

**உறு பொருளும், உல்கு பொருளும், தன் ஒன்னார்த்**
**தெறு பொருளும், வேந்தன் பொருள்.**

*உறுபொருள் = உற்ற பொருள். தன்னை வந்தடைந்த பொருள்.*

*உல்கு = உல் + க் + உ. புற அசைவால் பொருள் உள்வரல். ஏற்றுமதி இறக்குமதி சுங்கவரி.*

*வாரிசு அற்றோர் சொத்து, புதையல் போன்று, தன் உழைப்போ பிறர் உழைப்போ இல்லாமல், தன்னை வந்தடைந்த செல்வமும், ஏற்றுமதி / இறக்குமதி சுங்கவரி வருவாயும், பகைவரிடம் இருந்து கைப்பற்றப்பட்ட பொருளும், மன்னனுக்கு உரிமையான செல்வம்.*

**757. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னும்**
**செல்வச் செவிலியா லுண்டு.**

**அருள் என்னும் அன்பு ஈன் குழவி, பொருள் என்னும்**
**செல்வச் செவிலியால், உண்டு.**

*(அறிவை உள்கொண்டு) அன்பு கருவாகி, உருவாகி, எதிர்பார்ப்பின்றி அனைவரையும் நேசிக்கும், அருள் என்னும் குழந்தையைப் பெற்றாலும், அது, செல்வம் எனும் வளர்ப்புத் தாயால்தான் பாதுகாக்கப்பட்டு, நீடித்து வாழ்கின்றது.*

*செல்வம் இன்றேல், அருளும் மறையும், அன்பும் குறையும்.*

**758. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்**
**றுண்டாகச் செய்வான் வினை.**

**குன்று ஏறி, யானைப் போர் கண்டற்றால்-தன் கைத்து ஒன்று**
**உண்டாகச் செய்வான் வினை.**

*மலைமேல் ஏறிக்கொண்டு, கீழே யானைகள் சண்டையிடுவதை, தனக்கு பயமின்றியும் பாதிப்பின்றியும் பார்ப்பதுபோல், தன்னிடத்தில் மலைபோல் செல்வம் குவிந்திருக்க, தன்னால் தாக்கி அழிக்க முடியாத எதிரியை அல்லது செய்வதற்குக் கடினமான செயலை, அவனுக்கு இணையான, வலிமையான ஆட்களைக் கொண்டு, செய்து முடிக்க வேண்டும்.*

**759. செய்க பொருளைச் செறுநர்ச் செருக்கறுக்கும்**
**எஃகதனிற் கூரிய தில்.**

**செய்க பொருளை; செறுநர் செருக்கு அறுக்கும்**
**எஃகு அதனின் கூரியது இல்.**

*எதிரியின் கருவத்தை அறுத்தொழிக்க, நம்மிடம் உள்ள மிகுதியான செல்வத்தைவிட, வலிமையான கூர்மையான கத்தி வேறில்லை. எனவே கடினமாக உழைத்து, செல்வத்தைப் பெருக்க வேண்டும்.*

**760. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்**
**ஏனை யிரண்டு மொருங்கு.**

**ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு, எண் பொருள்-**
**ஏனை இரண்டும் ஒருங்கு.**

*நல்வினையால் பொருளை மிகையாய் ஈட்டியவர்க்கு, விரும்பும் மற்ற இரண்டு பொருள்களான, அறமும் இன்பமும், ஒன்றாய் வந்துத் தங்கும்.*

**பொருள் செயல் வகை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*இதுவரை, எதற்கும் மதிக்கப்படாதவரையும் கூட, மக்கள் முக்கியத்துவம் கொடுத்து, திரும்பிப் பார்த்து, கவனிப்பது, அவரிடம் உள்ள செல்வத்தால்தானே தவிர, வேறு எந்த பொருளாலும் இல்லை.*

*பொருள் இல்லாத வறியவரை, எல்லாரும் சிறுமையாகப் பேசுவர். செல்வம் உள்ளவரை எல்லாரும் பெருமையாய், புகழ்ந்துப் பேசுவர்.*

*பொருள் எனும் தவறாத வெளிச்சம், பசி, பகை, அறியாமை, பிறப்பு போன்ற இருளை, நினைத்த தேசத்திற்கு சென்று, அகற்றும்.*

*நல்வினையால், யாருக்கும் தீங்கிழைக்காமல் ஈட்டிய செல்வம், தேகத்திலிருந்து பிரிந்து நிற்கும் வலிமையையும், இன்பத்தையும் அளிக்கும்.*

*எதிர்பார்ப்பில்லாமல், மனம்விரும்பி, பிறர்க்கு உதவும் (தரும) நோக்கத்துடனும், ஆதரவையும் நெருக்கத்தையும் குறிக்கும் எண்ணத்துடனும், செல்வந்தரும், குடிகளும் மன்னனுக்கு அளிக்கும் செல்வத்தைத் தவிர, வேறு வகையில் கிடைத்த செல்வத்தை,*

ஏழை எளியோர், தங்கள் விருப்பம்போல், அனுபவிக்க விட்டுவிட வேண்டும்.

வாரிசு அற்றோர் சொத்து, புதையல் போன்று, தன் உழைப்போ பிறர் உழைப்போ இல்லாமல், தன்னை வந்தடைந்த செல்வமும், ஏற்றுமதி / இறக்குமதி சுங்கவரி வருவாயும், பகைவரிடம் இருந்து கைப்பற்றப்பட்ட பொருளும், மன்னனுக்கு உரிமையான செல்வம்.

(அறிவை உள்கொண்டு) அன்பு கருவாகி, உருவாகி, எதிர்பார்ப்பின்றி அனைவரையும் நேசிக்கும், அருள் என்னும் குழந்தையைப் பெற்றாலும், அது, செல்வம் எனும் வளர்ப்புத் தாயால்தான் பாதுகாக்கப்பட்டு, நீடித்து வாழ்கின்றது.

மலைமேல் ஏறிக்கொண்டு, கீழே யானைகள் சண்டையிடுவதை, தனக்குப் பயமின்றியும் பாதிப்பின்றியும் பார்ப்பதுபோல், தன்னிடத்தில் மலைபோல் செல்வம் குவிந்திருக்க, தன்னால் தாக்கி அழிக்க முடியாத எதிரியை அல்லது செய்வதற்குக் கடினமான செயலை, அவனுக்கு இணையான, வலிமையான ஆட்களைக் கொண்டு, செய்து முடிக்க வேண்டும்.

எதிரியின் கருவத்தை அறுத்தொழிக்க, நம்மிடம் உள்ள மிகுதியான செல்வத்தைவிட, வலிமையான கூர்மையான கத்தி வேறில்லை.

நல்வினையால் பொருளை மிகையாய் ஈட்டியவர்க்கு, விரும்பும் மற்ற இரண்டு பொருள்களான, அறமும் இன்பமும், ஒன்றாய் வந்துத் தங்கும்.

# 77. படை மாட்சி

*படை = ப் + அட் + ஐ. கொண்டது ஒட்டித்தொடர்ந்து ஐக்கியமாவது.*

*மாட்சி = ம் + ஆட்சி. உள் முரண்பாடில்லாமை.*

*படை மாட்சி = ஒன்றிணைந்த இணக்கம்.*

**761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்**
**வெறுக்கையு ளெல்லாந் தலை.**

**உறுப்பு அமைந்து, ஊறு அஞ்சா, வெல் படை - வேந்தன்**
**வெறுக்கையுள் எல்லாம் தலை.**

*உறுப்பு = இயற்கை அரண்களான ஆறுகளும், மலையும், செயற்கை அரணும்.*

*வெல் = வ் + எல். புறமும் அகமும் உயர்ந்த அதிர்வுடைய. உடல் மற்றும் மன உறுதி கொண்ட.*

*வெறுக்கை = வெறு + கை. வெறு = வ் + எற் + உ. புறமும் அகமும் உயர்ந்து பிரிந்து வெளிப்படு. பொன். போரிடு. வெறுக்கை = போரிடும் கை. மன்னன்.*

*இயற்கை அரண்களான ஆறுகளும், மலையும் அமைந்து, செயற்கை அரணான கோட்டையும் அமையப் பெற்று, காயங்களுக்கும் வலிக்கும் அஞ்சாத, உடல்வலிமையும் மனஉறுதியும் கொண்ட படைவீரர்களை உடைய வேந்தன், மன்னர்கள் எல்லாரிலும் சிறந்தவன், மன்னர்க்கு மன்னனாவான்.*

**762. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்**
**தொல்படைக் கல்லா லரிது.**

**உலைவு இடத்து ஊறு அஞ்சா வன்கண், தொலைவு இடத்து,**
**தொல் படைக்கு அல்லால், அரிது.**

*உலை = செயல்மிகை. மாற்றங்கள். ஏற்றம் இறக்கம்.*

*படைவீரர்களின் செயல் மிகுந்த போர்முனையில், காயங்களுக்கும் வலிக்கும் பயப்படாத, உடல்வலிமையும் மனஉறுதியும், தூர இடத்திலிருந்து (அல்லது தொலைந்து போன நிலத்திலிருந்து அல்லது எல்லைப் பகுதியிலிருந்து அல்லது தென்கோடி நிலத்திலிருந்து) திரட்டப்பட்ட, நீண்ட போர்வரலாறு மிக்க வீரர்களுக்கு அன்றி, பிறருக்கு அமைவது கடினம்.*

**763. ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை**
**நாக முயிர்ப்பக் கெடும்.**

**ஒலித்தக்கால் என் ஆம், உவரி எலிப்பகை?**
**நாகம் உயிர்ப்ப, கெடும்.**

*உவரி = உவர் + இ. உவர் = உ + அர். புறம் அறு / பிரி. உவரி = நிலையாக புறம் அறுப்பது. கடல்.*

*கடலலை போல் திரண்டு, எலிகள் கூட்டம் கத்திக்கொண்டு வந்தால் என்ன, நாகப்பாம்பு பயந்தா போய்விடும்? நாகப்பாம்பு, தலையைத் தூக்கிப் படம் எடுத்தால் போதும், எல்லா எலியும் ஒன்றின் மேல் ஒன்று மோதி, சிதறிக் காணாமல் போய்விடும்.*

*அதைப்போல், போரிடும் திறனற்ற கோழைகள், பெரும் எண்ணிக்கையில் ஆர்ப்பரித்து வந்தால் என்ன, வீரன் பயந்தாப் போய்விடுவான்? உடல்வலிமையும் மனஉறுதியும் கொண்ட வீரன், ஒரு அடி முன்னெடுத்து வைத்தாலே போதும், அவர்கள் அனைவரும், ஒருவரை ஒருவர் முட்டி மோதி, விழுந்து, காயமுற்று, அழிந்துப் போவர்.*

**764. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த**
**வன்க ணதுவே படை.**

**அழிவு இன்று, அறைபோகாது ஆகி, வழிவந்த**
**வன்கணதுவே-படை.**

*அழிவில் = அழிவு இல்லாமல். இறக்காமல்.*

*தறைபோகாது = ஊனமுற்று தரையில் விழாது.*

*இறக்காத, ஊனமுறாத முன்னோர்களின் வழிவந்த, உடல்வலிமையும் மனஉறுதியும் கொண்ட வீரர்களைக் கொண்டதே, படை.*

**765. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்**
**ஆற்ற லதுவே படை.**

**கூற்று உடன்று மேல்வரினும், கூடி, எதிர் நிற்கும்**
**ஆற்றலதுவே-படை.**

*பகைவருடன் சேர்ந்து, எமனே போரிட வந்தாலும், யாரென்று கவலைப்படாமல், இறப்பது உறுதியென்றாலும், ஒன்றுச் சேர்ந்து எதிர்த்து நிற்கும் ஆற்றல் உடையதே, படை.*

**766. மறமான மாண்ட வழிச்செலவு தேற்றம்**
**எனநான்கே யேமம் படைக்கு.**

**மறம்,மானம்,மாண்ட வழிச் செலவு தேற்றம்,**
**என நான்கே ஏமம், படைக்கு.**

*மறம் = ம் + அறம். துணிவு*

*மானம் = மான் + அம். மான் = ம் + ஆன். மானம் = மனம் அமைதியுறும் தன்மை. குற்ற உணர்ச்சி இல்லாமை. புறமுதுகு இடாமை.*

*தேற்றம் = த் + ஏற்றம். தேகத்தின் உயர்ச்சி. தலை நிமிர்தல். பெருமிதம்.*

*துணிவு, வீரம், படை நகர்வின்போது கட்டுப்பாடு, பெருமிதம் ஆகிய நான்கே, படையின் மிக உயர்ந்த குணங்களாகும்.*

**767. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த**
**போர்தாங்குந் தன்மை யறிந்து.**

**தார் தாங்கிச் செல்வது தானை-தலைவந்த**
**போர் தாங்கும் தன்மை அறிந்து.**

*தார் = த் + ஆர். தேகத்தை, வடிவத்தைப் பிரிப்பவர். கூட்டம். உதிரிப்படை. வாழைத்தார்.*

*தானை = த் + ஆனை. பல படைவீரர்கள் ஒன்றாய், ஒரே தேகம் போல், ஆனையைப் போல் இருப்பது படை.*

*முன்நிற்கும் எதிரியின் போர்வலிமையையும், தன்மன்னனின் போரைச் சமாளிக்கும் திறனையும் அறிந்து, அதற்கேற்றாற் போல், எதிரியின் உதிரிப்படையை அழித்து முன்னேறுவதும், தம் தார்ப்படையைத் பின்தொடர்ந்து உதவுவதும் தானைப்படை.*

**768. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை**
**படைத்தகையாற் பாடு பெறும்.**

**அடல்தகையும், ஆற்றலும், இல் எனினும், த னை**
**படைத் தகையா பாடு பெறும்.**

*அடற்றகை = அடல் + தகை. போரிடும் திறன், தகுதி.*

*படைத்தகை = படை + தகை. ஒழுங்கமைப்பு.*

*இணையாக போரிடும் உறுதியும் வலிமையும் இல்லை என்றாலும், கட்டுக்கோப்பான ஒழுக்கமுடன், களங்கமில்லா அணிவகுப்புகளுடன் இருக்கும் தன்மையைக் கண்டு, எதிரி பயந்து, சமாதானம் பேச வரலாம், பின்வாங்கலாம், தோற்றோடலாம், தோல்வியை ஒப்புக் கொள்ளலாம், வெற்றியை இழக்கலாம்.*

**769. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையும்**
**இல்லாயின் வெல்லும் படை.**

**சிறுமையும், செல்லாத் துனியும், வறுமையும்,**
**இல்லாயின் வெல்லும், படை.**

*சிறுமை = ஒழுங்கின்மை. சண்டை சச்சரவுகள்.*

*துனி = த் + உன் + இ. தேகத்தின் உள்ளே / புறத்தே நெருங்கி நிலைத்தது. பிணி. நோய்.*

*ஒழுங்கின்மையும், தீரா நோய்களும், வறுமையும் இல்லையென்றால், படை போரில் வெல்லும்.*

**770. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.**

**நிலை மக்கள் சால உடைத்துஎனினும், தானை
தலைமக்கள் இல்வழி இல்.**

*நிலையான படைகள் அதிகம் இருந்தாலும், ஒழுங்கமைத்து, ஒருங்கிணைத்துச் சிந்திக்கும் படைத் தலைவர்கள் இல்லையென்றால், வெற்றிக்கான, பதுகாப்புக்கான வழியில், படைகளை நடத்த முடியாது.*

*படைமாட்சி அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*இயற்கை அரண்களான ஆறுகளும், மலையும் அமைந்து, செயற்கை அரணான கோட்டையும் அமையப் பெற்று, காயங்களுக்கும் வலிக்கும் அஞ்சாத, உடல்வலிமையும் மனஉறுதியும் கொண்ட படைவீரர்களை உடைய வேந்தன், மன்னர்கள் எல்லாரிலும் சிறந்தவன், மன்னர்க்கு மன்னனாவான்.*

*படைவீரர்களின் செயல் மிகுந்த போர்முனையில், காயங்களுக்கும் வலிக்கும் பயப்படாத, உடல்வலிமையும் மனஉறுதியும், தூர இடத்திலிருந்து (அல்லது தொலைந்துப் போன நிலத்திலிருந்து அல்லது எல்லைப் பகுதியிலிருந்து அல்லது தென்கோடி நிலத்திலிருந்து) திரட்டப்பட்ட, நீண்ட போர்வரலாறு மிக்க வீரர்களுக்கு அன்றி, பிறருக்கு அமைவது கடினம்.*

*கடலலை போல் திரண்டு, எலிகள் கூட்டம் கத்திக்கொண்டு வந்தால் என்ன, நாகப்பாம்பு பயந்தா போய்விடும்? நாகப்பாம்பு, தலையைத் தூக்கிப் படம் எடுத்தால் போதும், எல்லா எலியும் ஒன்றின் மேல் ஒன்று மோதி, சிதறிக் காணாமல் போய்விடும். அதைப்போல், போரிடும் திறனற்ற கோழைகள், பெரும் எண்ணிக்கையில் ஆர்ப்பரித்து வந்தால் என்ன, வீரன் பயந்தா போய்விடுவான்? உடல்வலிமையும் மனஉறுதியும் கொண்ட வீரன், ஒரு அடி முன்னெடுத்து வைத்தாலே போதும், அவர்கள் அனைவரும், ஒருவரை ஒருவர் முட்டி மோதி, விழுந்து, காயமுற்று, அழிந்துப் போவர்.*

*இறக்காத, ஊனமுறாத முன்னோர்களின் வழிவந்த, உடல்வலிமையும் மனஉறுதியும் கொண்ட வீரர்களைக் கொண்டதே, படை.*

*பகைவருடன் சேர்ந்து, எமனே போரிட வந்தாலும், யாரென்று கவலைப்படாமல், இறப்பது உறுதியென்றாலும், ஒன்று சேர்ந்து எதிர்த்து நிற்கும் ஆற்றல் உடையதே, படை.*

*துணிவு, வீரம், படை நகர்வின்போது கட்டுப்பாடு, பெருமிதம் ஆகிய நான்கே, படையின் மிக உயர்ந்த குணங்களாகும்.*

*முன்நிற்கும் எதிரியின் போர்வலிமையையும், தன்மன்னனின் போரைச் சமாளிக்கும் திறனையும் அறிந்து, அதற்கேற்றாற் போல், எதிரியின் உதிரிப்படையை அழித்து முன்னேறுவதும், தம் தார்ப்படையைத் பின்தொடர்ந்து உதவுவதும் தானைப்படை.*

*இணையாக போரிடும் உறுதியும் வலிமையும் இல்லை என்றாலும், கட்டுக்கோப்பான ஒழுக்கமுடன், களங்கமில்லா அணிவகுப்புகளுடன் இருக்கும் தன்மையைக் கண்டு, எதிரி பயந்து, சமாதானம் பேச வரலாம், பின்வாங்கலாம், தோற்றோடலாம், தோல்வியை ஒப்புக் கொள்ளலாம், வெற்றியை இழக்கலாம்.*

*ஒழுங்கின்மையும், தீரா நோய்களும், வறுமையும் இல்லையென்றால், படை போரில் வெல்லும்.*

*நிலையான படைகள் அதிகம் இருந்தாலும், ஒழுங்கமைத்து, ஒருங்கிணைத்துச் சிந்திக்கும் படைத் தலைவர்கள் இல்லையென்றால், வெற்றிக்கான, பதுகாப்புக்கான வழியில், படைகளை நடத்த முடியாது.*

# 78. படைச் செருக்கு

*படைச்செருக்கு = படை + செருக்கு. படை கருவம்.*

**771. என்னைமு னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின்ற வர்.**

**என்னை முன் நில்லன்மின்-தெவ்விர்! - பலர், என்னை
முன் நின்று கல் நின்றவர்.**

*மின் = ம் + இல். இருக்காதே.*

*எவ்விர் = எவ் + இர். எவ்வாறு இருக்கின்றனர்.*

*கன்னின்றவர் = கல் + நின்றவர். பயத்தால் கல்லாய் உறைந்து போனவர்.*

*என்முன் இன்று நிற்காதே, என்முன் நின்று, பயத்தால் கல்லாய் உறைந்து போன, இறந்து கல்லாய் விறைத்துப் போன பலபேர், எவ்வாறு, எங்கு இருக்கின்றனர் எனத் தெரியுமா?*

**772. கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.**

**கான முயல் எய்த அம்பினில், யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது.**

*காட்டு முயலைத் தைத்த, குறிதவறா அம்பைக் காட்டிலும், யானைக்கு குறிதவறிய வேலைக் கையில் ஏந்துவது, இனிமையாகும். வலிமையற்றவருடன் போரிடுவதைவிட, வலிமையானவருடன் போரிடுவதே சிறப்பானது.*

**773. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு.**

**பேர் ஆண்மை என்ப, தறுகண்; ஒன்று உற்றக்கால்,
ஊராண்மை மற்று அதன் எஃகு.**

*பேராண்மை = பெரிய + ஆண்மை. உயர்ந்த ஆளுமை.*

*தறுகண் = த் + அறு + கண். தேகத்தை அறுக்கும் கண். கண்ணாலேயே எதிரியின் வீரத்தை அழிக்கும் பார்வை.*

*ஊராண்மை = ஊர் + ஆண்மை. ஊரை ஆளுந்தன்மை. நாடாளுந்தன்மை.*

*கண்ணாலேயே எதிரியின் வீரத்தை அழிக்கும் பார்வையை உடையவன், உயர்ந்த ஆளுமை உடையவன் என்பர். அப்பேராண்மை,*

*தன்னை அடைந்து விட்டால், அதன் உறுதிப்படுதலே நாடளுந்தன்மை தரும், அரசனாக இயலும்.*

**774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும்.**

**கை வேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய் வேல் பறியா, நகும்.**

*கையில் இருந்த வேலை, யானையின் உடல்மேல் எறிந்து, அதை வலியாலும் பயத்தாலும் ஓடவிட்டு, வேறொரு வேலை எடுக்க வருபவன், தன்னுடைய உடலில் தைத்த வேலைப் பிடுங்காமல், மெல்ல சிரிப்பான்.*

*யானைக்கு வலித்த வேல், தனக்கு வலிக்கவில்லையே என்று பெருமிதம் கொள்வான்.*

**775. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின்**
**ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.**

**விழித்த கண் வேல்கொண்டு எறிய, அழித்து இமைப்பின்,**
**ட்டு அன்றோ, வன்கணவர்க்கு?**

*வழித்து = இயல்பாய். அனிச்சையாய்.*

*ஓட்டு = புறமுதுகு காட்டித் தோற்பது.*

*விரிந்துக் கோபம் கக்கிய கண்களை நோக்கி, பகைவன் வேலை வீச, அனிச்சையாய் இமைத்தாலும், புறமுதுகைக் காட்டி ஓடியது போலன்றோ, மன உறுதி படைத்த வீரருக்கு.*

**776. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்**
**வைக்குந்தன் னாளை யெடுத்து.**

**விழுப்புண் படாத நாள் எல்லாம் வழுக்கினுள்**
**வைக்கும், தன் நாளை எடுத்து.**

*வீரக்காயங்கள் படாத நாளையெல்லாம், வீணாகிப் போன நாள்கணக்கில் சேர்த்துவிட்டு, இன்றாவது வீரக்காயம் படநேரிடாதா என்று, நாளைத் துவக்குவான், உடல்வலிமை படைத்த வீரன்.*

**777. சுழலுமி சைவேண்டி வேண்டா வுயிரார்**
**கழல்யாப்புக் காரிகை நீர்த்து.**

**சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்**
**ழல் யாப்புக் காரிகை நீர்த்து.**

*நாடெல்லாம், உலகெல்லாம், காலமெல்லாம் பரவும் இனிய புகழ்ச் சொற்களைப் பெற வேண்டி, தன் உயிரான, கழல் பிணைப்பைப் போன்ற, கருமைநிற விரிந்த கூந்தலையுடைய பெண்துணையை, வேண்டாம் என்று நீங்குவார், வீர சாகசம் புரியும் வீரர்.*

**778. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்**
**செறினுஞ்சீர் குன்ற லிலர்.**

**உறின், உயிர் அஞ்சா மறவர், இறைவன்**
**செறினும், சீர் குன்றல் இலர்.**

*போர் வந்துவிட்டால், மன்னன் இளவயது மற்றும் குடும்ப நலனையெண்ணி, கோபத்துடன் போருக்குச் செல்ல வேண்டாம் என்று தடுத்தாலும், உயிருக்கு அஞ்சாத மறவர், போர்ச் செயலை, ஒருநாளும், குறைக்க மாட்டார்கள்.*

**779. இழைத்த திகவாமற் சாவாரை யாரே**
**பிழைத்த தொறுக்கிற் பவர்.**

**இழைத்தது இகவாமைச் சாவாரை, யாரே,**
**பிழைத்தது ஒறுக்கிற்பவர்?**

*தன் உடலிலிருந்தும் உயிரிலிருந்தும் பிரிக்க முடியாமல் ஒன்றிவிட்ட சபதத்தை, விடுபட்டு நிற்காமல், நிறைவேற்றி விட்டு இறக்கும் வீரரை, அவர் சபதம் இடாமல் போன ஒன்றிற்காக, யாரால் தண்டிக்க முடியும்?*

**780. புரந்தார்க ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா**
**டிரந்துகோட் டக்க துடைத்து.**

**புரந்தார் கண் நீர் மல்கச் சாகிற்பின், சாக்காடு**
**இரந்து கோள்-தக்கது உடைத்து.**

*புரந்தார் = புரம் + த் + ஆர். புரம் = ப் + உரம். கொள்ளும் வலிமை. புரந்தார் = தேகவலிமை மிகுந்தவர். மன்னர். படைத்தலைவன். வீரன்.*

*தான் செய்த வீரசாகசத்தால் நாட்டிற்குண்டான பலன்கள் அறிந்து, தான்பட்ட துன்பங்களுக்காக இரங்கி, தன்னை ஒரேயடியாய் இழக்கப்போகிறோமே என வருந்தி, மன்னன், படைத்தலைவன், பிற வீரர் கண்ணில் நீர் நிறைய, தான் இறப்பதாக இருந்தால், அத்தகைய சாவு, விரும்பி கெஞ்சிப் பெற்றுக் கொள்ளத் தக்கதாகும்.*

**படைச்செருக்கு அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*என்முன் இன்று நிற்காதே, என்முன் நின்று, பயத்தால் கல்லாய் உறைந்து போன, இறந்து கல்லாய் விறைத்துப் போன பலபேர், எவ்வாறு, எங்கு இருக்கின்றனர் எனத் தெரியுமா?*

காட்டு முயலைத் தைத்த, குறிதவறா அம்பைக் காட்டிலும், யானைக்கு குறிதவறிய வேலைக் கையில் ஏந்துவது, இனிமையாகும். வலிமையற்றவருடன் போரிடுவதைவிட, வலிமையானவருடன் போரிடுவதே சிறப்பானது.

கண்ணாலேயே எதிரியின் வீரத்தை அழிக்கும் பார்வையை உடையவன், உயர்ந்த ஆளுமை உடையவன் என்பர். அப்பேராண்மை, தன்னை அடைந்து விட்டால், அதன் உறுதிப்படுதலே நாடளுந்தன்மை தரும், அரசனாக இயலும்.

கையில் இருந்த வேலை, யானையின் உடல்மேல் எறிந்து, அதை வலியாலும் பயத்தாலும் ஓடவிட்டு, வேறொரு வேலை எடுக்க வருபவன், தன்னுடைய உடலில் தைத்த வேலைப் பிடுங்காமல், மெல்ல சிரிப்பான்.

விரிந்து கோபம் கக்கிய கண்களை நோக்கி, பகைவன் வேலை வீச, அனிச்சையாய் இமைத்தாலும், புறமுதுகைக் காட்டி ஓடியது போலன்றோ, மன உறுதி படைத்த வீரருக்கு.

வீரக்காயங்கள் படாத நாளையெல்லாம், வீணாகிப் போன நாள்கணக்கில் சேர்த்துவிட்டு, இன்றாவது வீரக்காயம் படநேரிடாதா என்று, நாளைத் துவக்குவான், உடல்வலிமை படைத்த வீரன்.

நாடெல்லாம், உலகெல்லாம், காலமெல்லாம் பரவும் இனிய புகழ்ச் சொற்களைப் பெற வேண்டி, தன் உயிரான, கழல் பிணைப்பைப் போன்ற, கருமைநிற விரிந்த கூந்தலையுடைய பெண்துணையை, வேண்டாம் என்று நீங்குவார், வீர சாகசம் புரியும் வீரர்.

போர் வந்துவிட்டால், மன்னன் இளவயது மற்றும் குடும்ப நலனையெண்ணி, கோபத்துடன் போருக்குச் செல்ல வேண்டாம் என்று தடுத்தாலும், உயிருக்கு அஞ்சாத மறவர், போர்ச் செயலை, ஒருநாளும், குறைக்க மாட்டார்கள்.

தன் உடலிலிருந்தும் உயிரிலிருந்தும் பிரிக்க முடியாமல் ஒன்றிவிட்ட சபதத்தை, விடுபட்டு நிற்காமல், நிறைவேற்றி விட்டு இறக்கும் வீரரை, அவர் சபதம் இடாமல் போன ஒன்றிற்காக, யாரால் தண்டிக்க முடியும்?

தான் செய்த வீரசாகசத்தால் நாட்டிற்குண்டான பலன்கள் அறிந்து, தான்பட்ட துன்பங்களுக்காக இரங்கி, தன்னை ஒரேயடியாய் இழக்கப்போகிறோமே என வருந்தி, மன்னன், படைத்தலைவன், பிற வீரர் கண்ணில் நீர் நிறைய, தான் இறப்பதாக இருந்தால், அத்தகைய சாவு, விரும்பி கெஞ்சிப் பெற்றுக் கொள்ளத் தக்கதாகும்.

# 79. நட்பு

*நட்பு = ன் + அட் + ப் + உ. நெருங்கி ஒட்டித் தொடர்ந்து கொண்ட உடல், மனம், எண்ணம், பொருள் வெளிப்படுதல்.*

**781. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.**

**செயற்கு அரிய யா உள, நட்பின்?-அதுபோல்
வினைக்கு அரிய யா உள, காப்பு?**

*தகுந்தவரை நட்பாக்கிக் கொள்வதைவிட கடினமானது, வாழ்வில், வேறு என்ன இருக்கின்றது? அதைப்போல், அமைதியாக ஒரு நாட்டைக் காப்பதைவிட / ஆள்வதைவிட கடினமானது, உலகில், வேறு என்ன இருக்கின்றது?*

*இரண்டு நபர்களுக்கு இடையிலான உறவுகள், தாய் தந்தை, தாய் மகன், தாய் மகள், தந்தை மகன், தந்தை மகள், அண்ணன் தம்பி, அக்காள் தங்கை போன்ற நெருங்கிய இரத்த உறவுகளிடையே கூட இணக்கம் எளிதாய் ஏற்பட்டு தொடர்வதில்லை.*

*இயல்பில், சாரத்தில், மனிதன் தன்னலத் தனியன். ஆனால், அவனின் தேவைகளும், வாழ்வின் சூழல்களும், அவனைப் பிறருடன் சேர்ந்து வாழ கட்டாயப்படுத்துகின்றன. அவனுடைய அறிவின் வளர்ச்சியைப் பொறுத்து, வலிமையைப் பொறுத்து, ஆளுமையைப் பொறுத்து, அனுபவத்தால் விளைந்த பக்குவத்தைப் பொறுத்து, பிறர் இன்புறுவதிலும் தான் இன்புறுவதைக் கண்டு, தன்னலங்களை, பெண்துணைக்காகவும், குழந்தைகளுக்காகவும், பெற்றோருக்காகவும் இழக்க முன்வருகிறான்.*

*புரிந்துணர்வால், அந்த வட்டம் பெரியதாக ஆக, பிற விரிந்த உறவுகளுக்காகவும், உற்பத்தியில் உடன் சேர்ந்து ஈடுபடுபவர்களுக்காகவும், அக்கம் பக்கத்தினருக்காகவும், சமூக நண்பர்களுக்காகவும், பொது மக்களுக்காகவும், கடைசியில் உலக மக்களுக்காகவும், பிரபஞ்ச உயிர்களுக்காகவும் தன் நலங்களை இழக்க முன்வருகிறான். பிறருக்காக, தன்னலங்களை மட்டுமின்றி, தன்னையே கூட இழக்க முன்வருகிறான்.*

*அதற்கு தேவையான குணங்களான அறிவும், ஆளுமையும், பக்குவமும், தியாக மனப்பான்மையும் ஒரு சிலருக்கே அமைகின்றன. அவர்களே, அடிப்படையில், நட்புக்கும் உரியவர்கள். நட்பு இருவழிப் பாதைகளைக் கொண்டது. நட்பில் ஈடுபடும் இருவருமே அத்தகைய குணங்களை ஒருவர்பால் மற்றொருவர் வெளிப்படுத்த வேண்டும். நட்பு, மெல்லிய சமநிலையிலும், நுண்ணிய கண்ணோட்டத்தாலும் இயங்குவது. இருவரின் உணர்ச்சி, அறிவு, செயல், பொருள் பரிமாற்றத்தால், ஈடுகட்டுதலால் நட்பு நிலைத்து நீடிக்கின்றது.*

*நட்பில், நலன்கள் சமநிலையால் நீடித்து நிலைப்பதைப் போல், நாட்டின் பாதுகாப்பும், அரசனுக்கும் மக்களுக்கும் இடையிலான*

*சமநிலையால் நீடித்து நிலைக்கும். மக்களுக்கு அரசு செய்யும் நலன்களைப் பொறுத்தே, மக்களும் அரசின் நலன்களுக்கு ஒத்துழைப்பர். இல்லையென்றால் உட்பகையும் உருவாகும், வெளிப்பகையும் ஊடுருவும். நட்பிற்குத் தேவையான குணங்களான அறிவும், ஆளுமையும், பக்குவமும், தியாக மனப்பான்மையும் நாட்டில் வளர்ந்தால், வளர்க்கப்பட்டால், பாதுகாப்பும், அமைதியும் நீடித்து நிலைக்கும்.*

**782. நிரைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்**
**பின்னீர பேதையார் நட்பு.**

**நிறை நீர, நீரவர் கேண்மை, பிறை; மதிப்**
**பின் நீர, பேதையார் நட்பு.**

*நிரைநீர = நிரை + நீர. (கிணற்றில் ஊற்றெழும்பி) நிறைகின்ற நீர்போல. ஒளி பரவி முழுமதியாவது போல்.*

*நீரவர் = நீர் + அவர். நீர்போன்று, இயல்பான, தடையில்லா எண்ண ஓட்டத் தன்மையை உடையவர். நீர்போல் தெளிந்தவர். ஞானியர். அறிஞர்.*

*கேண்மை = கேள் + மை. கேட்கும் தன்மை. கேட்கும் தன்மை என்றால், கேட்டதைக் கொடுக்கும் தன்மை, என்று பொருள். நிலைமையைக் கூறினாலேயே போதும், வாய்திறந்து 'தா' என கேட்க வேண்டியதில்லை. அறிவோ, பொருளோ, வேறெதுவோ, நிலையறிந்து, கேட்காமலே கொடுப்பதே நட்பு. நட்பாயினும், 'ஈ' என இரப்பது, சிறுமை. 'கொடு' என கேட்க வைப்பதோ, கொடுமை. கேள் = க் + ஏள். மெய் மிக உயர்ந்து மிகையாதல், ஒளியாதல். ஒலியால் ஒளியாதல். செவியின் ஒலியால், அகத்தின் ஒளியாதல். கேண்மை = க் + ஏண் + மை. மெய் மிக உயர்ந்து மிக நெருங்கிய தன்மை.*

*பிறை = ப் + இறை. இறை = இற் + ஐ. நிலையாய்ப் பிரிந்து ஐக்கியமாதல். சிதறல். பரவி இல்லாமல் போதல். பிறை = கொண்டது சிதறல். இல்லாமை. இன்மை. இருளின் சிதறல். ஒளியின் சிதறல்.*

*மதி = ம் + அதி. அமைதியின் மிகை. அறிவும், தெளிவும் மனத்தின் / மூளையின் மிகுந்த அமைதியில் பெறுவதே.*

*நீர = ஆவியாக.*

*பேதை = ப் + ஏ + தை. வெளியை / அருவத்தை மிக உயர்த்தி வடிவத்தோடு இணைப்பது. குழப்பம். முரண்பாடு. தெளிவின்மை. உறுதியின்மை.*

*நீரைப்போன்று தெளிவான அறிஞருடனான நட்பு (வற்றிய கிணற்றில் ஊற்றெழும்பி) நிறைகின்ற நீர்போன்று பயனுடையது. தெளிவில்லாதவர்களின் நட்பு, பிறமதிக்குப் பின்னால் வரும், அமாவாசையைப் போன்று இருண்டு, வெறுமையாகிப் பயனற்றுப் போவது.*

**783. நவிறொறும் நூனயம் போலும் பயிறொறும்**
**பண்புடை யாளர் தொடர்பு.**

**நவில்தொறும் நூல் நயம் போலும்-பயில்தொறும்,**
**பண்பு உடையாளர் தொடர்பு.**

*நயம் = ன் + அய் + அம். நெருக்கமாக இருக்கும் தன்மை. நுண்மை.*

*எண்ணத்தைப் பற்றி, நூலைப் பற்றிப் பேசப் பேச, நுண்மையாவதைப் போல், பழகப் பழக, பண்புடையவர்களின் நட்பும், கண்ணோட்டமும் மிகும்.*

**784. நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்**
**மேற்சென் றிடித்தற் பொருட்டு.**

**நகுதற்பொருட்டு அன்று, நட்டல்; மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற்பொருட்டு.**

*நகு = ன் + அக் + உ. நெருக்கம் உயிரோடும் மெய்யோடும் உள்ளாதல் / வெளிப்படுதல். சிரித்தல்.*

*நட்டன் = ன் + அட் + அன். நெருக்கமாய் ஒட்டித் தொடர்பவன். நண்பன்.*

*மிகுதி = அளவை மீறல்.*

*நண்பன் உடன் இருப்பது, சிரித்துப் பேசுவதற்காக அல்ல. எதிலாயினும், அளவை மீறினால், அருகில் சென்று, தோளை இடிப்பதுபோல், கண்டித்துத் தடுப்பதற்குத்தான்.*

**785. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்**
**நட்பாங் கிழமை தரும்.**

**புணர்ச்சி, பழகுதல், வேண்டா; உணர்ச்சிதான்**
**நட்பு ஆம் கிழமை தரும்.**

*புணர்ச்சி = ப் + உணர்ச்சி. உடல் உணர்ச்சி. உடல் நெருக்கம். மேலோட்டமான அனுபவம்.*

*உணர்ச்சி = உணர் + சி. உணர் = உள் + அர். உள்ளிருந்து பிரிவது. உணர்ச்சி = உள்ளிருந்து பிரியும் இயக்கம். ஆழ்ந்த அனுபவம்.*

*கிழமை = க் + இழ் + அமை. மெய் நிலையாய் ஆழத்தில் பொருந்துதல். பொருண்மை நிலையாய் ஆழ்ந்து அமைதல். குன்றாத செல்வம். மெய்யுணர்வு. ஞானம்.*

*மேலோட்டமான அனுபவத்தைத் தரும், உடல்கள் நெருங்க பழக வேண்டாம், மனங்கள் நெருங்கி, ஒருவர் நிலையை மற்றவர், தனது நிலையாய் உணரும் நுண்மை, நட்பின் மூலம், ஆழ்ந்த அனுபவமான மெய்யுணர்வைத் தரும்.*

**786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்**
**தகநக நட்பதே நட்பு.**

**முகம் நக, நட்பது நட்பு அன்று; நெஞ்சத்து**
**அகம் நக, நட்பது-நட்பு.**

*முகம் மற்றும் வாய் சிரிக்க, மேலோட்டமாக, பேசிப் பழகுவது நட்பல்ல. மனம் உள்ளிருந்து மலர, ஆழ்ந்து, நிலைமையை உணர்ந்து, தேவையை அறிந்து, உதவுவதே உண்மையான நட்பு.*

**787. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்**
**அல்ல லுழப்பதா நட்பு.**

**அழிவினவை நீக்கி, ஆறு உய்த்து, அழிவின்கண்**
**அல்லல் உழப்பது ஆம்-நட்பு.**

*உழப்பு = உழ் + அப்பு. உள் / புற ஆழத்தில் நீர். மனக்கண்ணீர். வியர்வை. உழைப்பு. உழப்பு = உழ் + அப் + உ. மன / புற ஆழத்தில் கொண்டு வெளிப்படுவது. வருத்தம். முயற்சி. உழைப்பு.*

*நண்பனுக்கு அழிவை உருவாக்கக் கூடினவற்றைத் தடுத்து விலக்கி, அவனைச் சரியான வழியில் நடக்கச் செய்து, அவனுக்கு அழிவு ஏற்பட்டால் நேரும் துன்பத்தைக் கண்டு, மனம் வருந்திக் கண்ணீர் வடிப்பதும், துன்பம் போக்குவதும் நட்பாகும்.*

**788. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே**
**இடுக்கண் களைவதா நட்பு.**

**உடுக்கை இழந்தவன் கை போல, ஆங்கே**
**இடுக்கண் களைவது ஆம்-நட்பு.**

*உடுக்கை = உட் + உ + கை. புறத்தே ஒட்டித் தொடரும் பிரிவு.*

*இடுக்கண் = வினையின் விளைவு. ஊழின் கழிவு. நிலையாக உள்நோக்கிய பார்வை. துன்பம்.*

*உடலிலிருந்து உடை நழுவுவதை உணர்ந்து, அனிச்சையாக, விரைவாக, கை சென்று, சரிசெய்து, மானத்தைக் காப்பது போல், நண்பர் ஒருவருக்கு, பழைய தீவினையால், ஊழால் வருகின்ற அவமானத்தை, துன்பத்தை உணர்ந்து, உடனடியாக சென்று, துடைத்தெறிவது, நட்பாகும்.*

**789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி**
**ஒல்லும்வா யூன்று நிலை.**

**'நட்பி வீற்றிருக்கை யாது?' எனின், கொட்பு இன்றி**
**ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.**

கொட்பு = மாற்றம். கொட்பு = கொள்பு = பெறுதல். பிரதிபலன்.

நட்பின் சிகரம், சிம்மாசனம், எதுவென்றால், எந்த எதிர்பார்ப்பும், பிரதிபலனும் இல்லாமல், முடிகின்ற எல்லா வகையிலும், நண்பர் துன்பப்படும் போதெல்லாம் தாங்கி, நிற்க உதவும் உறுதிதான்.

**790. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னும் நட்பு.**

**'இனையர், இவர் எமக்கு; இன்னம் யாம்' என்று
புனையினும், புல்லென்னும்-நட்பு.**

இவர் என்னுடைய இனத்தவர், இவர்க்கு நான் இந்த உறவினன் என்று கற்பனையாக, பொய்யாக, வேடிக்கையாக சொன்னாலும், அவர்தம் நட்பு சிறுமையாகி விடும்.

நட்பு அதிகாரப் பொருள் தொகுப்பு:

தகுந்தவரை நட்பாக்கிக் கொள்வதைவிட கடினமானது, வாழ்வில், வேறு என்ன இருக்கின்றது? அதைப்போல், அமைதியாக ஒரு நாட்டைக் காப்பதைவிட / ஆள்வதைவிட கடினமானது, உலகில், வேறு என்ன இருக்கின்றது?

நீரைப்போன்று தெளிவான அறிஞருடனான நட்பு (வற்றிய கிணற்றில் ஊற்றெழும்பி) நிறைகின்ற நீர்போன்று பயனுடையது. தெளிவில்லாதவர்களின் நட்பு, பிறமதிக்குப் பின்னால் வரும், அமாவாசையைப் போன்று இருண்டு, வெறுமையாகிப் பயனற்றுப் போவது.

எண்ணத்தைப் பற்றி, நூலைப் பற்றிப் பேசப் பேச, நுண்மையாவதைப் போல், பழகப் பழக, பண்புடையவர்களின் நட்பும், கண்ணோட்டமும் மிகும்.

நண்பன் உடன் இருப்பது, சிரித்துப் பேசுவதற்காக அல்ல. எதிலாயினும், அளவை மீறினால், அருகில் சென்று, தோளை இடிப்பதுபோல், கண்டித்துத் தடுப்பதற்குத்தான்.

மேலோட்டமான அனுபவத்தைத் தரும் உடல்கள் நெருங்க பழக வேண்டாம், மனங்கள் நெருங்கி, ஒருவர் நிலையை மற்றவர், தனது நிலையாய் உணரும் நுண்மை, நட்பின் மூலம், ஆழ்ந்த அனுபவமான மெய்யுணர்வைத் தரும்.

முகம் மற்றும் வாய் சிரிக்க, மேலோட்டமாக, பேசிப் பழகுவது நட்பல்ல. மனம் உள்ளிருந்து மலர, ஆழ்ந்து, நிலைமையை உணர்ந்து, தேவையை அறிந்து, உதவுவதே உண்மையான நட்பு.

நண்பனுக்கு அழிவை உருவாக்கக் கூடினவற்றைத் தடுத்து விலக்கி, அவனைச் சரியான வழியில் நடக்கச் செய்து, அவனுக்கு அழிவு ஏற்பட்டால் நேரும் துன்பத்தைக் கண்டு, மனம் வருந்திக் கண்ணீர் வடிப்பதும், துன்பம் போக்குவதும் நட்பாகும்.

உடலிலிருந்து உடை நழுவுவதை உணர்ந்து, அனிச்சையாக, விரைவாக, கை சென்று, சரிசெய்து, மானத்தைக் காப்பது போல், நண்பர் ஒருவருக்கு, பழைய தீவினையால், ஊழால் வருகின்ற அவமானத்தை, துன்பத்தை உணர்ந்து, உடனடியாகச் சென்று, துடைத்தெறிவது, நட்பாகும்.

நட்பின் சிகரம், சிம்மாசனம், எதுவென்றால், எந்த எதிர்பார்ப்பும், பிரதிபலனும் இல்லாமல், முடிகின்ற எல்லா வகையிலும், நண்பர் துன்பப்படும் போதெல்லாம் தாங்கி, நிற்க உதவும் உறுதிதான்.

இவர் என்னுடைய இனத்தவர், இவர்க்கு நான் இந்த உறவினன் என்று கற்பனையாக, பொய்யாக, வேடிக்கையாகச் சொன்னாலும், அவர்தம் நட்பு சிறுமையாகி விடும்.

## 80. நட்பாராய்தல்

*நட்பாராய்தல் = நட்பு + ஆராய்தல். யாரிடம் நட்பு கொள்வது என்று அறிந்து, சிந்தித்து, முடுவெடுத்தல்.*

**791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவற்கு.**

**நாடாது நட்டலின் கேடு இல்லை; நட்டபின்,
வீடு இல்லை, நட்பு ஆள்பவர்க்கு.**

*வீடு = வ் + ஈடு. புறம் அகம் சமம். முழுமை. அமைதி.*

*வேறொரு நாட்டு மன்னனை, ஆராயாமல் நட்பாக்கிக் கொள்வதைப் போன்று, தனக்கும் தன்நாட்டிற்கும் அழிவைத் தருவது, வேறெதுவும் இல்லை. அத்தகைய நட்பை ஏற்படுத்தியப்பின், அதைக் காப்பாற்றப்படும் பாட்டால், தனக்கு நிம்மதி, அமைதி என்பதே இல்லை.*

**792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.**

**ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை, கடைமுறை,
தான்சாம் துயரம் தரும்.**

*கடைமுறை = இழிவான வகை.*

*ஒரு மன்னனைப்பற்றி ஆராய்ந்து, மீண்டும் தன் அமைச்சர், நண்பர், அறிஞர் பலருடன் ஆராய்ந்து, நன்மையறிந்து, ஏற்படுத்திக் கொள்ளாதவனின் நட்பு, இழிவான வகையில், தான் சாகும்படியான துன்பத்தைத் தந்து விடும்.*

**793. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு.**

**குணனும், குடிமையும், குற்றமும் குன்றா
இனனும், அறிந்து யாக்க நட்பு.**

*ஒரு மன்னனின் குணங்கள், அவனுடைய குடும்பப்பிறப்பு, அவனது குற்றம் குறைகள், அவனை நெருங்கிய அமைச்சர், அறிஞர், நண்பர், நீங்காத சுற்றம் ஆகியனவற்றை, சந்தேகம் தீர ஆராய்ந்து, தனக்கும் தன்நாட்டிற்கும், அந்நட்பால், நன்மை பயக்குமாயின், தன் நட்புக்கு ஏற்றவனாயின், அவனை நட்பாக்கிக் கொள்ள வேண்டும்.*

**794. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்**
**கொடுத்துங் கொளவேண்டு நட்பு.**

**குடிப் பிறந்து, தன்கண் பழி நாணுவானைக்**
**கொடுத்தும் கொளல் வேண்டும், நட்பு.**

*நல்ல குடும்பத்தில் பிறந்து, தன்னிடத்தில் குற்றம், களங்கம், பழி, பாவம் போன்றவை சேர்ந்து விடுமோ என்று அஞ்சி, கவனமாய் இருப்பவனை, பொன், பொருள், பெண் என்று, எதையாயினும் கொடுத்து, நட்பாக்கிக் கொள்ள வேண்டும்.*

**795. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய**
**வல்லார்நட் பாய்ந்து கொளல்.**

**அழச் சொல்லி, அல்லது இடித்து, வழக்கு அறிய**
**வல்லார் நட்பு ஆய்ந்து கொளல்.**

*நட்பாக்கிக் கொள்ளக் கருதும், தன்னிலும் எளிய மன்னனை, அவன் அழும் அளவுக்கு பயமுறுத்தி அல்லது கோபம் வரும் அளவுக்கு வெறுப்பேற்றி, அவனுடைய இயல்பான பழக்கமான எதிர்வினையின் மூலம், கண்ணோட்டம் மூலம், நட்பின் தன்மையை, வலிமையான மன்னன், ஆய்ந்து அறிந்து கொள்ள வேண்டும்.*

**796. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை**
**நீட்டி யளப்பதாங் கோல்.**

**கேட்டினும் உண்டு, ஓர் உறுதி- கிளைஞரை**
**நீட்டி அளப்பது ஓர் கோல்.**

*கிளைஞர் = நண்பர்.*

*நண்பர்களின் உறுதியை, எவ்வளவு தூரம் தனக்கு நெருக்கமாய் உள்ளனர் அல்லது எவ்வளவு தூரம் தன்னிலிருந்து விலகி நிற்கின்றனர் என்பதை சந்தேகமில்லாமல் உறுதியாய் அளந்திட, அறிந்திட, தனக்கு எதிராய் ஒரு போர் வருவதைக் காட்டிலும், வேறோர் சந்தர்ப்பம் உருவாவது இல்லை.*

**797. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்**
**கேண்மை யொரீஇ விடல்.**

**ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்**
**கேண்மை ஒரீஇ விடல்.**

*ஊதியம் = ஊத் + இயம். விரிந்து பரவும் தேகத்தின் / வடிவத்தின் தன்மை. விளைச்சல், வருமானம், வளர்ச்சி.*

*ஒரீஇ = ஒர் + ஈ + இ. ஒன்றை தருதல் நிலையாக. முழுமையாக ஒரேயடியாய் விட்டுவிடுதல். ஒருவற்கு விளைச்சல், வருமானம், வளர்ச்சி என்பது, உறுதியற்றவர்களின் நட்பை, ஒட்டுமொத்தமாய், ஒரேயடியாய் விட்டுவிடுவதுதான். இல்லையென்றால், தன் வருவாய் எல்லாம், அந்த உறுதியற்றவர்களின் நட்பால் விளைந்த சிக்கல்களைத் தீர்க்கவே தீர்ந்துப் போய்விடும், செல்வமும், வளர்ச்சியும் இருக்காது.*

**798. உள்ளற்க உள்ளஞ் சிறுகுப கொள்வற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.**

**உள்ளற்க, உள்ளம் சிறுகுவ, கொள்ளற்க,
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.**

*ஆற்றறுப்பார்= ஆற்றை + அறுப்பார். வழியை அழிப்பவர். துரோகி.*

*மனத்தைக் குறுகச் செய்பனவற்றை, சிறுமையை, நினைக்கக் கூடாது. அதைப்போல், எதிரி அல்லது சிக்கல், தன்னைத் துரத்தும் காலத்தில், தன்னுடைய வழியை அழித்து, தன்னைப் போக விடாமல் தடுக்கக்கூடிய நபர்களை, நண்பர்களாகக் கொள்ளக் கூடாது.*

**799. கெடுங்காலை கைவிடுவான் கேண்மை யடுங்காலை
உள்ளினு முள்ளஞ் சுடும்.**

**கெடும் காலைக் கைவிடுவார் கேண்மை, அடும் காலை
உள்ளினும், உள்ளம் சுடும்.**

*அடும் = அட் + உ + ம். உயிரை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படும்.*

*தனக்கு போரால் அழிவு வந்த காலத்தில், தன்னைக் கைவிட்டவனின் நட்பை, சாகும் சமயத்தில் நினைத்தாலும்கூட, மனம் சுடும், நோகும், வலிக்கும்.*

**800. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு.**

**மருவுக, மாசு அற்றார் கேண்மை, ஒன்று ஈத்தும்
ஒருவுக, ஒப்ப இலார் நட்பு.**

*மருவுக = மரு + உ + க. மரு = ம் + அரு. மனம் எண்ணமற்று. மருவு = எண்ணமற்று வெளிப்படு. ஏதும் இல்லாமல் இரு.*

*ஒருவுக = ஒரு + உ + க. ஒன்றை வெளிப்படுத்துக. மொத்தமாய் விட்டுவிடல். இருப்பதை மொத்தமாய் விட்டுவிடு.*

*எதையும் யோசிக்காமல், ஞானியரை நட்பாக்கிக் கொள்ளுங்கள். தனக்கு ஒத்த எண்ணம் இல்லாதவரின் நட்பை, ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாவது, மொத்தமாய் விட்டுவிடுங்கள்.*

**நட்பாராய்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

வேறொரு நாட்டு மன்னனை, ஆராயாமல் நட்பாக்கிக் கொள்வதைப் போன்று, தனக்கும் தன்நாட்டிற்கும் அழிவைத் தருவது, வேறெதுவும் இல்லை. அத்தகைய நட்பை ஏற்படுத்தியப்பின், அதைக் காப்பாற்றப்படும் பாட்டால், தனக்கு நிம்மதி, அமைதி என்பதே இல்லை.

ஒரு மன்னனைப்பற்றி ஆராய்ந்து, மீண்டும் தன் அமைச்சர், நண்பர், அறிஞர் பலருடன் ஆராய்ந்து, நன்மையறிந்து, ஏற்படுத்திக் கொள்ளாதவனின் நட்பு, இழிவான வகையில், தான் சாகும்படியான துன்பத்தைத் தந்து விடும்.

ஒரு மன்னனின் குணங்கள், அவனுடைய குடும்பப்பிறப்பு, அவனது குற்றம் குறைகள், அவனை நெருங்கிய அமைச்சர், அறிஞர், நண்பர், நீங்காத சுற்றம் ஆகியனவற்றை, சந்தேகம் தீர ஆராய்ந்து, தனக்கும் தன்நாட்டிற்கும், அந்நட்பால், நன்மை பயக்குமாயின், தன் நட்புக்கு ஏற்றவனாயின், அவனை நட்பாக்கிக் கொள்ள வேண்டும்.

நல்ல குடும்பத்தில் பிறந்து, தன்னிடத்தில் குற்றம், களங்கம், பழி, பாவம் போன்றவை சேர்ந்து விடுமோ என்று அஞ்சி, கவனமாய் இருப்பவனை, பொன், பொருள், பெண் என்று, எதையாயினும் கொடுத்து, நட்பாக்கிக் கொள்ள வேண்டும்.

நட்பாக்கிக் கொள்ளக் கருதும், தன்னிலும் எளிய மன்னனை, அவன் அழும் அளவுக்கு பயமுறுத்தி அல்லது கோபம் வரும் அளவுக்கு வெறுப்பேற்றி, அவனுடைய இயல்பான பழக்கமான எதிர்வினையின் மூலம், கண்ணோட்டம் மூலம், நட்பின் தன்மையை, வலிமையான மன்னன், ஆய்ந்து அறிந்து கொள்ள வேண்டும்.

நண்பர்களின் உறுதியை, எவ்வளவு தூரம் தனக்கு நெருக்கமாய் உள்ளனர் அல்லது எவ்வளவு தூரம் தன்னிலிருந்து விலகி நிற்கின்றனர் என்பதைச் சந்தேகமில்லாமல் உறுதியாய் அளந்திட, அறிந்திட, தனக்கு எதிராய் ஒரு போர் வருவதைக் காட்டிலும், வேறோர் சந்தர்ப்பம் உருவாவது இல்லை.

ஒருவற்கு விளைச்சல், வருமானம், வளர்ச்சி என்பது, உறுதியற்றவர்களின் நட்பை, ஒட்டுமொத்தமாய், ஒரேயடியாய் விட்டுவிடுவதுதான்.

மனத்தைக் குறுகச் செய்பனவற்றை, சிறுமையை, நினைக்கக் கூடாது. அதைப்போல், எதிரி அல்லது சிக்கல், தன்னைத் துரத்தும் காலத்தில், தன்னுடைய வழியை அழித்து, தன்னைப் போக விடாமல் தடுக்கக்கூடிய நபர்களை, நண்பர்களாகக் கொள்ளக் கூடாது.

தனக்குப் போரால் அழிவு வந்த காலத்தில், தன்னைக் கைவிட்டவனின் நட்பை, சாகும் சமயத்தில் நினைத்தாலும்கூட, மனம் சுடும், நோகும், வலிக்கும்.

எதையும் யோசிக்காமல், ஞானியரை நட்பாக்கிக் கொள்ளுங்கள். தனக்கு ஒத்த எண்ணம் இல்லாதவரின் நட்பை, ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாவது, மொத்தமாய் விட்டுவிடுங்கள்.

# 81. பழைமை

*பழைமை = பழைய நட்பு.*

**801. பழமை யெனப்படுவ தியாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.**

**'ப ழமை எனப்படுவது யாது?' எனின், யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.**

*பழமை = பழம் + மை. எண்ணத்தின் ஆழ்ந்த தன்மை.*

*கனிந்த தன்மை. முதிர்ச்சி. பக்குவம். நெடுங்காலமாய் தொடரும் தன்மை.*

*கிழமை = க் + இழ் + அமை. மெய்யில் நிலையான ஆழ்ந்த இருப்பு. ஆழ்ந்த மதிப்பு, மரியாதை.*

*கீழ்ந்திடா = கீழ் + ன் + த் + இடா. கீழே தள்ளிவிடா. இறங்கிவிடா.*

*பழைய நட்பு அல்லது நெடுங்கால நட்பு அல்லது நட்பின் முதிர்ச்சி என்பது என்னவென்றால், தன்னுடைய எந்த ஒரு சொல்லும் அல்லது செயலும், தன்நண்பர், தன்மேல் கொண்டிருக்கும் ஆழ்ந்த மதிப்பை, கீழே தள்ளிவிடாமல் இருக்கும்படி, கவனமாய் பார்த்துப் பழகுவதாகும்.*

**802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பதால் சான்றோர் கடன்.**

**நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை; மற்று அதற்கு
உப்பு ஆதல் சான்றோர் கடன்.**

*கெழுதகைமை = க் + எழு + தகை + மை. மெய் உயர்ந்து இணையாக்கும் தன்மை. சமத்துவம்.*

*சான்றோர் = சான்று + ஓர். முன்மாதிரி. தலைவன்.*

*நட்பின் அங்கம், சமத்துவம். மேலும், ஒருவரை ஒருவர் சமமாக நடத்துவதுதான், நட்பின் (உப்பு) சாரமாய் இருப்பதால், முன்மாதிரியாக இருக்கும் பெரியவரும், தலைவனும், அரசனும், தன் நண்பருடன் சமமாய் இருந்து, இருத்தி, பழகுவது கடமையாகும்.*

**803. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.**

**பழகிய நட்பு எவன் செய்யும்-கெழுதகைமை
செய்தாங்கு அமையாக்கடை?**

*தன்னை நாடி வந்த நண்பரை, சமநிலையில் இருத்தி, அமைதியடையச் செய்யா விட்டால், நட்பாகப் பழகி என்ன பயன்?*

**804. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகைமை**
**கேளாது நட்டார் செயின்.**

**விழைதகையான் வேண்டியிருப்பர்-கெழுதகையான்**
**கேளாது நட்டார் செயின்.**

*விழைதகையான் = விழைவு + தகை + ஆன். விருப்பம் சமமாய், ஒன்றுபோல் ஆனவர்.*

*தனக்குச் சமமாக, தன் நண்பர், தான் கேட்காமலேயே, தன்னைக் கேட்காமலேயே, தனக்கு ஒரு நல்ல செயலைச் செய்தால், தானும் அவ்வாறு, அவருக்கு செய்ய வேண்டும் என்று விரும்பி, ஒரு நல்ல சந்தர்ப்பத்திற்காகக் காத்திருப்பர், நட்பாகப் பழகியவர்.*

**805. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க**
**நோதக்க நட்டார் செயின்.**

**பேதைமை ஒன்றோ, பெருங் கிழமை என்று உணர்க-**
**நோ தக்க நட்டார் செயின்.**

*நண்பர், தான் வருந்தும்படி, ஒரு செயலைச் செய்து விட்டால், அதை அவர் தன் முட்டாள் தனத்தால்தான் செய்துவிட்டார், என்று ஒற்றைக் காரணமாய் நினைக்காமல், தன்மேல் வெளிப்பட்ட ஆழ்ந்த நல்லெண்ணத்தால்தான், அவர் அதைச் செய்திருப்பார், என்று உணரவேண்டும்.*

*நண்பர் நினைத்தது ஒன்று, நடந்தது வேறொன்றாய் இருக்கலாம். வேறு எங்காவது தவறு நிகழ்ந்திருக்கலாம் எனும் சாத்தியத்தைச் சிந்திக்க வேண்டும்.*

**806. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துத்**
**தொல்லைக்க ணின்றார் தொடர்பு.**

**எல்லைக்கண் நின்றார் துறவார்-தொலைவிடத்தும்,**
**தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.**

*நட்பின் ஆழம்வரை, உயிர்வரை, எல்லைவரைச் சென்றவர், தன் நட்பான மன்னன், ஆட்சியை இழந்த நாட்டில், பொருளை இழந்த சமயம், அவன் சிக்கலில் இருக்கும்போது, அவனது உறவை, தொடர்பை, தன் உயிருக்காக, துன்பத்திற்காகப் பயந்து, விட்டுவிட மாட்டார்.*

**807. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்**
**வழிவந்த கேண்மை யவர்.**

**அழிவந்த செய்யினும், அன்பு அறார் - அன்பின்**
**வழிவந்த கேண்மையவர்.**

*அழிவந்தம் = அழிவு + அந்தம். அழிவின் முடிவு. உயிரின் அழிவு.*

*அன்பின் மூலமாக நட்பை வளர்த்தவர், தன் நண்பர், தனக்கு முடிவான அழிவைத் தந்தாலும், தன் உயிரையே அழித்தாலும், தன்னுடைய அன்பைத் துண்டிக்க மாட்டார்.*

**808. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு**
**நாளிழுக்கல் நட்டார் செயின்.**

**கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு**
**நாள், இழுக்கம் நட்டார் செயின்.**

*கேளிழுக்கம் = கேட்டுச் சுருங்கல் / விலகல்.*

*கெழுதகைமை = பிணைப்பு, நம்பிக்கை, நன்மதிப்பு.*

*தன் நண்பரைப் பற்றித் தவறாகப் பிறர் சொல்வதைக் கேட்டும், அந்நண்பரிடம் இருந்து விலகாத வலிமையான பிணைப்பை உடையவர்க்கு, அந்நண்பர் கெடுதல் செய்தால், அது தனது தீவினை விளைவு, ஊழின் பயன், எனக் கொள்ள வேண்டும்.*

**809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையு முலகு.**

**கெடாஅர், வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையும், உலகு.**

*கெடாஅ = கெடா + அ. அழியாத உயிர்.*

*விடாஅர் = விடா + அர். விடாமல் இருப்பர்.*

*அழியாத உயிரின் வழியில், பல பிறப்புகளில் தொடர்ந்து நண்பர்களானவர்கள், தங்கள் நட்பை ஒருநாளும் விட்டுவிடார். அத்தகைய பிரியா நட்பை, தாங்களும் பெற, உலக மக்கள் விரும்புவர்.*

**810. விழையார் விழையப் படுப பழையார்கண்**
**பண்பிற் றலைப்பிரியா தார்.**

**விழையார் விழையப்படுப-பழையார்கண்**
**பண்பின் தலைப்பிரியாதார்.**

*விழையார் = விரும்பார். பகைவர்.*

பழைய நண்பரிடத்து, பழகும் விதத்தில், மாறுபடாதவரைக் கண்டு, பகைவர்களும்கூட, அவரை நண்பராக்கிக் கொள்ள, ஆசைப்படுவர்.

## பழைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

பழைய நட்பு அல்லது நெடுங்கால நட்பு அல்லது நட்பின் முதிர்ச்சி என்பது என்னவென்றால், தன்னுடைய எந்த ஒரு சொல்லும் அல்லது செயலும், தன்நண்பர், தன்மேல் கொண்டிருக்கும் ஆழ்ந்த மதிப்பை, கீழே தள்ளிவிடாமல் இருக்கும்படி, கவனமாய்ப் பார்த்துப் பழகுவதாகும்.

நட்பின் அங்கம், சமத்துவம். மேலும், ஒருவரை ஒருவர் சமமாக நடத்துவதுதான், நட்பின் (உப்பு) சாரமாய் இருப்பதால், முன்மாதிரியாக இருக்கும் பெரியவரும், தலைவனும், அரசனும், தன் நண்பருடன் சமமாய் இருந்து, இருத்தி, பழகுவது கடமையாகும்.

தன்னை நாடி வந்த நண்பரை, சமநிலையில் இருத்தி, அமைதியடையச் செய்யா விட்டால், நட்பாகப் பழகி என்ன பயன்?

தனக்குச் சமமாக, தன் நண்பர், தான் கேட்காமலேயே, தன்னைக் கேட்காமலேயே, தனக்கு ஒரு நல்ல செயலைச் செய்தால், தானும் அவ்வாறு, அவருக்குச் செய்ய வேண்டும் என்று விரும்பி, ஒரு நல்ல சந்தர்ப்பத்திற்காகக் காத்திருப்பர், நட்பாகப் பழகியவர்.

நண்பர், தான் வருந்தும்படி, ஒரு செயலைச் செய்து விட்டால், அதை அவர் தன் முட்டாள் தனத்தால்தான் செய்துவிட்டார், என்று ஒற்றைக் காரணமாய் நினைக்காமல், தன்மேல் வெளிப்பட்ட ஆழ்ந்த நல்லெண்ணத்தால்தான், அவர் அதைச் செய்திருப்பார், என்று உணரவேண்டும்.

நட்பின் ஆழம்வரை, உயிர்வரை, எல்லைவரை சென்றவர், தன் நட்பான மன்னன், ஆட்சியை இழந்த நாட்டில், பொருளை இழந்தச் சமயம், அவன் சிக்கலில் இருக்கும்போது, அவனது உறவை, தொடர்பை, தன் உயிருக்காக, துன்பத்திற்காக பயந்து, விட்டுவிட மாட்டார்.

அன்பின் மூலமாக நட்பை வளர்த்தவர், தன் நண்பர், தனக்கு முடிவான அழிவைத் தந்தாலும், தன் உயிரையே அழித்தாலும், தன்னுடைய அன்பைத் துண்டிக்க மாட்டார்.

தன் நண்பரைப் பற்றித் தவறாகப் பிறர் சொல்வதைக் கேட்டும், அந்நண்பரிடம் இருந்து விலகாத வலிமையான பிணைப்பை உடையவர்க்கு, அந்நண்பர் கெடுதல் செய்தால், அது தனது தீவினை விளைவு, ஊழின் பயன், எனக் கொள்ள வேண்டும்.

அழியாத உயிரின் வழியில், பல பிறப்புகளில் தொடர்ந்து நண்பர்களானவர்கள், தங்கள் நட்பை ஒருநாளும் விட்டுவிடார். அத்தகைய பிரியா நட்பை, தாங்களும் பெற, உலக மக்கள் விரும்புவர்.

பழைய நண்பரிடத்து, பழகும் விதத்தில், மாறுபடாதவரைக் கண்டு, பகைவர்களும்கூட, அவரை நண்பராக்கிக் கொள்ள, ஆசைப்படுவர்.

# 82. தீ நட்பு

*தீநட்பு = தீ + நட்பு. தீ = த் + ஈ. தேகத்தைத் தருவது. தேகத்தை அழிப்பது. அழிவை உண்டாக்குவது. துன்பம் செய்வது. நெருங்க முடியாதது. நெருங்கினால் சுடுவது. பரவுவது. எல்லாவற்றையும் அழிப்பது. கட்டுப்படுத்துவது கடினமானது. சேதம் உருவாக்குவது. பயத்தை உருவாக்குவது. காரணம் எளிதில் கண்டுப் பிடிக்க முடியாதது. சிறிதாய் தொடங்கிப் பெரிதாய் முடிவது. போக்கு நிர்ணயிக்க முடியாதது. பொதுவாக தானாக எரியாததையும், பச்சை மரத்தையும்கூட, எரிய வைப்பது. திசை மாறுவது. சரியான வழியில் அணைக்கவில்லை என்றால், மேலும் அதிகமாய் எரிவது. அணைக்காமல் விட்டால் அருகில் உள்ள அனைத்தையும் அழிப்பது. எல்லைகளைக் கடப்பது. மண்ணையும், நீரையும், காற்றையும், வானையும் மாசுபடுத்துவது. சுடுகாடாக்குவது. சுட்ட காடாக்குவது. வாழ்வை இருளாக்குவது. வினைகளையும், பிறப்பையும் உருவாக்குவது.*

*தீநட்பு = அழிக்கும் நட்பு.*

**811. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை**
**பெருகலிற் குன்ற லினிது.**

**பருகுவார் போலினும், பண்பு இலார் கேண்மை**
**பெருகலின் குன்றல் இனிது.**

*நல்ல குணமில்லாதவர், தன்னை மிக விரும்பி, ஆழ்ந்து ஏற்றுக்கொள்பவர் போல், கண்கள் ஒளிர, இதழ்கள் விரிய, முகம் மலர இருப்பினும், அவர்களுடைய நட்பு, தன் நாட்டின் வளத்தையும், வீட்டின் செல்வத்தையும், ஏன், தன் உடலின் இரத்தத்தையும் உறிஞ்சிக் குடித்து விடும். அத்தகையவர்களின் நட்பு வளர்ந்து, தான் முழுமையாய் அழிவதைக் காட்டிலும், அந்நட்பு குறைந்து, இல்லாமலே போவது நல்லது.*

**812. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை**
**பெறினு மிழப்பினு மென்.**

**உறின் நட்டு, அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை**
**பெறினும், இழப்பினும், என்?**

*உறின் = உற் + இன். புறத்திருந்து அறுத்தால். துன்பம் வந்தால்.*

*அடு = அட் + உ. உயிரை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுதல். நெருங்குதல். ஒட்டிக் கொள்ளுதல். அறின் = அற் + இன். உயிரிலிருந்து / அகத்திருந்து / உள்ளிருந்து அறுந்தால், பிரிந்தால்.*

*பகை, துன்பம் வரும்போது மட்டும், தன்னிடம் வந்து ஒட்டிக் கொண்டு, பாதுகாத்துக் கொள்வதும், பிறகு, ஒன்றுமே நடக்காதது போல், நன்றியை மறந்து, தன்னை விட்டு விலகியே நின்று, எந்த ஒன்றிற்கும் ஈடாக இணையாக எதுவுமே செய்யாதவனின் நட்பை, பெற்றால் என்ன பயன்? இழந்தால் என்ன பயன்? அத்தகைய நட்பைப் பெற்றால் இழப்புதான், இழந்தால், இலாபம் தான்.*

**813. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது**
**கொள்வாருங் கள்வரு நேர்.**

**உறுவது சீர்தூக்கும் நட்பும், பெறுவது**
**கொள்வாரும், கள்வரும், நேர்.**

*தனக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததை, எடை தூக்கி அளந்து பார்க்கும் நண்பனும், பிறருக்கு அன்பளிப்பாக கொடுத்ததன் விலைமதிப்பை, வாங்கிக் கொள்பவனும், திருடனுக்குச் சமமானவர்கள்.*

**814. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்**
**தமரிற் றனிமை தலை.**

**அமரகத்து ஆற்றறுக்கும் கல்லா மா அன்னார்**
**தமரின், தனிமை தலை.**

*அமரகம் = அமர் + அகம். அமர் = அம் + அர். அமைதி அற்ற. அமரகம் = போர்க்களம்.*

*ஆற்றறு = ஆறு + அறு. வழியைப் பிரி.*

*கல்லாமா = கல்லா + மா. பயிலாத யானை அல்லது குதிரை.*

*தமர் = தம் + அ + ர். தமதாகி இருப்பவர். நண்பர்.*

*போர்க்களத்தில், வழிநடத்தும் வகையில் செல்லாமல், பயந்து, கட்டுப்படுத்தப்பட முடியாமல், எங்கெங்கோ சென்று, தனக்கே, தன் படைகளுக்கே, அழிவை உண்டாக்கும், பயிலாத யானை அல்லது குதிரையைப் போன்று, சொல்வதைக் கேட்காமல், எந்தவித கட்டுப்பாடுமின்றி, தன் விருப்பம்போல் செயல்பட்டு, தனக்கே இழப்பை உருவாக்கும் நண்பர்கள் இருப்பதைக் காட்டிலும், நண்பர்களே இல்லாமல், தனியாய் இருப்பது, எவ்வளவோ மேல்.*

**815. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை**
**எய்தலி னெய்தாமை நன்று.**

**செய்து ஏமம் சாரா, சிறியவர் புன் கேண்மை**
**எய்தலின் எய்தாமை நன்று.**

*செய்தேமம் = செய்த + ஏமம். தந்த பாதுகாப்பு.*

*சார் = நம்பு.*

*புன்கேண்மை = புல் + கேண்மை. எளிதில் அறுபடும் உறுதியற்ற புல் போன்ற நட்பு.*

*செய்து கொடுத்த பாதுகாப்பை, நம்பிச் செயல்படாத அற்பமானவர்களின், அறிவில்லாதவர்களின், சிந்திக்காதவர்களின் உறுதியற்ற நட்பை, அடைவதைவிட அடையாமல் இருப்பதே நல்லது.*

**816. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்**
**ஏதின்மை கோடி யுறும்.**

**பேதை பெருங் கெழீஇ நட்பின், அறிவு உடையார்**
**ஏதின்மை கோடி உறும்.**

*பேதை = உறுதி அற்றவர். நிலையற்றவர். மனமாறி.*

*கெழீஇ = க் + எழ் + ஈ + இ. பொருள் உயர்வும், மிகையும் தொடர்ந்து தருபவர்.*

*ஏதின்மை = ஏதும் + இன்மை. ஒன்றுமில்லாமை. வளமின்மை. பொருளின்மை.*

*அறிவில்லாதவரின், உறுதியற்றவரின் நட்பால், தனக்கு கிடைக்கும் பெருஞ்செல்வத்தைக் காட்டிலும், ஏதும் இல்லாத, வறுமையான அறிவுடையவரின் நட்பால், மிகப்பெரும் செல்வம் தன்னை வந்தடையும்.*

**817. நகைவகைய ராகிய நட்பிற் பகைவரால்**
**பத்தடுத்த கோடி யுறும்.**

**நகை வகையர் ஆகிய நட்பின், பகைவரால்**
**பத்து அடுத்த கோடி உறும்.**

*நகைவகையர் = நகை + வகை + அர். சிரிக்கும் பிரிவினர். கேளிக்கை, களிப்பில் ஈடுபடுபவர். குடி, கூத்து, கும்மாளம் போன்றவற்றிற்காக கூட்டு சேர்பவர்கள்.*

*குடி, கூத்து, கும்மாளம் போன்றவற்றிற்காக மட்டும் கூட்டு சேர்பவர்களின் நட்பைக் காட்டிலும், (அதனால் இருக்கும் செல்வமும் அழியும், பொருள் உற்பத்தியும் பெருகாது, நாட்டிற்கும் மக்களுக்கும் பாதுகாப்பு குறைந்துவிடும், மன்னனுக்கும் பழி வந்து சேரும்), எதிரியின் பகைமையால், நாட்டையும் மக்களையும் பாதுகாக்கும் பொருட்டு, தான் ஊக்கமும் ஆக்கமும் பெற்றால், ஏராளமான செல்வமும் நன்மையும் புகழும் தன்னை வந்துச் சேரும்.*

**818. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை**
**சொல்லாடார் சோர விடல்.**

**ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை**
**சொல்லாடார், சோரவிடல்.**

*ஒல்லும் = முடியும். இயலும்.*

*உடற்று = உட் + அற்று. புறத்தே ஒட்டித் தொடராமல். உடன் அன்றி.*

*சொல்லாடு = சொல் + ஆடு. பேசு. கேள்வி பதில் கேள். விவாதம் செய். விளக்கம் கேள்.*

*சோர = ச் + ஓர் + அ. இயக்கம் ஒன்றாக. அமைதியாக. எதுவும் இல்லாமல் போக.*

*தன்னால் செய்ய முடிந்த காரியத்தை, உடனே செய்யாது, காலம் தாழ்த்துபவரின் நட்பை, சொல்லாமல் கொள்ளாமல், அதுவாகவே அழியுமாறு, விட்டு விட வேண்டும்.*

**819. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு**
**சொல்வேறு பட்டார் தொடர்பு.**

**கனவினும் இன்னாது மன்னோ-வினை வேறு**
**சொல் வேறு பட்டார் தொடர்பு.**

*மன்னோ = மனமே*

*தொடர்பு = நட்பு.*

*ஓ மனமே! சொல்வது ஒன்று, செய்வது மற்றொன்று என்று இருப்பவருடனான நட்பு, கனவிலும் கொடுமைப்படுத்தும் அல்லவா?*

**820. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைகெழீஇ**
**மன்றிற் பழிப்பார் தொடர்பு.**

**எனைத்தும் குறுகுதல் ஓம்பல்-மனைக் கெழீஇ,**
**மன்றில் பழிப்பார் தொடர்பு.**

*எனைத்தும் = எப்படியாவது. எல்லா வகையிலும்.*

*குறுகுதல் = விலகுதல்.*

*மனைகெழீஇ = மனை + கெழீஇ. கெழீஇ = க் + எழ் + ஈ + இ. மெய் உயர்ந்தும் தாழ்ந்தும் வெளிப்படுத்துதல். பணிவு.*

*மன்றில் = ம் + அன்று + இல். மௌனம் இல்லாது இருக்கும் இடம். பொதுச் சபை. மன்றம்.*

*வீட்டில் தன்னுடன் இருக்கும்போது, அமைதியும் பணிவும் கொண்டவனாய் பழகிவிட்டு, பொதுச்சபையில், தன்னைக் குற்றம் சொல்பவரின் தொடர்பை, எப்படியாவது விட்டு விலகிட வேண்டும்.*

**தீநட்பு அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*நல்ல குணமில்லாதவர்களின் நட்பு வளர்ந்து, தான் முழுமையாய்*

அழிவதைக் காட்டிலும், அந்நட்பு குறைந்து, இல்லாமலே போவது நல்லது.

பகை, துன்பம் வரும்போது மட்டும், தன்னிடம் வந்து ஒட்டிக் கொண்டு, பாதுகாத்துக் கொள்வதும், நன்றியை மறந்து, தன்னை விட்டு விலகியே நின்று, எந்த ஒன்றிற்கும் ஈடாக இணையாக எதுவுமே செய்யாதவனின் நட்பை, பெற்றால் என்ன பயன்? இழந்தால் என்ன பயன்?

தனக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததை, எடை தூக்கி அளந்து பார்க்கும் நண்பனும், பிறருக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததன் விலைமதிப்பை, வாங்கிக் கொள்பவனும், திருடனுக்குச் சமமானவர்கள்.

போர்க்களத்தில், வழிநடத்தும் வகையில் செல்லாமல், பயந்து, கட்டுப்படுத்தப்பட முடியாமல், எங்கெங்கோ சென்று, தனக்கே, தன் படைகளுக்கே, அழிவை உண்டாக்கும், பயிலாத யானை அல்லது குதிரையைப் போன்று, சொல்வதைக் கேட்காமல், எந்தவிதக் கட்டுப்பாடுமின்றி, தன் விருப்பம்போல் செயல்பட்டு, தனக்கே இழப்பை உருவாக்கும் நண்பர்கள் இருப்பதைக் காட்டிலும், நண்பர்களே இல்லாமல், தனியாய் இருப்பது, எவ்வளவோ மேல்.

செய்து கொடுத்த பாதுகாப்பை, நம்பிச் செயல்படாத அற்பமானவர்களின், அறிவில்லாதவர்களின், சிந்திக்காதவர்களின் உறுதியற்ற நட்பை, அடைவதைவிட அடையாமல் இருப்பதே நல்லது.

அறிவில்லாதவரின், உறுதியற்றவரின் நட்பால், தனக்கு கிடைக்கும் பெருஞ்செல்வத்தைக் காட்டிலும், ஏதும் இல்லாத, வறுமையான அறிவுடையவரின் நட்பால், மிகப்பெரும் செல்வம் தன்னை வந்தடையும்.

குடி, கூத்து, கும்மாளம் போன்றவற்றிற்காக மட்டும் கூட்டு சேர்பவர்களின் நட்பைக் காட்டிலும், எதிரியின் பகைமையால், நாட்டையும் மக்களையும் பாதுகாக்கும் பொருட்டு, தான் ஊக்கமும் ஆக்கமும் பெற்றால், ஏராளமான செல்வமும் நன்மையும் புகழும் தன்னை வந்துச் சேரும்.

தன்னால் செய்ய முடிந்த காரியத்தை, உடனே செய்யாது, காலம் தாழ்த்துபவரின் நட்பை, சொல்லாமல் கொள்ளாமல், அதுவாகவே அழியுமாறு, விட்டு விட வேண்டும்.

ஓ மனமே! சொல்வது ஒன்று, செய்வது மற்றொன்று என்று இருப்பவருடனான நட்பு, கனவிலும் கொடுமைப்படுத்தும் அல்லவா?

வீட்டில் தன்னுடன் இருக்கும்போது, அமைதியும் பணிவும் கொண்டவனாய் பழகிவிட்டு, பொதுச்சபையில், தன்னைக் குற்றம் சொல்பவரின் தொடர்பை, எப்படியாவது விட்டு விலகிட வேண்டும்.

# 83. கூடா நட்பு

*கூடா நட்பு: சேராத நட்பு. ஏற்றுக்கொள்ளக் கூடாத நட்பு. நடிப்பவர்களின் நட்பு. சதி, சூழ்ச்சி, துரோகம் செய்யக் கூடியவர்களின் நட்பு. உறுதியற்றவர் நட்பு.*

**821. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.**

**சீர் இடம் காணின், எறிதற்குப் பட்டடை-
நேரா நிரந்தவர் நட்பு.**

*சீரிடம் = சீர் + இடம். சீர் = ச் + ஈர். இயக்கம் தரும். செயல்படும். சீரிடம் = செயல்படும் இடம். சரியான இடம்.*

*பட்டடை = ப் + அட் + அட் + ஐ. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து மேலும் ஒட்டித் தொடர்ந்து ஐக்கியமாவது.*

*நேரா = வளைந்த.*

*நிரந்தவர் = நிரல் + த் + அவர். ஒழுங்கு தேகம் உடையவர். ஒழுங்கு உடையவர்.*

*பழுக்கக் காய்ந்த இரும்பை, பட்டடையின் மேல் வைத்து, வளைந்து இருக்கும் இடத்தில், சம்மட்டியைக் கொண்டு, ஓங்கி அடித்து, நேராக்குவது போல், சரியான இடத்தில், தனக்கு ஒத்துவராத நண்பனை, பலமாகத் தாக்கி, தனக்கு ஏற்றவனாய் மாற்ற வேண்டும்.*

**822 இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.**

**இனம் போன்று இனம் அல்லார் கேண்மை, மகளிர்
மனம் போல, வேறுபடும்.**

*மகளிர் = மகள் + இர். மணமாகாமல் இருப்பவர். வரைவின் மகளிர்.*

*விலைமாதை, தூரத்தில் பார்க்கையில், குடும்பப் பெண் போல் தோற்றமளித்தாலும், நெருங்கிப் பார்க்கையில், வேசியர் மனத்தைக் காண்பிப்பது போல், மேலோட்டமாக, ஒத்த நல்ல பண்புடன் இருப்பதுபோல் தோன்றினாலும், சில நண்பர்கள், நெருங்கிப் பழகுகையில், பொருந்தாத பண்புகளைப் பெற்றவர்களாய், இருப்பதைக் காண முடியும்.*

**823. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லார்
ஆகுதன் மாணார்க் கரிது.**

**பல நல்ல கற்றக்கடைத்தும், மனம் நல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது.**

*மாணார் = ம் + ஆண் + ஆர். அமைதியில் மிக நெருக்கமாகாதவர். உயிருடன் ஒன்றாதவர். அறம் பயிலாதவர். மெய்யுணர்வு அறியாதவர்.*

*பல நல்ல நூல்களைக் கற்றிருந்தாலும், மனத்தில் அன்புடனும், நல்ல எண்ணத்துடனும் ஆகுதல், உயிருடன் ஒன்றாதவருக்கு இயலாது.*

**824. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா**
**வஞ்சரை யஞ்சப் படும்.**

**முகத்தின் இனிய நகாஅ, அகத்து இன்னா**
**வஞ்சரை அஞ்சப்படும்.**

*முகத்தில் தெரிவதைக் காட்டிலும், இனிய சிரிப்பை அகத்தில் கொண்ட, கொடுமையான வஞ்சகருக்கு அஞ்சி, கவனமுடன் நடக்க வேண்டும்.*

**825. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றும்**
**சொல்லினாற் றேறற்பாற் றன்று.**

**மனத்தின் அமையாதவரை, எனைத்து ஒன்றும்,**
**சொல்லினா தேறற்பாற்று அன்று.**

*தேறல் = த் + ஏற் + அல். தேகம் மிக உயர்ந்து பிரிதல். தெளிதல். தேன் (பூவில் மிக உயர்ந்து பிரிதல்).*

*அடிப்படையில், மனத்தால் தன்னை ஏற்றுக் கொள்ளாதவரை, எதைச் சொல்லியும் தெளிய வைக்க முடியாது, மாற்றிவிட இயலாது, உயர்த்திவிடல் ஆகாது.*

**826. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொல்**
**ஒல்லை யுணரப் படும்.**

**நட்டார்போல் நல்லவை சொல்லினும், ஒட்டார் சொல்**
**ஒல்லை, உணரப்படும்.**

*நட்டார் = நண்பர்.*

*ஒட்டார் = பகைவர்*

*ஒல்லை = ஒல் + ஐ. முழுமையான அதிர்வு ஐக்கியமாவது. சூழ்ச்சி. விரைவாய்.*

*நண்பர் போன்று நல்லவை சொன்னாலும், அது தன்னோடு ஒட்டாத பகைவனின் சொல் என்பதால், அசொல்லுக்குப் பின்னால் சூழ்ச்சியும், தொல்லையும் இருப்பதை, உடனே கண்டு உணர வேண்டும்.*

**827. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கம்**
**தீங்கு குறித்தமை யான்.**

**சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க-வில்**
**வணக்கம் தீங்கு குறித்தமையான்.**

*பகைவனின் சொல்லில் பணிவு தெரிந்தால், அதை அப்படியே நம்பிவிடக் கூடாது. அச்சொல் வணக்கம், வில்வணக்கத்தை, சண்டைக்கான அழைப்பை, போருக்கான அறைகூவலைக் குறிக்கின்றது, என்பதைப் புரிந்து கொண்டு, கவனமாய், தயாராய் இருக்க வேண்டும்.*

**828. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்**
**அழுதகண் ணீரு மனைத்து.**

**தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்; ஒன்னார்**
**அழுத கண்ணீரும், அனைத்து.**

*அனைத்து = நெருக்கமானது. அதே போன்றது.*

*மிகவும் பணிந்து வணங்கிய, வஞ்சகப் பகைவனின் கைகளுக்கிடையிலும், உன்னைக் கொல்லக்கூடிய கூர்மையான ஆயுதம் இருக்கலாம் அல்லது அதுவே, காத்திருக்கும் தன் படைக்கு, தாக்கச் சொல்லும் சமிக்ஞையாகலாம். தன் இரக்கத்தக்க நிலையைச் சொல்லி அழுவதும், தனக்குச் சோகம் நேர்ந்தது போல், கண்ணீர் விடுவதும் கூட, அதே போன்று தான். அவற்றின் பின் சூழ்ச்சி மறைந்திருக்கும். எனவே, அத்தகையவரை நெருங்குகையில், நீ உன்னை, மிகவும் கவனமாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.*

**829. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து**
**நட்பினுட் சாப்புல்லற் பாற்று.**

**மிகச் செய்து, தம் எள்ளுவாரை நகச் செய்து,**
**நட்பினுள் சாப் புல்லற்பாற்று.**

*மிகச்செய்து = நன்கு கவனித்து.*

*சாப்புல்லற் = சா + புல் + அற்ப். அசைந்தாடும் புல்லை அறுத்து.*

*ஆற்று = வழிக்கு கொண்டு வா. முடித்துவிடு.*

*மறைவில், தன்னைச் சிறுமையாகப் பேசுகின்ற வஞ்சகப் பகைவன், நினைத்தே பார்க்காத வகையில், அவனுக்கு நல்ல விரும்பிய உணவளித்து, அன்பளிப்புகள் தந்து, சிரிக்கச் சிரிக்கப் பேசி, நல்ல விதமாய் பழகி, நட்பாக இருப்பதுபோல் காட்டியே, அசைந்தாடும் புல்லை அறுத்து அழிப்பதுபோல் எளிதாக, பகைவன் மனத்தில் உள்ள பகைமையை, ஒழித்துவிட வேண்டும்.*

*உன்னைப் பற்றிய மதிப்பீட்டில், முரண்பட்டு, குழம்பியே, அவன் தன் பகைமையில் பலவீனமாகி விடுவான்.*

**830. பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்**
**டகநட் பொரீஇ விடல்.**

**பகை நட்பு ஆம் காலம் வருங்கால், முகம் நட்டு,**
**அகம் நட்பு ஒரீஇவிடல்.**

*முகநட்டகநட்ப் = முகநட்புடன் சேர்ந்து அகநட்பும்.*

*ஒரீஇ = ஒர் + ஈ + இ. ஒன்றாக தந்து நிலைத்தல். ஒரேயடியாக விட்டு. ஒட்டுமொத்தமாக விட்டு.*

*வஞ்சகப் பகைவன் நட்பாக வேண்டிய சூழல் வந்தால், முகநட்புடன் அகநட்பையும் சேர்த்து ஒரேயடியாக விட்டுவிட வேண்டும். எந்நாளும் அத்தகைய நட்பை ஏற்கக் கூடாது.*

**கூடாநட்பு அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*பழுக்கக் காய்ந்த இரும்பை, பட்டடையின் மேல் வைத்து, வளைந்து இருக்கும் இடத்தில், சம்மட்டியைக் கொண்டு, ஓங்கி அடித்து, நேராக்குவது போல், சரியான இடத்தில், தனக்கு ஒத்துவராத நண்பனை, பலமாகத் தாக்கி, தனக்கு ஏற்றவனாய் மாற்ற வேண்டும்.*

*விலைமாதை, தூரத்தில் பார்க்கையில், குடும்பப் பெண் போல் தோற்றமளித்தாலும், நெருங்கிப் பார்க்கையில், வேசியர் மனத்தைக் காண்பிப்பது போல், மேலோட்டமாக, ஒத்த நல்ல பண்புடன் இருப்பதுபோல் தோன்றினாலும், சில நண்பர்கள், நெருங்கிப் பழகுகையில், பொருந்தாத பண்புகளைப் பெற்றவர்களாய், இருப்பதைக் காண முடியும்.*

*பல நல்ல நூல்களைக் கற்றிருந்தாலும், மனத்தில் அன்புடனும், நல்ல எண்ணத்துடனும் ஆகுதல், உயிருடன் ஒன்றாதவருக்கு இயலாது.*

*முகத்தில் தெரிவதைக் காட்டிலும், இனிய சிரிப்பை அகத்தில் கொண்ட, கொடுமையான வஞ்சகருக்கு அஞ்சி, கவனமுடன் நடக்க வேண்டும்.*

*அடிப்படையில், மனத்தால் தன்னை ஏற்றுக் கொள்ளாதவரை, எதைச் சொல்லியும் தெளிய வைக்க முடியாது, மாற்றிவிட இயலாது, உயர்த்திவிடல் ஆகாது.*

*நண்பர் போன்று நல்லவை சொன்னாலும், அது தன்னோடு ஒட்டாத பகைவனின் சொல் என்பதால், அசொல்லுக்குப் பின்னால் சூழ்ச்சியும், தொல்லையும் இருப்பதை, உடனே கண்டு உணர வேண்டும்.*

*பகைவனின் சொல்லில் பணிவு தெரிந்தால், அதை அப்படியே நம்பிவிடக் கூடாது. அச்சொல் வணக்கம், வில்வணக்கத்தை, சண்டைக்கான அழைப்பை, போருக்கான அறைகூவலைக் குறிக்கின்றது, என்பதைப் புரிந்து கொண்டு, கவனமாய், தயாராய் இருக்க வேண்டும்.*

*மிகவும் பணிந்து வணங்கிய, வஞ்சகப் பகைவனின் கைகளுக்கிடையிலும், உன்னைக் கொல்லக்கூடிய கூர்மையான ஆயுதம் இருக்கலாம் அல்லது அதுவே, காத்திருக்கும் தன் படைக்கு, தாக்கச் சொல்லும் சமிக்ஞையாகலாம். தன் இரக்கத்தக்க நிலையைச் சொல்லி அழுவதும்,*

தனக்குச் சோகம் நேர்ந்தது போல், கண்ணீர் விடுவதும் கூட, அதே போன்று தான்.

மறைவில், தன்னைச் சிறுமையாகப் பேசுகின்ற வஞ்சகப் பகைவன், நினைத்தே பார்க்காத வகையில், அவனுக்கு நல்ல விரும்பிய உணவளித்து, அன்பளிப்புகள் தந்து, சிரிக்கச் சிரிக்கப் பேசி, நல்ல விதமாய் பழகி, நட்பாக இருப்பதுபோல் காட்டியே, அசைந்தாடும் புல்லை அறுத்து அழிப்பதுபோல் எளிதாக, பகைவன் மனத்தில் உள்ள பகைமையை, ஒழித்துவிட வேண்டும்.

வஞ்சகப் பகைவன் நட்பாக வேண்டிய சூழல் வந்தால், முகநட்புடன் அகநட்பையும் சேர்த்து ஒரேயடியாக விட்டுவிட வேண்டும். எந்நாளும் அத்தகைய நட்பை ஏற்கக் கூடாது.

# 84. பேதைமை

*பேதைமை = முட்டாள்தனம்.*

**831. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.**

**பேதைமை என்பது ஒன்று; 'யாது?' எனின், ஏதம் கொண்டு,
ஊதியம் போகவிடல்.**

*பேதைமை = ப் + ஏத் + அமை. அருவை உருவாய் எண்ணுதல். மயக்கம். குழப்பம். தெளிவின்மை. முட்டாள்தனம். அறிவின்மை. அறியாமை.*

*ஒன்றி = சேர்ந்திருப்பது. மொத்தமாய்.*

*ஏதம் = ஏத் + அம். மிக உயர்ந்த தேகத் தன்மை. பாம்பு, புலி, யானை ஆகியவற்றுக்கு அஞ்சி மரத்தின் மேல் ஏறிக் கொள்வது. தன்னை மிக உயர்வாய் எண்ணிக் கொள்வது.*

*மொத்தமான முட்டாள்தனம் என்பது என்னவென்றால், தன்னை மிக உயர்வாய் எண்ணிக் கொண்டு, வளர்ச்சி வாய்ப்பை, வருமானத்தைக் கைதவறிப் போகவிடுவதுதான்.*

**832. பேதைமை யுள்ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.**

**பேதைமையுள் எல்லாம் பேதைமை, காதன்மை
கை அல்லதன்கண் செயல்.**

*காதன்மை = காதல் + மை. ஆசை இருள். ஆசை குருட்டுத் தனமானது. காதன்மை = காது + அன்மை. காது இல்லாமை. கேட்காத தன்மை.*

*கையல்லது = கையில் இல்லாதது.*

*முட்டாள்தனத்திலே பெரிய முட்டாள்தனம் எதுவென்றால், ஒரு செயலைச் செய்வதற்கான பொருளோ, அறிவோ, அனுபவமோ, திறமையோ தன்கையில் இல்லாதபோது, யார் சொல்லியும் கேட்காமல், அச்செயலைச் செய்ய, குருட்டுத்தனமாக, வெறித்தனமாக ஆசைப்படுவதுதான்.*

**833. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.**

**நாணாமை, நாடாமை, நார் இன்மை, யாது ஒன்றும்
பேணாமை,-பேதை தொழில்.**

*நார் = ன் + ஆர். நெருக்கத்தைப் பிரி. பகுத்தறி. நெருக்கமாதல்.*

*ஒரு தொழிலைச் செய்வதற்கு, தனக்கு பொருளோ, அறிவோ, அனுபவமோ, திறமையோ இல்லையே என்று வெட்கப்படாமலும், இருப்போரிடத்தில் அதைத் தேடிக் கற்க முயலாமலும், தொழிலின் நுணுக்கங்களைப் பகுத்து நெருங்கி அறியாமலும், தேவையான மற்ற எதையும் வளர்த்துக் கொள்ளாமலும் இருப்பதே, முட்டாளின் தொழில்.*

**834. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தாமடங்காப்
பேதையிற் பேதையா ரில்.**

**ஓதி உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும், தான் அடங்காப்
பேதையின் பேதையார் இல்.**

*தான், புலனடக்கத்தைப் பற்றிக் படித்துணர்ந்தும், பிறர்க்கு விளக்கிச் சொல்லியும், தானே புலனடக்கத்தைச் செய்யாமல் போகும் முட்டாளைக் காட்டிலும், வேறு முட்டாள் இல்லை.*

**835. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும்
தான்புக் கழுந்து மளறு.**

**ஒருமைச் செயல் ஆற்றும், பேதை-எழுமையும்
தான் புக்கு அழுந்தும் அளறு.**

*எழுமை = எழு + மை. ஏழு இருளும். ஏழு பிறப்பும். வரும் பிறப்பும்.*

*புக்கு = புகுந்து*

*அளறு = அள் + அறு. ஒளி பிரி. இருள். நரகம்.*

*முட்டாள், ஒரு பிறப்பில் செய்யும் செயலால், வரும் பிறப்பும், ஏழு பிறப்பும், தானாகவே நரக இருளில், முழுமையான அறியாமைக்குள் புகுந்து, அமுங்கிக் கிடப்பான், துன்புறுவான்.*

**836. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.**

**பொய்படும் ஒன்றோ; புனை பூணும்;-கை அறியாப்
பேதை வினை மேற்கொளின்.**

*புனைபூண் = புனை + பூண். செயற்கையாய் உருவாக்கி அணிந்துக் கொள். இல்லாததை இருப்பதாய் காட்டு.*

*கையறியா = கை + அறியா. வேலை தெரியாமல்.*

*ஒரு செயலைப் பற்றிய அறிவோ, அனுபவமோ, திறமையோ இல்லாமல், ஒரு முட்டாள், தனக்கு எல்லாம் தெரிந்ததாய் காட்டிக் கொண்டு, அச்செயலைச் செய்ய முற்பட்டால், அச்செயல் ஒன்று மட்டுமல்ல, அதனுடன் தொடர்புடைய மற்ற எல்லா செயல்களும் கெட்டு விடும்.*

**837. ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை**
**பெருஞ்செல்வ முற்றக் கடை.**

**ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர்-பேதை**
**பெருங் செல்வம் உற்றக்கடை.**

*ஏதிலார் = ஏதும் + இலார். ஒன்றும் இல்லாதவர். எந்த உறவும் இல்லாதவர். யார் யாரோ.*

*ஆர = பிரிய.*

*தமர் = தம் + அர். தனக்கு உரியவர். தன் குடும்பத்தினர், சுற்றம்.*

*ஒரு முட்டாளிடம், ஏராளமான செல்வம் கிடைத்தால், தொடர்பற்ற, சம்பந்தமே இல்லாத யார் யாரோ, 'போதும் போதும்', என்ற அளவுக்கு சாப்பிட்டு விட்டு, உணவை ஒதுக்கும்போது, அம்முட்டாளின் குடும்பத்தினரும், சுற்றமும் உணவின்றி பசியால் வாடிக் கொண்டிருப்பர்.*

**838. மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்**
**கையொன் றுடைமை பெறின்.**

**மையல் ஒருவன் களித்தற்றால்-பேதை தன்**
**கை ஒன்று உடைமை பெறின்.**

*மையல் = மை + அல். இருள் இயக்கம். மனத்தின் இருள். பைத்தியம்.*

*ஒரு பைத்தியக்காரன், கள்ளைக் குடித்து விட்டு, தன்னை மேலும் கட்டுப்படுத்த முடியாமல், கண் மண் தெரியாமல் ஆடி, விழுந்து, அடிப்பட்டு, துன்புற்று அழிவதைப் போல், முட்டாளின் கையில், ஏதாவது ஒரு சொத்து கிடைத்தால், எல்லோரிடமும் அதைக் காட்டி, தன் பெருமை பேசி, வரைமுறை இல்லாமல், ஆடாத ஆட்டம் ஆடி, அழித்து விடுவான், அழிந்து விடுவான்.*

**839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்**
**பீழை தருவதொன் றில்.**

**பெரிது இனிது, பேதையார் கேண்மை-பிரிவின்கண்**
**பீழை தருவது ஒன்று இல்.**

*முட்டாள்களின் நட்பும், பேச்சும், செயலும் மிகவும் வேடிக்கையானது, சுவாரசியமானது, நேரத்தை இனிமையாகப் போக்குவது, அதே சமயம், அவர்கள் பிரியும்போது, நமக்கு எந்த இழப்பும் ஏற்படுவதில்லை. அதனால், ஒரு வகையில், அது ஒரு இலவச பொழுதுபோக்கு தான்.*

**840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல்.**

**கழாஅக் கால் பள்ளியுள் வைத்தற்றால்-சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல்.**

கழாஅக்கால் = கழுவாத கால்.

பள்ளி = படுக்கை

சான்றோர் = சான்று + ஓர். முன்மாதிரியாக வாழும் பெரியவர்கள்

குழாம் = க் + உழ் + ஆம். பொருண்மையின் உள் ஆழத்தைக் காணும் இடம். அவை.

முன்மாதிரியாக வாழும் பெரியவர்கள், கற்றறிந்த அறிஞர்கள், ஆழ்ந்துக் கலந்துரையாடும் அவையில், ஒரு முட்டாள் நுழைவது என்பது, மலத்தை மிதித்த கழுவாத காலை, படுக்கையின் மேல் வைத்ததைப் போல், முகச் சுளிப்பை ஏற்படுத்தும், அருவருப்பை உண்டாக்கும்.

**பேதைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

மொத்தமான முட்டாள்தனம் என்பது என்னவென்றால், தன்னை மிக உயர்வாய் எண்ணிக் கொண்டு, வளர்ச்சி வாய்ப்பை, வருமானத்தைக் கைதவறிப் போகவிடுவதுதான்.

முட்டாள்தனத்திலே பெரிய முட்டாள்தனம் எதுவென்றால், ஒரு செயலைச் செய்வதற்கான பொருளோ, அறிவோ, அனுபவமோ, திறமையோ தன்கையில் இல்லாதபோது, யார் சொல்லியும் கேட்காமல், அச்செயலைச் செய்ய, குருட்டுத்தனமாக, வெறித்தனமாக ஆசைப்படுவதுதான்.

ஒரு தொழிலைச் செய்வதற்கு, தனக்கு பொருளோ, அறிவோ, அனுபவமோ, திறமையோ இல்லையே என்று வெட்கப்படாமலும், இருப்போரிடத்தில் அதைத் தேடிக் கற்க முயலாமலும், தொழிலின் நுணுக்கங்களைப் பகுத்து நெருங்கி அறியாமலும், தேவையான மற்ற எதையும் வளர்த்துக் கொள்ளாமலும் இருப்பதே, முட்டாளின் தொழில்.

தான், புலனடக்கத்தைப் பற்றிக் படித்துணர்ந்தும், பிறர்க்கு விளக்கிச் சொல்லியும், தானே புலனடக்கத்தைச் செய்யாமல் போகும் முட்டாளைக் காட்டிலும், வேறு முட்டாள் இல்லை.

முட்டாள், ஒரு பிறப்பில் செய்யும் செயலால், வரும் பிறப்பும், ஏழு பிறப்பும், தானாகவே நரக இருளில், முழுமையான அறியாமைக்குள் புகுந்து, அமுங்கிக் கிடப்பான், துன்புறுவான்.

ஒரு செயலைப் பற்றிய அறிவோ, அனுபவமோ, திறமையோ இல்லாமல், ஒரு முட்டாள், தனக்கு எல்லாம் தெரிந்ததாய்க் காட்டிக் கொண்டு, அச்செயலைச் செய்ய முற்பட்டால், அச்செயல் ஒன்று மட்டுமல்ல, அதனுடன் தொடர்புடைய மற்ற எல்லா செயல்களும் கெட்டு விடும்.

ஒரு முட்டாள், தன் கைக்கு வந்த செல்வத்தை, தனக்கும் தன் உறவுக்கும் பயன்படுத்த தெரியாமல், ஊரார் அனுபவிக்குமாறு விட்டு விடுவான்.

ஒரு பைத்தியக்காரன், கள்ளைக் குடித்து விட்டு, தன்னை மேலும் கட்டுப்படுத்த முடியாமல், கண் மண் தெரியாமல் ஆடி, விழுந்து, அடிப்பட்டு, துன்புற்று அழிவதைப் போல், முட்டாளின் கையில்,

ஏதாவது ஒரு சொத்து கிடைத்தால், எல்லோரிடமும் அதைக் காட்டி, தன் பெருமை பேசி, வரைமுறை இல்லாமல், ஆடாத ஆட்டம் ஆடி, அழித்து விடுவான், அழிந்து விடுவான்.

முட்டாள்களின் நட்பும், பேச்சும், செயலும் மிகவும் வேடிக்கையானது, சுவாரசியமானது, நேரத்தை இனிமையாகப் போக்குவது, அதே சமயம், அவர்கள் பிரியும்போது, நமக்கு எந்த இழப்பும் ஏற்படுவதில்லை.

முன்மாதிரியாக வாழும் பெரியவர்கள், கற்றறிந்த அறிஞர்கள், ஆழ்ந்துக் கலந்துரையாடும் அவையில், ஒரு முட்டாள் நுழைவது என்பது, மலத்தை மிதித்த கழுவாத காலை, படுக்கையின் மேல் வைத்ததைப் போல், முகச் சுளிப்பை ஏற்படுத்தும், அருவருப்பை உண்டாக்கும்.

# 85. புல்லறிவாண்மை

*புல்லறிவாண்மை = புல் + அறிவு + ஆண்மை. மேலோட்டமான, உறுதியற்ற அறிவைக் கொண்டு செயல்படுதல். ஆண்மை = ஆளுமை.*

**841. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை**
**இன்மையா வையா துலகு.**

**அறிவு இன்மை, இன்மையுள் இன்மை; பிறிது இன்மை**
**இன்மையா வையாது, உலகு.**

*அறிவில்லாமை, எல்லா வறுமையிலும், மோசமான வறுமையாய் காணப்படும்; எல்லா வறுமைக்கும், அறியாமையே காரணமாய் உள்ளது. பொன், பொருள், சொத்து ஆகிய மற்றவை இல்லையென்றாலும், அதை வறுமையாகக் கருத மாட்டார்கள், உலக மக்கள்.*

**842. அறிவிலா னெஞ்சுவந்த் தீதல் பிறிதியாதும்**
**இல்லை பெறுவான் றவம்.**

**அறிவு இலான் நெஞ்சு உவந்து ஈதல், பிறிது யாதும்**
**இல்லை, பெறுவான் தவம்.**

*அறிவில்லாதவன், யாருக்காவது மனமுவந்து பொருளைத் தருகிறான் என்றால், அதற்குக் காரணம், வேறொன்றுமில்லை, அப்பொருளைப் பெறுபவன், தவம் செய்திருக்கிறான் என்று பொருள்.*

*இது, கொடுப்பவனின் இப்பிறப்பு நல்வினை அல்ல, வாங்கிக் கொள்பவனின் பழைய புண்ணியம்.*

**843. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை**
**செறுவார்க்குஞ் செய்த லரிது.**

**அறிவு இலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை**
**செறுவார்க்கும் செய்தல் அரிது.**

*பீழை = இழப்பு.*

*செறுவார் = கொள்ளையர்.*

*அறிவில்லாதவர், தமக்குத் தாமே செய்துக் கொள்ளும் பேரிழப்பை, கொள்ளையர்கள் கூட, அவர்களுக்கு, செய்ய முடியாது.*

**844. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை**
**உடையம்யா மென்னுஞ் செருக்கு.**

**'வெண்மை எனப்படுவது யாது?' எனின்,**
**'ஒண்மை உடையம் யாம்!' என்னும் செருக்கு.**

*வெண்மை = வெள் + மை. வெறுமை. எண்ணம் எழாமை, சிந்திக்க முடியாமை. வெள்ளை வண்ணம். வெற்று மனம். சிறிதும் அறிவின்மை. முழுமையான அறியாமை. புலன்கள் இயங்கியும் அறியாமை. மனத்தின் மந்த நிலை. ஒன்றும் அறியாமை.*

*ஒண்மை = ஒண் + மை. முழுமையாகி மிக நெருங்கிய தன்மை. ஒண்மை = ஒள் + மை. முழுவதும் ஒளிரும் தன்மை. மெய்யுணர்வு. ஞானம். ஒளிர்மை. ஞான ஒளி.*

*ஒன்றும் அறியாமை எனப்படுவது என்னவென்றால், தாம் ஞானம் உடையவர் என்றுச் சொல்லிக் கொள்ளும், கருவம் தான்.*

*இயக்கமற்ற, வெறுமையான, மந்த மனத்தின் வெண்மைக்கும், இயக்கமுள்ள, நுண்ணிய, மெய்யுணர்ந்த ஒளிர்மைக்கும், வேறுபாடு உள்ளதை, அறியாதவன் அவன்.*

**845. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற**
**வல்லதூஉ மையந் தரும்.**

**கல்லாத மேற்கொண்டு ஒழுகல், கசடு அற**
**வல்லதூஉம், ஐயம் தரும்.**

*ஒருவன், தான் கற்காத ஒன்றை, அறியாத ஒன்றை, வழக்கமாகத் தன் வாழ்க்கையில் நடைமுறைப் படுத்தினால், அவன், உண்மையிலேயே, தெளிவாகக் கற்றுத் தேர்ந்தது என்று, ஏதாவது ஒன்று இருந்தாலும், அதைப் பற்றி சந்தேகம் வரும்.*

**846. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயின்**
**குற்ற மறையா வழி.**

**அற்றம் மறைத்தலோ புல்லறிவு-தம்வயின்**
**குற்றம் மறையாவழி.**

*அற்றம் = அற் + அம். இல்லாமை. கல்லாமை.*

*தகுந்த கல்வி, தன்னிடம் இல்லாததை மறைப்பதா, அறிவின்மை? இல்லை, கற்காததை நடைமுறைப்படுத்தி, அதனால் தன்னிடம் ஏற்பட்ட தவறை, அவன் மறைப்பதுதான் அறியாமை.*

*ஏனெனில், தவறு இருப்பதைக் காணும் போதே, கல்லாமை இருந்ததும் தெரிந்து விடும். தன் தவறை ஒப்புக் கொண்டால், அவன் திருந்துவான், கற்காமல் விட்டதை இனியாவது கற்பான், என்று பொருள். தவறை மறைத்தால், அவன் தொடர்ந்து தவறு செய்யப் போகிறான், கற்காமல் விட்டதை, அவன் எப்போதும் கற்கப் போவதில்லை, என்று பொருள்.*

**847. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.**

**அரு மறை சோரும் அறிவு இலான் செய்யும்,
பெரு மிறை, தானே தனக்கு.**

*அருமறை = அரு + மறை. அருவமாய் உள்ள, இறைவனைப் பற்றிய அறிவும், அனுபவ விளக்கமும்.*

*பெருமிறை = பெரும் + இறை. பெரிய சிதறல்.*

*அருவமாய் உள்ள இறைவனைப் பற்றிய அறிவையும், அனுபவ விளக்கங்களையும் தெளிவாக கற்று, அதை உணர்வதற்கான புலனடக்க பயிற்சியையும், மன அடக்க முயற்சியையும், உயிரோடு ஒன்றுதலையும் மேற்கொள்வதில் சோர்வடையும் அறிவில்லாதவன், பொருண்மையான இறையைத் தேடி, தன் மனதைப் பெரிதும் சிதறடித்து, இறையோடு ஒன்ற இயலாதவாறு, தனக்குத் தானே தீங்கு செய்து கொள்கிறான்.*

**848. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.**

**ஏவவும் செய்கலான், தான் தேறான், அவ் உயிர்
போஒம் அளவும் ஓர் நோய்.**

*போஒம் = ப் + ஒ + ஒம். மெதுவாக பிரிந்துச் செல்லும்.*

*சொல்லியும் முயற்சி செய்யாதவன், தானாக அறிந்து தெளியாதவன் ஆகிய உயிர், முழுமையாய் இம்மண்ணைவிட்டுப் போகும் வரையும், எல்லாருக்கும் துன்பம் தரும் நோயாக உணரப்படும்.*

*அவனால், பிறருக்கும், முயற்சி செய்யாமல், கற்றதைச் சிந்திக்காமல், மெய்யறிவை இல்லாத இடமெல்லாம் தேடிக் கொண்டே இருக்கும், அறியாமை நோய் தொற்றிக் கொள்ளலாம்.*

**849. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.**

**காணாதாற் காட்டுவான் தான் காணான்; காணாதான்
கண்டான் ஆம், தான் கண்ட ஆறு.**

*தானே (இறைமையைக்) காணாதவன், மற்றொரு (இறைமையைக்) காணாதவனுக்கு, காணும் வழி காட்டினானாம். அந்த மற்றொரு காணாதவனோ, தான் ஏற்கனவே கண்டதுபோல், மீண்டும் (இறைமையைக்) கண்டதாய்க் கூறினானாம். இது எப்படி இருக்கு?*

**850. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.**

**உலகத்தார், 'உண்டு' என்பது 'இல்' என்பான் வையத்து அலகையா வைக்கப்படும்.**

*அலகை = அல்ல + கை. இல்லை கை, தேகம். உடலற்ற பேய்.*

*உலக மக்கள், (இறைமை) இருக்கிறது என்றால், அவன், இல்லை என்பான். அத்தகையவன், நிலையான உலகில், நிலையற்ற பேயாக கருதப்படுவான்.*

*ஏனென்றால், உலகத்தின் கருத்தை மறுப்பதே, தன் தனிச்சிறப்பாய், இன்பமாய் காண்கிறான். உண்மையில் உள்ள ஆனந்தத்தை விட்டுவிட்டு, பொய்மையின், தற்காலிகமாக பிரபலமாகும் நெகிழ்ச்சியை, பற்றிக் கொள்கிறான்.*

**புல்லறிவாண்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அறிவில்லாமை, எல்லா வறுமையிலும், மோசமான வறுமையாய் காணப்படும்; எல்லா வறுமைக்கும், அறியாமையே காரணமாய் உள்ளது. பொன், பொருள், சொத்து ஆகிய மற்றவை இல்லையென்றாலும், அதை வறுமையாகக் கருத மாட்டார்கள், உலக மக்கள்.*

*அறிவில்லாதவன், யாருக்காவது மனமுவந்து பொருளைத் தருகிறான் என்றால், அதற்குக் காரணம், வேறொன்றுமில்லை, அப்பொருளைப் பெறுபவன், தவம் செய்திருக்கிறான் என்று பொருள்.*

*அறிவில்லாதவர், தமக்குத் தாமே செய்துக் கொள்ளும் பேரிழப்பை, கொள்ளையர்கள் கூட, அவர்களுக்கு, செய்ய முடியாது.*

*ஒன்றும் அறியாமை எனப்படுவது என்னவென்றால், தாம் ஞானம் உடையவர் என்று சொல்லிக் கொள்ளும், கருவம் தான்.*

*ஒருவன், தான் கற்காத ஒன்றை, அறியாத ஒன்றை, வழக்கமாக தன் வாழ்க்கையில் நடைமுறைப் படுத்தினால், அவன், உண்மையிலேயே, தெளிவாகக் கற்றுத் தேர்ந்தது என்று, ஏதாவது ஒன்று இருந்தாலும், அதைப் பற்றி சந்தேகம் வரும்.*

*தகுந்த கல்வி, தன்னிடம் இல்லாததை மறைப்பதா, அறிவின்மை? இல்லை, கற்காததை நடைமுறைப்படுத்தி, அதனால் தன்னிடம் ஏற்பட்ட தவற்றை, அவன் மறைப்பதுதான் அறியாமை.*

*அருவமாய் உள்ள இறைவனைப் பற்றிய அறிவையும், அனுபவ விளக்கங்களையும் தெளிவாக கற்று, அதை உணர்வதற்கான புலனடக்க பயிற்சியையும், மன அடக்க முயற்சியையும், உயிரோடு ஒன்றுதலையும் மேற்கொள்வதில் சோர்வடையும் அறிவில்லாதவன், பொருண்மையான இறையைத் தேடி, தன் மனதைப் பெரிதும் சிதறடித்து, இறையோடு ஒன்ற இயலாதவாறு, தனக்குத் தானே தீங்கு செய்துகொள்கிறான்.*

*சொல்லியும் முயற்சி செய்யாதவன், தானாக அறிந்து தெளியாதவன், ஆகிய உயிர், முழுமையாய் இம்மண்ணைவிட்டுப் போகும் வரையும், எல்லாருக்கும், துன்பம் தரும் நோயாக உணரப்படும்.*

*தானே (இறைமையைக்) காணாதவன், மற்றொரு (இறைமையைக்) காணாதவனுக்கு, காணும் வழி காட்டினானாம். அந்த மற்றொரு காணாதவனோ, தான் ஏற்கனவே கண்டதுபோல், மீண்டும் (இறைமையைக்) கண்டதாய் கூறினானாம்.*

*உலக மக்கள், (இறைமை) இருக்கிறது என்றால், அவன், இல்லை என்பான். அத்தகையவன், நிலையான உலகில், நிலையற்ற பேயாகக் கருதப்படுவான்.*

## 86. இகல்

*இகல் = இ + கல். நிலையான தடை. மாற்ற முடியாத தன்மை. மனத்தடை. காரணமற்ற / காரணம் தெரியா மனநிலை மாற்றம். மனத்தின் அசையா நிலை. பயமுறுத்தல். உளவியல் அழுத்தக் கட்டளை. உளவியல் தூண்டல். உளவியல் ஆதிக்கம். பகைமை. தனிமை. சேராமை. துரத்துதல். காரணம் தெரியாத வெறுப்பு. பகையுணர்ச்சி. அமைதியின்மை. தன் மனத்தின் அசையாமையால், பிறரை ஆட்டுவித்தல். தனி நபர் / தனி இருப்பு வெளியின் எல்லை நிர்ணயம் மற்றும் விரிவாக்கம். சுய பாதுகாப்பு வளையம். இகல் = இக் + அல். நிலையான மெய்யின் அதிர்வு / அதிர்வின்மை. உள் இருள். ஆழ்மனத்தடை. ஊழின் ஒரு வகை வெளிப்பாடு.*

**851. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.**

**இகல் என்ப-எல்லா உயிர்க்கும் பகல் என்னும்
பண்புஇன்மை பாரிக்கும் நோய்.**

*பகல் = ப் + அகல். வெளியை விரிவாக்குவது. இருப்பின் எல்லையை நீட்டுவது.*

*பண்பு = ப் + அண் + ப் + உ. மனத்தின் மிக நெருங்கிய தன்மை உடலால் வெளிப்படுவது.*

*பார் = ப் + ஆர். வெளியைப் பிரி.*

*புற இருப்புடன் நெருக்கமின்றி, தன் இருப்பின் வெளியைப் பிறரற்று விரிவாக்கி, எல்லையிட்டுப் பிரிக்கும் நோயை, எல்லா உயிர்களையும் பாதிக்கும், இகல் என்பர்.*

*காரணம் தெரியாமல், தனக்கு அருகில் யாரையும் அண்ட விடாமல் விரட்டும், இகல் அல்லது பகையுணர்ச்சி எனும் நோயுற்ற மனத்தன்மை, எல்லா உயிர்க்கும் இருக்கின்றது.*

**852. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.**

**பகல் கருதிப் பற்றா செயினும், இகல் கருதி,
இன்னா செய்யாமை தலை.**

*பற்றா = விரும்பாதவை.*

*ஒருவன், தனக்கு அருகில் யாரையும் அண்ட விடாமல், விரும்பாதனவற்றைச் செய்தாலும், பகையுணர்ச்சி எனும் மனநோயால் அவன் அப்படி செய்கிறான், என்று நினைத்து, அவனுக்குத் தீங்கு செய்யாதிருத்தல் உயர்ந்தது.*

**853. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.**

**இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின், தவல் இல்லாத்
தா இல் விளக்கம் தரும்.**

*எவ்வம் = எவ் + அம். எவ் = எ + உ. உயர்ந்து வெளிப்படும். எவ்வம் = மனத்தின் அடியிலிருந்து எழுந்து வெளிப்படும் தன்மை. எவ்வம் = எவ் + அம். எந்தத் தன்மை. காரணம் தெரியாத தன்மை.*

*தவல் = த் + அவ் + அல். தேகம். பிறப்பு.*

*தாவு = த் + ஆவ் + உ. இடம். வெளி. மனவெளி.*

*விளக்கம் = விளக்கு + அம். விளக்கின் தன்மை. ஒளி. ஞானம். இருள் அகலும். அறியாமை விலகும்.*

*பகையுணர்ச்சி என்னும், காரணமறியா நோயை நீக்கி விட்டால், தேக உணர்வற்ற மனவெளியில், ஞானஒளியைப் பெறுவான்.*

*பகையுணர்ச்சி என்பது ஒரு வகையான எதிர்மறை ஆற்றல்நிலை. அதைக் கொண்ட மனம், அசையாமை என்னும் பண்பையும் இயல்பாகவே கொண்டிருக்கும். எனவே, அந்தப் பகையுணர்ச்சியை நீக்கிய மனம், அசையாமையில் எளிதில் நிலைத்து, புலன்களின் தாக்கத்திலிருந்தும், மனத்தின் இயக்கத்தில் இருந்தும் விடுபட்டு, ஞானம் அடையும்.*

**854. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னும்
துன்பத்துட் டுன்பங் கெடின்.**

**இன்பத்துள் இன்பம் பயக்கும்-இகல் என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.**

*பகையுணர்ச்சி என்னும் மனநிலை தான், எல்லா துன்பங்களுக்கும் காரணமாய் உள்ளது. அத்தடை அழிந்து விட்டால், எல்லா இன்பங்களுக்கும் காரணமான, பேரின்பம் விளையும்.*

**855. இகலெதிர் சாய்த்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.**

**இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை, யாரே,
மிகல் ஊக்கும் தன்மையவர்?**

*சாய்த்து = விலக்கி.*

*பகையுணர்ச்சியை எதிர்த்து, விலக்கப் பழகிய வலிமை உடையவரை, எவராலும், அது மிகை ஆகிடத் தூண்ட முடியாது.*

**856. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.**

**இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை**
**தவலும் கெடலும் நணித்து.**

*நணி = ன் + அண் + இ. மிக மிக நெருங்கி. விரைவில்.*

*பகையுணர்ச்சி மிகுவதில், இன்பம் காண்பவனின் வாழ்க்கையில், உடலும் பொருளும், விரைவில் அழிந்துவிடும்.*

**857. மிகல்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகல்மேவல்**
**இன்னா வறிவி னவர்.**

**மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார்-இகல் மேவல்**
**இன்னா அறிவினவர்.**

*மேவல் = ம் + ஏவல். மனத்தின் கட்டளை. விருப்பம்.*

*பகையுணர்ச்சியை விரும்புபவன், தீங்கு செய்யும் அறிவுடையவன்.*

*பகையுணர்ச்சி அதிகமாவதை விரும்புபவனோ, மெய்ப்பொருளைக் காணவே மாட்டான்.*

**858. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை**
**மிகலூக்கி னூக்குமாங் கேடு.**

**இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம்; அதனை மிகல்**
**ஊக்கின், ஊக்குமாம் கேடு.**

*எதிர் சாய்தல் = விலகுதல்.*

*பகையுணர்ச்சியை விலக்குதல், ஆக்கச் செயலில் ஈடுபட்டு, செல்வம் உண்டாக்க உதவும். மாறாக, அப்பகையுணர்ச்சியை அதிகரித்தால், அதனால் வரும் அழிவும், அதிகமாகி விடும்.*

**859. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை**
**மிகல்காணுங் கேடு தரற்கு.**

**இகல்காணான், ஆக்கம் வருங்கால்; அதனை**
**மிகல் காணும், கேடு தரற்கு.**

*செல்வம் வரும்போது, ஒருவன் பகையுணர்ச்சியை உணரமாட்டான். கேடு வருகையிலோ, அதை மிகுதியாக உணர்வான்.*

**860. இகலானா மின்னாத வெல்லா நகலானாம்**
**நன்னய மென்னுஞ் செருக்கு.**

**இகலான் ஆம், இன்னாத எல்லாம்; நகலான் ஆம்,**
**நல் நயம் என்னும் செருக்கு.**

பகையுணர்ச்சியால் வருவது, தீமை, துன்பம் எல்லாம். அது அகன்றால், 'நல்ல மனமுடன் இருக்கிறோம்', எனும் தற்பெருமை, பெருமிதம் ஏற்படும்.

## இகல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

புற இருப்புடன் நெருக்கமின்றி, தன் இருப்பின் வெளியைப் பிறரற்று விரிவாக்கி, எல்லையிட்டுப் பிரிக்கும் நோயை, எல்லா உயிர்களையும் பாதிக்கும், இகல் என்பர்.

ஒருவன், தனக்கு அருகில் யாரையும் அண்ட விடாமல், விரும்பாதனவற்றைச் செய்தாலும், பகையுணர்ச்சி எனும் மனநோயால் அவன் அப்படிச் செய்கிறான், என்று நினைத்து, அவனுக்குத் தீங்கு செய்யாதிருத்தல் உயர்ந்தது.

பகையுணர்ச்சி என்னும், காரணமறியா நோயை நீக்கி விட்டால், தேக உணர்வற்ற மனவெளியில், ஞானஒளியைப் பெறுவான்.

பகையுணர்ச்சி என்னும் மனநிலை தான், எல்லா துன்பங்களுக்கும் காரணமாய் உள்ளது. அத்தடை அழிந்து விட்டால், எல்லா இன்பங்களுக்கும் காரணமான, பேரின்பம் விளையும்.

பகையுணர்ச்சியை எதிர்த்து, விலக்கப் பழகிய வலிமை உடையவரை, எவராலும், அது மிகை ஆகிடத் தூண்ட முடியாது.

பகையுணர்ச்சி மிகுவதில், இன்பம் காண்பவனின் வாழ்க்கையில், உடலும் பொருளும், விரைவில் அழிந்துவிடும்.

பகையுணர்ச்சியை விரும்புபவன், தீங்கு செய்யும் அறிவுடையவன்.

பகையுணர்ச்சி அதிகமாவதை விரும்புபவனோ, மெய்ப்பொருளைக் காணவே மாட்டான்.

பகையுணர்ச்சியை விலக்குதல், ஆக்கச் செயலில் ஈடுபட்டு, செல்வம் உண்டாக்க உதவும். மாறாக, அப்பகையுணர்ச்சியை அதிகரித்தால், அதனால் வரும் அழிவும், அதிகமாகி விடும்.

செல்வம் வரும்போது, ஒருவன் பகையுணர்ச்சியை உணரமாட்டான். கேடு வருகையிலோ, அதை மிகுதியாக உணர்வான்.

பகையுணர்ச்சியால் வருவது, தீமை, துன்பம் எல்லாம். அது அகன்றால், 'நல்ல மனமுடன் இருக்கிறோம்', எனும் தற்பெருமை, பெருமிதம் ஏற்படும்.

## 87. பகைமாட்சி

*பகைமாட்சி = பகை + மாட்சி. மாட்சி = ம் + ஆட்சி. பகைமாட்சி = பகையை அமைதியாய் ஆளும் முறை.*

**861. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா**
**மெலியார்மேல் மேக பகை.**

**வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக; ஓம்பா,**
**மெலியார்மேல் மேக, பகை.**

*மாறேற்றல் = மாறு + ஏற்றல். எதிரான பகை.*

*மேகம் = ம் + ஏகம். கொண்டு மூடிய ஒன்று. மேகம் = ம் + ஏக் + அம். கொண்டு மூடி மிக உயர்ந்த பொருண்மைத் தன்மை. வெளிப்படையானது. எவரும் பார்க்கக் கூடியது.*

*வலிமையான மன்னன், தன்னை அடுத்து இருந்தால், அவன் எப்போது வேண்டுமானாலும், தன்னைத் தாக்கக் கூடும். எனவே, அவனுக்கு எதிரான, பகையான, வேறொரு வலிமையான மன்னனை நட்பாக்கிக் கொள்ள வேண்டும். அதனால், வலிமையில் ஒரு சமநிலை ஏற்படும்.*

*தன்னைவிட வலிமை குன்றிய மன்னன் மேல், தேவையிருந்தால், காரணமிருந்தால், போரிடலாமே தவிர, பகையிருப்பதை, மேகத்தைப் போல், வெளிப்படையாய் காட்டிக் கொள்ளக் கூடாது. இல்லையென்றால், அவன் தன்னைவிட வலிமையான மன்னனுடன் சேர்ந்து, தன்மேல் போர் தொடுக்கக் கூடும்.*

**862. அன்பிலா னான்ற துணையிலான் றான்றுவ்வான்**
**என்பரியு மேதிலான் றுப்பு.**

**அன்பு இலன்; ஆன்ற துணை இலன்; தான் துவ்வான்;**
**என் புரியும், ஏதிலான் துப்பு?**

*துவ்வு = த் + உவ் + உ. தேகம் புறத்தே முழுமையாய் வெளிப்படுதல். துணிவு.*

*பரி = ப் + அரி. கொண்டதைப் பிரி. அழி.*

*ஏதிலான் = ஏது(ம்) + இலான். எந்த உறவும் இல்லாதவன். கருணை, இரக்கம் எதுவும் இல்லாதவன். பகைவன்.*

*துப்பு = த் + உப் + உ. தேகத்தின் புறத்தே கொண்டு வெளிப்படுவது. ஆயுதம், படை, முயற்சி.*

*குடிகள், சுற்றம், நண்பர், அறிஞர், அமைச்சர் ஆகியோரின் மீது அன்பில்லாதவன், பிற மன்னர்களிடம் நெருங்கிய நட்பில்லாதவன்,*

*தானேயும் துணியாதவன், எப்படி எதிரியின் ஆயுதத்தை, படையை, முயற்சியை அழிக்க முடியும்?*

**863. அஞ்சு மறியா னமைவிலா னீகலான்**
**தஞ்ச மெளியன் பகைக்கு.**

**அஞ்சும்; அறியான்; அமைவு இலன்; ஈகலான்;-**
**தஞ்சம் எளியன், பகைக்கு.**

*பகைக்கும், படைக்கும், போருக்கும், ஊறுக்கும், உயிர்க்கும்அஞ்சுபவன்; தன் வலிமையையும், பிறர் வலிமையும், ஒற்றையும், பகைமையையும், காத்துக் கொள்வதையும் அறியாதவன்; அடக்கமும், அமைதியும், அமைச்சும், நட்பும், நேர்மையும் இல்லாதவன்; குடிக்கும், நட்புக்கும், சுற்றத்திற்கும், அறிஞர்க்கும், அறவோர்க்கும் பொருள் உதவி செய்யாதவன், தன்னைவிட வலிமை குன்றிய பகைவன் வந்தாலும், பயந்தோடி, வேறு நாட்டில் தஞ்சம் புகுவான்.*

**864. நீங்கான் வெகுளி நிறைவில னெஞ்ஞான்றும்**
**யாங்கணும் யார்க்கு மெளிது.**

**நீங்கான் வெகுளி; நிறை இலன்;-எஞ்ஞான்றும்,**
**யாங்கணும், யார்க்கும், எளிது.**

*எப்பொழுதும் மிகுந்த கோபத்துடன் இருப்பவனையும், எந்த நாளும் மனநிறைவு கொள்ளாதவனையும், எப்போது வேண்டுமானாலும், யார் வேண்டுமானாலும், எளிதில் வென்று விடலாம்.*

**865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்**
**பண்பிலன் பற்றார்க் கினிது.**

**வழி நோக்கான்; வாய்ப்பன செய்யான்; பழி நோக்கான்;**
**பண்பு இலன்;-பற்றார்க்கு இனிது.**

*படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு மற்றும் அரண் ஆகியவற்றை உருவாக்கிக் காப்பாற்றும் வழிமுறைகளைக் கற்றுச் செயல்படுத்தாதவன், இயற்கையாய், இயல்பால், சமயத்தால் அமைகின்ற வளர்ச்சிக்கான வாய்ப்புகளைத் தவறவிடுபவன், நீதி, நியாயம், நேர்மை ஆகியவற்றைத் தவறினால் ஏற்படும் குற்றம் பற்றிச் சிந்திக்காதவன், யாருடனும் நெருங்கிப் பழகும் குணமில்லாதவன் ஆகிய அவன், விரும்பாத பகைவர்க்கு, போர் தொடுப்பதற்கான காரணங்கள் கிடைப்பதால், இனிமையானவன்.*

**866. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்**
**பேணாமை பேணப் படும்.**

**காணாச் சினத்தான், கழி பெருங் காமத்தான்,-**
**பேணாமை பேணப்படும்.**

*கோபத்தால், உண்மையை அறிய முடியாதவன், உடலை அழிக்கும் மிகுந்த பெண்ணாசை உடையவன், நாட்டைப் பாதுகாத்து, செல்வம் வளர்க்காதது எல்லாம், மேலும் ஊக்குவிக்கப்பட்டு, வேறு மன்னனால் போர் தொடுக்கப்பட்டு, நாடு வெல்லப்படும்.*

**867. கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து**
**மாணாத செய்வான் பகை.**

**கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற-அடுத்து இருந்து,**
**மாணாத செய்வான் பகை.**

*மன்ற வடுத்திருந்து = மன்றம் அடுத்திருந்து. சபையை வைத்துக்கொண்டே*

*மாணாத = மனம் நெருங்காத. மனம் ஒப்பாத.*

*பலரும் கூடியுள்ள சபையிலேயே, மனதிற்கு ஒப்பாத செயல்களைச் செய்பவனின் விரோதத்தை, விலை கொடுத்தாவது வாங்கிக் கொள்ள வேண்டும்.*

*ஏனென்றால், அத்தகைய ஒழுக்கமற்றவன், உள்பகை உருவாகவும், மக்களிடையே வேறு மன்னனுக்கு ஆதரவு பெருகவும்,*

*வேறு மன்னன் போர் தொடுப்பதை நியாயப்படுத்தவும், காரணமாகி விடுவான்.*

**868. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்**
**கினனிலனா யேமாப் புடைத்து.**

**குணன் இலனாய்க், குற்றம் பல ஆயின் மாற்றார்க்கு**
**இனன் இலன்ஆம் ஏமாப்பு உடைத்து.**

*ஏமாப்பு = ஏம் + ஆப் + உ. மிக உயர்ந்து கொண்டு மூடி வெளியைக் கொண்டு உள்ளிருத்தல். அரண். பாதுகாப்பு.*

*அன்பு, பண்பு, அமைதி, ஒழுக்கம், அறிவு, ஊக்கம், துணிவு போன்ற குணங்கள் இல்லாதவனாய் இருந்து, நியாயம், நீதி, நேர்மை அற்று, அவன் செய்யும் குற்றங்களும் பெருகினால், பிற மன்னருக்கு இணையான மதிப்பும், நாட்டை ஆளும் தகுதியும் இழந்தவனாகி, தன் நாட்டின் அரணை தானே உடைத்ததுபோல் ஆகிவிடும் அல்லது தன் நாட்டை எதிர்த்துப் போரிட வரும் பகைவரின் பாதுகாப்புக்கு, தானே அரண் அமைத்துக் கொடுத்தது போலாகி விடும்.*

**869. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.**

**செறுவார்க்குச் சேண் இகவா இன்பம் அறிவு இலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.**

*சேணிகவா = சேண் + இகவா. சேண் = ச் + ஏண். இயக்கம் மிக உயர்ந்து மிக நெருங்கி. ஒன்று. இகவா = பிரியா. சேணிகவா = ஒன்றிப் பிரியா. முழுமையான. சேணிகவா இன்பம் = முழுமையான, நிலைத்த இன்பம், ஆனந்தம்.*

*நாட்டை ஆளும் அறிவில்லாததால், எல்லாவற்றிற்கும் பயப்படும் மன்னரைப் பெற்றால், பகைவனுக்கு ஒரே ஆனந்தம் தான்.*

**870. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்றும்
ஒல்லானை யொல்லா தொளி.**

**கல்லான் வெகுளும் சிறு பொருள், எஞ்ஞான்றும்,
ஒல்லானை ஒல்லாது, ஒளி.**

*நாட்டை ஆளும் கல்வியைக் கற்காத, சிறிய விடயத்திற்கெல்லாம் எப்பொழுதும் மிகுந்த கோபம் கொள்ளும் மன்னனை, அடுத்திருக்கும் பகைவன், முயன்று வெல்லவில்லை என்றால், அவனை, புகழ் என்னும் ஒளி, என்றுமே வந்தடையாது. ஏனென்றால், அதைவிட ஒரு அற்புதமான சந்தர்ப்பம், காரணம், போர் தொடுக்கக் கிடைக்காது.*

**பகைமாட்சி அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*தன்னைவிட வலிமையான, பகை மன்னனுக்கு எதிராக, வேறொரு வலிமையான மன்னனை, தனக்கு நட்பாக்கிக் கொள்ள வேண்டும். தன்னைவிட வலிமை குன்றிய மன்னன் மீது பகையிருந்தாலும், அதை வெளிக்காட்டிக் கொள்ளக் கூடாது. குடிகள், சுற்றம், நண்பர், அறிஞர், அமைச்சர் ஆகியோரின் மீது அன்பில்லாதவன், பிற மன்னர்களிடம் நெருங்கிய நட்பில்லாதவன், தானேயும் துணியாதவன், எப்படி எதிரியின் ஆயுதத்தை, படையை, முயற்சியை அழிக்க முடியும்?*

*பகைக்கும், படைக்கும், போருக்கும், ஊறுக்கும், உயிர்க்கும்அஞ்சுபவன்; தன் வலிமையையும், பிறர் வலிமையும், ஒற்றையும், பகைமையையும், காத்துக் கொள்வதையும் அறியாதவன்; அடக்கமும், அமைதியும், அமைச்சும், நட்பும், நேர்மையும் இல்லாதவன்; குடிக்கும், நட்புக்கும், சுற்றத்திற்கும், அறிஞர்க்கும், அறவோர்க்கும் பொருள் உதவி செய்யாதவன், தன்னைவிட வலிமை குன்றிய பகைவன் வந்தாலும், பயந்தோடி, வேறு நாட்டில் தஞ்சம் புகுவான்.*

*எப்பொழுதும் மிகுந்த கோபத்துடன் இருப்பவனையும், எந்த நாளும் மனநிறைவு கொள்ளாதவனையும், எப்போது வேண்டுமானாலும், யார் வேண்டுமானாலும், எளிதில் வென்று விடலாம்.*

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு மற்றும் அரண் ஆகியவற்றை உருவாக்கிக் காப்பாற்றும் வழிமுறைகளைக் கற்றுச் செயல்படுத்தாதவன், இயற்கையாய், இயல்பால், சமயத்தால் அமைகின்ற வளர்ச்சிக்கான வாய்ப்புகளைத் தவறவிடுபவன், நீதி, நியாயம், நேர்மை ஆகியவற்றைத் தவறினால் ஏற்படும் குற்றம் பற்றிச் சிந்திக்காதவன், யாருடனும் நெருங்கிப் பழகும் குணமில்லாதவன் ஆகிய அவன், விரும்பாத பகைவர்க்கு, போர் தொடுப்பதற்கான காரணங்கள் கிடைப்பதால், இனிமையானவன்.

கோபத்தால், உண்மையை அறிய முடியாதவன், உடலை அழிக்கும் மிகுந்த பெண்ணாசை உடையவன், நாட்டைப் பாதுகாத்து, செல்வம் வளர்க்காதது எல்லாம், மேலும் ஊக்குவிக்கப்பட்டு, வேறு மன்னனால் போர் தொடுக்கப்பட்டு, நாடு வெல்லப்படும்.

பலரும் கூடியுள்ள சபையிலேயே, மனதிற்கு ஒப்பாத செயல்களைச் செய்பவனின் விரோதத்தை, விலை கொடுத்தாவது வாங்கிக் கொள்ள வேண்டும்.

அன்பு, பண்பு, அமைதி, ஒழுக்கம், அறிவு, ஊக்கம், துணிவு போன்ற குணங்கள் இல்லாதவனாய் இருந்து, நியாயம், நீதி, நேர்மை அற்று, அவன் செய்யும் குற்றங்களும் பெருகினால், பிற மன்னருக்கு இணையான மதிப்பும், நாட்டை ஆளும் தகுதியும் இழந்தவனாகி, தன் நாட்டின் அரணை தானே உடைத்ததுபோல் ஆகிவிடும் அல்லது தன் நாட்டை எதிர்த்துப் போரிட வரும் பகைவரின் பாதுகாப்புக்கு, தானே அரண் அமைத்துக் கொடுத்தது போலாகி விடும்.

நாட்டை ஆளும் அறிவில்லாததால், எல்லாவற்றிற்கும் பயப்படும் மன்னரைப் பெற்றால், பகைவனுக்கு ஒரே ஆனந்தம் தான்.

நாட்டை ஆளும் கல்வியைக் கற்காத, சிறிய விடயத்திற்கெல்லாம் எப்பொழுதும் மிகுந்த கோபம் கொள்ளும் மன்னனை, அடுத்திருக்கும் பகைவன், முயன்று வெல்லவில்லை என்றால், அவனை, புகழ் என்னும் ஒளி, என்றுமே வந்தடையாது.

## 88. பகைத் திறந்தெரிதல்

*பகைத் திறந்தெரிதல் = பகையின் வகைகளும், அவற்றின் வலிமையும், பகையை அழித்து, தன்னைக் காக்கும் வழியும், அறிதல்.*

**871. பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று.**

**பகை என்னும் பண்புஇலதனை, ஒருவன்
நகையேயும், வேண்டற்பாற்று அன்று.**

*பகைமை என்பது நல்ல குணமல்ல. அதை ஒருவன் வேடிக்கையாகக் கூட விரும்பக் கூடாது.*

*பகைமை இருந்தால், வளங்கள் செழிக்கவோ, செல்வம் பெருக்கவோ, திட்டங்கள் தீட்டி, ஊக்கமுடன் உழைக்கவோ முடியாது. மக்களும் அமைதியாகவோ இன்பமாகவோ வாழ முடியாது. எப்பொழுது போர் மூளுமோ, என பயப்பட வேண்டியதாய் இருக்கும். ஆக்கப் பணிகளை விட்டு, போருக்கான ஆயத்தங்களில், நாட்டின் வருவாயையும், செல்வத்தையும், வீணாகச் செலவழிக்க வேண்டியதாய் இருக்கும். கடைசியில், வறுமையும், பிணியும், துன்பமும்தான் மிஞ்சும். எனவே, பகைமையை எந்த நாளும் விரும்பக்கூடாது.*

**872. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.**

**வில் ஏர் உழவர் பகை கொளினும், கொள்ளற்க-
சொல் ஏர் உழவர் பகை.**

*வில்லை உயர்த்திப் போர் செய்யும் வீரர்களை, பகையாகக் கொண்டாலும் பரவாயில்லை, சொல்லை, சத்தம் உயர்த்திப் பேசும் அறிஞர்களை, அமைச்சர்களை, பகையாக்கிக் கொள்ளக் கூடாது.*

**873. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.**

**ஏமுற்றவரினும் ஏழை-தமியனாய்ப்
பல்லார் பகை கொள்பவன்.**

*ஏம் = மிக உயர்ந்த மனம். கட்டுப்படுத்த முடியாத மனம். பைத்தியம்.*

*ஏழை = மிகவும் தாழ்ந்த நிலை.*

*தான் ஒருவனாய் இருந்து, பலரிடம் பகை கொள்பவன், பைத்தியக்காரனைக் காட்டிலும், தாழ்வாய்க் கருதப்படுவான்.*

**874. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கட் டங்கு முலகு.**

**பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்பு உடையாளன்
தகைமைக்கண் தங்கிற்று, உலகு.**

*பகையை நட்பாக்கிக் கொண்டு பழகும் குணமுடையவன் ஆட்சியின் பெருமை பாராட்டி, மக்கள் அந்நாட்டிலேயே தொடர்ந்து வாழ்வர். இல்லையெனில், அந்நாட்டை விட்டு, வேறு அமைதி நிலவும் நாட்டிற்கு, போய்விடுவர்.*

**875. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவன்
இன்றுணையாக் கொள்கவற்றி னொன்று.**

**தன் துணை இன்றால்; பகை இரண்டால்; தான் ஒருவன்
இன் துணையாக் கொள்க, அவற்றின் ஒன்று.**

*தனக்கு நட்பாக வேறு மன்னன் இல்லாதபோது, பகை மட்டும் இரண்டாக இருந்து, தானாகச் சமாளிக்க முடியாதபோது, அந்த இரண்டு பகைகளில் ஒன்றை, நிலையான நெருங்கிய நட்பாக்கிக் கொள்ள வேண்டும்.*

**876. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.**

**தேறினும், தேறாவிடினும், அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல்.**

*இரண்டு பகைகளில் யாரை நட்பாக்கிக் கொள்வது, யாரை விலக்கி வைப்பது என்று தேர்வு செய்திருந்தாலும், தேர்வு செய்யாமல் இருந்தாலும், போர் வந்த சமயத்தில், அந்தத் தேர்வை வெளிப்படுத்தாமல், தனக்கு ஒத்து வராதவனையும் சரி, தன்னைப் பிரியாதவன் என்று கருதுபவனையும் சரி, தற்காலிகமாக, அப்படியே விட்டு வைக்க வேண்டும்.*

*ஏனென்றால், கடைசி நேரத்தில் அல்லது போர் நடக்கையில், நட்புக் கரத்தை நீட்டினால், அது தன்னுடைய பலவீனமாகப் பார்க்கப்படும். ஏற்படுத்தும் ஒப்பந்தமும், தனக்கு பாதகமாகிப் போய்விடலாம். அமைதிக் காலத்தில் நட்பை ஏற்படுத்துவது, இணையும் இருவருக்குமே, தத்தம் பலத்தைக் கூட்டும் செயலாகக் கருதப்படும். உடன்படிக்கையின் விதிமுறைகளும், நிபந்தனைகளும், ஏற்றத் தாழ்வின்றி, இருதரப்பினரும் மனம் விரும்பி ஏற்கக் கூடியதாய் இருக்கும்.*

**877. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.**

**நோவற்க, நொந்தது அறியார்க்கு; மேவற்க,**
**மென்மை, பகைவரகத்து.**

*மேவு = ம் + ஏ + உ. மனத்தை மிக உயர்த்தி வெளிப்படுத்து,*
*மென்மை = பலவீனம்.*

*தனக்கு நேர்ந்த துன்பத்தையும், இழப்பையும், அதைப் பற்றித் தெரியாதவர்களிடம், காட்டிக் கொள்ள வேண்டாம். அதனால் பயனுமில்லை, தன் மதிப்பும் குறைந்துவிடும். தன்னுடைய பலவீனத்தையும், பகைவனிடம் காட்டக் கூடாது. அது, அவன், தன்மேல் போர் தொடுக்க, காரணமாகி விடலாம்.*

**878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்**
**பகைவர்கட் பட்ட செருக்கு.**

**வகை அறிந்து, தற் செய்து, தற் காப்ப, மாயும்-**
**பகைவர்கண் பட்ட செருக்கு.**

*பகையின் வகை அறிந்து, அதை அழிக்கும் வழி தெரிந்து, தன்நாட்டு வளத்தையும், செலவத்தையும் பெருக்கி, பொருளின் மிகைகொண்டு, தன்நாட்டைக் காத்துக் கொண்டால், பகைவரிடம் இருந்த கருவம், அழிந்து விடும்.*

**879. இளைதாக முண்மரங் கோலாக் களையுநர்**
**கைகொல்லுங் காழ்த்த விடத்து.**

**இளைதாக முள்மரம் கொல்க-களையுநர்**
**கை கொல்லும் காழ்த்த இடத்து.**

*முள்செடி இளசாக, மெல்லியதாக இருக்கும்போதே வெட்டி, முட்களை அகற்றி, கோலாக்கிப் பயன்படுத்தாவிட்டால், அது வளர்ந்து, முற்றி, இறுகி, மரத்தை வெட்டுபவரின் கையையே, பதம் பார்த்து விடும், காயப் படுத்தி விடும்.*

*அதைப்போலவே, உள்பகை சிறியதாய் இருக்கும்போதே அகற்றி, மாற்றி, பயனுள்ளதாய் ஆக்க வேண்டும். உள்பகையை வளரவிட்டால், அது உறுதியாகி, வலிமையாகி, நாட்டின் பாதுகாப்புப் படையையே தாக்கி, அழிக்கப் பார்க்கும்.*

**880. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்**
**செம்மல் சிதைக்கலா தார்.**

**உயிர்ப்ப உளர் அல்லர் மன்ற-செயிர்ப்பவர்**
**செம்மல் சிதைக்கலாதார்.**

*மன்றம் = சபை*

செயிர்ப்பவர் = எதிர்ப்பவர்.

செம்மல் = ச் + எம் + அல். இயக்கம் உயர்ந்த தன்மை. திமிர். கருவம். எகிருதல். துள்ளுதல்.

பலரும் கூடிய சபையில், தன்னை எதிர்ப்பவனின் திமிரை, அழித்து ஒழிக்காதவன், உயிர்ப்புடன் இருப்பவனல்ல. இன்று இல்லாவிட்டாலும், நாளை, தன்னை எதிர்த்தவனால், அவன் கொல்லப்படுவான்.

**பகைத் திறந்தெரிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

பகைமை என்பது நல்ல குணமல்ல. அதை ஒருவன் வேடிக்கையாகக் கூட விரும்பக் கூடாது.

வில்லை உயர்த்திப் போர் செய்யும் வீரர்களை, பகையாகக் கொண்டாலும் பரவாயில்லை, சொல்லை, சத்தம் உயர்த்திப் பேசும் அறிஞர்களை, அமைச்சர்களை, பகையாக்கிக் கொள்ளக் கூடாது.

தான் ஒருவனாய் இருந்து, பலரிடம் பகை கொள்பவன், பைத்தியக்காரனைக் காட்டிலும், தாழ்வாய்க் கருதப்படுவான்.

பகையை நட்பாக்கிக் கொண்டு பழகும் குணமுடையவன் ஆட்சியின் பெருமை பாராட்டி, மக்கள் அந்நாட்டிலேயே தொடர்ந்து வாழ்வர்.

தனக்கு நட்பாக வேறு மன்னன் இல்லாதபோது, பகை மட்டும் இரண்டாக இருந்து, தானாகச் சமாளிக்க முடியாதபோது, அந்த இரண்டு பகைகளில் ஒன்றை, நிலையான நெருங்கிய நட்பாக்கிக் கொள்ள வேண்டும்.

இரண்டு பகைகளில் யாரை நட்பாக்கிக் கொள்வது, யாரை விலக்கி வைப்பது என்று தேர்வு செய்திருந்தாலும், தேர்வு செய்யாமல் இருந்தாலும், போர் வந்த சமயத்தில், அந்தத் தேர்வை வெளிப்படுத்தாமல், தனக்கு ஒத்து வராதவனையும் சரி, தன்னைப் பிரியாதவன் என்று கருதுபவனையும் சரி, தற்காலிகமாக, அப்படியே விட்டு வைக்க வேண்டும்.

தனக்கு நேர்ந்த துன்பத்தையும், இழப்பையும், அதைப் பற்றித் தெரியாதவர்களிடம், காட்டிக் கொள்ள வேண்டாம். அதனால் பயனுமில்லை, தன் மதிப்பும் குறைந்துவிடும். தன்னுடைய பலவீனத்தையும், பகைவனிடம் காட்டக் கூடாது. அது, அவன், தன்மேல் போர் தொடுக்க, காரணமாகி விடலாம்.

பகையின் வகை அறிந்து, அதை அழிக்கும் வழி தெரிந்து, தன்நாட்டு வளத்தையும், செலவத்தையும் பெருக்கி, பொருளின் மிகைகொண்டு, தன்நாட்டைக் காத்துக் கொண்டால், பகைவரிடம் இருந்த கருவம், அழிந்து விடும்.

முள்செடி இளசாக, மெல்லியதாக இருக்கும்போதே வெட்டி, முட்களை அகற்றி, கோலாக்கிப் பயன்படுத்தாவிட்டால், அது வளர்ந்து, முற்றி, இறுகி, மரத்தை வெட்டுபவரின் கையையே, பதம் பார்த்து விடும், காயப் படுத்தி விடும்.

பலரும் கூடிய சபையில், தன்னை எதிர்ப்பவனின் திமிரை, அழித்து ஒழிக்காதவன், உயிர்ப்புடன் இருப்பவனல்ல. இன்று இல்லாவிட்டாலும், நாளை, தன்னை எதிர்த்தவனால், அவன் கொல்லப்படுவான்.

# 89. உட்பகை

*உட்பகை = உள் + பகை. உறவின் பகை. குடியின் பகை.*

**881. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரும்
இன்னாவா மின்னா செயின்.**

**நிழல் நீரும் இன்னாத இன்னா-தமர் நரீ
இன்னா ஆம், இன்னா செயின்.**

*வின்னா = வ் + இன் + ஆ. புறமும் அகமும் நெருங்காத.*

*தமர் = தம் + அர். தமக்குரியர். சுற்றம். நண்பர்.*

*நீர் = இயல்பு. செயல்.*

*நிழலில் உள்ள நீரில், சூரிய ஒளி படாததால், பல நோய்க்கிருமிகள் அதிகமாகவே உற்பத்தியாகி இருக்கும். எனவே, நிழல்நீர், உடலுக்கு நல்லதல்ல. அதைப்போல், மன்னனின் பார்வையில் இல்லாத, புறத்தும் அகத்தும் அவனை நெருங்கி இல்லாத, சுற்றத்தின் இயல்பும் செயலும் தீமையைச் செய்தால், அது நாட்டுக்கு நல்லதல்ல.*

**882. வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு.**

**வாள்போல் பகைவரை அஞ்சற்க; அஞ்சுக,
கேள்போல் பகைவர் தொடர்பு.**

*வாள் போன்று, வெளிப்படையாகத் தெரியும் பகைவரைக் கண்டு, அஞ்ச வேண்டியதில்லை. ஆனால், உறவு போன்று பழகும், மறைமுகமான (வன்சுகம்) பகைவரைக் கண்டு, அஞ்சி, கவனமாய் இருக்க வேண்டும்.*

**883. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.**

**உட்பகை அஞ்சித் தற் காக்க; உலைவு இடத்து,
மட்பகையின் மாணத் தெறும்.**

*மட்பகை = மண் + பகை. மண்பாண்டத்தை அறுக்கும் சிறிய கத்தி.*

*மாண = ம் + ஆண் + அ. கொண்டு மூடி மிக நெருக்கமான.*

*உள்பகைக்கு அஞ்சி, கவனமாய் இருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். இல்லையென்றால், குயவன் தொட்டுத் தழுவிச் செய்த மண்பாண்டத்தை, சக்கரத்தில் இருந்து பிரிக்க, கத்தியுடன் மிக நெருங்கி, கண்ணுக்குத் தெரியாமல் அறுப்பது போல, குழப்பமான நிலைமை நிலவும்போது, நெருக்கமான உறவு கொண்டாடியவர்களே, தன்னைச் சத்தமில்லாமல், அழித்து விடுவர்.*

884. மனமாணா உட்பகை தோன்றி னினமாணா
ஏதம் பலவுந் தரும்.

**மனம் மாணா உட்பகை தோன்றின், இனம் மாணா**
**ஏதம் பலவும் தரும்.**

*மனமாணா = மனம் நெருக்கமில்லாமல்.*

*இனமாணா = இனம் நெருக்கமில்லாமல்.*

*ஏதம் = அச்சம். துன்பம்.*

*மனம் ஒப்பாமல், நெருங்கிய உறவினரே பகையாக வெளிப்பட்டால், அவனைச் சார்ந்தவர்கள் அனைவரும், நெருக்கமின்றி, அவனுக்கு பலவித அச்சத்தையும் துன்பத்தையும் தருவர்.*

885. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையான்
ஏதம் பலவுந் தரும்.

**உறல் முறையான் உட்பகை தோன்றின், இறல் முறையான்**
**ஏதம் பலவும் தரும்.**

*வரவேற்பு, கவனிப்பு, வழியனுப்புதல், கொடுக்கல், வாங்கல் போன்றவற்றில், மன்னன் உறவின் முறையை, வழக்கின்படி செய்யாமல் விட்டால், உள்பகை தோன்றி, அவன் இறக்கின்ற வகையில், சாகின்ற வரைக்கும், தொல்லை பலவற்றைக் கொடுத்துக் கொண்டே இருக்கும்.*

886. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை பொன்ற லரிது.

**ஒன்றாமை ஒன்றியார்கண் படின், எஞ்ஞான்றும்,**
**பொன்றாமை ஒன்றல் அரிது.**

*கட்படின் = கண் + படின். கண் பட்டால். துளை விழுந்தால். ஓட்டை விழுந்தால்.*

*பொன்று = ப் + ஒன்று. கொண்டது ஒன்றாவது. சேர்தல். அடை. மனம் வெளியாவது. அழி. மறை.*

*மன்னனது மனத்துடன் ஒன்றாமல், விலகிய மனநிலையில் நிலைத்த உறவினரிடம், பகை ஏற்பட்டு விட்டால், எந்நாளும், அம்மன்னன் அமைதியடைந்து, ஞானம் பெற்று, அழியாமையை அடைய முடியாது, மாறாக, அஞ்சி, கலக்கமடைந்து, கொல்லப்பட்டே சாவான்.*

887. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
உட்பகை யுற்ற குடி.

**செப்பின் புணர்ச்சிபோல் கூடினும், கூடாதே-**
**உட்பகை உற்ற குடி.**

*புணர் = ப் + உண் + அர். கொண்டு புறத்தே மிக நெருங்கிப் பிரி.*

*செம்பு உலோகம் தங்கத்துடன் மிக எளிதாகவும் விரைவாகவும் கலந்தாலும், அதனுள் தீங்கு செய்யும் பொருளாக கந்தகம் இருப்பின், பயனுள்ள அணிகலன் செய்வது கடினம். அதைப்போல், மன்னன் தன் மக்களுடன் மிக நெருங்கிப் பழகினாலும், ஏற்கனவே அவர்களுக்குள் உள் பகை இருந்தால், அவர்கள் எந்தச் செயலிலும் அவனுடன் ஒத்துழைக்க மாட்டார்கள்.*

**888. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு**
**துட்பகை யுற்ற குடி.**

**அரம் பொருத பொன் போல, தேயும் உரம், பொருது-**
**உட்பகை உற்ற குடி.**

*இரம்பம் உராய்ந்து உராய்ந்து பொன் துகள்களாய் சிதறி அழிவதைப் போன்று, மன்னனின் அதிகார பலம் மோதி மோதி, உள்பகை கொண்டு ஒத்துழைக்காத மக்களும் சிதறி அழிவர். மன்னனின் பலமும் குறையும்.*

**889. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்**
**உட்பகை யுள்ளதாங் கேடு.**

**எட் பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்,**
**உட்பகை, உள்ளது ஆம், கேடு.**

*சிறிய எள்ளை உடைத்துப் பெற்ற, மிகச் சிறிய துகளிலும் எரியும் நெய் இருப்பதைப் போல், உள்பகை கொஞ்சமாக இருந்தாலும், அது, அழிவை உண்டாக்கி விடும்.*

**890. உடன்பாடில் லாதவன் வாழ்க்கை குடங்கருட்**
**பாம்போ டுடனுறைந் தற்று.**

**உடம்பாடு இலாதவர் வாழ்க்கை-குடங்கருள்**
**பாம்போடு உடன் உறைந்தற்று.**

*மன்னனுடைய செயல்பாட்டில், மனம் ஒப்பாதவனின் வாழ்க்கை, ஒருவன், குடிசையில் கருநாகப் பாம்புடன் சேர்ந்து உறங்குவதைப் போன்றதாகும்.*

**உட்பகை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*நிழலில் உள்ள நீரில், சூரிய ஒளி படாததால், பல நோய்க்கிருமிகள் அதிகமாகவே உற்பத்தியாகி இருக்கும். எனவே, நிழல்நீர், உடலுக்கு நல்லதல்ல. அதைப்போல், மன்னனின் பார்வையில் இல்லாத, புறத்தும் அகத்தும் அவனை நெருங்கி இல்லாத, சுற்றத்தின் இயல்பும் செயலும் தீமையைச் செய்தால், அது நாட்டுக்கு நல்லதல்ல.*

வாள் போன்று, வெளிப்படையாகத் தெரியும் பகைவரைக் கண்டு, அஞ்ச வேண்டியதில்லை. ஆனால், உறவு போன்று பழகும், மறைமுகமான (வன்சுகம்) பகைவரைக் கண்டு, அஞ்சி, கவனமாய் இருக்க வேண்டும்.

உள்பகைக்கு அஞ்சி, கவனமாய் இருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். இல்லையென்றால், குயவன் தொட்டுத் தழுவிச் செய்த மண்பாண்டத்தை, சக்கரத்தில் இருந்து பிரிக்க, கத்தியுடன் மிக நெருங்கி, கண்ணுக்குத் தெரியாமல் அறுப்பது போல, குழப்பமான நிலைமை நிலவும்போது, நெருக்கமான உறவு கொண்டாடியவர்களே, தன்னைச் சத்தமில்லாமல், அழித்து விடுவர்.

மனம் ஒப்பாமல், நெருங்கிய உறவினரே பகையாக வெளிப்பட்டால், அவனைச் சார்ந்தவர்கள் அனைவரும், நெருக்கமின்றி, அவனுக்கு பலவித அச்சத்தையும் துன்பத்தையும் தருவர்.

வரவேற்பு, கவனிப்பு, வழியனுப்புதல், கொடுக்கல், வாங்கல் போன்றவற்றில், மன்னன் உறவின் முறையை, வழக்கின்படி செய்யாமல் விட்டால், உள்பகை தோன்றி, அவன் இறக்கின்ற வகையில், சாகின்ற வரைக்கும், தொல்லை பலவற்றைக் கொடுத்துக் கொண்டே இருக்கும்.

மன்னனது மனத்துடன் ஒன்றாமல், விலகிய மனநிலையில் நிலைத்த உறவினரிடம், பகை ஏற்பட்டு விட்டால், எந்நாளும், அம்மன்னன் அமைதியடைந்து, ஞானம் பெற்று, அழியாமையை அடைய முடியாது, மாறாக, அஞ்சி, கலக்கமடைந்து, கொல்லப்பட்டே சாவான்.

செம்பு உலோகம் தங்கத்துடன் மிக எளிதாகவும் விரைவாகவும் கலந்தாலும், அதனுள் தீங்கு செய்யும் பொருளாகக் கந்தகம் இருப்பின், பயனுள்ள அணிகலன் செய்வது கடினம். அதைப்போல், மன்னன் தன் மக்களுடன் மிக நெருங்கிப் பழகினாலும், ஏற்கனவே அவர்களுக்குள் உள் பகை இருந்தால், அவர்கள் எந்தச் செயலிலும் அவனுடன் ஒத்துழைக்க மாட்டார்கள்.

இரம்பம் உராய்ந்து உராய்ந்து பொன் துகள்களாய் சிதறி அழிவதைப் போன்று, மன்னனின் அதிகாரப் பலம் மோதி மோதி, உள்பகை கொண்டு ஒத்துழைக்காத மக்களும் சிதறி அழிவர். மன்னனின் பலமும் குறையும்.

சிறிய எள்ளை உடைத்துப் பெற்ற, மிகச் சிறிய துகளிலும் எரியும் நெய் இருப்பதைப் போல், உள்பகை கொஞ்சமாக இருந்தாலும், அது, அழிவை உண்டாக்கி விடும்.

மன்னனுடைய செயல்பாட்டில், மனம் ஒப்பாதவனின் வாழ்க்கை, ஒருவன், குடிசையில் கருநாகப் பாம்புடன் சேர்ந்து உறங்குவதைப் போன்றதாகும்.

# 90. பெரியாரைப் பிழையாமை

*ஒவ்வொருவரும் அவரைவிட பெரியவரை, வலிமையானவரைப் பகைத்துக் கொள்ளக் கூடாது. பேரரசனை சிற்றரசனும், அரசனை தளபதி, அமைச்சர், நண்பர், சுற்றம் ஆகியோரும், அதிகாரிகளை மக்களும், அரசனை மக்களும், அரசனை செல்வந்தரும், யோகிகள், துறவிகள், ஞானிகள் ஆகியோரை அரசனும் பகைத்துக் கொள்ளக் கூடாது. இல்லையெனில், பகைப்பவர்க்குத் தீங்கு விளையும்.*

*பெரியாரைப் பிழையாமை = உயர்ந்தவரைப் பகைத்துக் கொள்ளாமை.*

**891. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்**
**போற்றலு ளெல்லாந் தலை.**

**ஆற்றுவார் ஆற்றல் இகழாமை; போற்றுவார்**
**போற்றலுள் எல்லாம் தலை.**

*ஆற்றுவார் = வினைசெய்பவர். வளம் செய்பவர். துன்பம் துடைப்பவர். பகையை அழிப்பவர். அரசின் பணிகளைச் செய்பவர்.*

*போற்றுவார் = கொண்டதைக் காப்பவர். பேணுபவர். புகழ்பவர்.*

*வலிமையுடன் செயல்படுபவரின் ஆற்றலை, சக்தியை, அதிகாரத்தை ஏளனமாய்ப் பேசாமல் இருப்பதே, ஒருவர், தன்னைப் பாதுகாத்துக் கொள்ள எடுக்கும் முயற்சிகளில் எல்லாம், முக்கியமானது.*

**892. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்**
**பேரா விடும்பை தரும்.**

**பெரியாரை பேணாது ஒழுகின், பெரியாரா**
**இடும்பை தரும்.**

*பேண் = ப் + ஏண். கொண்டதை மிக உயர்த்தி மிக நெருக்கமாக்கு. வளர். கப்பம். வரி.*

*பேரரசருக்கு உரிய கப்பத்தைச் சிற்றரசனும், அரசனுக்கு உரிய வரியைக் குடிகளும் செலுத்தாமல் இருந்தால், நீங்காத கண்காணிப்பையும், கூடுதல் அபராதத்தையும், அதிக வரிகளையும், தொடர்ச்சியாகத் தொல்லைகளையும், துன்பத்தையும் அனுபவிக்க நேரிடும்.*

**893. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டின்**
**ஆற்று பவர்க ணிழுக்கு.**

**கெடல்வேண்டின், கேளாது செய்க-அடல் வேண்டின்,**
**ஆற்றுபவர்கண் இழுக்கு.**

*அடல் = கொல்லல்.*

*அமைச்சன், தான் அழிய வேண்டுமானால், மன்னனைக் கேட்காமலே ஒரு காரியத்தைச் செய்யலாம். ஒருவன், தான் சாக வேண்டுமானால், இராணுவம், சேனை, படை, பாதுகாப்பு, காவல் துறையை வம்புக்கு இழுக்கலாம்.*

**894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
ஆற்றாதா ரின்னா செயல்.**

**கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்-ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்.**

*கூற்றம் = க் + ஊற் + அம். மெய்யின் மிக ஆழத்தில் (உயிரை) அறுக்கும் தன்மை. யமன். யமன் = ய் + அமன். இருத்தல் மனமற்றது. எமன் = எ + மன். உயர்ந்த மனம். மனத்திலிருந்து உயர்ந்தது. மனமற்றது.*

*அதிகாரமும், வலிமையும், பொருளும் இல்லாதவர்கள், அதிகாரமும் வலிமையும், பொருளும் உள்ளவர்களுக்குத் தீங்கு செய்வது, எமனைக் கைதட்டிக் கூப்பிட்டு, தன்னைச் சாகடிக்கச் சொல்வதைப் போன்றதாகும்.*

**895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வேந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.**

**யாண்டுச் சென்று யாண்டும் உளர் ஆகார்-வெந் துப்பின்
வேந்து செறப்பட்டவர்.**

*ஒரு அரசனை அடுத்து மற்றொரு அரசனின் கோபத்திற்கும் உள்ளானவர், எங்குச் சென்றாலும், அவர் எங்கும் உயிருடன் இருக்க முடியாது.*

**896. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.**

**எரியான் சுடப்படினும், உய்வு உண்டாம்; உய்யார்,
பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார்.**

*நெருப்பால் சுடப்பட்டாலும், ஒருவர் தப்பித்துப் பிழைக்க, ஏதாவது ஒரு வழியுண்டாகலாம். ஆனால், பேரரசனை, வலிமையான மன்னனை, அதிகாரமிக்கத் தளபதியைப் பகைப்பவர், தப்பிக்க வழியே இல்லை.*

*அல்லது*

*நெருப்பால் சுடப்பட்டாலும், ஒருவர் தப்பித்துப் பிழைக்க, ஏதாவது ஒரு வழியுண்டாகலாம். ஆனால், மெய்யுணர்ந்தோரைப் பகைப்பவர், தப்பிக்க வழியே இல்லை. சாபத்தால், அழிந்து விடுவர்.*

**897. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாம்**
**தகைமாண்ட தக்கார் செறின்.**

**வகை மாண்ட வாழ்க்கையும், வான் பொருளும் என் ஆம்-**
**தகை மாண்ட தக்கார் செறின்?**

*வகைமாண்ட = வகைகள் இறந்த. கணக்கின்றி.*

*தகைமாண்ட = புலன்கள் அழிந்த.*

*தக்கார் = முழுமையானவர்.*

*புலனடக்கி முழுமையானவரின் கோபத்திற்கு ஆளாகிவிட்டால், கணக்கின்றி விதம் விதமாய் வாழ்ந்த வாழ்க்கையாலும், வானளவு குவித்த செல்வத்தாலும், என்ன பயன்?*

**898. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு**
**நின்றன்னார் மாய்வர் நிலத்து.**

**குன்று அன்னார் குன்ற மதிப்பின், குடியொடு,**
**நின்றன்னார் மாய்வர், நிலத்து.**

*குன்றன்னார் = குன்று போன்றவர்.*

*நின்றன்னார் = நிலையாய் நீடிக்கும் மன்னர் போன்றவர்.*

*தவவலிமையால் குன்றைப் போன்று உயர்ந்தவர் மனம், குறுகும்படி, வருந்தும்படி நடந்து கொண்டால், குடிகளுடன் நிலைத்து வாழும் மன்னன் போன்ற செல்வந்தர்களும், அதிகாரம் கொண்டவர்களும், மண்ணோடு மண்ணாகி விடுவர்.*

**899. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து**
**வேந்தனும் வேந்து கெடும்.**

**ஏந்திய கொள்கையார் சீறின், இடை முரிந்து,**
**வேந்தனும் வேந்து கெடும்.**

*கொள்கையார் = கொள் + கை + ஆர். பிச்சை வாங்குவோர். துறவிகள்.*

*வேந்து = வியந்து*

*பிச்சைப் பாத்திரம் ஏந்தும் துறவிகளை, மிகுந்த கோபமடையச் செய்தால், மன்னனின் ஆட்சிக் காலம், பாதியிலேயே முடிந்து, வியக்கின்ற வகையில், அழிந்து விடுவான்.*

**900. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்**
**சிறந்தமைந்த சீரார் செறின்.**

**இறந்து அமைந்த சார்புஉடையர் ஆயினும், உய்யார்-
சிறந்து அமைந்த சீரார் செறின்.**

*இறந்தமைந்த = இறந்து + அமைந்த. எண்ணிக்கை இழந்து அமைந்த.*

*சிறந்தமைந்த = ச் + இறந்து + அமைந்த. தனி இயக்கம் அற்று அசையாத.*

*சீரார் = சமமானவர். இறைமையின் இயக்கமானவர்.*

*தனி இயக்கம் அற்று, அசையாமையில் உறைந்து, இறைமையின் இயக்கமான, ஞானிகள் கோபப்பட்டால், எண்ணிக்கையில்லா, வலிமையான பல தொடர்புகள் உடையவராய் ஒருவர் இருந்தாலும், அவரை யாராலும் காப்பாற்ற முடியாது, அவர் தப்பிப் பிழைக்கவே முடியாது. ஏனெனில், ஞானியரின் சக்தியையும், அது செயல்படும் வழியையும், யாரும் அறிய முடியாது.*

**பெரியாரைப் பிழையாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*வலிமையுடன் செயல்படுபவரின் ஆற்றலை, சக்தியை, அதிகாரத்தை ஏளனமாய்ப் பேசாமல் இருப்பதே, ஒருவர், தன்னைப் பாதுகாத்துக் கொள்ள எடுக்கும் முயற்சிகளில் எல்லாம், முக்கியமானது.*

*பேரரசருக்கு உரிய கப்பத்தைச் சிற்றரசனும், அரசனுக்கு உரிய வரியை குடிகளும் செலுத்தாமல் இருந்தால், நீங்காத கண்காணிப்பையும், கூடுதல் அபராதத்தையும், அதிக வரிகளையும், தொடர்ச்சியாக தொல்லைகளையும், துன்பத்தையும் அனுபவிக்க நேரிடும்.*

*அமைச்சன், தான் அழிய வேண்டுமானால், மன்னனைக் கேட்காமலே ஒரு காரியத்தைச் செய்யலாம். ஒருவன், தான் சாக வேண்டுமானால், இராணுவம், சேனை, படை, பாதுகாப்பு, காவல் துறையை வம்புக்கு இழுக்கலாம்.*

*அதிகாரமும், வலிமையும், பொருளும் இல்லாதவர்கள், அதிகாரமும் வலிமையும், பொருளும் உள்ளவர்களுக்குத் தீங்கு செய்வது, எமனைக் கைதட்டிக் கூப்பிட்டு, தன்னைச் சாகடிக்கச் சொல்வதைப் போன்றதாகும்.*

*ஒரு அரசனை அடுத்து மற்றொரு அரசனின் கோபத்திற்கும் உள்ளானவர், எங்குச் சென்றாலும், அவர் எங்கும் உயிருடன் இருக்க முடியாது.*

*நெருப்பால் சுடப்பட்டாலும், ஒருவர் தப்பித்துப் பிழைக்க, ஏதாவது ஒரு வழியுண்டாகலாம். ஆனால், பேரரசனை, வலிமையான மன்னனை, அதிகாரமிக்க தளபதியைப் பகைப்பவர், தப்பிக்க வழியே இல்லை.*

*புலனடக்கி முழுமையானவரின் கோபத்திற்கு ஆளாகிவிட்டால், கணக்கின்றி விதம் விதமாய் வாழ்ந்த வாழ்க்கையாலும், வானளவு குவித்த செல்வத்தாலும், என்ன பயன்?*

*தவவலிமையால் குன்றைப் போன்று உயர்ந்தவர் மனம், குறுகும்படி, வருந்தும்படி நடந்து கொண்டால், குடிகளுடன் நிலைத்து வாழும்*

*மன்னன் போன்ற செல்வந்தர்களும், அதிகாரம் கொண்டவர்களும், மண்ணோடு மண்ணாகி விடுவர்.*

*பிச்சைப் பாத்திரம் ஏந்தும் துறவிகளை, மிகுந்த கோபமடையச் செய்தால், மன்னனின் ஆட்சிக் காலம், பாதியிலேயே முடிந்து, வியக்கின்ற வகையில், அழிந்து விடுவான்.*

*தனி இயக்கம் அற்று, அசையாமையில் உறைந்து, இறைமையின் இயக்கமான, ஞானிகள் கோபப்பட்டால், எண்ணிக்கையில்லா, வலிமையான பல தொடர்புகள் உடையவராய் ஒருவர் இருந்தாலும், அவரை யாராலும் காப்பாற்ற முடியாது, அவர் தப்பிப் பிழைக்கவே முடியாது. ஏனெனில், ஞானியரின் சக்தியையும், அது செயல்படும் வழியையும், யாரும் அறிய முடியாது.*

# 91. பெண்வழிச் சேறல்

*பெண்வழிச் சேறல் = பெண் + வழி + சேறல். சேறல் = ச் + ஏறல். இயக்கம் உயர்தல். சேறல் = சேறு + அல். சேற்றின் துன்பம். புதைதல்.*

*பெண்வழிச்சேறல் = ஆண்மை அல்லது ஆளுமை இன்றி, நல்லதா கெட்டதா என்ற சிந்தனையின்றி, பெண் சொல்லுகின்றபடியெல்லாம் நடத்தல். பெண்ணின் ஆளுமைக்குக் கட்டுப்படல்.*

**901. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்**
**வேண்டாப் பொருளு மது.**

**மனை விழைவார் மாண் பயன் எய்தார்; வினை விழைவார்**
**வேண்டாப் பொருளும் அது.**

*மனைவிழைவார் = மனைவி + இழைவார். எப்போதும், மனைவியோடு, உடல் அளவில், மிக நெருங்கி இழைந்து, அவளுடைய சொல்லுக்கும் செயலுக்கும், சற்றும் முரண்படாமல், எல்லாவற்றிற்கும் உடன்படுபவர்.*

*மாண் = ம் + ஆண். மன அமைதியுடன் மிக நெருங்கு. மனம், இருப்பின் உயிர்ப்புடன், மிக நெருங்கி இருத்தல்.*

*வினைவிழைவார் = அருஞ்செயல், சாதனை, சாகசம், பேராக்கம், படைப்பாக்கம், பெருஞ்செல்வம், புரட்சிகர மாற்றம், சேவை, உதவி செய்ய விரும்புபவர்கள்.*

*எப்போதும், மனைவியோடு, உடல் அளவில், மிக நெருங்கி இழைந்து, அவளுடைய சொல்லுக்கும் செயலுக்கும், சற்றும் முரண்படாமல், எல்லாவற்றிற்கும் உடன்படுபவன், புலனடக்கி, மனத்துடன் மிக நெருங்கி, மெய்யுணர்வை, பிறப்பின் பயனை அடையமாட்டான்.*

*அருஞ்செயல், சாதனை, சாகசம், பேராக்கம், படைப்பாக்கம், பெருஞ்செல்வம், புரட்சிகர மாற்றம், சேவை, உதவி முதலியவற்றைச் செய்ய விரும்புபவர்கள், மனைவியின் சுகத்தில் அடிமைப்பட்டு, மயங்கிக் கிடப்பதை, விரும்ப மாட்டார்கள்.*

*மனைவியின் சுகம், வாழ்வின் ஒரு பகுதி, அதுவே வாழ்வின் முழுமை அல்ல. கணவன் அடிமைப்பட்டுக் கிடப்பதை, ஒழுக்கமுள்ள மனைவியும் விரும்ப மாட்டாள், ஆழ்மனத்தில் அவனை மதிக்க மாட்டாள்.*

**902. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்**
**நாணாக நாணுத் தரும்.**

**பேணாது பெண் விழைவான் ஆக்கம் பெரியதோர்**
**நாணாக, நாணுத் தரும்.**

*நாணுத் தரும் = நாண் + உள் + தரும். வளைவு உள்ளே உண்டாகும். மனம் கூனிக் குறுகும்.*

*(மாறாக) பொருள் ஈட்டுவதற்கான உழைப்பையும் கவனத்தையும் தராமல் போவதால், பெண்சுகம் விரும்புபவனின் வருமானம், இயல்பாகவே மிகவும் குறைவாக இருக்கும். அதைப் பார்க்கும் மனைவியும் கூட, "இவ்வளவுதானா?" என மிகவும் வெட்கப்படும்படி கேட்பாள். அதற்கு ஆளானவன் மனமும், அவமானத்தால், இயலாமையால் கூனிக் குறுகும்.*

*மனைவி, கணவனின் உடல் சுகத்தை விரும்பினாலும், அவனுடைய பொருள் ஆக்கத்தையும் கூடவே எதிர்பார்ப்பாள்.*

**903. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.**

**இல்லாள்கண் தாழ்ந்த இயல்புஇன்மை, எஞ்ஞான்றும்,
நல்லாருள் நாணுத் தரும்.**

*கட்டாழ்ந்த = கட்டு + ஆழ்ந்த. அதிகரத்திற்குப் பணிந்த. கட்டாழ்ந்த = கண் + தாழ்ந்த. இடம் தாழ்ந்த.*

*இயல்பின்மை = ஆளுமை இன்மை.*

*மனைவியின் அதிகாரத்திற்குப் பணிந்து தாழ்ந்துவிட்ட, தன் ஆளுமையின்மையால், நல்லவர்கள் அல்லது நலம் விரும்பிகள் மத்தியில், கணவன், எந்நாளும் அவமானத்தால் கூனிக் குறுகுவான்.*

**904. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.**

**மனையாளை அஞ்சும் மறுமைஇலாளன்
வினை ஆண்மை வீறு எய்தல் இன்று.**

*யஞ்சு மறுமை = அஞ்சும் + அறுமை. பயப்படும் நிலையின்மை. புலன்களின் நிலையாமை. தடுமாற்றம்.*

*வினையாண்மை = செயலாற்றும் திறமை.*

*வீறு = சிறப்பு.*

*மனைவிக்குப் பயந்து, நிலையற்று, தடுமாற்றத்துடன், வீட்டில் வாழ்பவனின், பொது இடத்துச் செயலாற்றும் திறமை, சிறப்பினை அடைய முடியாது.*

**905. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.**

**இல்லாளை அஞ்சுவான், அஞ்சும் மற்று எஞ்ஞான்றும்,
நல்லார்க்கு நல்ல செயல்.**

*அஞ்சுமற்று = அஞ்சும் + அற்று. ஐம்புலன்கள் அடங்கி.*

*மனைவிக்கு பயப்படுபவன், ஐம்புலன்கள் அடங்கி, எப்பொழுதும் நல்லதையே எண்ணுபவர்களுக்கும், உதவிகளைச் செய்ய பயப்படுவான்.*

**906. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர்.**

**இமையாரின் வாழினும், பாடு இலரே-இல்லாள்
அமை ஆர் தோள் அஞ்சுபவர்.**

*இமையார் = தூங்கார். அரசர்.*

*பாடு = ப் + ஆடு. கொண்டு / தூக்கி ஆடு. புகழ்ச்சி. அதனால் ஏற்படும் பெருமிதம்.*

*அமையார் = அமைக்காதவர். அமைதிப்படுத்தாதவர். அடக்காதவர்.*

*மனைவியை அடக்க முடியாமல், அவளுடைய கண்களையும் நேருக்கு நேர் சந்திக்க முடியாமல், அவளுடைய தோளைக்கண்டு, விரும்புவதற்குப் பதில், அஞ்சுபவர், அரசரைக் காட்டிலும் பொருள் மிகுந்து வாழ்ந்தாலும், பெருமிதம், புகழ் என்பது அவருக்கு இல்லை.*

**907. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.**

**பெண் ஏவல் செய்து முகும் ஆண்மையின், நாணுடைப்
பெண்ணே பெருமை உடைத்து.**

*மதிப்பு, மரியாதை இன்றி, அதிகாரக் கட்டளையிடும் மனைவிக்கு, 'எடு', 'பிடி', வேலைகளைச் செய்து வாழும், ஆளுமையற்ற ஆணைக் காட்டிலும், நாணம் கொண்டு, அடங்கி வாழும், பெண்ணே உயர்ந்தவள்.*

**908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.**

**நட்டார் குறை முடியார்; நன்று ஆற்றார்;- நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகுபவர்.**

*நட்டார் = நண்பர்.*

*பெட்டு = மயக்கு வார்த்தை.*

*விரைவாய் சுருங்கி விரியும் புருவத்தைக் கொண்டு, கணவனின் மனமாறுதல்களை மிக கூர்ந்து கவனித்துக் கொண்டு, தம் குடும்பம், தம் பிள்ளைகள் நலனை மட்டும் முன் நிறுத்தி, மயக்குவார்த்தைப் பேசும் மனைவியின் சொற்களைக் கேட்டு நடப்பவன், போதுமான செல்வம் இருந்தாலும், நண்பர்களின் குறைகளைத் தீர்க்கும் உதவிகளைச் செய்ய மாட்டான், துன்பப்படும் மக்களுக்கு, நல்ல காரியங்களையும் செய்ய மாட்டான்.*

*விரைவாய் சுருங்கி விரியும் புருவத்தைக் கொண்டு, கணவனின் மனமாறுதல்களை மிக கூர்ந்து கவனித்துக் கொண்டு, தம் குடும்பம், தம் பிள்ளைகள் நலனை மட்டும் முன் நிறுத்தி, மயக்குவார்த்தை பேசும் மனைவியின் சொற்களைக் கேட்டு நடப்பவன், போதுமான செல்வம் இருந்தாலும், நண்பர்களின் குறைகளைத் தீர்க்கும் உதவிகளைச் செய்ய மாட்டான், துன்பப்படும் மக்களுக்கு, நல்ல காரியங்களையும் செய்ய மாட்டான்.*

**909. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.**

**அறவினையும், ஆன்ற பொருளும், பிற வினையும்,-
பெண் ஏவல் செய்வார்கண் இல்.**

*அறவினை = புலனடக்கி மனமடங்கி உயிருடன் ஒன்றும் முயற்சி.*

*ஆன்ற பொருள் = உணர்ந்த மெய்ப்பொருள்.*

*பிறவினை = அசையாமையில் நிலைத்தல்.*

*மனைவிக்குப் பயந்து, பணிவிடை செய்பவனிடத்தில், புலனடக்கி மனமடங்கி உயிருடன் ஒன்றும் முயற்சியும், மெய்ப்பொருள் உணர்தலும், அசையாமையில் நிலைத்தலும் நடக்காது.*

**910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.**

**எண்சேர்ந்தநெஞ்சத்து,இடன்உடையார்க்கு,எஞ்ஞான்றும்,
பெண் சேர்ந்து ஆம் பேதைமை இல்.**

*எண் = எ + ண். உயர்ந்த மிகை நெருக்கம். மனவெளி உயர்ந்து விண்வெளியுடன் நெருக்கம். மெய்ப்பொருள். முழுமை. பூச்சியம்.*

*மெய்யுணர்ந்து, அசையாமையில் உறுதியானவர்க்கு, பெண்ணைச் சேர்வதால் ஏற்படும் குழப்பம், தடுமாற்றம், எந்த நாளும் இல்லை.*

*பெண்வழிச்சேறல் அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*எப்போதும், மனைவியோடு, உடல் அளவில், மிக நெருங்கி இழைந்து, அவளுடைய சொல்லுக்கும் செயலுக்கும், சற்றும் முரண்படாமல், எல்லாவற்றிற்கும் உடன்படுபவன், புலனடக்கி, மனத்துடன் மிக நெருங்கி, மெய்யுணர்வை, பிறப்பின் பயனை அடையமாட்டான். அருஞ்செயல், சாதனை, சாகசம், பேராக்கம், படைப்பாக்கம், பெருஞ்செல்வம், புரட்சிகர மாற்றம், சேவை, உதவி முதலியவற்றைச் செய்ய விரும்புபவர்கள், மனைவியின் சுகத்தில் அடிமைப்பட்டு, மயங்கிக் கிடப்பதை, விரும்ப மாட்டார்கள்.*

*பொருள் ஈட்டுவதற்கான உழைப்பையும் கவனத்தையும் தராமல் போவதால், பெண்சுகம் விரும்புபவனின் வருமானம், இயல்பாகவே*

மிகவும் குறைவாக இருக்கும். அதைப் பார்க்கும் மனைவியும் கூட, "இவ்வளவுதானா?" என மிகவும் வெட்கப்படும்படி கேட்பாள். அதற்கு ஆளானவன் மனமும், அவமானத்தால், இயலாமையால் கூனிக் குறுகும்.

மனைவியின் அதிகாரத்திற்குப் பணிந்து தாழ்ந்துவிட்ட, தன் ஆளுமையின்மையால், நல்லவர்கள் அல்லது நலம் விரும்பிகள் மத்தியில், கணவன், எந்நாளும் அவமானத்தால் கூனிக் குறுகுவான்.

மனைவிக்குப் பயந்து, நிலையற்று, தடுமாற்றத்துடன், வீட்டில் வாழ்பவனின், பொது இடத்துச் செயலாற்றும் திறமை, சிறப்பினை அடைய முடியாது.

மனைவிக்கு பயப்படுபவன், ஐம்புலன்கள் அடங்கி, எப்பொழுதும் நல்லதையே எண்ணுபவர்களுக்கும், உதவிகளைச் செய்ய பயப்படுவான்.

மனைவியை அடக்க முடியாமல், அவளுடைய கண்களையும் நேருக்கு நேர் சந்திக்க முடியாமல், அவளுடைய தோளைக்கண்டு, விரும்புவதற்குப் பதில், அஞ்சுபவர், அரசரைக் காட்டிலும் பொருள் மிகுந்து வாழ்ந்தாலும், பெருமிதம், புகழ் என்பது அவருக்கு இல்லை.

மதிப்பு, மரியாதை இன்றி, அதிகாரக் கட்டளையிடும் மனைவிக்கு, 'எடு', 'பிடி', வேலைகளைச் செய்து வாழும், ஆளுமையற்ற ஆணைக் காட்டிலும், நாணம் கொண்டு, அடங்கி வாழும், பெண்ணே உயர்ந்தவள்.

மனைவிக்குப் பயந்து, பணிவிடை செய்பவனிடத்தில், புலனடக்கி மனமடங்கி உயிருடன் ஒன்றும் முயற்சியும், மெய்ப்பொருள் உணர்தலும், அசையாமையில் நிலைத்தலும் நடக்காது.

மெய்யுணர்ந்து, அசையாமையில் உறுதியானவர்க்கு, பெண்ணைச் சேர்வதால் ஏற்படும் குழப்பம், தடுமாற்றம், எந்த நாளும் இல்லை.

# 92. வரைவின் மகளிர்

*வரைவின் மகளிர் = வரைவு + இல் + மகளிர். வரைவு இல் = வெளிப்படுத்தப்பட்ட எல்லை இல்லாத. மகளிர் = மகள் + இர். மணமாகாமல் இருக்கும் பெண்கள்.*

*வரைவின் மகளிர் = வெளிப்படுத்தப்பட்ட எல்லை இல்லாது, மணமாகாமல் இருக்கும் பெண்கள். தங்கள் விருப்பம்போல் வாழும் பெண்கள்.*

**911. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்**
**இன்சொ லிழுக்கந் தரும்.**

**அன்பின் விழையார், பொருள் விழையும் ஆய்தொடியார்**
**இன் சொல் இழுக்குத் தரும்.**

*ஆய்தொடியார் = ஆய் + தொடி + ஆர். அசைவு + வளைவு + கொண்டவர்.*

*இழுக்கம் = இழு + க் + அம். நிலையாய் கீழே இழுக்கும் பொருண்மைத் தன்மை. தாழ்வு. இழப்பு. அழிவு.*

*அன்பினால் விரும்பாமல், நபரையோ அவர்தம் குணத்தையோ விரும்பாமல், அவரிடம் உள்ள பொருளை, பணத்தை விரும்பும், உடல் வளைவுகளின் அசைவுகளைக் கொண்டவள், பேசும் இனிமையான பேச்சில் மயங்கினால், அது, சமூகத் தாழ்வையும், பொருள் இழப்பையும், வாழ்க்கை அழிவையும் ஏற்படுத்தும்.*

**912. பயன்றூக்கிப் பண்புரைக்கு பண்பின் மகளிர்**
**நயன்றூக்கி நள்ளா விடல்.**

**பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர்**
**நயன் தூக்கி, நள்ளா விடல்!**

*பயன்றூக்கி = பயன் + தூக்கி. ஆதாயம் அளந்து. கிடைப்பதைக் கணக்கிட்டு. என்ன கிடைக்கும் என யூகித்து. கிடைக்கும் சுகத்தை உயர்வாக வெளிப்படுத்தி.*

*பண்புரை = பண்பு + உரை. தன்மையை விரிவாய்ப் பேசுதல்.*

*பண்பின் = பண்பு + இல். பண்பு இல்லாத.*

*நயன்றூக்கி = நயம் + தூக்கி. நயம் = ன் + அய் + அம். நெருங்கி இருக்கும் தன்மை. தூக்கி = அளந்து. காரணம் அறிந்து.*

*நள்ளா = ன் + அள் + ஆ. நெருங்கிக் கொள்ளாது.*

*ஒருவனிடம் இருந்து எவ்வளவு கிடைக்கும் எனக் கணக்கிட்டு, கிடைக்கும் சுகத்தைப் பற்றி வெட்கமின்றி, வெளிப்படையாக, விரிவாகக்*

*கூறும், ஒழுக்கமில்லாத பெண்கள், தன்னை நெருங்குவதற்கான காரணத்தை அறிந்து, விலகி விட வேண்டும்.*

**913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையுள்**
**ஏதில் பிணந்தழீஇ யற்று.**

**பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்-இருட்டு அறையில்**
**ஏதில் பிணம் தழீஇயற்று.**

*பொருட்பெண்டிர் = பொருள் + பெண்டிர். விலைமாது. விலைமகள்.*

*முயக்கம் = தழுவுதல். கட்டிப் பிடித்தல்.*

*ஏதில் = ஏதும் + இல். எந்த உறவுமற்ற. எந்த உணர்வுமற்ற.*

*பிணந்தழீஇ = பிணம் + த் + அழ் + ஈ + இ. பிண உடல் அழுகிப் போய்க் கொண்டிருக்கும். தேகம் கீழ் அழுத்தித் தந்து நிலைப்பது.*

*விலைமாது ஒருவனைப் பொய்யாகக் கட்டிப் பிடிப்பது, இருட்டான பிண அறையில், எந்த உறவுமற்ற, எந்த உணர்வுமற்ற, அழுகிக் கொண்டிருக்கும் பிணத்தை, கட்டிப் பிடிப்பதற்கு ஒப்பாகும். இருவருக்குமே அடுத்தவர் பிணம். இரண்டும் பிணங்களே.*

**914. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொருள்**
**ஆயு மறிவி னவர்.**

**பொருட்பொருளார் புன் நலம் தோயார்-அருட் பொருள்**
**ஆயும் அறிவினவர்.**

*பொருட்பொருளார் = பணத்தால் பொருளைப் போல் வாங்கப்படுபவர்.*

*புன்னலம் = புல் + நலம். சிறிய இன்பம்.*

*தோய் = த் + ஓய். தேகம் அடங்குதல். தேகம் ஒன்றாகி / முழுமையாகி நிலைத்தல்.*

*அருட்பொருள் = அருள் + பொருள். அருள் = அரு + ள். உருவற்ற மிகை. ஒளி. அருள் = அர் + உள். தேகம் மனம் பிரிந்த மனம். ஒளிவெளி. பொருள் = ப் + ஒர் + உள். கொண்டது ஒன்றான மனம் / ஆழ் ஒளி.*

*ஒளிமயமான முழுமையான மெய்ப்பொருளை அறிந்து, அதன் பேரின்பத்தை உணர முயல்பவர், பணத்தால் பொருளைப் போல் வாங்கப்படக்கூடிய பெண்ணின் சிற்றின்பத்திற்காக, தேகத்தை நிலை நிறுத்த மாட்டார்.*

**915. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்**
**மாண்ட வறிவி னவர்.**

**பொது நலத்தார் புன் நலம் தோயார் மதி நலத்தின்**
**மாண்ட அறிவினவர்.**

*பொதுநலம் = பொது இன்பம். எவர்க்கும் இன்பம்.*

*மதி நலம் = மதி + நலம். மதி = ம் + அதி. அமைதி மிகையான. நலம் = ன் + அல் + அம். நெருங்கி அதிரும் தன்மை. புலன்கள் இயக்கம்.*

*மாண்ட = அழிந்த.*

*புலன்களின் இயக்கம் அடங்கி, மனமும் அழிந்து, நிலைக்கும் தன்மையில் நெருங்கி உள்ளவர், பொருளுக்காக எவர்க்கும் இன்பம் வழங்கும் பெண்களின் சிற்றின்பத்திற்காக, தேகத்தை நிலை நிறுத்த மாட்டார்.*

**916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள்.**

**தம் நலம் பாரிப்பார் தோயார்-தகை செருக்கி,**
**புன் நலம் பாரிப்பார் தோள்.**

*பாரிப்பு = பரப்பு.*

*தகை = த் + அகை. தேகச் செழிப்பு. அழகு.*

*தான் அடைந்த ஞானத்தின் பேரின்பத்தை, உலகெங்கும் ஒளிக்கதிர் இயக்கமாய் பரப்புபவர், தன் உடல் செழிப்பில் பெருமை கொண்டு, சிற்றின்பத்தை உலகில் உள்ள எவர்க்கும் அளிக்க காத்திருக்கும், பெண்ணின் தோள்களில், தேகத்தை நிலை நிறுத்த மாட்டார்.*

**917. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சின்**
**பேணிப் புணர்பவர் தோள்.**

**நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர்-பிற நெஞ்சில்**
**பேணி, புணர்பவர் தோள்.**

*பேண் = ப் + ஏண். விரும்பு.*

*மனைவியிடம் மன நிறைவு, மனத்திருப்தி அடையாதவர், உலகையும், இயற்கையையும், வாழ்வையும், முழுமையாய் அறியாதவர், பலர் மார்பை விரும்பிச் சேரும் பெண்ணின் தோளில், தலை சாய்வர்.*

**918. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப**
**மாய மகளிர் முயக்கு.**

**'ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு' என்ப-**
**'மாய மகளிர் முயக்கு'.**

*அணங்கு = அண் + அங்கு. மிகையான நெருக்கத்தால், மெய்யில் வெளிப்படுவது. நோய்.*

*பகுத்தறிவு இல்லாதவரிடம், மயக்குவார்த்தை பேசும், விலைமகளிரின் தழுவுதலை, வேதனை தரும் தொற்று நோய், என்பர்.*

*வேறு வகையில், அவர்களுக்கு, விளக்க முடியாது, விலைமாதரிடம் இருந்தும் விலக்க முடியாது. உயிருக்குப் பயந்தாவது ஒழுக்கம் காப்பர்.*

**919. வரைவிலா மாணிழையார் மென்றோட் புரையிலாப்**
**பூரியர்க ளாழு மளறு.**

**வரைவு இலா மாண் இழையார் மென் தோள்-புரை இலாப்**
**பூரியர்கள் ஆழும் அளறு.**

*மாணிழை = மாண் + இழை. மாண் = ம் + ஆண். கொண்டு மூடி மிக நெருங்கு. கட்டிப் பிடித்து இறுக்கு. இழை = அசை. உரசு.*

*புரை = ப் + உரை. எண்ணத்தைப் பகுத்தறி.*

*பூரியர் = ப் + ஊர் + இயர். கொண்டதைப் பெரிதாக்கும் இயல்பினர். உணர்ச்சிவசப்படுபவர்.*

*அளறு = அள் + அறு. மிகை / ஒளி பிரிந்தது. இருள். அறியாமை. நரகம். துன்பம்.*

*வரைமுறை அற்று, யாரை வேண்டுமானாலும் இறுகக் கட்டிப்பிடித்து உரசும், விலைமகளிரின் மென்மையான தோள், எண்ணத்தைப் பிரித்து அறிய முடியாமல், உணர்ச்சிவசப்படுபவர்கள், அமிழ்ந்து மீளமுடியாமல் துன்புறும், இருண்ட நரகம் ஆகும்.*

**920. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு.**

**இரு மனப் பெண்டிரும், கள்ளும், கவறும்,- திரு**
**நீக்கப்பட்டார் தொடர்பு.**

*இருமனம் = இரட்டை மனம். இரண்டு பேரை விரும்பும் மனம்.*

*கவறு = க் + அவ் + அறு. பொருண்மையை உள்ளிருந்து பிரித்தல். அபகரித்தல்.*

*திரு = த் + இர் + உ. தேகம் நிலைத்து உள் இருத்தல்.*

*தேகம் நிலைத்து உள் இருக்கும் தன்மை இல்லாதவர், விலைமகளிரையும், கள் அல்லது மதுவையும், சூதாட்டத்தையும் விடமாட்டார்கள்.*

**வரைவின்மகளிர் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அன்பினால் விரும்பாமல், நபரையோ அவர்தம் குணத்தையோ விரும்பாமல், அவரிடம் உள்ள பொருளை, பணத்தை விரும்பும், உடல்*

வளைவுகளின் அசைவுகளைக் கொண்டவள், பேசும் இனிமையான பேச்சில் மயங்கினால், அது, சமூகத் தாழ்வையும், பொருள் இழப்பையும், வாழ்க்கை அழிவையும் ஏற்படுத்தும்.

ஒருவனிடம் இருந்து எவ்வளவு கிடைக்கும் என கணக்கிட்டு, கிடைக்கும் சுகத்தைப் பற்றி வெட்கமின்றி, வெளிப்படையாக, விரிவாகக் கூறும், ஒழுக்கமில்லாத பெண்கள், தன்னை நெருங்குவதற்கான காரணத்தை அறிந்து, விலகி விட வேண்டும்.

விலைமாது ஒருவனைப் பொய்யாகக் கட்டிப் பிடிப்பது, இருட்டான பிண அறையில், எந்த உறவுமற்ற, எந்த உணர்வுமற்ற, அழுகிக் கொண்டிருக்கும் பிணத்தை, கட்டிப் பிடிப்பதற்கு ஒப்பாகும்.

ஒளிமயமான முழுமையான மெய்ப்பொருளை அறிந்து, அதன் பேரின்பத்தை உணர முயல்பவர், பணத்தால் பொருளைப் போல் வாங்கப்படக்கூடிய பெண்ணின் சிற்றின்பத்திற்காக, தேகத்தை நிலை நிறுத்த மாட்டார்.

புலன்களின் இயக்கம் அடங்கி, மனமும் அழிந்து, நிலைக்கும் தன்மையில் நெருங்கி உள்ளவர், பொருளுக்காக எவர்க்கும் இன்பம் வழங்கும் பெண்களின் சிற்றின்பத்திற்காக, தேகத்தை நிலை நிறுத்த மாட்டார்.

தான் அடைந்த ஞானத்தின் பேரின்பத்தை, உலகெங்கும் ஒளிக்கதிர் இயக்கமாய் பரப்புபவர், தன் உடல் செழிப்பில் பெருமை கொண்டு, சிற்றின்பத்தை உலகில் உள்ள எவர்க்கும் அளிக்கக் காத்திருக்கும், பெண்ணின் தோள்களில், தேகத்தை நிலை நிறுத்த மாட்டார்.

மனைவியிடம் மன நிறைவு, மனத்திருப்தி அடையாதவர், உலகையும், இயற்கையையும், வாழ்வையும், முழுமையாய் அறியாதவர், பலர் மார்பை விரும்பிச் சேரும் பெண்ணின் தோளில், தலை சாய்வர்.

பகுத்தறிவு இல்லாதவரிடம், மயக்குவார்த்தை பேசும், விலைமகளிரின் தழுவுதலை, வேதனை தரும் தொற்று நோய், என்பர்.

வரைமுறை அற்று, யாரை வேண்டுமானாலும் இறுகக் கட்டிப்பிடித்து உரசும், விலைமகளிரின் மென்மையான தோள், எண்ணத்தைப் பிரித்து அறிய முடியாமல், உணர்ச்சிவசப்படுபவர்கள், அமிழ்ந்து மீளமுடியாமல் துன்புறும், இருண்ட நரகம் ஆகும்.

தேகம் நிலைத்து உள் இருக்கும் தன்மை இல்லாதவர், விலைமகளிரையும், கள் அல்லது மதுவையும், சூதாட்டத்தையும் விடமாட்டார்கள்.

# 93. கள்ளுண்ணாமை

*கள்ளுண்ணாமை = கள் + உண்ணாமை. கள், சாராயம், மது ஆகியவை குடிக்காது இருத்தல்.*

**921. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்.**

**உட்கப் படாஅர், ஒளி இழப்பர், எஞ்ஞான்றும்- கள்-காதல்
கொண்டு ஒழுகுவார்.**

*உள்க = உள் + க் + அ. மனதில் மெய்யாக / பொருளாக. பொருட்டாக கருது.*

*ஒளி = புகழ்.*

*எப்பொழுதும் மது, கள்ளின் மீது ஆசைப்பட்டு வாழ்பவரை, யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். அவருக்கு புகழ், ஏற்கனவே இருந்திருந்தால், அதுவும் போய்விடும்.*

**922. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரால்
எண்ணப் படவேண்டா தார்.**

**உண்ணற்க, கள்ளை உணில், உண்க; சான்றோரான்
எண்ணப்பட வேண்டாதார்.**

*மது, கள்ளை உண்ண வேண்டாம். முன்மாதிரியாக வாழும் பெரியவர்களால், மதிக்கப்பட விரும்பாதவர்கள் வேண்டுமானால், குடித்துக் கொள்ளலாம்.*

**923. ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.**

**ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால்; என், மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.**

*மகன் எதைச் செய்தாலும் மகிழும் தாய் கூட, அவன் மது, கள் அருந்தினால் முகம் சுளிப்பாள், மனம் வருந்துவாள். அப்படி இருக்கையில், மது, கள் அருந்தியவனைப் பார்த்து, சமூகத்திற்கு முன்மாதிரியாக வாழும் பெரியவர்கள் முகத்தில், எப்படி மகிழ்ச்சி உண்டாகும்?*

**924. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.**

**நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும்-கள் என்னும்
பேணாப் பெருஞ் குற்றத்தார்க்கு.**

*நாணம், வெட்கம் உடையவர்கள், தாம் வரும் வழியில் மது, கள் உண்டவனைக் கண்டால், கட்டுப்படுத்த முடியாமல் பெருங்குற்றத்தைச் செய்த ஒருவனைப் பார்த்து விட்டதாகக் கருதி, திரும்பிப் போய் விடுவர் அல்லது மிகவும் ஒதுங்கிச் செல்வர்.*

*மானம் உள்ளவனாய் இருந்தால், கட்டுப்படுத்திக் கொள்ளும் திறனில்லாததால், தன்னை ஆணாகவே கருதாமல், தீண்டத்தகாதவனைப் பார்ப்பதுபோல் பார்க்கின்றனரே, அவமதிக்கின்றனரே, என்று வருந்தி, திருந்துவான்.*

**925. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து**
**மெய்யறி யாமை கொளல்.**

**கை அறியாமை உடைத்தே-பொருள் கொடுத்து,**
**மெய் அறியாமை கொளல்.**

*கை எனும் வெளிப்படையான தன் உடலின் உறுப்பை, அறியாமல் இருக்கும் பெரிய முட்டாள்தனத்தைப் போன்றதே, பணம் கொடுத்து, தன் உடல் உணராமையைத் தரும், மது, கள்ளை வாங்கிக் குடிப்பது என்பதும்.*

**926. துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.**

**துஞ்சினார் செத்தாரின் வேறு அல்லர்,-எஞ்ஞான்றும்**
**நஞ்சு உண்பார் கள் உண்பவர்.**

*துஞ்சு = த் + உன் + ச் + உ. தேகம் உள்நெருங்கி (பிரபஞ்ச) இயக்கமாய் வெளிப்படல். ஆழ்ந்த உறக்கத்தில், பிரபஞ்ச இயக்கமே, உடலுக்குச் சக்தி ஊட்டுகின்றது.*

*தூங்குகின்ற காலம் மட்டும், உடலின் செயல்பாடு, உணர்வுப்பூர்வமான எண்ணம் இல்லாததால், தூங்குபவர், இறந்தவரிலிருந்து மாறுபடாதவர். ஆனால், கள் உண்பவரோ நஞ்சை உண்டு, எந்நாளும் இறந்துக் கொண்டே இருப்பவர், உடல் உணர்வும், உணர்வுப்பூர்வமான எண்ணமும் இல்லாத, பிணம் போன்றவர்.*

**927. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றும்**
**கள்ளொற்றிக் கண்சாய் பவர்.**

**உள் ஒற்றி உள்ளூர் நகப்படுவர்-எஞ்ஞான்றும்**
**கள் ஒற்றிக் கண் சாய்பவர்.**

*ஒற்றி = ஒன்றி.*

*கண்சாய்பவர் = மயங்குபவர்.*

*எந்நாளும் மது, கள்ளோடு ஒன்றி மயங்குபவரைக் கண்டால், உள்ளூர் மக்கள், மனத்தில் ஒரே விதமாய், ஏளனமாய் நினைத்து, சிரிப்பர்.*

**928. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்**
**தொளித்ததூஉ மாங்கே தரும்.**

**'களித்து அறியேன்' என்பது கைவிடுக-நெஞ்சத்து**
**ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்!**

*"நான் மதுவை, கள்ளைக் குடித்ததே இல்லை" என்று கூற வேண்டாம். ஏனென்றால், அப்படிச் சொல்லும் போதே, மது அல்லது கள்ளைக் குடிக்கும் ஆசை, உனக்குள் உள்ளது என்பதும், வெளிப்படும். மேலும், ஏற்கனவே எப்பொழுதாவது குடித்திருந்தால், யாரேனும், "ஐய, ஒருமுறை கூட குடித்தது இல்லையா?" என ஏளனமாக கேட்டால், "இல்லை, ஒரே முறை குடித்திருக்கிறேன்" அல்லது " கொஞ்சமாகக் குடித்திருக்கிறேன்" அல்லது "அது என்று தெரியாமல் குடித்திருக்கிறேன்" அல்லது "நண்பர்கள் ஏமாற்றிக் கொடுத்து விட்டார்கள்" என்று எப்படியாவது, மறைத்த உண்மை வெளிப்பட்டு விடும்.*

**929. களித்தானைக் காரணங் காட்டுதல் கீணீர்க்**
**குளித்தானைத் தீத்துரீஇ யற்று.**

**களித்தானைக் காரணம் காட்டுதல்-கீழ் நீர்க்**
**குளித்தாை தீத் துரீஇயற்று.**

*களித்தான் = கள்குடித்து மயங்கியவன்.*

*கீணீர் = கீழ் + நீர். ஆழத்து நீர்.*

*தீத்துரீஇ = தீ + த் + உர் + ஈ + இ. நெருப்பால் தேகத்தின் குளிரைப் போக்கி இருத்தல்.*

*கள்குடித்து மயங்கிக் கிடப்பவனுக்கு, கள்ளால் வரும் தீமையைப் பற்றிக் கூறுதல், ஆழத்து நீரில் குளிப்பவனுக்கு, தீயைக் கொண்டு குளிர்போக்க முயல்வதற்கு, ஒப்பாகும்.*

**930. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்**
**உள்ளான்கொ லுண்டவன் சோர்வு.**

**கள் உண்ணாப் போழ்தில், களித்தானைக் காணுபீகால்,**
**உள்ளான்கொல், உண்டதன் சோர்வு!**

*உள்ளான் = நினைக்க மாட்டான். எண்ண மாட்டான்.*

*ஒருவன், கள் அல்லது மதுவை, தான் குடிக்காதபோது, கள் அல்லது மதுவைக் குடித்து மயங்கிக் கிடக்கும் மற்றொருவனைக் காணும்போது,*

*"ஏன்தான் குடித்தோமோ?" என்று மயங்கிக் கிடப்பவன் வருந்துவதுபோல், இவனும் நினைக்க மாட்டானா? தானும் இப்படித்தான், குடித்துவிட்டு மயங்கிக் கிடக்கிறோமோ, என வெட்கப்பட மாட்டானா?*

**கள்ளுண்ணாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*எப்பொழுதும் மது, கள்ளின் மீது ஆசைப்பட்டு வாழ்பவரை, யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். அவருக்குப் புகழ், ஏற்கனவே இருந்திருந்தால், அதுவும் போய்விடும்.*

*மது, கள்ளை உண்ண வேண்டாம். முன்மாதிரியாக வாழும் பெரியவர்களால், மதிக்கப்பட விரும்பாதவர்கள் வேண்டுமானால், குடித்துக் கொள்ளலாம்.*

*மகன் எதைச் செய்தாலும் மகிழும் தாய் கூட, அவன் மது, கள் அருந்தினால் முகம் சுளிப்பாள், மனம் வருந்துவாள். அப்படி இருக்கையில், மது, கள் அருந்தியவனைப் பார்த்து, சமூகத்திற்கு முன்மாதிரியாக வாழும் பெரியவர்கள் முகத்தில், எப்படி மகிழ்ச்சி உண்டாகும்?*

*நாணம், வெட்கம் உடையவர்கள், தாம் வரும் வழியில் மது, கள் உண்டவனைக் கண்டால், கட்டுப்படுத்த முடியாமல் பெருங்குற்றத்தைச் செய்த ஒருவனைப் பார்த்து விட்டதாகக் கருதி, திரும்பிப் போய் விடுவர் அல்லது மிகவும் ஒதுங்கிச் செல்வர்.*

*கை எனும் வெளிப்படையான தன் உடலின் உறுப்பை, அறியாமல் இருக்கும் பெரிய முட்டாள்தனத்தைப் போன்றதே, பணம் கொடுத்து, தன் உடல் உணராமையைத் தரும், மது, கள்ளை வாங்கிக் குடிப்பது என்பதும்.*

*தூங்குகின்ற காலம் மட்டும், உடலின் செயல்பாடு, உணர்வுப்பூர்வமான எண்ணம் இல்லாததால், தூங்குபவர், இறந்தவரிலிருந்து மாறுபடாதவர். ஆனால், கள் உண்பவரோ நஞ்சை உண்டு, எந்நாளும் இறந்து கொண்டே இருப்பவர், உடல் உணர்வும், உணர்வுப்பூர்வமான எண்ணமும் இல்லாத, பிணம் போன்றவர்.*

*எந்நாளும் மது, கள்ளோடு ஒன்றி மயங்குபவரைக் கண்டால், உள்ளூர் மக்கள், மனத்தில் ஒரே விதமாய், ஏளனமாய் நினைத்து, சிரிப்பர்.*

*"நான் மதுவை, கள்ளைக் குடித்ததே இல்லை" என்று கூற வேண்டாம். ஏனென்றால், அப்படிச் சொல்லும் போதே, மது அல்லது கள்ளைக் குடிக்கும் ஆசை, உனக்குள் உள்ளது என்பதும், வெளிப்படும். மேலும், ஏற்கனவே எப்பொழுதாவது குடித்திருந்தால், யாரேனும், "ஐய, ஒருமுறை கூட குடித்தது இல்லையா?" என ஏளனமாக கேட்டால், "இல்லை, ஒரே முறை குடித்திருக்கிறேன்" அல்லது "கொஞ்சமாகக் குடித்திருக்கிறேன்" அல்லது "அது என்று தெரியாமல் குடித்திருக்கிறேன்" அல்லது "நண்பர்கள் ஏமாற்றிக் கொடுத்து விட்டார்கள்" என்று எப்படியாவது, மறைத்த உண்மை வெளிப்பட்டு விடும்.*

*கள்குடித்து மயங்கிக் கிடப்பவனுக்கு, கள்ளால் வரும் தீமையைப் பற்றிக் கூறுதல், ஆழத்து நீரில் குளிப்பவனுக்கு, தீயைக் கொண்டு குளிர்போக்க முயல்வதற்கு, ஒப்பாகும்.*

*ஒருவன், கள் அல்லது மதுவை, தான் குடிக்காதபோது, கள் அல்லது மதுவைக் குடித்து மயங்கிக் கிடக்கும் மற்றொருவனைக் காணும்போது, " ஏன்தான் குடித்தோமோ?" என்று மயங்கிக் கிடப்பவன் வருந்துவதுபோல், இவனும் நினைக்க மாட்டானா? தானும் இப்படித்தான், குடித்துவிட்டு மயங்கிக் கிடக்கிறோமோ, என வெட்கப்பட மாட்டானா?*

# 94. சூது

*சூது = ச் + ஊது. இயக்கத்தை விரித்துப் பரவு. சூது = ச் + ஊ + த் + உ. இயக்கம் விரிந்துப் பரவி தேகமாய் வெளிப்படல். இயக்கம் இல்லாமை. இன்மை.*

**931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்**
**தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.**

**வேண்டற்க, வென்றிடினும் சூதினை! வென்றதூஉம்,**
**தூண்டி - பொன் மீன் விழுங்கியற்று.**

*விரும்ப வேண்டாம் சூதாட்டத்தை, நீ வெல்வதாய் இருந்தாலும்!. எதிர்பாராது, ஏதாவது வெல்வதுவும், தூண்டில் கொக்கியை, மீன் பேராசையால், தவறுதலாக விழுங்கியது போன்றதாகும். கொக்கியை விழுங்கிய மீன், மீள முடியாமல், தூண்டிலால் இழுக்கப்பட்டு, மண்ணில் இறப்பது உறுதி. அதைப்போல், சூதாடுபவனும், இறுதியில், வறுமையில் அழிவது உறுதி.*

**932. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொல்**
**நன்றெய்தி வாழ்வதோ ராறு.**

**ஒன்று எய்தி, நூறு இழக்கும் சூதர்க்கும் உண்டாம்கொல்-**
**நன்று எய்தி வாழ்வதோர் ஆறு?**

*ஒன்றை அடைந்து, நூறை இழக்கும் சூதாடுபவர்களுக்கு, நல்லதை, ஞானத்தை, அடைந்து வாழ்வதற்கான வழி உண்டா என்ன? இல்லவே இல்லை.*

**933. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்**
**போஒய்ப் புறமே படும்.**

**உருள் ஆயம் ஓவாது கூறின், பொருள் ஆயம்**
**போஒய்ப் புறமே படும்.**

*உருளாயம் = உருள் + ஆயம். உருள் = உரு + ள். வடிவங்களின் மிகை. மாறுபாடுகள். மாற்றங்கள். பன்மை. ஆயம் = ஆய் + அம். ஆக்கும் தன்மையுள்ள இடம். உருளாயம் = மாற்றங்கள் ஆக்கும் இடம். சூதாடும் களம் / இடம்.*

*ஒவு = ஓ + உ. முழுமையாய் புறமாதல். மொத்தமாய் நீங்குதல்.*

*கூறு = க் + ஊற் + உ. பொருண்மை / செல்வத்தை விரித்துப் பரப்பிப் பிரித்து புறமாக்கு. பொருளைப் பிரி. பணையம். பந்தயம். கூறு = க் + ஊறு. மெய்யிற்கு / பொருளுக்குத் தீங்கு.*

*பொருளாயம் = பொருள் + ஆயம். பொருள் சேர்க்கும் இடம். களஞ்சியம்.*

*போஓய் = ப் + ஓ + ஓய். பொருள் தொடர்ந்து முழுமையாய்ப் போய். பறந்து.*

*அரசன், சூதாடும் களத்தை நீங்காமல், பணையம் வைத்து / பந்தயம் கட்டி ஆடிக் கொண்டிருந்தால், அவனுடைய செல்வக் களஞ்சியம், தொடர்ந்து முழுமையாய் வேறு நாட்டிற்குப் போய் தங்கி விடும்.*

**934. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்**
**வறுமை தருவதொன் றில்.**

**சிறுமை பல செய்து, சீர் அழிக்கும் சூதின்,**
**வறுமை தருவது ஒன்று இல்.**

*வெட்கக் கேடாக பல காரியங்களைச் செய்து, அழகு, ஒழுக்கம் அமைதியை அழிக்கும் சூதாட்டத்தை விட, வறுமையைத் தருவது வேறு எதுவும் இல்லை.*

**935. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி**
**இவறியா ரில்லாகி யார்.**

**கவறும், கழகமும், கையும், தருக்கி**
**இவறியார்-இல்லாகியார்.**

*கவறு = க் + அ + உ + அறு. பொருண்மை அகம் புறம் பிரி. பொருளை கையுள் இருந்து புறத்தே வெளிப்படுத்து / உருட்டு. தாயக்கட்டை.*

*கழகம் = க் + அழ் + அகம். மெய்யை / பொருண்மையை ஆழ்த்தும் இடம். ஆழ்ந்து செயல்படும் இடம். சூதாடும் களம்.*

*தருக்கு = த் + அரு + க் + உ. தேகத்தை அருவமாக்கிப் பொருண்மையை வெளிப்படுத்தல். நினைத்ததை உருவாக்கி வெளிப்படுத்தல். கருவம்.*

*இவறியார் = இ + உ + அறி + ஆர். நிலையானதையும் மாற்றங்கள் உள்ள புறத்தையும் அறியாதவர்.*

*தாயக்கட்டை, சூதாடும் இடம், கையின் திறமை ஆகியவற்றில், தான் நினைத்ததைச் செய்து காட்டுவேன் என்னும் கருவத்தால், நிலையான தன்மை உடையதையும், மாற்றங்கள் உடையனவற்றையும் அறியாமல், கடைசியில், ஒன்றும் இல்லாமல் போய் விடுவான்.*

**936. அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னும்**
**முகடியால் மூடப்பட் டார்.**

**அகடு ஆரார்; அல்லல் உழப்பர்;-சூது என்னும்**
**முகடியான் மூடப்பட்டார்.**

*அகடு = அக் + அடு. உயிரும் மெய்யும் சார்ந்திருப்பது. வயிறு.*

*அல்லல் = அல் + அல். மிகையான அதிர்வாய், இயக்கமாய். துன்பம்.*

*முகடி = முகம் + அட் + இ. முகத்தை அடுத்து இருப்பது. முகமூடி. கண்களை மறைப்பது.*

*சூதாட்டம் எனும் முகமூடியால் மூடப்பட்டு, வேறதையும் பார்க்க முடியாதவர், வயிறார சாப்பிட மாட்டார், எப்பொழுதும் பயனற்றவைகளை யோசித்து, வீணாக இயங்கிக் கொண்டிருப்பார்.*

**937. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்கும்**
**கழகத்துக் காலை புகின்.**

**பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்-**
**கழகத்துக் காலை புகின்.**

*சுற்றம், நண்பர், அறிஞர்கள் ஆகியோர் ஒருவனுக்குப் பழகும் செல்வம்.*

*சூதாடும் இடம் திறந்தவுடனே, காலங் காலையிலேயே, காலை எடுத்து வைத்தால், செல்வம் போன்ற சுற்றம், நண்பர், அறிஞர்கள் ஆகியோரின் தொடர்பும், ஈகை, விருந்தோம்பல், கல்வி, ஒழுக்கம் ஆகிய குணங்களும் அழிந்து விடும்.*

**938. பொருள் கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்**
**தல்ல லுழப்பிக்குஞ் சூது.**

**பொருள் கெடுத்து, பொய் மேற்கொளஇீ அல்லல்**
**உழப்பிக்கும் சூது.**

*பொருட் செல்வத்தை அழித்து, பொய்களை ஏற்கச் செய்து, பொய்களைப் பேசச் செய்து, நிலைபேற்றை அழித்து, துன்பத்தில் வருத்தப்பட வைக்கும், சூதாட்டம்.*

**939. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்தும்**
**அடையாவா மாயங் கொளின்.**

**உடை, செல்வம், ஊண், ஒளி, கல்வி என்று ஐந்தும்**
**அடையாவாம்-ஆயம் கொளின்.**

*உடை, செல்வம், உணவு, புகழ், கல்வி ஆகிய ஐந்தும், சூதாடும் களத்தில் இருப்பவனை, வந்து சேராது. அவை எல்லாம், அவனுக்குக் கிடைக்காது, அவனை விட்டுப் போய் விடும்.*

**940. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்பம்**
**உழத்தொறூஉங் காதற் றுயிர்.**

**இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல், துன்பம்**
**உழத்தொறூஉம் காதற்று, உயிர்.**

*காதற் றுயிர் = காதல் + துயிர். துயிர் = த் + உயிர். தேகம் உயிர்.*

*பந்தயத்தில் தோற்கும் போதெல்லாம், மீண்டும் எப்படியாவது வென்றுவிட வேண்டும் என்று, சூதாட்டத்தின் மேல் மிகுந்த ஆசை மனதிற்கு வருவது போல், துன்பத்தை அனுபவிக்கும் போதெல்லாம், மீண்டும் எப்படியாவது சுகப்பட்டு விடவேண்டும் என்று, உடல் மேல், மிகுந்த ஆசை வரும், உயிருக்கு.*

## சூது அதிகாரப் பொருள் தொகுப்பு:

*விரும்ப வேண்டாம் சூதாட்டத்தை, நீ வெல்வதாய் இருந்தாலும்!. எதிர்பாராது, ஏதாவது வெல்வதுவும், தூண்டில் கொக்கியை, மீன் பேராசையால், தவறுதலாக விழுங்கியது போன்றதாகும்.*

*ஒன்றை அடைந்து, நூறை இழக்கும் சூதாடுபவர்களுக்கு, நல்லதை, ஞானத்தை, அடைந்து வாழ்வதற்கான வழி உண்டா என்ன? இல்லவே இல்லை.*

*அரசன், சூதாடும் களத்தை நீங்காமல், பணையம் வைத்து / பந்தயம் கட்டி ஆடிக் கொண்டிருந்தால், அவனுடைய செல்வக் களஞ்சியம், தொடர்ந்து முழுமையாய் வேறு நாட்டிற்குப் போய்த் தங்கி விடும்.*

*வெட்கக் கேடாகப் பல காரியங்களைச் செய்து, அழகு, ஒழுக்கம் அமைதியை அழிக்கும் சூதாட்டத்தை விட, வறுமையைத் தருவது வேறு எதுவும் இல்லை.*

*தாயக்கட்டை, சூதாடும் இடம், கையின் திறமை ஆகியவற்றில், தான் நினைத்ததைச் செய்து காட்டுவேன் என்னும் கருவத்தால், நிலையான தன்மை உடையதையும், மாற்றங்கள் உடையனவற்றையும் அறியாமல், கடைசியில், ஒன்றும் இல்லாமல் போய் விடுவான்.*

*சூதாட்டம் எனும் முகமூடியால் மூடப்பட்டு, வேறதையும் பார்க்க முடியாதவர், வயிறார சாப்பிட மாட்டார், எப்பொழுதும் பயனற்றவைகளை யோசித்து, வீணாக இயங்கிக் கொண்டிருப்பார்.*

*சூதாடும் இடம் திறந்தவுடனே, காலங் காலையிலேயே, காலை எடுத்து வைத்தால், செல்வம் போன்ற சுற்றம், நண்பர், அறிஞர்கள் ஆகியோரின் தொடர்பும், ஈகை, விருந்தோம்பல், கல்வி, ஒழுக்கம் ஆகிய குணங்களும் அழிந்து விடும்.*

*பொருட் செல்வத்தை அழித்து, பொய்களை ஏற்கச் செய்து, பொய்களைப் பேசச் செய்து, நிலைபேற்றை அழித்து, துன்பத்தில் வருத்தப்பட வைக்கும், சூதாட்டம்.*

உடை, செல்வம், உணவு, புகழ், கல்வி ஆகிய ஐந்தும், சூதாடும் களத்தில் இருப்பவனை, வந்து சேராது. அவை எல்லாம், அவனுக்குக் கிடைக்காது, அவனை விட்டுப் போய் விடும்.

பந்தயத்தில் தோற்கும் போதெல்லாம், மீண்டும் எப்படியாவது வென்றுவிட வேண்டும் என்று, சூதாட்டத்தின் மேல் மிகுந்த ஆசை மனதிற்கு வருவது போல், துன்பத்தை அனுபவிக்கும் போதெல்லாம், மீண்டும் எப்படியாவது சுகப்பட்டு விடவேண்டும் என்று, உடல் மேல், மிகுந்த ஆசை வரும், உயிருக்கு.

# 95. மருந்து

*வெளி, தீ, காற்று, நீர், மண் ஆகியன ஐந்து மூலங்கள். நம் உடல், அந்த ஐந்து மூலங்களால் ஆனது.*

*வெளி போன்ற உலகில், மண் போன்ற உடலில், காற்று, தீ, நீர் ஆகிய மூன்று மூலங்களும், வாதம், பித்தம், கபம் (சீதம், சில் ஏத்துமம்) என்ற உடல் கூற்று வடிவ மாற்றங்களில், இயங்குகின்றன. அவை நாடிகளாக உணரப்படுகின்றன. வாயுவை எளிமையாகக் குறைப்பது அல்லது அதிகமாக்குவதன் மூலம், மற்ற நாடிகளின் இழந்த சமநிலையைக் கொண்டு வர முடியும், அதன் மூலம், நோயை நீக்கி, நலம் பெறச் செய்ய முடியும்.*

*வெளி, இதயச் சக்கரமாகவும் (அனாகதம்), செவிப்புலனாகவும், உடலின் ஒலியாயும், சித்தத்தின் அசையாமையாயும், ஆனந்த நிலையாயும், முக்கியமாக வெளிப்படுகின்றது.*

**941. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.**

**மிகினும் குறையினும், நோய் செயுயம் – நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று**

*நூலாசிரியர்கள் கருதிய, வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் மிகுந்தாலோ, குறைந்தாலோ வருவது நோய். இம்மூன்றிலும், வளி எனப்படும் வாதமே மிகவும் முக்கியமானது.*

**942. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றமை போற்றி யுணின்.**

**மருந்து என வேண்டாவாம், யாக்கைக்கு-அருந்தியது,
அற்றது போற்றி உணின்.**

*யாக்கை = ய் + ஆக் + ஐ. நிலையாக மெய்யாக்கப்பட்டு ஐக்கியமானது. உடம்பு.*

*அற்றமை = பிரிக்கப்பட்டவை*

*போற்றி = முழுமையாய் அகற்றி.*

*உண்ட உணவு செரிக்கப்பட்டு, பிரிக்கப்பட்ட கழிவை, முழுமையாய் அகற்றியப் பின்பு, உடலின் தேவை அறிந்து உண்டால், உடம்புக்கு, மருந்து என்பதே தேவை இல்லை.*

*வயிற்றில் ஒரு உணவு 80 சதவிகிதம் கூழாக்கப்பட்டு, அதிலிருந்து ஊட்டச் சத்துகளை, சிறுகுடல் உறிஞ்சி, இரத்தக் குழாய்களுக்கு அனுப்பும்போது, ஒரு புதிய உணவு உணவுப்பைக்குள் நுழைந்தால், உடல் பெரும் அதிர்ச்சி அடைகிறது. ஊட்டச் சத்துகளை உறிஞ்சும் செயல்பாடு*

தடைப்படுகின்றது. எந்த அளவு அமிலங்களைச் சுரக்க வேண்டும் என்று கணக்கிடுவதில் தவறு நேர்கின்றது.

உணவு முழுமையாகச் செரிக்கப்படாமல், ஊட்டச் சத்துகளும் நுண்ணிய வடிவில் பிரிக்கப்படாமல் இரத்தக் குழாய்களுக்குள் தள்ளப்படுகின்றது. உடலுக்கு வேண்டிய வாயு, அமிலம் மற்றும் நீர்ச்சத்துகள் உரிய விகிதாச்சாரத்தில் இல்லாமல், உடலின் பல்வேறு உறுப்புகளுக்கு முரண்பட்ட ஆற்றல்களை, இரத்தம் வழங்குகின்றது. உள்ளீடுகளின் குறை நிறைகளைப் பொறுத்து, உறுப்புகளின் வெளிப்பாடான இயக்கமும் தவறுகின்றது. முடிவில், உடலில், ஏதாவது வலிமை குன்றிய ஒரு இடத்தில் நோய் வெளிப்படுகின்றது.

நோய் என்பது, உடலின் ஒட்டு மொத்தமான இயக்கத்தில் ஏற்பட்ட கோளாறுகளின் வெளிப்பாடாக, ஏதோ ஓர் இடத்தில், ஏதோ ஓர் மட்டத்தில் நிகழ்வது. நோய், எல்லை அற்றது, முழுமையானது. நோய், குறிப்பிட்ட, வரையறுக்கப்பட்ட இடத்திற்கோ, உறுப்பிற்கோ அல்ல, உடல் முழுவதற்கும் ஆனது. நோய் முழுமையானது என்றால், மருந்தும் முழுமையானதாகவே இருக்க வேண்டும்.

**943. அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு**
**பெற்றா னெடிதுய்க்கு மாறு.**

**அற்றால், அளவு அறிந்து உண்க; அஃது உடம்பு**
**பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு.**

அற்றால் = செரித்து விட்டால்

நெடிது = நீண்ட காலம்

உய்க்கும் = வாழும்

ஆறு = வழி.

உண்ட உணவு செரித்தப்பின், உடல்நிலை, காலம், உணவின் தன்மை போன்றவற்றைக் கணக்கில் கொண்டு, தேவையான அளவில் உண்ணவும். அதுவே, உடம்பைப் பெற்றவன், நீண்ட காலம் வாழும் வழியாகும்.

**944. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல**
**துய்க்க துவரப் பசித்து.**

**அற்றது அறிந்து கடைப்பிடித்து, மாறு அல்ல**
**துய்க்க, துவரப் பசித்து.**

மாறல்லது = எதிரல்லது. ஏற்றது.

துய்க்க = உண்க.

துவர = த் + உ + அர. தேகம் புறத்தே பிரிவது போன்று. முழுமையாக.

முன்பு உண்ட உணவு செரித்ததை அறிந்து, தேவையான அளவை

*ஒவ்வொரு முறையும் கடைப்பிடித்து, உடலுக்கு ஏற்ற உணவை, முழுமையாகப் பசித்தப்பின் உண்ண வேண்டும்.*

**945. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு.**

**மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்,
ஊறுபாடு இல்லை, உயிர்க்கு.**

*தன் உடலுக்கு எதிரில்லாத உணவையும், மிகையாய் உண்ணும் ஆசையை மறுத்து, அளவுக்கு மிஞ்சாமல் உண்டால், உயிர்க்குத் தீங்கில்லை.*

**946. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்
கழிபே ரிரையான்க ணோய்.**

**இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல், நிற்கும்,
கழி பேர் இரையான்கண் நோய்.**

*கழி = க் + அழி. மெய்யை அழி.*

*மிகையாய் உண்பதின் தீங்கை அறிந்து, அளவாய் உண்பவனிடத்தில், இன்பம் நிலைப்பதைப் போல், உடலை அழிக்கும், மிகுதியான தீனியைத் தின்பவன் இடத்தில், நோய் என்றும் நிலைத்து இருக்கும்.*

**947. தீயள வின்றித் தெரியான் பெரிதுண்பான்
நோயள வின்றிப் படும்.**

**தீ அளவு அன்றித் தெரியான் பெரிது உண்ணின்,
நோய் அளவு இன்றிப் படும்.**

*தீயளவு = பசி அளவு. ஆற்றல் அளவு.*

*பசியின் அளவு தெரியாதது மட்டும் இன்றி, செரித்தது தெரியாமல், உண்ணும் உணவின் அளவு தெரியாமல், உடலுக்கு எதிரானது எதுவென தெரியாமல், மிகையாய் உண்ணும் ஆசையை மறுக்கத் தெரியாமல், மிகையாய் உண்பதால் ஏற்படும் தீங்கைத் தெரியாமல், எதுவும் தெரியாமல், அதிகமாய் உண்பவன், அளவற்ற, கணக்கற்ற நோய்களால், துன்பப்படுவான்.*

**948. நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.**

**நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும்
வாய் நாடி, வாய்ப்பச் செயல்.**

வெளிப்பட்ட நோய் எதுவென அறிந்து, அதன் துவக்கம் எதுவென ஆராய்ந்து, நோயைக் குறைக்கும் அல்லது மிதப்படுத்தும் வழியைத் தெளிந்து, அதை அமைத்துத் தருதல், மருத்துவரின் கடமைகளாகும்.

பல்வித நோய்க் குறிகள், பல நோய்களைச் சுட்டலாம். குறிகளை ஆழ்ந்து கற்பதன் மூலம், சாத்தியமான நோய்களின் எண்ணிக்கையைக் குறுக்கலாம். குறிப்பிட்ட குறிகளை மேலும் ஆய்வதன் மூலம், உண்மையான நோயை அறியலாம்.

நோயைத் தணித்தாலே போதும், உடலின் நோய் அழிப்பு மற்றும் எதிர்ப்பு சக்தி, நோயைக் குணப்படுத்திக் கொள்ளும்.

**949. உற்றா னளவும் பிணியளவுங் காலமும்**
**கற்றான் கருதிச் செயல்.**

**உற்றான் அளவும், பிணி அளவும், காலமும்,**
**கற்றான், கருதிச் செயல்.**

நோயாளியின் வயது, வலிமையையும், நோயின் தீவிரத்தையும், மருந்தை உண்ண வேண்டிய கால அளவையும் கணக்கில் கொண்டு, மருத்துவன் செயல்பட வேண்டும்.

**950. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்**
**றப்பானாற் கூற்றே மருந்து.**

**உற்றவன், தீர்ப்பான், மருந்து உழைச்செல்வான்,**
**என்று அப் பால் நாற் கூற்றே-மருந்து.**

உழைச்செல்வான் = உழைப்பு நடப்பது. நோயாளியின் தேவைகளைக் கவனிக்கவும், மருத்துவருக்கு வேண்டிய உதவிகள் செய்யவும், நோயாளிக்குக் காலம் நேரம் தவறாமல் மருந்து கொடுக்கவும் நடந்து நடந்து வேலை செய்வது.

நோயாளி, மருத்துவன், மருந்து, கவனிக்கும் உதவியாள் என, நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டதே, மருத்துவத் துறை.

**மருந்து அதிகாரப் பொருள் தொகுப்பு:**

நூலாசிரியர்கள் கருதிய, வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் மிகுந்தாலோ, குறைந்தாலோ வருவது நோய். இம்மூன்றிலும், வளி எனப்படும் வாதமே மிகவும் முக்கியமானது.

உண்ட உணவு செரிக்கப்பட்டு, பிரிக்கப்பட்ட கழிவை, முழுமையாய் அகற்றியப் பின்பு, உடலின் தேவை அறிந்து உண்டால், உடம்புக்கு, மருந்து என்பதே தேவை இல்லை.

உண்ட உணவு செரித்தப்பின், உடல்நிலை, காலம், உணவின் தன்மை போன்றவற்றைக் கணக்கில் கொண்டு, தேவையான அளவில் உண்ணவும்.

அதுவே, உடம்பைப் பெற்றவன், நீண்ட காலம் வாழும் வழியாகும்.

முன்பு உண்ட உணவு செரித்ததை அறிந்து, தேவையான அளவை ஒவ்வொரு முறையும் கடைப்பிடித்து, உடலுக்கு ஏற்ற உணவை, முழுமையாக பசித்தப்பின் உண்ண வேண்டும்.

தன் உடலுக்கு எதிரில்லாத உணவையும், மிகையாய் உண்ணும் ஆசையை மறுத்து, அளவுக்கு மிஞ்சாமல் உண்டால், உயிர்க்கு தீங்கில்லை.

மிகையாய் உண்பதின் தீங்கை அறிந்து, அளவாய் உண்பவனிடத்தில், இன்பம் நிலைப்பதைப் போல், உடலை அழிக்கும், மிகுதியான தீனியைத் தின்பவன் இடத்தில், நோய் என்றும் நிலைத்து இருக்கும்.

பசியின் அளவு தெரியாதது மட்டும் இன்றி, செரித்தது தெரியாமல், உண்ணும் உணவின் அளவு தெரியாமல், உடலுக்கு எதிரானது எதுவென தெரியாமல், மிகையாய் உண்ணும் ஆசையை மறுக்கத் தெரியாமல், மிகையாய் உண்பதால் ஏற்படும் தீங்கைத் தெரியாமல், எதுவும் தெரியாமல், அதிகமாய் உண்பவன், அளவற்ற, கணக்கற்ற நோய்களால், துன்பப்படுவான்.

வெளிப்பட்ட நோய் எதுவென அறிந்து, அதன் துவக்கம் எதுவென ஆராய்ந்து, நோயைக் குறைக்கும் அல்லது மிதப்படுத்தும் வழியைத் தெளிந்து, அதை அமைத்துத் தருதல், மருத்துவரின் கடமைகளாகும்.

நோயாளியின் வயது, வலிமையையும், நோயின் தீவிரத்தையும், மருந்தை உண்ண வேண்டிய கால அளவையும் கணக்கில் கொண்டு, மருத்துவன் செயல்பட வேண்டும்.

நோயாளி, மருத்துவன், மருந்து, கவனிக்கும் உதவியாள் என, நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டதே, மருத்துவத் துறை.

ஒழிபியல்

# 96. குடிமை

*குடிமை = குடி + மை. குடி = க் + உட் + இ. மெய் புறத்தே ஒட்டித் தொடர்ந்து நிலைத்தல். மக்கள் நெருங்கி வாழ்தல். குடும்பம். மக்கள் சமூகமாய் இருத்தல். சமூக உறுப்பினன்.*

*குடிமை = குடும்பத் தன்மை. சமூகமாய் இருக்கும் தன்மை. சமூக வாழ்வு.*

**951. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.**

**இற் பிறந்தார்கண் அல்லது இல்லை-இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.**

*இல் = இ + ல். நிலையான அதிர்வு. உயிர் நிலை பெற்ற தன்மை. இரு அதிர்வாய். நிலையாய் வாழ்.*

*செப்பம் = உண்மையை வெளிப்படுத்தும் தன்மை. நேர்மை.*

*நாண் = ந் + ஆள். அகந்தையைக் கட்டுப்படுத்து. தன் அடக்கம்.*

*நேர்மையும், தன் அடக்கமும் ஒன்று சேர்ந்து, இயல்பாக அமைதல், சமூகத்தோடு இணைந்து, நிலைத்து வாழும், குடும்பத்தில் பிறந்தவர்களைத் தவிர, மற்றவர்களிடம் இருக்காது.*

**952. ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.**

**ஒழுக்கமும், வாய்மையும், நாணும், இம் மூன்றும்
இழுக்கார்குடிப் பிறந்தார்.**

*இழுக்கு = தவறு.*

*நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள், ஒழுக்கமான தீங்கற்றச் செயல், உண்மை / நன்மை உரைத்தல், தன்னடக்கம் ஆகிய மூன்றையும் தவற விடமாட்டார்கள்.*

**953. நகையீகை யின்சொலிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.**

**நகை, ஈகை, இன்சொல், இகழாமை, நான்கும்
வகை என்ப-வாய்மைக் குடிக்கு.**

*புன்னகை, பொருள் இல்லாதவர்க்கு உதவுதல், இனிமையாகப் பேசுதல், இழிவாக பேசாமை அல்லது நடக்காமை ஆகிய நான்கும், நேர்மையான குடும்பத்தின், வெவ்வேறு வெளிப்பாடுகள்.*

**954. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்**
**குன்றுவ செய்த லிலர்.**

**அடுக்கிய கோடி பெறினும், குடிப் பிறந்தார்**
**குன்றுவ செய்தல் இலர்.**

*அடுக்கிய கோடி = பல கோடி.*

*குன்றுவது = மனம் குறுகுவது, சிறுமையாவது. மதிப்பு மரியாதை குறைவது.*

*பலகோடி பணத்தைப் பெறுவதாய் இருந்தாலும், நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள், மனம் சிறுமையாகும், மதிப்பு மரியாதையை குறைக்கும் செயலைச் செய்ய மாட்டார்கள்.*

**955. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி**
**பண்பிற் றலைப்பிரித லின்று.**

**வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும், பழங்குடி**
**பண்பின் தலைப்பிரிதல் இன்று.**

*உள்வீழ் = மிகவும் தாழ்.*

*பொருள் செல்வம் மிகவும் தாழ்ந்த பொழுதும், நீண்ட காலம் நல்ல குணங்களின் முதிர்ச்சியுடன் வாழ்ந்த குடும்பத்தினர், தங்களுடைய இனிமையான பேச்சிலும், கனிவான நடத்தையிலும், பொருள் உதவி செய்வதிலும், தங்கள் உயர்வை விட்டு விட மாட்டார்கள்.*

**956. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற**
**குலம்பற்றி வாழ்துமென் பார்.**

**சலம் பற்றிச் சால்பு இல செய்யார்-' மாசு அற்ற**
**குலம் பற்றி வாழ்தும்' என்பார்.**

*சலம் = ச் + அல் + அம். இயக்கத்தின் அதிர்வுத் தன்மை. துன்பம். வறுமை.*

*"குற்றம் குறைகளற்ற குடும்பத்தின், மானம், மதிப்பு, மரியாதை, கௌரவம் ஆகியவற்றைக் காத்து, நாங்கள் வாழ்கின்றோம்", என்று கூறுபவர்கள், வறுமையின் துன்பத்தைப் போக்க, ஒழுக்கம் கெட்ட செயல்களை, பிறருக்கு தீங்கி விளைவிக்கும் காரியங்களை, செய்ய மாட்டார்கள்.*

**957. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்**
**மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.**

**குடிப்பிறந்தார்கண்-விளங்கும்-குற்றம், விசும்பின்**
**மதிக்கண் மறுப்போல், உயர்ந்து.**

*மறு = ம் + அறு. கொண்டு மூடியதில் பிரிந்து இருத்தல். குறை. களங்கம். களங்கம் = கள் + அங்கம். மயக்கும் பகுதி. குழப்பும் பிரிவு.*

*நல்ல குடியில் பிறந்தவர்களிடம் இருக்கும் சிறிய குறையும், வானின் நிலவினிடம் உள்ள குறை போன்று, பெரியதாய் வெளிப்படையாய் தோன்றும்.*

*முகத்தில் புன்னகை இன்றிப் பேசும் இனிமையான சொல்லும், பொருள் உதவியும், பணிவும், 'அவர் மனம் உவந்து, அன்புடன் செய்யவில்லையோ', எனப் பிறரை உறுத்தும். நல்ல குடியில் பிறந்தவருடைய பெருமையும் புகழும், அத்தகைய குறையால், சிறுமைப்பட்டு விடும்.*

**958. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்**
**குலத்தின்க ணையப் படும்.**

**நலத்தின்கண் நார் இன்மை தோன்றின்,**
**அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்.**

*நார் = ன் + ஆர். நெருக்கம் உடையோர். அன்பு. நெருக்கம் பிரிப்போர். பகுத்தறிவு.*

*நல்ல குடும்பத்தில் பிறந்தவன், அன்பில்லாமல் போனால், அவனை, அக்குடும்பத்தில் உள்ளவர்களே சந்தேகப் படுவார்கள். 'தவறாய்ப் பிறந்தானோ, தீவினையால் பிறந்தானோ', என்று உலகமும் சந்தேகிக்கும்.*

**959. நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்**
**குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.**

**நிலத்தில் கிடந்தமை கால் காட்டும்;-காட்டும்,**
**குலத்தில் பிறந்தார் வாய்ச் சொல்.**

*ஒருவருடைய காலில் உள்ள தூசியும், சேறும், அவர் எந்த வகையான நிலத்தில் உழைத்திருப்பார், என்பதை வெளிப்படையாய்க் காட்டி விடும். அதைபோல், ஒருவர் பேசும் சொல்லும், முறையும், அவர் எத்தகைய குடும்பத்தில் பிறந்திருப்பார், என்பதைத் தெளிவாகக் காட்டிவிடும்.*

**960. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்**
**வேண்டுக யார்க்கும் பணிவு.**

**நலம் வேண்டின், நாண் உடைமை வேண்டும்; குலம்வேண்டின்,**
**வேண்டுக, யார்க்கும் பணிவு.**

*வாழ்வில், நன்மையும் இன்பமும் வேண்டுமானால், தன்னடக்கத்துடன் இருக்கவும். குடும்பத்திற்கு நல்ல பெயர், மதிப்பு, மரியாதை வேண்டும் என்றால், எல்லாரிடமும், பணிவுடன் நடந்து கொள்ளவும்.*

## குடிமை அதிகாரப் பொருள் தொகுப்பு:

*நேர்மையும், தன் அடக்கமும் ஒன்று சேர்ந்து, இயல்பாக அமைதல், சமூகத்தோடு இணைந்து, நிலைத்து வாழும், குடும்பத்தில் பிறந்தவர்களைத் தவிர, மற்றவர்களிடம் இருக்காது.*

*நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள், ஒழுக்கமான தீங்கற்றச் செயல், உண்மை / நன்மை உரைத்தல், தன்னடக்கம் ஆகிய மூன்றையும் தவற விடமாட்டார்கள்.*

*புன்னகை, பொருள் இல்லாதவர்க்கு உதவுதல், இனிமையாகப் பேசுதல், இழிவாக பேசாமை அல்லது நடக்காமை ஆகிய நான்கும், நேர்மையான குடும்பத்தின், வெவ்வேறு வெளிப்பாடுகள்.*

*பலகோடி பணத்தைப் பெறுவதாய் இருந்தாலும், நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள், மனம் சிறுமையாகும், மதிப்பு மரியாதையை குறைக்கும் செயலைச் செய்ய மாட்டார்கள்.*

*பொருள் செல்வம் மிகவும் தாழ்ந்த பொழுதும், நீண்ட காலம் நல்ல குணங்களின் முதிர்ச்சியுடன் வாழ்ந்த குடும்பத்தினர், தங்களுடைய இனிமையான பேச்சிலும், கனிவான நடத்தையிலும், பொருள் உதவி செய்வதிலும், தங்கள் உயர்வை விட்டு விட மாட்டார்கள்.*

*"குற்றம் குறைகளற்ற குடும்பத்தின், மானம், மதிப்பு, மரியாதை, கௌரவம் ஆகியவற்றைக் காத்து, நாங்கள் வாழ்கின்றோம்", என்று கூறுபவர்கள், வறுமையின் துன்பத்தைப் போக்க, ஒழுக்கம் கெட்ட செயல்களை, பிறருக்குத் தீங்கி விளைவிக்கும் காரியங்களை, செய்ய மாட்டார்கள்.*

*நல்ல குடியில் பிறந்தவர்களிடம் இருக்கும் சிறிய குறையும், வானின் நிலவினிடம் உள்ள குறை போன்று, பெரியதாய் வெளிப்படையாய் தோன்றும்.*

*நல்ல குடும்பத்தில் பிறந்தவன், அன்பில்லாமல் போனால், அவனை, அக்குடும்பத்தில் உள்ளவர்களே சந்தேகப் படுவார்கள். 'தவறாய்ப் பிறந்தானோ, தீவினையால் பிறந்தானோ', என்று உலகமும் சந்தேகிக்கும்.*

*ஒருவருடைய காலில் உள்ள தூசியும், சேறும், அவர் எந்த வகையான நிலத்தில் உழைத்திருப்பார், என்பதை வெளிப்படையாய் காட்டி விடும். அதைபோல், ஒருவர் பேசும் சொல்லும், முறையும், அவர் எத்தகைய குடும்பத்தில் பிறந்திருப்பார், என்பதைத் தெளிவாகக் காட்டிவிடும்.*

*வாழ்வில், நன்மையும் இன்பமும் வேண்டுமானால், தன்னடக்கத்துடன் இருக்கவும். குடும்பத்திற்கு நல்ல பெயர், மதிப்பு, மரியாதை வேண்டும் என்றால், எல்லாரிடமும், பணிவுடன் நடந்து கொள்ளவும்.*

# 97. மானம்

*மான் + அம். மான் = ம் + ஆன். கொண்டு மூடி நெருங்குதல். மனத்தோடு நெருங்குதல். மான் போல், அமைதி ஆதல். மானம் = மனத்தோடு நெருங்கும் தன்மை. மனம் அமைதியான தன்மை. மதிப்பு. மரியாதை. பெயர். புகழ். நிலை.*

**961. இன்றி யமையாச் சிறப்பின வாயினும்**
**குன்ற வருப விடல்.**

**இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்,**
**குன்ற வருப விடல்.**

*ஒரு செயல், அவசியமானது மற்றும் சிறப்பைத் தரக்கூடியது என்றாலும், அதனால், அவமானம் வந்துவிடும் என்றால், அதைச் செய்யாமல் விட்டு விட வேண்டும்.*

**962. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு**
**பேராண்மை வேண்டு பவர்.**

**சீரினும், சீர் அல்ல செய்யாரே-சீரொடு**
**பேராண்மை வேண்டுபவர்.**

*சீர் = கோபம். ஒழுக்கம். நேர்மை.*

*பேராண்மை = பெயர் + ஆளுமை. புகழ்.*

*அதிகாரத்தில் உள்ளவர் கோபப்பட்டாலும், ஒழுக்கமற்றதைச் செய்யமாட்டார், நேர்மையோடு பெயர், புகழை விரும்புபவர்.*

**963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய**
**சுருக்கத்து வேண்டு முயர்வு.**

**பெருக்கத்து வேண்டும், பணிதல்;சிறிய**
**சுருக்கத்து வேண்டும், உயர்வு.**

*ஒருவனிடம், செல்வம் அதிகமாகச் சேரும்போது, அவன், பணிவுடன் நடந்து கொள்ள வேண்டும். அவன், மிகவும் ஏழையாகி விட்டால், மனம் தளராமல், கம்பீரமாய், தலைநிமிர்ந்து, உயர்ந்து நடக்க வேண்டும்.*

**964. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையி னிழிந்தக் கடை.**

**தலையின் இழிந்த மயிர் அனையர்-மாந்தர்**
**நிலையின் இழிந்தக்கடை.**

*மனிதர்கள், தங்களது உயர்ந்த நிலையிலிருந்து, இழிவான, ஒழுக்கமில்லா செயல்களால், தரம் தாழ்ந்து விட்டால், அவர்களை, உலக மக்கள், தலையிலிருந்து விழுந்த மயிரைப் போன்று, கேவலமாய் கருதுவர்.*

**965. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.**

**குன்றின் அனையாரும் குன்றுவர்- குன்றுவ
குன்றி அனைய செயின்.**

*இழிவான, ஒழுக்கமற்ற செயலை, சிறிய குன்றி மணி அளவுக்கு செய்தாலும், குன்றைப் போல் உயர்ந்து இருந்தவர்கள், உலக மக்களுடைய மதிப்பில், தாழ்ந்து விடுவர்.*

**966. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.**

**புகழ் இன்றால்; புத்தேள் நாட்டு உய்யாதால்; என் மற்று,
இகழ்வார்பின் சென்று நிலை?**

*புகழ் = ப் + உக் + அழ். மனத்தின் உள்ளே மெய்யில் உயிரில் ஆழ்தல். புறம், மனம் இன்றிய நிலை. மெய்யுணர்வு.*

*புத்தேள் = ப் + உத் + ஏள். மனத்தின் உள்ளே தேக உணர்வு மிக உயர்ந்து ஒளிர்மையாவது. மனவெளியின் ஒளிர்மை.*

*நாடு = ன் + ஆட் + உ. நெருங்கி ஒட்டித் தொடர்ந்து முன்செல்வது.*

*புகழ் எனும் மெய்யுணர்வு இன்றி, புத்தேள் நாடு எனும் மனவெளி ஒளிர்மையின் தொடர்ச்சியை, அடைய முடியாது என்று இருக்கும்போது, எதற்கு தன்னை இகழ்பவர் பின்னால், மதிக்காதவர் பின்னால் போய் நிற்க வேண்டும்?*

**967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுதல் நன்று.**

**ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின், அந் நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று.**

*தன்னுடன் சேராதவர், தன்னை விலக்குபவர் பின்னே சென்று, அவருடைய ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆட்பட்டு, ஒருவன், வாழ்வதைக் காட்டிலும், ஏற்கனவே இருந்த உயர்ந்த நிலையிலேயே, அவன் இறந்தான் எனப்படுதல், நல்லது.*

*தன்னுடன் சேராதவர், தன்னை விலக்குபவர் பின்னே சென்று, அவருடைய ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆட்பட்டு, ஒருவன், வாழ்வதைக்*

*காட்டிலும், ஏற்கனவே இருந்த உயர்ந்த நிலையிலேயே, அவன் இறந்தான் எனப்படுதல், நல்லது.*

**968. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை**
**பீடழிய வந்த விடத்து.**

**மருந்தோ, மற்று ஊன் ம்பும் வாழ்க்கை- பெருந்தகைமை**
**பீடு அழிய வந்தஇடத்து?**

*மருந்து = பிறவிப் பிணி நீக்கும் ஞானம்.*

*பெருந்தகைமை = பெருமை + தகை + மை. பெருமை கொள்ளக் கூடிய தகுதி.*

*பீடு = ப் + ஈடு. மனத்தின் நிலை.*

*ஒருவருடைய மனநிலை, அவர் கொண்ட தகுதிகளை, குணங்களைப் பொறுத்தே அமைகின்றது.*

*பெருமை கொள்ளத் தக்க, நல்ல குணங்களால் உருவான, உயர்ந்த, அமைதியான மனநிலை அழிந்து, ஒரு பொருள் செல்வம் வருகிறது என்றால், அதனால் ஒன்றும் பிறவிப் பிணி நீக்கும் ஞானம் கிடைக்கப் போவதில்லை, வெறும் சதையாலான உடம்பின் இருத்தலை மட்டுமே அது சாத்தியமாக்கும்.*

**969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின்.**

**மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர் நீப்பர், மானம் வரின்.**

*வரின் = வ் + அரின். புறமும் அகமும் பிரிந்தால். வரின் = வர் + இன். வந்தால்.*

*மயிர் நீங்கினால், உயிர் வாழாத, கவரி மானைப் போன்றவர்கள், சமூகத்தில், தன் மானம் போய்விட்டது எனத் தெரிந்தால், உடனே உயிரை விட்டு விடுவர்.*

**970. இளிவரின் வாழாத மான முடையார்**
**ஒளிதொழு தேத்து முலகு.**

**இளி வரின், வாழாத மானம் உடையார்**
**ஒளி தொழுது ஏத்தும், உலகு.**

*இளி = இழிவு*
*வரின் = வந்தால்*

*இழிவு வந்தால், வாழாமல், உயிர் பிரியும், மானம் உடையவர்களின் புகழை, உலக மக்கள், வணங்கி உயர்த்துவர்.*

**மானம் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஒரு செயல், அவசியமானது மற்றும் சிறப்பைத் தரக்கூடியது என்றாலும், அதனால், அவமானம் வந்துவிடும் என்றால், அதைச் செய்யாமல் விட்டு விட வேண்டும்.*

*அதிகாரத்தில் உள்ளவர் கோபப்பட்டாலும், ஒழுக்கமற்றதைச் செய்யமாட்டார், நேர்மையோடு பெயர், புகழை விரும்புபவர்.*

*ஒருவனிடம், செல்வம் அதிகமாகச் சேரும்போது, அவன், பணிவுடன் நடந்துக் கொள்ள வேண்டும். அவன், மிகவும் ஏழையாகி விட்டால், மனம் தளராமல், கம்பீரமாய், தலைநிமிர்ந்து, உயர்ந்து நடக்க வேண்டும்.*

*மனிதர்கள், தங்களது உயர்ந்த நிலையிலிருந்து, இழிவான, ஒழுக்கமில்லா செயல்களால், தரம் தாழ்ந்து விட்டால், அவர்களை, உலக மக்கள், தலையிலிருந்து விழுந்த மயிரைப் போன்று, கேவலமாய் கருதுவர்.*

*இழிவான, ஒழுக்கமற்ற செயலை, சிறிய குன்றி மணி அளவுக்குச் செய்தாலும், குன்றைப் போல் உயர்ந்து இருந்தவர்கள், உலக மக்களுடைய மதிப்பில், தாழ்ந்து விடுவர்,*

*புகழ் எனும் மெய்யுணர்வு இன்றி, புத்தேள் நாடு எனும் மனவெளி ஒளிர்மையின் தொடர்ச்சியை, அடைய முடியாது என்று இருக்கும்போது, எதற்குத் தன்னை இகழ்பவர் பின்னால், மதிக்காதவர் பின்னால் போய் நிற்க வேண்டும்?*

*பெருமை கொள்ளத் தக்க, நல்ல குணங்களால் உருவான, உயர்ந்த, அமைதியான மனநிலை அழிந்து, ஒரு பொருள் செல்வம் வருகிறது என்றால், அதனால் ஒன்றும் பிறவிப் பிணி நீக்கும் ஞானம் கிடைக்கப் போவதில்லை, வெறும் சதையாலான உடம்பின் இருத்தலை மட்டுமே அது சாத்தியமாக்கும்.*

*மயிர் நீங்கினால், உயிர் வாழாத, கவரி மானைப் போன்றவர்கள், சமூகத்தில், தன் மானம் போய்விட்டது எனத் தெரிந்தால், உடனே உயிரை விட்டு விடுவர்.*

*இழிவு வந்தால், வாழாமல், உயிர் பிரியும், மானம் உடையவர்களின் புகழை, உலக மக்கள், வணங்கி உயர்த்துவர்.*

# 98. பெருமை

*பெருமை = பெரு + மை. பெரிய உயர்ந்த தன்மை. பெருமிதம். சுயமதிப்பு. மனத்தின் உயர்ந்த நிலை.*

**971. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்**
**கஃதிறந்து வாழ்வோ மெனல்.**

**ஒளி, ஒருவற்கு உள்ள வெறுக்கை; இளி ஒருவற்கு,**
**'அஃது இறந்து வாழ்தும்' எனல்.**

*வெறுக்கை = வ் + எற் + உ + கை. புறமும் அகமும் உயர்ந்து பிரிந்து வெளிப்படும் கை. ஊக்கமுள்ள உழைப்பு.*

*ஒருவரிடம் உள்ள ஊக்கமுள்ள முயற்சியும், உழைப்புமே, அவருக்கு, ஒளி எனும் புகழைக் கொடுக்கும். ஊக்கமுள்ள உழைப்பு இன்றியே வாழ்வோம் என்பது, இழிவை, தாழ்வைத் தரும்.*

**972. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்.**

**பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பு ஒவ்வா,**
**செய்தொழில் வேற்றுமையான்.**

*ஒக்கும் = சமம்.*

*ஒவ்வாமை = சமமில்லாமை. பொருந்தாமை.*

*எல்லா உயிர்களுக்கும், விலங்குகளுக்கும், மனிதர்களுக்கும் பிறப்பு என்பது ஒரே மாதிரியாகவே உள்ளது. ஆனால், அவர்கள் செய்கின்ற செயல்களின் வேற்றுமையாலேயே, ஊக்கமுள்ள உழைப்பாலேயே, அவர்களின் சிறப்பு, மதிப்பு மாறுபடுகின்றது.*

*விலங்கிலிருந்து மனிதன் பெரிதும் வேறுபடுவது, அவனுடைய ஊக்கமுள்ள உழைப்பால்தான். மனிதர்களிலும், ஒருவர் மற்றவரிலிருந்து வேறுபடுவது, ஊக்கமுள்ள முயற்சியால்தான், உழைப்பால்தான்.*

*மனிதனின் சிறப்பு, பெருமை, பெரிய தன்மை, உயர்வு என்பது அவனுடைய ஊக்கமுள்ள உழைப்புதான்.*

**973. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்**
**கீழல்லார் கீழல் லவர்.**

**மேல் இருந்தும், மேல் அல்லார் மேல் அல்லர்; கீழ் இருந்தும்,**
**கீழ் அல்லார், கீழ் அல்லவர்.**

*செல்வம் மிக்க குடும்பத்தில், பிறந்து வளர்ந்து, ஊக்கமுள்ள உழைப்பின்றி இருந்தால், அவர் உயர்ந்தவராகக் கருதப்பட மாட்டார்.*

*ஏழ்மையான குடும்பத்தில் பிறந்திருந்தாலும், ஊக்கமுடன் உழைப்பவர், தாழ்ந்தவராக கருதப்பட மாட்டார்.*

*ஊக்கமுள்ள உழைப்பே உயர்வைத் தரும்.*

**974. ஒருமை மகளிரே போலப் பெருமையும்**
**தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.**

**ஒருமை மகளிரே போல, பெருமையும்,**
**தன்னைத்தான் கொண்டு ஒழுகின், உண்டு.**

*ஒருமை = ஒரு + மை. ஒரு தன்மை. ஒரு மனம். கற்பு.*

*தன்னைத்தான் கொண்டு = புலனடக்கி.*

*ஒழுகு = தியானி.*

*ஒருவனை மட்டும் ஏற்கும் கற்பு, பெண்ணுக்கு பெருமை சேர்ப்பது போல், புலனடக்கி, தியானத்தை ஊக்கமுடன் முயல்பவனும், ஞானம் எனும் ஒருமை, பெருமை அடைவான்.*

**975. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றின்**
**அருமை யுடைய செயல்.**

**பெருமை உடையவர் ஆற்றுவார்-ஆற்றின்**
**அருமை உடைய செயல்.**

*ஞானம், தெளிவு அடைந்தவர் ஊக்கமுடன் செய்வார், அப்படிச் செய்தால், அது ஓர் அற்புதமான, அபூர்வமான, சிறந்த செயலாய் இருக்கும்.*

**976. சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்**
**பேணிக்கொள் வோமென்னு நோக்கு.**

**சிறியார் உணர்ச்சியுள் இல்லை-'பெரியாரைப்**
**பேணிக் கொள்வேம்' என்னும் நோக்கு.**

*சின்னச் சின்னக் காரியங்களைச் செய்ய முற்படும் சிறியவர்களிடத்தில், பெரிய அனுபவம் வாய்ந்த, தெளிவு பெற்றவரை ஏற்று, நெருங்கி, அறிவுரை பெறுவோம் என்ற எண்ணம், தோன்றுவது இல்லை.*

**977. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புத்தான்**
**சீரல் லவர்கட் படின்.**

**இறப்பே புரிந்த தொழிற்று ஆம்-சிறப்பும்தான்**
**சீர் அல்லவர்கண் படின்.**

இறப்பு = மரணம். பிணம்.

தான்சீரல்லவர் = தான் + சீர் + அல்லவர். சுய ஒழுக்கம் அற்றவர்.

சுய ஒழுக்கமற்றவரிடம், சிறப்பான ஒரு பணி கொடுக்கப்பட்டால், அது, மரணம், பிணம் செய்த வேலை போல்தான் இருக்கும், நிறைவேறாது, அழிவையே உண்டாக்கும்.

**978. பணியுமா மென்றும் பெருமை சிறுமை**
**அணியுமாந் தன்னை வியந்து.**

**பணியுமாம், என்றும் பெருமை; சிறுமை**
**அணியுமாம், தன்னை வியந்து.**

உயர்ந்த குணம் உள்ளவர், எப்பொழுதும், எல்லோரிடமும், பணிவுடன் நடந்து கொள்வர். தாழ்ந்த குணம் உள்ளவரோ, கருவமுடன், தன்னை எல்லாரிலும் உயர்ந்தவராய், காட்டிக் கொள்வர்.

**979. பெருமை பெருமித மின்மை சிறுமை**
**பெருமித மூர்ந்து விடல்.**

**பெருமை பெருமிதம் இன்மை; சிறுமை**
**பெருமிதம் ஊர்ந்துவிடல்.**

உயர்ந்த குணமுடையவர்கள் தற்பெருமை, அகந்தை, கருவம், ஆணவம் என ஏதும் அற்றவர்கள். தாழ்ந்த குணம் உள்ளவர்கள், தற்பெருமை, அகந்தை, கருவம் என அனைத்தையும் கொண்டவர்கள். அவர்கள், ஆணவத்தால், புழுபோல் நெளிந்து, இங்கும் அங்கும் ஊர்ந்து சென்று, அழிய விட்டு விட வேண்டும்.

**980. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்**
**குற்றமே கூறி விடும்.**

**அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான்**
**குற்றமே கூறிவிடும்.**

பொது இடத்தில், ஒருவரின் இல்லாமை வெளிப்பட்டு விட்டால், உயர்ந்த குணமுடையவர்கள், அதை வேறுவிதமாகப் பேசி, சமாளித்து, அவருடைய தனிச் சிறப்புகளைக் கூறி, பிறர், அவரைத் தாழ்வாக நினைக்காத வண்ணம், மறைப்பர். தாழ்ந்த குணமுடையவர்கள், மற்றவர்களின் குற்றம், குறைகளை மட்டுமே எடுத்துக் கூறிக் கொண்டிருப்பர்.

உடனே, பேசுபவனுடைய குற்றங்களும், குறைகளும் என்னென்ன என்று, மக்களும் ஆராயத் தொடங்குவர்.

**பெருமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஒருவரிடம் உள்ள ஊக்கமுள்ள முயற்சியும், உழைப்புமே, அவருக்கு, ஒளி எனும் புகழைக் கொடுக்கும். ஊக்கமுள்ள உழைப்பு இன்றியே வாழ்வோம் என்பது, இழிவை, தாழ்வைத் தரும்.*

*மனிதனின் சிறப்பு, பெருமை, பெரிய தன்மை, உயர்வு என்பது அவனுடைய ஊக்கமுள்ள உழைப்புதான்.*

*செல்வம் மிக்க குடும்பத்தில், பிறந்து வளர்ந்து, ஊக்கமுள்ள உழைப்பின்றி இருந்தால், அவர் உயர்ந்தவராகக் கருதப்பட மாட்டார். ஏழ்மையான குடும்பத்தில் பிறந்திருந்தாலும், ஊக்கமுடன் உழைப்பவர், தாழ்ந்தவராக கருதப்பட மாட்டார்.*

*ஒருவனை மட்டும் ஏற்கும் கற்பு, பெண்ணுக்கு பெருமை சேர்ப்பது போல், புலனடக்கி, தியானத்தை ஊக்கமுடன் முயல்பவனும், ஞானம் எனும் ஒருமை, பெருமை அடைவான்.*

*ஞானம், தெளிவு அடைந்தவர் ஊக்கமுடன் செய்வார், அப்படிச் செய்தால், அது ஓர் அற்புதமான, அபூர்வமான, சிறந்த செயலாய் இருக்கும்.*

*சின்னச் சின்னக் காரியங்களைச் செய்ய முற்படும் சிறியவர்களிடத்தில், பெரிய அனுபவம் வாய்ந்த, தெளிவு பெற்றவரை ஏற்று, நெருங்கி, அறிவுரை பெறுவோம் என்ற எண்ணம், தோன்றுவது இல்லை.*

*சுய ஒழுக்கமற்றவரிடம், சிறப்பான ஒரு பணி கொடுக்கப்பட்டால், அது, மரணம், பிணம் செய்த வேலை போல்தான் இருக்கும், நிறைவேறாது, அழிவையே உண்டாக்கும்.*

*உயர்ந்த குணம் உள்ளவர், எப்பொழுதும், எல்லோரிடமும், பணிவுடன் நடந்து கொள்வர். தாழ்ந்த குணம் உள்ளவரோ, கருவமுடன், தன்னை எல்லாரிலும் உயர்ந்தவராய், காட்டிக் கொள்வர்.*

*உயர்ந்த குணமுடையவர்கள் தற்பெருமை, அகந்தை, கருவம், ஆணவம் என ஏதும் அற்றவர்கள். தாழ்ந்த குணம் உள்ளவர்கள், தற்பெருமை, அகந்தை, கருவம் என அனைத்தையும் கொண்டவர்கள். அவர்கள், ஆணவத்தால், புழுபோல் நெளிந்து, இங்கும் அங்கும் ஊர்ந்து சென்று, அழிய விட்டு விட வேண்டும்.*

*பொது இடத்தில், ஒருவரின் இல்லாமை வெளிப்பட்டு விட்டால், உயர்ந்த குணமுடையவர்கள், அதை வேறுவிதமாக பேசி, சமாளித்து, அவருடைய தனிச்சிறப்புகளைக் கூறி, பிறர், அவரைத் தாழ்வாக நினைக்காத வண்ணம், மறைப்பர். தாழ்ந்த குணமுடையவர்கள், மற்றவர்களின் குற்றம், குறைகளை மட்டுமே எடுத்துக் கூறிக் கொண்டிருப்பர்.*

# 99. சான்றாண்மை

*சான்றாண்மை = சான்று + ஆண்மை. சான்று = ச் + ஆன் + ற் + உ. இயக்கமாகி நெருங்கிப் பிரிந்து வெளிப்படுதல். மெய்யுணர்வாகி ஒளிர்மையாதல். முயற்சியால் வென்றவர். மாதிரி. உதாரணம். உயர்வு. ஆண்மை = ஆளுமை.*

*சான்றாண்மை = உயர்ந்த குணங்களை ஆளுதல், கைவிடாமை.*

**981. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து**
**சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.**

**கடன் என்ப, நல்லவை எல்லாம்-கடன் அறிந்து,**
**சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு.**

*எல்லா நல்ல குணங்களையும் கொண்டு பழக வேண்டியது, மனிதர்களின் கடமை என்று கூறுவர், கற்றறிந்தவர்கள். கடமையை அறிந்து, உயர்ந்த குணங்களைக் கடைப்பிடிப்பவர்களுக்கு, நல்லவை எல்லாம் நடக்கும்.*

**982. குணநலஞ் சான்றோர் நலமே பிறநலம்**
**எந்நலத் துள்ளதூஉ மன்று.**

**குண நலம், சான்றோர் நலனே; பிற நலம்**
**எந் நலத்து உள்ளதூஉம் அன்று.**

*உயர்ந்த குணங்கள், பிறருக்கு நன்மை செய்தாலும், அவற்றால், சான்றோர்களே அதிக நன்மை பெறுகின்றார்கள். ஏனெனில், பெருமை கொள்ளத் தக்க, நல்ல குணங்களால் உருவான, உயர்ந்த, அமைதியான மனநிலை, எளிதாக ஞானத்திற்கு இட்டுச் செல்லும். அத்தகைய நன்மை, கல்வி, செல்வம் போன்ற வேறு எந்த நல்ல விடயத்திலும், இல்லை.*

**983. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ**
**டைந்துசால் பூன்றிய தூண்.**

**அன்பு, நாண், ஒப்புரவு கண்ணோட்டம், வாய்மையொடு**
**ஐந்து-சால்பு ஊன்றிய தூண்.**

*அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும், சால்பு எனும் மாளிகையை, தாங்கும் தூண்கள் ஆகும்.*

**984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை**
**சொல்லா நலத்தது சால்பு.**

**கொல்லா நலத்தது, நோன்மை; பிறர் தீமை**
**சொல்லா நலத்தது, சால்பு.**

*நோன்பு = இறைமையுடன் ஒன்றும் முயற்சி*

*சால்பு = மேன்மை.*

*அன்பு என்பது பிற உயிரைக் கொல்லாமல் இருப்பது. அந்த நன்மையைச் செய்வது, இறைமையுடன் ஒன்றும் முயற்சி. பிறர் தீமையைப் பலரும் அறியும்படி, கண்ணோட்டத்தால் சொல்லாமல் இருக்கும் நன்மையைச் செய்வது, மேன்மை.*

**985. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்**
**மாற்றாரை மாற்றும் படை.**

**ஆற்றுவார் ஆற்றல் பணிதல்; அது சான்றோர்**
**மாற்றாரை மாற்றும் படை.**

*ஒரு கடினமான செயலைச் செய்பவரின் ஆற்றல், அவரது நாணம் என்னும் பணிவுதான். சான்றோர்க்குத் தன் அடக்கம் என்பது, மாற்று எண்ணம், கருத்து, செயல்பாடு உடையவர்களை மாற்றி, தன் செயலுக்கு ஏற்றவர்களாய் ஆக்கும் வலிமையான படையாகும்.*

*ஒருவருடைய திறமையும், அறிவும், அனுபவமும் மாற்று எண்ணம் கொண்டவர்களை மாற்றி விடாது. ஒரு வேளை, எதிர்ப்பையே கூட்டலாம்.*

**986. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி**
**துலையல்லார் கண்ணுங் கொளல்.**

**'சால்பிற்குக் கட்டளை யாது?' எனின், தோல்வி**
**துலை அல்லார்கண்ணும் கொளல்.**

*துலை = துலா. சமம்.*

*சால்புடையவர் எனும் மேன்மையுடையவர், கட்டாயமாகச் செய்ய வேண்டியது என்னவென்றால், தனக்குச் சமமில்லாதவரிடமும், தோல்வியை தோல்வி என, ஒப்புக் கொள்ளுதல், ஒப்புரவு கொள்ளுதல்.*

**987. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு.**

**இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்,**
**என்ன பயத்ததோ, சால்பு?**

*தமக்குத் தீங்கு செய்தவர்க்கும், இனிமையானவற்றைச் செய்யா விட்டால், மேன்மை எனும் சால்பால், விளைந்த பயன்தான் என்ன?*

**988. இன்மை யொருவற் கிழிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.**

**இன்மை ஒருவற்கு இளிவு அன்று-சால்பு என்னும்
திண்மை உண்டாகப் பெறின்.**

*இன்மை = வறுமை.*

*திண்மை = வலிமை.*

*மேன்மை அல்லது சால்பு என்னும் வலிமையைக் கொண்டிருப்பவருக்கு, வறுமை என்பது, இழிவான நிலையல்ல.*

**989. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி எனப்படு வார்.**

**ஊழி பெயரினும் தாம் பெயரார்; சான்றாண்மைக்கு
ஆழி எனப்படுவார்.**

*யுகம் மாறினாலும், உலகமே அழிந்தாலும், சான்றாண்மைக் கடல் எனப்படுபவர், தன் உயர்ந்த குணங்களிலிருந்து மாறமாட்டார்.*

*சான்றாண்மைக் கடல் எனப்படுபவர், அன்பு, பணிவு, ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய நல்ல குணங்களை, தன் வாழ்வில், வாழ்நாள் முழுவதும், அனைவரிடமும் உறுதியாகக் கடைப்பிடிப்பவர்.*

**990. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலம்
தாங்காது மன்னோ பொறை.**

**சான்றவர் சான்றாண்மை குன்றின், இரு நிலம்தான்
தாங்காது மன்னோ, பொறை!**

*கடலின் நீர்மட்டம் குறையாமல் இருப்பதால்தான், நிலம் நிலையாய் இருக்கின்றது. கடலின் நீர்மட்டம் வெகுவாகக் குறைந்துவிட்டால், நிலம் சமநிலை இழந்து அழிந்து விடும்.*

*முன் மாதிரி மனிதர், உதாரண புருசர் என்றிருக்கும் சான்றோர், தங்கள் கடல் போன்ற மேன்மையில் குன்றினால், அவர்களைப் பார்த்து, பிற உலக மக்களும், நல்ல குணங்களையும், நன்மை செய்யும் பண்புகளையும் இழந்து, தீங்கு செய்ய முனைவர். சமூகத்தின் சமநிலை குலைந்து, அழிவே ஏற்படும்.*

**சான்றாண்மை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*எல்லா நல்ல குணங்களையும் கொண்டு பழக வேண்டியது, மனிதர்களின் கடமை என்று கூறுவர், கற்றறிந்தவர்கள். கடமையை அறிந்து, உயர்ந்த குணங்களைக் கடைப்பிடிப்பவர்களுக்கு, நல்லவை எல்லாம் நடக்கும்.*

உயர்ந்த குணங்கள், பிறருக்கு நன்மை செய்தாலும், அவற்றால், சான்றோர்களே அதிக நன்மை பெறுகின்றார்கள். ஏனெனில், பெருமை கொள்ளத் தக்க, நல்ல குணங்களால் உருவான, உயர்ந்த, அமைதியான மனநிலை, எளிதாக ஞானத்திற்கு இட்டுச் செல்லும். அத்தகைய நன்மை, கல்வி, செல்வம் போன்ற வேறு எந்த நல்ல விடயத்திலும், இல்லை.

அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும், சால்பு எனும் மாளிகையை, தாங்கும் தூண்கள் ஆகும்.

அன்பு என்பது பிற உயிரைக் கொல்லாமல் இருப்பது. அந்த நன்மையைச் செய்வது, இறைமையுடன் ஒன்றும் முயற்சி. பிறர் தீமையைப் பலரும் அறியும்படி, கண்ணோட்டத்தால் சொல்லாமல் இருக்கும் நன்மையைச் செய்வது, மேன்மை.

ஒரு கடினமான செயலைச் செய்பவரின் ஆற்றல், அவரது நாணம் என்னும் பணிவுதான். சான்றோர்க்குத் தன் அடக்கம் என்பது, மாற்று எண்ணம், கருத்து, செயல்பாடு உடையவர்களை மாற்றி, தன் செயலுக்கு ஏற்றவர்களாய் ஆக்கும் வலிமையான படையாகும்.

சால்புடையவர் எனும் மேன்மையுடையவர், கட்டாயமாகச் செய்ய வேண்டியது என்னவென்றால், தனக்குச் சமமில்லாதவரிடமும், தோல்வியை தோல்வி என, ஒப்புக் கொள்ளுதல், ஒப்புரவு கொள்ளுதல்.

தமக்குத் தீங்கு செய்தவர்க்கும், இனிமையானவற்றைச் செய்யா விட்டால், மேன்மை எனும் சால்பால், விளைந்த பயன்தான் என்ன?

மேன்மை அல்லது சால்பு என்னும் வலிமையைக் கொண்டிருப்பவருக்கு, வறுமை என்பது, இழிவான நிலையல்ல.

யுகம் மாறினாலும், உலகமே அழிந்தாலும், சான்றாண்மைக் கடல் எனப்படுபவர், தன் உயர்ந்த குணங்களிலிருந்து மாறமாட்டார்.

கடலின் நீர்மட்டம் வெகுவாகக் குறைந்துவிட்டால், நிலம் சமநிலை இழந்து அழிந்து விடும். அதுபோல், சான்றாண்மைக் கடல், குணத்தில் குன்றினால், சமூகத்தின் சமநிலை குலைந்து, அழிவே ஏற்படும்.

## 100. பண்புடைமை

*பண்புடைமை = பண்பு + உடைமை. பண்பு = ப் + அண் + ப் + உ. எண்ணம் / உணர்வு மிக நெருங்கி சொல்லால் செயலால் வெளிப்படுதல். நெருங்கும் குணம். உடைமை = கொண்டிருக்கும் தன்மை.*

*பண்புடைமை = நெருங்கும் குணம் கொண்டிருத்தல்.*

**991. எண்பதத்தா னெய்த லெளிதென்ப யார்மாட்டும்**
**பண்புடைமை யென்னும் வழக்கு.**

**எண் பதத்தால், எய்தல் எளிது என்ப, யார்மாட்டும்,**
**பண்பு உடைமை என்னும் வழக்கு.**

*எண் = எண்ணம்   பதம் = தன்மை. வகை. விதம்.*

*எய்தல் = அடைதல்.*

*எல்லாரிடமும் பண்புடன் நடந்து கொள்பவர், எண்ணியதை எண்ணிய விதத்தில், எளிதாக அடையலாம் என்பர், பெரியோர்.*

**992. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்**
**பண்புடைமை யென்னும் வழக்கு.**

**அன்பு உடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், இவ் இரண்டும்**
**பண்பு உடைமை என்னும் வழக்கு.**

*ஆன்ற = அகன்ற. பரந்த.*

*அன்புடன் இருத்தல், பரந்த மனப்பான்மையுள்ள குடும்பத்தில் பிறத்தல், ஆகிய இரண்டும், ஒருவருக்குப் பண்பைக் கொடுக்கும், என்பர், பெரியோர்.*

**993. உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க**
**பண்பொத்த லொத்ததா மொப்பு.**

**உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்றால்; வெறுத்தக்க**
**பண்பு ஒத்தல், ஒப்பது ஆம் ஒப்பு.**

*வெறு = வ் + எற் + உ. புறமும் அகமும் உயர்ந்து பிரிந்து வெளிப்படல். மெய்யுணர்வாதல்.*

*ஒத்தல் = இணையாதல். ஒன்றியிருத்தல்.  ஒப்பு = ஒப்பீடு.*

*பல்வேறு மனிதர்களும், உடல் உறுப்புகளில், ஒரே மாதிரி இருக்கின்றனர் என்பது, ஒப்பீடு அல்ல. மெய்யுணர்வை அளிக்கும், இணையான பண்புகளில், அவர்கள் ஒன்றியிருப்பதை ஒப்பிடுவதே, சரியான ஒப்பீடாகும்.*

**994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.**

**நயனொடு நன்றி புரிந்த பயன் உடையார்
பண்பு பாராட்டும், உலகு.**

*அன்புடன் நன்மையைச் செய்பவர், அதற்கான பயனை அடைவார். அத்தகைய பண்பு, குணம் உடையவரை, உலகமும் பாராட்டும்.*

**995. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.**

**நகையுள்ளும் இன்னாது, இகழ்ச்சி; பகையுள்ளும்
பண்பு உள, பாடு அறிவார்மாட்டு.**

*பாடு = விளைவு.*

*நண்பர்களிடம், சிரிப்பை வெளிப்படுத்தும் சமயத்திலும், இகழ்ச்சி வெளிப்படக் கூடாது. அது, இகழ்ச்சிக்குள்ளானவரின் மனதை வருத்தும். மேலும், அதுவே, அவர் தனக்கு எதிராகச் செயல்படுவதற்கு காரணமாகி விடும். அதைப் போலவே, பகைவரிடமும், தம் பகையை வெளிப்படுத்துவதில், சில பண்புகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையெனில், பகைகள் அதிகமாகி, தீவிரமாகி, பெரிய அழிவைத் தரும் விளைவுகளை, ஏற்படுத்தி விடும்.*

**996. பண்புடையார் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.**

**பண்பு உடையார்ப் பட்டு, உண்டு உலகம்;
அது இன்றேல், மண் புக்கு மாய்வதுமன்.**

*பட்டு = ப் + அட் + உ. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படல். பின்தொடர்தல். வழிநடத்தல்.*

*பண்புடையவர்களைப் பின்தொடர்வதால், இந்த உலகம் இன்னும் இருக்கின்றது. இல்லையென்றால், மனித இனம், மண்ணில் புதைந்து அழிந்து விடும்.*

**997. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.**

**அரம் போலும் கூர்மையரேனும், மரம் போல்வர்,
மக்கட் பண்பு இல்லாதவர்.**

*அரம்போன்று கூர்மையான அறிவுடையவராய் இருந்தாலும், அன்பு, பிறரை அங்கீகரித்தல், ஆகிய மக்களுக்குரிய குணங்கள் இல்லையென்றால், அவர்கள் மரத்தைப் போன்றவர்கள்.*

**998. நண்பற்றா ராகி நயனிலசெய் வார்க்கும்**
**பண்பாற்றா ராதல் கடை.**

**நண்பு ஆற்றார் ஆகி, ந ம்இல செய்வார்க்கும்,**
**பண்பு ஆற்றஐகூராதல் கடை.**

*தன்னுடன், நட்பு இல்லாதவராகி, தனக்குத் தீங்கைச் செய்பவரிடமும், அன்புடனும், பொறுமையுடனும், நடந்து கொள்ளாமல் இருப்பது, பண்பாளர்களுக்கு இழிவாகும்.*

**999. நகவல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்**
**பகலின்பாற் பட்டன் றிருள்.**

**நகல் வல்லர் அல்லார்க்கு மா இரு ஞாலம்,**
**பகலும், பாற் பட்டன்று, இருள்.**

*மாயிரு = மா + இரு. பெரிய, நிலையான.*

*பால் = வெண்மை.*

*பட்டம் = ப் + அட் + அம். கொண்டது ஒட்டித் தொடரும் தன்மை. சூரிய ஒளி பரவும் தன்மை. வெளிச்சம்.*

*ஏற்கனவே பழகிப் பிரிந்து, ஒருவரை பார்த்து மற்றொருவர், புன்னகை செய்யும் வலிமை இல்லாதவர்களுக்கு, பெரிய நிலையான உலகம்கூட, பகலிலும் வெண்மையான வெளிச்சமாய்த் தெரியாது, இருளாகவே இருக்கும்.*

**1000. பண்பில்லான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்**
**கலந்தீமை யாற்றிரிந் தற்று.**

**பண்பு இலான் பெற்ற பெருஞ் செல்வம்-நன் பால்**
**கலம் தீமையால் திரிந்தற்று.**

*நன்பால் = நல்ல பால்.*

*கலந்தீமை = கலம் + தீமை. பாத்திரத்தின் தீய தன்மை.*

*அன்பும், பரந்த மனப்பான்மையும் இல்லாதவன், பெற்ற பெரிய செல்வம், நல்ல பால், பாத்திரத்தின் கெட்ட தன்மையால், திரிந்தது போல், கெட்டு, யாருக்கும் பயனில்லாமல், வீணாய் போய்விடும்.*

**பண்புடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*எல்லாரிடமும் பண்புடன் நடந்து கொள்பவர், எண்ணியதை எண்ணிய விதத்தில், எளிதாக அடையலாம் என்பர், பெரியோர்.*

*அன்புடன் இருத்தல், பரந்த மனப்பான்மையுள்ள குடும்பத்தில் பிறத்தல், ஆகிய இரண்டும், ஒருவருக்கு பண்பைக் கொடுக்கும், என்பர், பெரியோர்.*

*பல்வேறு மனிதர்களும், உடல் உறுப்புகளில், ஒரே மாதிரி இருக்கின்றனர் என்பது, ஒப்பீடு அல்ல. மெய்யுணர்வை அளிக்கும், இணையான பண்புகளில், அவர்கள் ஒன்றியிருப்பதை ஒப்பிடுவதே, சரியான ஒப்பீடாகும்.*

*அன்புடன் நன்மையைச் செய்பவர், அதற்கான பயனை அடைவார். அத்தகைய பண்பு, குணம் உடையவரை, உலகமும் பாராட்டும்.*

*நண்பர்களிடம், சிரிப்பை வெளிப்படுத்தும் சமயத்திலும், இகழ்ச்சி வெளிப்படக் கூடாது. அது, இகழ்ச்சிக்குள்ளானவரின் மனதை வருத்தும். மேலும், அதுவே, அவர் தனக்கு எதிராக செயல்படுவதற்கு காரணமாகி விடும். அதைப் போலவே, பகைவரிடமும், தம் பகையை வெளிப்படுத்துவதில், சில பண்புகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையெனில், பகைகள் அதிகமாகி, தீவிரமாகி, பெரிய அழிவைத் தரும் விளைவுகளை, ஏற்படுத்தி விடும்.*

*பண்புடையவர்களைப் பின்தொடர்வதால், இந்த உலகம் இன்னும் இருக்கின்றது. இல்லையென்றால், மனித இனம், மண்ணில் புதைந்து அழிந்து விடும்.*

*அரம்போன்று கூர்மையான அறிவுடையவராய் இருந்தாலும், அன்பு, பிறரை அங்கீகரித்தல், ஆகிய மக்களுக்குரிய குணங்கள் இல்லையென்றால், அவர்கள் மரத்தைப் போன்றவர்கள்.*

*தன்னுடன், நட்பு இல்லாதவராகி, தனக்குத் தீங்கைச் செய்பவரிடமும், அன்புடனும், பொறுமையுடனும், நடந்து கொள்ளாமல் இருப்பது, பண்பாளர்களுக்கு இழிவாகும்.*

*ஏற்கனவே பழகிப் பிரிந்து, ஒருவரை பார்த்து மற்றொருவர், புன்னகை செய்யும் வலிமை இல்லாதவர்களுக்கு, பெரிய நிலையான உலகம்கூட, பகலிலும் வெண்மையான வெளிச்சமாய்த் தெரியாது, இருளாகவே இருக்கும்.*

*அன்பும், பரந்த மனப்பான்மையும் இல்லாதவன், பெற்ற பெரிய செல்வம், நல்ல பால், பாத்திரத்தின் கெட்ட தன்மையால், திரிந்தது போல், கெட்டு, யாருக்கும் பயனில்லாமல், வீணாய் போய்விடும்.*

## 101. நன்றியில் செல்வம்

*நன்றியில் செல்வம் = நன்றி + இல் + செல்வம். நன்மை இல்லாத செல்வம். பயன்பாடாத செல்வம். வீணாய் அழியும் செல்வம்.*

**1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்**
**செத்தான் செயக்கிடந்த தில்.**

**வைத்தான், வாய் சான்ற பெரும் பொருள்; அஃது உண்ணான்**
**செத்தான், செயக்கிடந்தது இல்.**

*சான்ற = சத்தான.*

*சத்தான, மிகுந்த விலையுள்ள உணவை, வாயில் வைத்தும் உண்ண முடியாதவன், இறந்தவனுக்குச் சமம். அவனால் ஆகப்போவது ஒன்றும் இல்லை.*

*பொருளைச் சேர்ப்பதிலேயே குறியாய் இருந்து, சாப்பிடாமல், தூங்காமல் சொத்தைச் சேர்ப்பவன், உடலின் இயக்கத்தைக் கெடுத்தவனாய் இருப்பான். பசியும், செரிக்கும் சக்தியும், ஊக்கமும் இன்றி இருப்பான். உடல் நோயுற்றாலோ, தொழிலில் இருந்து ஓய்வு பெற்றாலோ, உணவை உண்ண முடியாமல், தூங்கவும் முடியாமல் துன்புறுவான். சேர்த்த சொத்தால், எந்தப் பலனுமின்றி, செத்தவன் போல் உயிர்ப்பின்றி இருப்பான்.*

**1002. பொருளானா மெல்லாமென் றீயா திவறும்**
**மருளானா மாணாப் பிறப்பு.**

**'பொருளான் ஆம், எல்லாம்' என்று, ஈயாது இவறும்**
**மருளான், ஆம், மாணாப் பிறப்பு.**

*இவறும் = உள் கொண்டதை வெளிவிடாமல் இருக்கும். உலோபியாய். கஞ்சத்தனமாய்.*

*"பணத்தால் எதையும் சாதிக்க முடியும், பொருள்தான் எல்லாம்", என்று எவருக்கும் எதுவும் தராமல், உலோபியாய், 'செல்வம் வருவது என்பதே ஊழ்வினையால், நல்வினையால்தான்', என்று தெரியாமல், அறியாமையில் இருப்பவன், அமைதியில்லாப் பிறப்பையே பெறுவான்.*

**1003. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்**
**தோற்ற நிலைக்குப் பொறை.**

**ஈட்டம் இவறி, இசை வேண்டா ஆடவர்**
**தோற்றம் நிலக்குப் பொறை.**

*சம்பாதித்ததை, யாருக்கும் தராமல், புகழை விரும்பாமல், வாடிய ஒளியற்ற உருவம் கொண்டவர், நிலத்திற்கு சுமையாவார்.*

**1004. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரால்
நச்சப் படாஅ தவன்.**

**எச்சம் என்று என் எண்ணும் கொல்லோ-ஒருவரால்
நச்சப் படாஅதவன்.**

*நச்சம் = ன் + அச் + அம். நெருக்கமான இயக்கத் தன்மை. ஆசை. நசை. விருப்பம்.*

*தன்னை ஒருவரும் விரும்பாமல், சீண்டாமல் இருக்கிறார்களே என்று அறிந்த பின்னும், தான் இவ்வுலகத்தில், எதை மிச்சமாய் விட்டுச் செல்லப் போகிறோம் என்று, அவன் சிந்திக்கவே மாட்டானா என்ன?*

**1005. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.**

**கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு, அடுக்கிய
கோடி உண்டாயினும், இல்.**

*யாருக்கும் கொடுக்காமல், தானும் அனுபவிக்காமல் இருப்பவனிடம், பல கோடி பணமிருந்தாலும், அவன் ஏழையே.*

**1006. ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.**

**ஏதம், பெருஞ் செல்வம்-தான் துவ்வான், தக்கார்க்கு ஒன்று
ஈதல் இயல்பு இலாதான்.**

*ஏதம் = ஏத் + அம். மிக உயர்ந்த தேகத் தன்மை. அச்சம். துன்பம்.*

*தானும் தின்னாதவன், தேவையானவர்களுக்கு ஒன்று கொடுக்கும் இயல்பும் இல்லாதவன், அத்தகையவன் இடத்தில் உள்ள பெருஞ்செல்வம், சமூகத்திற்கே துன்பம்.*

**1007. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியள்மூத் தற்று.**

**அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம்-மி நலம்
பெற்றாள் தமியள் மூத்தற்று.**

*அற்றார் = இல்லாதவர்.*

*தமியள் = தம் + இ + அள். தனியள். தனியாள்.*

*பொருள் இல்லாதவர்களின், துன்பத்தைப் போக்காதவனின் செல்வம், மிகுந்த உடல் அழகைப் பெற்றவள், சுகம் அனுபவிக்காமல், தனியாளாகவே இருந்து, முதுமை அடைந்தது, போலாகும்.*

**1008. நச்சப் படாதவன் செல்வ நடுவூருள்**
**நச்சு மரம்பழுத் தற்று.**

**நச்சப்படாதவன் செல்வம்-நடுவூருள்**
**நச்சு மரம் பழுத்தற்று.**

*ஒருவராலும் விரும்பப் படாதவனின் செல்வம், ஊர் நடுவில், நச்சு மரம் பழுத்துள்ளதைப் போன்றதாம்.*

**1009. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய**
**ஒண்பொருள் கொள்வார் பிறர்.**

**அன்பு ஒரீஇ, தற் செற்று, அறம் நோக்காது, ஈட்டிய**
**ஒண் பொருள் கொள்வார், பிறர்.**

*அன்பொரீஇ = அன்பு + ஒர் + ஈ + இ. அன்பால் ஒன்றித் / ஒன்றைத் தருவது இன்றி.*

*தற்செற்று = தன் + செற்று. தன்னை அடக்கி. தன் ஆசையை அடக்கி.*

*ஒண்பொருள் = ஒளிர் பொருள். விலையுயர்ந்த செல்வம்.*

*அன்பால் பிறர்க்கு ஒன்றையும் தராமல், தன் ஆசைகளை அடக்கி தானும் அனுபவிக்காமல், அறம் பற்றிச் சிந்திக்காமல், சம்பாதித்து சேர்த்த விலையுயர்ந்த செல்வங்களை, திருடர்கள், கொள்ளை அடித்துச் சென்று விடுவர்.*

**1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி**
**வறங்கூர்ந் தனைய துடைத்து.**

**சீருடைச் செல்வர் சிறு துனி-மாரி**
**வறம் கூர்ந்தனையது உடைத்து.**

*சீர் = புகழ். அறம்.*

*துனி = த் + உன் + இ. தேகத்தின் புறத்தே நெருங்கி இருப்பது. உடைமை. செல்வம்.*

*புகழ் மற்றும் அறம் உடைய செல்வரிடம், சிறிதளவிலான செல்வம் மட்டுமே இருப்பது, மேகம், மழை பொழிந்தப்பின், வெளுத்து, மெலிந்து விட்டது போன்றதாம்.*

*மேகம், மீண்டும் ஒன்று திரண்டு, கருத்து, வலிமையாகிப் பொழியும். செல்வரும், மேலும் பொருள் ஈட்டி, பொருள் இல்லாதவர்க்கும், பொருளை ஈட்ட முடியாதவர்க்கும், தருவர்.*

## நன்றியில் செல்வம் அதிகாரப் பொருள் தொகுப்பு:

*சத்தான, மிகுந்த விலையுள்ள உணவை, வாயில் வைத்தும் உண்ண முடியாதவன், இறந்தவனுக்குச் சமம். அவனால் ஆகப்போவது ஒன்றும் இல்லை.*

*"பணத்தால் எதையும் சாதிக்க முடியும், பொருள்தான் எல்லாம்", என்று எவருக்கும் எதுவும் தராமல், உலோபியாய், 'செல்வம் வருவது என்பதே ஊழ்வினையால், நல்வினையால்தான்', என்று தெரியாமல், அறியாமையில் இருப்பவன், அமைதியில்லாப் பிறப்பையே பெறுவான்.*

*சம்பாதித்ததை, யாருக்கும் தராமல், புகழை விரும்பாமல், வாடிய ஒளியற்ற உருவம் கொண்டவர், நிலத்திற்குச் சுமையாவார்.*

*தன்னை ஒருவரும் விரும்பாமல், சீண்டாமல் இருக்கிறார்களே என்று அறிந்த பின்னும், தான் இவ்வுலகத்தில், எதை மிச்சமாய் விட்டுச் செல்லப் போகிறோம் என்று, அவன் சிந்திக்கவே மாட்டானா என்ன?*

*யாருக்கும் கொடுக்காமல், தானும் அனுபவிக்காமல் இருப்பவனிடம், பல கோடி பணமிருந்தாலும், அவன் ஏழையே.*

*தானும் தின்னாதவன், தேவையானவர்களுக்கு ஒன்று கொடுக்கும் இயல்பும் இல்லாதவன், அத்தகையவன் இடத்தில் உள்ள பெருஞ்செல்வம், சமூகத்திற்கே துன்பம்.*

*பொருள் இல்லாதவர்களின், துன்பத்தைப் போக்காதவனின் செல்வம், மிகுந்த உடல் அழகைப் பெற்றவள், சுகம் அனுபவிக்காமல், தனியாளாகவே இருந்து, முதுமை அடைந்தது, போலாகும்.*

*ஒருவராலும் விரும்பப் படாதவனின் செல்வம், ஊர் நடுவில், நச்சு மரம் பழுத்துள்ளதைப் போன்றதாம்.*

*அன்பால் பிறர்க்கு ஒன்றையும் தராமல், தன் ஆசைகளை அடக்கி தானும் அனுபவிக்காமல், அறம் பற்றிச் சிந்திக்காமல், சம்பாதித்து சேர்த்த விலையுயர்ந்த செல்வங்களை, திருடர்கள், கொள்ளை அடித்துச் சென்று விடுவர்.*

*புகழ் மற்றும் அறம் உடைய செல்வரிடம், சிறிதளவிலான செல்வம் மட்டுமே இருப்பது, மேகம், மழை பொழிந்தப்பின், வெளுத்து, மெலிந்து விட்டது போன்றதாம்.*

# 102. நாணுடைமை

*நாணுடைமை = நாண் + உடைமை. நாண் = ன் + ஆண். மனம் உயிருடன் மிக நெருக்கமாதல். தன்னடக்கம் கொண்டிருத்தல். பணிவு. அச்சம். வெட்கம்.*

**1011. கருமத்தா னாணுத னாணுத் திருநுதல்**
**நல்லவர் நாணுப் பிற.**

**கருமத்தான் நாணுதல், நாணு; திருநுதல்**
**நல்லவர் நாணு, பிற.**

*கருமம் = ஊழ். நல்வினை, தீவினை.*

*நாண் = ன் + ஆள். நெருக்கத்தை ஆளுதல். நெருக்கத்தைக் கட்டுப்படுத்தல். அச்சம். வெட்கம். தன்னடக்கம். பணிவு.*

*திரு = த் + இர் + உ. தேகம் நிலைத்து வெளிப்படல்.*

*நுதல் = ன் + உத் + அல். நெருக்கமான புறத்தேகம் அதிர்தல். நெற்றி.*

*தீவினை செய்ய அஞ்சுதல், வெட்கத்தால் அழகாகத் தலைசாய்தல், சான்றோரின் தன்னடக்கம் இவை யாவும் வெவ்வேறு வகையான நாணங்கள்.*

**1012. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல**
**நாணுடைமை மாந்தர் சிறப்பு.**

**ஊண், உடை, எச்சம், உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல;**
**நாண் உடைமை மாந்தர் சிறப்பு.**

*ஊண் = உணவு*

*எச்சம் = பிற. மற்றவை.*

*மாந்தர் = ம் + ஆன் + த் + அர். மனத்தோடு நெருங்கும் தேகத்தினர். உயிருடன் ஒன்றுபவர். சிறந்தவர்.*

*உணவு, உடை, மற்ற பொருட்கள் எதுவும் மனிதரை, வேறுபடுத்திக் காட்டாது, பணிவு மட்டுமே, சிறந்தவர்களைத் தனியாக, எடுத்துக் காட்டும்.*

**1013. ஊனைக் குறித்த வுயிர்க்கெல்லா நாணென்னும்**
**நன்மை குறித்தது சால்பு.**

**ஊனைக் குறித்த, உயிர் எல்லாம்; நாண் என்னும்**
**நன்மை குறித்தது, சால்பு.**

*ஊன் = உடல்.*

*உடலைப் பற்றியே, உயிரின் கவனம் இருக்கும். பணிவு எனும் நற்செயல் பற்றியே, சான்றோரின் கவனம் இருக்கும்.*

**1014. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேல்**
**பிணியன்றோ பீடு நடை.**

**அணி அன்றோ, நாண் உடைமை சான்றோர்க்கு; அஃது இன்றேல்**
**பிணி அன்றோ, பீடு நடை.**

*பணிவு, சான்றோரை அழகாக்கும் அணிகலன் அல்லவா? சான்றோரிடம், பணிவு இல்லையென்றால், அவரின் கம்பீர நடை, அவரை ஊனமுற்றவர்போல், நோயுற்றவர்போல் காட்டும்.*

**1015. பிறர்பழியுந் தம்பழிபோ னாணுவார் நாணுக்**
**குறைபதி யென்னு முலகு.**

**'பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் நாணுக்கு**
**உறைபதி' என்னும், உலகு.**

*பிறர் எவரும் பணிவின்றி நடந்து கொண்டால், தானே அப்படி நடந்து கொண்டதுபோல், தனக்கே அப்பழி வந்ததுபோல் வருந்துபவரை, பணிவுக்கு உறைவிடம் என்று உலகம் பாராட்டும்.*

**1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்**
**பேணலர் மேலா யவர்.**

**நாண் வேலி கொள்ளாது, மன்னோ, வியல் ஞாலம்**
**பேணலர்-மேலாயவர்.**

*நாண்வேலி = தன்னடக்க கட்டுப்பாடு.*

*வியன் ஞாலம் = வியன் + ஞாலம். வியன் = வி + அன். அப்பால் நெருக்கமற்ற. வெளி. புறம்.*

*பேணலர் = பேண் + அலர். காக்க மாட்டார்.*

*மேலாயவர் = மேல் + ஆய் + அவர். உயர்ந்ததை ஆராய்பவர். உயர்ந்தவர்.*

*உயர்ந்த கருத்துகளையும், செயல்களையும் ஆராய்பவர், தன்னடக்கம் என்னும் மனக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்காமல், புற உலகைக் காக்கும் முயற்சியில், பணியில் ஈடுபடுவாரா என்ன?*

**1017. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்**
**நாணிறவார் நாணாள் பவர்.**

**நாணால் உயிரைத் துறப்பர்; உயிர்ப்பொருட்டால்**
**நாண் துறவார்;-நாண் ஆள்பவர்.**

*பணிவைக் காக்கும் சான்றோர், தன்னடக்கம் போய்விட்டதே, பழி வந்ததே என வருந்தி, உயிரையும் விட்டு விடுவர், ஆனால், உயிரைக் காப்பதற்காக, பணிவை மட்டும் இழக்க மாட்டார்கள்.*

**1018. பிறர்நாணத் தக்கது தானாணா னாயின்**
**அறநாணத் தக்க துடைத்து.**

**பிறர் நாணத்தக்கது தான் நாணான் ஆயின்,**
**அறம் நாணத் தக்கது உடைத்து.**

*அறம் = இயற்கை நீதி. பேசவோ, செய்யவோ பிறர் வெட்கப்படுவதற்கு, சான்றோன் எனப்பட்டவன், வெட்கப்படாமல் போய்விட்டால், அதைக் கண்டு, அறம் எனும் இயற்கை நீதியே, வெட்கப்படும்.*

**1019. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்**
**நாணின்மை நின்றக் கடை.**

**குலம் சுடும், கொள்கை பிழைப்பின்; நலம் சுடும்,**
**நாண் இன்மை நின்றக்கடை.**

*கொள்கை = கொள் + கை. ஒழுக்கம்*

*பிழைப்பின் = இறந்தால். தவறினால்.*

*குலம் = குடும்பம். சுற்றம்.*

*சுடும் = கண்டிக்கும்.*

*நலம் = நல்வினை.*

*ஒருவன் ஒழுக்கம் தவறினால், அவனுடைய குலமும் சுற்றமும் அவனைக் கண்டிக்கும். சான்றோர் எனப்பட்டவரிடம், வெட்கமில்லாமை நீடித்தால், அவர் செய்த நல்வினைகள் அனைத்தையும், அறம் அழிக்கும்.*

**1020. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை**
**நாணா லுயிர்மருட்டி யற்று.**

**நாண் அகத்து இல்லார் இயக்கம்-மரப்பாவை**
**நாணால் உயிர் மருட்டியற்று.**

*மருட்டி = மருள் ஆக்கியது. மயக்கம் ஏற்படுத்தியது.*

*மனதில் வெட்கமே இல்லாமல் நடப்பவர், மரத்தால் செய்யப்பட்ட பொம்மை, கயிரால் கட்டப்பட்டு, அசைக்கப்பட்டு, உயிருடன் இருப்பதைப் போன்ற பிரமையை, மயக்கத்தை, மாயையை ஏற்படுத்துவர்.*

**நாணுடைமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*தீவினை செய்ய அஞ்சுதல், வெட்கத்தால் அழகாகத் தலைசாய்தல், சான்றோரின் தன்னடக்கம் இவை யாவும் வெவ்வேறு வகையான நாணங்கள்.*

*உணவு, உடை, மற்ற பொருட்கள் எதுவும் மனிதரை, வேறுபடுத்திக் காட்டாது, பணிவு மட்டுமே, சிறந்தவர்களைத் தனியாக, எடுத்துக் காட்டும்.*

*உடலைப் பற்றியே, உயிரின் கவனம் இருக்கும். பணிவு எனும் நற்செயல் பற்றியே, சான்றோரின் கவனம் இருக்கும்.*

*பணிவு, சான்றோரை அழகாக்கும் அணிகலன் அல்லவா? சான்றோரிடம், பணிவு இல்லையென்றால், அவரின் கம்பீர நடை, அவரை ஊனமுற்றவர்போல், நோயுற்றவர்போல் காட்டும்.*

*பிறர் எவரும் பணிவின்றி நடந்து கொண்டால், தானே அப்படி நடந்து கொண்டதுபோல், தனக்கே அப்பழி வந்ததுபோல் வருந்துபவரை, பணிவுக்கு உறைவிடம் என்று உலகம் பாராட்டும்.*

*உயர்ந்த கருத்துகளையும், செயல்களையும் ஆராய்பவர், தன்னடக்கம் என்னும் மனக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்காமல், புற உலகைக் காக்கும் முயற்சியில், பணியில் ஈடுபடுவாரா என்ன?*

*பணிவைக் காக்கும் சான்றோர், தன்னடக்கம் போய்விட்டதே, பழி வந்ததே என வருந்தி, உயிரையும் விட்டு விடுவர், ஆனால், உயிரைக் காப்பதற்காக, பணிவை மட்டும் இழக்க மாட்டார்கள்.*

*பேசவோ, செய்யவோ பிறர் வெட்கப்படுவதற்கு, சான்றோன் எனப்பட்டவன், வெட்கப்படாமல் போய்விட்டால், அதைக் கண்டு, அறம் எனும் இயற்கை நீதியே, வெட்கப்படும்.*

*ஒருவனின் ஒழுக்கம் தவறினால், அவனுடைய குலமும் சுற்றமும் அவனைக் கண்டிக்கும். சான்றோர் எனப்பட்டவரிடம், வெட்கமில்லாமை நீடித்தால், அவர் செய்த நல்வினைகள் அனைத்தையும், அறம் அழிக்கும்.*

*மனதில் வெட்கமே இல்லாமல் நடப்பவர், மரத்தால் செய்யப்பட்ட பொம்மை, கயிரால் கட்டப்பட்டு, அசைக்கப்பட்டு, உயிருடன் இருப்பதைப் போன்ற பிரமையை, மயக்கத்தை, மாயையை ஏற்படுத்துவர்.*

## 103. குடிசெயல் வகை

*குடிசெயல் வகை = குடும்பம் உழைப்பு விதம். குடும்பத்திற்கான உழைப்பின் பெருமை. குடும்பம் காக்கும் முறை.*

**1021. கருமஞ் செயவொருவன் கைதூவா னென்னும்**
**பெருமையிற் பீடுடைய தில்.**

**'கருமம் செய'-ஒருவன்-'கைதூவேன்' என்னும்**
**பெருமையின்,பீடு உடையது இல்.**

*கருமம் = வினை. செயல். உழைப்பு. வேலை.*

*கைதூவு = கை + தூவு. தூவு = த் + ஊ + உ. தேகத்தை விரிந்து பரந்து வெளிப்படுத்து. கை சோர்தல். கை சளைத்தல். கை விடுதல். கை சலிப்பு. பீடு = ப் + ஈடு. கொள்வதன் சமம். வெளியின் சமம். முழுமை.*

*'உழைப்பதற்கு அவன் அஞ்சமாட்டான்', 'ஓயாமல் வேலை செய்பவன்', என்று சொல்வதில் உள்ள, பெருமையைக் காட்டிலும், ஒருவன் மனம் முழுமையடைவது, வேறெதிலும் இல்லை.*

**1022. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டின்**
**நீள்வினையான் நீளுங் குடி.**

**ஆள்வினையும், ஆன்ற அறிவும், என இரண்டின்**
**நீள் வினையான், நீளும் குடி.**

*ஆள்வினை = உழைப்பு நிர்வாகம்.*

*ஆன்ற = அகன்ற. மெய்யுணர்ந்த.*

*உழைப்பு நிர்வாகம், அகன்ற அறிவு ஆகிய இரண்டின் தொடர்ச்சியான செயலால், குடும்பம், நீண்ட காலம், தொடர்ந்து வாழும்.*

**1023. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்.**

**'குடி செய்வல்' என்னும் ஒருவற்கு, தெய்வம்**
**மடி தற்று, தான் முந்துறும்.**

*தெய்வம் = த் + எய் + வ் + அம். தேகநிலை உயர்ந்து நிலைபெற்று முழுமையான தன்மை. சித்தர்கள்.*

*'குடும்பத்தை அமைத்துக் காக்கப் போகிறேன்', என்று துணிவுடன் ஒருவன் உழைக்க முன் வந்தால், சித்தர்களே, கால்கள் மடித்து அமர்ந்த, தியான நிலையிலிருந்து எழுந்து, அவனுக்கு முன்னால் சென்று ஆயத்தம் செய்வார்கள்.*

**1024. சூழாமைத் தானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.**

**சூழாமல் தானே முடிவு எய்தும்-தம் குடியைத்
தாழாது உஞற்றுபவர்க்கு.**

*சூழ் = சிந்தி.*

*தன்னுடைய குடும்பம் தாழ்ந்திடாமல் இருக்க எப்பொழுதும் உழைத்துக் கொண்டே இருப்பவர், ஒரு செயலைப் பற்றிச் சிந்திக்காமலேயே, அதை எப்படிச் செய்ய வேண்டும் என்ற எண்ணம், கருத்து, திட்டம் வந்து விடும்.*

**1025. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாய் சுற்று முலகு.**

**குற்றம் இலனாய், குடி செய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும், உலகு.**

*பிற உயிர்க்கும், பிறர்க்கும் தீங்கு செய்யாமல், தன்னுடைய குடும்பத்திற்காக உழைத்து வாழ்பவனை, உலக மக்கள் உறவினராய் ஏற்று அவனைக் காப்பர், அவன்வழி நடப்பர்.*

**1026. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.**

**நல் ஆண்மை என்பது ஒருவற்குத் தான் பிறந்த
இல் ஆண்மை ஆக்கிக்கொளல்.**

*ஒருவன், தான் பிறந்த குடும்பத்தை, நன்கு நிர்வகிக்கும் திறமையையே, நல்ல ஆண்மை என்பர்.*

**1027. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.**

**அமரகத்து வன்கண்ணர் போல, தமரகத்தும்
ஆற்றுவார், மேற்றே, பொறை.**

*போர்க்களத்துத் தளபதி போல, தம் வீட்டிலும், அனைவரையும் ஒழுங்குப்படுத்தி, கடமைகளைப் பிரித்தளித்து, வாழ்வில் முன்னேறி வெற்றி பெற, வழிகாட்டி நடப்பவர் மேல்தான், எல்லா பொறுப்பும், பாரமும், வலிமையும் நிற்கும்.*

**1028. குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.**

**குடி செய்வார்க்கு இல்லை, பருவம்; மடி செய்து,**
**மானம் கருத, கெடும்.**

*குடும்பத்திற்காக உழைப்பவர்களுக்குப் பருவம், காலம், நேரம், சமயம் என்பதெல்லாம் இருக்கக் கூடாது. எந்தக் காலமாய் இருந்தாலும், எப்படியாவது உழைத்து, பொருள் ஈட்டி, குடும்பத்தைக் காக்க வேண்டும். உழைத்துப் பிழைக்க, என்னென்ன வழிகள் எல்லாம் உள்ளன என்று, முன்கூட்டியே சிந்திக்க வேண்டும். வானம், மழை பொழியும் வரை, சோம்பேறித் தனமாய்க் காத்துக் கொண்டிருந்தால், குடும்பம், அதற்குள் அழிந்தே போய் விடும்.*

**1029. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்**
**குற்ற மறைப்பா னுடம்பு.**

**இடும்பைக்கே கொள்கலம்கொல்லோ-குடும்பத்தைக்**
**குற்றம் மறைப்பான் உடம்பு.**

*இடும்பை = இடும் + பை. ஊழ்.*

*குற்றம் = குறு + அம். சிறுமை. வறுமை.*

*மறைப்பான் = நீக்குவான்.*

*உடம்பு = உழைப்பு.*

*குடும்பத்தின் வறுமையை, உடல் உழைப்பால் நீக்குபவன், ஊழையே அள்ளக் கூடியவன், போக்கக் கூடியவன் அல்லவா?*

**1030. இடுக்கண்கா றோன்றிட வீழு மடுத்தூன்ற**
**நல்லாளில் லாத குடி.**

**இடுக்கண் கால் கொன்றிட, வீழும்-அடுத்து ஊன்றும்**
**நல் ஆள் இலாத குடி.**

*இடுக்கண் = இடு + கண். வெளிவரும் துளை. ஊழ்வினை தீப்பயன். துன்பம்.*

*ஊழ்வினையின் தீயப் பயன், வாழ்வில், கால் எடுத்து வைத்தாலே போதும், விழுந்து விடும், துன்பத்தைத் தாங்கி, நீக்குவதற்கு, நல்ல ஆளில்லாத குடும்பம்.*

**குடிசெயல்வகை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*'உழைப்பதற்கு அவன் அஞ்சமாட்டான்', 'ஓயாமல் வேலை செய்பவன்', என்று சொல்வதில் உள்ள, பெருமையைக் காட்டிலும், ஒருவன் மனம் முழுமையடைவது, வேறெதிலும் இல்லை.*

*உழைப்பு நிர்வாகம், அகன்ற அறிவு ஆகிய இரண்டின் தொடர்ச்சியான செயலால், குடும்பம், நீண்ட காலம், தொடர்ந்து வாழும்.*

'குடும்பத்தை அமைத்துக் காக்கப் போகிறேன்', என்று துணிவுடன் ஒருவன் உழைக்க முன் வந்தால், சித்தர்களே, கால்கள் மடித்து அமர்ந்த, தியான நிலையிலிருந்து எழுந்து, அவனுக்கு முன்னால் சென்று ஆயத்தம் செய்வார்கள்.

தன்னுடைய குடும்பம் தாழ்ந்திடாமல் இருக்க எப்பொழுதும் உழைத்துக் கொண்டே இருப்பவர், ஒரு செயலைப் பற்றிச் சிந்திக்காமலேயே, அதை எப்படிச் செய்ய வேண்டும் என்ற எண்ணம், கருத்து, திட்டம் வந்து விடும்.

பிற உயிர்க்கும், பிறர்க்கும் தீங்கு செய்யாமல், தன்னுடைய குடும்பத்திற்காக உழைத்து வாழ்பவனை, உலக மக்கள் உறவினராய் ஏற்று அவனைக் காப்பர், அவன்வழி நடப்பர்.

ஒருவன், தான் பிறந்த குடும்பத்தை, நன்கு நிர்வகிக்கும் திறமையையே, நல்ல ஆண்மை என்பர்.

போர்க்களத்துத் தளபதி போல, தம் வீட்டிலும், அனைவரையும் ஒழுங்குப்படுத்தி, கடமைகளைப் பிரித்தளித்து, வாழ்வில் முன்னேறி வெற்றி பெற, வழிகாட்டி நடப்பவர் மேல்தான், எல்லாப் பொறுப்பும், பாரமும், வலிமையும் நிற்கும்.

குடும்பத்திற்காக உழைப்பவர்களுக்குப் பருவம், காலம், நேரம், சமயம் என்பதெல்லாம் இருக்கக் கூடாது. எந்தக் காலமாய் இருந்தாலும், எப்படியாவது உழைத்து, பொருள் ஈட்டி, குடும்பத்தைக் காக்க வேண்டும். உழைத்துப் பிழைக்க, என்னென்ன வழிகள் எல்லாம் உள்ளன என்று, முன்கூட்டியே சிந்திக்க வேண்டும். வானம், மழை பொழியும் வரை, சோம்பேறித் தனமாய்க் காத்துக் கொண்டிருந்தால், குடும்பம், அதற்குள் அழிந்தே போய் விடும்.

குடும்பத்தின் வறுமையை, உடல் உழைப்பால் நீக்குபவன், ஊழையே அள்ளக் கூடியவன், போக்கக் கூடியவன் அல்லவா?

துன்பத்தைத் தாங்கி, நீக்குவதற்கு, நல்ல ஆளில்லாத குடும்பம், ஊழ்வினையின் தீயப் பயன், வாழ்வில், கால் எடுத்து வைத்தாலே போதும், விழுந்து விடும்.

## 104. உழுவு

*உழவு = உழ் + அ + உ. புறத்தே ஆழத்தில் உள்ளும் புறமுமாதல். நிலத்தில் உழைத்தல். ஏர் ஓட்டுதல், விதை விடல், நாற்று நடல், நீர் பாய்ச்சுதல், களை எடுத்தல், பயிர் காத்தல், அறுவடை செய்தல், போர் அடித்தல் போன்ற எல்லா நடவடிக்கைகளும் உழவைச் சார்ந்ததே.*

**1031. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனால்**
**உழன்று முழுவே தலை.**

**சுழன்றும் ஏர்ப் பின்னது, உலகம்; அதனால்,**
**உழந்தும் உழவே தலை.**

*சுழன்று = பல தொழில் செய்து.*

*உழன்று = கடுமையாய் உழைத்து.*

*பல்வேறு தொழில்களை, முயன்று உழைத்தாலும், மக்கள் அனைவரும், கடைசியில், ஏரை ஓட்டும் உழவர் பின்பு சென்றே, உணவைப் பெற வேண்டி உள்ளது.*

*எனவே, மிகுதியாய் கடுமையாய், உழைக்க வேண்டி இருப்பினும், பயிர் தொழிலே இன்றியமையாதது, பெருமைக்குரியது, சிறந்தது, முக்கியமானது, முதன்மையானது. பயிர்த் தொழில் இன்றி, உலகில், வேறெந்த தொழிலும் நடக்காது.*

**1032. உழுவா ருலகத்தார்க் காணியஃ தற்றா**
**தெழுவாரை யெல்லாம் பொறுத்து.**

**உழுவார் உலகத்தார்க்கு ஆணி-அஃது ஆற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து.**

*ஆணி = அச்சாணி. எழுவாரை = வண்டியில் ஏறுபவர்களை.*

*உழவைச் செய்யாமல், வாழ்க்கை வண்டியில் ஏறுபவர்களை எல்லாம், தாங்கிச் செல்வதால், உழுபவர்கள், உலக மக்களுக்கு, அச்சாணி போன்றவர்கள்.*

**1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்**
**தொழுதுண்டு பின்செல் பவர்.**

**உழுது, உண்டு, வாழ்வாரே வாழ்வார்; மற்று எல்லாம்**
**தொழுது, உண்டு, பின் செல்பவர்.**

*வாழ்வு = வ் + ஆழ் + உ. புறமும் அகமும் ஆழ்ந்து உள்ளிருத்தல் / வெளிப்படுதல். முழுமையாதல். சார்பின்மை.*

*ஆர் = அச்சாணி.*

*உழுது, உண்டு, சார்பின்றி வாழும் உழவர்களே, வாழ்வு எனும் தேரின் அச்சாணி போன்றவர்கள். பிற தொழில் செய்பவர்கள் எல்லாம், தேரினை வணங்கி, பிரசாதம் போல் வாங்கி, உண்டு, தேரினைப் பின்தொடர்ந்துச் செல்பவர்கள்.*

**1034. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்**
**அலகுடை நீழ லவர்.**

**பல குடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர்-**
**அலகு உடை நீழலவர்.**

*அலகுடை = அலகு + உடை. பறவையின் அலகு போன்ற நெல்மணிக் கதிர்.*

*பல செல்வந்தர்களின் ஈகையும், தம் உணவு தானிய ஈகையைப் பொறுத்தே அமைவதைக் காண்பர், பறவையின் நீண்ட அலகு போன்ற நெல்மணிக் கதிரைக் கொண்ட ஈகையாளர், உழவர்.*

**1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர்.**

**இரவார்; இரப்பார்க்கு ஒன்று ஈவர்-கரவாது**
**கை செய்து ஊண் மாலையவர்.**

*மாலை = இயல்பு.*

*கைசெய்தூண் = கை + செய் + தூண். கைகள் உழைக்கும் தூண்.*

*கைசெய் மாலை = கை + செய் + மாலை. கை சிவந்த மலரணி.*

*தன்னிடம் இல்லையென்று, பிறரிடம் கேட்க மாட்டார். இல்லையென்று கேட்பவர்க்கு, இருப்பதை மறைக்காமல், ஏதாவது ஒன்றையேனும் கொடுப்பார். கைகளை, உழைக்கும் உறுதியான இரவாத தூணாகவும், சிவந்த இரக்கமுள்ள மலரணியாகவும், கொண்டுள்ளார் அவர்.*

**1036. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்**
**விட்டோமென் பார்க்கு நிலை.**

**உழவினார் கைம்மடங்கின், இல்லை-'விழைவதூஉம்**
**விட்டேம்' என்பார்க்கு நிலை.**

*கைம்மடங்கி = கைக்கட்டி*

*நிலை = உயிர் வாழ்வு, நிலைபேறு.*

*உழவர்கள் கைக்கட்டி நின்று விட்டால், பொருள் மட்டுமின்றி, ஆசையையும் விட்டு விட்டோம், என்று கூறும் துறவிகளுக்கும், உயிர் வாழ்வு இல்லை, நிலைபேறு இல்லை.*

**1037. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.**

**தொடிப் புழுதி கஃசா உணக்கின், பிடித்து எருவும்
வேண்டாது, சாலப் படும்.**

*தொடி = ஒரு பலம், ஓர் அளவு.*

*புழுதி = ப் + உழ் + உதி. நிலத்தை உழுவதால் வெளிப்படுவது.*

*கஃசா = கால் பலம், மற்றோர் அளவு.*

*உணக்கு = உண் + அக் + உ. உலர்த்து. தூளாக்கி.*

*பிடித்தெரு = (கை) பிடித்த எரு. ஒரு பிடி எரு.*

*சால = மிகுதியாய்.*

*படும் = விளையும்.*

*ஒரு பலம் (35 கிராம்) எடை அளவுள்ள பெரிய மண்கட்டிகளை, கால் பலம் (89 கிராம்) எடை அளவுள்ள சிறிய மண்கட்டிகளாய், உழுது தூளாக்கி, வெயிலில் உலர்த்தி, பயிர் செய்தால், பிடி எருவும் போடாமல், மிகுதியான விளைச்சல் கிடைக்கும்.*

**1038. ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டிப்பின்
நீரினு நன்றதன் காப்பு.**

**ஏரினும் நன்றால், எரு இடுதல் கட்டபின்,
நீரினும் நன்று, அதன் காப்பு.**

*ஏர் ஓட்டுவதைக் காட்டிலும் முக்கியமானது, பரவலாய் எருவைப் போடுவது. களைக் கட்டியப் பின், நீர் பாய்ச்சுவதிலும் முக்கியமானது, ஆடு, மாடு, விலங்குகள் மற்றும் மனிதர்கள் சேதம் விளைவிக்காமல், பயிரைப் பாதுகாப்பது.*

**1039. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.**

**செல்லான் கிழவன் இருப்பின், நிலம் புலந்து
இல்லாளின் ஊடிவிடும்.**

*உழவன் வயலுக்கு செல்லாமல் இருந்தால், நிலம் புலம்பி, இன்பம் தரும் தன் மனைவியைக் காட்டிலும், அதிகமாய் கோபித்துக் கொள்ளும், விளைச்சலைத் தராமல்.*

**1040. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்**
**நிலமென்னு நல்லா ணகும்.**

**'இலம்!' என்று அசைஇ இருப்பாரைக் காணின்,**
**நிலம் என்னும் நல்லாள் நகும்.**

*அசைஇ = அசைவின்றி. சோம்பலாய்.*

*தன்னிடம் பொருள் இல்லையே என்று அசைவின்றி, சோம்பலுடன் இருப்பவனைக் கண்டால், நிலம் என்னும் அழகிய பெண், கேலியாய், ஏளனமாய், கையால் ஆகாதவன் என்பது போல், பெண்ணுடன் உறவு கொள்ளக்கூட வலிமையற்றவன் என்பது போல், சிரிப்பாள்.*

**உழவு அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*பல்வேறு தொழில்களை, முயன்று உழைத்தாலும், மக்கள் அனைவரும், கடைசியில், ஏரை ஓட்டும் உழவர் பின்பு சென்றே, உணவைப் பெற வேண்டி உள்ளது.*

*உழவைச் செய்யாமல், வாழ்க்கை வண்டியில் ஏறுபவர்களை எல்லாம், தாங்கிச் செல்வதால், உழுபவர்கள், உலக மக்களுக்கு, அச்சாணி போன்றவர்கள்.*

*உழுது, உண்டு, சார்பின்றி வாழும் உழவர்களே, வாழ்வு எனும் தேரின் அச்சாணி போன்றவர்கள். பிற தொழில் செய்பவர்கள் எல்லாம், தேரினை வணங்கி, பிரசாதம் போல் வாங்கி, உண்டு, தேரினைப் பின்தொடர்ந்து செல்பவர்கள்.*

*பல செல்வந்தர்களின் ஈகையும், தம் உணவு தானிய ஈகையைப் பொறுத்தே அமைவதைக் காண்பர், பறவையின் நீண்ட அலகு போன்ற நெல்மணிக் கதிரைக் கொண்ட ஈகையாளர், உழவர்.*

*தன்னிடம் இல்லையென்று, பிறரிடம் கேட்க மாட்டார். இல்லையென்று கேட்பவர்க்கு, இருப்பதை மறைக்காமல், ஏதாவது ஒன்றையேனும் கொடுப்பார். கைகளை, உழைக்கும் உறுதியான இரவாத தூணாகவும், சிவந்த இரக்கமுள்ள மலரணியாகவும், கொண்டுள்ளார் அவர்.*

*உழவர்கள் கைக்கட்டி நின்று விட்டால், பொருள் மட்டுமின்றி, ஆசையையும் விட்டு விட்டோம், என்று கூறும் துறவிகளுக்கும், உயிர் வாழ்வு இல்லை, நிலைபேறு இல்லை.*

*ஒரு பலம் (35 கிராம்) எடை அளவுள்ள பெரிய மண்கட்டிகளை, கால் பலம் (89 கிராம்) எடை அளவுள்ள சிறிய மண்கட்டிகளாய், உழுது தூளாக்கி, வெயிலில் உலர்த்தி, பயிர் செய்தால், பிடி எருவும் போடாமல், மிகுதியான விளைச்சல் கிடைக்கும்.*

*ஏர் ஓட்டுவதைக் காட்டிலும் முக்கியமானது, பரவலாய் எருவைப் போடுவது. களைக் கட்டியப் பின், நீர் பாய்ச்சுவதிலும் முக்கியமானது, ஆடு, மாடு, விலங்குகள் மற்றும் மனிதர்கள் சேதம் விளைவிக்காமல், பயிரைப் பாதுகாப்பது.*

உழவன் வயலுக்குச் செல்லாமல் இருந்தால், நிலம் புலம்பி, இன்பம் தரும் தன் மனைவியைக் காட்டிலும், அதிகமாய்க் கோபித்துக் கொள்ளும், விளைச்சலைத் தராமல்.

தன்னிடம் பொருள் இல்லையே என்று அசைவின்றி, சோம்பலுடன் இருப்பவனைக் கண்டால், நிலம் என்னும் அழகிய பெண், கேலியாய், ஏளனமாய், கையால் ஆகாதவன் என்பது போல், பெண்ணுடன் உறவு கொள்ளக்கூட வலிமையற்றவன் என்பது போல், சிரிப்பாள்.

# 105. நல்குரவு

*நல்குரவு = நல் + குரவு. குரவு = க் + உர் + அ + உ. மெய்க்குள் இருப்பது பிரிந்து வெளிவருதல். குரவு = க் + உரம் + உ. மெய்யின் வலிமையான ஊழ் வெளிப்படுதல். வாசம். நல்வினையாயினும், தீவினையாயினும் அது வெளிப்பட்டே ஆகவேண்டும். கருமவாசனை தீராமல், ஞானம் கிட்டாது. எனவே, வறுமையையும் துன்பத்தையும் நல்வழியில் எதிர்கொள்வதுடன், பிறப்பறுக்கும் ஞானத்தைப் பெறும் முயற்சியில் ஈடுபட வேண்டும். நல்குரவு = நல்ல வாசனை.*

*செல்வமும், கல்வியும், நல்வினையால் வருவதைப் போல், வறுமையும், அறியாமையும் தீவினையால் வருகின்றன.*

*வறுமையை உழைப்பால் எதிர்கொள்வதன் மூலம், மீண்டும் தீவினையைச் சேர்க்காததன் மூலம், அடுத்த பிறப்பில், செல்வமும், கல்வியும் கைகூடும். வறுமையின் துன்பத்தையும், பிறப்புகளின் முடிவில்லா தொடர்ச்சியையும் அறிந்துணர்ந்து, துறவை மேற்கொள்ளவும், புலனடக்கி, மனமடங்கி, மெய்யுணர்வு அடையவும், வறுமை தூண்டலாம். எனவே தான், வறுமைத் துன்பத்தையும், நல்ல வாசனை என்றனர் போலும்.*

**1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையின்
இன்மையே யின்னா தது.**

**'இன்மையின் இன்னாதது யாது?' எனின், இன்மையின்
இன்மையே இன்னாதது.**

*இல்லாமையைக் காட்டிலும் துன்பமானது என்னவென்றால், இல்லாமையைக் காட்டிலும் இல்லாமையே துன்பமானது.*

*வறுமையே எல்லாவற்றிலும் துன்பமானது. வறுமைக்கு இணையாக, துன்பம் தருவது, வேறெதுவும் இல்லை. வறுமையைக் காட்டிலும், துன்பமானது வேறு எதுவும் இல்லை.*

**1042. இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையு மின்றி வரும்.**

**இன்மை என ஒரு பாவி, மறுமையும்
இம்மையும் இன்றி, வரும்.**

*பாவி = ப் + ஆவ் + இ. ஊழ் ஆக்குபவன். தீவினையாளன்.*

*வறுமை என்பது தான், பலருடைய தீவினைகளுக்கும், காரணமாய் இருக்கின்றது. ஆனால், தீவினை செய்பவனுக்குத் தான், மறுமை, இம்மை என பிறப்புகள் தொடர்ந்து வருகின்றது. தீவினைக்குக் காரணமான வறுமைக்கோ பிறப்புகள் இல்லை. தீவினையை வறுமையால் நியாயப்படுத்துவது பயனில்லை.*

**1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.**

**தொல் வரவும் தோலும் கெடுக்கும், தொகையாக-
நல்குரவு என்னும் நசை.**

*தொல்வரவு = பழங்குடி. நீண்டகால நற்பெயர்.*

*தோல் = நிறம். ஒளி. புகழ்.*

*தொகையாக = ஒட்டு மொத்தமாக.*

*நசை = ஆசை. குற்றம்.*

*தன்னுடைய ஆசைக்கும், தீய செயலுக்கும் காரணம், வறுமை என்று கூறுவது, அவனுடைய குடும்பத்தின் நீண்டகால நற்பெயரையும், புகழையும் ஒட்டு மொத்தமாக, அழித்து விடும்.*

**1044. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.**

**இற்பிறந்தார் கண்ணேயும், இன்மை, இளி வந்த
சொல் பிறக்கும் சோர்வு தரும்.**

*நல்ல குடும்பத்தில் பிறந்தவரிடமும் வறுமை வந்துவிட்டால், மிகவும் இழிவான, அசிங்கமான, பண்பில்லாத சொற்களைப் பேசுகின்ற வகையில், அவருடைய மன உறுதி தளர்ந்து விடும், வலிவிழந்து விடும்.*

**1045. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.**

**நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.**

*பல்குரை = பல்கு + உரை. பலவாகச் சொல்லும்.*

*வறுமை என்னும் துன்பத்துக்குள் பல்வேறு பெயர்களைக் கொண்ட மற்ற துன்பங்களும், அறியாமை, அழுக்காறு, சிற்றினம், குற்றம், சோம்பல், கள், சூது போன்றவை, வந்துச் சேரும்.*

**1046. நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.**

**நற் பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும், நல்கூர்ந்தார்
சொல் பொருட் சோர்வு படும்.**

*வறுமையால் மெலிந்தவர், மெய்ப்பொருளை நன்கு உணர்ந்தப்பின் எடுத்துரைத்தாலும், அவர், தன் சொல் எடுபடுமோ, எடுபடாதோ*

*எனும் தயக்கமுடன் கூறுவதால், அவர் பேச்சில், வலிமை இருக்காது, கேட்பவர்களும், வறுமையில் உள்ளவர் எங்கே இக்கருத்துகளைக் கூறப்போகின்றார், எனும் சந்தேகத்துடன், கவனம் செலுத்த மாட்டார்கள்.*

**1047. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.**

**அறம் சாரா நல்குரவு ஈன்ற தாயானும்
பிறன் போல நோக்கப்படும்.**

*தீவினையால் ஏற்பட்ட வறுமையில் இருப்பவனை, அவனைப் பெற்ற தாயும், அந்நியனைப் போல், ஈடுபாடின்றிப் பார்ப்பாள்.*

**1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலு நிரப்பு.**

**இன்றும் வருவது கொல்லோ-நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு.**

*நிரப்பு = நிர் + அப்பு. இல்லாமை நீர். வரட்சி. வறுமை.*

*வறுமை, நேற்று துன்பத்தால் சாகடித்தது போல், இன்றும் வரப்போவது உண்மையா? ஐயோ, வேண்டாமே!*

**1049. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதானுங் கண்பா டரிது.**

**நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்; நிரப்பினுள்
யாது ஒன்றும் கண்பாடு அரிது.**

*பரவி அழிக்கும் நெருப்பின் நடுவே கூட, ஏதோ ஓர் நம்பிக்கையில், தூங்கி விடலாம், வறுமையில் இருக்கையில், கண்மூட முடியாது.*

**1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று.**

**துப்பஇரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று.**

*துப்புரவு = உணவு.*

*துவர் = த் + உ + அர். தேக உணர்வு புறத்தே பிரிந்திருத்தல். முழுமை.*

*உணவுகூட இல்லாதவர், முழுமையாகத் துறக்காவிட்டால், மற்றவர் வீட்டு உப்புக்கும், கழிநீருக்கும் எமன் ஆவார்.*

உணவு இருந்தால்தான், வறுமையைப் போக்க சிந்திக்க முடியும், ஏதாவது உழைக்கவும் முடியும். உணவுகூட இல்லாத வறுமை வந்தால், முழுமையாகத் துறந்துவிட வேண்டும். இல்லையென்றால், மானம் கெட்டு, பிச்சை எடுத்து, கழிநீரையும் உப்பையும் சேர்த்துக் குடித்து, உடலை, உயிருடன் வைக்க வேண்டி இருக்கும்.

முற்றிலும் துறந்தவர்க்கு, சமூகத்தில் மதிப்புண்டு. துறவிக்குரிய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தால், துன்பங்களை வெல்லலாம், பேரின்பமும் அடையலாம், பிறப்பும் அறுக்கலாம்.

## நல்குரவு அதிகாரப் பொருள் தொகுப்பு:

இல்லாமையைக் காட்டிலும் துன்பமானது என்னவென்றால், இல்லாமையைக் காட்டிலும் இல்லாமையே துன்பமானது.

வறுமை என்பது தான், பலருடைய தீவினைகளுக்கும், காரணமாய் இருக்கின்றது. ஆனால், தீவினை செய்பவனுக்குத் தான், மறுமை, இம்மை எனப் பிறப்புகள் தொடர்ந்து வருகின்றது. தீவினைக்கு காரணமான வறுமைக்கோ பிறப்புகள் இல்லை. தீவினையை வறுமையால் நியாயப்படுத்துவது பயனில்லை.

தன்னுடைய ஆசைக்கும், தீய செயலுக்கும் காரணம், வறுமை என்று கூறுவது, அவனுடைய குடும்பத்தின் நீண்டகால நற்பெயரையும், புகழையும் ஒட்டு மொத்தமாக, அழித்து விடும்.

நல்ல குடும்பத்தில் பிறந்தவரிடமும் வறுமை வந்துவிட்டால், மிகவும் இழிவான, அசிங்கமான, பண்பில்லாத சொற்களைப் பேசுகின்ற வகையில், அவருடைய மன உறுதி தளர்ந்து விடும், வலிவிழந்து விடும்.

வறுமை என்னும் துன்பத்துக்குள் பல்வேறு பெயர்களைக் கொண்ட மற்ற துன்பங்களும், அறியாமை, அழுக்காறு, சிற்றினம், குற்றம், சோம்பல், கள், சூது போன்றவை, வந்துச் சேரும்.

வறுமையால் மெலிந்தவர், மெய்ப்பொருளை நன்கு உணர்ந்தப்பின் எடுத்துரைத்தாலும், அவர் பேச்சில், வலிமை இருக்காது.

தீவினையால் ஏற்பட்ட வறுமையில் இருப்பவனை, அவனைப் பெற்ற தாயும், அந்நியனைப் போல், ஈடுபாடின்றிப் பார்ப்பாள்.

வறுமை, நேற்று துன்பத்தால் சாகடித்தது போல், இன்றும் வரப்போவது உண்மையா? ஐயோ, வேண்டாமே!

பரவி அழிக்கும் நெருப்பின் நடுவே கூட, ஏதோ ஓர் நம்பிக்கையில், தூங்கி விடலாம், வறுமையில் இருக்கையில், கண்மூட முடியாது.

உணவுகூட இல்லாதவர், முழுமையாகத் துறக்காவிட்டால், மற்றவர் வீட்டு உப்புக்கும், கழிநீருக்கும், பிச்சையெடுத்து, எமன் ஆவார்.

# 106. இரவு

*இரவு = இர் + அ + உ. இருத்தல் / அறுதல் அகமும் புறமும். உயிர் போய் வருதல். சித்திரவதை. இருள். உயிர் அறியாமை. மடமை. உடல் மயக்கம். குழப்பம். இறைஞ்சுதல்.*

**1051. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பின்**
**அவர்பழி தம்பழி யன்று.**

**இரக்க, இரத்தக்கார்க் காணின்; கரப்பின்,**
**அவர் பழி தம் பழி அன்று.**

*இறைஞ்சினால், தரவிரும்புபவர்களாய்ப் பார்த்து, இறைஞ்சவும். இறைஞ்சியும், தம்மிடம் உள்ளதை அவர் மறைத்தால், அது அவருக்குதான் கெட்ட பெயர், உனக்கு இல்லை.*

**1052. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை**
**துன்ப முறாஅ வரின்.**

**இன்பம் ஒருவற்கு இரத்தல்-இரந்தவை**
**துன்பம் உறாஅ வரின்.**

*இறைஞ்சியவை, கொடுப்பவர்க்கு மனவருத்தம் தராமல் வந்தால், இறைஞ்சுவதும் ஒருவற்கு இன்பமாகும்.*

**1053. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்**
**றிரப்புமோ ரேஎ ருடைத்து.**

**கரப்பு இலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று,**
**இரப்பும் ர் ஏஎர் உடைத்து.**

*கரப்பு = ஒளிவு மறைவு. உள்ளதை மறைத்தல்.*

*ஏர் = பெருமை. அழகு.*

*ஒளிவு மறைவில்லா நெஞ்சமுடையவர், இல்லாதவர்க்குக் கொடுக்கும் கடமையை அறிந்தவர், ஆகியோர் முன் நின்று, இறைஞ்சுவதும் ஒரு வகையான பெருமையினை, அழகினை உடையது.*

**1054. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்**
**கனவினுந் தேற்றாதார் மாட்டு.**

**இரத்தலும் ஈதலே போலும்-கரத்தல்**
**கனவி ம் தேற்றாதார்மாட்டு.**

*ஒளிவு மறைவு என்பதை, கனவிலும் நினைக்காதவர் இடத்தில், இறைஞ்சுதல் என்பதே, ஈதல் போன்றதாம்.*

**1055. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.**

**கரப்பு இலார் வையகத்து உண்மையான், கண் நின்று,
இரப்பவர் மேற்கொள்வது.**

*வையகம் = வை + அகம். நிலையான மனம். நிலையான உலகம்.*

*ஒளிவு மறைவில்லாதவர்கள், நிலையான மனத்துடன், இந்த நிலையான உலகத்தில் இருப்பதால்தான், இறைஞ்சுபவர்கள், கூச்சப்பட்டு, வாயால் கேட்கும் துணிவின்றி, தங்கள் கண்களை நிலை நிறுத்தி, இறைஞ்சுகிறார்கள்.*

**1056. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
எல்லா மொருங்கு கெடும்.**

**கரப்பு இடும்பை இல்லாரைக் காணின், நிரப்பு இடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும்.**

*தன்னிடம் உள்ளதை மறைக்கும் ஊழ் இல்லாதவர், மிகுந்த செல்வம் உடையவராய் இருப்பார். அவரைக் கண்டால், பிச்சை எடுப்பவரின் நிலை, தன்மை அறிந்து, மிகையான பொருள் அல்லது உழைத்து ஈட்டும் வாய்ப்பை அளித்து, பிச்சை எடுக்கும் ஊழை, துன்பத்தை மொத்தமாக அழித்து விடுவார்.*

**1057. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளு ளுவப்ப துடைத்து.**

**இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின், மகிழ்ந்து உள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து.**

*இகழ் = இழிவாகப் பேசு.*

*எள் = சிறுமையாகப் பேசு. திட்டு.*

*உள்ளுள் = உள் + உள். மனத்தின் உள். உயிர்.*

*உவப்பு = உ + அப்பு. புறமாதல் நீர். நதி. வெள்ளம்.*

*இழிவாகப் பேசாமல், சிறுமையாகப் பேசாமல், பிச்சை கொடுப்பவரைக் கண்டால், உள்ளம் மகிழ்ந்து, உயிர் வெள்ளமாய் பாயும்.*

**1058. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.**

**இரப்பாரை இல்லாயின், ஈர்ங்கண் மா ஞாலம்**
**மரப்பாவை சென்று வந்தற்று.**

*நீர்ங்கண் = நீரின் கண். கடலின் இடம். கடலின் நடுவில்.*

*பிச்சை எடுப்பவர் அலைகள் போன்றவர். பிச்சை கொடுப்பவர் பூமியைப் போன்றவர். இருவருக்கும் இடையில் ஏற்படும் உறவுகள், உலக வாழ்க்கையின் தொடர்ச்சியான சுய இயக்கத்தை, உருவாக்குகின்றது.*

*பிச்சை எடுப்பவரை இல்லாமல் செய்துவிட்டால், கடலின் அலைகளின்றி, நிலையான கடலின் நடுவே நிலையான பூமி, மரப்பாவை உயிர்ப்பின்றி சுற்றி வருவதைப் போல், மனித வாழ்வின் சுவையின்றி, இயந்திர கதியாய் சுற்றிவரும்.*

**1059. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்**
**மேவா ரிலாஅக் கடை.**

**ஈவார்கண் என் உண்டாம், தோற்றம்-இரந்து கோள்**
**மேவார் இலாஅக்கடை?**

*மேவு = ம் + ஏ + உ. மனம் மிக உயர்ந்து வெளிப்படுத்து. வாழ்த்து.*

*இறைஞ்சி, பெற்று, வாழ்த்துவார் இல்லா விட்டால், பிச்சை கொடுப்பவரிடம், எப்படி ஒளியுள்ள தோற்றம் உண்டாகும்?*

**1060. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை**
**தானேயுஞ் சாலுங் கரி.**

**இரப்பான் வெகுளாமை வேண்டும்; நிரப்பு இடும்பை**
**தானேயும் சாலும் கரி.**

*இறைஞ்சுபவன், பிச்சை கொடுக்கவில்லை என்று, பிச்சை கொடுப்பவர்மேல், கோபம் கொள்ளக் கூடாது. ஏனென்றால், தான் முன்னொரு காலத்தில், அவ்வாறு கோபம் கொண்டதற்குப் போதுமான சாட்சியாகத் தான், இப்பொழுதுள்ள வறுமைத் துன்பம், இருக்கின்றது. இப்பொழுதும் கோபம் கொண்டால், பின்பு, மேலும் கொடிய வறுமை வரும்.*

### இரவு அதிகாரப் பொருள் தொகுப்பு:

*இறைஞ்சினால், தரவிரும்புபவர்களாய்ப் பார்த்து, இறைஞ்சவும். இறைஞ்சியும், தம்மிடம் உள்ளதை அவர் மறைத்தால், அது அவருக்குத்தான் கெட்ட பெயர், உனக்கு இல்லை. இறைஞ்சியவை, கொடுப்பவர்க்கு மனவருத்தம் தராமல் வந்தால், இறைஞ்சுவதும் ஒருவற்கு இன்பமாகும்.*

*ஒளிவு மறைவில்லா நெஞ்சமுடையவர், இல்லாதவர்க்குக் கொடுக்கும் கடமையை அறிந்தவர், ஆகியோர் முன் நின்று, இறைஞ்சுவதும் ஒரு வகையான பெருமையினை, அழகினை உடையது.*

ஒளிவு மறைவு என்பதை, கனவிலும் நினைக்காதவர் இடத்தில், இறைஞ்சுதல் என்பதே, ஈதல் போன்றதாம்.

ஒளிவு மறைவில்லாதவர்கள், நிலையான மனத்துடன், இந்த நிலையான உலகத்தில் இருப்பதால்தான், இறைஞ்சுபவர்கள், கூச்சப்பட்டு, வாயால் கேட்கும் துணிவின்றி, தங்கள் கண்களை நிலை நிறுத்தி, இறைஞ்சுகிறார்கள்.

தன்னிடம் உள்ளதை மறைக்கும் ஊழ் இல்லாதவர், மிகுந்த செல்வம் உடையவராய் இருப்பார். அவரைக் கண்டால், பிச்சை எடுப்பவரின் நிலை, தன்மை அறிந்து, மிகையான பொருள் அல்லது உழைத்து ஈட்டும் வாய்ப்பை அளித்து, பிச்சை எடுக்கும் ஊழை, துன்பத்தை மொத்தமாக அழித்து விடுவார்.

இழிவாகப் பேசாமல், சிறுமையாகப் பேசாமல், பிச்சை கொடுப்பவரைக் கண்டால், உள்ளம் மகிழ்ந்து, உயிர் வெள்ளமாய் பாயும்.

பிச்சை எடுப்பவரை இல்லாமல் செய்துவிட்டால், கடலின் அலைகளின்றி, நிலையான கடலின் நடுவே நிலையான பூமி, மரப்பாவை உயிர்ப்பின்றிச் சுற்றி வருவதைப் போல், மனித வாழ்வின் சுவையின்றி, இயந்திர கதியாய் சுற்றிவரும்.

இறைஞ்சி, பெற்று, வாழ்த்துவார் இல்லா விட்டால், பிச்சை கொடுப்பவரிடம், எப்படி ஒளியுள்ள தோற்றம் உண்டாகும்?

இறைஞ்சுபவன், பிச்சை கொடுக்கவில்லை என்று, பிச்சை கொடுப்பவர்மேல், கோபம் கொள்ளக் கூடாது. ஏனென்றால், தான் முன்னொரு காலத்தில், அவ்வாறு கோபம் கொண்டதற்குப் போதுமான சாட்சியாகத் தான், இப்பொழுதுள்ள வறுமைத் துன்பம், இருக்கின்றது. இப்பொழுதும் கோபம் கொண்டால், பின்பு, மேலும் கொடிய வறுமை வரும்.

## 107. இரவச்சம்

*இரவச்சம் = இரவு + அச்சம். பிச்சை எடுக்க அஞ்சுதல், பயப்படுதல், தயங்குதல்.*

**1061. கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.**

**கரவாது, உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும்
இரவாமை கோடி உறும்.**

*இருப்பதை மறைக்காமல், மனம் விரும்பித் தருபவராய் இருந்தால், அத்தகையவர் இடத்தும், இறைஞ்சாமல் இருப்பது, கோடிப் பணம் பெற்றதற்குச் சமம்.*

*ஏனெனில், ஊழ்வினையால், தான் பிச்சை எடுக்கும் நிலையில் இருந்தும், வெட்கப்பட்டு பிச்சை எடுக்காமல் இருப்பதைக் கண்டு, தன்னைப் பற்றிய மதிப்பு, அவரிடத்தில் பெரும் அளவுக்கு கூடும். அந்த மனத் திருப்தியே, வறுமையின் துன்பங்களை மறக்கச் செய்யும்.*

**1062. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.**

**இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின், பரந்து
கெடுக, உலகு இயற்றியான்.**

*இயற்றியான் = இயற்றி + ஆன். இயற்று = இ + அற்று. நிலை இன்றி. அசையாமை நீங்கி. இயற்றியான் = அசையாமை நீங்கியவன்.*

*பிச்சை எடுத்துத்தான் உயிர் வாழ வேண்டும், என்ற நிலை வந்தால், அசையாமை நீங்கி இந்த உலகம் ஆனவன், முழுவதுமாய் அழியட்டும்!*

**1063. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.**

**'இன்மை இடும்பை இரந்து தீர்வாம்' என்னும்
வன்மையின் வன்பாட்டது இல்.**

*இல்லாமைத் துன்பத்தை, பிச்சை எடுத்துப் போக்கிக் கொள்வோம், என்று நினைக்கும் கொடுமையைவிட, கொடுமையானது எதுவும் இல்லை.*

**1064. இடமெல்லாங் கொள்ளாத் தகைமைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.**

**இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே-இடம் இல்லாக்
காலும், இரவு ஒல்லாச் சால்பு.**

*பிச்சை எடுக்காமல், உயிர் வாழ முடியாத சமயத்திலும், பிச்சை எடுக்காத பண்பு, விண்வெளி எல்லாம் நிரப்ப முடியாத, பெருமை உடையது.*

**1065. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.**

**தெள் நீர் அடு புற்கை ஆயினும், தாள் தந்தது
உண்ணலின் ஊங்கு இனியது இல்.**

*தெண்ணீர் = தெள் + நீர். தெளிந்த நீர்.*

*புல் = பயிர். தானியம்.*

*தாடந்தது = தாள் + அந்தது. தேக உழைப்பால் முடிந்தது.*

*தெளிந்த நீரில் இட்ட, பயிர்தானிய உணவு, (சோறு, கூழ்) ஒரு கைப்பிடி அளவாக இருந்தாலும், தன் தேகத்தின் உழைப்பால், விளைந்த அதை, உண்ணுவதைக் காட்டிலும் இனிமையானது, வேறு எதுவும் இல்லை.*

*பிச்சை எடுத்து உண்ணும் உணவு, இனிமையானது அல்ல.*

**1066. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.**

**'ஆவிற்கு நீர்' என்று இரப்பினும், நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்.**

*'பசுவிற்கு நீர் தாருங்கள்' என்று தனக்காக அன்றி, பயனுள்ள பசுவிற்காகப் பிச்சை எடுத்தாலும், நாக்கிற்கு, இறைஞ்சுதலைவிட, இழிவைத் தந்தது, தருவது, வேறெதுவும் இல்லை.*

**1067. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பின்
கரப்பா ரிரவன்மி னென்று.**

**இரப்பன், இரப்பாரை எல்லாம்-'இரப்பின்,
கரப்பார் இரவன்மின்' என்று.**

*பிச்சை கேட்பவர் எல்லாரிடமும் நான் இறைஞ்சிக் கேட்பது என்னவென்றால், பிச்சை கேட்க வேண்டிய கட்டாயம் ஏற்படுமானால், இருப்பதை மறைப்பவரிடம், பிச்சை கேட்காதீர்கள்! இறைஞ்சி நிற்காதீர்கள்!*

**1068. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.**

**இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி, கரவு என்னும்
பார்தாக்கப், பக்கு விடும்.**

*ஏமாப்பு = பாதுகாப்பு*

*பார் = ப் + ஆர். கொண்டதைப் பிரிப்பது. கடல் பாறை.*

*பக்கு = ப் + அக் + உ. கொண்டது பொருண்மையற்று வெளிப்படும். சிதறி.*

*இறைஞ்சுதல் என்னும் பாதுகாப்பு இல்லாத படகு, மறைத்தல் என்னும் கடல் பாறை மோதி, சிதறி விடும்.*

**1069. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்.**

**இரவு உள்ள, உள்ளம் உருகும்; கரவு உள்ள,
உள்ளதூஉம் இன்றிக் கெடும்.**

*இறைஞ்சுதலின் கொடுமையை நினைத்துப் பார்த்து, சிலர் மனம் உருகி, பொருளைத் தருவர். உருகும் மனம், எளிதில் ஞானம் அடைந்து, அழிவின்றி வாழும். வேறு சிலர், இறைஞ்சுபவர்க்குக் கொடுக்க மனமின்றி, இருப்பதை மறைக்க நினைத்து, அவர்களிடம் இருப்பதும் இல்லாமலாகி, அழிந்து போவர்.*

**1070. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.**

**கரப்ப ர்க்கு யாங்கு ஒளிக்கும்கொல்லோ-இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்.**

*பிச்சை கேட்பவர், இறைஞ்சும்போதே, அவர் உயிர் போய் விடுகின்றதே. ஆனால், பொருள் இருப்பவர், இருப்பதை மறைத்துப் பேசும்போது, பொருள் இல்லை என்று சொல்லும்போது, அவருடைய உயிர் மட்டும் எங்குதான் போய் ஒளிந்து கொள்கின்றதோ, தெரியவில்லையே!*

**இரவச்சம் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*இருப்பதை மறைக்காமல், மனம் விரும்பித் தருபவராய் இருந்தால், அத்தகையவர் இடத்தும், இறைஞ்சாமல் இருப்பது, கோடிப் பணம் பெற்றதற்குச் சமம்.*

*பிச்சை எடுத்துத்தான் உயிர் வாழ வேண்டும், என்ற நிலை வந்தால், அசையாமை நீங்கி இந்த உலகம் ஆனவன், முழுவதுமாய் அழியட்டும்!*

இல்லாமைத் துன்பத்தை, பிச்சை எடுத்துப் போக்கிக் கொள்வோம், என்று நினைக்கும் கொடுமையைவிட, கொடுமையானது எதுவும் இல்லை.

பிச்சை எடுக்காமல், உயிர் வாழ முடியாத சமயத்திலும், பிச்சை எடுக்காத பண்பு, விண்வெளி எல்லாம் நிரப்ப முடியாத, பெருமை உடையது.

தெளிந்த நீரில் இட்ட, பயிர்தானிய உணவு, (சோறு, கூழ்) ஒரு கைப்பிடி அளவாக இருந்தாலும், தன் தேகத்தின் உழைப்பால், விளைந்த அதை, உண்ணுவதைக் காட்டிலும் இனிமையானது, வேறு எதுவும் இல்லை.

'பசுவிற்கு நீர் தாருங்கள்' என்று தனக்காக அன்றி, பயனுள்ள பசுவிற்காகப் பிச்சை எடுத்தாலும், நாக்கிற்கு, இறைஞ்சுதலைவிட, இழிவைத் தந்தது, தருவது, வேறெதுவும் இல்லை.

பிச்சை கேட்பவர் எல்லாரிடமும் நான் இறைஞ்சிக் கேட்பது என்னவென்றால், பிச்சை கேட்க வேண்டிய கட்டாயம் ஏற்படுமானால், இருப்பதை மறைப்பவரிடம், பிச்சை கேட்காதீர்கள்! இறைஞ்சி நிற்காதீர்கள்!

இறைஞ்சுதல் என்னும் பாதுகாப்பு இல்லாத படகு, மறைத்தல் என்னும் கடல் பாறை மோதி, சிதறி விடும்.

இறைஞ்சுதலின் கொடுமையை நினைத்துப் பார்த்து, சிலர் மனம் உருகி, பொருளைத் தருவர். உருகும் மனம், எளிதில் ஞானம் அடைந்து, அழிவின்றி வாழும். வேறு சிலர், இறைஞ்சுபவர்க்குக் கொடுக்க மனமின்றி, இருப்பதை மறைக்க நினைத்து, அவர்களிடம் இருப்பதும் இல்லாமலாகி, அழிந்து போவர்.

பிச்சை கேட்பவர், இறைஞ்சும்போதே, அவர் உயிர் போய் விடுகின்றதே. ஆனால், பொருள் இருப்பவர், இருப்பதை மறைத்துப் பேசும்போது, பொருள் இல்லை என்று சொல்லும்போது, அவருடைய உயிர் மட்டும் எங்குதான் போய் ஒளிந்து கொள்கின்றதோ, தெரியவில்லையே!

# 108. கயமை

*கயமை = க் + அய் + அம் + ஐ. மெய்யாய் இருக்கும் தன்மை ஐக்கியமானது. மெய்யின் இயக்கம். மனம் அறிவைப் பயன்படுத்தாமல், உடலை மட்டும் பயன்படுத்துதல்.*

*கயமை = க் + அயம் + ஐ. மெய் பள்ளம் / சேறு ஐக்கியம். கயமை = கை + அமை. சிறுமை. கீழ்மை. உடல் தன்மை. பிரித்தல்.*

**1071. மக்களே போல்வர் கயவர் அவரன்ன**
**ஒப்பாரி யாங்கண்ட தில்.**

**மக்களே போல்வர், கயவர்; அவர் அன்ன**
**ஒப்பாரி யாம் கண்டது இல்.**

*கயவர் = கை + அவர். மனம் அறிவைப் பயன்படுத்தாமல், கையை மட்டும் பயன்படுத்துபவர். எதைச் சொன்னாலும் செய்பவர். நல்லது கெட்டது, குடும்பம், சமூகம், நாடு என்று எதைப்பற்றியும் எந்த மதிப்பும் கவலையும் அற்றவர். தன்னுடைய சிறிய உடல் சுகத்தைத் தவிர வேறெதையும் நினைக்கும் திறனற்றவர்.*

*கயவர்கள், உருவத்திலும் தோற்றத்திலும், மக்களைப் போன்றே இருப்பர். அவர்களைப் போன்று, நல்லவர் கெட்டவர் என்று வித்தியாசப்படுத்த முடியாதபடி, ஒரே மாதிரி இருப்பவர்களை, வேறு எங்கும் கண்டதில்லை.*

**1072. நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்**
**நெஞ்சத் தவல மிலர்.**

**நன்று அறிவாரின் கயவர் திரு உடையர்-**
**நெஞ்சத்து அவலம் இலர்.**

*அவலம் = அ + வலம். வலிமையின்மை. தளர்வு. தயக்கம். கவலை.*

*நல்லதை அறிந்துச் செய்பவர்களைக் காட்டிலும், கயவர் செல்வம் உடையவராய் இருப்பர். ஏனெனில், நல்ல வழி, தீங்கற்ற தொழில் என்பதெல்லாம் அவர்களுக்குக் கிடையாது. பணம், செல்வம் வந்தால் போதும், எந்த வழியாக இருந்தாலும், அவர்களுக்குக் கவலை இல்லை.*

**1073. தேவ ரனையர் கயவ ரவரன்ன**
**மேவின செய்தொழுக லான்.**

**தேவர் அனையர், கயவர்-அவரும் தாம்**
**மேவன செய்து, ஒழுகலான்!**

*மேவு = ம் + ஏ + உ. மனத்தில் மிக உயர்ந்து வெளிப்படல். ஆசை. விருப்பம்.*

*நினைத்தபடி எல்லாம் செய்கின்றதால், கயவர்கள், தேவர்களைப் போன்றவர்கள்.*

*(ஆனால், நன்மையைச் செய்ய நினைப்பவர், தேவர். தீங்கைச் செய்ய நினைப்பவர், கயவர்.)*

**1074. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.**

**அகப் பட்டி ஆவாரைக் காணின், அவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்கும், கீழ்.**

*அகப்பட்டி = அகம் + பட்டி. பட்டி = ப் + அட் + இ. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து இருத்தல். இடம் பெயராமை. பிரியாமை. அகப்பட்டி = தன் அகத்தோடு ஒட்டி இருத்தல். சுய நலமி. மனக்குறுகி. தன் சுகமி.*

*அகப்பட்டி எனும் தன் சுகத்தை மட்டுமே கருதி வாழ்பவரைக் காட்டிலும், அதிகமாக மனம் குறுகி இறுகியவர், கீழ்த்தன்மை உடைய கயவர்.*

**1075. அச்சமே கீழ்கள தாசார மெச்சம்**
**அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.**

**அச்சமே கீழ்களது ஆசாரம்; எச்சம்**
**அவா உண்டேல், உண்டாம் சிறிது.**

*ஆசாரம் = ஆச் + ஆரம். இயக்கமாகும் ஒழுங்கு. வாழ்க்கை முறைமை.*

*சிறிது = அற்ப ஆசைகள்.*

*மனதில் பயந்துப் பயந்து இருத்தலே, கீழ்மக்களின் வாழ்க்கை ஒழுக்கமாகும். அவர்கள் மனதில், பயத்தைத் தவிர, மீதம் ஆசை எதுவும் இருக்குமா என்றால், இருக்கும், தீனி தின்பது, கள் குடிப்பது போன்ற, அற்ப ஆசைகள் மட்டும்.*

**1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட**
**மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.**

**அறை பறை அன்னர் கயவர்-தாம் கேட்ட**
**மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான்.**

*அறைபறை = அறை + பறை. அடிக்கின்ற முரசு. எல்லார்க்கும் அறிவித்தல்.*

*மறை = இரகசியம்.*

*தாம் கேட்ட இரகசியத்தை எல்லோரும் அறியும்படி அழைத்து ஒன்றுக்கூட்டிச் சொல்வதால், கயவர்கள், அறைகின்ற முரசு அல்லது தண்டோராவைப் போன்றவர்கள்.*

*கயவர்கள், இரகசியத்தைக் காக்க முடியாதவர்கள். அடக்கம், கண்ணோட்டம் அற்றவர்கள். மற்றவர் துன்பத்தில், இன்பம் காண்பவர்கள். வன்சுகிகள்.*

**1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்**
**கூர்ங்கைய ரல்லா தவர்க்கு.**

**ஈர்ங் கை விதிரார் கயவர்-கொடிறு உடைக்கும்**
**கூன் கையர் அல்லாதவர்க்கு.**

*ஈர்ங்கை = ஈரக்கை.*

*விதிரார் = உதறார்*

*கொடிறு = கன்னம், தாடை, முகம்.*

*கூர்ங்கை = குவித்துக் கூராக்கிய கை.*

*குவித்துக் கூராக்கிய கைகளால், முகத்தை உடைப்பவர்களுக்கு, பெயர்ப்பவர்களுக்கு, இருக்கின்ற எல்லாவற்றையும் எடுத்துத் தருவதைத் தவிர, வேறு யாருக்கும், எச்சில் கையாலும் உதறமாட்டார்கள், கயவர்கள்.*

**1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்**
**கொல்லப் பயன்படுங் கீழ்.**

**சொல்ல, பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்**
**கொல்ல, பயன்படும் கீழ்.**

*சொல் = அறிவுரை*

*பிரச்சனைகளைச் சொன்னால், தீர்வுக்கான அறிவுரைகளை இனிமையாகச் சொல்லுவர், அறிஞர். கரும்பைப் போல், சித்திரவதையால், நசுக்கிப் பிழிந்தால், செய்த தீமைகளை எல்லாம் ஒப்புக் கொள்வர், சமுதாயத்தில் களவாடப்பட்ட செல்வங்களை எல்லாம் தந்து விடுவர், கீழான கயவர்.*

**1079. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்**
**வடுக்காண வற்றாகுங் கீழ்.**

**உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின், பிறர்மேல்**
**வடுக் காண வற்று ஆகும், கீழ்.**

*வற்று = ஈரமற்று. மிகவும் கீழ். அடிப்படை இன்றி.*

*நன்கு உடுத்துபவரையும், உண்பவரையும் கண்டால், அவரிலும் அவர்க்கு நெருங்கியவரிலும், குற்றம், குறை காண, எவ்வளவு கீழ்த்தரமாகவும் இறங்குவார்கள், கயவர்கள்.*

**1080. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.**

**எற்றிற்கு உரியர் கயவர்-ஒன்று உற்றக்கால்,
விற்றற்கு உரியர் விரைந்து.**

*எற்றிற்கு = எதற்கு*

*எந்தத் தொழிலுக்கு உரியவர்கள், கயவர்கள்? கயவர்க்கு ஒரு துன்பம் வந்துவிட்டால் போதும், உடனடியாக, தன்னையே விலைக்கு விற்று, அடிமையாகி விடுவர். எனவே, அடிமைத் தொழிலைத் தவிர, வேறு எதற்கும் பயன்பட மாட்டார்கள், கயவர்கள்.*

**கயமை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*கயவர்கள், உருவத்திலும் தோற்றத்திலும், மக்களைப் போன்றே இருப்பர். அவர்களைப் போன்று, நல்லவர் கெட்டவர் என்று வித்தியாசப்படுத்த முடியாதபடி, ஒரே மாதிரி இருப்பவர்களை, வேறு எங்கும் கண்டதில்லை.*

*நல்லதை அறிந்து செய்பவர்களைக் காட்டிலும், கயவர் செல்வம் உடையவராய் இருப்பர். ஏனெனில், நல்ல வழி, தீங்கற்ற தொழில் என்பதெல்லாம் அவர்களுக்குக் கிடையாது. பணம், செல்வம் வந்தால் போதும், எந்த வழியாக இருந்தாலும், அவர்களுக்குக் கவலை இல்லை.*

*நினைத்தபடி எல்லாம் செய்கின்றதால், கயவர்கள், தேவர்களைப் போன்றவர்கள்.*

*அகப்பட்டி எனும் தன் சுகத்தை மட்டுமே கருதி வாழ்பவரைக் காட்டிலும், அதிகமாக மனம் குறுகி இறுகியவர், கீழ்த்தன்மை உடைய கயவர்.*

*மனதில் பயந்து பயந்து இருத்தலே, கீழ்மக்களின் வாழ்க்கை ஒழுக்கமாகும். அவர்கள் மனதில், பயத்தைத் தவிர, மீதம் ஆசை எதுவும் இருக்குமா என்றால், இருக்கும், தீனி தின்பது, கள் குடிப்பது போன்ற, அற்ப ஆசைகள் மட்டும்.*

*தாம் கேட்ட இரகசியத்தை எல்லோரும் அறியும்படி அழைத்து ஒன்றுக்கூட்டிச் சொல்வதால், கயவர்கள், அறைகின்ற முரசு அல்லது தண்டோராவைப் போன்றவர்கள்.*

*குவித்துக் கூராக்கிய கைகளால், முகத்தை உடைப்பவர்களுக்கு, பெயர்ப்பவர்களுக்கு, இருக்கின்ற எல்லாவற்றையும் எடுத்துத் தருவதைத் தவிர, வேறு யாருக்கும், எச்சில் கையாலும் உதறமாட்டார்கள், கயவர்கள்.*

பிரச்சனைகளைச் சொன்னால், தீர்வுக்கான அறிவுரைகளை இனிமையாகச் சொல்லுவர், அறிஞர். கரும்பைப் போல், சித்திரவதையால், நசுக்கிப் பிழிந்தால், செய்த தீமைகளை எல்லாம் ஒப்புக் கொள்வர், சமுதாயத்தில் களவாடப்பட்ட செல்வங்களை எல்லாம் தந்து விடுவர், கீழான கயவர்.

நன்கு உடுத்துபவரையும், உண்பவரையும் கண்டால், அவரிலும்அவர்க்கு நெருங்கியவரிலும், குற்றம், குறை காண, எவ்வளவு கீழ்த்தரமாகவும் இறங்குவார்கள், கயவர்கள்.

எந்தத் தொழிலுக்கு உரியவர்கள், கயவர்கள்? கயவர்க்கு ஒரு துன்பம் வந்துவிட்டால் போதும், உடனடியாக, தன்னையே விலைக்கு விற்று, அடிமையாகி விடுவர்.

# காமத்துப்பால்

## களவு இயல்

### தகையணங்குறுத்தல்

*தகையணங்குறுத்தல் = தகை + அணங்கு + உறுத்தல். அழகான பெண்தெய்வத்தை வெளிப்பிரித்தல். பெண்மையின் தன்மைகளை வெளிப்படுத்தல். உயர்ந்த குணங்கள் கொண்ட பெண் யாரென பிரித்துக் காட்டுதல்.*

**1081. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை**
**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.**

**அணங்குகொல்! ஆய் மயில்கொல்லோ! -கனங்குழை-**
**மாதர்கொல்! மாலும், என் நெஞ்சு.**

*அணங்கு = அண் + அங்கு. மிக நெருங்கிய வெளி. அசைவில்லாமை. தெய்வச்சிலை.*

*ஆய் = அசையும்.*

*கனங்குழை = கனம் + குழை. உறுதி இளக்கம்*

*மால் = ம் + ஆல். மனம் அதிர்வாதல். தடுமாற்றம். குழப்பம்.*

*அசையாத தெய்வச்சிலையா? அசைந்தாடும் மயிலா? உறுதியான செறிவா? இணங்கும் இளக்கமா? எது பெண்? தடுமாற்றத்தால், குழம்புகின்றது என் நெஞ்சம்.*

**1082. நோக்கினா ணோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**
**தானைகொண் டன்ன துடைத்து.**

**நோக்கினாள் நோக்கு எதிர் நோக்குதல்-தாக்கு அணங்கு**
**தானைக் கொண்டன்னது உடைத்து.**

*தாக்கணங்கு = தாக்கு + அணங்கு. போரிடும் தெய்வம்.*

*தானை = த் + ஆனை. தேகம் பெரியதானது. பெரும் படை.*

*ஒரு ஆண்மகன் பார்த்தால், ஒரு பெண்மகள் பார்த்துவிட்டு, பின் எதிர்பார்வை இடுவது, போரில், எய்தப்பட்ட ஒரு அம்பைப் புறந்தள்ளி விட்டு, தாக்குகின்ற தெய்வமகள், தன்படையுடன் நின்று, அம்பு மழையைப் பொழிவது போன்றது.*

**1083. பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்**
**பெண்டகையாற் பேரமர்க் கட்டு.**

**பண்டு அறியேன், 'கூற்று' என்பதனை; இனி அறிந்தேன்;**
**பெண்தகையான் பேர் அமர்க் கட்டு.**

*பண்டு = கொண்டதில் மிக நெருங்கி ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது. பழம். பழமை. முன்பு.*

*கூற்று = இறப்பு. எமன்.*

*மரணம் அல்லது எமன் என்பதை, இதற்கு முன்பு நான் அறிந்ததில்லை. பெண்தன்மை உடையவளுடன் ஏற்பட்ட பெரும்போரில் விழுந்து, அதை, இனிமையாக இப்பொழுது அறிந்து கொண்டேன்.*

**1084. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்**
**பேதைக் கமர்த்தன கண்.**

**கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தால், பெண் தகைப்**
**பேதைக்கு, அமர்த்தன கண்.**

*தோற்றம் = பார்வை.*

*பெண்டகை = பெண் + தகை. பெண்ணிற்குத் தகுந்த.*

*பேதை < பேதம். பேதம் = ப் + ஏதம். மனவெளியை மிக உயர்த்தி தேகமாக்கும், வடிவமாக்கும் தன்மை. அருவத்தை உருவமாக்கும் தன்மை. இல்லாததை இருப்பதாக்கும் தன்மை. முரண்பாடு. வேறுபாடு. குழப்பம். தடை. அசையாமை. இயங்காமை. நிலைத்தல்.*

*மடம் = ம் + அட் + அம். கொண்டு மூடியதை ஒட்டித் தொடரும் தன்மை. மனதை ஒட்டித் தொடரும் தன்மை. தடை. அசையாமை. இயங்காமை. நிலைத்தல்.*

*பேதை = மடநோக்கு உடையவள்.*

*அமர்த்தன = சண்டை இட்டன.*

*தன்னைக் காண்பவரின் உயிரையெல்லாம், விழித்த பார்வையால் கொல்லும், பெண்ணிற்குத் தகுந்த மடமை உடையவளின் கண்கள், 'நான்தான் கொன்றேன்', 'இல்லை, நான்தான் கொன்றேன்' என்று தமக்குள் மாறி மாறி சண்டை இட்டன.*

**1085. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கமிம் மூன்று முடைத்து.**

**கூற்றமோ! கண்ணோ! பிணையோ!-மடவரல்**
**நோக்கம் இம் மூன்றும் உடைத்து.**

*பிணை = ப் + இணை. துணை. பெண் மான்.*

*மடவரல் = மடம் + அரல். நிலை பிரிதல்.*

*எமனோ? கண்ணோ? பெண்மானோ? எதுவென்று உறுதியாகக் கூறமுடியாமல், நிலையற்று பார்ப்பவளின் பார்வை, இம்மூன்றையும் கொண்டதாய் உள்ளது.*

**1086. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்**
**செய்யல மன்னிவள் கண்.**

**கொடும் புருவம் கோடா மறைப்பின், நடுங்கு அஞர்**
**செய்யலமன், இவள் கண்.**

*கோடா = வளையாமல்.*

*மறை = மூடு.*

*கொடுமையான இவள் புருவம், கீழ் வளையாமல், இமைகள் மூடினால், இவளிடத்தில், இவள் கண்ணுக்கு, என் மனம் நடுங்கி பயந்து சாகாது.*

**1087. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்**
**படாஅ முலைமேற் றுகில்.**

**கடாஅக் களிற்றின்மேல் கண் படாம்-மாதர்**
**படாஅ முலைமேல் துகில்!**

*கடாஅ = க் + அட் + ஆ + அ. மெய்யை ஒட்டித் தொடராது இருக்கும். கட்டுப்படாமல் இருக்கும்.*

*களிறு = கள் + இறு. கள் = க் + அள். மெய்யின் மிகை. இறு = நெருங்கு. களிறு = மெய் மிகையாய் நெருங்குதல். பெரிய தேகம். யானை.*

*கட்படாம் = கண் படாம். நெற்றியையும் கண்களையும் பாதுகாக்கும் கவசம்.*

*படாஅ = படுக்காத. தொங்காத. கீழிறங்காத. நிமிர்ந்து நிற்கும்.*

*கட்டுப்படாமல் இருக்கும் யானையின் மேல், கண்படாம் அசைந்தாடுவதைப் போல், பெண்ணின் நிமிர்ந்து நிற்கும் முலைகள் மேல், மேலாடை அசைந்தாடுகின்றது.*

**1088. ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்**
**நண்ணாரு முட்குமென் பீடு.**

**ஒள் நுதற்கு, ஓ ! உடைந்ததே-ஞாட்பினுள்**
**நண்ணாரும் உட்கும் என் பீடு!**

*ஒண்ணுதள் = ஒளி + நுதல். ஒளிரும் நெற்றி.*

*ஞாட்பு = ன் + ச் + ஆட் + ப் + உ. நெருக்கமான இயக்கம் ஒட்டித் தொடர்ந்து கொண்டு உள்ளிருத்தல். போர்க்களம்.*

*நண்ணார் = ன் + அண் + ஆர். நெருக்கம் அற்றவர். பகைவர்.*

*உள்கு = உள் + க் + உ. மனம் அழி. மெய் உள் செல்லுதல். கலங்கு.*

*பீடு = ப் + ஈடு. கொண்டதன் சமம். உடலின் சமம். மன வலிமை.*

*போர்க்களத்தில், என்னை நெருங்காத பகைவர்களும், என் வலிமையைக் கண்டு மனம் அழிவர், கலங்குவர், ஆனால், அத்தகைய வலிமை, ஐயோ, இவளுடைய ஒளிரும் நெற்றிக்கு முன் உடைந்து போனதே, தோற்றுப் போனதே!*

**1089. பிணையேர் மடநோக்கும் நாணு முடையாட்**
**கணியெவனோ வேதில தந்து.**

**பிணைஏர் மட நோக்கும், நாணும் உடையாட்கு**
**அணி எவனோ, ஏதில தந்து?**

*பிணை = பெண்மான்.*

*ஏர் = உயர்ந்த*

*மடம் = நிலைத்த தன்மை.*

*ஏதிலம் = ஏதும் + இலம். தொடர்பின்மை. உறவின்மை. பொருத்தமின்மை.*

*பெண்மானின் உயர்ந்த நிலைத்த பார்வையும், நாணமும், இயற்கை அழகாக உடைய இவளுக்கு, பிற அணிகள் எதற்கு? மற்ற அணிகள், இவளுக்குக் கொஞ்சம் கூட பொருந்தாமல் இருக்கின்றன.*

**1090. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போல்**
**கண்டார் மகிழ்செய்த லின்று.**

**உண்டார்கண் அல்லது, அடு நறா, காமம்போல்**
**கண்டார் மகிழ் செய்தல் இன்று.**

*அடு நறா = அடு + நறா. நறா = ன் + அற் + ஆ. நெருங்கிப் பிரிந்து ஆவது. தேன், வாசம். கள். அடு நறா = சூடாக்கிய கள். புளித்தக் கள்.*

*காமம் = க் + ஆம் + அம். மெய் அமைதியுறும் தன்மை. உடல் அடங்கும் தன்மை. பொருண்மை ஆகும் தன்மை.*

*சூடாக்கிய கள்ளைக் குடித்தவர்க்கே இன்பம் உண்டாகும், குடிக்காமல், அதைப் பார்த்துக் கொண்டே இருந்தால், போதை உண்டாகாது. ஆனால், காதலால் உடலாசை கொண்டவர்க்கு, ஒருவரை மற்றொருவர் பார்த்தாலே, போதை, இன்பம், மகிழ்ச்சி உண்டாகும்.*

**தகையணங்குறுத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அசையாத தெய்வச்சிலையா? அசைந்தாடும் மயிலா? உறுதியான செறிவா? இணங்கும் இளக்கமா? எது பெண்? தடுமாற்றத்தால், குழம்புகின்றது என் நெஞ்சம்.*

*ஒரு ஆண்மகன் பார்த்தால், ஒரு பெண்மகள் பார்த்துவிட்டு, பின் எதிர்பார்வை இடுவது, போரில், எய்தப்பட்ட ஒரு அம்பைப் புறந்தள்ளி விட்டு, தாக்குகின்ற தெய்வமகள், தன்படையுடன் நின்று, அம்பு மழையைப் பொழிவது போன்றது.*

*மரணம் அல்லது எமன் என்பதை, இதற்கு முன்பு நான் அறிந்ததில்லை. பெண்தன்மை உடையவளுடன் ஏற்பட்ட பெரும்போரில் விழுந்து, அதை, இனிமையாக இப்பொழுது அறிந்து கொண்டேன்.*

*தன்னைக் காண்பவரின் உயிரையெல்லாம், விழித்த பார்வையால் கொல்லும், பெண்ணிற்குத் தகுந்த மடமை உடையவளின் கண்கள், 'நான்தான் கொன்றேன்', 'இல்லை, நான்தான் கொன்றேன்' என்று தமக்குள் மாறி மாறிச் சண்டை இட்டன.*

*எமனோ? கண்ணோ? பெண்மானோ? எதுவென்று உறுதியாகக் கூறமுடியாமல், நிலையற்று பார்ப்பவளின் பார்வை, இம்மூன்றையும் கொண்டதாய் உள்ளது.*

*கொடுமையான இவள் புருவம், கீழ் வளையாமல், இமைகள் மூடினால், இவளிடத்தில், இவள் கண்ணுக்கு, என் மனம் நடுங்கிப் பயந்து சாகாது.*

*கட்டுப்படாமல் இருக்கும் யானையின் மேல், கண்படாம் அசைந்தாடுவதைப் போல், பெண்ணின் நிமிர்ந்து நிற்கும் முலைகள் மேல், மேலாடை அசைந்தாடுகின்றது.*

*போர்க்களத்தில், என்னை நெருங்காத பகைவர்களும், என் வலிமையைக் கண்டு மனம் அழிவர், கலங்குவர், ஆனால், அத்தகைய வலிமை, ஐயோ, இவளுடைய ஒளிரும் நெற்றிக்கு முன் உடைந்து போனதே, தோற்றுப் போனதே!*

*பெண்மானின் உயர்ந்த நிலைத்தப் பார்வையும், நாணமும், இயற்கை அழகாக உடைய இவளுக்கு, பிற அணிகள் எதற்கு? மற்ற அணிகள், இவளுக்குக் கொஞ்சம் கூட பொருந்தாமல் இருக்கின்றன.*

*சூடாக்கிய கள்ளைக் குடித்தவர்க்கே இன்பம் உண்டாகும், குடிக்காமல், அதைப் பார்த்துக் கொண்டே இருந்தால், போதை உண்டாகாது. ஆனால், காதலால் உடலாசை கொண்டவர்க்கு, ஒருவரை மற்றொருவர் பார்த்தாலே, போதை, இன்பம், மகிழ்ச்சி உண்டாகும்.*

## 110. குறிப்பறிதல்

*குறிப்பறிதல் = குறிப்பு + அறிதல். மெய்யின் சிறிய அசைவுகளில், மனத்தின் ஆசை வெளிப்படுத்தப்படுவதை, அறிந்து கொள்ளுதல்.*

**1091. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு**
**நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.**

**இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது; ஒரு நோக்கு**
**நோய் நோக்கு; ஒன்று அந் நோய் மருந்து.**

*உயிரை உண்ணும் இவளுடைய கண்களில், இரண்டு பார்வைகள் உள்ளன. ஒரு பார்வை, காம நோயை உண்டாக்குகின்றது. மற்றொரு பார்வை, அந்நோயைத் தீர்க்கின்ற மருந்தாகின்றது.*

**1092. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்தில்**
**செம்பாக மன்று பெரிது.**

**கண் களவு கொள்ளும் சிறு நோக்கம் காமத்தின்**
**செம்பாகம் அன்று; பெரிது.**

*செம்பாகம் = சரி பாதி.*

*ஆசைகொண்டு ஈர்த்த அரைவிழிப் பார்வையைத் திரும்பிப் பார்ப்பதற்குள் மறைத்துக் கொள்ளும் கண்களின் செயலையும், இவளிடம் அனுபவித்த உடல்சுகத்தையும் ஒப்பிடுகையில், அக்கள்ளப் பார்வையின் நினைவே, மொத்த சுகத்தில், சரி பாதி இல்லை, அதைவிட அதிகமாய் உள்ளது.*

**1093. நோக்கினா னோக்கி யிறைஞ்சினா ளஃதவள்**
**யாப்பினு ளட்டிய நீர்.**

**நோக்கினாள்; நோக்கி இறைஞ்சினாள்; அஃது**
**அவள் யாப்பினுள் அட்டிய நீர்.**

*யாப்பு = ய் + ஆப் + உ. உடல். மனம்.*

*அவள் நோக்கினாள், அதை உணர்ந்து நான் நோக்கினேன், அவளுடைய கண்களை, என் கண்கள் சந்திப்பதற்குள், நாணத்தால் அவள் நிலம் நோக்கினாள். அது, என் உடலின் உள்ளும், மனத்தின் உள்ளும், உடல் ஆசை வெள்ளத்தை, பாய்ச்சியது போலிருந்தது.*

**1094. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்கால்**
**தானோக்கி மெல்ல நகும்.**

**யான் நோக்கும் காலை நிலன் நோக்கும்; நோக்காக்கால்,**
**தான் நோக்கி, மல்ல நகும்.**

*நான் அவளைப் பார்க்கும்போது, அவள் நிலத்தைப் பார்ப்பாள். நான் அவளைப் பார்க்காதபோது, என்னைப் பார்த்து, மெல்ல சிரிப்பாள்.*

**1095. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்**
**சிறக்கணித்தாள் போல நகும்.**

**குறிக்கொண்டு நோக்காமை அல்லால், ஒரு கண்**
**சிறக்கணித்தாள் போல நகும்.**

*குறி = நாணம்.*

*சிறக்கணி = சிறகு + அணி. இமை நெருக்கம். கண் அடித்தல்.*

*என்னை நோக்கி, பின் நாணுவதைச் செய்யா விட்டால், அதற்கான சூழல்கள் இல்லா விட்டால், பலரும் அவளைக் கவனிப்பதாய் இருந்தால், அவளுடைய ஒரு கண்ணின் இமைகள் மட்டும், கண்ணடிப்பது போல, மெல்ல சிரிக்கும்.*

**1096. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்**
**ஒல்லை உணரப் படும்.**

**உறாஅதவர்போல் சொலினும், செறா அர் சொல்**
**ஒல்லை உணரப்படும்.**

*உறாஅதவர் = உறவற்றவர்.*

*செறாஅர் = பகையற்ற*

*ஒல்லை = ஒல் + ஐ. முழுமையான அதிர்வு ஐக்கியமாதல். முழுமையாய். விரைவில்.*

*எந்த உறவும் இல்லாதது போல் பேசினாலும், அந்நியரிடம் பேசுவது போல் பேசினாலும், அவை பகைமையற்ற சொற்கள் என முழுமையாய், விரைவில் உணரப்படும்.*

*தலைவி, நாணத்தாலோ, சிரிப்பாலோ தன் ஆசையை வெளிப்படுத்த முடியாதபோது, பிறர் யாரும் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதற்காக, கோபச் சொற்களால் திட்டினாலும், அச்சொற்களில் பகைமை இல்லாமை, பேசுகின்ற குரலினாலோ, இடைச் செருகலாய் வரும் சில சொற்களினாலோ, தலைவனால், விரைவில் அறியப்படும்.*

**1097. செறாஅச் செறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கும்**
**உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.**

**செறாஅச் சிறு சொல்லும், செற்றார்போல் நோக்கும்,-**
**உறாஅர் போன்று உற்றார் குறிப்பு.**

*பகைமையற்ற கோபச் சொற்களும், பகைவர்போன்ற பார்வையும், உறவோ தொடர்போ இல்லாதவர்போல் நடந்து கொள்வதும், பிறரறியாது உடல் உறவு கொள்பவர்கள், பரிமாறிக் கொள்ளும் மறைமுகச் செய்தி.*

**1098. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யான் நோக்கப்**
**பசையினள் பைய நகும்.**

**அசையியற்கு உண்டு, ஆண்டு ஓர் ஏஎர்; யான் நோக்க,**
**பசையினள், பைய நகும்.**

*அசையியல் = அசை + இயல்பு. மயில், கொடி.*

*ஓரே = ஓர் + ஏ. ஒன்றாய் மிக உயர்ந்து. தனித்து.*

*எர் = உயர்ந்து.*

*மயில் போன்றும், பூங்கொடி போன்றும் அசைபவள், தன் தலையை மிக உயர்த்தி தனித்து நடப்பாள். நானும் தலையை உயர்த்திப் பார்க்க, காதலால் ஒட்டிக் கொள்ளும் இயல்புடையவள், மெல்ல சிரிப்பாள்.*

**1099. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலர் கண்ணே யுள.**

**ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே உள.**

*ஏதிலார் = ஏதும் + இலார். எந்த உறவும் அற்றவர்.*

*இதற்கு முன், ஒருவரை மற்றவர் பார்த்து அறியாதது போல், எந்த ஈடுபாடும், கவனமுமின்றி பொதுவாக, சாதாரணமாகப் பார்ப்பது, காதலர் கண்களிலும், காதலர் இடத்திலும் தான் உள்ளன.*

**1100. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்**
**வாய்ச்சொற்கொண்**
**டென்னை பயனு மில.**

**கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின், வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல.**

*ஒருத்தியின் கண்களோடு, ஒருவனின் கண்கள், இணைந்து, சேர்ந்து பார்த்து ஒன்றினால், வாய்ச்சொற்கள் பேசியோ, கேட்டோ எந்தப் பயனும் இல்லை. கண்கள், மனத்தின் சாளரம், சன்னல். கண்கள் இணைந்து ஒன்றினால், மனங்களே பரிமாறப்படும், மனங்களே ஒன்றிவிடும்.*

*மனத்தின் மிகச் சிறிய பகுதியைத் தான், வாய்ச் சொற்களால், அரைகுறையாய்ப் புலப்படுத்த முடியும். உடல் உறவில், உடல்கள் இணைந்தாலும், இறுதியில், உடல்களின் உணர்வுகள் இழந்து, மனமே, உயிரே இணைகின்றது. காதலர்களின் கண்கள் இணைந்து ஆழ்ந்து ஒன்றும்போது, உடல்கள் இணையாமலேயே, மனமும் உயிரும் இணைகின்றது. அந்த ஆனந்தத்தில், உடலும் சுகத்தை அனுபவிக்கின்றது.*

**குறிப்பறிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*உயிரை உண்ணும் இவளுடைய கண்களில், இரண்டு பார்வைகள் உள்ளன. ஒரு பார்வை, காம நோயை உண்டாக்குகின்றது. மற்றொரு பார்வை, அந்நோயைத் தீர்க்கின்ற மருந்தாகின்றது.*

*ஆசைகொண்டு ஈர்த்த அரைவிழிப் பார்வையைத் திரும்பிப் பார்ப்பதற்குள் மறைத்துக் கொள்ளும் கண்களின் செயலையும், இவளிடம் அனுபவித்த உடல்சுகத்தையும் ஒப்பிடுகையில், அக்கள்ளப் பார்வையின் நினைவே, மொத்த சுகத்தில், சரி பாதி இல்லை, அதைவிட அதிகமாய் உள்ளது.*

*அவள் நோக்கினாள், அதை உணர்ந்து நான் நோக்கினேன், அவளுடைய கண்களை, என் கண்கள் சந்திப்பதற்குள், நாணத்தால் அவள் நிலம் நோக்கினாள். அது, என் உடலின் உள்ளும், மனத்தின் உள்ளும், உடல் ஆசை வெள்ளத்தை, பாய்ச்சியது போலிருந்தது.*

*நான் அவளைப் பார்க்கும்போது, அவள் நிலத்தைப் பார்ப்பாள். நான் அவளைப் பார்க்காதபோது, என்னைப் பார்த்து, மெல்ல சிரிப்பாள்.*

*என்னை நோக்கி, பின் நாணுவதைச் செய்யா விட்டால், அதற்கான சூழல்கள் இல்லா விட்டால், பலரும் அவளைக் கவனிப்பதாய் இருந்தால், அவளுடைய ஒரு கண்ணின் இமைகள் மட்டும், கண்ணடிப்பது போல, மெல்ல சிரிக்கும்.*

*எந்த உறவும் இல்லாதது போல் பேசினாலும், அந்நியரிடம் பேசுவது போல் பேசினாலும், அவை பகைமையற்ற சொற்கள் என முழுமையாய், விரைவில் உணரப்படும்.*

*பகைமையற்ற கோபச் சொற்களும், பகைவர்போன்ற பார்வையும், உறவோ தொடர்போ இல்லாதவர்போல் நடந்து கொள்வதும், பிறரறியாது உடல் உறவு கொள்பவர்கள், பரிமாறிக் கொள்ளும் மறைமுகச் செய்தி.*

*மயில் போன்றும், பூங்கொடி போன்றும் அசைபவள், தன் தலையை மிக உயர்த்தத் தனித்து நடப்பாள். நானும் தலையை உயர்த்திப் பார்க்க, காதலால் ஒட்டிக் கொள்ளும் இயல்புடையவள், மெல்ல சிரிப்பாள்.*

*இதற்கு முன், ஒருவரை மற்றவர் பார்த்து அறியாதது போல், எந்த ஈடுபாடும், கவனமுமின்றிப் பொதுவாக, சாதாரணமாகப் பார்ப்பது, காதலர் கண்களிலும், காதலர் இடத்திலும் தான் உள்ளன.*

*ஒருத்தியின் கண்களோடு, ஒருவனின் கண்கள், இணைந்து, சேர்ந்து பார்த்து ஒன்றினால், வாய்ச்சொற்கள் பேசியோ, கேட்டோ எந்தப் பயனும் இல்லை.*

# 111. புணர்ச்சி மகிழ்தல்

*புணர்ச்சி மகிழ்தல் = புணர்ச்சி + மகிழ்தல். புணர்ச்சி = ப் + உணர்ச்சி. மனம், உடல் உணர்ச்சி.*

**1101. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே யுள.**

**கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும்**
**ஒண்தொடிகண்ணே உள.**

*உடல் அழகினைக் கண்ணால் கண்டும், இனிமையான சொற்களைக் காதால் கேட்டும், இதழ்களாலும் நாக்காலும் சுவைத்து உண்டும், நாசியால் முகர்ந்தும், உடலால் உணர்ந்தும் அனுபவிக்கும் ஐந்து சுகங்களும், ஒளிரும் வளைவுகளைக் கொண்ட பெண்ணிடத்தில்தான் உள்ளன.*

**1102. பிணிக்கு மருந்து பிறம னணியிழை**
**தன்னோய்க்குத் தானே மருந்து.**

**பிணிக்கு மருந்து பிறமன்; அணியிழை**
**தன் நோய்க்குத் தானே மருந்து.**

*மன் = மனம்.*

*அணி = மிக நெருங்கி இருந்து.*

*நோய் ஒன்று என்றால், அதற்கு மருந்து, பொதுவாக வேறொன்று, என்று நாம் அறிவோம். ஆனால், உடல்கள், மனம் மிக நெருங்கி இருந்து, இழைவதால் ஏற்படும் தேகத்தின் நோய்க்கு, தேகமே மருந்து. மீண்டும், இழைவதே மருந்து.*

**1103. தாம்விழைவார் மென்றோட் டுயிலி னினிதுகொல்**
**தாமரைக் கண்ணா னுலகு.**

**தாம் வீழ்வார் மென் தோள் துயிலின் இனிதுகொல்-**
**தாமரைக்கண்ணான் உலகு?**

*தாமரை = த் + ஆம் + அர் + ஐ. தேகம் அமைதியாகிப் பிரிந்து ஐக்கியமாவது. மெய்யுணர்வு.*

*கண்ணான் = கண் + ஆன். கண்ணான. காட்சியான.*

*தன்னை விரும்பும், தான் விரும்பும் பெண்ணின் மென்மையான தோள்களில் புதைந்து தூங்குவதைவிடவா இனியது, சொல், மெய்யுணர்வு காட்சியான உலகம்?*

**1104. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னும்**
**தீயாண்டுப் பெற்றா ளிவள்.**

**நீங்கின் தெறூஉம், குறுகுங்கால் தண்ணென்னும்,**
**தீ யாண்டுப் பெற்றாள், இவள்?**

*தெறு = த் + எற் + உ. தேகம் உயர்ந்து பிரிந்து புறமாதல். சூட்டை உணர்ந்து விலகல்.*

*குறுகு = நெருங்கு.*

*தீயின் இயல்புக்கு மாறாக, விலகினால் சுடுதலும், நெருங்கினால் குளிர்தலும் உடைய உடல் சூட்டை, எங்கிருந்து பெற்றாள் இவள்?*

**1105. வேட்ட பொழுதி னவையவை போலுமே**
**தோட்டார் கதுப்பினா டோள்.**

**வேட்ட பொழுதின் அவை அவை போலுமே-**
**தோட்டார் கதுப்பினாள் தோள்.**

*வேட்டல் = விரும்புதல்.*

*தோட்டார் = தோட்டம் + ஆர். தோட்டம் பிரிந்த. பலவண்ண நறுமலர்கள்.*

*கதுப்பு = கூந்தல்*

*விரும்பிக் கேட்டவை எல்லாம் கேட்ட மாதிரியே, உடனுக்குடன் கிடைப்பது போல, பலவண்ண நறுமலர்கள் சூடிய விரிந்த கூந்தல் புரளும் மார்பகங்கள், கற்பனைக்கு ஏற்றபடி, என்ன நினைக்கிறோமோ அதாய் மாறுகின்றன.*

**1106. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்**
**கமிழ்தி னியன்றன தோள்.**

**உறுதோறு உயிர் தளிர்ப்பத் தீண்டலர் , பேதைக்கு**
**அமிழ்தின் இயன்றன, தோள்.**

*தழுவும் போதெல்லாம், புத்துயிர் ஊட்டுவதாய் இருப்பதால், இந்த இளம் பெண்ணின் தோள்கள், அமிழ்தத்தால் செய்யப்பட்டன, என்பேன்.*

**1107. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்**
**அம்ம வரிவை முயக்கு.**

**தம் இல் இருந்து, தமது பாத்து உண்டற்றால்-**
**அம் மா அரிவை முயக்கு.**

*பாத்து = ப் + ஆத்து. பொருள் ஈட்டி*

*அம்மவரிவை = அம் + அவ் + அரி + வை. அமைதி + புறம் அகம் அற்று + பிரிந்து + நிலையாதல். அமைதியும் ஞானமும் உடையவள்.*

*அமைதியும் ஞானமும் உடைய பெண்ணைத் தழுவுவது, தன் வீட்டில் இருந்து, தான் ஈட்டிய பொருளைக் கொண்டு, உண்பது போன்ற பெருமை உடையதாகும்.*

**1108. வீழு மிருவர்க் கினிதே வளியிடைப்**
**போழப் படாஅ முயக்கு.**

**வீழும் இருவர்க்கு இனிதே-வளி இடைப்**
**போழப் படாஅ முயக்கு.**

*உடலுறவின் மேலும் கீழுமான இயக்கத்தில், இருவர் உடலுக்கும் இடையில், உடலின் இடைப் பகுதியில், காற்று கீழ் நுழைந்து போகாத வண்ணம், இருவரின் விரைவான, நெருக்கமான, இறுக்கமான, தளராத தழுவல், இருவருக்கும் இனிமையானது.*

**1109. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமம்**
**கூடியார் பெற்ற பயன்.**

**ஊடல், உணர்தல், புணர்தல், இவை-காமம்**
**கூடியார் பெற்ற பயன்.**

*ஊடல், ஊடலின் எல்லை, தவற்றை உணர்தல், புணர்தல் ஆகியவை, காதலித்து வாழ்க்கையில் இணைந்தவர்கள், பெற்ற சுகங்கள்.*

**1110. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமம்**
**செறிதோறுஞ் சேயிழை மாட்டு.**

**அறிதோறும் அறியாமை கண்டற்றால்-காமம்**
**செறிதோறும் சேயிழைமாட்டு.**

*புதிது புதிதாய் அறியும் போதெல்லாம், அறியாமை இருந்தது வெளிப்படுவது போல, சிவந்த இழையைக் கொண்ட இவளுடன் கூடும் போதெல்லாம், அடடா, இந்தச் சுகத்தை, இதற்கு முன் அனுபவிக்காமல் போனோமே, என்று தோன்றுகின்றது.*

**புணர்ச்சி மகிழ்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*உடல் அழகினைக் கண்ணால் கண்டும், இனிமையான சொற்களைக் காதால் கேட்டும், இதழ்களாலும் நாக்காலும் சுவைத்து உண்டும், நாசியால் முகர்ந்தும், உடலால் உணர்ந்தும் அனுபவிக்கும் ஐந்து சுகங்களும், ஒளிரும் வளைவுகளைக் கொண்ட பெண்ணிடத்தில்தான் உள்ளன.*

நோய் ஒன்று என்றால், அதற்கு மருந்து, பொதுவாக வேறொன்று, என்று நாம் அறிவோம். ஆனால், உடல்கள், மனம் மிக நெருங்கி இருந்து, இழைவதால் ஏற்படும் தேகத்தின் நோய்க்கு, தேகமே மருந்து. மீண்டும், இழைவதே மருந்து.

தன்னை விரும்பும், தான் விரும்பும் பெண்ணின் மென்மையான தோள்களில் புதைந்து தூங்குவதைவிடவா இனியது, சொல், மெய்யுணர்வு காட்சியான உலகம்?

தீயின் இயல்புக்கு மாறாக, விலகினால் சுடுதலும், நெருங்கினால் குளிர்தலும் உடைய உடல் சூட்டை, எங்கிருந்து பெற்றாள் இவள்?

விரும்பிக் கேட்டவை எல்லாம் கேட்ட மாதிரியே, உடனுக்குடன் கிடைப்பது போல, பலவண்ண நறுமலர்கள் சூடிய விரிந்த கூந்தல் புரளும் மார்பகங்கள், கற்பனைக்கு ஏற்றபடி, என்ன நினைக்கிறோமோ அதாய் மாறுகின்றன.

தழுவும் போதெல்லாம், புத்துயிர் ஊட்டுவதாய் இருப்பதால், இந்த இளம் பெண்ணின் தோள்கள், அமிழ்தத்தால் செய்யப்பட்டன, என்பேன்.

அமைதியும் ஞானமும் உடைய பெண்ணைத் தழுவுவது, தன் வீட்டில் இருந்து, தான் ஈட்டிய பொருளைக் கொண்டு, உண்பது போன்ற பெருமை உடையதாகும்.

உடலுறவின் மேலும் கீழுமான இயக்கத்தில், இருவர் உடலுக்கும் இடையில், உடலின் இடைப் பகுதியில், காற்று கீழ் நுழைந்து போகாத வண்ணம், இருவரின் விரைவான, நெருக்கமான, இறுக்கமான, தளராத தழுவல், இருவருக்கும் இனிமையானது.

ஊடல், ஊடலின் எல்லை, தவற்றை உணர்தல், புணர்தல் ஆகியவை, காதலித்து வாழ்க்கையில் இணைந்தவர்கள், பெற்ற சுகங்கள்.

புதிது புதிதாய் அறியும் போதெல்லாம், அறியாமை இருந்தது வெளிப்படுவது போல, சிவந்த இழையைக் கொண்ட இவளிடம், உடல் உறவு கொள்ளும் போதெல்லாம், இந்தச் சுகத்தை, இதற்கு முன் அனுபவிக்காமல் போனோமே, என்று தோன்றுகின்றது.

# 112. நலம் புனைந்துரைத்தல்

*நலம் புனைந்துரைத்தல் = நலம் + புனைந்து + உரைத்தல். சுகத்தை புறத்தால், கற்பனையால் உணர்த்தல்.*

**1111. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்**
**மென்னீரள் யாம்வீழ் பவள்.**

**நல்நீரை! வாழி!-அனிச்சமே!-நின்னினும்**
**மெல் நீரள், யாம் வீழ்பவள்.**

*நன்னீர் = நல் + நீர். நல்ல நீர். நல்ல இயல்பு, குணம்.*

*மென்னீரள் = மெல் + நீர் + அள். மென்மையான இயல்பான குணமுடையவள்.*

*முகர்ந்தாலே வாடிவிடும், நல்ல இயல்பான குணத்தையுடைய, அனிச்ச மலரே, நீ நீண்ட காலம் வாழ்வாயாக! உன்னைவிட மென்மையான இயல்பான குணமுடையவள், நான் படுப்பவள். முகர்தலை விடு, நான் தூரத்தில் இருந்து பார்க்கும்போதே, வாடி விடுகின்றாள் அவள்.*

**1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்**
**பலர்காணும் பூவொக்கு மென்று.**

**மலர் காணின் மையாத்தி-நெஞ்சே!-'இவள் கண்**
**பலர் காணும் பூ ஒக்கும்!' என்று.**

*மையாத்தி = மை + ஆத் + இ. இருள் ஆகி நிலைத்தல். மயக்கம் அடைதல். நினைவை இழத்தல்.*

*ஏதேனும் மலரைக் கண்டால், ஐயோ, இவளுடைய கண்களும், பலரும் காண்கின்ற பூவைப் போல் இருக்கின்றனவே, என்ற நினைவு வந்து, பலரும் இவளுடைய கண்களைப் பார்க்கின்றார்களே என்ற பொறாமையால், அதைத் தடுக்க ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கின்றோமே என்ற ஆற்றாமையால், நெஞ்சம், நினைவை இழக்கின்றது.*

**1113. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்**
**வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.**

**முறி, மேனி; முத்தம், முறுவல்; வெறி, நாற்றம்;**
**வேல், உண்கண்; வேய்த்தோளவட்கு.**

*வேய் = வ் + ஏய். புறமும் அகமும் மிக உயர்ந்து இருத்தல்.*

*ஒடிந்து விடுவது போன்ற மெல்லிய வளையும் உடல், முத்துகளைப் போன்று ஒளிரும் பற்களைக் கொண்ட சிரிப்பு, ஆசையை வெளிப்படுத்தும் உடலின் வாசனை, வேலின் வலிமையையும் தனக்குள் இழுத்துக்*

*கொள்ளும் காந்தப் பார்வையுடைய கண்கள், மிக உயர்ந்து நிற்கும் மார்பகங்கள், ஆகியவற்றைக் கொண்டவள் அவள்.*

**1114. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வோ மென்று.**

**காணின், குவளை, குவிழ்ந்து நிலன் நோக்கும்
'மாணிழை கண் ஒவ்வேம்!' என்று.**

*மாணிழை = ம் + ஆண் + இழை. அமைதி மிக நெருங்கி நிலையாய் ஆழ்ந்து ஐக்கியமாவது. ஆழ்ந்த அமைதி.*

*என்னவளுடைய கண்களை, குவளை மலர் கண்டால், ஆழ்ந்த அமைதியுடைய கண்களுக்கு, இணையாக மாட்டோம் என்று, தோல்வியால் தலை குனியும்.*

**1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.**

**அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள்; நுசுப்பிற்கு
நல்ல படாஅ, பறை.**

*பூக்கால் = பூ + கால். பூ ஊன்றி நிற்க உதவுவது. காம்பு.*

*பெய்தாள் = தூவினாள்.*

*நுசுப்பு = இடை.*

*இறு = முறி. உடை. ஒடி.*

*அனிச்ச மலர்களை, அவற்றின் காம்புகளை நீக்காமல், படுக்கையில் தூவினாள். அவளுடைய மென்மையான இடை, காம்பின் வலிமையால், ஒடிந்து விட்டது. நல்ல செய்தியைப் பரப்பப் போவதில்லை, பறை மேளம். அவள் இறந்து விட்டாள், எனும் தீய செய்தியைத் தான், பறை அறிவிக்கப் போகின்றது.*

*அல்லது*

*அனிச்ச மலர்களை, அவற்றின் காம்புகளை நீக்காமல், சூடிக் கொண்டாள். பாரத்தைத் தாங்க முடியாமல், இடை முறிந்து விட்டது. நல்ல செய்தியைப் பரப்பப் போவதில்லை, பறை மேளம். அவள் இறந்து விட்டாள், எனும் தீய செய்தியைத் தான், பறை அறிவிக்கப் போகின்றது.*

**1116. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.**

**மதியும் மடந்தை முகனும் அறியா,
பதியின் கலங்கிய, மீன்.**

*மதி = ம் + அதி. அமைதியின் மிகை. நிலவு.*

*மடந்தை = மடம் + தை. அசைவற்ற தேகம். அமைதியான உடல்.*

*பதி = ப் + அதி. கொண்டதன் மிகை. ஒளியின் மிகை.*

*மீன் = நட்சத்திரம்.*

*நிலவையும், என்னவளின் அமைதியான முகத்தையும், வேறுபடுத்திப் பார்க்கத் தெரியாமல், ஒளிமிக்க நட்சத்திரமே, தெளிவின்றிக் குழம்புகின்றது.*

*அல்லது*

*நிலவையும், என்னவளின் அமைதியான முகத்தையும், வேறுபடுத்திப் பார்க்கத் தெரியாமல், வானில், தான் நிற்கும் இடம் சரிதானா? இடம் மாறி வந்து விட்டோமா? என்று குழம்பித் தவிக்கின்றது, நட்சத்திரம்.*

*அல்லது*

*நிலவையும், என்னவளின் அமைதியான முகத்தையும், வேறுபடுத்திப் பார்க்கத் தெரியாமல், குளத்தில், குழம்பித் துடித்தது மீன்.*

**1117. அறுவாய் நிறைந்த வளர்மதிக்குப் போல**
**மறுவுண்டோ மாதர் முகத்து.**

**அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப் போல**
**மறு உண்டோ, மாதர் முகத்து!**

*அறு = பிரி. குறை.*

*வாய் = வழி.*

*மறு = ம் + அறு. கொண்டு மூடியதில் பிரிந்து. தனித்து. மாறுபாடு. களங்கம். களங்கம் = கள் + அங்கம். குழப்பமான பகுதி.*

*வடிவிலும், ஒளியிலும் குறைந்தவாறே, கொஞ்சம் கொஞ்சமாய், மீண்டும் நிறைந்து வளரும் நிலவில் தெரியும், களங்கத்தைப் போல, பெண்ணின் முகத்தில், குறையேதும் இல்லையே! முகம் மாற்றமும் இல்லையே! குறைகளற்ற நித்திய நிலவு அவள்!*

**1118. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்**
**காதலை வாழி மதி.**

**மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்**
**காதலை-வாழி, மதி.**

*காதலால், பெண்ணின் முகம் ஒளிவீசுவதைப் போல், நீயும் ஒளிவிட முடியுமானால், அது, சூரியனிடம் நீ கொண்ட காதலால்தான், நிகழ்ந்திருக்க வேண்டும். எனவே, 'காதல் நீடூழி வாழ்க' என, வாழ்த்தி விடு நிலவே!*

**1119. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றன் மதி.**

**மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தி ஆயின்,
பலர் காணத் தோன்றல்!-மதி!**

*மலர் போன்ற கண்களை உடைய, என்னவளின் முகத்தைப் போன்று, நீயும், உன் முகத்தைப் பெற்றுவிட்டால், பலரும் பார்ப்பது போல், தோன்றி விடாதே, நிலவே! தோன்றினால், என்னவளின் பெருமை, குறைந்து விடும்.*

*என்னவளின் அழகிய முகமும், எனக்காக மட்டும்தான்!*

**1120. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.**

**அனிச்சமும் அன்னத்தின் தூவியும், மாதர்
அடிக்கு, நெருஞ்சிப் பழம்.**

*அனிச்சம் = மென்மையான மலர். அன்னம் = ஒரு பறவை.*

*தூவி = காற்றில் பறக்கும் இறகுகள்.*

*மென்மையான அனிச்ச மலரும், மிருதுவான அன்னத்தின் இறகுகளும் கூட, பெண்ணின் பாதத்தை, கூரிய, நீண்ட, உறுதியான முட்களை உடைய, நெருஞ்சிப் பழம் போன்று, குத்தித் துன்புறுத்தும்.*

**நலம் புனைந்துரைத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*முகர்ந்தாலே வாடிவிடும், நல்ல இயல்பான குணத்தையுடைய, அனிச்ச மலரே, நீ நீண்ட காலம் வாழ்வாயாக! உன்னைவிட மென்மையான இயல்பான குணமுடையவள், நான் படுப்பவள். முகர்தலை விடு, நான் தூரத்தில் இருந்து பார்க்கும்போதே, வாடி விடுகின்றாள் அவள்.*

*ஏதேனும் மலரைக் கண்டால், ஐயோ, இவளுடைய கண்களும், பலரும் காண்கின்ற பூவைப் போல் இருக்கின்றனவே, என்ற நினைவு வந்து, பலரும் இவளுடைய கண்களைப் பார்க்கின்றார்களே என்ற பொறாமையால், அதைத் தடுக்க ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கின்றோமே என்ற ஆற்றாமையால், நெஞ்சம், நினைவை இழக்கின்றது.*

*ஒடிந்து விடுவது போன்ற மெல்லிய வளையும் உடல், முத்துகளைப் போன்று ஒளிரும் பற்களைக் கொண்ட சிரிப்பு, ஆசையை வெளிப்படுத்தும் உடலின் வாசனை, வேலின் வலிமையையும் தனக்குள் இழுத்துக் கொள்ளும் காந்தப் பார்வையுடைய கண்கள், மிக உயர்ந்து நிற்கும் மார்பகங்கள், ஆகியவற்றைக் கொண்டவள் அவள்.*

*என்னவளுடைய கண்களை, குவளை மலர் கண்டால், ஆழ்ந்த அமைதியுடைய கண்களுக்கு, இணையாக மாட்டோம் என்று, தோல்வியால் தலை குனியும்.*

அனிச்ச மலர்களை, அவற்றின் காம்புகளை நீக்காமல், படுக்கையில் தூவினாள். அவளுடைய மென்மையான இடை, காம்பின் வலிமையால், ஒடிந்து விட்டது. நல்ல செய்தியைப் பரப்பப் போவதில்லை, பறை மேளம். அவள் இறந்து விட்டாள், எனும் தீய செய்தியைத் தான், பறை அறிவிக்கப் போகின்றது.

நிலவையும், என்னவளின் அமைதியான முகத்தையும், வேறுபடுத்திப் பார்க்கத் தெரியாமல், ஒளிமிக்க நட்சத்திரமே, தெளிவின்றிக் குழம்புகின்றது.

வடிவிலும், ஒளியிலும் குறைந்தவாறே, கொஞ்சம் கொஞ்சமாய், மீண்டும் நிறைந்து வளரும் நிலவில் தெரியும், களங்கத்தைப் போல, பெண்ணின் முகத்தில், குறையேதும் இல்லையே! முகம் மாற்றமும் இல்லையே! குறைகளற்ற நித்திய நிலவு அவள்!

காதலால், பெண்ணின் முகம் ஒளிவீசுவதைப் போல், நீயும் ஒளிவிட முடியுமானால், அது, சூரியனிடம் நீ கொண்ட காதலால்தான், நிகழ்ந்திருக்க வேண்டும். எனவே, 'காதல் நீடூழி வாழ்க' என, வாழ்த்தி விடு நிலவே!

மலர் போன்ற கண்களை உடைய, என்னவளின் முகத்தைப் போன்று, நீயும், உன் முகத்தைப் பெற்றுவிட்டால், பலரும் பார்ப்பது போல், தோன்றி விடாதே, நிலவே! தோன்றினால், என்னவளின் பெருமை, குறைந்து விடும்.

மென்மையான அனிச்ச மலரும், மிருதுவான அன்னத்தின் இறகுகளும் கூட, பெண்ணின் பாதத்தை, கூரிய, நீண்ட, உறுதியான முட்களை உடைய, நெருஞ்சிப் பழம் போன்று, குத்தித் துன்புறுத்தும்.

## 113. காதற் சிறப்பு உரைத்தல்

*காதற் சிறப்பு உரைத்தல் = காதலின் தனித்தன்மையைக் கூறுதல்.*

**1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி**
**வாலெயி றூறிய நீர்.**

**பாலொடு தேன் கலந்தற்றே-பணிமொழி**
**வால் எயிறு ஊறிய நீர்!**

*பணி = ப் + அண் + இ. கொண்டதில் மிக நெருக்கமாய் நிலைத்தல். மனதில் மிக நெருக்கமாய் இருத்தல். அன்பு. காதல்.*

*வால் = தூய்மை*

*எயிறு = எய் + இறு. உயர்ந்து இருந்து பிரிதல். பல் ஈறு.*

*காதல் பேச்சைக் கேட்டுக் கொண்டே, தூய பல் ஈறுகளில் இருந்து சுரக்கும் நீரைப் பருகுவது, பாலில் தேன் கலந்துப் பருகுவது போன்றதாகும்.*

**1122. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன**
**மடந்தையோ டெம்மிடை நட்பு.**

**உடம்பொடு உயிரிடை என்ன, மற்று அன்ன-**
**மடந்தையொடு எம்மிடை நட்பு.**

*உடம்புக்கும் உயிருக்கும் இடையிலான தொடர்பு என்ன? ஒன்று இன்றி மற்றொன்று இருக்காது. அதைப் போன்றதுதான், அமைதியான தேகத்தைக் கொண்டவளுக்கும், எனக்கும் இடையிலான நட்பு. அவளின்றி நானோ, நானின்றி அவளோ வாழ முடியாது.*

**1123. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்**
**திருநுதற் கில்லை யிடம்.**

**கருமணியின் பாவாய்! நீ போதாய்-யாம் வீழும்**
**திருநுதற்கு இல்லை, இடம்!**

*பாவாய் = கருவிழி.*

*போதா = போ + தா. நீ போய், இடம் தா.*

*கண்ணின் கருமணியின் கருவிழியே நீ போய் விடு, உன்னுடைய இடத்தை தந்துவிடு, நான் முகரும் உச்சியை உடையவளுக்கு, முத்தமிடும் நெற்றியை உடையவளுக்கு, நான் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருக்கும் வகையில், வேறு சரியான இடம் இல்லை.*

**1124. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாதல்**
**அதற்கன்ன ணீங்கு மிடத்து.**

**வாழ்தல் உயிர்க்கு அன்னள், ஆயிழை; சாதல்**
**அதற்கு அன்னள், நீங்கும் இடத்து.**

*ஆயிழை = ஆய் + இழை. நெருக்கமானவள்.*

*அவள், என்னுடன் நெருங்கி இருக்கையில், உயிர் பெற்று, வாழ்வது போல் உணர்கின்றேன். அவள், என்னை விட்டு விலகும் போது, உயிர் நீங்கி, செத்தது போல் கிடக்கின்றேன்.*

**1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்**
**ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.**

**உள்ளுவன்மன், யான் மறப்பின்; மறப்பு அறியேன்,**
**ஒள் அமர்க் கண்ணாள் குணம்.**

*மறந்தால், மனத்தில் நான் நினைப்பேன். ஆனால், ஒளிரும் விழிகளுடன், நெஞ்சில் போர் புரிபவளின் குணத்தை, நான்தான் மறந்ததே இல்லையே!*

**1126. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்**
**நுண்ணியரெங் காத லவர்.**

**கண்ணுள்ளின் போகார்; இமைப்பின் பருவரார்;**
**நுண்ணியர் எம் காதலவர்.**

*பருவரார் = பரு + அரார். பரு = ப் + அர் + உ. கொன்டதைப் பிரிந்து வெளிப்படு. உடலில் தனித்துத் தெரிவது. பருவரார் = பருவானவர் அறுபடார்.*

*கண்ணுக்கு உள்ளும் போக மாட்டார். இமைகள் கண்களை வழித்து மூடினால், கருவிழியை ஒட்டி பருவாக இருப்பவர், அறுபட்டும் வெளியே விழ மாட்டார், அவ்வளவு நுண்மையானவர், என் காதலர்.*

**1127. கண்ணுள்ளார் காதலவராகக் கண்ணும்**
**எழுதேங் கரப்பாக் கறிந்து.**

**கண் உள்ளார் காதலவராக, கண்ணும்**
**எழுதேம், கரப்பாக்கு அறிந்து.**

*எழுதேன் = தீட்டேன்.*

*கண்ணில் உள்ளவர் காதலராக இருப்பதால், கண்ணுக்கு, மை தீட்ட மாட்டேன், அவர் மறைந்து விடுவார், என பயந்து!*

**1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வெப்பாக் கறிந்து.**

**நெஞ்சத்தார் காதலவராக, வெய்து உண்டல்
அஞ்சுதும், வேபாக்கு அறிந்து.**

*வெய் = வ் + எய். புறமும் அகமும் உயர்ந்து இருத்தல். சூடு. கூரை.*

*நெஞ்சத்தில் இருப்பவர் காதலராக இருப்பதால், சூடாக சாப்பிடுவதற்குப் பயப்படுகிறேன், அது, அவரைச் சுட்டுவிடும், என பயந்து.*

**1129. இமைப்பிற் கரப்பாக் கறிவலனைத்திற்கே
ஏதில ரென்னுமிவ் வூர்.**

**இமைப்பின், கரப்பாக்கு அறிவல்; அனைத்திற்கே,
ஏதிலர் என்னும், இவ் ஊர்.**

*இமைத்தால் மறைந்து விடுவாரோ என பயப்படுகின்றேன், அதனால், உறக்கமின்றி விழித்துக் கிடக்கின்றேன். இப்படி இருக்க, ஊரோ, எனக்கும் அவருக்கும் எந்த உறவும் இல்லை, என்கின்றது. என்ன வேடிக்கை இது?*

**1130. உவந்துறைவ ருள்ளத்து ளென்றுமி கந்துறைவர்
ஏதில ரென்னுமிவ் வூர்.**

**உவந்து உறைவர், உள்ளத்துள் என்றும்; 'இகந்து உறைவர்;
ஏதிலர்' என்னும், இவ் ஊர்.**

*உவந்து = மனம் விரும்பி.*

*இகந்து = மறந்து. கைவிட்டு.*

*மனம் விரும்பித் தங்குகின்றார், என் உள்ளத்தில் என்றும். அப்படி இருக்க, ஊரோ, அவர் என்னை மறந்துவிட்டு, கைவிட்டு வாழ்கின்றார், இவர்களுக்குள் இனி எந்த உறவும் இல்லை, என்கின்றது.*

**காதற்சிறப்புரைத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*காதல் பேச்சைக் கேட்டுக் கொண்டே, தூய பல் ஈறுகளில் இருந்து சுரக்கும் நீரைப் பருகுவது, பாலில் தேன் கலந்து பருகுவது போன்றதாகும்.*

*உடம்புக்கும் உயிருக்கும் இடையிலான தொடர்பு என்ன? ஒன்று இன்றி மற்றொன்று இருக்காது. அதைப் போன்றதுதான், அமைதியான தேகத்தைக் கொண்டவளுக்கும், எனக்கும் இடையிலான நட்பு. அவளின்றி நானோ, நானின்றி அவளோ வாழ முடியாது.*

*கண்ணின் கருமணியின் கருவிழியே நீ போய் விடு, உன்னுடைய இடத்தை தந்துவிடு, நான் முகரும் உச்சியை உடையவளுக்கு, முத்தமிடும்*

நெற்றியை உடையவளுக்கு, நான் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருக்கும் வகையில், வேறு சரியான இடம் இல்லை.

அவள், என்னுடன் நெருங்கி இருக்கையில், உயிர் பெற்று, வாழ்வது போல் உணர்கின்றேன். அவள், என்னை விட்டு விலகும் போது, உயிர் நீங்கி, செத்தது போல் கிடக்கின்றேன்.

மறந்தால், மனத்தில் நான் நினைப்பேன். ஆனால், ஒளிரும் விழிகளுடன், நெஞ்சில் போர் புரிபவளின் குணத்தை, நான்தான் மறந்ததே இல்லையே!

கண்ணுக்கு உள்ளும் போக மாட்டார். இமைகள் கண்களை வழித்து மூடினால், கருவிழியை ஒட்டிப் பருவாக இருப்பவர், அறுபட்டும் வெளியே விழ மாட்டார், அவ்வளவு நுண்மையானவர், என் காதலர்.

கண்ணில் உள்ளவர் காதலராக இருப்பதால், கண்ணுக்கு, மை தீட்ட மாட்டேன், அவர் மறைந்து விடுவார், என பயந்து!

நெஞ்சத்தில் இருப்பவர் காதலராக இருப்பதால், சூடாகச் சாப்பிடுவதற்குப் பயப்படுகிறேன், அது, அவரைச் சுட்டுவிடும், என பயந்து.

இமைத்தால் மறைந்து விடுவாரோ என பயப்படுகின்றேன், அதனால், உறக்கமின்றி விழித்துக் கிடக்கின்றேன். இப்படி இருக்க, ஊரோ, எனக்கும் அவருக்கும் எந்த உறவும் இல்லை, என்கின்றது. என்ன வேடிக்கை இது?

மனம் விரும்பி தங்குகின்றார், என் உள்ளத்தில் என்றும். அப்படி இருக்க, ஊரோ, அவர் என்னை மறந்துவிட்டு, கைவிட்டு வாழ்கின்றார், இவர்களுக்குள் இனி எந்த உறவும் இல்லை, என்கின்றது.

# 114. நாணுத் துறவுரைத்தல்

*நாணுத் துறவுரைத்தல் = நாணை + துறந்ததை + உரைத்தல். வெட்கம் இழந்து கூறல். வெட்கம் கெட்டு பேசுதல். தன்மானம் இழந்து ஆசையை வெளிப்படுத்தல். சமூக மதிப்பை இழத்தல்.*

**1131. காம முழந்து வருந்தினாற் கேமம்**
**மடல்ல தில்லை வலி.**

**காமம் உழந்து வருந்தினார்க்கு, ஏம**
**மடல் அல்லது இல்லை, வலி.**

*உழந்து = உழ் + அந்து. உள் ஆழம் எல்லை. மிகவும் ஆழ்ந்து. தாங்க முடியாமல்.*

*மடல் = ம் + அடல். கொண்டு மூடியதைக் கொல்லுதல். இரகசியத்தை அழித்தல். மடல் = ம் + அட் + அல். கொண்டு மூடியதை ஒட்டித் தொடர்ந்து அதிர்தல். பனை மர ஓலை.*

*மடல் என்பது, தான் இதுநாள்வரை கள்ளத் தனமாய் ஒருத்தியுடன் கொண்ட உடல் உறவை, வெட்கமில்லாமல், ஊரறிய, உலகறிய வெளிப்படுத்தி, தன்னை அவளுடன், சேர்த்து வைக்க வேண்டுதல்.*

*உடல் ஆசையை, தாங்க முடியாமல் துன்பப்படுபவர்களுக்கு, பாதுகாப்பான ஆயுதம், மடலைத் தவிர, வேறில்லை.*

**1132. நோனா வுடம்பு முயிரு மடலேறும்**
**நாணினை நீக்கி நிறுத்து.**

**நோனா உடம்பும் உயிரும், மடல் ஏறும்-**
**நாணினை நீக்கி நிறுத்து.**

*நோனா = நோலா. நோல் = பொறு. நோன்பு = பொறுத்தல்.*

*உடல் ஆசையைப் பொறுக்க முடியாத உடம்பும், உயிரும், 'மடல் ஏற வேண்டாம்', எனக் கூறும் வெட்கத்தையே, விலக்கி வைக்கின்றன.*

**1133. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்**
**காமுற்றா ரேறு மடல்.**

**நாணொடு நல் ஆண்மை பண்டு உடையேன்;**
**இன்று உடையேன், காமுற்றார் ஏறும் மடல்.**

*தன்னடக்கமுடன் நல்ல ஆளுமையையும், முன்பு கொண்டிருந்தேன். இன்றோ, உடல் ஆசையால் துன்புறுபவர்கள் ஏறும், மடலைக் கொண்டிருக்கிறேன். ஐயோ, வெட்கக்கேடு!*

**1134. காமக் கடும்புன லுய்க்குமென்னாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.**

**காமக் கடும் புனல் உய்க்குமே-நாணொடு
நல் ஆண்மை என்னும் புணை.**

*கடும்புனல் = ஆற்று வெள்ளம்.*

*உய்க்கும் = தப்பச் செய்யும்.*

*புணை = படகு.*

*என் பணிவுடன், நல்ல ஆளுமையும் சேர்ந்து, ஒரு படகானது. அது, காமம் எனும் ஆற்று வெள்ளத்திலிருந்து, என்னைத் தப்பிக்கச் செய்யும்.*

**1135. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழுக்குந் துயர்.**

**தொடலைக் குறுந்தொடி தந்தாள், மடலொடு
மாலை உழக்கும் துயர்.**

*தொடலை = தொட்டு + அலை. கைகளால் இங்கும் அங்கும் தழுவுதல்.*

*குறுந்தொடி = குறும் + தொடி. தொடி = த் + ஒடி. தேகம் வளை. குறுந்தொடி = சிறிய மெல்லிய தேகத்தவள்.*

*உழுக்கு = உழ் + உக்கு. உள் ஆழம் செலுத்து.*

*கைகளால், தொட்டுத் தொட்டுத் தழுவிய, சிறிய மெல்லிய தேகத்தாள், தந்தாள், வெட்கக் கேடான மடலையும், மாலையில் உடல் ஆசையால், உள் ஆழ்த்தும் வேதனையையும்.*

**1136. மடலூர்தல் யாமத்து முள்ளுவன் மன்ற
படலொல்லாப் பேதைக்கென் கண்.**

**மடல் ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற;-
படல் ஒல்லா, பேதைக்கு என் கண்.**

*யாமம் = ய் + ஆம் + அம். நிலையாகும் தன்மை. அமைதி. இரவு.*

*மன்றம் = பொது இடம்.*

*படல் = கதவு*

*ஒல் = முடிவு*

*பேதை = குழம்புபவள். தன் பெற்றோரா அல்லது தான் விரும்புபவனா, யார் என, உறுதியான முடிவு, எடுக்க முடியாதவள்.*

*மடல் ஊர்தலை, இரவிலும் நினைப்பேன். மனக்கதவு மூடாமல், பேதைப் பெண்ணையே, என் கண்கள், பார்த்துக் கொண்டிருக்கின்றன.*

**1137. கடலன்ன காம முழந்து மடலேறாப்**
**பெண்ணிற் பெருந்தக்க தில்.**

**கடல் அன்ன காமம் உழந்தும், மடல் ஏறாப்**
**பெண்ணின் பெருந்தக்கது இல்.**

*கடல் போன்று உடல் ஆசை, ஆழத்தால் அழுத்தம் மிகுந்தும், அலைகள் போல் மீண்டும் மீண்டும் தாக்கியும், தாங்க முடியாது இருப்பினும், மடல் ஏறாத பெண்ணைக் காட்டிலும் பெருமையுடையது எதுவுமில்லை.*

**1138. நிறையரியர் மன்னளிய ரென்னாது காமம்**
**மறையிறந்து மன்று படும்.**

**'நிறை அரியர்; மன் அளியர்' என்னாது, காமம்**
**மறை இறந்து, மன்று படும்.**

*நிறையரியர் = நிறை + அரி + அர். அழகு, உடல் நலம் இழந்தவர்.*

*மன்னளியர் = மன் + அளி + அர். மனத்தைப் பறிகொடுத்தவர்.*

*அழகும், உடல் நலமும் இழந்ததைக் கண்டு, மனத்தைப் பறிகொடுத்து இருக்கின்றார் என்று அறிந்து, கேட்டு, தெரிந்து மணம் முடிக்காததால், காதல், மறைவை அழித்து, பொது சபையில், வெளிப்படுகின்றது.*

**1139. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காமம்**
**மறுகின் மறுகும் மருண்டு.**

**'அறிகிலார், எல்லாரும்' என்றே, என் காமம்**
**மறுகில் மறுகும், மருண்டு.**

*மறுகு = ம் + அற் + உகு. கொண்டு மூடியதை அறுத்துச் சிதறு. மறைவை அம்பலமாக்கு. தெரு.*

*காதலை எல்லாரும் அறியவில்லை, அறிந்திருந்தால், மணம் முடித்து வைத்திருப்பர். எனவே, என் காதல், தெருவில் மயங்கியவாறு, மறைவான உறவை, அம்பலமாக்குகின்றது.*

**1140. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்**
**யாம்பட்ட தாம்படா வாறு.**

**யாம் கண்ணின் காண நகுப, அறிவு இல்லார்-**
**யாம் பட்ட தாம் படாவாறு.**

*மடல் ஏறியதையும், ஊரறிய காதலை வெளிப்படுத்தியதையும் நினைத்து, யாம் கண்ணால் பார்க்கின்றபடி, வெளிப்படையாகச்*

சிரிப்பார்கள், அந்த அறிவில்லாதவர்கள். ஏனெனில், யாம் பட்ட வேதனையை அவர்கள் பட்டிருக்க மாட்டார்கள்.

**நாணுத் துறவுரைத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

உடல் ஆசையை, தாங்க முடியாமல் துன்பப்படுபவர்களுக்கு, பாதுகாப்பான ஆயுதம், மடலைத் தவிர, வேறில்லை.

உடல் ஆசையைப் பொறுக்க முடியாத உடம்பும், உயிரும், 'மடல் ஏற வேண்டாம்', எனக் கூறும் வெட்கத்தையே, விலக்கி வைக்கின்றன.

தன்னடக்கமுடன் நல்ல ஆளுமையையும், முன்பு கொண்டிருந்தேன். இன்றோ, உடல் ஆசையால் துன்புறுபவர்கள் ஏறும், மடலைக் கொண்டிருக்கிறேன். ஐயோ, வெட்கக்கேடு!

என் பணிவுடன், நல்ல ஆளுமையும் சேர்ந்து, ஒரு படகானது. அது, காமம் எனும் ஆற்று வெள்ளத்திலிருந்து, என்னைத் தப்பிக்கச் செய்யும்.

கைகளால், தொட்டுத் தொட்டுத் தழுவிய, சிறிய மெல்லிய தேகத்தாள், தந்தாள், வெட்கக் கேடான மடலையும், மாலையில் உடல் ஆசையால், உள் ஆழ்த்தும் வேதனையையும்.

மடல் ஊர்தலை, இரவிலும் நினைப்பேன். மனக்கதவு மூடாமல், பேதைப் பெண்ணையே, என் கண்கள், பார்த்துக் கொண்டிருக்கின்றன.

கடல் போன்று உடல் ஆசை, ஆழத்தால் அழுத்தம் மிகுந்தும், அலைகள் போல் மீண்டும் மீண்டும் தாக்கியும், தாங்க முடியாது இருப்பினும், மடல் ஏறாத பெண்ணைக் காட்டிலும் பெருமையுடையது எதுவுமில்லை.

அழகும், உடல் நலமும் இழந்ததைக் கண்டு, மனத்தைப் பறிகொடுத்து இருக்கின்றார் என்று அறிந்து, கேட்டு, தெரிந்து மணம் முடிக்காததால், காதல், மறைவை அழித்து, பொது சபையில், வெளிப்படுகின்றது.

காதலை எல்லாரும் அறியவில்லை, அறிந்திருந்தால், மணம் முடித்து வைத்திருப்பர். எனவே, என் காதல், தெருவில் மயங்கியவாறு, மறைவான உறவை, அம்பலமாக்குகின்றது.

மடல் ஏறியதையும், ஊரறிய காதலை வெளிப்படுத்தியதையும் நினைத்து, யாம் கண்ணால் பார்க்கின்றபடி, வெளிப்படையாகச் சிரிப்பார்கள், அந்த அறிவில்லாதவர்கள். ஏனெனில், யாம் பட்ட வேதனையை அவர்கள் பட்டிருக்க மாட்டார்கள்.

# 115. அலரறிவுறுத்தல்

*அலரறிவுறுத்தல் = அலர் + அறிவு + உறுத்தல். அலர் = அல் + அர். அதிர்வை பிரி. வெளிப்பட்டது.*

*அலரறிவுறுத்தல் = வெளிப்படையாய், அறிந்ததை புறங்கூறல். ஊர் புறணி பேசுதல். மறைவான காதல் உறவை அனைவரும் அறியுமாறு பேசுதல்.*

**1141. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்**
**பலரறியார் பாக்கியத் தால்.**

**அலர் எழ, ஆர் உயிர் நிற்கும்; அதனைப்**
**பலர் அறியார், பாக்கியத்தால்.**

*பாக்கியம் = ப் + ஆக்கு + இயம். கொள்வதாய் ஆக்கும் இயல்பு. கருமம் ஆகும் தன்மை. நல்வினையும் தீவினையும்.*

*மறைவான காதல் உறவை, அனைவரும் அறியுமாறு, பேச்சு எழுந்ததால், எங்களுக்கு திருமணமே ஆகாதோ எனப் பயந்து, பிரிகின்றது போல் இருந்த உயிரும், போகாமல் இருக்கின்றது. அலரால் விளைந்த. இந்தப் பயனை, பலரும் அறியார். அதற்குக் காரணம், நான் செய்த நல்வினைதான்.*

**1142. மலரன்ன கண்ணா ளருமை யறியா**
**தலரெமக் கீந்திவ் வூர்.**

**மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது,**
**அலர் எமக்கு ஈந்தது, இவ் ஊர்.**

*மலர்போன்ற கண்களை உடையவளின் அருமை தெரியாமல், மறைவான காதல் உறவைப் பற்றி, அனைவரும் வெளிப்படையாகப் பேசும் நிலைமையை, இந்த ஊர் எமக்குத் தந்து விட்டது.*

**1143. உறாஅதோ வூரறிந்த கவ்வை யதனைப்**
**பெறாஅது பெற்றன்ன நீர்த்து.**

**உறாஅதோ, ஊர் அறிந்த கௌவை? அதனைப்**
**பெறாஅது பெற்றன்ன நீர்த்து.**

*உறாஅதோ = நிகழாதோ உறவு.*

*கவ்வு = க் + அ + உ. பொருண்மை / மெய் உள்ளிருந்து புறம்போதல். பொருளை / மெய்யைப் பற்றி எடுத்துச் செல்லுதல்.*

*கவ்வை = க் + அவ் + ஐ. பொருண்மை / மெய் அகமும் புறமும் ஐக்கியமாதல். கள்ள உறவு. மறைவான காதல் உறவைப் பற்றிய பேச்சு.*

*பெறாஅது = அதைப் பெறாமல்.*

*நீர்த்து = கரைந்து.*

*நிகழாதோ ஊரறிந்த கள்ள உறவு! மறைவான காதல் உறவை, அனைவரும் பேசுதலால், உறவைப் பெறாமலேயே, பெற்றது போன்ற ஒரு சுக உணர்வு, ஏற்படுகின்றது. ஆனால், அந்த உணர்வு, மனத்தில் நிற்காமல், கரைந்து ஓடி விடுகின்றது.*

**1144. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேல்**
**தவ்வென்னுந் தன்மை யழிந்து.**

**கவ்வையான் கவ்விது, காமம்; அது இன்றேல்,**
**தவ்வென்னும், தன்மை இழந்து.**

*கவ்விது = க் + அவ் + இது. கொண்டு நிலைத்தது. பிடித்துக் கொண்டிருக்கிறது.*

*தவ்வு = த் + அவ் + உ. தேகம் புறம் அகம் இன்றி வெளிப்படல். மறைதல்.*

*மறைவான காதல் உறவை, அனைவரும் பேசுவதால், நிலைக்கிறது, காதல். அப்பேச்சு இல்லையென்றால், காதல், அதன் குணம் குறைந்து, மறைந்து விடும்.*

**1145. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்**
**வெளிப்படுந் தோறு மினிது.**

**களித்தொறும் கள் உண்டல் வேட்டற்றால்-காமம்**
**வெளிப்படும்தோறும் இனிது.**

*களித்தொறும் = இன்பமாக இருக்கும் போதெல்லாம். இன்பமாக இருக்க இருக்க.*

*வேட்டல் = விருப்பம்.*

*இன்பமாக இருக்க இருக்க, கள் உண்ணும் விருப்பம், அதிகமாவது போல், என் மறைவான காதல் உறவைப் பற்றி, பிறர் பேசப் பேச, இன்பம் அதிகமாக உள்ளது.*

**1146. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னும்**
**திங்களைப் பாம்புகொண் டற்று.**

**கண்டது மன்னும் ஒரு நாள்; அலர் மன்னும்**
**திங்களைப் பாம்பு கொண்டற்று.**

*அன்னும் = நெருங்கியதும்.*

*பார்த்ததும், நெருங்கியதும் என்னவோ ஒரு நாள்தான். ஆனால்,*

*எங்கள் மறைவான காதல் உறவைப் பற்றிய பேச்சால், நிலவை, சூரிய ஒளியிலிருந்து, பூமி மறைப்பதால், ஏற்படும் கிரகணத்தை, உலகமே ஒரே சமயத்தில், அறிவது போல், எங்கள் உறவு, ஊரில் உள்ள எல்லாருக்கும் தெரிந்து விட்டது.*

**1147. ஊரவர் கவ்வை யெருவாக வன்னைசொல்**
**நீராக நீளுமிந் நோய்.**

**ஊரவர் கௌவை எருவாக, அன்னை சொல் நீராக,**
**நீளும்-இந் நோய்.**

*நீளும் = வளரும்.*

*நோய் = களை.*

*மறைவான காதல் உறவைப் பற்றிய பேச்சு, எருவாக, அன்னையின் சொல், நீராக, வாழ்க்கைப் பயிரில், உடல் ஆசை, களையாக வளரும்.*

**1148. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கவ்வையால்**
**காம நுதுப்பே மெனல்.**

**'நெய்யால் எரி நுதுப்பேம்' என்றற்றால்-'கௌவையர்**
**காமம் நுதுப்பேம் ' எனல்.**

*நுதுப்பு = அவித்தல். நீக்குதல். அழித்தல்.*

*மறைவான காதல் உறவைப் பற்றிய, ஊர் பேச்சால், காதலை அழிப்போம் என்பது, நெய்யால், நெருப்பை அணைப்போம், என்பது போன்றதாகும்.*

**1149. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பொன்றார்**
**பலர்நாண நீத்தக் கடை.**

**அலர் நாண ஒல்வதோ-' அஞ்சல் ஓம்பு!' என்றார்**
**பலர் நாண நீத்தக்கடை?**

*பலரும் சங்கடப்பட, பிரிந்தப்போது, 'யாருக்கும் பயப்படாமல் இருக்கப் பழகு', என்றான். அதற்குப் பிறகும், மறைவான காதல் உறவைப் பற்றிய ஊர் பேச்சுக்கு, வெட்கப்பட முடியுமா, என்ன?*

**1150. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டில்**
**கவ்வை யெடுக்குமிவ் வூர்.**

**தாம் வேண்டின் நல்குவர், காதலர்; யாம் வேண்டும்**
**கௌவை எடுக்கும், இவ் ஊர்.**

*இவ்வூர், நாம் விரும்பும் மறைவான காதல் உறவைப் பற்றியப் பேச்சை, எடுத்தால், காதலர் நம் மீது உண்மையான அன்பு கொண்டவராய் இருந்தால், நமக்கு திருமண வாழ்வை அளிப்பார்.*

**அலரறிவுறுத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*மறைவான காதல் உறவை, அனைவரும் அறியுமாறு, பேச்சு எழுந்ததால், எங்களுக்கு திருமணம் நடக்கலாம் என நினைந்து, பிரிகின்றது போல் இருந்த உயிரும், போகாமல் இருக்கின்றது. அலரால் விளைந்த. இந்தப் பயனை, பலரும் அறியார். அதற்குக் காரணம், நான் செய்த நல்வினைதான்.*

*மலர்போன்ற கண்களை உடையவளின் அருமை தெரியாமல், மறைவான காதல் உறவைப் பற்றி, அனைவரும் வெளிப்படையாகப் பேசும் நிலைமையை, இந்த ஊர் எமக்கு தந்து விட்டது.*

*நிகழாதோ ஊரறிந்த கள்ள உறவு! மறைவான காதல் உறவை, அனைவரும் பேசுதலால், உறவைப் பெறாமலேயே, பெற்றது போன்ற ஒரு சுக உணர்வு, ஏற்படுகின்றது. ஆனால், அந்த உணர்வு, மனத்தில் நிற்காமல், கரைந்து ஓடி விடுகின்றது.*

*மறைவான காதல் உறவை, அனைவரும் பேசுவதால், நிலைக்கிறது, காதல். அப்பேச்சு இல்லையென்றால், காதல், அதன் குணம் குறைந்து, மறைந்து விடும்.*

*இன்பமாக இருக்க இருக்க, கள் உண்ணும் விருப்பம், அதிகமாவது போல், என் மறைவான காதல் உறவைப் பற்றி, பிறர் பேசப் பேச, இன்பம் அதிகமாக உள்ளது.*

*பார்த்ததும், நெருங்கியதும் என்னவோ ஒரு நாள்தான். ஆனால், எங்கள் மறைவான காதல் உறவைப் பற்றிய பேச்சால், நிலவை, சூரிய ஒளியிலிருந்து, பூமி மறைப்பதால், ஏற்படும் கிரகணத்தை, உலகமே ஒரே சமயத்தில், அறிவது போல், எங்கள் உறவு, ஊரில் உள்ள எல்லாருக்கும் தெரிந்து விட்டது.*

*மறைவான காதல் உறவைப் பற்றிய பேச்சு, எருவாக, அன்னையின் சொல், நீராக, வாழ்க்கைப் பயிரில், உடல் ஆசை, களையாக வளரும்.*

*மறைவான காதல் உறவைப் பற்றிய, ஊர் பேச்சால், காதலை அழிப்போம் என்பது, நெய்யால், நெருப்பை அணைப்போம், என்பது போன்றதாகும்.*

*பலரும் சங்கடப்பட, பிரிந்தப்போது, 'யாருக்கும் பயப்படாமல் இருக்கப் பழகு', என்றான். அதற்குப் பிறகும், மறைவான காதல் உறவைப் பற்றிய ஊர் பேச்சுக்கு, வெட்கப்பட முடியுமா, என்ன?*

*இவ்வூர், நாம் விரும்பும் மறைவான காதல் உறவைப் பற்றியப் பேச்சை, எடுத்தால், காதலர் நம் மீது உண்மையான அன்பு கொண்டவராய் இருந்தால், நமக்கு திருமண வாழ்வை அளிப்பார்.*

# கற்பியல்

## 116. பிரிவாற்றாமை

*பிரிவாற்றாமை = பிரிவு + ஆற்றாமை. பிரிவைத் தாங்க முடியாமை.*

**1151. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.**

**செல்லாமை உண்டேல், எனக்கு உரை; மற்று நின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை.**

*வல்வரவு = வல் + வரவு. வலிமையாக வருதல். வளமையாக வருதல். உறுதியாய் வருதல். விரைவாய் வருதல்.*

*என்னைப் பிரிந்து போகப் போவதில்லை என்றால் மட்டும், என்னிடம் வந்து சொல். அதை விட்டு விட்டு, வலிமையுடன் வருவேன், வளமையுடன் வருவேன், உறுதியாய் வருவேன், விரைவில் வருவேன் என்பதை எல்லாம், நீ திரும்பி வரும்போது, யார் யார் உயிரோடு இருப்பார்களோ, அவர்களிடம் போய் சொல்லிக் கொள்.*

**1152. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.**

**இன்கண் உடைத்து அவர் பார்வல், பிரிவு அஞ்சும்
புன்கண் உடைத்தால், புணர்வு.**

*இன்கண் = இனிமையான கண்.*

*உடைத்தவர் = கொண்டவர் / நீக்கியவர். சிதறவிட்டவர்.*

*பார்வல் = பார் + வல். பார் வலிமையாக. பார் உறுதியாக. வலிமையான, உறுதியான பார்வை.*

*புன்கண் = புல் + கண். சிறிய வலிமையற்ற பார்வை / துளை.*

*இனிமையான பார்வையை உடைத்துச் சிதறவிட்டு, அவர் பார்க்கும் வலிமையான, உறுதியான பார்வை, பிரிவை அஞ்சுகின்ற வலிமையற்ற கண்களையுடையவளைச் சந்திக்கின்றது.*

**1153. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.**

**அரிதரோ தேற்றம் அறிவுஉடையார் கண்ணும் பிரிவுஓர்
இடத்து உண்மையான்.**

*அரிதரோ = அரிது + அரோ. கடினம் அல்லவா?*

*தேற்றம் = த் + ஏற்றம். தேகத்தின் உயர்வு. தெளிதல். ஆறுதல். அமைதி.*

*அறிவுடையார் = அறி + உடையார். பிரிவை உடையவர். பிரிந்துச் செல்பவர்.*

*கண் = இடம்*

*பிரிவோரிடம் = பிரிவு + ஓர் + இடம்.*

*உண்மையான் = இருப்பதால்.*

*பிரிந்துச் செல்பவர் மனத்திலும், பிரிவின் துன்பம் ஓர் ஓரத்தில் இருப்பதால், நம்மை ஆறுதல் அடையச் செய்வது, கடினம் அல்லவா?*

**1154. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொல்**
**தேறியார்க் குண்டோ தவறு.**

**அளித்து அஞ்சல் என்று அவர் நீப்பின் தெளித சொல**
**தேறியார்க்கு உண்டோ தவறு.**

*தெளித்த = தெளிவான. ஊடலை விலக்கிய.*

*தேறியார் = நம்பியவர்*

*தலைக்கு பூவைச் சூட்டி, சுகமளித்து, 'பயப்படாதே, நான் போக மாட்டேன்', என்று கூறியவரே பிரிந்தால், ஊடலை விலக்கி, தெளிவாகப் பேசிய பேச்சை, நம்பியவர் மேல் தவறு உண்டா என்ன?*

**1155. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்**
**நீங்கி னரிதாற் புணர்வு.**

**ஓம்பின், அமைந்தார் பிரிவு ஓம்பல்; மற்று அவர்**
**நீங்கின், அரிதால், புணர்வு.**

*ஓம்புதல் = பாதுகாத்தல்.*

*அமைந்தார் = ஏற்றவர். பொருந்தியவர்.*

*என்னை விடு, பாதுகாப்பதாய் இருந்தால், என்னுடன் சேர்ந்தவர் பிரியாமல் இருக்கப் பார். மேலும், அவர் நீங்கி விட்டால், நாங்கள் இணைவது இயலாததாகி விடும்.*

**1156. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்**
**நல்குவ ரென்னு நசை.**

**பிரிவு உரைக்கும் வன்கண்ணர்ஆயின், அரிது, 'அவர்**
**நல்குவர்' என்னும் நசை.**

*வன்கண்ணர் = வல் + கண்ணர். வலிமையான / உறுதியான கண்ணுடையவர்.*

*நசை = ஆசை.*

*பிரிவைச் சொல்பவர், வலிமையான, உறுதியான பார்வையைக் கொண்டிருந்தால், திரும்பி வந்து, சுகம் தருவார் என்று, ஆசைப்பட முடியாது.*

**1157. துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை**
**இறையிறவா நின்ற வளை.**

**துறைவன் துறந்தமை தூற்றாகொல்-முன்கை**
**இறை இறவாநின்ற வளை.**

*துறைவன் = த் + உறைவன். தேகத்தில் தங்குபவன். உடல் சேர்பவன்.*

*துற = த் + உற் + அ. தேகம் புறம் பிரிய.*

*இறை = சிதறு*

*இறவா = பிரியாமல். விழாமல்.*

*என் உடல் சேர்பவன், என்னைப் பிரிந்ததைத் தூற்றுகின்றனவா என்ன, மணிக்கட்டிலிருந்து, முன்கைக்கு நழுவி, கீழே விழாமல் நிற்கும், என் வளையல்கள்?*

**1158. இன்னா தினனில்லூர் வாழ்த லதனினும்**
**இன்னா தினியார்ப் பிரிவு.**

**இன்னாது, இனன் இல் ஊர் வாழ்தல்; அதனினும்**
**இன்னாது, இனியார்ப் பிரிவு.**

*இனன் = இனம்.*

*இல்லூர் = இல் + ஊர். இல்லாத ஊர்.*

*இனியார் = இனியவர். இனிமையானவர்.*

*தன்னுடைய இனம், உறவு இல்லாத ஊரில், வாழ்வது என்பது துன்பமானது. அதைக் காட்டிலும் துன்பமானது, தனக்கு இனிமையானவரைப் பிரிதல் என்பது.*

**1159. தொடிற்சுடின் அல்லது காமநோய் போல**
**விடிற்சுடல் ஆற்றுமோ தீ.**

**தொடின் சுடின் அல்லது, காமநோய் போல,**
**விடின் சுடல் ஆற்றுமோ, தீ?**

*விடின் = நீங்கினால்.*

*தொட்டால், சுடுவது இல்லாமல், காமநோய் போல், நீங்கினால், சுட முடியுமா, நெருப்பால்?*

**1160. அரிதாற்றி யல்லல்நோய் நீக்கிப் பிரிதாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.**

**அரிது ஆற்றி, அல்லல் நோய் நீக்கி, பிரிவு ஆற்றி,
பின் இருந்து, வாழ்வார் பலர்.**

*பல கடினங்களைத் தாங்கி, துன்பம் எனும் நோயை நீக்கி, மற்ற கடமைகளையும் பணிகளையும் செய்து, பின்புலத்தில் இருந்து, பிரிந்து சென்றவன் இறந்தப் பின்னும், வாழ்பவர்கள் பலர்.*

*பிரிவாற்றாமை அதிகாரப் பொருள் தொகுப்பு:*

*என்னைப் பிரிந்துப் போகப் போவதில்லை என்றால் மட்டும், என்னிடம் வந்து சொல். அதை விட்டு விட்டு, வலிமையுடன் வருவேன், வளமையுடன் வருவேன், உறுதியாய் வருவேன், விரைவில் வருவேன் என்பதை எல்லாம், நீ திரும்பி வரும்போது, யார் யார் உயிரோடு இருப்பார்களோ, அவர்களிடம் போய் சொல்லிக் கொள்.*

*இனிமையான பார்வையை உடைத்துச் சிதறவிட்டு, அவர் பார்க்கும் வலிமையான, உறுதியான பார்வை, பிரிவை அஞ்சுகின்ற வலிமையற்ற கண்களையுடையவளைச் சந்திக்கின்றது.*

*பிரிந்துச் செல்பவர் மனத்திலும், பிரிவின் துன்பம் ஓர் ஓரத்தில் இருப்பதால், நம்மை ஆறுதல் அடையச் செய்வது, கடினம் அல்லவா?*

*தலைக்கு பூவைச் சூட்டி, சுகமளித்து, 'பயப்படாதே, நான் போக மாட்டேன்', என்று கூறியவரே பிரிந்தால், ஊடலை விலக்கி, தெளிவாகப் பேசிய பேச்சை, நம்பியவர் மேல் தவறு உண்டா என்ன?*

*என்னை விடு, பாதுகாப்பதாய் இருந்தால், என்னுடன் சேர்ந்தவர் பிரியாமல் இருக்கப் பார். மேலும், அவர் நீங்கி விட்டால், நாங்கள் இணைவது இயலாததாகி விடும்.*

*பிரிவைச் சொல்பவர், வலிமையான, உறுதியான பார்வையைக் கொண்டிருந்தால், திரும்பி வந்து, சுகம் தருவார் என்று, ஆசைப்பட முடியாது. என் உடல் சேர்பவன், என்னைப் பிரிந்ததைத் தூற்றுகின்றனவா என்ன, மணிக்கட்டிலிருந்து, முன்கைக்கு நழுவி, கீழே விழாமல் நிற்கும், என் வளையல்கள்?*

*தன்னுடைய இனம், உறவு இல்லாத ஊரில், வாழ்வது என்பது துன்பமானது. அதைக் காட்டிலும் துன்பமானது, தனக்கு இனிமையானவரைப் பிரிதல் என்பது. தொட்டால், சுடுவது இல்லாமல், காமநோய் போல், நீங்கினால், சுட முடியுமா, நெருப்பால்?*

*பல கடினங்களைத் தாங்கி, துன்பம் எனும் நோயை நீக்கி, மற்ற கடமைகளையும் பணிகளையும் செய்து, பின்புலத்தில் இருந்து, பிரிந்து சென்றவன் இறந்தப் பின்னும், வாழ்பவர்கள் பலர்.*

## 117. படர்மெலிந் திரங்கல்

*படர்மெலிந்திரங்கல் = பசலை படர்ந்து மேனி மெலிந்து புலம்புதல்.*

**1161. மறைப்பேன்மன் யானிதோர் நோயை யிறைப்பவர்க்**
**கூற்றுநீர் போல மிகும்.**

**மறைப்பேன்மன் யான், இஃதோ, நோயை-இறைப்பவர்க்கு**
**ஊற்றுநீர் போல மிகும்.**

*ஆற்று மணலில், தண்ணீர் இறைப்பவர்க்கு, ஊற்று நீர் பெருகுவது போல், உடல் தவிப்பை, பிறரிடம், சொல்லச் சொல்ல, அத்தவிப்பு அதிகமாகும். எனவே, ஒரு வகை நோய் போன்ற, இவ்வுடல் தவிப்பை, வெளியே சொல்லாமல், என் மனத்துக்குள்ளேயே வைத்து மறைப்பேன்.*

**1162. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்**
**குரைத்தலு நாணுத் தரும்.**

**கரத்தலும் ஆற்றேன், இந் நோயை; நோய் செய்தார்க்கு**
**உரைத்தலும் நாணுத் தரும்!**

*நோய் போன்ற உடல் தவிப்பை, என்னால் மறைக்கவும் முடியவில்லை. அந்நோயைத் தந்தவரிடம், சொல்லுவதற்கும், எனக்கு வெட்கமாய் இருக்கின்றது.*

**1163. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்**
**நோனா வுடம்பி னகத்து.**

**காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும், என்**
**நோனா உடம்பினகத்து.**

*தாங்க முடியாத, என் உடம்பின் உள்ளே, தவிப்பும் வெட்கமும், உயிரைக் காவடித் தண்டாக்கி, பாரம் மாறி மாறி, கனக்கும் கூடைகளாக, தொங்கிக் கொண்டிருக்கின்றன.*

**1164. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்தும்**
**ஏமப் புணைமன்னு மில்.**

**காமக் கடல் மன்னும் உண்டே; அது நீந்தும்**
**ஏமப் புணை மன்னும் இல்.**

*கடன் = கடல்*

*மன்னும் = மனதிலும்*

ஏமம் = பாதுகாப்பு

புணை = படகு.

தவிப்பு, கடல்போல், உடலில் மட்டும் இல்லாமல், மனத்திலும் உள்ளது. ஆனால், அதைக் கடக்கும் பாதுகாப்பான படகு, புறத்திலும் இல்லை, மனத்திலும் இல்லை.

**1165. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு**
**நட்பினு ளாற்று பவர்.**

**துப்பின் எவன் ஆவர்மன்கொல்-துயர் வரவு**
**நட்பினுள் ஆற்றுபவர்!**

துப்பு = பகைவர்.

மல் = போர்.

றுயர்வரவு = துயரம்.

நெருங்கிய நட்பினுள்ளேயே இவ்வளவு துயரத்தை உண்டாக்குபவர், போரில் பகைவர்களுக்கு, எவனாக இருப்பார், சொல்? எமனாக!

**1166. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்கால்**
**துன்ப மதனிற் பெரிது.**

**இன்பம் கடல் மற்றுக் காமம்; அஃது அடுங்கால்,**
**துன்பம் அதனின் பெரிது.**

கடன் = கடல்.

இன்பம் கடல் போன்றது, மற்றும், உடல் தவிப்பும், அதைப் போன்றது. ஆனால், உடல் தவிப்பு வரும் போது, ஏற்படும் மனத்துன்பமோ, அக்கடலைவிட பெரியது.

**1167. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்**
**யாமத்தும் யானே உளன்.**

**காமக் கடும் புனல் நீந்திக் கரை காணேன்,**
**யாமத்தும், யானே உளேன்.**

கடும்புனல் = ஆற்று வெள்ளம்.

யாமம் = பொழுது.

உடல் தவிப்பு, எனும் ஆற்று வெள்ளத்தில் இரவெல்லாம் நீந்தியும், என்னால், கரையேற முடியவில்லை. விடியும் காலையிலும், நான் மட்டுமே, தனித்து, தத்தளித்துக் கொண்டு இருக்கின்றேன்.

**1168.** **மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா**
**என்னல்ல தில்லை துணை.**

**மன் உயிர் எல்லாம் துயிற்றி,-அளித்து,இரா!-**
**என் அல்லது இல்லை, துணை.**

*மன்னுயிர் = மனம் கொண்ட உயிர்.*

*துயிற்றி = தூங்க வைத்து.*

*மனம் கொண்ட உயிரை எல்லாம், தூங்க வைத்து, ஆற்றலை அளித்த, இரவுக்கு, என்னைத் தவிர, வேறு தூங்காத, துணை இல்லை.*

**1169.** **கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நாள்**
**நெடிய கழியு மிரா.**

**கொடியார் கொடுமையின் தாம் கொடிய-இந் நாள்**
**நெடிய கழியும் இரா.**

*கொடியவர், என்னை விட்டுப் பிரிந்த, கொடுமையைக் காட்டிலும், மிகவும் மெதுவாக நகரும் இந்த இரவு, கொடுமையானது, துன்பமானது.*

**1170.** **உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்**
**நீந்தல மன்னோவென் கண்.**

**உள்ளம் போன்று உள்வழிச் செல்கிற்பின், வெள்ளநீர்**
**நீந்தல மன்னோ, என் கண்.**

*மனதைப் போன்று, கற்பனையால், அவர் இருக்கும் இடத்திற்கு, நானும் செல்லமுடிந்தால்..., அதன் பின்பு, என் கண்கள், துன்பக் கண்ணீர் வெள்ளத்தை, நீந்த வேண்டியது இல்லை, அல்லவா?*

**படர்மெலிந்திரங்கல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஆற்று மணலில், தண்ணீர் இறைப்பவர்க்கு, ஊற்று நீர் பெருகுவது போல், உடல் தவிப்பை, பிறரிடம், சொல்லச் சொல்ல, அத்தவிப்பு அதிகமாகும். எனவே, ஒரு வகை நோய் போன்ற, இவ்வுடல் தவிப்பை, வெளியே சொல்லாமல், என் மனத்துக்குள்ளேயே வைத்து மறைப்பேன்.*

*நோய் போன்ற உடல் தவிப்பை, என்னால் மறைக்கவும் முடியவில்லை. அந்நோயைத் தந்தவரிடம், சொல்லுவதற்கும், எனக்கு வெட்கமாய் இருக்கின்றது. தாங்க முடியாத, என் உடம்பின் உள்ளே, தவிப்பும் வெட்கமும், உயிரைக் காவடித் தண்டாக்கி, பாரம் மாறி மாறி, கனக்கும் கூடைகளாக, தொங்கிக் கொண்டிருக்கின்றன.*

*தவிப்பு, கடல்போல், உடலில் மட்டும் இல்லாமல், மனத்திலும் உள்ளது. ஆனால், அதைக் கடக்கும் பாதுகாப்பான படகு, புறத்திலும் இல்லை, மனத்திலும் இல்லை.*

*நெருங்கிய நட்பினுள்ளேயே இவ்வளவு துயரத்தை உண்டாக்குபவர், போரில் பகைவர்களுக்கு, எவனாக இருப்பார், சொல்? எமனாக!*

*இன்பம் கடல் போன்றது, மற்றும், உடல் தவிப்பும், அதைப் போன்றது. ஆனால், உடல் தவிப்பு வரும் போது, ஏற்படும் மனத்துன்பமோ, அக்கடலைவிடப் பெரியது.*

*உடல் தவிப்பு, எனும் ஆற்று வெள்ளத்தில் இரவெல்லாம் நீந்தியும், என்னால், கரையேற முடியவில்லை. விடியும் காலையிலும், நான் மட்டுமே, தனித்து, தத்தளித்துக் கொண்டு இருக்கின்றேன்.*

*மனம் கொண்ட உயிரை எல்லாம், தூங்க வைத்து, ஆற்றலை அளித்த, இரவுக்கு, என்னைத் தவிர, வேறு தூங்காத, துணை இல்லை.*

*கொடியவர், என்னை விட்டுப் பிரிந்த, கொடுமையைக் காட்டிலும், மிகவும் மெதுவாக நகரும் இந்த இரவு, கொடுமையானது, துன்பமானது.*

*மனதைப் போன்று, கற்பனையால், அவர் இருக்கும் இடத்திற்கு, நானும் செல்லமுடிந்தால்..., அதன் பின்பு, என் கண்கள், துன்பக் கண்ணீர் வெள்ளத்தை, நீந்த வேண்டியது இல்லை, அல்லவா?*

# 118. கண்விதுப்பழிதல்

*கண்விதுப்பழிதல் = கண் + விதுப்பு + அழிதல். விதுப்பு = வி + துப்பு. துப்பு = த் + உப் + உ. தேகம் புறத்தே கொண்டு வெளிப்படுதல். பகை. துப்பு = த் + உப் + உ. தேகம் உள் கொண்டு உள்ளிருத்தல். உணவு. விதுப்பு = தேகம் கொள்வதற்கு அப்பால். விரைவு. உற்சாகம். பொலிவு.*

*கண்விதுப்பழிதல் = கண்களின் பொலிவும், உற்சாகமும், விரைவும் அழிதல்.*

**1171. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்**
**தாங்காட்ட யாங்கண் டது.**

**கண்தாம் கலுழ்வது எவன்கொலோ-தண்டா நோய்,**
**தாம் காட்ட, யாம் கண்டது!**

*கண்டாங் = கண்தாம். அல்லது இல்லாததைக் கண்டு ஆங்கு.*

*கலுழ் = கல் + உழ். அசையாமல் இருந்து புறம் ஆழ்தல். மௌனமாய்க் கண்ணீர் வடித்தல்.*

*தண்டா = த் + அண் + ட் + ஆ. தேகம் மிகவும் நெருங்கி ஒட்டித் தொடராத.*

*கண்கள், தாமே மௌனமாய்க் கண்ணீர் வடிப்பது, எதற்காக? அக்கண்கள் அவரைக் காட்டியதால்தானே, அவருடன் பழகியதால்தானே, அவர் என்னைப் பிரிந்ததால்தானே, தேகம் மிகவும் நெருங்கி ஒட்டித் தொடராததால், வரும் நோயை, நான் பெற்றேன்.*

*நான் அல்லவா அழ வேண்டும்? குற்ற உணர்ச்சியால், அவை எனக்கு முன்பே அழுகின்றனவா?*

**1172. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்**
**பைத லுழப்ப தெவன்?**

**தெரிந்து உணரா நோக்கிய உண்கண் பரிந்து உணரா,**
**பைதல் உழப்பது எவன்?**

*தெரிந்துணரா = தெரிந்து + உணரா. தெரிந்து உணராமல்.*

*உண்கண் = உயிர் உண்ணும் / மை உண்ணும் கண்.*

*பரிந்துணரா = பரிந்து + உணரா. பகுத்துணராமல். இரக்கம் காட்டாமல்.*

*பைதல் = சிறுவன். சிறுமி.*

*உழப்பு = உழ் + அப் + உ. உள் ஆழம் கொண்டு / கொள்ளாமல் வெளிப்படுதல். குழப்பு.*

*யார், எவர், இங்கேயே இருப்பாரா, புறம் செல்வாரா என்றெதுவும் தெரியாமல், பிரிந்தால், இவள் என்னாவாள், என்று உணராமல், மை உண்டதோடு, அவன் உயிரையும் விழுங்கிய கண்கள், தான் செய்த தவறைப் பகுத்தறியாமல், என் துன்பத்திற்கு இரக்கம் காட்டாமல், சிறுபிள்ளைத்தனமாக, எதையெதையோ சொல்லி, குழப்புவது எதற்காக?*

**1173. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்**
**இதுநகத் தக்க துடைத்து.**

**கதுமெனத் தாம் நோக்கித் தாமே கலுழும்**
**இது நகத்தக்கது உடைத்து.**

*கது = பிளவு. விரிவு.*

*அன்று, அகல விரிந்து, நோக்கிய கண்கள், இன்று, இமைகளை மூடி, மௌனமாய்க் கண்ணீர் வடிப்பது, வேடிக்கையாய், சிரிக்கக்கூடிய ஒன்றாய் இருக்கின்றது.*

**1174. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா**
**உய்வினோ யென்க ணிறுத்து.**

**பெயல் ஆற்றா நரீ உலர்நத், உணகண-உ் யல் ஆறறா்**
**உய்வு இல் நோய் என்கண் நிறுத்து.**

*தப்பிக்க முடியாத நோயை, என் இடத்தில், கண்கள் நிறுத்தியதால், பொழியாமல், நீர் வற்றிய, உயிர் உண்ட கண்கள், தப்பிக்க முடியாது.*

**1175. படலாற்றாப் பைத லுழக்குங் கடலாற்றாக்**
**காமநோய் செய்தவென் கண்.**

**படல் ஆற்றா, பைதல் உழக்கும்-கடல் ஆற்றாக்**
**காமநோய் செய்த என் கண்.**

*படல் = கதவு. இமை.*

*உழக்கு = உழ் + அக் + உ. உள் ஆழம் உயிர்மெய் / பொருண்மையற்று வெளிப்படல். குழப்பு.*

*கடலைவிடப் பெரிய, உடல் தவிப்பு நோயைச் செய்த என் கண்கள், இமைக்கதவுகளை மூடாமல், சிறுபிள்ளைத்தனமாய் குழப்பும்.*

**1176. ஓஒ வினிதே எமக்கிந்நோய் செய்தகண்**
**டாஅ மிடர்ப்பட் டது.**

**ஓ , இனிதே!-எமக்கு இந் நோய் செய்த கண்**
**தாஅம் இதற்பட்டது.**

எனக்கு, இந்த நோயை உண்டாக்கிய, கண்களும் துன்பப்படுவது, மிகவும் இனிமையானதுதான்.

நான் மட்டும், துன்பப்பட்டால் போதுமா? அனைத்திற்கும் காரணமான, என் கண்களும், என்னோடு சேர்ந்து, துன்பப்பட வேண்டாமா?

**1177. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழந்து**
**வேண்டி யவர்க்கண்ட கண்.**

**உழந்து உழந்து உள் நீர் அறுக-விழைந்து இழைந்து**
**வேண்டி அவர்க் கண்ட கண்!**

*உழந்து = உழ் + அந்து. உள் ஆழம் எல்லை.*

*அறுக = அழிக.*

*விரிந்த கண்களால், விரும்பி நோக்கி, வெட்கத்தால் தலைகுனிந்து, தன்னை இழந்து, எனக்கு வேண்டியவரைக் கண்ட, கண்களின் நீளும் உள் ஆழத்தின் எல்லை வரை, சென்று இருக்கின்ற கண்ணீர், அழிந்து போகட்டும்.*

**1178. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்**
**காணா தமையல கண்.**

**பேணாது பெட்டார் உளர்மன்னோ-மற்று அவர்க் காணாது**
**அமைவு இல கண்.**

*பேண் = பழகு.*

*பெட்டார் = நண்பர். காதலர்.*

*மனமே! பழகாமலேயே நண்பர்களாய், சிலர் எப்படித்தான் இருக்கின்றனரோ தெரியவில்லை? என் கண்களோ, அவரைக் காணாமல், அமைதியற்றுத் தவிக்கின்றன.*

**1179. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை**
**ஆரஞ ருற்றன கண்.**

**வாராக்கால், துஞ்சா; வரின், துஞ்சா; ஆயிடை**
**ஆர் அஞர் உற்றன, கண்.**

*ஆயிடை = ஆய் + இடை. இடையில் இருந்து.*

*ஆரஞர் = ஆர் + அஞர். முழுமையான நோய். பிரிந்த நோய்.*

*கண்கள், காதலர் வராத பொழுதும், தூங்காது, வந்த பொழுதும், தூங்காது. இரண்டு பொழுதுக்கும் இடையில், மாறி மாறி இருந்து, வேறுபட்ட தூங்கா நோய்களால், இடையறாது, துன்புற்றன, கண்கள்.*

**1180. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போல்**
**அறைபறை கண்ணா ரகத்து.**

**மறை பெறல் ஊரார்க்கு அரிது அன்றால்-எம்போல்**
**அறை பறை கண்ணார் அகத்து.**

*எம்மைப் போல், அறைகின்ற பறை போன்ற, உள்ளதை உள்ளபடி காட்டும் கண்களை உடையவரிடம் இருந்து, மறைத்து வைத்த செய்தியைப் பெறுவது, ஊரார்க்கு ஒன்றும் கடினமில்லை.*

**கண்விதுப்பழிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*கண்கள், தாமே மௌனமாய் கண்ணீர் வடிப்பது, எதற்காக? அக்கண்கள் அவரைக் காட்டியதால்தானே, அவருடன் பழகியதால்தானே, அவர் என்னைப் பிரிந்ததால்தானே, தேகம் மிகவும் நெருங்கி ஒட்டித் தொடராததால், வரும் நோயை, நான் பெற்றேன்.*

*யார், எவர், இங்கேயே இருப்பாரா, புறம் செல்வாரா என்றெதுவும் தெரியாமல், பிரிந்தால், இவள் என்னாவாள், என்று உணராமல், மை உண்டதோடு, அவன் உயிரையும் விழுங்கிய கண்கள், தான் செய்த தவறைப் பகுத்தறியாமல், என் துன்பத்திற்கு இரக்கம் காட்டாமல், சிறுபிள்ளைத்தனமாக, எதையெதையோ சொல்லி, குழப்புவது எதற்காக?*

*அன்று, அகல விரிந்து, நோக்கிய கண்கள், இன்று, இமைகளை மூடி, மௌனமாய் கண்ணீர் வடிப்பது, வேடிக்கையாய், சிரிக்கக்கூடிய ஒன்றாய் இருக்கின்றது.*

*தப்பிக்க முடியாத நோயை, என் இடத்தில், கண்கள் நிறுத்தியதால், பொழியாமல், நீர் வற்றிய, உயிர் உண்ட கண்கள், தப்பிக்க முடியாது.*

*கடலைவிட பெரிய, உடல் தவிப்பு நோயைச் செய்த என் கண்கள், இமைக்கதவுகளை மூடாமல், சிறுபிள்ளைத்தனமாய் குழப்பும்.*

*எனக்கு, இந்த நோயை உண்டாக்கிய, கண்களும் துன்பப்படுவது, மிகவும் இனிமையானதுதான்.*

*விரிந்த கண்களால், விரும்பி நோக்கி, வெட்கத்தால் தலைகுனிந்து, தன்னை இழந்து, எனக்கு வேண்டியவரைக் கண்ட, கண்களின் நீளும் உள் ஆழத்தின் எல்லை வரை, சென்று இருக்கின்ற கண்ணீர், அழிந்து போகட்டும்.*

*மனமே! பழகாமலேயே நண்பர்களாய், சிலர் எப்படித்தான் இருக்கின்றனரோ தெரியவில்லை? என் கண்களோ, அவரைக் காணாமல், அமைதியற்றுத் தவிக்கின்றன.*

*கண்கள், காதலர் வராத பொழுதும், தூங்காது, வந்த பொழுதும், தூங்காது. இரண்டு பொழுதுக்கும் இடையில், மாறி மாறி இருந்து, வேறுபட்ட தூங்கா நோய்களால், இடையறாது, துன்புற்றன, கண்கள்.*

*எம்மைப் போல், அறைகின்ற பறை போன்ற, உள்ளதை உள்ளபடி காட்டும் கண்களை உடையவரிடம் இருந்து, மறைத்து வைத்த செய்தியைப் பெறுவது, ஊரார்க்கு ஒன்றும் கடினமில்லை.*

## 119. பசப்புறு பருவரல்

*பசப்புறு = பசப்பு + உறு. பசப்பு = ப் + அச் + அப்பு. கொண்டது இயக்கமற்று நீர்மையாதல். உடல் இரத்த ஓட்டமின்றி வெளிறிப் போதல். இரத்த சோகை. உறு = உற் + உ. புறத்தில் அறுந்து வெளிப்படுதல். புறத்திருந்து வந்து இருந்து உள்நுழைதல்.*

*பருவரல் = பரு + வரல். பருவு + அரல். பரு வருதல். பருவு அறுதல். துன்பம். பருவு = ப் + அரு + உ. அழகு.*

*பசப்புறு பருவரல் = இரத்த சோகையால் அழகு அழிதல்.*

*இரத்த சோகையால் வரும் துன்பம்.*

**1181. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பயந்தவென்**
**பண்பியார்க் குரைக்கோ பிற.**

**நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன்; பசந்த என்**
**பண்பு யார்க்கு உரைக்கோ, பிற!**

*நயந்தவர் = நெருங்கி இருந்தவர்.*

*நல்காமை = தரமுடியாமை.*

*நேர்ந்தேன் = ஒப்பினேன்.*

*பயந்த = விளைந்த.*

*என்னை நெருங்கி இருந்தவரிடம், பிரிவதால் ஏற்படும், சுகம் தரமுடியாமையை, ஏற்றுக் கொண்டேன். அப்படி இருக்க, அதன் விளவாய் நிகழ்ந்த பண்பான, உடலின் நிற வேறுபாட்டை, வேறு எவரிடம் போய், நான் சொல்ல முடியும்?*

**1182. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்**
**மேனிமே லூரும் பசப்பு.**

**அவர் தந்தார் என்னும் தகையால் இவர்தந்து, என்**
**மேனிமேல் ஊரும், பசப்பு.**

*இவர் = இ + அர். நிலை பிரிந்து. இங்கும் அங்கும். கண்டபடி. விருப்பப்படி. சுதந்திரம்.*

*ஊர் = பரவு.*

*அவர் தந்தார் என்னும் தைரியத்தில், இங்கும் அங்கும், கண்டபடி, சுதந்திரமாய், என் உடல் மேல் ஓடி விளையாடுகின்றது, இந்த இரத்த சோகை.*

**1183. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா**
**நோயும் பசலையுந் தந்து.**

**சாயலும் நாணும் அவர் கொண்டார்-கைம்மாறா**
**நோயும் பசலையும் தந்து.**

*சாயல் = ச் + ஆய் + அல். இயக்கம் ஆகி அதிர்தல். அழகு. மென்மை. சாயல் = சாய் + அல். சாய்தல். கண், உடல் சாய்தல். தூக்கம். சாயல் = ச் + ஆயல். இயக்கத்தை ஆய்தல். சிந்தித்தல்.*

*என்னுடைய தூக்கத்தையும், வெட்கத்தையும் அவர் வாங்கிக் கொண்டு, அவற்றுக்குப் பதிலாக, உடல் தவிப்பு நோயையும், இரத்த சோகையையும், எனக்கு விற்று விட்டார்.*

**1184. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமால்**
**கள்ளம் பிறவோ பசப்பு.**

**உள்ளுவன்மன் யான்; உரைப்பது அவர்திறமால்;**
**கள்ளம் பிறவோ, பசப்பு.**

*மனத்தில், எப்பொழுதும், அவரைப் பற்றியே, நினைக்கின்றேன். அவருடைய திறமைகளையும், பெருமைகளையும் பற்றியே, பேசுகின்றேன். அப்படி இருந்தும், இந்த உடலில், நிற மாற்றம் வந்தது, மனத்தில் மறைந்திருந்த ஏக்கத்தினாலா அல்லது பிறவேறு காரணத்தினாலா?*

**1185. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்**
**மேனி பசப்பூர் வது.**

**உவக்காண், எம் காதலர் செல்வார்; இவக்காண்,**
**என் மேனி பசப்பு ஊர்வது!**

*உவம் = அங்கே*

*இவம் = இங்கே*

*அங்கே பார், இப்பொழுதுதான், என் காதலர் செல்கிறார். இங்கே பார், அதற்குள், என் உடல் நிறம் மாறுவதை.*

**1186. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்**
**முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.**

**விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல், கொண்கன்**
**முயக்கு அற்றம் பார்க்கும், பசப்பு.**

*விளக்கற்றம் = விளக்கு + அற்றம். விளக்கு அல்லது வெளிச்சம் இல்லாமை.*

*பார் = ப் + ஆர். கொண்டது + ஆதல். நிறை. பரவு. காண். காத்திரு.*

*கொண்கன் = கொள் + க் + அன். கொள்ளும் மெய்யினன். கொண்டவன்.*

*முயக்கற்றம் = முயக்கு + அற்றம். தழுவல் இல்லாமை.*

*விளக்கு அல்லது வெளிச்சம் இல்லாமைக்கு, காத்திருந்து, வெளிச்சம் போனவுடனே, இடத்தை, முழுமையாய் நிறைக்கின்ற, இருளைப் போல், என்னைக் கொண்டவன், தழுவலை விலகுவதற்கு, காத்திருந்து, தழுவல் நீங்கியதும், என் உடலெங்கும் பரவி விடுகின்றது, பசப்பு எனும் உடல் நிற மாற்றம்.*

**1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவில்**
**அள்ளிக்கொள் வற்றே பசப்பு.**

**புல்லிக் கிடந்தேன், புடைபெயர்ந்தேன்; அவ் அளவில்,**
**அள்ளிக்கொள்வற்றே, பசப்பு.**

*புல் = ப் + உல். கொண்டதின் உள் அதிர்தல். புணர்ச்சி. உடல் உறவு.*

*புடை = இடம்.*

*உடல் உறவின் இன்பத்தில், மயங்கிக் கிடந்தேன். ஏனோ, தெரியாத்தனமாய், சற்று இடம் பெயர்ந்தேன், அவ்வளவுதான், அதற்குள், அப்படியே அள்ளிக் கொள்வது போல், என்மேல் பரவியது, பசலை எனும் உடல் நிற மாற்றம்.*

**1188. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்**
**துறந்தா ரவரென்பா ரில்.**

**'பசந்தாள் இவள்' என்பது அல்லால், 'இவளைத்**
**துறந்தார் அவர், என்பார் இல்.**

*இவள், உடல் தவிப்பைப் பொறுக்க முடியாமல், பசலைப் பூத்தாள், உடல் நிறம் மாறினாள், என்று என் மேல் பழி கூறுகின்றார்களே தவிர, அதற்குக் காரணாமான, அவர், இவளைப் பிரிந்து சென்று விட்டார், இவ்வளவு நாளாகியும் திரும்பி வரவில்லை, என்று, அவர் மேல் பழிகூறுபவர்கள், யாருமில்லை.*

**1189. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்**
**நன்னிலை யாவ ரெனின்.**

**பசக்கமன் பட்டாங்கு, என் மேனி-நயப்பித்தார்**
**நல் நிலையர் ஆவர்எனின்!**

*மற் = மன். மனம்.*

*பட்டு = ப் + அட் + உ. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படு.*

*என்னுடன் நெருங்கி இருந்து, பின், என்னைப் பிரிந்து, பசலையைத் தந்தவர், நல்ல நிலையை அடைவார் என்றால், மனம் விரும்பியபடி, என் உடல் எல்லாம், வெளிரிய நிறமாகட்டும்.*

**1190. பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்**
**நல்காமை தூற்றா ரெனின்.**

**பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே-நயப்பித்தார்**
**நல்காமை தூற்றார்எனின்.**

*என்னுடன் நெருங்கி இருந்து, என்னைப் பிரிந்தவர், எனக்குச் சுகத்தைத் தரவில்லை என்று, யாரும் திட்டாமல் இருந்தால் சரி, அது போதும். எனக்கு, பசலை பூத்தவள் என்ற பெயர் வந்தால், பரவாயில்லை, நல்லதுதான்.*

*அவர் மேல், மிகுந்த ஆசை கொண்டவள், என மெய்ப்பிக்க, பசலை, உதவுந்தானே?*

**பசப்புறு பருவரல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*என்னை நெருங்கி இருந்தவரிடம், பிரிவதால் ஏற்படும், சுகம் தரமுடியாமையை, ஏற்றுக் கொண்டேன். அப்படி இருக்க, அதன் விளவாய் நிகழ்ந்த பண்பான, உடலின் நிற வேறுபாட்டை, வேறு எவரிடம் போய், நான் சொல்ல முடியும்?*

*அவர் தந்தார் என்னும் தைரியத்தில், இங்கும் அங்கும், கண்டபடி, சுதந்திரமாய், என் உடல் மேல் ஓடி விளையாடுகின்றது, இந்த இரத்த சோகை.*

*என்னுடைய தூக்கத்தையும், வெட்கத்தையும் அவர் வாங்கிக் கொண்டு, அவற்றுக்குப் பதிலாக, உடல் தவிப்பு நோயையும், இரத்த சோகையையும், எனக்கு விற்று விட்டார்.*

*மனத்தில், எப்பொழுதும், அவரைப் பற்றியே, நினைக்கின்றேன். அவருடைய திறமைகளையும், பெருமைகளையும் பற்றியே, பேசுகின்றேன். அப்படி இருந்தும், இந்த உடலில், நிற மாற்றம் வந்தது, மனத்தில் மறைந்திருந்த ஏக்கத்தினாலா அல்லது பிறவேறு காரணத்தினாலா?*

*அங்கே பார், இப்பொழுதுதான், என் காதலர் செல்கிறார். இங்கே பார், அதற்குள், என் உடல் நிறம் மாறுவதை.*

*விளக்கு அல்லது வெளிச்சம் இல்லாமைக்கு, காத்திருந்து, வெளிச்சம் போனவுடனே, இடத்தை, முழுமையாய் நிறைக்கின்ற, இருளைப் போல், என்னைக் கொண்டவன், தழுவலை விலகுவதற்கு, காத்திருந்து, தழுவல் நீங்கியதும், என் உடலெங்கும் பரவி விடுகின்றது, பசப்பு எனும் உடல் நிற மாற்றம்.*

*உடல் உறவின் இன்பத்தில், மயங்கிக் கிடந்தேன். ஏனோ, தெரியாத்தனமாய், சற்று இடம் பெயர்ந்தேன், அவ்வளவுதான், அதற்குள், அப்படியே அள்ளிக் கொள்வது போல், என்மேல் பரவியது, பசலை எனும் உடல் நிற மாற்றம்.*

*இவள், உடல் தவிப்பைப் பொறுக்க முடியாமல், பசலைப் பூத்தாள், உடல் நிறம் மாறினாள், என்று என் மேல் பழி கூறுகின்றார்களே தவிர, அதற்குக் காரணாமான, அவர், இவளைப் பிரிந்து சென்று விட்டார்,*

இவ்வளவு நாளாகியும் திரும்பி வரவில்லை, என்று, அவர் மேல் பழிகூறுபவர்கள், யாருமில்லை.

என்னுடன் நெருங்கி இருந்து, பின், என்னைப் பிரிந்து, பசலையைத் தந்தவர், நல்ல நிலையை அடைவார் என்றால், மனம் விரும்பியபடி, என் உடல் எல்லாம், வெளிரிய நிறமாகட்டும்.

என்னுடன் நெருங்கி இருந்து, என்னைப் பிரிந்தவர், எனக்குச் சுகத்தைத் தரவில்லை என்று, யாரும் திட்டாமல் இருந்தால் சரி, அது போதும். எனக்கு, பசலை பூத்தவள் என்ற பெயர் வந்தால், பரவாயில்லை, நல்லதுதான்.

## 120. தனிப்படர் மிகுதி

*தனிப்படர் மிகுதி = தனி + படர் + மிகுதி. படர் = ப் + அட் + அர். மனம் ஒட்டித் தொடர்ந்து இருத்தல். எண்ணங்கள் சங்கிலி போல் தொடர்தல்.*

*தனிப்படர் மிகுதி = தனியாக அதிகமாய் நினைத்தல்.*

**1191. தாம்வீழ்வார் தாம்வீழப் பெற்றவர் பெற்றாரே**
**காமத்துக் காழில் கனி.**

**தாம் வீழ்வார் தம் வீழப்பெற்றவர் பெற்றாரே,**
**காமத்துக் காழ் இல் கனி.**

*வீழ்வார் = வ் + ஈழ் + வ் + ஆர். புறம் அகம் ஆழ்ந்து தந்து முழுமையாபவர். உடலையும் மனத்தையும் ஆழ்ந்து அளித்து, முழுமை அடைபவர். காமத்தாலும் அல்லது காதல் உடல் உறவாலும், முழுமை உணர்வை அடையலாம். காதலில் விழுந்தவர். படுப்பவர்.*

*காழில் = காழ் + இல். காழ் = க் + ஆழ். பொருண்மை ஆழத்தில். விதை. கொட்டை. காழில் = கொட்டை இல்லாத. விதை இல்லாத.*

*தான் விரும்புபவரே, தன்னை விரும்புபவர் என்றிருந்தால், அவர்களே, காதல் உடல் சுகத்தில், கொட்டையில்லாத கனி, விதையில்லாத பழம் பெற்றதைப் போல், தயக்கமில்லாத சுகத்தை, முழுமையான சுகத்தை, விரும்பிய சுகத்தை அனுபவிப்பர்.*

**1192. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு**
**வீழ்வா ரளிக்கு மளி.**

**வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால்-வீழ்வார்க்கு**
**வீழ்வார் அளிக்கும் அளி.**

*அளி = காதல். அன்பு. அருள். கருணை. மிகையாய் தருதல்.*

*உலகில் வாழும் உயிர்களுக்கு உள்ள, நீரின் தேவையை, கண்ணோட்டத்தால் அறிந்து, வானம், மழையைப் பொழிவது போல், ஒருவரின் உடல் சுகத் தேவையை, மற்றவர், குறிப்பால் உணர்ந்து, அள்ளித் தருவது, காதல்.*

**1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே**
**வாழுந மென்னுஞ் செருக்கு.**

**வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே,**
**'வாழுநம்' என்னும் செருக்கு.**

*காதலில் விழுபவர் மற்றும் விழப்பட்டவர், ஒருவருக்காக மற்றவர் உடல் உறவுக்கு இணங்குபவர், ஆகிய இருவருக்கும், "நாம் வாழுகிறோம்", என்ற பெருமிதம், கருவம் ஏற்படும்.*

**1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்**
**வீழப் படாஅ ரெனின்.**

**வீழப்படுவார், கெழீஇயிலர், தாம் வீழ்வார்**
**வீழப்படாஅர் எனின்.**

*வீழப்படுவார் = காதலில் விழப்பட்டவர்.*

*கெழீஇயிலர் = கெழி + ஈ + இலர். கெழி = க் + எ + ழ் + இ. மெய் உயர்ந்தும் தாழ்ந்தும் இருத்தல். உடல் உறவு. கெழீஇயிலர் = உடல் உறவு தந்து இல்லாதவர். உடல் உறவு பெற்றும் பெறாதவர்.*

*தாம்வீழ்வார் = உடல் உறவு வேண்டியவர்.*

*உடல் உறவு வேண்டியவரை, காதலுடன் சேரவில்லை என்றால், காதலில் விழச்செய்தவர், உடல் உறவு பெற்றும், பெறாதவர் ஆவார், காதலில் விழப்பட்டவர், உடல் உறவு தந்தும், தராதவர் ஆவார்.*

*அத்தகைய, இயந்திரகதியிலான உடல் உறவால், இருவருக்கும் பயனில்லை, சுகமில்லை.*

**1195. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ**
**தாங்காதல் கொள்ளாக் கடை.**

**நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் செய்பவோ**
**தாம் காதல் கொள்ளாக்கடை!**

*காதலருக்கு உடல் உறவு வேண்டும்போது, நான் காதலிக்காது விட்டால், அவருடைய குறிப்பை அறிந்து இணங்காவிட்டால், எனக்கு, உடல் உறவு வேண்டும்போது, நான் காதலிப்பவர், என்ன செய்வாரோ?*

*என்னைப் புறக்கணிப்பாரோ? மனமின்றி, உடல் உறவில் ஈடுபடுவாரோ? அதனால், எந்த சுகமும், இருவருக்கும் இருக்காதே!*

**1196. ஒருதலையா னின்னாது காமங்காப் போல**
**இருதலை யானு மினிது.**

**ஒருதலையான் இன்னாது, காமம்; காப் போல**
**இருதலையானும் இனிது.**

*கா = க் + ஆ. மெய் ஆதல். பொருண்மை ஆதல். சமமான நிலையான பொருளாதல். நேர்மறை மற்றும் எதிர்மறை சக்திகள் சமமாதல். ஆண்தன்மை மற்றும் பெண்தன்மை சமமாதல். எளிமையாதல். முழுமையாதல். இனிமையாதல்.*

*உடல் உறவு, ஒரு காவடி போன்றது. இருவரின் ஆசை பாரங்களும், சமநிலைப் படுத்தப்பட வேண்டும். ஒருவரின் ஆசை மட்டுமே, நிறைவேற்றப்படுகின்றது என்றால், அது இனிமையானது அல்ல, பாரம் முழுவதும், ஒருவர் மேலேயே தாங்குவது போல், துன்பமானது. இருவர் ஆசைகளும், மாறி மாறி, நிறைவேற்றப்படுமானால், சமநிலை பெற்ற காவடி போல், பாரத்தை இருவரும் உணராமல், வாழ்க்கைப் பயணம், இருவருக்கும் இனிமையானதாகும்.*

**1197. பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்**
**ஒருவர்க ணின்றொழுகு வான்.**

**பருவரலும் பைதலும் காணான்கொல்-காமன்**
**ஒருவர்கண் நின்று ஒழுகுவான்!**

*பிரிந்த, ஒருவர் பக்கம் மட்டும் இருந்து பழகும், காதல் ஆசைத் தெய்வம், பசலையால் அழகு அழிவதையும், கண்கள், தம்வினையால், தூங்காமல் துன்பப் படுவதையும், காண்பதில்லையா என்ன?*

**1198. வீழ்வாரின் னின்சொல் பெறாஅ துலகத்து**
**வாழ்வாரின் வன்கண்ணா ரில்.**

**வீழ்வாரின் இன் சொல் பெறாஅது, உலகத்து**
**வாழ்வாரின் வன்கணார் இல்.**

*வன்கண் = வலிமையான / உறுதியான பார்வை. கல் மனம்.*

*காதலரின், இனிமையான சொல்லைக் கேட்காமல், உலகத்தில் வாழ்பவரைக் காட்டிலும், கல் மனம் படைத்தவர், வேறு யாருமில்லை.*

**1199. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்**
**டிசையு மினிய செவிக்கு.**

**நசைஇயார் நல்கார் எனினும், அவர்மாட்டு**
**இசையும் இனிய, செவிக்கு.**

*நசைஇயார் = நசை + இ + ஆர். ஆசை நிலையாய் உடையவர்.*

*இசை = புகழ்.*

*நம் காதலை, நிலையாய்க் கொண்டவர், பிரிந்ததால், சுகத்தைத் தராமல் போயினும், அவரைப் பற்றிய புகழ் பேச்சும், காதுகளுக்கு இனிமையாகவே இருக்கின்றது.*

**1200. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்**
**செறாஅஅய் வாழியென் நெஞ்சு.**

**உறாஅர்க்கு உறு நோய் உரைப்பாய்-கடலைச்**
**செறாஅஅய்!-வாழிய நெஞ்சு!**

*உறாஅர் = உறா + அர். உறவை அறுத்தவர். பகைவர்.*

*செறாஅஅய் = செறா + அ + அய். தூர்க்காமல் உயிருடன் இருந்து.*

*உறவை அறுத்துப் பகையானவரிடம் போய், இரத்த சோகையால் படும் தொல்லையையும், கண்கள் தூங்காமல் படும் துன்பத்தையும் சொல்கிறாய். பேசாமல், கடலைத் தூர்க்காமல், உயிருடன் இருந்து, நீண்ட காலம் வாழ்வாயாக! என் நெஞ்சே!*

## தனிப்படர்மிகுதி அதிகாரப் பொருள் தொகுப்பு:

*தான் விரும்புபவரே, தன்னை விரும்புபவர் என்றிருந்தால், அவர்களே, காதல் உடல் சுகத்தில், கொட்டையில்லாத கனி, விதையில்லாத பழம் பெற்றதைப் போல், தயக்கமில்லாத சுகத்தை, முழுமையான சுகத்தை, விரும்பிய சுகத்தை அனுபவிப்பர்.*

*உலகில் வாழும் உயிர்களுக்கு உள்ள, நீரின் தேவையை, கண்ணோட்டத்தால் அறிந்து, வானம், மழையைப் பொழிவது போல், ஒருவரின் உடல் சுகத் தேவையை, மற்றவர், குறிப்பால் உணர்ந்து, அள்ளித் தருவது, காதல்.*

*காதலில் விழுபவர் மற்றும் விழப்பட்டவர், ஒருவருக்காக மற்றவர் உடல் உறவுக்கு இணங்குபவர், ஆகிய இருவருக்கும், "நாம் வாழுகிறோம்", என்ற பெருமிதம், கருவம் ஏற்படும்.*

*உடல் உறவு வேண்டியவரை, காதலுடன் சேரவில்லை என்றால், காதலில் விழச் செய்தவர், உடல் உறவு பெற்றும், பெறாதவர் ஆவார், காதலில் விழப்பட்டவர், உடல் உறவு தந்தும், தராதவர் ஆவார்.*

*காதலருக்கு உடல் உறவு வேண்டும்போது, நான் காதலிக்காது விட்டால், அவருடைய குறிப்பை அறிந்து இணங்காவிட்டால், எனக்கு, உடல் உறவு வேண்டும்போது, நான் காதலிப்பவர், என்ன செய்வாரோ?*

*உடல் உறவு, ஒரு காவடி போன்றது. இருவரின் ஆசை பாரங்களும், சமநிலைப் படுத்தப்பட வேண்டும். ஒருவரின் ஆசை மட்டுமே, நிறைவேற்றப்படுகின்றது என்றால், அது இனிமையானது அல்ல, பாரம் முழுவதும், ஒருவர் மேலேயே தாங்குவது போல், துன்பமானது. இருவர் ஆசைகளும், மாறி மாறி, நிறைவேற்றப்படுமானால், சமநிலை பெற்ற காவடி போல், பாரத்தை இருவரும் உணராமல், வாழ்க்கைப் பயணம், இருவருக்கும் இனிமையானதாகும்.*

*பிரிந்த, ஒருவர் பக்கம் மட்டும் இருந்து பழகும், காதல் ஆசைத் தெய்வம், பசலையால் அழகு அழிவதையும், கண்கள், தம்வினையால், தூங்காமல் துன்பப் படுவதையும், காண்பதில்லையா என்ன?*

*காதலரின், இனிமையான சொல்லைக் கேட்காமல், உலகத்தில் வாழ்பவரைக் காட்டிலும், கல் மனம் படைத்தவர், வேறு யாருமில்லை.*

*நம் காதலை, நிலையாய்க் கொண்டவர், பிரிந்ததால், சுகத்தைத்*

தராமல் போயினும், அவரைப் பற்றிய புகழ் பேச்சும், காதுகளுக்கு இனிமையாகவே இருக்கின்றது.

உறவை அறுத்துப் பகையானவரிடம் போய், இரத்த சோகையால் படும் தொல்லையையும், கண்கள் தூங்காமல் படும் துன்பத்தையும் சொல்கிறாய். பேசாமல், கடலைத் தூர்க்காமல், உயிருடன் இருந்து, நீண்ட காலம் வாழ்வாயாக! என் நெஞ்சே!

# 121. நினைந்தவர் புலம்பல்

*நினைந்தவர் = நினைந்து + அவர் + புலம்பல். அவரை நினைத்துப் புலம்புதல்.*

**1201. உள்ளினுந் தீராப் பெருமகிழ் வெய்தலால்**
**கள்ளினுங் காம மினிது.**

**உள்ளினும், தீராப் பெரு மகிழ் செய்தலால்,**
**கள்ளினும் காமம் இனிது.**

*முன்பு அனுபவித்த, உடல் சுகத்தை, நினைத்தாலே, எல்லையில்லா பேரின்பத்தை, அடைய முடிவதால், கள், மதுவைக் காட்டிலும், உடல் சுகமே இனிமையானது.*

**1202. எனைத்தொன் றினிதேகாண் காமத் தாம்வீழ்வார்**
**நினைப்ப வருவதொன் றில்.**

**எனைத்து ஒன்று இனிதேகாண் காமம்; தாம் வீழ்வார்**
**நினைப்ப, வருவது ஒன்று இல்.**

*அனுபவித்த உடல் சுகத்தை, எவ்வளவு நேரம், எத்தனை முறை நினைத்தாலும், இனிமையானதாகவே இருப்பதைப் பார். காதல் சுகத்தில், விழுந்தவர் நினைப்பில், வருவது, ஒரு சுகமான நிகழ்வல்ல, பலப்பல.*

**1203. நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்**
**சினைப்பது போன்று கெடும்.**

**நினைப்பவர் போன்று நினையார்கொல்-தும்மல்**
**சினைப்பது போன்று கெடும்!**

*சினை = ச் + இ + ன் + ஐ. இயக்கம் நிலைத்து நெருங்கி ஐக்கியமாதல். இணைந்துப் பெருகு. உண்டாவது.*

*தும்மல், வருவது போல் இருந்து, வராமல் போனதே! அவரும், என்னை நினைப்பது போல் இருந்து, நினைக்காமல் போய் விட்டாரா, என்ன?*

**1204. யாமு முளங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்**
**தோஓ வுளரே யவர்.**

**யாமும் உளேம்கொல், அவர் நெஞ்சத்து?-எம் நெஞ்சத்து,**
**ஓஒ! உளரே அவர்!**

*ஓவு = சித்திரம்*

*நானும், அவர் நெஞ்சத்தில், இருக்கின்றேனா? என் நெஞ்சத்திலோ, சித்திரம் போல், மறையாமல் இருக்கின்றாரே, அவர்!*

**1205. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எந்நெஞ்சத் தோவா வரல்.**

**தம் நெஞ்சத்து எம்மைக் கடி கொண்டார் நாணார்கொல்-
எம் நெஞ்சத்து ஓவா வரல்?**

*கடிகொள் = பல்லைக் கடித்துக் கோபப்படு.*

*ஓவா = ஓயாமல்.*

*அவருடைய நெஞ்சம் சென்றால், பல்லைக் கடித்துக் கோபித்து விரட்டி விடுகின்றார். ஆனால், என் நெஞ்சிற்குள் மட்டும், ஓயாமல் வருவதற்கு, அவர், வெட்கப்படவே மாட்டாரா, என்ன?*

**1206. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியான்
உற்றநா ளுள்ள வுளேன்.**

**மற்றுயான் என் உளேன் மன்னோ! அவரொடு யான்
உற்ற நாள் உள்ள, உளேன்.**

*மன்னோ = மன் + ஓ. மனமே.*

*ஒடி = ஒட்டி. ஒடு.*

*வேறெப்படி நான் இருக்கின்றேன், மனமே! அவரை ஒட்டி, நான் பெற்ற, சுகமான நாட்களை நினைத்தே, உயிர் வாழ்கிறேன்.*

**1207. மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியேன்
உள்ளினு முள்ளஞ் சுடும்.**

**மறப்பின், எவன் ஆவன் மற்கொல்-மறப்பு அறியேன்,
உள்ளினும் உள்ளம் சுடும்?**

*மற்கொன் = மன் + கொல். மனத்தைக் கொல்லும்.*

*அவரை, நினைத்துக் கொண்டிருக்கும் போதே, உள்ளம் சுடுகின்றதே, மறந்தால், என்ன ஆவேன்? மனத்தைக் கொல்லும் மறதியையும், நான், கற்று அறியவில்லையே.*

*அவரை, நினைத்துக் கொண்டிருக்கும் போதே, உள்ளம் சுடுகின்றதே, மறந்தால், என்ன ஆவேன்? மனத்தைக் கொல்லும் மறதியையும், நான், கற்று அறியவில்லையே.*

**1208. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ**
**காதலர் செய்யுஞ் சிறப்பு.**

**எனைத்து நினைப்பினும் காயார்; அனைத்து அன்றோ,**
**காதலர் செய்யும் சிறப்பு?**

*காயார் = காய் + ஆர். காயின் கசப்பு, புளிப்பால் வரும் வெறுப்பு, கோபம் கொள்பவர்.*

*அவரை, நான் எவ்வளவுதான் நினைத்தாலும், என்னை வெறுத்து, கோபித்துக் கொள்ள மாட்டார், அதுதான், காதலர், எனக்குச் செய்யும், மிகப்பெரிய உபகாரம்.*

*அவரை, நான் எவ்வளவுதான் நினைத்தாலும், என்னை வெறுத்து, கோபித்துக் கொள்ள மாட்டார், அதுதான், காதலர், எனக்குச் செய்யும், மிகப் பெரிய உபகாரம்.*

**1209. விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பார்**
**அளியின்மை யாற்ற நினைந்து.**

**விளியும், என் இன் உயிர்-'வேறு அல்லம்' என்பார்**
**அளி இன்மை ஆற்ற நினைந்து.**

*விளி = அழி.*

*உடல்சுகம் இல்லாமையை பழக்க நினைத்து, அவர், 'உன் இனிமையான உயிர், எனதிலிருந்து வேறல்ல' என்பார். அதைக் கேட்டவுடனே, 'ஓ, இவர் பிரியப் போகிறார்' என்று அஞ்சி, என் உயிர், பிரிந்து விடும்.*

*உடல்சுகம் இல்லாமையை பழக்க நினைத்து, அவர், 'உன் இனிமையான உயிர், எனதிலிருந்து வேறல்ல' என்பார். அதைக் கேட்டவுடனே, 'ஓ, இவர் பிரியப் போகிறார்' என்று அஞ்சி, என் உயிர், பிரிந்து விடும்.*

**1210. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்**
**படாஅதி வாழி மதி.**

**விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்**
**படாஅதி-வாழி மதி!**

*விடாஅது = போகும் எண்ணத்தை விடாமல். பிடிவாதமாய்.*

*படாஅதி = படா + அதி. குறையாத தேகமாய்.*

*போகும் எண்ணத்தை விடாமல், பிடிவாதமாக சென்றவரை, மனத்தாலன்றி, என் கண்ணினால் காண, குறையாத தேகமாய், முழுமையான ஒளியுடன், என்றென்றும் நீ வாழ்க, நிலவே!*

*போகும் எண்ணத்தை விடாமல், பிடிவாதமாக சென்றவரை, மனத்தாலன்றி, என் கண்ணினால் காண, குறையாத தேகமாய், முழுமையான ஒளியுடன், என்றென்றும் நீ வாழ்க, நிலவே!*

நினைந்தவர் புலம்பல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

முன்பு அனுபவித்த, உடல் சுகத்தை, நினைத்தாலே, எல்லையில்லா பேரின்பத்தை, அடைய முடிவதால், கள், மதுவைக் காட்டிலும், உடல் சுகமே இனிமையானது.

அனுபவித்த உடல் சுகத்தை, எவ்வளவு நேரம், எத்தனை முறை நினைத்தாலும், இனிமையானதாகவே இருப்பதைப் பார். காதல் சுகத்தில், விழுந்தவர் நினைப்பில், வருவது, ஒரு சுகமான நிகழ்வல்ல, பலப்பல.

தும்மல், வருவது போல் இருந்து, வராமல் போனதே! அவரும், என்னை நினைப்பது போல் இருந்து, நினைக்காமல் போய் விட்டாரா, என்ன?

நானும், அவர் நெஞ்சத்தில், இருக்கின்றேனா? என் நெஞ்சத்திலோ, சித்திரம் போல், மறையாமல் இருக்கின்றாரே, அவர்!

அவருடைய நெஞ்சம் சென்றால், பல்லைக் கடித்துக் கோபித்து விரட்டி விடுகின்றார். ஆனால், என் நெஞ்சிற்குள் மட்டும், ஓயாமல் வருவதற்கு, அவர், வெட்கப்படவே மாட்டாரா, என்ன?

வேறெப்படி நான் இருக்கின்றேன், மனமே! அவரை ஒட்டி, நான் பெற்ற, சுகமான நாட்களை நினைத்தே, உயிர் வாழ்கிறேன்.

# 122. கனவு நிலையுரைத்தல்

*கனவு நிலையுரைத்தல் = கனவின் நிலைமையைக் கூறுதல்.*

**1211. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.**

**காதலர் தூதொடு வந்த கனவினுக்கு யாது
செய்வேன்கொல், விருந்து!**

*காதலரின் செய்தியுடன் வந்த கனவுக்கு, எதை விருந்தாகப் படைக்கப் போகிறேனோ, தெரியவில்லையே!*

**1212. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.**

**கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின், கலந்தார்க்கு
உயல் உண்மை சாற்றுவேன்மன்.**

*கயல் = கை + அல். கையில் பிடித்தால் நழுவி இல்லாமல் போவது. நிலையற்றது. மீன்.*

*உண் = உள். உள்ள.*

*கலந்தார் = சேர்ந்தவர். காதலர்.*

*உயலுண்மை = உய்யல் + உண்மை. தப்பிக்கும் வழிகள்.*

*மனமே! மீன்போன்று, ஓயாமல் அலைபாய்ந்துக் கொண்டு உள்ள என் கண்களை, நான் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு தூங்கினால், கனவில், என்னுடன் வந்து சேரும் காதலருக்கு, நான் எப்படியெல்லாம் பிரிவுத் துன்பத்திலிருந்து தப்பித்து, உயிருடன் வாழ்ந்துக் கொண்டிருக்கிறேன், என்று சொல்லுவேன்.*

**1213. நனவினா னல்கா தவரைக் கனவினால்
காண்டலி னுண்டென் னுயிர்.**

**நனவினால் நல்காதவரைக் கனவினால்
காண்டலின் உண்டு, என் உயிர்.**

*நனவில் காட்சி தராதவரை, கனவில் காண்பதால்தான், எனது உயிர், இன்னும் ஒட்டிக் கொண்டு இருக்கின்றது.*

**1214. கனவினா லுண்டாகுங் காம நனவினால்
நல்காரை நாடித் தரற்கு.**

**கனவினான் உண்டாகும் காமம்-நனவினான்**
**நல்காரை நாடித் தரற்கு.**

*நனவில் சுகத்தைத் தராதவரை, தேடிக் கண்டுபிடித்து, சுகத்தைத் தரவைப்பதற்கு, உடல் ஆசை, என் கனவில், உருவாகும்.*

**1215. நனவினாற் கண்டதூ மாங்கே கனவுந்தான்**
**கண்ட பொழுதே யினிது.**

**நனவினால் கண்டதூஉம், ஆங்கே, கனவும்தான்**
**கண்ட பொழுதே இனிது.**

*ஆங்கே = அப்படியே*

*நனவில் அனுபவித்ததும், அப்படியே, அது கனவானதும், கண்டால் தான் இனிமையானது. நனவிலும், அனுபவிக்க, அவரில்லை. தூக்கமின்மையால், கனவும், வரவில்லை.*

**1216. நனவென வொன்றில்லை யாயிற் கனவினால்**
**காதலர் நீங்க லரிது.**

**நனவு என ஒன்று இல்லை ஆயின், கனவினால்**
**காதலர் நீங்கலர்மன்.**

*நனவு, என ஒன்று, இல்லாமல் இருந்தால், கனவால், காதலரைப் பிரிவது என்பது, நடக்கவே நடக்காது.*

**1217. நனவினா நல்காக் கொடியர் கனவினான்**
**என்னெம்மைப் பீழிப் பது.**

**நனவினால் நல்காக் கொடியார் கனவினால்,**
**என், எம்மைப் பீழிப்பது?**

*பீழி = ப் + ஈழ். கொண்டதைக் தருவது கீழே.*

*நனவில், சுகத்தைத் தராத கொடுமையாளர், கனவில் மட்டும் வந்து, எதற்கு என்னை, பிழிந்தெடுப்பது?*

**1218. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்**
**நெஞ்சத்து ளாவர் விரைந்து.**

**துஞ்சுங்கால் தோள் மேலர் ஆகி, விழிக்குங்கால்**
**நெஞ்சத்தர் ஆவர், விரைந்து.**

*நான் தூங்கும்போது, என் தோள்மேல் படுத்திருந்து, நான் விழிக்கும்போது, வேகமாக ஓடிவந்து, என் நெஞ்சுக்குள், புகுந்து கொள்கிறார்.*

**1219. நனவினா னல்காரை நோவர் கனவினால்**
**காதலர்க் காணா தவர்.**
**நனவினால் நல்காரை நோவர்-கனவினால்**
**காதலர்க் காணாதவர்.**

*நனவில், எனக்குச் சுகத்தைத் தராதவரை, ஊரார் திட்டுவர். அவர்கள், தம் கனவில், என் காதலரைக் காணாதவர்கள்.*

**1220. நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினால்**
**காணார்கொ லிவ்வூ ரார்.**
**நனவினால், நம் நீத்தார் என்பர்; கனவினால்**
**காணார்கொல், இவ் ஊரவர்!.**

*நனவில், காதலர் என்னை, விட்டு விட்டுப் போய்விட்டார், என்பார்கள். ஆமாம், தம் கனவில், என் காதலரை, காணவே மாட்டார்களா என்ன, இந்த ஊர்க்காரர்கள்?*

### கனவு நிலையுரைத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:

*காதலரின் செய்தியுடன் வந்த கனவுக்கு, எதை விருந்தாகப் படைக்கப் போகிறேனோ, தெரியவில்லையே!*

*மனமே! மீன்போன்று, ஓயாமல் அலைபாய்ந்து கொண்டு உள்ள என் கண்களை, நான் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு தூங்கினால், கனவில், என்னுடன் வந்து சேரும் காதலருக்கு, நான் எப்படியெல்லாம் பிரிவு துன்பத்திலிருந்து தப்பித்து, உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கிறேன், என்று சொல்லுவேன்.*

*நனவில் காட்சி தராதவரை, கனவில் காண்பதால்தான், எனது உயிர், இன்னும் ஒட்டிக் கொண்டு இருக்கின்றது.*

*நனவில் சுகத்தைத் தராதவரை, தேடிக் கண்டுபிடித்து, சுகத்தைத் தரவைப்பதற்கு, உடல் ஆசை, என் கனவில், உருவாகும்.*

*நனவில் அனுபவித்ததும், அப்படியே, அது கனவானதும், கண்டால் தான் இனிமையானது. நனவிலும், அனுபவிக்க, அவரில்லை. தூக்கமின்மையால், கனவும், வரவில்லை.*

*நனவு, என ஒன்று, இல்லாமல் இருந்தால், கனவால், காதலரைப் பிரிவது என்பது, நடக்கவே நடக்காது.*

*நனவில், சுகத்தைத் தராத கொடுமையாளர், கனவில் மட்டும் வந்து, எதற்கு என்னை, பிழிந்தெடுப்பது?*

நான் தூங்கும்போது, என் தோள்மேல் படுத்திருந்து, நான் விழிக்கும்போது, வேகமாக ஓடி வந்து, என் நெஞ்சுக்குள், புகுந்துக் கொள்கிறார்.

நனவில், எனக்கு சுகத்தைத் தராதவரை, ஊரார் திட்டுவர். அவர்கள், தம் கனவில், என் காதலரைக் காணாதவர்கள்.

நனவில், காதலர் என்னை, விட்டு விட்டுப் போய்விட்டார், என்பார்கள். ஆமாம், தம் கனவில், என் காதலரை, காணவே மாட்டார்களா என்ன, இந்த ஊர்க்காரர்கள்?

## 123. பொழுது கண்டிரங்கல்

*பொழுது கண்டிரங்கல் = பொழுது + கண்டு + இரங்கல். பொழுது கண்டு வருந்துதல்.*

**1221. மாலைநீ யல்லை மணந்தா ருயிருண்ணும்**
**வேலைநீ வாழி பொழுது.**

**மாலையோ அல்லை; மணந்தார் உயிர் உண்ணும்**
**வேலை நீ;-வாழி, பொழுது!**

*மாலை = மென்மையான மலரணி. பூமாலை.*

*மணந்தார் = மணம் + த் + ஆர். கொண்டு மூடி மிக நெருங்கி இருந்து தேகத்தால் பிரிந்தவர். இணைந்துப் பிரிந்தவர்.*

*வேலை = வேல் + அய். வேலாக இருக்கிறாய். கூர்மையான வேல்.*

*வாழி பொழுது = வாழ்ந்து விடு இந்த பொழுது மட்டும்.*

*நீ, மென்மையாக அணியும், பூமாலை அல்ல, இணைந்துப் பிரிந்தவர்களின், உயிரைக் குடிக்கும், கூர்மையான வேல். நீ, வாழ்ந்து விட்டுப் போ, இந்தப் பொழுது மட்டும்!*

**1222. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்**
**வன்கண்ண தோநின் றுணை.**

**புன்கண்ணை-வாழி, மருள் மாலை!-எம் கேள்போல்**
**வன்கண்ணதோ, நின் துணை?**

*புன்கண்ணை = புல் + கண் + ஐ. வலிவற்ற பார்வை. மெல்லிய மனம்.*

*மருண்மாலை = மருள் + மாலை. மயங்கும் மாலை.*

*கேள் = க் + ஏள். மெய் மிக உயர்ந்து மிகையாதல். இணை. நட்பு.*

*வன்கண் = வல் + கண். வலிமையான பார்வை. கல் மனம்.*

*என்னைப் போல், மெல்லிய மனமுடைய, மயங்கும் மாலையே, நீண்ட காலம் நீ வாழ்வாயாக! என் இணைபோல், உன்னுடைய துணையும், கல் மனம் படைத்ததா?*

**1223. பனியரும்பிப் பைதல் கொள்மாலை துனியரும்பித்**
**துன்பம் வளர வரும்.**

**பனி அரும்பிப் பைதல் கொள் மாலை, துனி அரும்பித்**
**துன்பம் வளர, வரும்.**

*பைதல் = குளிர்ச்சி.*

*துனி = துளி*

*பனித்துளிகளால் குளிர்ச்சி அடையும் மாலைப் பொழுது, கண்ணீர்த்துளிகளால், என் துன்பம் மிகும்போது, என்னருகில் வரும்.*

**1224. காதல ரில்வழி மாலை கொலைக்களத்**
**தேதிலர் போல வரும்.**

**காதலர் இல் வழி, மாலை, கொலைக்களத்து**
**ஏதிலர் போல, வரும்.**

*இல்வழி = இல்லாத காலம், சமயம்.*

*ஏதிலர் = ஏதும் + இலர். பகைவர்.*

*காதலர் இல்லாத சமயம் பார்த்து, கொலைக்களத்துப் பகைவர் போல, மாலை, மிகவும் தைரியமாக, இரக்கமின்றித் துன்புறுத்த வரும்.*

**1225. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்**
**மாலைக்குச் செய்த பகை.**

**காலைக்குச் செய்த நன்று என்கொல்? எவன்கொல், யான்**
**மாலைக்குச் செய்த பகை?**

*என் = என்ன*

*எவன் = எப்படி. எதற்கு.*

*துன்பம் தருகின்ற இரவுப் பொழுதுக்கு ஒரு முடிவு தந்து, அதைத் தவிர்க்க உதவுகின்ற காலைக்கு, நான் செய்த நன்மை என்ன? மாலைக்கு, நான் எப்படி, எதற்கு தீமை செய்தேன்?*

**1226. மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத**
**காலை யறிந்த திலேன்.**

**மாலை நோய் செய்தல், மணந்தார் அகலாத**
**காலை அறிந்ததிலேன்.**

*செய்தன் = செய்தல்.*

*காலை = சமயம். காலம்.*

*மாலை, காமம் எனும் உடல் தவிப்பு நோயைத் தந்து, துன்புறுத்தும் என்பதை, என்னுடன் நெருங்கியவர், என்னைப் பிரியாத சமயத்தில், நான் அறிந்ததில்லையே!*

**1227. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி**
**மாலை மலருமிந் நோய்.**

**காலை அரும்பி, பகல் எல்லாம் போது ஆகி,**
**மாலை மலரும்-இந் நோய்.**

*போது = மொட்டு.*

*காலையில் அரும்பாகி, பகல் முழுதும் மொட்டாகி, மாலையில் மலரும், இந்தக் காமம் எனும், உடல் தவிப்பு நோய்.*

**1228. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்**
**குழல்போலுங் கொல்லும் படை.**

**அழல் போலும் மாலைக்குத் தூது ஆகி, ஆயன்**
**குழல்போலும் கொல்லும் படை.**

*தீக்கொழுந்து போன்று வரும் மாலைக்கு, தூதுவன் ஆனான், வீட்டிற்கு மாடுகளை ஓட்டி வரும், இடையன். அவனுடைய குழலோசை போல், தூரத்திலிருந்து, நெருங்கி வருகின்றது, என்னைக் கொல்லும், காமம் எனும் படை.*

**1229. பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு**
**மாலை படர்தரும் போழ்து.**

**பதி மருண்டு, பைதல் உழக்கும்-மதி மருண்டு,**
**மாலை படர்தரும் போழ்து.**

*பதி = பூமி*

*மதி = நிலவு*

*நிலவு மயங்கிய மாலை, படர்ந்து வரும் போது, பூமியே மயங்கி, குளிரில், காம நோயில், துன்புறும்.*

**1230. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை**
**மாயுமென் மாயா வுயிர்.**

**பொருள்மாலையாளரை உள்ளி, மருள் மாலை**
**மாயும், என் மாயா உயிர்.**

*பொருண்மாலை = பொருள் + மாலை. பொருள் ஈட்டலில் வெற்றி.*

*மருண்மாலை = மருள் + மாலை. மயங்கும் மாலை.*

*செல்வம் ஈட்டி, வெற்றியுடன் திரும்புவார், என்று நினைத்து, மாயாமல் இருக்கும் என் உயிர், மயங்கும் மாலையில், காமம் எனும் உடல் தவிப்பு நோயைத் தாங்க முடியாமல், மாய்ந்து விடும்.*

**பொழுது கண்டிரங்கல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*நீ, மென்மையாக அணியும், பூமாலை அல்ல, இணைந்துப் பிரிந்தவர்களின், உயிரைக் குடிக்கும், கூர்மையான வேல். நீ, வாழ்ந்து விட்டுப் போ, இந்தப் பொழுது மட்டும்!*

*என்னைப் போல், மெல்லிய மனமுடைய, மயங்கும் மாலையே, நீண்ட காலம் நீ வாழ்வாயாக! என் இணைபோல், உன்னுடைய துணையும், கல் மனம் படைத்ததா?*

*பனித்துளிகளால் குளிர்ச்சி அடையும் மாலைப் பொழுது, கண்ணீர்த்துளிகளால், என் துன்பம் மிகும்போது, என்னருகில் வரும்.*

*காதலர் இல்லாத சமயம் பார்த்து, கொலைக்களத்துப் பகைவர் போல, மாலை, மிகவும் தைரியமாக, இரக்கமின்றித் துன்புறுத்த வரும்.*

*துன்பம் தருகின்ற இரவுப் பொழுதுக்கு ஒரு முடிவு தந்து, அதைத் தவிர்க்க உதவுகின்ற காலைக்கு, நான் செய்த நன்மை என்ன? மாலைக்கு, நான் எப்படி, எதற்கு தீமை செய்தேன்?*

*மாலை, காமம் எனும் உடல் தவிப்பு நோயைத் தந்து, துன்புறுத்தும் என்பதை, என்னுடன் நெருங்கியவர், என்னைப் பிரியாத சமயத்தில், நான் அறிந்ததில்லையே!*

*காலையில் அரும்பாகி, பகல் முழுதும் மொட்டாகி, மாலையில் மலரும், இந்தக் காமம் எனும், உடல் தவிப்பு நோய்.*

*தீக்கொழுந்து போன்று வரும் மாலைக்கு, தூதுவன் ஆனான், வீட்டிற்கு மாடுகளை ஓட்டி வரும், இடையன். அவனுடைய குழலோசை போல், தூரத்திலிருந்து, நெருங்கி வருகின்றது, என்னைக் கொல்லும், காமம் எனும் படை.*

*நிலவு மயங்கிய மாலை, படர்ந்து வரும் போது, பூமியே மயங்கி, குளிரில், காம நோயில், துன்புறும்.*

*செல்வம் ஈட்டி, வெற்றியுடன் திரும்புவார், என்று நினைத்து, மாயாமல் இருக்கும் என் உயிர், மயங்கும் மாலையில், காமம் எனும் உடல் தவிப்பு நோயைத் தாங்க முடியாமல், மாய்ந்து விடும்.*

# 124. உறுப்பு நலனழிதல்

*உறுப்பு நலனழிதல் = உடல் உறுப்புகளின் வலிமை குன்றுதல்.*

**1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி**
**நறுமலர் நாணின கண்.**

**சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி,**
**நறு மலர் நாணின, கண்.**

*சிறுமை = சிறு + மை. குறுகுந் தன்மை.*

*ஒழிய = விட்டு விட்டு.*

*சேண் = ச் + ஏண். இயக்கத்தில் மிக உயர்ந்து நெருங்கி. உயரம். தூரம்.*

*நறு = ன் + அறு. நெருக்கத்தைப் பிரி. வாசனையைப் பரப்பு.*

*மனம் குறுகுதலை, என்னிடம் விட்டு விட்டு, பிரிந்து, தூரச் சென்றவரை நினைத்து, வாசனைப் பரப்பும் மலர்முன், என் கண்கள், அவமானத்தால், கவிழ்கின்றன.*

*முன்பொரு நாள், நான் என் காதலருடன் சேர்ந்திருந்தச் சமயம், என்னுடைய விரிந்த, ஒளிவீசிய, சிரித்த கண்களைக் கண்டு, இத்தகைய மலர்கள், தம் இயலாமையைக் கண்டு, தலைசாய்ந்தன. அன்று, நான் பெருமிதம் கொண்டிருந்தேன். இன்று...*

**1232. நயந்தவர்க்கு நல்காமை சொல்லுவ போலும்**
**பசந்து பனிவாருங் கண்.**

**நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும் -**
**பசந்து பனி வாரும் கண்.**

*பனிவார் = பனி பொழி.*

*நெருங்கியவர்க்கு, அவர் சுகத்தைத் தராததை, குற்றம் சொல்லுவது போல் இருக்கின்றன, வெளிறி, கண்ணீரை, பனியைப் போல் பொழியும், கண்கள்.*

**1233. தணந்தமை சால வறிவிப்ப போலும்**
**மணந்தநாள் வீங்கிய தோள்.**

**தணந்தமை சால அறிவிப்ப போலும்-**
**மணந்த நாள் வீங்கிய தோள்.**

*தணந்தமை = தணந்து + அமை. தணந்து = தண் + அந்து. குளிர்வின் எல்லை. தணந்தமை = மிகுந்த குளிர்ச்சி பெறுதல்.*

*தணந்தமை = த் + அண் + அந்து + அமை. தேகம் மிகநெருங்கி எல்லையில் நிற்றல். மிகவும் சுருங்கிப் போதல்.*

*சால = மிகையாக. வெகுவாக.*

*மணம் = ம் + அண் + அம். கொண்டு மூடி மிக நெருங்கும் தன்மை. சேர்தல்.*

*வீங்கிய = கைகளாலும், வாயாலும், உள்காயம் பட்டு, பருத்த.*

*தோள் = மார்பகங்கள்.*

*இன்று, மிகுந்த குளிர்ச்சியால், சுருங்கிப் போனவை, முன்பு, சேர்ந்திருந்த நாட்களில், பூரித்தத் தோள்களை, வெகுவாக நினைவூட்டுவது போல், இருக்கின்றன.*

**1234. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்**
**தொல்கவின் வாடிய தோள்.**

**பணை நீங்கிப் பைந் தொடி சோரும்-துணை நீங்கித்**
**தொல் கவின் வாடிய தோள்.**

*பணை = ப் + அண் + அய். கொண்டது மிக நெருங்கி இருத்தல். பெருத்து இருத்தல். நெருக்கம். இறுக்கம். திண்மை.*

*பைந்தொடி = பை + தொடி. பசும்பொன் வளையல். உடலின் வளையும் இடை.*

*சோர் = தளர்.*

*தொல்கவின் = பழைய அழகு. சேர்வதற்கு முன்பிருந்த அழகு.*

*துணை பிரிந்ததால், சேர்வதற்கு முன்பிருந்த அழகும் குன்றிய தோள்களைக் கொண்டவளின், கைகளின் பெருக்கமும் போய்விட, பசும்பொன் வளையல், கழலும்.*

**1235. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு**
**தொல்கவின் வாடிய தோள்.**

**கொடியார் கொடுமை உரைக்கும்-தொடியொடு**
**தொல் கவின் வாடிய தோள்.**

*தளர்ந்த இடுப்புடன், பழைய அழகும் குன்றிய தோள்கள் சேர்ந்து, பிரிந்த கொடியவரின், கொடுமையைச் சொல்லும்.*

**1236. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்**
**கொடிய ரெனக்கூற னொந்து.**

**தொடியொடு தோள் நெகிழ நோவல்-அவரை,**
**'கொடியர்' எனக் கூறல் நொந்து.**

*நோவல் = வலித்தல்*

*அவரைக் கொடியவர் என, நீ திட்டுவதைக் கேட்டு, என் மனம் நொந்து, இடுப்புடன் மார்பகங்கள் குழைய, இளக, வலிக்கின்றது.*

**1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்**
**வாடுதோட் பூச லுரைத்து.**

**பாடு பெறுதியோ-நெஞ்சே!-கொடியார்க்கு என்**
**வாடு தோள் பூசல் உரைத்து?**

*பாடு = வேலை. கடமை. ஊதியம். பாராட்டு. பரிசு. பாடல்.*

*பெறுதியோ = பெறமாட்டாயோ*

*சேர்ந்து பிரிந்த கொடியவர்க்கு, என் குன்றிய தோள்களுக்கு இடையிலான, 'யார், அதிகம் சிறுத்தது?', 'யாருக்கு, காதலர் மேல், அதிகம் அன்பு, உள்ளது?', போன்ற, சண்டையைக் கூறி, அவரிடமிருந்து பரிசு, பாராட்டைப் பெறமாட்டாயோ?, என் நெஞ்சே!*

**1238. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது**
**பைந்தொடிப் பேதை நுதல்.**

**முயங்கிய கைகளை ஊக்கப், பசந்தது-**
**பைந் தொடிப் பேதை நுதல்!**

*முயங்கு = முயல் + க் + உ. முயல் உடல் வெளிப்படுவது. இங்கும் அங்கும் ஓடுவது. அலைபாய். சீண்டு. தழுவு.*

*இங்கும் அங்கும் ஓடி, சீண்டித் தழுவும் கைகளை, தலைவன் நிறுத்தி விலக்கினால், 'தவறு இழைத்தோமா? தன்னைப் பிடிக்கவில்லையோ? என்று, பசும்பொன் வளையல் அணிந்த, அனுபவமில்லாப் பெண்ணின், நெற்றி வியர்த்து, வெளிறியது.*

**1239. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற**
**பேதை பெருமழைக் கண்.**

**முயக்கிடைத் தண் வளி போழ, பசப்பு உற்ற-**
**பேதை பெரு மழைக்கண்.**

*முயக்கு = தழுவல்.*

*தண்வளி = தண் + வளி. குளிர்ந்த காற்று.*

*இருவரின், வெப்பமான தழுவலுக்கு இடையில், குளிர்ந்த காற்று, போனதை உணர்ந்து, 'தன்னைப் பிடிக்கவில்லையோ?', என்று, வெளிறிய அனுபவமில்லாத பெண்ணின் கண்கள், கண்ணீரை, பெருமழையாய்ப் பொழிந்தன.*

**1240. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே**
**ஒண்ணுதல் செய்தது கண்டு.**

**கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே-**
**ஒள் நுதல் செய்தது கண்டு.**

*ஒண்ணுதல் = ஒள் + நுதல். ஒளிரும் நெற்றி.*

*கண்ணின் நிறமாற்றமோ, ஒளிரும் நெற்றி வெளிறியதைக் கண்டு, தானும், அதுபோல், மிகுந்த நிறமாற்றம், கொள்ள முடியவில்லையே, என்று வருந்தியது.*

**உறுப்பு நலனழிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*மனம் குறுகுதலை, என்னிடம் விட்டு விட்டு, பிரிந்து, தூரச் சென்றவரை நினைத்து, வாசனைப் பரப்பும் மலர்முன், என் கண்கள், அவமானத்தால், கவிழ்கின்றன.*

*நெருங்கியவர்க்கு, அவர் சுகத்தைத் தராததை, குற்றம் சொல்லுவது போல் இருக்கின்றன, வெளிறி, கண்ணீரை, பனியைப் போல் பொழியும், கண்கள். இன்று, மிகுந்த குளிர்ச்சியால், சுருங்கிப் போனவை, முன்பு, சேர்ந்திருந்த நாட்களில், பூரித்தத் தோள்களை, வெகுவாக நினைவூட்டுவது போல், இருக்கின்றன. துணை பிரிந்ததால், சேர்வதற்கு முன்பிருந்த அழகும் குன்றிய தோள்களைக் கொண்டவளின், கைகளின் பெருக்கமும் போய்விட, பசும்பொன் வளையல், கழலும். தளர்ந்த இடுப்புடன், பழைய அழகும் குன்றிய தோள்கள் சேர்ந்து, பிரிந்த கொடியவரின், கொடுமையைச் சொல்லும்.*

*தளர்ந்த இடுப்புடன், பழைய அழகும் குன்றிய மார்பகங்கள், சேர்ந்து பிரிந்த கொடியவரின், கொடுமையைச் சொல்லும்.*

*அவரைக் கொடியவர் என, நீ திட்டுவதைக் கேட்டு, என் மனம் நொந்து, இடுப்புடன் மார்பகங்கள் குழைய, இளக, வலிக்கின்றது.*

*சேர்ந்து பிரிந்த கொடியவர்க்கு, என் குன்றிய தோள்களுக்கு இடையிலான, 'யார், அதிகம் சிறுத்தது?', 'யாருக்கு, காதலர் மேல், அதிகம் அன்பு, உள்ளது?', போன்ற, சண்டையைக் கூறி, அவரிடமிருந்து பரிசு, பாராட்டைப் பெறமாட்டாயோ?, என் நெஞ்சே!*

*இங்கும் அங்கும் ஓடி, சீண்டித் தழுவும் கைகளை, தலைவன் நிறுத்தி விலக்கினால், 'தவறு இழைத்தோமா? தன்னைப் பிடிக்கவில்லையோ? என்று, பசும்பொன் வளையல் அணிந்த, அனுபவமில்லாப் பெண்ணின், நெற்றி வியர்த்து, வெளிறியது.*

*இருவரின், வெப்பமான தழுவலுக்கு இடையில், குளிர்ந்த காற்று, போனதை உணர்ந்து, 'தன்னைப் பிடிக்கவில்லையோ?', என்று, வெளிறிய அனுபவமில்லாத பெண்ணின் கண்கள், கண்ணீரை, பெருமழையாய்ப் பொழிந்தன. கண்ணின் நிறமாற்றமோ, ஒளிரும் நெற்றி வெளிறியதைக் கண்டு, தானும், அதுபோல், மிகுந்த நிறமாற்றம், கொள்ள முடியவில்லையே, என்று வருந்தியது.*

# 125. நெஞ்சொடு கிளத்தல்

*நெஞ்சொடு கிளத்தல் = தன் மனத்துடன் பேசிக்கொள்ளுதல்.*

**1241. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்றும்**
**எவ்வநோய் தீர்க்கு மருந்து.**

**நினைத்து ஒன்று சொல்லாயோ-நெஞ்சே!-எனைத்துஒன்றும்**
**எவ்வ நோய் தீர்க்கும் மருந்து?**

*நினைத்தொன்று = நினைத்து + ஒன்று. சிந்தித்துச் சரியான ஒன்றை.*

*எனைத்தொன்றும் = எப்படியாயினும்.*

*எவ்வ = உயர்கின்ற. வளர்கின்ற.*

*ஏதோதோ சொல்கின்றாய், எப்படியாயினும், என்ன செய்தாலும் வளர்கின்ற, நோயைத் தீர்க்கும் மருந்தாக, சிந்தித்து, சரியான ஒன்றை, சொல்ல மாட்டாயா, நெஞ்சமே!*

**1242. காத லவரில ராகநீ நோவது**
**பேதைமை வாழியென் னெஞ்சு.**

**காதல் அவர் இலர் ஆக நீ நோவது**
**பேதைமை-வாழி, என் நெஞ்சு!**

*நோவது = கோபிப்பது. துன்புறுவது.*

*நம்மிடத்தில், அவருக்குக் காதல் இல்லாதபோது, நீ கோபிப்பதும் துன்பப்படுவதும் முட்டாள்தனம், வாழ்க, என் நெஞ்சமே!*

**1243. இருந்துள்ளி என்பரித னெஞ்சே பரிந்துள்ளிப்**
**பைதனோய் செய்தார்க ணில்.**

**இருந்து உள்ளி, என், பரிதல்?-நெஞ்சே!-பரிந்து உள்ளல்**
**பைதல் நோய் செய்தார்கண் இல்.**

*அமைதியாக இருந்து, நினைத்து, என்ன பயன்? என்மேல் இரக்கப்படும் நெஞ்சமே! பிரிந்து இருந்து, துன்பநோயை உருவாக்கியவர் இடத்தில், அந்த இரக்கம் இல்லையே!*

*எனவே, நீ போய், அவரைக் கூட்டி வா.*

**1244. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்**
**தின்னு மவர்க்காண லுற்று.**

**கண்ணும் கொளச் சேறி-நெஞ்சே!-இவை என்னைத்**
**தின்னும், அவர்க் காணல் உற்று!**

*கொளச்சேறி = கொள் + அச்சு + ஏறி. அச்சு = தேர். வண்டி.*

*தேர் ஏறி, என் கண்களையும், அவரிடம் கொண்டு செல், நெஞ்சே!, இல்லையென்றால், 'நெஞ்சு மட்டும் கண்டதை, தான் காணவே இல்லை, தன்னை ஏன் அனுப்பவில்லை', என்று, இவை என்னைப் பிடுங்கித் தின்று விடும்.*

**1245. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயாம்**
**உற்றா லுறாஅ தவர்.**

**செற்றார் எனக் கைவிடல் உண்டோ-நெஞ்சே!-யாம்**
**உற்றால் உறா அதவர்?**

*செற்றார் = பகைவர்*

*உற்றால் = நாடினால்*

*நெஞ்சே, நாம் நாடினாலும் நம்மை நாடாதவரை, பகைவர் என்று கருதி, கைவிட்டு விட முடியுமா, என்ன?*

**1246. கலந்துணர்த்துங் காதலரைக் கண்டாற் புலந்துணராய்**
**பொய்க்காய்வு காய்தியென் நெஞ்சு.**

**கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டால், புலந்து உணராய்;**
**பொய்க் காய்வு காய்தி-என் நெஞ்சு!**

*கலந்துணர்த்தும் = கலந்து + உணர்த்தும். சேர்ந்து இன்பத்தைக் கொடுக்கும்.*

*புலந்துணராய் = கோபம் கொள்ளாய்.*

*காய்வு = காய் + உ. கசப்பு வெளிப்படுதல். வெறுப்பு.*

*சேர்ந்து, இன்பத்தைக் கொடுக்கும், காதலரைக் கண்டால் மட்டும், கோபிக்க மாட்டாய். இப்பொழுது, எனக்காக, பொய்யான வெறுப்பைக் காட்டுகிறாய். உன்னைப் பற்றி நன்றாகத் தெரியும், என் நெஞ்சமே!*

**1247. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே**
**யானோ பொறேனிவ் விரண்டு.**

**காமம் விடு, ஒன்றோ; நாண் விடு-நல் நெஞ்சே!-**
**யானோ பொறேன், இவ் இரண்டு!**

*ஒன்றோ = ஒப்பாவிட்டால்*

*காமத்தை விடு, ஒப்பவில்லை என்றால், வெட்கத்தை விடு. நல்ல நெஞ்சே, என்னாலோ, இந்த இரண்டையும், பொறுக்க முடியவில்லை.*

**1248. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்**
**பின்செல்வாய் பேதையென் நெஞ்சு.**

**பரிந்து அவர் நல்கார் என்று, ஏங்கி, பிரிந்தவர்**
**பின் செல்வாய்; பேதை-என் நெஞ்சு!**

*பரிந்தவர் = பரிந்து + அவர். இரக்கப்பட்டு அவர்.*

*இரக்கப்பட்டு, அவர் அன்பைத் தரமாட்டார், என்று அறிந்தும், உறவுக்காக ஏங்கி, பிரிந்தவர் பின்னால், வெட்கமின்றிச் செல்கின்றாய், என் அறிவில்லா நெஞ்சமே!*

**1249. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ**
**யாருழைச் சேறியென் னெஞ்சு.**

**உள்ளத்தார் காதலவர் ஆக, உள்ளி நீ**
**யாருழைச் சேறி?-என் நெஞ்சு!**

*யாருழை = யார் + இடம்.*

*சேறல் = செல்லுதல்.*

*உள்ளத்தில் இருப்பவர், காதலராக இருக்கையில், காதலரை எண்ணி நீ, யாரிடம் செல்கிறாய், என் நெஞ்சமே!*

**1250. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா**
**இன்னு மிழத்துங் கவின்.**

**துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா,**
**இன்னும் இழத்தும், கவின்.**

*அனுபவிக்காமல் பிரிந்தவரை, நெஞ்சத்தில் கொண்டுள்ளோம். அதனால், அவருக்காக ஏங்கி ஏங்கி, மென்மேலும், அழகை, தொடர்ந்து இழந்து கொண்டே, இருக்கின்றோம்.*

**நெஞ்சொடு கிளத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*ஏதோதோ சொல்கின்றாய், எப்படியாயினும், என்ன செய்தாலும் வளர்கின்ற, நோயைத் தீர்க்கும் மருந்தாக, சிந்தித்து, சரியான ஒன்றை, சொல்ல மாட்டாயா, நெஞ்சமே!*

*நம்மிடத்தில், அவருக்குக் காதல் இல்லாதபோது, நீ கோபிப்பதும் துன்பப்படுவதும் முட்டாள்தனம், வாழ்க, என் நெஞ்சமே!*

*அமைதியாக இருந்து, நினைத்து, என்ன பயன்? என்மேல் இரக்கப்படும் நெஞ்சமே! பிரிந்து இருந்து, துன்பநோயை உருவாக்கியவர் இடத்தில், அந்த இரக்கம் இல்லையே!*

*தேர் ஏறி, என் கண்களையும், அவரிடம் கொண்டு செல், நெஞ்சே! இல்லையென்றால், 'நெஞ்சு மட்டும் கண்டதை, தான் காணவே இல்லை,*

தன்னை ஏன் அனுப்பவில்லை', என்று, இவை என்னைப் பிடுங்கித் தின்று விடும்.

நெஞ்சே, நாம் நாடினாலும் நம்மை நாடாதவரை, பகைவர் என்று கருதி, கைவிட்டு விட முடியுமா, என்ன?

சேர்ந்து, இன்பத்தைக் கொடுக்கும், காதலரைக் கண்டால் மட்டும், கோபிக்க மாட்டாய். இப்பொழுது, எனக்காக, பொய்யான வெறுப்பைக் காட்டுகிறாய். உன்னைப் பற்றி நன்றாகத் தெரியும், என் நெஞ்சமே!

காமத்தை விடு, ஒப்பவில்லை என்றால், வெட்கத்தை விடு. நல்ல நெஞ்சே, என்னாலோ, இந்த இரண்டையும், பொறுக்க முடியவில்லை.

இரக்கப்பட்டு, அவர் அன்பைத் தரமாட்டார், என்று அறிந்தும், உறவுக்காக ஏங்கி, பிரிந்தவர் பின்னால், வெட்கமின்றிச் செல்கின்றாய், என் அறிவில்லா நெஞ்சமே!

உள்ளத்தில் இருப்பவர், காதலராக இருக்கையில், காதலரை எண்ணி நீ, யாரிடம் செல்கிறாய், என் நெஞ்சமே!

அனுபவிக்காமல் பிரிந்தவரை, நெஞ்சத்தில் கொண்டுள்ளோம். அதனால், அவருக்காக ஏங்கி ஏங்கி, மென்மேலும், அழகை, தொடர்ந்து இழந்து கொண்டே, இருக்கின்றோம்.

# 126. நிறையழிதல்

*நிறையழிதல் = நிறை + அழிதல். நிறை = நிலை. முழுமை. கனம். சமம். அளவு. அழகு. அமைதி. நிறைவு. மறைவு. அடக்கம்.*

*நிறையழிதல் = அழகு, வெட்கம் அழிதல்.*

**1251. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு.**

**காமக் கணிச்சி உடைக்கும்-நிறை என்னும்**
**நாணுத் தாழ் வீழ்த்த கதவு.**

*கணிச்சி = கண் + இச்சி. துளை ஆசை. துளைக்கும் கருவி.*

*காமம் எனும் துளைக்கும் கருவி, வெட்கம் எனும் தாழ்ப்பாளை உடைத்து, அடக்கம் எனும் கதவை கீழே தள்ளி, என் உடல் தவிப்பை, அம்பலமாக்குகின்றது.*

**1252. காம மெனவொன்றோ கண்ணின்றென்னெஞ்சத்தை**
**யாமத்து மாளுந் தொழில்.**

**காமம் என ஒன்றோ கண் இன்று! என் நெஞ்சத்தை**
**யாமத்தும் ஆளும், தொழில்.**

*ஒன்றோ = ஒன்றுதானா*

*ஆளுந்தொழில் = மேய்த்தல். வேலை வாங்குதல். ஆட்டிப் படைத்தல்.*

*காமம் என்பது ஒன்றுதானா? தூங்கவிடாமல், எங்கும் செல்லாமல், கண்ணிலேயே நின்று, என் நெஞ்சத்தை, பகலில் போதாதென்று, இரவிலும் ஆட்டிப் படைக்கின்றதே!*

**1253. மறைப்பன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்**
**தும்மல்போற் றோன்றி விடும்.**

**மறைப்பேன் மன் காமத்தை யானோ; குறிப்பு இன்றித்**
**தும்மல்போல் தோன்றிவிடும்.**

*குறிப்பின்றி = முன் அறிவிப்பின்றி.*

*நான் என்னவோ, என் காமத்தை, மனத்திற்குள்ளேயே மறைக்கின்றேன். ஆனால், அது, எந்த முன்னறிவிப்பும் இன்றி, திடீரென்று, கட்டுப்படுத்த முடியாமல், தும்மல் போல் வெளிப்பட்டு விடுகின்றதே. நான் என்ன செய்ய?*

**1254. நிறையுடையே னென்பன்மன் யானேயென் காமம்
மறையிறந்து மன்று படும்.**

**நிறை உடையேன் என்பேன்மன், யானோ; என் காமம்,
மறை இறந்து, மன்றுபடும்.**

*நிறை = அடக்கம்.*

*மன்று = அம்பலம். ஊர் மன்றம். பொது இடம்.*

*'நான் அடக்கம் உடையவள்', என்று, எனக்கு நானே, என் மனத்திற்குள், சொல்லிக் கொள்வேன். ஆனால், எனது உடல் தவிப்போ, மறைவை இழந்து, அம்பலப்படும், எல்லோருக்கும் தெரிந்து விடும்.*

**1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றா ரறிவதொன் றன்று.**

**செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை, காம நோய்
உற்றார் அறிவது ஒன்று அன்று.**

*செற்றார் = கொள்ளையர். கெடுத்தவர்.*

*தன்னுடைய அடக்கத்தையும், பெயரையும், கெடுத்தவர் பின்னால், போகாமல் இருக்கும் பெருந்தன்மை, காமநோயால் துன்பப்பட்டவர், அறிந்த ஒன்று அல்ல.*

**1256. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.**

**செற்றவர்பின் சேறல் வேண்டி,-அளித்து அரோ!-
எற்று, என்னை உற்ற துயர்?**

*எற்று = எதற்கு*

*என்னுடைய அடக்கத்தையும், பெயரையும், கெடுத்தவர் பின்னால், நான் வெட்கமின்றிப் போக வேண்டும், என்பதற்காக, அவரே தந்தாரோ, இந்த காமம் எனும் துயரத்தை? எத்தன்மையை உடையது, இந்த காமம்? அவருடைய ஆளா, இது?*

**1257. நாணென வொன்றோ வறியலங் காமத்தால்
பேணியார் பெட்பச் செயின்.**

**நாண் என ஒன்றோ அறியலம்-காமத்தால்,
பேணியார் பெட்ப செயின்.**

*அறியலம் = அறி + அல் + அம். அறிய மாட்டோம்.*

*பேணியார் = வளர்த்தவர்*

*பெட்பு = பாதுகாப்பு. விருப்பம்.*

*தன், காம இன்பத்தின் வேகத்தால், அதை என்னிடத்திலும் வளர்த்தவர், தான் விரும்பியதை எல்லாம், என்னிடம் பாதுகாப்பாகச் செய்தால், வெட்கம் என்ற ஒன்றை, நான் உணர்வதில்லை.*

**1258. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்**
**பெண்மை யுடைக்கும் படை.**

**பல மாயக் கள்வன் பணிமொழி அன்றோ-நம்**
**பெண்மை உடைக்கும் படை!**

*பன்மாயம் = பல் + மாயம். பல மாயம். மாயம் = ம் + ஆய் + அம். கொண்டு மூடிச் செய்யும் தன்மை. கண்கள் புலப்படாமல் செய்தல்.*

*கண்களை மூடித் திறப்பதற்குள், பல விந்தைகளைச் செய்து களவாடுபவனின், அடக்கமான பேச்சுதானே, என், வெட்கம் எனும் கோட்டையை, உடைக்கின்ற படை.*

**1259. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்**
**கலத்த லுறுவது கண்டு.**

**'புலப்பல்' எனச் சென்றேன்; புல்லினேன், நெஞ்சம்**
**கலத்தல் உறுவது கண்டு.**

*புலப்பல் = ஊடல். கோபித்தல்.*

*புல் = தழுவு*

*அவருடன், ஊட வேண்டும், கோபிக்க வேண்டும், என்று நினைத்தவாறுதான் சென்றேன். ஆனால், அதற்குள், என் நெஞ்சம் அவருடன் கலக்கப் போவதைக் கண்டு, வேகமாக ஓடிச் சென்று, அவரைக் கெட்டியாக, கட்டிக் கொண்டு விட்டேன்.*

**1260. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ**
**புணர்ந்தூடி நிற்பே மெனல்.**

**நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ-**
**புணர்ந்து ஊடி நிற்பேம் எனல்?**

*நிணம் = கொழுப்பு*

*தீயில் இட்ட கொழுப்பு, எரிந்த பின்பு, உறுதியாக இல்லாதது போன்று, நெஞ்சம் பிரிந்தவர்கள், கலந்து விட்டு, பின், கோபம் காட்டி, விலகி நிற்போம் என்பது, நிச்சயமாக நடக்கக்கூடிய காரியமா என்ன?*

**நிறையழிதல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*காமம் எனும் துளைக்கும் கருவி, வெட்கம் எனும் தாழ்ப்பாளை உடைத்து, அடக்கம் எனும் கதவை கீழே தள்ளி, என் உடல் தவிப்பை, அம்பலமாக்குகின்றது.*

*காமம் என்பது ஒன்றுதானா? தூங்கவிடாமல், எங்கும் செல்லாமல், கண்ணிலேயே நின்று, என் நெஞ்சத்தை, பகலில் போதாதென்று, இரவிலும் ஆட்டிப் படைக்கின்றதே!*

*நான் என்னவோ, என் காமத்தை, மனத்திற்குள்ளேயே மறைக்கின்றேன். ஆனால், அது, எந்த முன்னறிவிப்பும் இன்றி, திடீரென்று, கட்டுப்படுத்த முடியாமல், தும்மல் போல் வெளிப்பட்டு விடுகின்றதே. நான் என்ன செய்ய?*

*'நான் அடக்கம் உடையவள்', என்று, எனக்கு நானே, என் மனத்திற்குள், சொல்லிக் கொள்வேன். ஆனால், எனது உடல் தவிப்போ, மறைவை இழந்து, அம்பலப்படும், எல்லோருக்கும் தெரிந்து விடும்.*

*தன்னுடைய அடக்கத்தையும், பெயரையும், கெடுத்தவர் பின்னால், போகாமல் இருக்கும் பெருந்தன்மை, காமநோயால் துன்பப்பட்டவர், அறிந்த ஒன்று அல்ல.*

*என்னுடைய அடக்கத்தையும், பெயரையும், கெடுத்தவர் பின்னால், நான் வெட்கமின்றிப் போக வேண்டும், என்பதற்காக, அவரே தந்தாரோ, இந்த காமம் எனும் துயரத்தை? எத்தன்மையை உடையது, இந்த காமம்? அவருடைய ஆளா, இது?*

*தன், உடல் ஆசையின் வேகத்தால், அதை என்னிடத்திலும் வளர்த்தவர், தான் விரும்பியதை எல்லாம், என்னிடம் பாதுகாப்பாகச் செய்தால், வெட்கம் என்ற ஒன்றை, நான் உணர்வதில்லை.*

*கண்களை மூடித் திறப்பதற்குள், பல விந்தைகளைச் செய்து களவாடுபவனின், அடக்கமான பேச்சுதானே, என், வெட்கம் எனும் கோட்டையை, உடைக்கின்ற படை.*

*அவருடன், ஊட வேண்டும், கோபிக்க வேண்டும், என்று நினைத்தவாறுதான் சென்றேன். ஆனால், அதற்குள், என் நெஞ்சம் அவருடன் கலக்கப் போவதைக் கண்டு, வேகமாக ஓடிச் சென்று, அவரைக் கெட்டியாக, கட்டிக் கொண்டு விட்டேன்.*

*தீயில் இட்ட பிணம், எரிந்த பின்பு, உறுதியாக இல்லாதது போன்று, நெஞ்சம் பிரிந்தவர்கள், உடலால் கலந்து விட்டு, பின், கோபம் காட்டி, விலகி நிற்போம் என்பது, நிச்சயமாக நடக்கக்கூடிய காரியமா என்ன?*

## 127. அவர்வயின் விதும்பல்

*அவர்வயின் விதும்பல் = அவர் + வயின் + விதும்பல். வயின் = வரவை. விதும்பல் = வி + தும்பல். திடீரென்று நினைப்பதற்கு அப்பால். எப்பொழுதும் நினைத்தல்.*

*அவர்வயின் விதும்பல் = அவர் வரவை எப்பொழுதும் நினைத்தல்.*

**1261. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற**
**நாளொற்றித் தேய்ந்த விரல்.**

**வாள் அற்றுப் புற்கென்ற, கண்ணும்; அவர் சென்ற**
**நாள் ஒற்றித் தேய்ந்த, விரல்.**

*வாள் = கூர்மை*

*புல் = வலிமையற்றது.*

*ஒற்றி = தொட்டு.*

*கண்கள், ஒளிரும் கூர்மையற்று, உற்று நோக்கும் வலிமையை இழந்து விட்டன. கைவிரல்களோ, அவர், சென்று முடிந்த நாட்களை கணக்கிட, சுவற்றில் கிழித்த கோடுகளை, தொட்டுத் தொட்டு எண்ணிப் பார்த்தே, தேய்ந்துப் போயின.*

*இவைதாம், அவர் என்னைப் பிரிந்து போய், நான் கண்ட சுகங்கள்!*

**1262. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேல்**
**கலங்கழியுங் காரிகை நீத்து.**

**இலங்கிழாய்! இன்று மறப்பின், என் தோள்மேல்**
**கலம் கழியும், காரிகை நீத்து.**

*இலங்கிழாய் = இலங்கு + இழாய். இலங்கிழாய் = இல் + அங்கு + இழாய். இழைந்த அனுபவம் அற்றவளே.*

*கலங்கழியும் = கலம் + கழியும். மார்பகம் மூழ்கும்.*

*காரிகை = காரி + கை. கருமேக மழை. கண்ணீர்.*

*நீத்து = வெள்ளம். நீந்தி. நீங்கி.*

*இழைந்த அனுபவம் அற்றவளே, அவரை, நான், இன்று மறந்தாலும், என், தோள்கள், கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கி, அழிந்து விடும்.*

**1263. உரனசைஇ யுள்ளந் துணையாக சென்றார்**
**வரனசைஇ யின்னு முளேன்.**

**உரன் நசைஇ, உள்ளம் துணையாகச் சென்றார் வரல்**
**நசைஇ, இன்னும் உளேன்.**

*உரனசை = உரம் + நசை. வலிமை, வீரம், மீது நம்பிக்கை.*

*வரனசை = வரல் + நசை. வரவில் நம்பிக்கை.*

*இ = நிலைத்தல். இருத்தல்.*

*தன் வலிமையின் மேல், வீரத்தின் மேல், உறுதியான நம்பிக்கையுடைய நெஞ்சத்தை, துணையாகக் கொண்டு, போருக்கு சென்றவர், ஊருக்கு திரும்பி வருவார், எனும் நம்பிக்கை இருப்பதால், இன்னும் நான், உயிருடன் இருக்கின்றேன்.*

**1264. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்**
**கோடுகோ டேறுமென் னெஞ்சு.**

**கூடிய காமம் பிரிந்தார் வரவு உள்ளிக்,**
**கோடு கொடு ஏறும், என் நெஞ்சு.**

*கோடு = வரி. மலை. மரம்.*

*உடல் சுகத்தில் சேர்ந்து, பிரிந்து சென்றவர், திரும்பி வருவதை நினைத்து, முன்பு, என் மார்பகங்கள் தளர்ந்ததால், நெஞ்சில் விழுந்த வெளிர்க் கோடுகள், இன்று, ஒவ்வொன்றாய், உயர்ந்து வருகின்றன, மார்பகங்கள், மீண்டும், பூரித்துப் பெருக்கின்றன.*

*அல்லது*

*காதல் இன்பத்தில் திளைத்து, பிரிந்து சென்றவர், திரும்பி வருவதைக் காண, மலையின் மேல் உள்ள, மரத்தின் மேல் ஏறுகின்றது, என் நெஞ்சம்.*

*அல்லது*

*உடல் சுகத்தில் சேர்ந்து, பிரிந்து சென்றவர், திரும்பி வருவதைக் காண, மரம் மரமாய் ஏறுகின்றது, என் நெஞ்சம்.*

**1265. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்**
**நீங்குமென் மென்றோட் பசப்பு.**

**காண்கமன், கொண்கனைக் கண் ஆர; கண்டபின்,**
**நீங்கும், என் மென்தோள் பசப்பு.**

*காண்கமற் = காண்க + மன்.*

*கொண்கன் = கொள் + க் + அன். கொண்ட மெய்யினன். கொண்டவன்.*

*மென்றோட் = மென் + தோள். மென்மையான.*

*பசப்பு = பசலை. நிறமாற்றம். வெளிர்ப்பு.*

*என் மனம் கொண்டவனை, கண்ணாரக் கண்டப் பின்னால், என், மென்மையான தோள்களில் ஏற்பட்ட நிறமாற்றம், தானாக, போய் விடும்.*

**1266. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட.**

**வருகமன், கொண்கன் ஒருநாள்; பருகுவன்,
பைதல்நோய் எல்லாம் கெட.**

*வருகமற் = வருக + மன்.*

*பைதல் = பை + த் + அல். மனம் ஐக்கியமாதல் தேக அதிர்வுடன். உடலால், மன வேதனை.*

*வரட்டும், என் மனத்தைக் கொண்டவன். பிரிவால் ஏற்பட்ட, பசலை எல்லாம் தீர்ந்திட, ஒரு நாள் முழுவதும், அவனை, நான் கூடுவேன்.*

**1267. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.**

**புலப்பேன்கொல்-புல்லுவேன் கொல்லோ-கலப்பேன்கொல்-
கண் அன்ன கேளிர் வரின்?**

*புலப்பு = ஊடல். கோபம் கொண்டு விலகுதல்.*

*புல்லு = தழுவு*

*கலப்பு = உடல் உறவு. சேர்தல்.*

*கேளிர் = சொந்தம்.*

*கண்போன்ற அருமையான சொந்தம் வந்தால், பொய்க் கோபம் கொண்டு விலகி நிற்பேனா, கட்டித் தழுவிக் கொள்வேனோ அல்லது உடலுறவே கொள்வேனா?*

*என்ன செய்வேன் என்று, எனக்கே தெரியவில்லையே!*

**1268. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.**

**வினை கலந்து வென்றீக, வேந்தன்! மனை
கலந்து மாலை அயர்கம், விருந்து!**

*வினைகலந்து = போரிட்டு*

*வென்றீக = வென்று + ஈக. ஈகம் = சந்தனம்.*

*மனைகலந்து = உடல் சேர்ந்து.*

*அயர் = அய் + அர். இரு பிரிந்து. ஓய்வு எடு.*

*அம் = அ + ம். உயிர் கொண்டு மூடல். உயிர் அமைதி. சுகம்.*

*போரிட்டு வென்று, சந்தன வாசம் வீச வரும், என் மன்னன், என்னுடன் சேர்ந்து, மாலை வரை, ஓய்வெடுக்கட்டும், அவன், என் சுகமான, விருந்து.*

**1269. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.**

**ஒரு நாள் எழு நாள்போல் செல்லும்-சேண் சென்றார் வரு நாள் வைத்து ஏங்குபவர்க்கு.**

*சேட் = சேண். தூரம்.*

*தூரப்பிரிந்து சென்றவர், வருகின்ற நாளை, எதிர்பார்த்து ஏங்குபவருக்கு, இடையிலுள்ள ஒரு நாளே, ஏழு நாட்கள் போல, மெதுவாக நகரும்.*

**1270. பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னாம்
உள்ள முடைந்துக்கக் கால்.**

**பெறின் என் ஆம்-பெற்றக்கால் என் ஆம்-உறின் என் ஆம்-உள்ளம் உடைந்து உக்கக்கால்?**

*பெறு = பார். தழுவு.*

*முறி = ம் + உறி. கொண்டு மூடியதை பிரி. இரு பாதியாய் பிள. உடல் உறவு கொள்.*

*உக்கு = உதிர்.*

*உள்ளம் உடைந்து, தூள் தூளாய், உதிர்ந்து போன பின்பு, அவர், என்னைப் பார்த்து, என்ன பயன்? தழுவி, என்ன பயன்? உடல் உறவு கொண்டுதான், என்ன பயன்?*

*எல்லாம் வீணடி. என் கதை முடிந்ததடி.*

**அவர்வயின் விதும்பல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*கண்கள், ஒளிரும் கூர்மையற்று, உற்று நோக்கும் வலிமையை இழந்து விட்டன. கைவிரல்களோ, அவர், சென்று முடிந்த நாட்களை கணக்கிட, சுவற்றில் கிழித்த கோடுகளை, தொட்டுத் தொட்டு எண்ணிப் பார்த்தே, தேய்ந்து போயின.*

*இழைந்த அனுபவம் அற்றவளே, அவரை, நான், இன்று மறந்தாலும், என், தோளின் மேல் உள்ள மார்பகங்கள், கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கி, அழிந்து விடும்.*

*தன் வலிமையின் மேல், வீரத்தின் மேல், உறுதியான நம்பிக்கையுடைய நெஞ்சத்தை, துணையாகக் கொண்டு, போருக்குச் சென்றவர், ஊருக்குத் திரும்பி வருவார், எனும் நம்பிக்கை இருப்பதால், இன்னும் நான், உயிருடன் இருக்கின்றேன்.*

*உடல் சுகத்தில் சேர்ந்து, பிரிந்து சென்றவர், திரும்பி வருவதை நினைத்து, முன்பு, என் மார்பகங்கள் தளர்ந்ததால், நெஞ்சில் விழுந்த வெளிர்க் கோடுகள், இன்று, ஒவ்வொன்றாய், உயர்ந்து வருகின்றன, மார்பகங்கள், மீண்டும், பூரித்துப் பெருக்கின்றன.*

*என் மனம் கொண்டவனை, கண்ணாரக் கண்ட பின்னால், என், மென்மையான மார்பகங்களில் ஏற்பட்ட நிறமாற்றம், தானாக, போய் விடும்.*

*வரட்டும், என் மனத்தைக் கொண்டவன். பிரிவால் ஏற்பட்ட, பசலை எல்லாம் தீர்ந்திட, ஒரு நாள் முழுவதும், அவனை, நான் கூடுவேன்.*

*கண்போன்ற அருமையான சொந்தம் வந்தால், பொய்க் கோபம் கொண்டு விலகி நிற்பேனா, கட்டித் தழுவிக் கொள்வேனோ அல்லது உடலுறவே கொள்வேனா?*

*போரிட்டு வென்று, சந்தன வாசம் வீச வரும், என் மன்னன், என்னுடல் சேர்ந்து, மாலை வரை, ஓய்வெடுக்கட்டும், அவன், என் சுகமான, விருந்து.*

*தூரப்பிரிந்து சென்றவர், வருகின்ற நாளை, எதிர்பார்த்து ஏங்குபவருக்கு, இடையிலுள்ள ஒரு நாளே, ஏழு நாட்கள் போல, மெதுவாக நகரும்.*

*உள்ளம் உடைந்து, தூள் தூளாய், உதிர்ந்து போன பின்பு, அவர், என்னைப் பார்த்து, என்ன பயன்? தழுவி, என்ன பயன்? உடல் உறவு கொண்டுதான், என்ன பயன்?*

# 128. குறிப்பறிவுறுத்தல்

*குறிப்பறிவுறுத்தல் = குறிப்பு + அறிவு + உறுத்தல். குறிப்பறியச் செய்தல்.*

**1271. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
உரைக்க லுறுவதொன் றுண்டு.**

**கரப்பினும், கையிகந்து ஒல்லா, நின் உண்கண்
உரைக்கல் உறுவது ஒன்று உண்டு.**

*கரப்பு = கர(ம்) + ப் + உ. கரம் கொண்டு உள்செல். மறை.*

*இகல் = இ + கல். நிலையான கல். தடை.*

*ஒல்லாது = முடியாது*

*நாணத்தால் மறைத்தாலும், தடுக்க முடியாமல், உன் உயிர் உண்ணும் கண்கள், அந்த ஒன்றைச் சொல்ல முயல்வது, எனக்குத்தெரியும்.*

**1272. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.**

**கண் நிறைந்த காரிகை, காம்பு ஏர் தோள், பேதைக்குப்
பெண் நிறைந்த நீர்மை பெரிது.**

*காரிகை = காரி + கை. மழை. நீர்.*

*காம்பேர்தோட் = காம்பு + ஏர் + தோள். காம்பு உயரும் மார்பகங்கள்.*

*பெண்ணிறை = பெண் + நிறை. பெண்ணின் அடக்கம்.*

*நீர்மை = ஓடும் தன்மை. இயல்பு.*

*பெண்ணின் கண்களில், நீர் நிறைந்து, ததும்புகின்றது. மெதுவான நீண்ட மூச்சு இழுப்பால், முலைக்காம்புகள் உயர்கின்றன. இவையெல்லாம், அவளின் ஆழ்ந்த உடல் ஆசையைக் காட்டுகின்றன. ஆனால், அதையெல்லாம் அறியாத இந்தப் பெண்ணுக்கு, தன் ஆசையை வெளிக்காட்டாத, அடக்கம் எனும் இயல்பு, அதிகமாகவே உள்ளது.*

**1273. மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை
அணியுட் டிகழ்வதொன் றுண்டு.**

**மணியில் திகழ்தரு நூல்போல், மடந்தை
அணியில் திகழ்வது ஒன்று உண்டு.**

*மணி = இரத்தினக்கல். மாணிக்கம்.*

*திகழ் = திக் + அழ். திசையில் ஆழ்ந்து. கோணங்களில் ஆழ்ந்து. ஒளிர்தல். மின்னுதல். ஜொலித்தல்.*

நூல் = இழை. இரத்தினக் கற்களின் உள்ளே ஒளியை விலக்கிப் பிரதிபலிக்கும் தடை.

அணி = குணம். பண்பு. இயல்பு.

இரத்தினக் கல்லின் உள்ளே, இயற்கையாய் அமைந்த, நூலிழை போன்ற அமைப்பு, ஒளி விலகலாலும், பிரதிபலிப்பாலும், அக்கல்லை ஜொலிக்கச் செய்யும். கல்லின் ஒளிர்தலே, அதன் விலை மதிப்பைக் கூட்டும். அதைப் போல், இந்த அறியாத பெண்ணின் குணங்களில், ஜொலிக்கின்ற, ஒளிர்கின்ற இயல்பு, ஒன்றுண்டு.

அது இவளது அடக்கம்.

**1274. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை**
**நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.**

**முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல், பேதை நகை**
**மொக்குள் உள்ளது ஒன்று உண்டு.**

முகை = ம் + உ + கை. கொண்டு மூடியது புறத்தே பிரிதல். முகிழ்.

மொக்கு = ம் + ஒக்கு. கொண்டு மூடி ஒன்றுபோல் இருப்பது. அரும்பு.

நகைமொக்கு = புன்னகை.

முகிழ்கின்ற அரும்பில் உள்ள, அந்த நறுமணம் போன்று, இந்த அறியாத பெண்ணின் புன்னகைக்கும் இதழ்களுக்குள்ளும், ஒரு கலவி இன்பத்தின் குறிப்பு ஒன்று இருக்கின்றது.

**1275. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்**
**தீர்க்கு மருந்தொன் றுடைத்து.**

**செறிதொடி செய்து இறந்த கள்ளம், உறு துயர்**
**தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து.**

செறிதொடி = செறி + தொடி. நெருக்கமாக வளையல்கள்.

செய்திறந்த = செய்து + இறந்த. சேர்த்துக் கீழிறக்கிய.

கள்ளம் = மறைவான எண்ணம். காமம்.

கையில் உள்ள வளையல்கள் எல்லாவற்றையும், ஒன்று சேர மேலேற்றி, இறுக்கி, உடனே, கீழிறக்கியதன் உள்நோக்கம், அவள் அடைந்த, உடல் தவிப்பு நோயைத் தீர்க்கும் மருந்து ஒன்றை, கொண்டுள்ளது.

குறிப்பறிந்த காதலன், அவளுடன் சேர்வான்.

**1276. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி**
**அன்பின்மை சூழ்வ துடைத்து.**

**பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல், அரிது ஆற்றி,**
**அன்பு இன்மை சூழ்வது உடைத்து.**

*பெரிது = ஊடல்*

*அரிது = கடினமானது. பிரிவு.*

*ஊடலை, அவர், வழக்கத்திற்கு மாறாக, மிகவும் இனிமையான, பணிவான பேச்சால் நீக்கி, தன் மற்றும் என், விருப்பத்திற்கும் உடல் சேர்வது, மீண்டும் கடினமான பிரிவு உண்டாகி, அன்பு இல்லாமை வரப்போவதையே, சுட்டிக் காட்டுகின்றன.*

**1277. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினும்**
**முன்ன முணர்ந்த வளை.**

**தண்ணந் துறைவன் தணந்தமை, நம்மினும்**
**முன்னம் உணர்ந்த, வளை.**

*தண்ணந்து = தண் + அந்து. குளிர்ச்சி எல்லை. பனி.*

*உறைவன் = உறை + அன். இறுகுபவன்.*

*தணந்தமை = த் + அண் + அம் + த் + அமை. தேகத்துடன் நெருக்கம் இல்லாது தேகம் அமைதல். விலகி இருத்தல்.*

*மனத்தில், தான் பிரியப் போவதை எண்ணி, அன்பின் ஈரம், பனியாய் இறுகியவன், என் உடம்பில் இருந்து, விலகிப் போனதை, எனக்கு முன்னதாகவே, இந்த வளையல்கள், உணர்ந்து கொள்கின்றன.*

**1278. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும்**
**எழுநாளே மேனி பசந்து.**

**நெருநற்றுச் சென்றார் எம் காதலர்; யாமும்**
**எழு நாளேம், மேனி பசந்து!**

*நெருநற்று = நெருநல் + அற்று. நேற்று பிரிந்து.*

*எழுநாள் = தோன்றிய நாள். இன்று.*

*நேற்றுதான் பிரிந்து சென்றார், என் காதலர். நானோ, இன்றே, உடல் வெளிறிப் போனேன்.*

**1279. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி**
**யஃதாண் டவள்செய் தது.**

**தொடி நோக்கி, மென் தோளும் நோக்கி, அடி நாக்கி,**
**அஃது, ஆண்டு அவள் செய்தது.**

*தொடி = வளையல்*

*அடி = பாதம்*

*கையின் வளையல்களைப் பார்த்து, மென்மையான தோள்களையும் பார்த்து, பாதத்தைப் பார்த்ததுதான், அங்கு, அவள் செய்தது எல்லாம். வேறு எதுவும் சொல்லவில்லை.*

**1280. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினால்
காமநோய் சொல்லி யிரவு.**

**பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப-கண்ணினால்
காம நோய் சொல்லி இரவு.**

*பெண்மை = பெருமை. உயர்வு.*

*இரவு = இரத்தல். கெஞ்சுதல்.*

*வாயால் சொல்லாமல், கண்களால், உடல் தவிப்பு நோயைச் சொல்லி, கெஞ்சும் பெண்ணினால், அடக்கம் எனும் பெண்மை, இன்னும், உலகில் நிலவுகின்றது.*

**குறிப்பறிவுறுத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*முகத்தை, கைகள் மறைத்தாலும், தடுக்க முடியாமல், உன் உயிர் உண்ணும் கண்கள், அந்த ஒன்றைச் சொல்ல முயல்வது, எனக்குத் தெரியும்.*

*பெண்ணின் கண்களில், நீர் நிறைந்து, ததும்புகின்றது. மெதுவான நீண்ட மூச்சு இழுப்பால், முலைக்காம்புகளுடன் தோள்கள் உயர்கின்றன. இவையெல்லாம், அவளின் ஆழ்ந்த கூடல் ஆசையைக் காட்டுகின்றன. ஆனால், இந்தப் பெண்ணுக்கு, தன் ஆசையை வெளிக்காட்டாத, அடக்கம் எனும் இயல்பு, அதிகமாகவே உள்ளது.*

*இரத்தினக் கல்லின் உள்ளே, இயற்கையாய் அமைந்த, நூலிழை போன்ற அமைப்பு, ஒளி விலகலாலும், பிரதிபலிப்பாலும், அக்கல்லை ஜொலிக்கச் செய்யும். கல்லின் ஒளிர்தலே, அதன் விலை மதிப்பைக் கூட்டும். அதைப் போல், இந்த அறியாத பெண்ணின் குணங்களில், ஜொலிக்கின்ற, ஒளிர்கின்ற இயல்பு, ஒன்றுண்டு. அது இவளது அடக்கம்.*

*முகிழ்கின்ற அரும்பில் உள்ள, அந்த வாசனை போன்று, இந்த அறியாத பெண்ணின் புன்னகைக்கும் இதழ்களுக்குள்ளும், ஒரு வாசனை இருக்கின்றது.*

*கையில் உள்ள வளையல்கள் எல்லாவற்றையும், ஒன்று சேர மேலேற்றி, இறுக்கி, உடனே, கீழிறக்கியதன் உள்நோக்கம், அவள் அடைந்த, உடல் தவிப்பு நோயைத் தீர்க்கும் மருந்து ஒன்றை, கொண்டுள்ளது.*

*ஊடலை, அவர், வழக்கத்திற்கு மாறாக, மிகவும் இனிமையான, பணிவான பேச்சால் நீக்கி, தன் மற்றும் என், விருப்பத்திற்கும் உடல் சேர்வது, மீண்டும் கடினமான பிரிவு உண்டாகி, அன்பு இல்லாமை வரப்போவதையே, சுட்டிக் காட்டுகின்றன.*

மனத்தில், தான் பிரியப் போவதை எண்ணி, அன்பின் ஈரம், பனியாய் இறுகியவன், என் உடம்பில் இருந்து, விலகிப் போனதை, எனக்கு முன்னதாகவே, இந்த வளையல்கள், உணர்ந்து கொள்கின்றன.

நேற்றுதான் பிரிந்து சென்றார், என் காதலர். நானோ, இன்றே, உடல் வெளிறிப் போனேன்.

கையின் வளையல்களைப் பார்த்து, மென்மையான மார்பகங்களையும் பார்த்து, பாதத்தைப் பார்த்ததுதான், அங்கு, அவள் செய்தது எல்லாம். வேறு எதுவும் சொல்லவில்லை.

வாயால் சொல்லாமல், கண்களால், உடல் தவிப்பு நோயைச் சொல்லி, கெஞ்சும் பெண்ணினால், அடக்கம் எனும் பெண்மை, இன்னும், உலகில் நிலவுகின்றது.

## 129. புணர்ச்சி விதும்பல்

*புணர்ச்சி விதும்பல் = கலவி இன்பம் துய்க்க விழைதல்.*

**1281. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலும்**
**கள்ளுக்கில் காமத்துக் குண்டு.**

**உள்ளக் களித்தலும், காண மகிழ்தலும்,**
**கள்ளுக்கு இல்; காமத்திற்கு உண்டு.**

*உள்ள = நினைத்தால்*

*நினைத்தாலே இன்பம் அடைதலும், கண்டாலே மகிழ்ச்சி அடைவதும், கள்ளுக்கு இல்லை, காமத்திற்கு, காதலுக்கு உண்டு.*

**1282. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையும்**
**காம நிறைய வரின்.**

**தினைத் துணையும் ஊடாமை வேண்டும்-பனைத் துணையும்**
**காமம் நிறைய வரின்.**

*தினை = மிகச் சிறிய தானியம். கொஞ்சம்.*

*பனை = உயர்ந்த மரம். மிகுதி. அதிகம்.*

*காம உணர்வு பனையளவு மிகுந்து வரவேண்டுமானால், கொஞ்சங் கூட கோபமோ, விலகலோ, சாடியோ, சச்சரவோ, அல்லது வேறு எந்த எதிர்மறை உணர்வோ, இருக்கக் கூடாது.*

**1283. பேணாது பெட்பல செய்யினுங் கொண்கனைக்**
**காணா தமையல கண்.**

**பேணாது பெட்பவே செய்யினும், கொண்கனைக்**
**காணாது அமையல, கண்.**

*பேண் = தேவைகளைத் தா. வளர். நெருக்கம்.*

*பெட்பல = பெட்பு + அல. விருப்பம் அல்லாதது.*

*அவன், என்னுடன் நெருங்கி இருந்து, என்னுடைய தேவைகளை, நிறைவு செய்யா விட்டாலும், நான் விரும்பத் தகாததைச் செய்தாலும், என்னைக் கொண்டவனைக் காணாமல், என் கண்கள், அமைதி அடைய மாட்டேன், என்கிறது.*

**1284. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து**
**கூடற்கட் சென்றதென் நெஞ்சு.**

**ஊடற்கண் சென்றேன்மன்;-தோழி!-அதுமறந்து**
**கூடற்கண் சென்றது, என் நெஞ்சு.**

*ஊடற்கண் = ஊடல் + கண். கோபமுள்ள கண்களுடன்.*

*கூடற்கட் = கூடல் + கண். கூடுகின்ற இடம். படுக்கை அறை.*

*அவரைப் பார்த்துச் சண்டை பிடிக்க, நான், கோபம் கொண்ட கண்ணுடன்தான் போனேன். ஆனால், வேடிக்கையைக் கேளேன், என் மனம் பிடித்த தோழியே! ஊடுவதை எல்லாம் மறந்து விட்டு, படுக்கை அறை நோக்கிச் சென்று விட்டது, என் நெஞ்சம்.*

**1285. எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்**
**பழிகாணேன் கண்ட விடத்து.**

**எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல், கொண்கன்**
**பழி காணேன், கண்ட இடத்து.**

*கண் புருவத்திற்கு மை தீட்டுகையில், குச்சியைப் பார்க்காமல், புருவம் எவ்வளவு சமமாகத் தீட்டப்பட்டது, எனப் பார்ப்பது போல், கவிதை எழுதும்போது எழுதுகோலைப் பார்க்காமல், எழுதிய எழுத்துகளைப் பார்ப்பது போல், ஓவியம் தீட்டும்போது, தூரிகையைப் பார்க்காமல் வரைந்த கோடுகளையும், வண்ணத்தையும் காண்பதுபோல், என்னைக் கொண்டவனைக் காணும்போது, அவனை மட்டும் தான் பார்க்கிறேன், அவனுடைய தவற்றைக் காண்பதில்லை.*

**1286. காணுங்காற் காணேன் தவறாய காணாக்கால்**
**காணேன் தவறல் லவை.**

**காணுங்கால் காணேன் தவறு ஆய; காணாக்கால்,**
**காணேன், தவறு அல்லவை.**

*அவரைப் பார்க்கும்போது, அவர் செய்த தவறுகள், என் கண்களுக்கு தெரிவதில்லை. அவரைப் பார்க்காத போதோ, அவர் செய்த தவறுகளைத் தவிர, வேறெதுவும் எனக்கு தெரிவதில்லை.*

**1287. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோல்**
**பொய்த்த லறிந்தென் புலந்து.**

**உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரேபோல்,**
**பொய்த்தல் அறிந்து, என் புலந்து?**

*உய்த்தல் = தப்பித்தல்.*

*புனல் = வெள்ளம்*

*நீந்தித் தப்பிக்கும் வழி இல்லாமை தெரிந்தும், ஒருவர், ஆற்று வெள்ளத்தில், வேறு வழியின்றி, குதிப்பது போல், என்னுடைய ஊடல் பொய்த்துப் போகும் என அறிந்தும், என் மனத்துன்பத்தை வெளிப்படுத்த வேறு வழியின்றி, ஊடுகிறேன்.*

**1288. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்**
**கள்ளற்றே கள்வநின் மார்பு.**

**இளித்தக்க இன்னா செயினும், களித்தார்க்குக்**
**கள் அற்றே-கள்வ!-நின் மார்பு.**

*கள் அல்லது மது அருந்துதல், பரிகாசம் செய்யக்கூடிய, விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்தினாலும், குடிபோதைக்கு அடிமையானவன், கள்ளையே, மதுவையே விரும்புவது போல், நீ என்னதான் எனக்கு அவமரியாதை செய்தாலும், என்னைத் திருடிய கள்வனே, உன்னுடைய மார்பைத்தான், நான் விரும்புகிறேன்.*

**1289. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்**
**செவ்வி தலைப்படு வார்.**

**மலரினும் மெல்லிது காமம்; சிலர், அதன்**
**செவ்வி தலைப்படுவார்.**

*செவ்வி = வாசனை. அரும்பு. சமயம்.*

*தலைப்படு = தலை சாய். தலையைக் கிள்ளி கீழே போடு.*

*மலரைக் காட்டிலும் மென்மையானது, காமம். சிலர்தான், அதன் நறுமணத்தை, சமயம் பார்த்து தலைசாய்த்து நுகர்கின்றனர்.*

**1290. கண்ணிற் றுளித்தே கலங்கினாள் புல்லுதல்**
**என்னினுந் தான்விதுப் புற்று.**

**கண்ணின் துனித்தே, கலங்கினாள், புல்லுதல்**
**என்னினும் தான் விதுப்புற்று.**

*விதுப்பு = வேகம். விரைவு.*

*என்னைக் காட்டிலும், வேகமாக ஓடி வந்து, தழுவிக் கொண்டு, கண்ணில் நீர் துளிர்க்க, கலங்கினாள்.*

**புணர்ச்சி விதும்பல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*நினைத்தாலே இன்பம் அடைதலும், கண்டாலே மகிழ்ச்சி அடைவதும், கள்ளுக்கு இல்லை, காமத்திற்கு, காதலுக்கு உண்டு.*

*காம உணர்வு பனையளவு மிகுந்து வரவேண்டுமானால், கொஞ் சங் கூட கோபமோ, விலகலோ, சாடியோ, சச்சரவோ, அல்லது வேறு எந்த எதிர்மறை உணர்வோ, இருக்கக் கூடாது.*

*அவன், என்னுடன் நெருங்கி இருந்து, என்னுடைய தேவைகளை, நிறைவு செய்யா விட்டாலும், நான் விரும்பத் தகாததைச் செய்தாலும், என்னைக் கொண்டவனைக் காணாமல், என் கண்கள், அமைதி அடைய மாட்டேன், என்கிறது.*

*அவரைப் பார்த்துச் சண்டை பிடிக்க, நான், கோபம் கொண்ட கண்ணுடன்தான் போனேன். ஆனால், வேடிக்கையைக் கேளேன், என் மனம் பிடித்த தோழியே! ஊடுவதை எல்லாம் மறந்து விட்டு, படுக்கை அறை நோக்கிச் சென்று விட்டது, என் நெஞ்சம்.*

*கண் புருவத்திற்கு மை தீட்டுகையில், குச்சியைப் பார்க்காமல், புருவம் எவ்வளவு சமமாகத் தீட்டப்பட்டது, எனப் பார்ப்பது போல், கவிதை எழுதும்போது எழுதுகோலைப் பார்க்காமல், எழுதிய எழுத்துகளைப் பார்ப்பது போல், ஓவியம் தீட்டும்போது, தூரிகையைப் பார்க்காமல் வரைந்த கோடுகளையும், வண்ணத்தையும் காண்பதுபோல், என்னைக் கொண்டவனைக் காணும்போது, அவனை மட்டும் தான் பார்க்கிறேன், அவனுடைய தவற்றைக் காண்பதில்லை.*

*அவரைப் பார்க்கும்போது, அவர் செய்த தவறுகள், என் கண்களுக்கு தெரிவதில்லை. அவரைப் பார்க்காத போதோ, அவர் செய்த தவறுகளைத் தவிர, வேறெதுவும் எனக்கு தெரிவதில்லை.*

*நீந்தித் தப்பிக்கும் வழி இல்லாமை தெரிந்தும், ஒருவர், ஆற்று வெள்ளத்தில், வேறு வழியின்றி, குதிப்பது போல், என்னுடைய ஊடல் பொய்த்துப் போகும் என அறிந்தும், என் மனத்துன்பத்தை வெளிப்படுத்த வேறு வழியின்றி, ஊடுகிறேன்.*

*கள் அல்லது மது அருந்துதல், பரிகாசம் செய்யக்கூடிய, விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்தினாலும், குடிபோதைக்கு அடிமையானவன், கள்ளையே, மதுவையே விரும்புவது போல், நீ என்னதான் எனக்கு அவமரியாதை செய்தாலும், என்னைத் திருடிய கள்வனே, உன்னுடைய மார்பைத்தான், நான் விரும்புகிறேன்.*

*மலரைக் காட்டிலும் மென்மையானது, காமம். சிலர்தான், அதன் நறுமணத்தை, சமயம் பார்த்து தலைசாய்த்து நுகர்கின்றனர்.*

*என்னைக் காட்டிலும், வேகமாக ஓடி வந்து, தழுவிக் கொண்டு, கண்ணில் நீர் துளிர்க்க, கலங்கினாள்.*

# 130. நெஞ்சொடு புலத்தல்

*நெஞ்சொடு புலத்தல் = நெஞ்சிடம் ஊடல். நெஞ்சமுடன் புலம்புதல்.*

**1291. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே**
**நீயெமக் காகா தது.**

**அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும், எவன்,-நெஞ்சே!-**
**நீ எமக்கு ஆகாதது?**

*அவர் நெஞ்சம், அவரைக் காதலிப்பதைப் பார்த்தும், ஏன் நெஞ்சே, நீ, எனக்காக இல்லாமல் போனது?*

**1292. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்**
**செறாஅ ரெனச்சேறியென் னெஞ்சு.**

**உறாஅதவர்க் கண்ட கண்ணும், அவரைச்**
**செறாஅர் எனச் சேறி-என் நெஞ்சு!**

*நம்மிடம் உறவு கொள்ள விரும்பாதவர், என்று தெரிந்துக் கொண்டப்பின்னும், அவர் நம்மை வெறுக்க மாட்டார் என்று, அவர் பின்னாலேயே ஓடுகின்றாயே, என் நெஞ்சமே!*

*எந்த நம்பிக்கையின் அடிப்படையில், இதை நீ செய்கிறாய்?*

**1293. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ**
**பெட்டாங் கவர்பின் செலல்.**

**'கெட்டார்க்கு நட்டார் இல்' என்பதோ-நெஞ்(8ச!- நீ**
**பெட்டாங்கு அவர்பின் செலல்?**

*பெட்டு = ப் + எட்டு. கொண்டதைப் எட்டிப் பிடித்து. கையைப் பிடித்து.*

*ஆங்கு = அங்கு. தூரம்.*

*நெஞ்சே நீ, அவர் கையைப் பிடித்துக் கொண்டு, அவர் பின்னாலேயே தூரச் செல்லுவது..., ஊம், கெட்டவர்களுக்கு நண்பர்களே இல்லை என்பது, இதுதானா?*

**1294. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே**
**துனிசெய்து துவ்வாய்காண் மற்று.**

**இனி, அன்ன நின்னொடு சூழ்வார் யார்-நெஞ்சே!**
**துனி செய்து துவ்வாய்காண் மற்று?**

*சூழ்வார் = சேர்வார்.*

*துனி = த் + உனி. தேகத்தின் புறத்தே நெருங்கி இருத்தல். கண்ணீர்.*

*துவ்வு = நுகர். உட்கொள். அனுபவி.*

*மற்று = வேறு.*

*என்னுடைய கடினமான சூழலில், என்னைக் கைவிட்டு அவருடன் போன இனிமை, போன்ற உன்னுடன், இனி யார் சேரப்போகிறார்கள்? நெஞ்சே, நீ, கண்ணீர் விடப்போவதோடு மட்டுமல்லாமல், அனுபவிக்கவும் போவதில்லை, பார்.*

**1295. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்**
**அறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.**

**பெறாஅமை அஞ்சும்; பெறின், பிரிவு அஞ்சும்;**
**அறாஅ இடும்பைத்து-என் நெஞ்சு.**

*இடும்பை = பயம்.*

*அவரைப் பெறாமல், சேராமல் போய்விட போகிறோமோ, என பயம். பெற்றால், சேர்ந்தால், பிரிந்துவிட போகிறோமோ, என பயம். பயம், பயம். ஆக மொத்ததில், இடையறாத பயத்தைக் கொண்டுள்ளது, என் நெஞ்சம்.*

**1296. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்**
**தினிய விருத்ததென் நெஞ்சு.**

**தனியே இருந்து நினைத்தக்கால், என்னைத்**
**தினிய இருந்தது-என் நெஞ்சு.**

*தினிய = தின் + இயம். தின்னும் இயல்பு.*

*இருத்து = அமைத்து*

*அவரில்லாமல், நான், தனியாக இருந்து, பிரிவை நினைத்த போது, என்னைத் தின்னும் இயல்புடன், தன்னை அமைத்துக் கொண்டது, என் நெஞ்சம்.*

**1297. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்**
**மாணா மடநெஞ்சிற் பட்டு.**

**நாணும் மறந்தேன்-அவர் மறக்கல்லா என்**
**மாணா மட நெஞ்சின் பட்டு.**

*மாணா = ம் + ஆணா. ம் + ஆளா. அமைதியை ஆள முடியாத.*

*பட்டு = ப் + அட்டு. கொண்டதை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படல். சேர்ந்து.*

*அவரை மறக்க முடியாத, அமைதிப்படுத்த முடியாத, மடத்தனமான நெஞ்சுடன் சேர்ந்து, என் நாணம் எனும் அடக்கத்தையும், இழந்து விட்டேன்.*

**1298. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திறம்
உள்ளு முயிர்க்காத னெஞ்சு.**

**'எள்ளின், இளிவாம்' என்று எண்ணி, அவர் திறம்
உள்ளும்-உயிர்க் காதல் நெஞ்சு.**

*எள்ளு = சிறுமையாய் பேசு. திட்டு.*

*இளிவு = இகழ்ச்சி. தாழ்வு. அசிங்கம்.*

*பிரிந்துச் சென்றவரை, உரக்கத் திட்டினால், அது எனக்கே அசிங்கம் என நினைத்து, அதைக் கண்டு, மற்றவர்களும், அவரையும் என்னையும் தாழ்த்திப் பேசினால், நான் இறந்தே போய் விடுவேன் என்று எண்ணி, அவருடைய திறமைகளை மட்டும் நினைத்துப் பார்க்கும், உயிரைக் காதலிக்கும் நெஞ்சம்.*

**1299. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.**

**துன்பத்திற்கு யாரே துணை ஆவார்-தாம் உடைய
நெஞ்சம் துணை அல்வழி?**

*ஒருவர் படும் மனத்துன்பத்திற்கு, வேறு யார், துணையாக முடியும்? அவருடைய நெஞ்சத்தைத் தவிர, அத்துன்பத்தைப் போக்கும் வழி, வேறு எதுவும் இல்லை.*

**1300. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.**

**தஞ்சம், தமர் அல்லர் ஏதிலார்-தாம் உடைய
நெஞ்சம் தமர் அல்வழி.**

*தமர் = தம் + அர். தம்முடைய ஆள்.*

*மனத்துன்பத்திற்குப் பயந்து, தஞ்சம் அடைந்த நம் நெஞ்சமே, நம்மைப் பாதுகாத்து, நமக்கு ஆதரவாக இல்லாதபோது, எந்த உறவும் இல்லாதவர்கள் கொண்ட நெஞ்சம், நமக்கு ஆதரவாக இல்லாமல்தானே இருக்கும்.*

**நெஞ்சொடு புலத்தல் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அவர் நெஞ்சம், அவரைக் காதலிப்பதைப் பார்த்தும், ஏன் நெஞ்சே, நீ, எனக்காக இல்லாமல் போனது?*

*நம்மிடம் உறவு கொள்ள விரும்பாதவர், என்று தெரிந்துக் கொண்டப்பின்னும், அவர் நம்மை வெறுக்க மாட்டார் என்று, அவர் பின்னாலேயே ஓடுகின்றாயே, என் நெஞ்சமே!*

*நெஞ்சே நீ, அவர் கையைப் பிடித்துக் கொண்டு, அவர் பின்னாலேயே தூரச் செல்லுவது..., ஊம், கெட்டவர்களுக்கு நண்பர்களே இல்லை என்பது, இதுதானா?*

*என்னுடைய கடினமான சூழலில், என்னைக் கைவிட்டுப் போன இனிமை, போன்ற உன்னுடன், இனி யார் சேரப்போகிறார்கள்? நெஞ் சே, நீ, கண்ணீர் விடப்போவதோடு மட்டுமல்லாமல், அனுபவிக்கவும் போவதில்லை, பார்.*

*அவரைப் பெறாமல், சேராமல் போய்விடப் போகிறோமோ, என பயம். பெற்றால், சேர்ந்தால், பிரிந்துவிடப் போகிறோமோ, என பயம். பயம், பயம். ஆக மொத்ததில், இடையறாத பயத்தைக் கொண்டுள்ளது, என் நெஞ்சம்.*

*அவரில்லாமல், நான், தனியாக இருந்து, பிரிவை நினைத்த போது, என்னைத் தின்னும் இயல்புடன், தன்னை அமைத்துக் கொண்டது, என் நெஞ்சம்.*

*அவரை மறக்க முடியாத, அமைதிப்படுத்த முடியாத, மடத்தனமான நெஞ்சுடன் சேர்ந்து, என் நாணம் எனும் அடக்கத்தையும், இழந்து விட்டேன்.*

*பிரிந்து சென்றவரை, உரக்கத் திட்டினால், அது எனக்கே அசிங்கம் என நினைத்து, அதைக் கண்டு, மற்றவர்களும், அவரையும் என்னையும் தாழ்த்திப் பேசினால், நான் இறந்தே போய் விடுவேன் என்று எண்ணி, அவருடைய திறமைகளை மட்டும் நினைத்துப் பார்க்கும், உயிரைக் காதலிக்கும் நெஞ்சம்.*

*ஒருவர் படும் மனத்துன்பத்திற்கு, வேறு யார், துணையாக முடியும்? அவருடைய நெஞ்சத்தைத் தவிர, அத்துன்பத்தைப் போக்கும் வழி, வேறு எதுவும் இல்லை.*

*மனத்துன்பத்திற்குப் பயந்து, தஞ்சம் அடைந்த நம் நெஞ்சமே, நம்மைப் பாதுகாத்து, நமக்கு ஆதரவாக இல்லாதபோது, எந்த உறவும் இல்லாதவர்கள் கொண்ட நெஞ்சம், நமக்கு ஆதரவாக இல்லாமல்தானே இருக்கும்.*

## 131. புலவி

*புலவி = புலம் + வி. புலம் = புல் + அம். சிறிய தன்மை. வி = அப்பால்.*

*புலவி = சிறிய தன்மைக்கு அப்பால். பொய்க் கோபம். ஊடல்.*

**1301. புல்லா திராஅப் புலத்தை யவருறும்
அல்லனோய் காண்கஞ் சிறிது.**

**புல்லாது இராஅப் புலத்தை; அவர் உறும்
அல்லல் நோய் காண்கம், சிறிது.**

*புல்லாது = தழுவாது.*

*இர் = இரு.*

*ஆ = ஆம்*

*அப் = அந்த*

*காண்கம் = காண்போம்.*

*அவர் வந்ததும், ஓடிப்போய்க் கட்டிக் கொள்ளாமல் இரு, ஆம், அந்த ஊடலை, அவர்படும் துன்பங்களை, கொஞ்சம், கண்டு இரசிப்போம்.*

**1302. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.**

**உப்பு அமைந்தற்றால், புலவி; அது சிறிது
மிக்கற்றால், நீள விடல்.**

*உப்பு அமை = உப்பு அளவு.*

*மிக்கற்றா = அதிகம் போன்றது*

*நீள = நீட்டிக்க.*

*உணவுக்கு உப்பு, கூடலுக்கு, ஊடல். இரண்டும், சரியான அளவிலேயெ, இருக்க வேண்டும். ஊடலை, சற்று நீட்டித்தல், உப்பு, உணவில் கொஞ்சம் அதிகமாவதைப் போன்றது.*

*உப்பு, கொஞ்சம் அதிகமாய் போனாலும், உணவை உண்ண முடியாது. ஊடல், சற்று நீண்ட நேரம் நீடித்தாலும், கூடல் இல்லாமல் போய்விடும்.*

**1303. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.**

**அலந்தாரை அல்லல் நோய் செய்தற்றால்-தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.**

அலந்தார் = அலம் + த் + ஆர். அலம் = அல் + அம். இல்லாத தன்மை. இல்லாமை. அலந்தார் = ஒன்றும் இல்லாதவர். வறியர்.

அல்லல் = துடித்தல். துன்பம். தம்மிடம் ஊடிய காதலியைத் தழுவாது போவது, ஏற்கனவே வறுமையில் இருப்பவருக்கு, மேலும் துன்பத்தைக் கொடுப்பது, போன்றதாகும்.

**1304. ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.**

**ஊடியவரை உணராமை-வாடிய
வள்ளி முதல் அரிந்தற்று.**

வள்ளி = வ் + அள்ளி. புறமும் அகமும் அள்ளி. முழுவதும் அள்ளி. காற்று மொத்தமாய் அள்ளுவது. கொடி.

வள்ளி = வ் + அள் + இ. புறமும் அகமும் மிகையாய் இருத்தல்.

முதல் = கொடியின் முதல். வேர். ஊடிய காதலியைத் தழுவாமல், தன் தவறை உணராமல், அமைதிப்படுத்தாமல் இருத்தல், வாடிய கொடியின், வேரையே வெட்டியது, போலாகும்.

**1305. நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.**

**நலத்தகை நல்லவர்க்கு ஏஎர், புலத் தகை,
பூஅன்ன கண்ணார் அகத்து.**

தகை = தன்மை. இயல்பு. குணம். நன்மை. தகுதி.

புலத்தகை = ஊடல். நல்லவர் = ன் + அல் + அவர். நெருங்கி இல்லாதவர். பிரிந்தவர். எர் = எ + இர். உயர்ந்து இருத்தல். அதிகமாய் இருத்தல்.

உயர்ந்த வகையிலான, பக்குவமான ஊடல், காதலியின் உள் மனத்தில் இருந்து வந்து, மலர்போன்ற கண்களின் வழியே, மென்மையாக வெளிப்பட்டால், முன் பிரிந்து, பின் திரும்பி வந்தவருக்கே, அது, இரசிக்கும்படியான சுவையுடன் இருக்கும். ஊடலும், படிப்படியாக, இயல்பாக தணியும். மேலும், ஊடலுக்குப் பிந்தைய கூடலும், அவருக்கு, நல்ல நன்மையான, ஆழ்ந்த சுகத்தை, அன்புடன் கொடுக்கும்.

**1306. துனியும் புலவியு மில்லாயிற் காமம்
கனியும் கருக்காயு மற்று.**

**துனியும் புலவியும் இல்லாயின், காமம்
கனியும் கருக்காயும் அற்று.**

துனி = த் + உன் + இ. தேகம் புறத்தே நெருக்கம் இல்லாமை.

*தேகம் விலகலும், ஊடலும் புலம்பலும், இல்லை என்றால், காமம், காயும் கனியும் அற்று, சுவையற்று நிற்கும்.*

**1307. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது**
**நீடுவ தன்றுகொ லென்று.**

**ஊடலின் உண்டு ஆங்கு ஓர் துன்பம்-'புணர்வது**
**நீடுவது அன்றுகொல்!' என்று.**

*ஊடலின் = ஊடலைக் காட்டிலும்.*

*இவள் எங்கே புலம்பலை நிறுத்தப் போகிறாள். விரைவில், அமைதி அடையப் போவதில்லை. இன்றைக்கு அவ்வளவுதான், அதிக நேரம் இவளுடன் சேர்ந்து இருக்க முடியாது, என்று, ஊடலைக் காட்டிலும், கடினமான துன்பம் ஒன்று, மனத்தில் ஓடிக் கொண்டு இருக்கின்றது.*

**1308. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியும்**
**காதல ரில்லா வழி.**

**நோதல் எவன், மற்று-'நொந்தார்' என்று அஃது அறியும்**
**காதலர் இல்லாவழி!**

*நோதல் = வருந்துதல்*

*எவன் = எதற்கு. பிரிந்த துன்பத்தால்தான், நான் இப்படி கோபமாய்ப் புலம்புகின்றேன் என்று, காரணம், புரிந்து கொள்ளும், காதலர் இல்லாத போது, எதற்கு நான் வருந்துகின்றேன், தேவையில்லை.*

**1309. நீரு நிழல தினிதே புலவியும்**
**வீழுநர் கண்ணே யினிது.**

**நீரும் நிழலது இனிதே; புலவியும்**
**வீழுநர் கண்ணே இனிது.**

*நீரும், நிழலின் கீழ் இருந்தால், குளிர்ச்சியாக, இனிமையாக இருக்கும். ஊடலும், அன்பு கொண்டவர்கள் இடையே நிகழ்ந்தால், மகிழ்ச்சியாக, இன்பமாக இருக்கும்.*

**1310. ஊட லுணங்க விடுவரோ டென்னெஞ்சம்**
**கூடுவே மென்ப தவா.**

**ஊடல் உணங்க, விடுவா ராடு, என் நெஞ்சம்,**
**'கூடுவேம்' என்பது அவா.**

*உணங்கு = உண் + அங்கு. உள் + அங்கு. உள் இடம். சுருங்கு. குறை. தணி.*

அவா = அவ் + ஆ. ஆசை. அவா = அ + வா. இறக்கம்.

கோபமான புலம்பலைத் தடுக்காமல், அதன் போக்கில் ஓடவிட்டு, அதன் வேகத்தையும், வலிமையையும் தணிக்க, பொறுமையாக இருப்பவரோடு, கூடப்போகிறோம் என்று என் நெஞ்சம் சொல்லுவதற்குக் காரணம், ஊடலுக்குப் பின்னால் மறைந்திருக்கும், கூடலுக்கான, அதன் ஆழ்ந்த ஆசைதான்.

## புலவி அதிகாரப் பொருள் தொகுப்பு:

அவர் வந்ததும், ஓடிப்போய்க் கட்டிக் கொள்ளாமல் இரு, ஆம், அந்த ஊடலை, அவர்படும் துன்பங்களை, கொஞ்சம், கண்டு இரசிப்போம்.

உணவுக்கு உப்பு, கூடலுக்கு, ஊடல். இரண்டும், சரியான அளவிலேயெ, இருக்க வேண்டும். ஊடலை, சற்று நீட்டித்தல், உப்பு, உணவில் கொஞ்சம் அதிகமாவதைப் போன்றது.

தம்மிடம் ஊடியவரைத் தழுவாது போவது, ஏற்கனவே வறுமையில் இருப்பவருக்கு, மேலும் துன்பத்தைக் கொடுப்பது, போன்றதாகும்.

ஊடியவரைத் தழுவாமல், தன் தவற்றை உணராமல், அமைதிப்படுத்தாமல் இருத்தல், வாடிய கொடியின், வேரையே வெட்டியது, போலாகும்.

உயர்ந்த வகையிலான, பக்குவமான ஊடல், உள் மனத்தில் இருந்து வந்து, மலர்போன்ற கண்களின் வழியே, மென்மையாக வெளிப்பட்டால், முன் பிரிந்து, பின் திரும்பி வந்தவருக்கே, அது, இரசிக்கும்படியான சுவையுடன் இருக்கும். ஊடலும், படிப்படியாக, இயல்பாக தணியும். மேலும், ஊடலுக்குப் பிந்தைய கூடலும், அவருக்கு, நல்ல நன்மையான, ஆழ்ந்த சுகத்தை, அன்புடன் கொடுக்கும்.

தேகம் விலகலும், ஊடலும் புலம்பலும், இல்லை என்றால், காமம், காயும் கனியும் அற்று, சுவையற்று நிற்கும்.

இவள் எங்கே புலம்பலை நிறுத்தப் போகிறாள். விரைவில், அமைதி அடையப் போவதில்லை. இன்றைக்கு அவ்வளவுதான், அதிக நேரம் இவளுடன் சேர்ந்து இருக்க முடியாது, என்று, ஊடலைக் காட்டிலும், கடினமான துன்பம் ஒன்று, மனத்தில் ஓடிக் கொண்டு இருக்கின்றது.

பிரிந்த துன்பத்தால்தான், நான் இப்படி கோபமாய்ப் புலம்புகின்றேன் என்று, காரணம், புரிந்து கொள்ளும், காதலர் இல்லாத போது, எதற்கு நான் வருந்துகின்றேன், தேவையில்லை.

நீரும், நிழலின் கீழ் இருந்தால், குளிர்ச்சியாக, இனிமையாக இருக்கும். ஊடலும், அன்பு கொண்டவர்கள் இடையே நிகழ்ந்தால், மகிழ்ச்சியாக, இன்பமாக இருக்கும்.

கோபமான புலம்பலைத் தடுக்காமல், அதன் போக்கில் ஓடவிட்டு, அதன் வேகத்தையும், வலிமையையும் தணிக்க, பொறுமையாக இருப்பவரோடு, கூடப்போகிறோம் என்று என் நெஞ்சம் சொல்லுவதற்குக் காரணம், ஊடலுக்குப் பின்னால் மறைந்திருக்கும், கூடலுக்கான, அதன் ஆழ்ந்த ஆசைதான்.

# 132. புலவி நுணுக்கம்

*புலவி நுணுக்கம் = ஊடலின் நுண்மை. ஊடலின் மென்மையான, சுவையான மற்றும் சிக்கலான தன்மை.*

**1311. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்**
**நண்ணேன் பரத்தநின் மார்பு.**

**பெண் இயலார் எல்லாரும் கண்ணின் பொது உண்பர்**
**நண்ணேன்-பரத்த-நின் மார்பு.**

*நண்ணேன் = நெருங்க மாட்டேன்.*

*எல்லா வகையான பெண்களும், மொத்தமாக, கண்கள் மூலமாக, உன் அழகை இரசிக்கின்றனர். உன்னுடைய பரந்த, ஆனால், கண்களால்தான் என்றாலும், மற்றவர்கள் பருகிய மார்பை, ஐய, நான் நெருங்கவே மாட்டேன்.*

**1312. ஊடி யிருந்தேமாத் தும்மினார் தம்மைநாம்**
**நீடுவாழ் கென்பாக் கறிந்து.**

**ஊடி இருந்தேமாத், தும்மினார்-யாம் தம்மை,**
**'நீடு வாழ்க!' என்பாக்கு அறிந்து.**

*அதிக ஊடலால், அவர், என்னிடம் எவ்வளவு சமாதானம் செய்தும், நான், அவருடன் பேசாமல் இருந்தேனா.., அப்பொழுது பார்த்து, வேண்டும் என்றே தும்மினார், நான், அவரை, " நீடூழி வாழ்க", என்று, முகம் மலரச் சொல்லி, என் ஊடலை நிறுத்தி விடுவேன் என்று, நன்றாகத் தெரிந்து கொண்டு.*

**1313. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்**
**காட்டிய சூடினீ ரென்று.**

**கோட்டுப் பூச் சூடினும் காயும்-'ஒருத்தியைக்**
**காட்டிய சூடினரீ !' என்று.**

*கோடு = மரம்*

*காயும் = கோபிப்பாள்*

*காட்டி = நினைத்து. கொடியின் பூவோ அல்லது செடியின் பூவோ கூட இல்லாமல், ஒரு சாதாரண மரத்தின் பூவை, வேடிக்கைக்காக, புதுமைக்காக, அவளுக்குச் சூட்டினாலும், கோபிப்பாள், வேறு ஒருத்தியை நினைத்துத்தான், அதைச் சூட்டினேன் என்று.*

*என்ன செய்ய?*

**1314. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.**

**'யாரினும் காதலம்' என்றேனா, ஊடினாள்-
'யாரினும்! யாரினும்!' என்று.**

*'யாரைக் காட்டிலும், உன்மேல்தான், அதிக காதல் கொண்டிருக்கிறேன்', என்றேனா, அவ்வளவுதான் தாமதம், 'யாரைக் காட்டிலும்.., யாரைக் காட்டிலும்... சொல்லுங்க, சொல்லுங்க!', என்று நச்சரிக்கத் தொடங்கி விட்டாள்.*

*ஒன்றும் சொல்லக் கூடாது!*

**1315. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.**

**'இம்மைப் பிறப்பில் பிரியலம்' என்றேனாக்,
கண் நிறை நீர் கொண்டனள்.**

*இம்மை = இந்தப் பிறப்பு.*

*'இந்தப் பிறப்பில், உன்னைப் பிரிய மாட்டேன்', என்று சொன்னேனா, அதற்குள், அவள் கண்கள் நிறைய, கண்ணீர் வந்து விட்டது. 'அப்படி என்றால், அடுத்த பிறப்பில் நான் வேண்டாமா? என்னைப் பிரிந்து விடுவீர்களா?'.*

*எதைத்தான் சொல்வது?*

**1316. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.**

**'உள்ளினேன்' என்றேன்; 'மற்று என் மறந்தீர்' என்று என்னைப்
புல்லாள், புலத்தக்கனள்.**

*உள்ளு = நினை*

*'அப்பொழுது, உன்னை நினைத்தேன்', என்றேன். 'மறந்தால்தானே நினைக்க முடியும், அப்ப ஏன் மறந்தீங்க? எப்படி மறந்தீங்க?', என்று கேள்விகளால் துளைத்து விட்டு, என்னை அணைக்காமல், என்னையும் அணைக்க விடாமல், முகத்தைக் காட்டாமல், முதுகைக் காட்டி, திரும்பிப் படுத்துக் கொண்டாள், நல்ல ஊடலுக்குத் தகுதியானவள்.*

*இப்பொழுது நான், அவளுடைய கோபம் கொண்ட கண்களைக் காணாமலேயே, அவளைத் தொடலாம், தோளைத் திருப்பலாம், கைகளை இழுக்கலாம், அவளும் சிணுங்கலாம், என்னையும் சேர்த்து இழுக்கலாம், இப்படி எத்தனையோ!*

**1317. வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்**
**யாருள்ளித் தும்மினீ ரென்று.**

**வழுத்தினாள், தும்மினேனாக; அழித்து அழுதாள்,**
**யார் உள்ளித் தும்மினீர்?' என்று.**

*வழுத்து = வ் + அழுத்து. புறமும் அகமும் சேர்ந்து அடர்த்தியாதல். வாழ்த்து.*

*வழித்து = வழி + த் + உ. வழியில் தேகத்தை வெளிப்படுத்து. வழி மறித்து. நிறுத்தி. இடை மறித்து.*

*நான் தும்மியவாறு இருந்தபோது, 'நீடூழி வாழ்க' என்று, தன்னிச்சையாக வாழ்த்தி முடிக்கும் முன், திடுக்கிட்டு, நாக்கைப் பல்லால் கடித்து, வாழ்த்தை, பாதியிலேயே நிறுத்தி விட்டு, 'ஆமாம், நான்தான் இங்கு இருக்கிறேனே, அப்பொழுது, யாரை நினைத்து தும்மினீர்கள்', என்று அழத் தொடங்கி விட்டாள்.*

**1318. தும்முச் செறிப்ப வழுதாள் நுமருள்ளல்**
**எம்மை மறைத்திரோ வென்று.**

**தும்முச் செறுப்ப, அழுதாள், 'நுமர் உள்ளல்**
**எம்மை மறைத்திரோ?' என்று.**

*செறி = அடக்கு*

*நுமர் = உங்களுடைய.*

*வந்த தும்மலை, நான் அடக்க, 'எவளையோ நினைக்கிற உங்களுடைய நினைப்பு, எனக்குத் தெரிய கூடாதென்று, மறைக்கிறீர்களா?' என்று அழத் தொடங்கினாள்.*

**1319. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்**
**இந்நீர ராகுதி ரென்று.**

**தன்னை உணர்த்தினும் காயும், 'பிறர்க்கு நீர்**
**இந் நீரர் ஆகுதிர்!' என்று.**

*இந்நீரர் = இந்த இயல்பினர்.*

*ஆகுதிர் = ஆகின்றீர்*

*'நான் யாரையும் நினைக்கவில்லை. எனக்கு யாரையும் தெரியாது. உன்னைத்தவிர வேறு யாரை நான் நினைக்கப்போகிறேன்? ஏதோ, யதேச்சையாகத் தும்மல் வந்து விட்டது', போன்று பணிவாகத் தன்னிலையை உணர்த்தினாலும், 'ஆமாம், இந்த மாதிரிதான், நீங்கள், மற்ற எல்லாப் பெண்களிடமும், வழிகிறீர்கள் போலிருக்கிறதே!' என்று குற்றம் சாட்டுவாள்.*

*எதைதான் சொல்வது? பேசாமல் இருக்க வேண்டியதுதான்.*

**1320. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்**
**யாருள்ளி நோக்கினீ ரென்று.**

**நினைத்திருந்து நோக்கினும், காயும், 'அனைத்து நீர்**
**யார் உள்ளி நோக்கினீர்?' என்று.**

*'என்ன பேசினால், இவள் கோபிக்காமல் இருப்பாள்', என்று எதுவும் பேசாமல், அவளை உற்றுப் பார்த்தவாறே இருந்தால், அதற்கும் கோபப்படுவாள், 'மனதுக்குள், நீங்கள், யாரை நினைத்து, என்னை அப்படிப் பார்க்கிறீர்கள்?', என்று.*

*அப்பப்பா, போதும் போதும்.*

**புலவி நுணுக்கம் அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*எல்லா வகையான பெண்களும், மொத்தமாக, கண்கள் மூலமாக, உன் அழகை இரசிக்கின்றனர். உன்னுடைய பரந்த, ஆனால், கண்களால்தான் என்றாலும், மற்றவர்கள் பருகிய மார்பை, ஐய, நான் நெருங்கவே மாட்டேன்.*

*அதிக ஊடலால், அவர், என்னிடம் எவ்வளவு சமாதானம் செய்தும், நான், அவருடன் பேசாமல் இருந்தேனா.., அப்பொழுது பார்த்து, வேண்டும் என்றே தும்மினார், நான், அவரை, "நீடூழி வாழ்க", என்று, முகம் மலரச் சொல்லி, என் ஊடலை நிறுத்தி விடுவேன் என்று, நன்றாகத் தெரிந்து கொண்டு.*

*கொடியின் பூவோ அல்லது செடியின் பூவோ கூட இல்லாமல், ஒரு சாதாரண மரத்தின் பூவை, வேடிக்கைக்காக, புதுமைக்காக, அவளுக்குச் சூட்டினாலும், கோபிப்பாள், வேறு ஒருத்தியை நினைத்துத்தான், அதைச் சூட்டினேன் என்று. என்ன செய்ய?*

*'யாரைக் காட்டிலும், உன்மேல்தான், அதிக காதல் கொண்டிருக்கிறேன்', என்றேனா, அவ்வளவுதான் தாமதம், 'யாரைக் காட்டிலும்.., யாரைக் காட்டிலும்... சொல்லுங்க, சொல்லுங்க!', என்று நச்சரிக்கத் தொடங்கி விட்டாள். ஒன்றும் சொல்லக் கூடாது!*

*'இந்தப் பிறப்பில், உன்னைப் பிரிய மாட்டேன்', என்று சொன்னேனா, அதற்குள், அவள் கண்கள் நிறைய, கண்ணீர் வந்து விட்டது. 'அப்படி என்றால், அடுத்த பிறப்பில் நான் வேண்டாமா? என்னைப் பிரிந்து விடுவீர்களா?'. எதைத்தான் சொல்வது?*

*'அப்பொழுது, உன்னை நினைத்தேன்', என்றேன். 'மறந்தால்தானே நினைக்க முடியும், அப்ப ஏன் மறந்தீங்க? எப்படி மறந்தீங்க?', என்று கேள்விகளால் துளைத்து விட்டு, என்னை அணைக்காமல், என்னையும்அணைக்க விடாமல், முகத்தைக் காட்டாமல், முதுகைக் காட்டி, திரும்பிப் படுத்துக் கொண்டாள், நல்ல ஊடலுக்கு தகுதியானவள்.*

*நான் தும்மியவாறு இருந்தபோது, 'நீடூழி வாழ்க' என்று, தன்னிச்சையாக வாழ்த்தி முடிக்கும் முன், திடுக்கிட்டு, நாக்கைப் பல்லால் கடித்து, வாழ்த்தை, பாதியிலேயே நிறுத்தி விட்டு, 'ஆமாம், நான்தான்*

*இங்கு இருக்கிறேனே, அப்பொழுது, யாரை நினைத்துத் தும்மினீர்கள்', என்று அழத் தொடங்கி விட்டாள்.*

*வந்த தும்மலை, நான் அடக்க, ''எவளையோ நினைக்கிற உங்களுடைய நினைப்பு, எனக்குத் தெரிய கூடாதென்று, மறைக்கிறீர்களா?", என்று அழத் தொடங்கினாள்.*

*'நான் யாரையும் நினைக்கவில்லை. எனக்கு யாரையும் தெரியாது. உன்னைத்தவிர வேறு யாரை நான் நினைக்கப்போகிறேன்? ஏதோ, யதேச்சையாகத் தும்மல் வந்து விட்டது', போன்று பணிவாகத் தன்னிலையை உணர்த்தினாலும், 'ஆமாம், இந்த மாதிரிதான், நீங்கள், மற்ற எல்லாப் பெண்களிடமும், வழிகிறீர்கள் போலிருக்கிறதே!' என்று குற்றம் சாட்டுவாள். எதைதான் சொல்வது? பேசாமல் இருக்க வேண்டியதுதான்.*

*'என்ன பேசினால், இவள் கோபிக்காமல் இருப்பாள்', என்று எதுவும் பேசாமல், அவளை உற்றுப் பார்த்தவாறே இருந்தால், அதற்கும் கோபப்படுவாள், 'மனதுக்குள், நீங்கள், யாரை நினைத்து, என்னை அப்படிப் பார்க்கிறீர்கள்?', என்று. அப்பப்பா, போதும் போதும்.*

## 133. ஊடலுவகை

*ஊடலுவகை = ஊடல் + உவகை. உவகை = உ + வகை. வெளிப்படும் விதங்கள். உள் வகை. உவகை = உ + அகை. புறத்தில் மலர்தல். உள் மலர்தல். மனம் மலர்தல். இன்பம்.*

*ஊடலுவகை = ஊடல் இன்பம்.*

**1321. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்**
**வல்ல தவரளிக்கு மாறு.**

**இல்லை தவறு அவர்க்கு ஆயினும், ஊடுதல்**
**வல்லது, அவர் அளிக்குமாறு.**

*வல்லது = வலிமையானது*

*அளி = மிகுந்த சுகம் தா. ஒளியாய் நிலை. கூடல். உடல் உறவு.*

*அவர்மேல் தவறில்லை என்றாலும், எந்த வீண்பழியையாவது அவர் மேல் போட்டு, அவரைச் சும்மா சீண்டுவது, அவர் கூடலில், அன்போடு வலிமையாகவும், மிகையாகவும், நீண்ட நேரமும் இருந்திடும்படி செய்யும்.*

**1322. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி**
**வாடினும் பாடு பெறும்.**

**ஊடலின் தோன்றும் சிறு துனி, நல் அளி**
**வாடினும் பாடு பெறும்,**

*துனி = கோபம். கண்ணீர்.*

*நல்லளி = அன்புள்ள கூடல்.*

*வாடு = தளர்*

*பாடு = உயிர்ப்பு. உறுதி. செயல்.*

*ஊடல் என்ற சிறு பிணக்குகள், ஒரு வகையான, உளவியல் தடைக்கற்கள். அவை காமத்தின் வேகத்தைக் குறைத்து, காதல் பயணத்தை நிதானமாக்கி, வழியெல்லாம், கொட்டிக் கிடக்கும் அழகையும், குளிர்ச்சியையும், ஆனந்த சுகத்தையும் சேர்ந்து இருந்து, அனுபவிக்க வைக்கும்.*

**1323. புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு**
**நீரியைந் தன்னா ரகத்து.**

**புலத்தலின் புத்தேள்-நாடு உண்டோ-நிலததொடு**
**நீர் இயை தன்னாரகத்து**

புத்தேள் = புத் + ஏள். புத் = ப் + உ + த். மனம் புற தேகம். மனம் புறவெளி தன்மையாதல். அல்லது மனவெளியின் உள்ளே தேகவுணர்வு. ஏள் = ஏ + ள். மிக உயர்ந்த மிகை. மிக உயர்ந்த அதிர்வலை. நுண்மையான ஒளி. புத்தேள் = அகம் புறத்துடன் ஒன்றிய நிலை. ஞான நிலை. மெய்யுணர்வு. ஒரே மாதிரியான, மாற்றமில்லா பேரின்ப நிலை.

மண்ணுடன், தண்ணீர் கலந்து, ஒன்று சேர்ந்ததைப் போன்று, மனத்தின் அன்பால், இணைந்து, ஒன்று சேர்ந்தவர்களின் ஊடலைக் காட்டிலும், மெய்ஞான உலகில், இன்பத்தை அதிகரிக்கச் செய்யும் செயல்பாடு, ஏதேனும் உண்டோ? இல்லை.

**1324. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்**
**உள்ள முடைக்கும் படை.**

**புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்-என்**
**உள்ளம் உடைக்கும் படை.**

புல்லு = தழுவு.

புலவி = ஊடல்.

உள்ளம் = உள் + அம். இருக்கும் தன்மை. உள்ளது.

அவர், என்னைத் தழுவ விடாது செய்யும், அந்த ஊடலின் உள்ளேயே தோன்றும், (இப்படியே போனால், கூடுவது அரிதாகிவிடும், சீக்கிரமாய் ஊடலை முடித்துக் கொள் என) என் உள்ளத்தின் உறுதியை உடைக்கும் படை.

**1325. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோள்**
**அகறலி னாங்கொன் றுடைத்து.**

**தவறு இலர் ஆயினும் தாம் வீழ்வார் மன்தோள்**
**அகறலின், ஆங்கு ஒன்று உடைத்து.**

அகறல் = விலகல். நகர்தல்.

காதலர், தவறே செய்யாத போதும், அவருக்கு, எந்த மன உறுத்தலும், இல்லாத போதும், காதலியின் மென்மையான தோள், அவரை விட்டு, சற்று விலகினால், அங்கு, ஒரு சிறிய, மெல்லிய, ஊடல் இன்பம் தோன்றி விடுகின்றது.

**1326. உணலினு முண்ட தறலினிது காமம்**
**புணர்தலி னூட லினிது.**

**உணலினும், உண்டது அறல் இனிது காமம்**
**புணர்தலின், ஊடல் இனிது.**

*உண்பதைக் காட்டிலும், உண்டது நீங்குதல் இனிமையானது, நல்லது. ஏனென்றால், அதற்குப் பின் உண்பதே, நாக்குக்கு, சுவையாய் இருக்கும், உடல் ஆரோக்கியத்திற்கும், அதுவே நல்லது. காதலில், உடல் உறவைக் காட்டிலும், ஊடல் செய்வது இனிமையானது, நல்லது. ஏனென்றால், ஊடலுக்குப்பின் கூடுவதே, உடலுக்கு, அதிக சுகமாய் இருக்கும், உள்ளங்களின் ஆரோக்கியத்திற்கும், அதுவே நல்லது. ஊடல் கூடலுக்கு மருந்து.*

**1327. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும்**
**கூடலிற் காணப் படும்.**

**ஊடலி தோற்றவர் வென்றார்; அது மன்னும்**
**கூடலி காணப்படும்.**

*மன்னு = ம் + அன் + உ. கொண்டு மூடி நெருங்கி உள் இருத்தல்.*

*ஊடலில் தோற்ற காதலர், உண்மையில் வென்றவர் என்பது, அமைதியாய், மிகும் கூடல் இன்பத்தில் தெரிந்து விடும். ஊடலில் வென்ற காதலி, கூடலில், காதலனுக்கு வேண்டியதெல்லாமும், தந்து விடுவாள்.*

**1328. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்**
**கூடலிற் றோன்றிய உப்பு.**

**ஊடிப் பெறுகுவம் கொல்லோ-நுதல் வெயர்ப்பக்**
**கூடலி தோன்றிய உப்பு.**

*நுதல் = நெற்றி.*

*உப்பு = விந்து.*

*ஊடிய பிறகு, நெற்றி வியர்க்கும் அளவுக்கு, நீண்ட நேரம், வலிமையாய்க் கொண்ட கூடலில் தோன்றும், உப்பு கரிக்கும் விந்தினைப் பெறுவோம், அல்லவா?*

**1329. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப**
**நீடுக மன்னோ விரா.**

**ஊடுக மன்னோ, ஒளியிழை! யாம் இரப்ப,**
**நீடுக மன்னோ, இரா!**

*மன்னோ = மன் ஓ! ஓ மனமே!*

*ஒளியிழை = ஒளி + இழை. ஒளிரும் அணியைப் பெற்றவள்*

*ஊடட்டும், ஓ மனமே!, ஒளிரும் அணியைப் பெற்றவள். கூடலுக்கு நான் கெஞ்ச, ஓ மனமே!, நீளட்டும் இந்த இரவு.*

**1330.** **ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்.**

**ஊடுதல் காமத்திற்கு இன்பம்; அதற்கு இன்பம்,**
**கூடி முயங்கப்பெறின்.**

*இன்பமதற்கின்பம் = இன்பத்திற்கே இன்பம்.*

*ஊடுதல், கூடுதலுக்கு இன்பம். கூடல் முடிந்தப்பின், தழுவிக் கொண்டால், அது, கூடிய இன்பத்திற்கே, இன்பம் ஆகும். பேரின்பமாகும்! ஊடுதல்தான் இன்பம், கூடுதலுக்கு இட்டுச் செல்லுமாயின்.*

**ஊடலுவகை அதிகாரப் பொருள் தொகுப்பு:**

*அவர்மேல் தவறில்லை என்றாலும், எந்த வீண்பழியையாவது அவர் மேல் போட்டு, அவரைச் சும்மா சீண்டுவது, அவர் கூடலில், வலிமையாகவும், மிகையாகவும், நீண்ட நேரமும் இருந்திடும்படி செய்யும்.*

*அன்புடன், கூடவே இருந்து, வழக்கமாக உடல் உறவு கொள்பவர், இயந்திரகதியில் ஈடுபட்டால், அவரின் செயல்பாடு, தளர்ந்தே காணப்படும். அச்சமயம், ஊடலில் உருவாகும், சிறிய கோபமோ, கண்ணீர் துளியோ, கதையின் போக்கையே மாற்றி விடும். அவருள், புத்துணர்ச்சி எழும், ஊடியவளை மகிழ்விக்கும் கூடுதல் முயற்சியால், உடல் உறவும், எதிர்பார்த்த திருப்தியைத் தரும்.*

*மண்ணுடன், தண்ணீர் கலந்து, ஒன்று சேர்ந்ததைப் போன்று, மனத்தின் அன்பால், இணைந்து, ஒன்று சேர்ந்தவர்களின் ஊடலைக் காட்டிலும், மெய்ஞான உலகில், இன்பத்தை அதிகரிக்கச் செய்யும் செயல்பாடு, ஏதேனும் உண்டோ? இல்லை.*

*இருவரும், தழுவிய பின்பும், விடாமல் தொடரும், என், புலம்பலுக்குள்ளே உருவாகும், என்னிடம் உள்ள தழுவலைப் பிரிக்கும், எதிரிப்படை.*

*காதலர், தவறே செய்யாத போதும், அவருக்கு, எந்த மன உறுத்தலும், இல்லாத போதும், காதலியின் மென்மையான தோள், அவரை விட்டு, சற்று விலகினால், அங்கு, ஒரு சிறிய, மெல்லிய, ஊடல் தோன்றி விடுகின்றது.*

*உண்பதைக் காட்டிலும், உண்டது நீங்குதல் இனிமையானது, நல்லது. ஏனென்றால், அதற்குப் பின் உண்பதே, நாக்குக்கு, சுவையாய் இருக்கும், உடல் ஆரோக்கியத்திற்கும், அதுவே நல்லது. காதலில், உடல் உறவைக் காட்டிலும், ஊடல் செய்வது இனிமையானது, நல்லது. ஏனென்றால், ஊடலுக்குப்பின் கூடுவதே, உடலுக்கு, அதிக சுகமாய் இருக்கும், உள்ளங்களின் ஆரோக்கியத்திற்கும், அதுவே நல்லது. ஊடல் கூடலுக்கு மருந்து.*

*ஊடலில் தோற்ற காதலர், உண்மையில் வென்றவர் என்பது, அமைதியாய், நீண்ட நேரம், தாக்குப் பிடிக்கும், உடல் உறவில்*

தெரிந்து விடும். ஊடலில் வென்ற காதலி, கூடலில், காதலனுக்கு வேண்டியதெல்லாமும், தந்து விடுவாள்.

ஊடியப் பிறகு, நெற்றி வியர்க்கும் அளவுக்கு, நீண்ட நேரம், வலிமையாய் கொண்ட கூடலில் தோன்றிய, உப்பு கரிக்கும் விந்தினைப் பெறுவோம், அல்லவா?

ஊடட்டும், ஓ மனமே!, ஒளிரும் இழையைப் பெற்றவள். கூடலுக்கு நான் கெஞ்ச, ஓ மனமே!, நீளட்டும் இந்த இரவு.

ஊடுதல், கூடுதலுக்கு இன்பம். கூடல் முடிந்தப்பின், தழுவிக் கொண்டால், அது, கூடிய இன்பத்திற்கே, இன்பம் ஆகும். பேரின்பமாகும்!

******* முற்றும் ********

# புதிய முயற்சியும் மீள்பார்வைத் தேவையும்

தமிழ் இலக்கியங்களுக்கான தனிச்சிறப்பே அவை நவில்தொறும் நயம்பல காட்டுவதுதான். திருக்குறளுக்கு ஓர் உரை போதுமெனத் தமிழர்கள் எண்ணவில்லை. உரைகள் பலவற்றை இன்றைக்கும் பலர் தீட்டி வருவது முப்பாலின் பெருமையை எடுத்துரைக்கும். காலந்தோறும் திருக்குறளைப் பல்வகைக் கண்ணாடிகள் அணிந்து பல கோணங்களில் அலசி வந்தனர். அலசி வருகின்றனர். படிப்பவர்களின் சிந்தனைகளைத் தூண்டிவிடும் பேராற்றலை ஏனைய பனுவல்களைவிட திருக்குறள் மிகுதியாகவே கொண்டுள்ளது என்பது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

தமிழக எல்லைக்கு அப்பால் முப்பாலை வெவ்வேறு நோக்கங்களுடன் அணுகுவாரின் கருத்துரைகள் கவனத்துக்குரியன. காலமெலாம் எழுத்து, சொல், பொருள் இவற்றில் திளைக்கும் கனடா நாட்டுத் தமிழறிஞர் முனைவர் தீனதயாளன் முப்பாலைக் கையிலெடுத்துள்ளார். 'சொல்லாக்கியம்' தந்த இந்த 'சொல்லாக்கியன்' திருக்குறளை மறுவாசிப்புப் செய்து ஏறத்தாழ அறுநூறு பக்க அளவில் தன் எழுத்துரையை உருவாக்கியுள்ளார். சொல்லுடைப்புத் தொடங்கி அதிகாரப் பொருள் தொகுப்பு வரையிலான அவரின் முயல்வுகள் சற்றே ஆழமாக உற்றுநோக்கத்தக்கன. அவருடைய எழுத்துப் படிவத்தை கண்ணுறும் நல்வாய்ப்பைப் பற்றி மனதுள் எழுந்த கருத்தலைகளை இவன் 'பதிவிறக்கம்' செய்ய முனைகின்றேன். அவ்வளவே...

"திருக்குறளை முடிந்தவரை நேரடியாகச் சந்திக்க" முயன்றுள்ளதாக முன்னுரையில் குறிப்பிடும் இந்த அறிஞர் "இது புதுஉரை என்பதைவிட மறுவாசிப்பு என்பதே பொருத்தமானதாய் இருக்கும்" என ஒப்புதல் வாக்குமூலம் தந்துள்ளார்.

'சொல்லாக்கியம்' நூலின் செய்திகள் மீளவும் அவரால் சுருக்கமாக அறிமுகவரையில் தரப்பட்டுள்ளன. "ஒரு சொல், ஒரு பொருளைக் குறிக்குமானால், சொல்லின் அங்கங்களான அசைகளும் பகுதிப் பொருள்களைக் குறிக்க வேண்டுமல்லவா? ஆசையின் அங்கங்களான எழுத்துகளும், அடிப்படையான பொருள்கூறுகளைக் கொண்டிருக்க வேண்டும் அல்லவா?" என்ற வரிகள்தாம் அவருக்கான மூலமந்திரமாகின. அதன் வெளிப்பாடே இந்தப் புத்தகம்.

இந்த அடித்தளத்தில் அவருடைய விரலைப் பற்றிக்கொண்ட அவரின் எழுத்துகள் மீது பயணம் செய்ய வேண்டியுள்ளது. அப்படியிருந்தும், "ஒவ்வொரு எழுத்துக்குமான பொருள் என்ன?" என்ற பகுதி வரும்போது கண்ணைக் கட்டிக் கொண்டு காட்டில் அலைவதைக் போலத் தோன்றும்.

தொல்காப்பியர் பிறப்பியலில் எழுத்துகளின் ஒலிப்புக்கான முறைமைகளைக் கூறுவார். அனைத்து எழுத்துகளுக்கும் அவர் வரிவடிவம் தீட்டவில்லை. ஆனால் முனைவர் தீனதயாளன் 'அ' என்ற எழுத்துள் காணலாகும் வட்டம், படுக்கைக்கோடு, செங்குத்துக் கோடு என எல்லாவற்றிற்கும் பொருள் உள்ளதாகக் கருதுகிறார். அவர் தரும் விளக்கம் அவருடைய சொந்த விளக்கம் போலவே (PERSONAL INTER PRETATION) தோன்றும். ஆனாலும் ஏதோ ஒன்றை ஆழமாகக் கூற விழையும் அவருடைய கருத்தைப் புறந்தள்ளவும் இயலவில்லை.

நூலின் அகலநீளங்களை அளந்து வரும்போது, பாராட்டுதலுக்கு உரிய பகுதிகள் தென்பட்டன.

*1.* ஒவ்வோர் அதிகாரத்தின் நிறைவுப் பகுதியில் "அதிகாரப் பொருள் தொகுப்பு" என்ற தலைப்பின் கீழ் பத்துக் குறள்களுக்குமான உரைகள் நிரல்படுத்தித் தரப்பட்டுள்ளன. இப்பகுதியில் எந்த விவாதங்களும் இல்லை என்பதால் செய்திகளைத் தொடர்ச்சியாக உள்வாங்க முடிகின்றது.

*2.* ஆழமான எண்ணங்களைக்கூட ஆர்ப்பாட்டமில்லாமல் பரிமாறும் நேர்த்தியை பல இடங்களில் கண்டுமகிழலாம். சான்றாக, 410ஆம் குறள், 'விலங்கொடு மக்கள் அனையர்' எனத் தொடங்கும் உரிய உரைக்குப் பின் இடம்பெறும் நன்மை செய்வதிலும் தீமை செய்வதிலும் விலங்கும் மனிதரும் இயல்பில் சமமே. கல்விதான் விலங்கையும், மனிதனையும் வேறுபடுத்துகின்றது. மனிதனை உயர்த்துகின்றது. விலங்கு கற்க முடியாததால் தன்னிலையிலேயே நிற்கின்றது' என்ற சொல்லாடல்கள் பயனையும் பொலிவையும் ஒருங்கே வழங்கும்.

*3.* 64ஆம் அதிகாரம் 'அமைச்சு' என்பது. தலைப்பின் கீழ் "இக்குறள்கள் இராணுவம், கட்டுமானம், விவசாயம், தொழில், மருத்துவம் பொருந்தும். குறள் பல தளங்களிலும், பல தளங்களிலும் பொருந்தும் அருமை, பெருமை!... திருக்குறள் ஓர் உலக நூல், பொது நூல். அதேசமயம், ஒவ்வோருக்குமான தனிநூல்" என்று நூலாசிரியர் பேசுமிடம் கவனத்துக்குரியது.

*4.* காரண காரியங்களை முன்னிறுத்திப் பேராசிரியர் தீனதயாளன் மறுவாசிப்புச் செய்வதையும் கண்டுமகிழலாம். ஒரு பதச்சோறும் 443ஆம் குறளுக்கு விளக்கம் வரையும்போது முதற்பகுதியில் "ஞானியரை ஆதரித்துத் தம்முடையவராய் ஆக்கிக்கொள்ளுதல், கடினமான எல்லாவற்றிலும் மிகக் கடினமானது" என எழுதுபவர், தொடர்ந்து "ஏனெனின் ஞானியர் அகந்தையை விட்டவர். பிறருடைய அகந்தையையும் ஏற்காதவர். பணிவு ஒன்றே அவர்களைப் பணிய வைக்கும். அரசர் பொதுவாக பணியாதவர். எனவே இயல்பாகவே அரசருக்கு, ஞானியரைத் தம்முடையவராய் ஆக்கிக்கொள்வது கடினந்தான். தனக்கும் இழுக்க வராமல், ஞானியரும்

தன்னிடம் குற்றம் காணாமல் பழகுவது கடினந்தான்'' என நீண்டதாக கூடுதல் விளக்கம் தருகிறார், பாராட்டத்தானே வேண்டும்.

*5.* இயல்பான விளக்கத்தைக் கூடுதல் புனைவுகளின்றி எளிமையான நல்கும் இடங்கள் படிப்பதை வெகு இலகுவாக பொருளுரைச் செய்யும். *706*ஆம் குறளுக்கு தனக்கு அடுத்து இருப்பதை, அது உள்ளவாறே காட்டுவது பளிங்கு. அதைப்போலவே நெஞ்சத்தை அடுத்து இருக்கும். எண்ணத்தை அது உள்ளபடியே காட்டுவது ஆகும்'' என்று விளக்கும் பகுதி இதற்கோர் எடுத்துக்காட்டாகும்.

*6.* இருவரிகளில் இயங்கும் குறளுக்கு இருவரிகளின் உரை வழங்குமிடங்களில் நூலாசானின் தெளிவை உணரலாம்.

''பொருள் இல்லாத வறியவரை'' எல்லாரும் சிறுமையாகப் பேசுவர். செல்வம் உள்ளவரை எல்லாரும் பெருமையாய் புகழ்ந்துப் பேசுவர்'' எனற் ஈரடிகள் *752*ஆம் குறளுக்கான விளக்கம்.

இவை போன்ற பகுதிகளை நூலின் பல இடங்களில் படித்து இன்புற இயலும்.

**விவாதங்களும் களம் அமைக்கும் இடங்கள்:**

நூலின் பல பகுதிகளை அப்படியே ஏற்பதென்பது கடினம். கடுமையான விவாதங்களை உடன்வைத்துக் காண வேண்டிய தேவை அவ்விடங்களில் உளது.

*(1) 405*ஆம் குறளில் 'தலைப்பெய்து' என்ற சொல் இடம்பெறும். இதற்குக் கற்றவனைக் கண்டு எனவும் அருகில் சென்று என்பதைக் குறிக்கும் 'கிட்டி' எனவும் பொருள் தருவர். நூலாசிரியரோ பேசப்போகும் தலைப்பைக் கூறியவுடன் எனப் புதிய விளக்கம் தருகின்றார். அரங்கம் போன்ற மனத்துள் வரித்துக் கொண்டதனால் இப்பொருள் அவரால் உரைக்கப் பெற்றிருக்க வேண்டும். ''நாங்கள் நான்கு பேர் உரையாடிக் கொண்டிருந்தபோது, ஒருவன் மட்டும் சில மணித்துளிகளில் கம்பி நீட்டிவிட்டான்'' என வருமிடங்களில் 'கம்பி நீட்டுதல்' என்ற சொல்லடுக்கு அவ்விடத்தை விட்டு அகன்றதைக் குறிக்குமே தவிர வேறு பொருளுக்கு இடமில்லை. கம்பி என்பதற்கான அகராதிப் பொருள்களை நினைத்து வெள்ளிக் கம்பியா இரும்புக் கம்பியா எனக் கேட்பது வழக்கமில்லை. 'கல்லாமை' பற்றிய பகுதி என்பதால் தலைப்பைக் கூட கற்காதவன் என ஆசிரியர் கருதியிருத்தல் கூடும் என்னும் இது மீள்பார்வைக்கு உரியது.

*(2)* சொல்லைப் பிரிக்கும்போது, பிரிக்கப்பெறும் பகுதிகள் ஏதேனும் பொருளைக் கொண்டிருக்க வேண்டும். தங்கக் கலசம் என்ற சொல்லாட்சியைத் தங்கம் + கலசம் எனப் பிரிப்பதைச் சான்றாக்கலாம். நூலாசிரியர் *409*ஆம் பாடலில் பயிலும் சொற்களை விளக்கும்போது பாடு = ப்+ஆட்+உ எனப் பிரிப்பர். இப்படிப் பிரிப்பதுடன் ''தூய வெளியான உயிரை ஒட்டித் தொடர்ந்து வெளிப்படுவது'' என்ற விவரிப்பும் தருகிறார் அவர். இதற்கு முன்பு அப்படி எவரும் பொருள் கூறவில்லை. இந்நூலாசிரியரை முதலாமவர் என்று கொண்டாலும் இவ்விளக்கம் எதனடிப்படையில் தரப்பட்டுள்ளது எனப் புரியவில்லை.

(3) 42ஆம் அதிகாரம் ‘கேள்வி’. ‘கேள்=க்+ஏள்’ என்பது தீனதயாளம். சொல்லின் முதலில் ஒற்று வராது என்பது தமிழர் நெறி. வடமொழியில் க்ருபை, ஸ்வஸ்திக், ப்ரியா என்பன போல வரும். 411, 412, 475 போன்ற பல குறள்களுக்கான விளக்கங்களில் ஒற்று மட்டும் தனித்துச் சுட்டப்பெறுமாறு அமையும் குறிப்புகள் மயக்கத்தைத் தரும். எழுத்தில் காணப்பெறும் இத்தகு குழப்பங்களை நூலாசிரியர் சொல்லை விளக்குமிடத்திற்கும் நீட்டித்துக் கொள்கிறார். இதற்கொரு சான்று வருமாறு:

‘பீலி = ப்+ஈல்+இ – என்பது தருவது மேலும் கீழுமாய் இருத்தல்’’ என்பது நூலாசிரியர் தரும் விளக்கம். இக்குறளில் வரும் பீலி என்பது மிக நொய்தான தோகை எனக் கொள்ளாமையும் வேறு பொருளைக் கருதியமையும் இவ்வாறான விளக்கத்தை உருவாக்கி இருக்கலாம்.

(4) 520ஆம் குறட்பாவை விளக்கும் ஆசிரியர் கோடு=க்+ஓட்+உ என்பார். அவரே 546ஆம் குறட்பாவை விளக்குமிடத்து இத்தகைய பிரிப்பைக் ‘கேடாது’ ன்ற சொல்வருங்கால் எடுத்துமொழியார். சொல் ஒன்று பல இடங்களில் வெவ்வேறு பொருண்மைகளைத் தரும். கால் என்ற சொல் ஓரிடத்தில் மனித உறுப்பையும், பிறிதோரிடத்தில் காற்றையும் மற்றோரிடத்தில் நான்கில் ஒரு பங்கையும் தரும். ஓரெழுத்து அவ்விதமாகப் பொருள் தருமா என்பது உற்றுநோக்க வேண்டிய பகுதி. 409ஆம் பாடலில் வரும் பாடு என்ற சொல் ப்+ஆட்+உ என ஆசிரியரால் பிரிக்கப்படும். ப் என்பது தூயவெளியான உயிர் என்பது விளக்கம். 45ஆம் அதிகாரத் தலைப்பை விளக்கும்போது பெரியார் என்பது ப்+எர்+இ+அர் எனக் கொள்ளப்படும். இவ்விடத்தில் ‘ப்’ என்பது கொண்டதில் உயர்வு என வருவித்துக் கொள்ளப்படும். இது சரியானதுதானா என்ற ஐயம் நீக்கமற நிறைந்துள்ளது.

(5) கொடுங்கோன்மை = கொடும்+கோல்+மை. கொடும்=கொட்டும்; அடிக்கும். கொடுங்கோன்மை = அடிக்கும் கோலின் தன்மை என்ற விளக்கமும் தடுமாற்றத்தைத் தரும். செங்கோன்மை என்பது நல்லாட்சியைக் குறிக்கும். அல்லாத ஆட்சிக்குக் கொடுங்கோன்மை ஒரு குறியீடு. இதற்கும் அடித்தலுக்கும் என்ன தொடர்பு எனத் தெளிவுப்படுத்த இயலாமற் போகிறது.

(6) நீ, தீ, ஆ போன்ற ஓரெழுத்தில் சொற்கள் அமையும்.

சொல் முதலாக இவ்வெழுத்துகள் வருங்கால் தனித்துப் பிரிப்பது தகுமா? என்பது அடர்த்தியான கேள்வி. சான்றாக ‘நீ’ என்ற சொல் முன்னிலையில் உள்ள ஒருமையை உணர்த்தும் நீலம் என்ற சொல்லையும் நீளம் என்ற சொல்லையும் பிரித்துப் போட்டு (முன்னிலை, ஒருமை போன்ற) அர்த்தம் காணுவது ஏற்புடைத்தன்று. அன்பு என்பது பிரிக்க இயலா ஒற்றைச் சொல். 681ஆம் குறளுக்கு விளக்கம் தரும் பேராசிரியர் தீனதயாளன் ‘அன்+ப்+உ என்பார். அதே பாட்டில் வரும் ஆன்ற என்ற சொல்லை ஆன்+ற என்று கொள்வார். ஆன் என்பதற்கான அகராதிப் பொருளும் ஆசிரியர் பொருளும் இயைபு பெறவில்லை. அதைப்போல ஓட்டம் என்ற சொல் ‘ஓடு’ என்ற சொல்லின் வழியே பிறந்தது. 38ஆம்

அதிகாரமான ‘கண்ணோட்டம்’ என்பதை விளக்கும் நூலாசிரியர் ஓட்டம் = ஓட்+அம் என்று பிரிப்பார். தமிழ் இலக்கணிகள் கூறாத, மாறுபட்ட, பொருந்தாத பிரிப்பாகவே இதனைக் கருதுவர்.

மொத்தத்தில்...

(அ) சொல்லையோ, எழுத்தையோ தம் நோக்கத்திற்கேற்ப வளைத்தும் நெளித்தும் பொருள் வழங்கல் ஏற்புடையதுதானா என்பது முதல் வாதம். ‘‘பிராமணர்கள் சாப்பிடுமடம்’’ என்ற தொடரைப் பெரியார் ஈ.வே.இரா. பிராமணர்+கள்+சாப்பிடுமிடம் எனப் பிரிப்பார் என்பது மேடைப்பேச்சு. உண்மைக்கான சான்றாக இதனைக் கருதுவதில்லை. முனைவர் தீனதயாளன் அகச்சான்றோ, முன்னோர் கூறிய சான்றுகளோ இல்லாமல் சொல், எழுத்து இவற்றைக் கைக்கொண்டிருப்பதைப் போன்ற தோற்றம் எழுவது தவிர்க்க இயலாதது.

(ஆ) சொற்பிரிப்பு என்பது நயம் தருவதாக அமையுமிடத்தில் சிக்கல் இல்லை. ‘‘தாமரைக் கண்ணாள் நோக்கினாள்’’ என்ற தொடருக்கு மிக எளிதாகவும், நேரடியாகவும் தாமரைப்பூ போன்ற கண்களைக் கொண்டவள், பார்த்தாள் எனப் பொருள் கொள்வது சரியானது; முறையானது; நேரியது. இதனையே தா+மரைக்கண்ணாள் எனக் கொண்டு தாவும் (மருட்சி நிறைந்த) மானின் கண்களைப் போன்ற கண்களையுடைய மங்கை என்பது நயம் கூட்டிச் சொல்வது. இச்சொற் பிரிப்பில் பிழை ஏதும் அமைவதில்லை.

மூன்றாவதாக இக்காலச் செயல்பாட்டை மனத்தில் கொண்டு தாம்+அரைக்கண்ணாள் நோக்கினாள் என்று கூறுவது முழுமையான ஏற்புக்கு உரியதாவதில்லை. ‘தான்’ என்பதுதான் ஒருமை. ‘தாம்’ என்பது பன்மை. ‘தாம்’ என்பது ஒருமையில் வருமிடம் உண்டு. ‘வள்ளுவர்தாம் விரும்பிய குறள் வெண்பாவைக் கையாண்டார்’ என்பதுபோல வருமிடம் உண்டு. மிகமிக உயரிய, மதிப்புடைய, போற்றுதலுக்கு உரிய நபர்கட்கே ‘தாம்’ என்பது ஒருமையைச் சுட்ட வரும். இவ்விடத்தில் ஏலாது.

எனவே, பேராசிரியர் தீனதயாளன் அவர்களின் மறுவாசிப்பு பாராட்டத் தகுந்த பகுதிகளைக் கொண்டுள்ளது என்பது உண்மை. அதே நேரம் பல கூறுகள் மீள்பார்வைக்கு உரியன என்பதும் உண்மை. ஒற்றையடிப் பாதையைத் தேவைப்படும் செப்பங்களால் அழகான அகன்ற பாதையாக மாற்றும் ஆற்றல் முனைவர் தீனதயாளன் அவர்கட்கு உண்டு. அவ்வண்ணம் செயல்படுவார் என்பது பலரின் எதிர்பார்ப்பு. அவருக்கு அகமார்ந்த பாராட்டுகள்.

பணிவுடன்

**அ. அறிவுநம்பி**

*புதுச்சேரி*

# சொல்லாக்கியனின் ‘திருக்குறள் ஒரு மறுவாசிப்பும் நானும்’

கடந்த எட்டு மாதங்களுக்கும் மேலாக சொல்லாக்கியன் அவ்வப்போது அனுப்பிய அவரது திருக்குறள் மறுவாசிப்பு பிரதியின் பக்கங்களோடு உரையாடி வந்திருக்கிறேன். நெருக்கமாக உணர்ந்த பல வாசிப்பிடஙகளை மூளையின் பதிவுகளில் தொகுத்துள்ளேன். தேவையின் தருணம் உருவானபொழுது என் கருத்துகளை ஒருங்குபடுத்திக் கொள்ள முடியாது. அலைச்சலும் நெருக்கடியும் என்னை நிலைகுலையச் செய்துவிட்டிருந்தன. வார்த்தை தவற மாட்டேன் என்ற நம்பிக்கையில் நன்றியுரையில் என் பெயரையம் வாழ்த்துரை வழங்கியோரோடு இணைத்து அச்சேற்றி விட்டார். நூலினுள் என் அணிந்துரை பக்கங்களைத் தேடாதீர். நான் வார்த்தை தவறியவனாகி விட்டேன். என் அணிந்துரையின் முழு வடிவத்தை வேறொரு தளத்தில் வேறொரு தருணத்தில் வெளியிட இருக்கிறேன். தற்பொழுது சில வார்த்தைகள்.

உரைக்கு உரை என்று உரையாசிரியர்களின் அவரவர் கால மொழியையும், தொடரையும் அப்படியே பிரதிபலித்த இருபதாம் நூற்றாண்டு திருக்குறள் உரைப் பிரதிகள் ஏராளமாக நூலாக்கம் பெற்றுள்ளன. முன்னூற்றுக்கும் மேற்பட்ட உரைகள் பதிக்கப்பட்டிருக்கின்றன என்று ஒரு தகவல் பத்து ஆண்டுகளுக்கு முன் படித்தது நினைவுக்கு வருகிறது. நான் அறிந்தவற்றுள் திருக்குறள் முனுசாமி அவர்களின் உரை தொகுதிகளைக் கண்டு மிரண்டிருக்கிறேன். வித்தியாசமாகவும், தற்காலத்தின் மொழியுடன் நெருக்கமாகவும் உணர்ந்தது பேராசிரியர் பே.சு.கோவிந்தராசன் (தருமபுரி அரசு கலைக்கல்லூரி, தமிழ்த்துறை) அவர்களின் உரை, புலமை மிதப்பின் பிழிவாக இல்லாமல், எளியனின் புரிதலை, சாமானியனின் வாழ்வியல் என்ற பொதுப்புத்தியோடு நிகழ்காலத்தை முன்னிறுத்திய சாதனையாக உணரச் செய்த உரை அது. இதே தளத்தில் க.ப.அறவாணனின் திருவள்ளுவம் எனக்கு இருக்கிறது.

சொல்லாக்கியன் குறள் மூலத்தின் ஒவ்வொரு சொல்லோடும் உறவாடி அவற்றை அறிவதிலிருந்து தன் பிரதியை உருவாக்கிக் கொண்டிருக்கிறார். அப்பிரதியின் ஊடான அவரது வாசிப்பு உரையாசிரியர்களின் பொதுப்புத்தியின் அசைவியக்கத்தை எட்ட இருந்துகூட காண முயலாது நிகழ்த்தப்பட்டிருக்கிறது. அவர் மணக்குடவர் மற்றும் பரிமேலழகரின்

உரைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டிருப்பதாக தெரிவித்திருந்தாலும் சாயலைத் துறந்தமை வெளிச்சமாக இருக்கிறது.

சொல்லாக்கியனின் மறுவாசிப்பு சொற்களின் பொருளை அடைதல் மூலம் வள்ளுவரை அர்த்தப்படுத்திக் கொள்ளாமல்; பொருளை அடையச் செய்த காரணிகளை அடையாளம் காண்பதன் மூலம் செய்யப்பட்டுள்ளது. இது மரபாக நமக்குக் கடத்தப்பட்டு வந்த விளக்கங்களை சிறிதும் பெரிதுமாக நிராகரிக்க விடுகிறது. சொற்களுக்கு வரையறுக்கப்பட்ட பொருளை மீறி உள்ளுணர்வுப் பொருளை ஏற்றி செவ்வியல் இலக்கியத்தை நிகழ்கால வாழ்வியல் அனுபவமாக்கிக் கொள்வதாக சொல்லாக்கியன் இயங்குகிறார்.

நவீன இலக்கியங்கள் எல்லாமும் வாசகனின் உள்ளுணர்ப் பொருளில் தான் வாசிக்கப்படுகின்றன. உள்ளுணர்வின் தேடுதலே புதிய சொல்களை உருவாக்குகின்றன. தனி ஒரு சொல்லின் பொருளும் அதே சொல் சொற்றொடர் ஒன்றின்னூடே வெளியாகும் பொருளும் புதிய வெளிகளில் பயணிப்பது உள்ளுணர்வின் வயப்பட்டேதான். தனியனின் உள்ளுணர்வின் பொருள் பெருந்திரளின் பொருளாகும்பொழுது அப்பொருள் அகராதிப் பொருளாகிவிடும். ஒரு சொல் பல பொருள் ஏற்று ஒலிப்பதும் இதே உள்ளுணர்வின் ஆக்கத்தினாலேயே.

உள்ளுணர்வின் வெளியில் செவ்வியல் ஆக்கங்களை வாசிப்பதற்காக முதற்படிக்குச் சொல்லாக்கியன் தமிழுலகை அழைத்துச் சென்றிருக்கிறார். 2000 ஆண்டுகள் பழமைவாய்ந்த குறள் பிரதி எக்காலத்திற்கும் உள்ளதாகும். புதுமைப் பிரதியாதலை எவ்வாறு நிகழ்த்திக் கொள்கிறது என்ற கேள்வி எனக்கு எப்பொழுதுமே வியக்க வைக்கும் கேள்வி. சொல்லாக்கியன் தன் பிரதி வழியாகக் குறளின் புதுமையினைத் துலக்கமாகவும் திறப்புகளை அறியச் செய்திருக்கிறார்.

சொற்கள் உருவாக்கும் பாங்கை சொற்களைக் கட்டுடைப்பதன் மூலம்தான் நிகழ்த்த முடியும். சொற்களை கட்டுடைக்கும்போது சொல்லின் அங்கமாகிய அசைகளுக்குச் சென்றடைகிறோம். இந்த இலக்கணத்தை ஒட்டியே ''எல்லா சொற்களும் பொருள் குறித்தனவே என்ற தொல்காப்பியத்தின் கூற்றை நாம் அனைவரும் அறிவோம். ஒரு சொல், ஒரு பொருளைக் குறிக்குமானால், சொல்லின் அங்கங்களான அசைகளும், பகுதிப் பொருளைக் குறிக்க வேண்டுமல்லவா? அசையின் அங்கங்களான எழுத்துக்களும் அடிப்படையான பொருள்கூறுகளைக் கொண்டிருக்க வேண்டும் அல்லவா?'' என்ற கேள்விகளை எழுப்பியே சொல்லாக்கியன் குறளின் சொற்களுக்குத் தன் உள்ளுணவுப் பொருளை வெளிப்படுத்தியுள்ளார்.

தன் முன்னுரையில் ஏறத்தாழ 13 பக்கங்களுக்கு தன் உள்ளுணர்வுத் திறப்புகளின் அடிப்படைகளை வழங்கியுள்ளார். இவரது முதல் நூலான 'சொல்லாக்கியம்' 4000–க்கும் அதிகமான சொற்களுக்கு உள்ளுணர்வுப் பொருளை தரும் அகராதியாகும். திருக்குறள் மறுவாசிப்புக்கு சொல்லாக்கியம் உறுதியான வழித்துணை. இதன் வழி உங்களின் வாசகப்

*பிரதியை நீங்கள் உருவாக்கிக் கொண்டால் அது குறளுக்குத் தீங்கல்ல. வாழும் குறளின் புதுமை அதுதான்.*

*1. 'திருக்குறள் ஒரு மறுவாசிப்பு – சொல்லாக்கியன்' வெளியீடு : பரிதி பதிப்பகம், 56சி/128 பாரத கோயில் அருகில், ஜோலார்பேட்டை, வேலூர் மாவட்டம்–635851*

*2. சொல்லாக்கியம்–சொல்லாக்கியன்' வெளியீடு : திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., 522. டி.டி.கே. சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை–600018, விலை ரூ.275/– தொடர்புக்கு : 98846 84666.*

**த.பார்த்திபன்,**
*தருமபுரி*

